


# குணபாடம்

## தாது-சீவ வகுப்பு

(இரண்டாம்-மூன்றாம் பகுதிகள்)

ஆசிரியர் :

டாக்டர் ஆர். தியாகராஜன், L.I.M.

பதிப்பாசிரியர் :

மரு. அ. சுந்தரராஜன், பி.ஐ.எம்.,




வெளியீடு :

இந்திய மருத்துவம்
மற்றும்
ஹோமியோபதி துறை
சென்னை.

தமிழ்நாடு அரசினர் வெளியீடு எண்




# குணபாடம்

## தாது—சீவ வகுப்பு

## (இரண்டாம்-மூன்றும் பகுதிகள்)

ஆக்கியோன்

திருவாளர் டாக்டர் ஆர். தியாகராஜன், L.I.M.

சித்த மருத்துவ விரிவுரையாளர்,
அரசினர் மருத்துவக் கல்லூரி, பாளையங்கோட்டை
திருநெல்வேலி-2.

மூன்றும் பதிப்பு

©
1981

தமிழ்நாடு அரசு சித்தர் அறிவியல் வளர்ச்சிக் குழுவால் பாடநூலாக ஒப்புதல் பெற்று இந்திய மருத்துவத் துறையால் வெளியிடப்பெற்றது.

**சுர்ஜித் கு. சவுதரி,** இ.ஆ.ப.
இயக்குநர்,
இந்திய மருத்துவம் மற்றும்
ஓமியோபதித் துறை இயக்ககம்,
சென்னை-106

# பதிப்புரை

மருத்துவம் பயிலும் மாணவர்கட்கு சிறந்த வழிகாட்டியாக அமையும் 'குணபாடம் தாது ஜீவ வகுப்பு' எனும் நூலை நான்காம் பதிப்பாக வெளியிடுவதில் நாம் பெருமை கொள்ளலாம். அத்துணை அளவு சிறப்பும் பயன்பாடுமுடைய இந்நூலைப் படைத்தளித்த மருத்துவர் **ஆர். தியாகராாசன்,** எல்.ஐ.எம்., அவர்களைப் பாராட்டுகிறேன்.

சித்த மருத்துவம் அறிய விரும்புவோரும், மாணாக்கர்களும், ஆய்வு செய்வோரும் செய்யுள் வடிவிலேயே பார்வை நூல்களைக் கற்று சிரமப்பட வேண்டிய நிலையை மாற்றி எளிமையாக எல்லோரும் அறியும் வண்ணம் உரைநடையிலாக்கப்பட்ட ஒரு சிறந்த நூல் இது.

இதனை வெளியிடுவதற்கு முழுமுயற்சி மேற்கொண்ட ஆய்வு மருத்துவ அலுவலர் மரு.அ. சுந்தரராசன், பி.ஐ.எம்., அவர்களுக்கும் தமிழ்ப் புலவர்கள் மற்றும் சுவடி நகற் பிரிவு பணியாளர்களுக்கும் இந்நூற் பணிக்குத் துணை நின்ற அனைத்துப் பிரிவு அரசு அலுவலர்கட்கும், நன்முறையில் அச்சிட்டளித்த மைய கூட்டுறவு அச்சகத்தாருக்கும் என் வாழ்த்தும் பாராட்டுதல்களும் உரித்தாகட்டும்.

ஒம்/-
**சுர்ஜித் கு.சவுதரி**

# முன்னுரை

இந்நூலின் முந்தைய இரு பதிப்புக்களும் வெளியிடப் பெற்ற சில ஆண்டுகளுக்குள் விற்பனையாகிவிட்டன. பின்னும் நூற்கள் வேண்டுமென்று சித்த மருத்துவர் களும், B. I. M.; B. S. M. and S. மாணவர்களும் மருந்தாளுநர் பயிற்சி பெறும் மாணவர்களும், தொடர்ந்து கேட்டு வருகின்ற காரணத்தினாலேயே இம் மூன்றும் பதிப்பைப் புதிய அமைப்பில் புதுப் பதிப்பாக வெளியிட வேண்டிய அவசியம் நேரிட்டிருக்கின்றது. மேலும் இந்திய மருத்துவத்தின் மையக் கழகம் B.S.M. and S. பட்டப்படிப்பிற்கு ஏற்படுத்தியிருக்கின்ற குணபாடம் தாது ஜீவ வகுப்பு படிப்பிற்குத் தேவை யான பாடதிட்டம் அனைத்தும் இந்நூலில் அடங்கி உள்ளது.

மூன்றும் பதிப்பு விரைவில் வெளிவரக் காரணமாய் இருந்த தமிழ்நாடு அரசினர்க்கும், இந்திய மருத்துவ இயக்குனர் திரு. டாக்டர் G. பாலசுப்பிரமணியம், G.C.I.M., அவர்களுக்கும், அச்சிடுங்காலத்து உதவி புரிந்த சித்த மருத்துவ பாடபுத்தகக் குழுவின் தனி அலுவலர் திரு. டாக்டர் தேவாசீர்வாதம் சாமுவேல், B.Sc., B.I.M., M.D. (Siddha) அவர்களுக்கும், இதை அழகிய முறையில் அச்சிட்டுத் தந்த தமிழ்நாடு எழுது பொருள் அச்சுத் தொழில் நெறியாளர் அவர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

மிகக் குறுகிய காலத்தில் வெளியிடப்பெற்ற இப் பதிப்பில் ஏற்பட்டிருக்கும் குற்றங் குறைகளை அறிவுடை யவர் பொறுப்பாராக.

*சித்தர் அகம்,*
*சென்னை-600030,*
*13—8—1980.*

**டாக்டர் R. தியாகராஜன்.**

371B-1—AA

# முதல் பதிப்பின் முன்னுரை.

---

மருத்துவம் படிப்பதற்குப் பொருள்களின் குணங்களை அறிய வேண்டுவது அவசியமாகும். சித்த மருத்துவ நூல்கள் யாவும் செய்யுள் வடிவாக இருப்பதினால் தற்கால மருத்துவ மாணவர்களுக்கு இவற்றைப் படித்துப் பொருளறிதல் கடினமாகும். இந் நூல்களில் பல அச்சில் வந்தில. வந்துள்ளவற்றில் பிழைமலிந்தும் பரி பாஷைச் சொற்கள் நிறைந்தும் உள்ளன. செய்யுட்களின் பொருளை அறியச் செவ்வையான மருத்துவ அகராதிகளும் இல்லை. ஆயினும் இயன்றவரை குணபாடத்தைத் தற்கால முறைக்கு ஏற்ப பொருள், குணம் இவற்றின் விளக்கங்களுடன் உரை நடையில் எழுத வேண்டியதாயிற்று. இம்முறையில் குணபாடம் முதற் பகுதி (தாவர வகுப்பு) 1936-ம் ஆண்டு சென்னை இறையாட்சியாளரால் வெளியிடப்பட்டது. குணபாடத்தின் மற்றப் பகுதிகள் பல காரணங்களினால் அவ்வமயம் வெளிவந்தில.

இதை நூலாக வெளியிடவேண்டும் என்னும் கருத்தைக் கொண்டு சித்தமாணவர் கழகத்தினரால் நடத்தப்பட்ட தமிழ் மருத்துவப் பொழில் என்னும் திங்கள் வெளியீட்டில் நான்காண்டுகள் (1940-1944) தொடர்ந்து தாது சீவப் பொருள்களைப் பற்றி எழுதி வெளியிட்டு வந்தேன். போரின் காரணமாக அவ்வெளியீடு நின்றமையின், தொடர்ந்து வெளியிட இயலாமற் போயிற்று. ஆயினும் அப்போது வெளிவந்த கட்டுரைகளையும் யான் எழுதி வைத்திருந்த ஏனைய கட்டுரைகளையும், பொழிலாசிரியர் காலஞ் சென்ற பண்டிட் திரு. மா. வடிவேலு முதலியார் அவர்கள் பார்வையிட்டு வேண்டிய திருத்தங்களைச் செய்து தந்தார்கள்.

சித்தமாணவர்க்குரிய பாட புத்தகங்கள் இல்லாக் குறையை நீக்க வேண்டுமென்னும் உயரிய எண்ணத்தினால், சென்ற ஆண்டு உயர்திரு. டாக்டர் எம். ஆர். குருசாமி முதலியார், B.A. M.D. (Honorary Director Indigenous Medicine) அவர்கள் இந்நூலைத் தொகுக்குமாறு எமக்கு பணித்தார்கள். அதன்படியே குணபாடத்தின் இரண்டாம், மூன்றும் பகுதிகளாகிய தாது சீவ வர்க்கங்களை நூலாகத் தொகுத்தமைத்தேன்.

மாணவர்களின் நன்மையைக் கருதி அவர்கட்கு முறையோடு போதித்தற் பொருட்டு, அப்போதைக்கப்போது பல நூல்களிலிருந்து ஆராய்ந்து எடுக்கப்பட்ட செய்திகள் இதில் சேர்க்கப்பட்டுள்ளன. இந்நூலில் எடுத்தாளப்பட்டிருக்கும் செய்யுட்கள், அச்சிட்டனவும் அச்சிடாதனவுமான பல நூல்களிலிருந்து எடுக்கப்பட்டவை. இவற்றுள் பிழைபட்டிருந்த சில என்னால் திருத்தி அமைக்கப்பட்டன. ஒரு சில திருத்திச் செம்மைப் படுத்தற்கு இயலாமலிருப்பினும், அவற்றின் இன்றியமையாமை நோக்கி அப்படியே அச்சிட வேண்டியதாயிற்று.

உபரசங்களுள் நூற்றிருபதும் (120), பாஷாணங்களுள் அறுபத்து நான்கும் (64) இருப்பினும், இவற்றுள் பல வழக்கிலில்லாமையாலும், இவற்றின் விவரங்களைக் குறிப்பிக்கும் நூல்கள் கிடையாமையாலும் கிடைத்த வரையுமே இந்நூலில் வெளியிடப்பட்டுள்ளன. கற்க எளிதாக இருக்கும் பொருட்டுத் தாது வகுப்பில் உலோகங்கள், பஞ்ச சூதம், பாடாணங்கள், காரசாரம், நவமணி, தாதுப் பொருள் உபரசம், சீவப்பொருள் உபரசம் என்று பொருள்களைப் பிரித்து மாற்றி முறைப்படுத்தி இதில் அமைத்துள்ளேன்.

திருவாளர் வைத்தியரத்தனம் C.S. முருகேச முதலியார் அவர்கள் கல்லூரியில் எழுதிவைத்திருந்த குறிப்புக்களும் எனக்குப் பயன்பட்டன. திரு. பண்டித எஸ். கிருஷ்ணவேணியம்மாள் அவர்கள் பிரதி எடுத்தும் பிழைதிருத்தியும் உதவினார்கள். இந்நூல் வெளிவருவதற்குக் காரணர்களாயிருந்த டாக்டர் எம் ஆர். குருசாமி முதலியார் அவர்கட்கும், ஆயுள் வேதாச்சாரிய எம். விசுவேசுர சாஸ்திரி, H.P.I.M., Principal, அவர்கட்கும் இதை அழகிய முறையில் அச்சிட்டுத்தந்த கவர்ன்மெண்ட் பிரஸ் சூப்பரின்டென்டெண்ட் அவர்கட்கும் என் மனமார்ந்த நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்கிறேன். என் சிற்றறிவிற்கேற்ப வெளியிட்ட இந்நூலில் உள்ள குற்றங்களை அறிவுடையவர் பொறுப்பாராக.

டாக்டர். R. தியாகராஜன்.

சென்னை,
7-11-1952.

# இரண்டாம் பதிப்பின் முன்னுரை.

---

பாளையங்கோட்டை அரசினர் இந்திய மருத்துவக் கல்லூரியில் B.I.M. பட்டப்படிப்பிற்குப் பயிற்சி பெறுகின்ற மாணவர்களுக்குப் பாட நூல்கள் இல்லாத குறையைத் தீர்க்கும் பொருட்டுத் தமிழக அரசினர் சித்த மருத்துவக் கல்வி மற்றும் பாடநூற்குழு ஒன்றை அமைத்தனர். (G.O Ms. No. 1060, Health, dated 1966-ம் வருடம் ஜூன் மாதம் 13-ம் தேதி) இக்குழுவில் யானும் ஒரு உறுப்பினன் இக்குழு சென்னையில் மும்முறை கூடிற்று. மூன்று வது கூட்டம், 1967-ம் வருடம் ஏப்ரல் மாதம் 5-ம், 6-ம் தேதி ஆகிய நாட்களில் நடந்தது. அவ்வமயம் கூட்டத்தில் தமிழக அரசு தலைமைச் செயலகத்தில் பணியாற்றும் சுகாதார அமைச்சுச் செயலாளர், துணைச் செயலாளர், மருத்துவக் கல்வி நெறியாளர், புது மருத்துவக் கல்லூரிகளின் தனி அதிகாரி ஆகியவர்கள் கலந்து கொண்டு சில முக்கிய தீர்மானங்களை நிறைவேற்றினர். அவற்றுள் இன்னின்ன பாடநூற்கள் இன்னின்னாரால் எழுதப்பெற வேண்டு மென்பதும் ஒன்று. அதன்படி எனக்கு ''குணபாடம்'' இரண் டாம், மூன்றும் பகுதிகளும், ''உடல் கூறு'' நூலும் எழுத வேண் டிய பணி தரப்பெற்றது.

ஏற்கனவே, குணபாடம் இரண்டாம், மூன்றும் பகுதிகளின் முதற் பதிப்பு என்னால் எழுதப்பட்டு நவம்பர், 1952-ம் ஆண்டு அரசினரால் வெளியிடப் பெற்றுள்ளது. அதன் பிரதிகள் யாவும் விற்று விட்டன. B.I.M. குணபாடம், தாது சீவ வகுப்பு படிப்பிற் குத் தேவையான பாடத் திட்டம் அனைத்தும் அந்நூலில் உள்ளதா லும், மூன்று ஆண்டுகள் B.I.M மாணவர்களுக்கு யான் இப் பாடத்தை விரிவுரையாற்றுகையில் அந்நூல் நன்கு பயன் தந்த தோடு குறையொன்றும் தென்படாததாலும், அந்நூலுடன் சில புதிய விவரங்கள் சேர்க்கப்பெற்று இரண்டாம் பதிப்பாக வெளி யிட ஏற்பாடாயிற்று. முதல் பதிப்பு வெளிவரக் காரணமாய் இருந்த திரு. டாக்டர் M.R. குருசாமி முதலியார், B.A., M.D., (Honorary Director of Indigenous Medicine) அவர்கள் அந்நூலைப் பார்வையிட்டு "A very well written book. Hope the students would have grasped the subject" என்று தனது கருத்தைத் தெரிவித் தார்கள்.

இந்நூலில் பொருட்களை அமைத்துள்ள முறை மாணவர்கள் கற்க எளிதாய் இருப்பதால் அது மட்டும், முதல் பதிப்பில் உள்ள படியே மாற்றப்பெறுமல் உள்ளது. பொருட்களின் பெயர்கள் முதற் பதிப்பில் தமிழில் மட்டுமே எழுதப் பெற்றிருந்தது. இரண் டாவது பதிப்பில் முடிந்த வரை அவ்வப் பொருட்களுக்கான ஆங் கிலப் பெயர்கள் சேர்க்கப்பெற்றுள்ளன. நம் நாட்டில் மெட்ரிக் அளவைகள் நடைமுறையில் இருப்பதால், நமது நூற்களிலுள்ள பழைய அளவைகளுடன் அவற்றுக்குச் சமமான மெட்ரிக்

அளவைகள் இரண்டாம் பதிப்பில் இடம் பெறுகின்றன. இம் மாற்றம் மத்திய அரசினால் நியமிக்கப்பட்ட சித்த மருந்து செயற் முறைக்குழுவின் அளவைகளுக்கான துணைக் குழுவில் நாங்கள் எடுத்த முடிவுகளின் துணை கொண்டு செய்யப் பெற்றது.

இரண்டாம் பதிப்பு விரைவில் வெளிவரக் காரணமாய் இருந்த திராவிட முன்னேற்றக் கழக அரசினர்க்கும், தமிழக சுகாதார அமைச்சுச் செயலாளர் திரு. N. அனந்தபத்மநாபன் I.A.S. அவர்கள், துணைச் செயலாளர் திரு. K. சிதம்பரம், B.Sc., அவர்கள், மருத்துவக்கல்வி நெறியாளர் திரு டாக்டர் T. ஜனார்த்தனம், M.B.B.S., M.S., அவர்கள், புதுமருத்துவக் கல்லூரிகளின் தனி அதிகாரி திரு. டாக்டர் T. நாராயணசாமி M.B.B.S., M.Sc., அவர்கள், பாளையங்கோட்டை அரசினர் இந்திய முறை மருத்துவக் கல்லூரியின் முதல்வரும், சித்த மருத்துவப் பாடப் புத்தகக் குழுத் தலைவருமான டாக்டர் திரு. கா. சு. உத்தமராயன், H.P.I.M., அவர்கள் பாளையங்கோட்டை அரசினர் இந்தியமுறை மருத்துவக் கல்லூரியின் முன்னாள் முதல்வரும், பாடப்புத்தகக் குழுவின் தனி அதிகாரியுமான டாக்டர் திரு. P.M. வேணுகோபால், H.P.I.M., அவர்கள் ஆகியோர்களுக்கும், இதை அழகிய முறையில் அச்சிட்டுத் தந்த தமிழ்நாடு எழுதுபொருள் அச்சுத் தொழில் நெறியாளர் அவர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இந்த நூல் மிகக் குறுகிய காலத்தில் வெளியிட வேண்டிய நிர்ப்பந்தம் காரணமாகக் குற்றங்குறைகள் என் சிற்றறிவினால் ஏற்பட்டிருக்கும். ஆதலினால் இதிலுள்ள குற்றங்குறைகளை அறிவுடையவர் பொறுத்துக்கொள்ளுமாறு வேண்டிக்கொள்ளுகிறேன்.

பாளையங்கோட்டை
திருநெல்வேலி-2,
1—3—1968.

டாக்டர். R. தியாகராஜன்.

# பொருளடக்கம்

## தோற்றுவாய்



## தாது வகுப்பு

(பகுதி 2)

I. உலோகங்கள்—

பொருள். பக்கம்.

## VII. உபரசம்—தொடர்ச்சி.

# 1. தாதுப்பொருள்.

''ஐவகையெனும் பூத மாதியை வகுத்ததனுள் அசரசர பேத மான யாவையும் வகுத்து'', என்னும் மூதறிஞர் வாக்கின்படி இவ்வுலகமானது ஐம்பெரும் பொருள்களால் அமைந்தது. இவ்வுலகத்திலுள்ள பொருள்கள் அனைத்தும் அசையாப் பொருள்கள், அசையும் பொருள்கள் என இருவகையுள அடங்கும். அவை அனைத்தையும் பிருதிவி என்னும் மண் தாங்குகிறது. அவற்றிற்கு ஆகாய மென்னும் வெளி இடங்கொடுக்கிறது. அவற்றை, அப்பு என்னும் நீரும், தேயு என்னும் நெருப்பும், வாயு என்னும் காற்றும் வளர்த்தல் காத்தலைச் செய்கின்றன.

முன் கூறிய அசையாப் பொருள் அசையும் பொருள் ஆகிய இரு வகைப் பொருள்களும், தாதுப் பொருள், தாவரப் பொருள், சங்கமப் பொருள் என முப்பாகுபாட்டினை யுடையனவாம்.

தாதுப்பொருள்.—*(1)* உலோகம், *(2)* காரசாரம் (உப்பு), *(3)* பாடாணம், *(4)* உபரசம் என்னும் நான்கு பிரிவுகளை உடையது.

*(1)* உலோகம்—*11*,

*(2)* காரசாரம்—*25*,

*(3)* பாடாணம்—*64*,

*(4)* உபரசம்—*120*.

ஆக, தாதுப் பொருளின் தொகை இருநூற்றிருபது ஆகும். இதனை;

''கேளப்பா காரமொடு சாரந் தானும்
கெட்டியா யிருபதுடனஞ்சு மாச்சு;
தாளப்பா வுபரசநூற் றிருப தாகும்.
தாயான நவலோகம் பதினொன் றுச்சு;
நாளப்பா பாடாண வகையே தென்றால்
நலமான வறுபத்து நால தாச்சு;
சூளப்பா விவையெல்லா மொன்றாய்ச் சேர்க்கத்
தொகையுமொரு விருநூற்றே டிருப தாச்சே.''

என்னுஞ் செய்யுளாலறிக.

இங்கு, உபரசம் என்னும் சொல்லால் வழங்கப்படும் இரசம் என்னும் ஒரு சரக்கு, சிவம் தனித்தும் பல்லுயிர்களிற் கலந்துமிருப்பது போன்று தனித்தும், ஒவ்வொரு சரக்கிலும் அதனதன் தன்மைக்கேற்ப, ''சரக்கிற் கலந்திடு சிவன்'' என்னுமாறு கலந்தும் இருப்பதாகக் கூறப்படுகிறது.

ஆகையால், சிவமில்லாப் பொருள் இல்லாதது போன்று, உலகில் இரசமில்லாச் சரக்கு இல்லை என்பது துணிவு.

இனி, மேலே குறிப்பிட்ட நால்வகைத் தாதுப் பொருள்களுள் முதன்மையான உலோகங்கள் பதினொன்றை நோக்குவோம்.

## 1. உலோகம் 11.

அவை (1) தங்கம், (2) வெள்ளி, (3) செம்பு, (4) நாகம், (5) உருக்கு, (6) இரும்பு, (7) வெண்கலம், (8) பித்தளை, (9) தரா, (10) காரீயம், (11) வெள்ளீயம் என்பனவாம். இவற்றை,

''உற்றுப்பார் தங்கம்வெள்ளி செம்பு நாகம்
உருக்கிரும்பு வெண்கலம் பித்தளை தராவும்,
நத்திப்பார் காரீயம் வெள்ளீ யந்தான்
நலமாகப் பதினொன்றாய்ப் பிரிந்த தையா!''

எனப் போகர், காரசாரத்துறையிற் புகன்றுள்ளதால் அறிக.

இந்த உலோகங்கள் பதினொன்றும் இயற்கை உலோகம், செயற்கை உலோகம் என இருவகைப்படும்.

### 1. இயற்கை உலோகம்.

(1) தங்கம், (2) வெள்ளி, (3) செம்பு, (4) உருக்கு, (5) இரும்பு (6) காரீயம், (7) வெள்ளீயம், (8) நாகம் என்னும் எட்டு மாகும்.

### 2. செயற்கை உலோகம்.

(1) வெண்கலம், (2) பித்தளை, (3) தரா என்னும் மூன்றுமாகும்.

இயற்கை உலோகம் என்பது பிறப்பு உலோகம். செயற்கை உலோகம் என்பது வைப்பு உலோகம். சில உலோகங்களை ஒன்றோ டொன்று சேர்த்துச் செய்யப்படுவது செயற்கை உலோகம் எனப்படும்.

இப்பதினொன்றில் பஞ்சபூத உலோகங்கள்: (1) தங்கம்—பிருதிவி பூத உலோகம். (2) காரீயம்—அப்பு பூத உலோகம். (3) செம்பு தேயு பூத உலோகம். (4) இரும்பு—வாயு பூத உலோகம். (5) நாகம்—ஆகாய பூத உலோகம். இவற்றை,

''பூதமென்ற சொன்னமது பூமி யாச்சு;
புகழான காரீயந் தண்ணீ ராச்சு;
நாதமென்ற செம்பதுவே தீயு மாச்சு;
நலமான விரும்பதுவே வாயு வாச்சு;
வேதமென்ற நாகமது வானு மாச்சு.''

எனப் போகர் காரசாரத்துறையிற் செப்பியுள்ளார்.

உலகில் தோன்றும் எல்லாச் சரக்குகளும் பூத சம்பந்தமுடையனவாகவே இருக்க, இந்த உலோகங்கள் பதினொன்றுள், ஐந்து உலோகங்களைமட்டும் ஐம்பூதச் சரக்குகளெனப் பிரித்துக் கூறி, மற்றவைகளைக் கூறாமல் விட்டமையின், ''அவை பூதச் சரக்குகள் அல்ல போலும்!'' என்னும் ஐயம் தோன்றுமன்றோ? இவ்வையம் இங்கு மட்டுமன்றிப் பின்னர்க் கூறப்போகும் ''பஞ்சபூத காரசாரம், பஞ்சபூத பாடாணம், பஞ்சபூத உபரசம்'' என்னும் இடங்களிலும் உண்டாகும். ஆனால், ''கூறியவற்றைக் கொண்டு கூறாதவற்றையும் அறிஞர்கள் உணர்ந்துகொள்வார்களெனக் கொண்டு அவற்றைவிட்டனர் போலும்!'' என நினைக்க இடமிருக்கிறது.

இத்தன்மையான உலோகங்களை—

(1) மூவகை உலோகம்,

(2) ஐவகை உலோகம்,

(3) எழுவகை உலோகம்,

(4) எண்வகை உலோகம்,

(5) ஒன்பது வகை உலோகம்

எனத் தொகைச் சரக்குகளாகவும் பல நூலாசிரியர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

### 1. மூவகை உலோகங்கள்.

பொன், வெள்ளி, செம்பு என்பன.

### 2. ஐவகை உலோகங்கள்.

பொன், வெள்ளி, செம்பு, ஈயம், வெண்கலம் எனத் தசாங்கவயித்தியநிகண்டு கூறுகின்றது. இதனை,

''வெள்ளி பொன் செம்போ டீயம்
வெண்கலம் பஞ்ச லோகம்''

என்பதாலுணர்க.

பொன், வெள்ளி, இரும்பு, பித்தளை, செம்பு எனத் தேரர் சேகரப்பா கூறுகின்றது. இதை,

''ஆடகமிர சிதமய மாயாபுரி சீருள்''

என்னும் செய்யுளாலறியலாம்.

பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம் என நிகண்டு கூறுகின்றது. இதை,

''எதிரில்பொன் வெள்ளி செம்போ
டிரும்பீயம் பஞ்ச லோகம்''

என்னும் செய்யுளாலறிக.

### 3. எழுவகை உலோகங்கள்.

பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம், வெண்கலம், தரா என்பன. இக்குறிப்பை,

''எதிரில்பொன் வெள்ளி செம்போ
டிரும்பீயம் பஞ்ச லோகம்
பொதிகஞ்சந் தராவுங் கூட்டிப்
புகன்றிடி னேழு லோகம்''

என்று நிகண்டு தெரிவிக்கின்றது.

### 4. எண்வகை உலோகங்கள்.

பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, வெண்கலம், தரா, வங்கம், துத்தநாகம் என்பன.

### 5. ஒன்பது வகை உலோகங்கள்.

பொன், வெள்ளி, பித்தளை, செம்பு, வெண்கலம், நாகம், வெள்வங்கம், கருவங்கம், அயம் என்பன. இதனை,

''பூமேவு முயர்சரக் கானநவ லோகங்கள்
புகல்கிறேன் தங்கம் வெள்ளி
பித்தளை செம்புவெண் கலநாகம் வங்கமும்
புதுமைக்கா ரீயம் லோகம்
மாமேவு மொன்பதையு முயர்சுத்தி கோசலம்
வடிகாடி யெண்ணெ யுடனே
மாவெருக் கம்பால் பழச்சாறு டன்கூட
வண்மைசா ணிப்பா லினில்
தாமேவு மொவ்வொன்று மும்முறை யுருக்கியே
சாய்க்கவும் வலிவேறியே
தன்னுட் களங்கமுஞ் சுத்திதனி லற்றிடும்
சாற்றுமித னைக்கொல்விதம்
வேமேவு பூரமும் வீரகா ரச்சாரம்
வெள்ளைப்பா டாணம் சூதம்
வெடியுப்பு கந்திசரி யெடைபழச் சாற்றினில்
விதமா யரைத்துக் கொள்ளே''

என்னும் செய்யுள் குறிப்பிக்கின்றது.

இவ்வுலோகத்தொகையை இவ்வாறு கூறுமல், உலோகக் கணக்கில் சேராத உபரசத்தில் அடங்கிய இரண்டொரு சரக்குகளையும் உலோகத்தில் இரண்டொன்றையுங் கூட்டி, ''திரிலோகச் செந்தூரம்'' எனவும், ''பஞ்சலோகச் செந்தூரம்'' எனவும் புகன்றிருக்கின்றனர்.

''கேளப்பா திரிலோக செந்தூ ரத்தைக்
கெட்டியாம் லோகமப் பிரகங் காந்தம்
நாளப்பா மூன்றையுமே சுத்தி செய்து
நலமாகச் சாறுகூட்டி.........''

என, இரும்பு, அப்பிரகம், காந்தம் என்பவைகளின் சேர்க்கையைத் ''திரிலோகம்'' எனவும்,

''கேளடா பஞ்சலோகச் செந்தூ ரத்தைக்
கேடில்லாத் தங்கமொடு வெள்ளி செம்பு
நாளடா காந்தமோ டிரும்பிவ் வைந்தும்
நலமாகச் சுத்திசெய்து சரியாய்க் கூட்டி''

எனத் தங்கம், வெள்ளி, செம்பு, காந்தம், இரும்பு என்பவைகளின் சேர்க்கையைப் ''பஞ்சலோகம்'' எனவும் பாகுபாடு செய்துள்ளதை அகத்தியர் வயித்திய இரத்தினச் சுருக்கத்திற் காண்க.

இவ்வாறு கூறப்பட்டவையனைத்தும், அவரவர் கொண்ட கருத்துக்கும் சொன்ன மருந்துக்கும் தக்கவாறு அவரவர் வகுத்துக்கொண்ட முறைகளாகும். ஆதலின், மேற்கண்ட முறைகளாய்த் திரிலோக பஞ்சலோகங்களைத் தொகைப்படுத்தல் அடாதென அறிக.

## 2. காரசாரம் (உப்பு) 25.

''உங்கந்தா னுப்புவகை இருபத்தைந்து'' எனப் போகர் இரண்டாவது ஆயிரக் காப்புச் செய்யுளிலும், மற்ற நூலிலும் கூறியிருப்பதால் காரசாரங்கள் இருபத்தைந்து என்றறிக.

இவை, இயற்கை செயற்கையென இருவகையுள் அடங்கும். இயற்கை உப்புப் பத்து; செயற்கை உப்புப் பதினைந்து.

### 1. இயற்கை உப்பு 10.

(1) சூடன், (2) சீனம், (3) பூநீறு, (4) வளையலுப்பு, (5) பச்சைக் கர்ப்பூரம், (6) கல்லுப்பு, (8) கறியுப்பு, (8) பொா

னம்பர், (9) மீனம்பர், (10) கடல்நுரை என்பன இயற்கை உப்பாம்.

"......பிறக்கின்ற காரசாரம்
பருதியே பத்துவகைப் பண்பைக் கேளு;
பாங்கான சூடனொடு சீனந் தானும்
வருதியே பூநீறு வளைய லுப்பு
மணமாகும் பச்சைக்கர்ப்பூர மாகும்;
புருதியே கல்லுப்புக் கறியுப் போடு
பொன்னம்பர் மீனம்பர் நுரையு மாமே"

எனப் போகர் ஏழாயிரத்துள் இரண்டாவதாயிரத்தில் சொல்லியிருக்கிறார்.

2. செயற்கை உப்பு 15.

(1) இந்துப்பு, (2) பொட்டுலுப்பு, (3) வெங்காரம், (4) துருசு, (5) எவட்சாரம், (6) நவச்சாரம், (7) சத்திச்சாரம், (8) ஏகம்பச்சாரம், (9) கெந்தியுப்பு, (10) திலாலவணம், (11) கெந்திலவணம், (12) காய்ச்சுலவணம் (13) பிடாலவணம், (14) சிந்துலவணம், (15) காசிலவணம் என்பன செயற்கை உப்பாம்.

"அறைந்திட்டேன் காரசா ரத்தின் வைப்பை
அடங்கலாய் மூவஞ்சு தன்னைத் தானும்"
"தக்கவே சாரகா ரத்தின் வைப்புச்
சமுசயங்க ளில்லாமல் மூவைந் தாகும்"

எனப் போகர் இரண்டாவதாயிரதிற் புகன்றிருப்பதாலறிக.

ஆனால் அவ்வாயிரத்தில் செயற்கை உப்பாகிய இப்பதினைந்து பெயர்களையும் தொகை கூட்டிச் செய்யுள் செய்யப்படவில்லை. வகை, விரி செய்யுட்களைக் கொண்டு இப்பெயர்கள் எழுதப்பட்டன.

இச்செயற்கை உப்புப் பதினைந்துள், ஒன்பதுக்கு கெந்தி உப்பு எனவும், பதினொன்றிற்குக் கெந்திலவணம் எனவும் பெயர்கள் வழங்குதல் ஐயம் தருவதாகும். அவை, வைப்பின் மாறுபாட்டால் வைக்கப்பட்ட பெயர்களென்று தெரிந்துகொள்ள வேண்டும்.

"போகர் காரசாரத்துறை" என்னும் நூலில், இப்பெயர்களிற் சிற்சில மாறுதல்கள் காணப்படுகின்றன. இவற்றை,

"காணுகின்ற வாதத்திற் காதி யான
காரமடா சமாதிநில வழலை பாம்பு
தோணுகின்ற பூவழலை சீனக் காரம்
துடியான சவுக்காரம் பூரஞ் சூடன்

வேணுமென்ற அமுரியுப்பு கல்லுப் போடு
வெடியுப்புப் பொடிந்துப்பு வளைய லுப்பு
பூணுகின்ற சவுட்டுப்புப் பொன்வெங் காரம்
பொன்னம்பர் மீனம்பர் பொருந்திக் கேளே.'

''பொருந்துகின்ற நவச்சாரம் சத்திச் சாரம்
புகழான எவட்சாரம் காசிச் சாரம்
திருந்தியதோ ரேகம்பச் சாரத் தோடு
திலாலவணம் பிடாலவணம் தீர்க்க மாக
நருந்தியதோர் கந்தகமாம் லவணஞ் சிந்து
லவணமுட ஞகாசத் தீயின் கம்பி
கருந்தொகையி லிவையிருபத் தைந்தும் வாத
காரசா ரத்துறையாய்க் கண்ட வாறே.''

என்னுஞ் செய்யுட்களாலறிக.

ஆகவே, இந்த மாறுதல்களால் ஏழாயிரஞ் செய்த போகர் வேறு, காரசாரத்துறை செய்த போகர் வேறு எனத் தோன்று கிறது.

### பஞ்சபூத உப்பு.

*(1)* பிருதிவி-கல்லுப்பு, *(2)* அப்பு-சத்திச்சாரம், *(3)* தேயு-வெடியுப்பு, *(4)* வாயு-சீனம், *(5)* ஆகாசம்-பூநீறு என்பன பஞ்சபூத உப்பாம்.

இஃது ஏழாயிரஞ் செய்த போகர் கொள்கை. இதனை,

''பலித்திட்ட சவுக்காரம் பஞ்ச பூதப்
பயனகப் பண்ணியே பார்த்த நேர்மை
பெலிதிட்ட பிருதிவிமண் கல்லுப் பாச்சு;
பேரான வப்புசலஞ் சத்திச் சாரம்
தெலித்திட்ட தேயுவது வெடியுப் பாமே;
செயநீர்தான் தீயென்றே செப்ப லாகும்
வலித்திட்ட வாயுவது காற்றுச் சீன
மகத்தான வாகாசம் பூநீ ருச்சே.''

என்னுஞ் செய்யுளாலறிக.

இப்பஞ்சபூத உப்புக்கள். ''அகத்தியர் வழலை பன்னிரண்டு'' என்னும் நூலில் வேறுவகையாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன. அவை,

*(1)* பிருதிவி—கம்பியுப்பு,
*(2)* அப்பு—பாறையுப்பு,
*(3)* தேயு—கல்லுப்பு,

(4) வாயு—இந்துப்பு,
(5) ஆகாயம்—வழலையுப்பு,

என்பன. இவற்றை,

''காணப்பா கம்பியுப்பு மண்ண தாகும்;
  காரணமாம் பாறையுப்பு கருவாந் தண்ணீர்;
பூணப்பா கல்லுப்பு தேயு வாகும்;
  புகழான இந்துப்பு வாயு வாகும்;
ஊணப்பா ஆகாயம் வழலை யுப்பு
  உத்தமனே! இதையுமறிந் தொன்ருய்ச் சேரு
தூணப்பா துரும்பாகுந் துரும்புந் தூணும்
  துரியமனோன் மணித்தாயும் வாவென பாளே.''

என்னுஞ் செய்யுளாலறிக.

இவ்விரண்டு வகையுமன்றி, பூதம் ஒன்றுக்கு இரண்டிரண்டு உப்புகளாய்ப் போகர் காரசாரத்துறை கூறுகின்றது. அவை,

(1) பிருதிவி—கல்லுப்பு—இந்துப்பு,
(2) அப்பு—நவச்சாரம்—சத்திச்சாரம்,
(3) தேயு—வெடியுப்பு—சவுட்டுப்பு,
(4) வாயு—வெங்காரம்—துருசு,
(5) ஆகாயம்—பச்சைக்கர்ப்பூரம்—பூநீறு.

என்பன. இவை,

''பேணிப்பார் பஞ்சபூ தக்கா ரத்தைப்
  பேசாமல் மறைத்துவைத் தார்சித்த ரெல்லாம்
தோணிப்பா ரிந்தநூல் தன்னிற் சொல்வேன்
  துடியான காரசா ரத்தின் பூதம்
ரணிப்பார் கல்லுப்பு மிந்தி னுப்பும்
  என்மகனே! பிருதிவியென் றியம்ப லாகும்;
ஆணிப்பார் நவச்சாரம் சத்திச் சாரம்
  அப்புவென்று சொல்வார்க ளறிந்து கொள்ளே.''

''அறிந்துகொள் வெடியுப்பும் சவுட்டி னுப்பும்
  அரகரா தேயுவென்றே அறிய லாகும்;
தெரிந்துபார் வெங்காரந் துருசி ரண்டும்
  திறமான வாயுவென்றே செப்ப லாகும்;
விரிந்துபார் பூரமுடன் வழலை தானும்
  மேலான ஆகாசக் கூறு மாகும்;
பரிந்துநீ காரசா ரத்தின் பூதம்
  பார்த்தறிந் திம்முறையைப் பாரு பாரே.''

என்னுஞ் செய்யுட்களால் அறியப்படுகின்றன.

இவை அல்லாமல். கரிசல் என்னும் நூல், பிருதிவி-வெடியுப்பு, அப்பு-கரியுப்பு, தேயு-கல்லுப்பு, வாயு-இந்துப்பு, ஆகாயம்-பூநீறு என்று கூறுகின்றது. இதனை,

''உப்பிலைம் பூத முரைக்கநன் ருய்க்கேளாய்
தப்பில் வெடிகரிகல் தானிந்தா—மப்பூநீறு
ஐந்தாம் பிருதிவியப் பாந்தேயு வாயுவிண்
சொந்தமுடன் கண்டறிந்து சொல்.''

என்னும் வெண்பா அறிவிக்கின்றது.

இவ்வாறிருப்பதால், பஞ்சபூத உப்புக்கும் தொகைச்சரக்காகிய ஐந்துப்புக்கும் யாதொரு ஒற்றுமையுமில்லை, ஆகையால், பூத உப்பு வகை வேறு, பஞ்சவுப்பு வகை வேறு என அறிக.

பஞ்சவுப்பு.

(1) கரியுப்பு, (2) இந்துப்பு, (3) வளையலுப்பு, (4) கல்லுப்பு, (5) வெடியுப்பு என்பன பஞ்சவுப்பாம். இதனை,

''வள்ளிய கரியுப் பிந்து
வளையுப்புக் கல்லுப் போடு
தெள்ளிய வெடியுப் பைந்தே.''

என்னும் நிகண்டாலறிக.

ஆனல், வாதத்துக்கும் மற்றவற்றிற்கும் பஞ்சபூத முறைமையே கொள்ள வேண்டும்.

''வாதத்தில் வெடியுப்பும் பஞ்ச பூதம்
வண்மையாஞ் சவுக்காரம் பஞ்ச பூதம்
தீதற்ற செயநீரும் பஞ்ச பூதஞ்
செயமான குருவுக்கும் பஞ்ச பூதங்
கோதற்ற சடத்துக்கும் பஞ்ச பூதங்
குறியாகப் பழுப்பதற்கும் பஞ்ச பூதம்
காதத்த களங்குக்கும் பஞ்ச பூதங்
காரியமாம் வாதமெல்லா மஞ்சு தானே.''

என்னும் போகர் முதலாயிரச் செய்யுள் இதைத் தெரிவிக்கின்றது.

தேரர், தாம் இயற்றிய வெண்பாவில், சில தாவரப் பொருள்களிலிருந்து எடுக்கும் உப்புக்களையும், சில சீவ நச்சுப் பொருள்களையும் காரசாரமாய்க் கொண்டார். காரத்தைச் ''சிவப் பொருள்'' என்றும் சாரத்தைச் ''சத்திப் பொருள்''

என்றும் வழங்கியிருக்கிறார். இவற்றைக்கீழ்ச் செய்யுட்களால் உணரலாம் :

''காரசா ரத்தருமை காண்பவர்க் கேதெரியும்
பேரெறும்பு சிற்றெறும்பு பின்கிருமி—சேர்பிரண்டைச்
சாற்றூலு நாபிச் சரக்காலு மானவுப்பு
கூற்றுன கார மாகும்.''

''தேள்பூவை பாம்புதும்பை செவ்வியகாட் டாமணக்கு
வாளான சாம்பிராணி மற்றிதெலா—மாளவரு
பூநீறே சாரமிது போதுஞ் சரக்குவகைக்
காநீறு போலுரிமை யாம்.''

(தேரர் வெண்பா 171, 172)

## 3. பாடாணம் 64.

பாடாணங்கள் அறுபத்துநான்கும் இயற்கைப் பாடாணம். எனவும், செயற்கைப் பாடாணம் எனவும் இருவகைப்படும். அவற்றில் இயற்கைப் பாடாணம் முப்பத்திரண்டு; செயற்கைப் பாடாணம் முப்பத்திரண்டு. இவற்றை,

''பாவென்றபா டாணமறு பத்து நாலில்
பாங்காக வைப்பு வகை முப்பத் திரண்டு
ஓவென்றபி றப்பதுமுப் பத்தி ரண்டு''

என்னுஞ் செய்யுளாலறிக.

### 1. இயற்கைப் பாடாணம் 32.

(1) கறடக பாடாணம், (2) கோளகம், (3) சூத பாடாணம், (4) மிருதாரம், (5) கந்தகம், (6) வீரம், (7) வைகிராந்தம், (8) தாலம்பம், (9) அமிர்தம், (10) சிரபந்தம், (11) தொட்டி, (12) குதிரைப் பல், (13) சங்கு, (14) கௌரி, (15) துத்தம், (16) பலண்டுறுகம், (17) காந்தம், (18) இலிங்கம், (19) சரகாண்டம், (20) தாளகம், (21) சிலே, (22) ஆவு பல், (23) சாலாங்கம், (24) கற்பரி, (25) கற்பாடாணம், (26) அஞ்சனம், (27) கச்சாலம், (28) சீதாங்கம், (29) சிலாமதம், (30) கார்முகில், (31) அப்பிரகம், (32) வெள்ளை—என்பன இயற்கைப் பாடாணங்களாம். இவற்றை,

''பாடினேன் பிறக்குமுப் பத்தி ரண்டு
பாங்கான தாதுவுடைப் பெயரைக் கேளு;
காடினேன் கறடகபா டாணத் தோடு
கடிசான கோளகபா டாண மாகும்
தூடினேன் சூதபா டாணத் தோடு
சொல்லான மிருதாரங் கந்தி யாகும்
வீடினேன் வீரமொடு வைகிராந் தந்தான்
விளக்கமாந் தாலம்ப மமிர்த மாமே.''

''ஆமென்ற சிரபந்தந் தொட்டி யோடு
அழகான குதிரைப்பல் சங்கபா டாண
தோமன்ற கௌரியொடு துத்தபா டாணம்
சொல்லான பலண்டுறுகங் காந்தபா டாணம்
தாமென்ற லிங்கப்பா டாணத் தோடு
சரகாண்டந் தாளகந்தான் சிலையு மாகும்
வேமென்ற ஆவுபல்பா டாணத் தோடு
விளக்கமாஞ் சாலாங்கங் கற்பரியு மாமே.''

''பரியான கற்பாடா ணந்தன் னேடு
பாங்கான அஞ்சனபா டாண மாகும்
கரியான கச்சாலஞ்சீ தாங்கத் தோடு
காணவே சிலாமதமாங் கார்முகிற்பா டாணம்
அரியான அப்பிரகபா டாணத் தோடு
அடங்காத வெள்ளையென்ற பாடா ணந்தான்
முரியான முப்பத்தி ரண்டு தாது.''

எனப் போகர் ஏழாயிரச் செய்யுட்கள் தெரிவிக்கின்றன.

இவற்றுள், ஆவுபல் என்பதை ''அவுபல பாஷாணம்'' என போகர் ஏழாயிரத்தில் மூன்றாங் காண்டங் கூறுகின்றது.

2. செயற்கைப் பாடாணம் 32.

(1) புத்தோட்டுத் தொட்டி, (2) பொற்றொட்டி, (3) செப்புத் தொட்டி, (4) எருமைநாத் தொட்டி, (5) ஏமசிங்கி, (6) இரத்த சிங்கி, (7) மிருதாரு சிங்கி, (8) சாதிலிங்கம், (9) கருமுகில், (10) தீ முறுகல், (11) வெள்ளை, (12) சவ்வீரம், (13) கோழித்தலைக் கெந்தி, (14) வாணக்கெந்தி, (15) அரிதார வைப்பு, (16) பவளப் புற்று, (17) கோடா சோரி, (18) பஞ்ச பட்சி, (19) குங்குமபாடாணம், (20) இரத்த பாடாணம், (21) துத்தம், (22) துருசு, (23) இரசிதம், (24) தைலம், (25) சூதபாடாணம், (26) நீலம், (27) கந்தகம், (28) சோராபாடணம், (27) காகம், (30) இலவணம், (31) நாக பாடாணம், (32) இந்திரபாடணம் என்பன செயற்கைப் பாடாணம். இவற்றை,

''தாதுதான் தந்திரமாய் சித்தர் வைத்த
சாங்கமாம் பேரையினிச் சாற்றக் கேளு:
தூதுதான் தொட்டிபுத் தோட்டுத் தொட்டி
சுருதியாம் பொற்றொட்டி செப்புத் தொட்டி
ஏதுதான் எருமைநாத் தொட்டி யோடே
ஏற்றுமாம் நாலுவகைத் தொட்டி யாச்சு;
வாதுதான் சிங்கிவகை மூன்றுங் கேளு;
மகா ஏம சிங்கிரத்த சிங்கியாமே.''

''சிங்கியென்ற மிருதாரு சிங்கியோடு
திறமான மூன்றுவகைச் சிங்கியாச்சு;
தங்கியென்ற சாதிலிங்கம் கருமுகிற்றுன்
தாக்கான தீமுறுகல் வெள்ளையாகும்;
கொங்கியென்சவ் வீரங்கோழித் தலைக் கெந்தி
கொடிவாணக் கெந்தியரி தார வைப்பாம்.
பங்கிபவ எப்புற்றுக் கோடா சோரி
பஞ்சபட்சி குங்குமபா டாணந் தானே.''

''தானென்ற ரத்தபா டாணந் துத்தம்
தாயான துரிசியோடு ரசிதந் தைலம்
தேனேன்ற சூதபாடாண நீலம்
தேவிகந் தகஞ்சோர பாடாணங்கா
நானென்ற லவணமொடு நாகபா டாணம்
நல்லிந்திர பாடாணமுப் பத்தி ரண்டும்
கோனென்ற சித்தர்சொல்லக் கேட்டு யானும்
குறிப்பறிந்தே ழாயிரத்திற் பாடி னேனே.''

என்னும் போகர் ஏழாயிரச் செய்யுளாலறிக.

இவற்றுள் சிலவற்றைப் பஞ்சபூத பாடாணமெனப் பிரித்துச் சொல்லி யிருக்கிறுர்கள். அவை பல மாறுதல்களாயிருக்கின்றன.

பஞ்ச பூத பாடாணம்.

1. பிருதிவி—அரிதாரம்.
2. அப்பு—சவ்வீரம்.
3. தேயு—கௌரி.
4. வாயு—வெள்ளை.
5. ஆகாயம்—இலிங்கம்.

என்பன பஞ்சபூத பாடாணங்களாம்.

இது, ''பச்சை வெட்டுப் பதினறு'' என்னும் நூலில் கூறப் படுகிறது. இப்பொருளை,

''அரிதாரம் பிருதிவியே யாகிநிற்கும்
ஆனதொரு சவ்வீர மப்பு வாகும்
பெரிதான கௌரியோ தேயு வாகும்
பின்னுமோர் வெள்ளையோ வாயு வாகும்
அரிதான லிங்கமா காச மாகும்
அருத்தியாய்ப் பச்சையதா யாட லாகும்.''

என்னும் செய்யுளாலறியலாம்.

(வேறு)

1. பிருதிவி—தாரம்.
2. அப்பு—பூரம்.
3. தேயு—வீரம்.
4. வாயு—கௌரி.
5. ஆகாயம்—இலிங்கம்.

என்பன. இது, நந்தீசர் கலைஞானத்திற் சொல்லப்படுகிறது. இதை,

''மகத்தான பிருதிவி தார மாமே
ஆமப்பா அப்பதுதான் பூர மாகும்
அப்பனே! தேயுதான் வீர மாகும்
காமப்பா கௌரியது வாயு வாகும்
கண்மணியே! சத்தமது லிங்க மாகும்
நாமப்பா வைம்பூத சரக்கு மைந்தா!
நலமான சரக்குவழி நன்மை யாகும்.'

என்னும் செய்யுளாலறிக.

இவையன்றி, இன்னும் வேறு வகையாகவும் ''போகர் காரசாரத்துறை'' என்னும் நூல் கூறுகின்றது. அவ்வகை.

1. பிருதிவி—தொட்டி, பவழப்புற்று, கார்முகில், சிங்கி, தீமுறுகல்.
2. அப்பு—குதிரைப்பல், கௌரி, சங்கு, வெள்ளை, சாவற்பூ.
3. தேயு—தாளகம், தாரம், கந்தி, சிலை, வீரம்.
4. வாயு—துத்தம், சரகாண்டம், பஞ்சபட்சி, இரத்தம், இலிங்கம்.
5. ஆகாயம்—சூதபாடாணம்.

என்பன. இவற்றை,

''பாரப்பா பாடாணச் சரக்கில் பூதம்
பாடுகிறேன் தொட்டியுடன் பவழப் புற்று
ஆரப்பா கார்முகிலுஞ் சிங்கியோடு
அப்பனே தீமுறுக லஞ்சு மண்ணும்;
வேரப்பா குதிரைப்பல் கௌரி சங்கம்
வெள்ளையொடு சாவற்பூத் தண்ணீராகும்;
சீரப்பா தாளகமுந் தாரங் கந்தி
சிலைவீர மிவையைந்துந் தீய தாமே.''

''தீயான துத்தமொடு சர காண்டம்
சிறந்த பஞ்ச பட்சிரத்தம் லிங்க மைந்தும்
வாயாரச் சொல்லுகிறேன் காற்ற தாகும்;
மக்களே! சூதமொன்று வெளிய தாகும்.''

என்னுஞ் செய்யுட்கள் தெரிவிக்கின்றன.

## உபரசம்—120.

ஈண்டு ''இரசம்'' என்னுஞ் சொல், சிவமென வழங்கப் படுவதாதலின், அச்சிவங் கலவா உயிர் இன்றுதல் போல, இரசங் கலாவாச் சரக்கு மில்லையாம். அச்சிவம்,

''தன்பருவ மலருக்கு மணமுண்டு வண்டுண்டு
தண்முகை தனக்கு முண்டோ?''

எனத் தாயுமானுர் கூறியபடி, பக்குவப்பட்ட அன்பர்களிடத்தில் எளிதாயறியுமாறு வெளிப்பட்டுத் தோன்றியும், அவ்வன் பராகார்க்கு வலிய முயற்சியிலும் தோன்றுமலிருப்பது போல இரசம், அன்பர் போன்ற நூற்றிருபது சரக்குகளில் மிகுந்த அளவிலும், மற்றவற்றிற் காணமுடியாத குறைந்தவளவிலும் இருக்கின்றதென்பது ''உபரசம்'' என்னுஞ் சொல்லால் விளங்குகிறது.

அவ்வுபரசம் நூற்றிருபதென்பதை,
''தாளப்பா உபரச நூற்றிருபதாகும்.''

எனப் போகர் காரசாரத்துறை கூறுகிறது.

அவை, (1) காந்தம், (2) அப்பிரகம், (3) துருசு, (4) கல்நார், (5) பொன்நிமிளை, (6) கருங்கல், (7) செங்கல், (8) சுக்கான் கல், (9) ஈரக்கல், (10) சூடாலைக்கல், (11) கருடக்கல், (12) இராசவர்த்தக்கல், (13) பவழம், (14) வயிடூரியம், (15) பச்சை, (16) நீலம், (17) நாகரவண்டு, (18) கருவண்டு, (19) ஆமை, (20) உவர்மண், (21) கற்சுவடு, (22) ஒட்டின் தூள், (23) கர்ப்பூரச் சிலை, (24) காவிக்கல், (25) சுத்த மணல், (26) செம்மண், (27) சொன்னபேதி, (28) கல்மதம், (29) வயிரம், (30) முத்து, (31) நீலாஞ்சனக்கல், (32) எறும்பு, (33) மாக்கல், (34) தேக்கல், (35) பூநாகம், (36) இந்திரகோபம், (37) கோமேதகம், (38) புஷ்பராகம், (39) முட்டை, (40) மயில், (41) எலும்பு, (42) நண்டு, (43) நத்தை, (44) மான் கொம்பு, (45) கலைக்கொம்பு, (46) மாட்டுக்கொம்பு, (47) ஆட்டுக் கொம்பு, (48) ஆனைக்கொம்பு, (49) கோழிக்கால், (50) மாட்டுக் கால், (51) குருந்தக்கல், (52) பன்றிக் கொம்பு, (53) அஸ்தி பேதி, (54) மஞ்சட்கல், (55) தவளக்கல், (56) மாங்கிசபேதி, (57) சிட்டக்கல், (58) வெள்ளைக்கல், (59) சுக்கான், (60) சிலாவங்கம், (61) செவ்வட்டை, (62) செம்பு மண், (63) மீன் எலும்பு, (64) கத்தூரி, (65) தேன், (66) கடல்நுரை, (67) மயிர், (68) கரடி, (69) மாந்தளிர்க்கல், (70) படிகக்கல், (71) தவளை, (72) கடற்பாசி, (73) சாளிக்கிராமம், (74) கழுதை வண்டு, (75) நாகப்பச்சை, (76) கருமணல், (77) வங்கமணல், (78) காந்தக்கல், (79) ஏமச்சிலை, (80) ஏமமண், (81) நாக மணல், (82) ஈயமணல், (83) நாய்க்கட்டம், (84) பன்றிமுள்,

(85) எலிமுள், (86) வங்கச்சிலை, (87) நாகச்சிலை, (88) மந்தாரச் சிலை, (89) முட்சங்கு, (90) மாங்கிசச்சிலை, (91) மரகதம், (92) குருவண்டு, (93) கெண்டசிலை, (94) காகச்சிலை, (95) ஈயச்சிலை, (96) இரசிதச் சிலை, (97) முத்துச்சிப்பி, (98) பல், (99) உலோகமணல், (100) கிளிஞ்சில், (101) செம்புமலை, (102) உரம், (103) வெண்கலமலை, (104) வளப்பக்கல் (105) வெள்ளி மணல், (106) அயச்சிலைக்கல், (107) திமிங்கலம்; (108) பேரோசனை, (109) தராமலை, (110) பித்தளைமலை, (111), காண்டாமிருக கொம்பு, (112) புற்றும்பழம், (113) குளவிக் கூட்டுமண், (114) நாகச் சட்டை, (115) புருவெச்சம், (116) மின்மினிப்பூச்சி, (117) வைக்கிராந்தம், (118) அன்னபேதி, 119) சாத்திரபேதி, (120) மாணிக்கம், என்பன. இவை,

''கண்டுகொள் ளுபரசத்தின் வகையைச் சொல்வேன்:
காந்தமோ டப்பிரகந் துருசு கன்னுர்
தொண்டர்களே! பொன்னிமிளை கருங்கல் செங்கல்
சுக்கான்க லிரக்கல் சூடா லைக்கல்
பண்டுதான் கருடபட்சி ராச வர்த்தம்
பவழவை டூரியமும் பச்சை நீலம்
உண்டுநா கரவண்டு கருவண்டாமை
உவரிமண் கற்சுவடு ஓட்டின் தூளே''.

'' தூளான கர்ப்பூரச் சிலைகற் காவி
சுத்தமணல் செம்மண்ணுஞ் சொன்ன பேதி
நீளான கல்மதமும் வயிர முத்து
நீலாஞ்ச னமெறும்பு மாக்கல் தேக்கல்
கோளான பூநாக மிந்த்ர கோபம்
கோமேத கம்புட்ப ராக முட்டை
வாளான மயிலெலும்பு நண்டு நத்தை
மான்கொம்பு கலைக்கொம்பு மாட்டுக் கொம்பே.''

''கொம்பான ஆட்டுக்கொம் பானைக் கொம்பு
கோழிக்கால் மாட்டுக்கால் குருந்தக் கல்லு
வம்பான பன்றிக்கொம் பஸ்தி பேதி
மஞ்சட்கல் தவளக்கல் மாங்கிச பேதி
தெம்பான கற்சிட்டம் வெள்ளை சுக்கான்
சிலாவங்கம் செவ்வட்டை செம்பு மண்ணு
கம்பான மீனெலும்பு கத் தூ ரித்தேன்
கடல்நுரையு மயிரோடு கரடி தானே.''

'தானென்ற மாந்தளிர்க்கல் படிகக் கல்லு
தவளையொடு கடற்பாசி சாளி கிராமம்
கானென்ற கழுதைவண்டு நாகப் பச்சை
கருமணல் வங்கமணல் காந்தக் கல்லு
நானென்ற ஏமசிலை யேம மண்ணு
நாகமண லியமணல் நாயின் கட்டம்
வானென்ற பன்றிமுள் ளெலியின் முள்ளு
வங்கசிலை நாகசிலை மகிமை பாரே.''

''மகிமையா மந்தாரச் சிலைமுட் சங்கு
மாங்கிசச்சிலை மரகதமாங் குருவண் டப்பா
திகையாதே கெண்டசிலை காக மியச்
சிலைரசிதச் சிலைமுத்துச் சிப்பி பல்லு
வகையான லோகமணல் கிளிஞ்சிற் செம்பு
மலையுரம் வெண் கலமலையும் வளப்பக் கல்லு
தொகையான வெள்ளிமண லயச்சி லைக்கல்
தொடரான திமிங்கலமுஞ் சொல்லக் கேளே.''

''சொல்லும்பே ரோசனையுந் தரா!ித் தளையில்
தோன்றுமலை காண்டா மிருகத்தின் கொம்பு
நல்புற்றும் பழம்குளவிக் கூட்டு மண்ணு
நாகசட்டை புருவெச்சம் மின் மினிப் பூச்சி
நல்லவனே வைகிராந்த மன்ன பேதி
நற்சாத்ரபேதியுடன் மாணிக் கந்தான்
சொல்லவென்று லுபரச நூற்றிருப தப்பா
தொட்டவர்க்குச் சொன்னமய மாகுந் தானே.''

எனப் போகர் காரசாரத்துறையில் கூறப்பட்டுள்ளன.

இத்தொகையில் காந்தம், காந்தக்கல், சுக்கான், சுக்கான்கல், பச்சை, நாகப்பச்சை, மரகதம் எனச் சொல்லப் பட்டிருக்கின்றவைகளின் வேற்றுமைகளை அறிந்துகொள்ள வேண்டும்.

### பஞ்சபூத உபரசம்.

1, பிருதிவி : (1) பூநாகம், (2) இராசவர்த்தம், (3) அப் பிரகம், (4) ஊசிக்காந்தம், (5) சிலாசத்து என்பன.

2. அப்பு : (1) தண்டு, (2) நத்தை, (3) சங்கு, (4) முட்டை, (5) பொற் கிளிஞ்சில் என்பன.

3. தேயு : (1) வெள்ளைக்கல், (2) இந்திரகோபம், (3) கழுதைவண்டு, (4) நிமிளை, (5) எலும்பு என்பன.

4. வாயு : (1) கல்மதம், (2) கல்நார், (3) மயிர், (4) அன்ன பேதி, (5) சாத்திரபேதி என்பன.

5. ஆகாயம் : (1) சுக்கான்கல், (2) வைகிராந்தம், (3) கற்சவடு, (4) சாளிக்கிராமம், (5) இரசிதசிலை என்பன. இவற்றை,

''சொல்லக்கே ளுபரசத்தின் பூதந் தன்னைச்
சொல்லுகிறோம் பூநாகம் ராச வர்த்தம்
மெல்லக்கே ளப்பிரக மூசிக் காந்தம்
மேலான சிலாசத்தும் பூமி யாச்சு;
புல்லக்கேள் நண்டுநத்தை சங்கு முட்டை
பொற்கிளிஞ்சி லிவையைந்தும் புனலே யாகும்,
கல்லக்கேள் வெள்ளைக்கல் இந்திர கோபம்
கழுதைவண்டு நிமிளையத்தி கனல்கூறுமே.''

''ஆகுமே கல்மதமும் கல்நார் ரோமம்
அருளன்ன பேதியுடன் சாத்ர பேதி
போகுமே யிவையைந்தும் வாயு வாச்சு;
புகழான சுக்கான்கல் வைகி ராந்தம்
ஏகுமே கற்சுவடு சாளிக் கிராமம்
இரசிதசிலை யிவ்வைந்தா காச மாகும்.''

என்னுஞ் செய்யுட்களால் அறிக.

மேலே போகர் காரசாரத்துறை 60-ல் ''உபரசம் நூற்றிருபது என்று தொகை கட்டப்பட்டிருக்கிறது. ஆயினும், தேரர் தயில வர்க்கச் சுருக்கத்தில் உள்ள மகா மேகராஜாங்கத் தயிலச், செய்யுளுள்ளே

''பையவடி முன்போற் பகர்வா முபரசநீர்
துய்யமுத்தந் தோடு துகிரிரத்த—மையெனுங்கல்
காருடப் பச்சைசசி கன்மதஞ்சி னப்பட்டை
நாரொடுமுக் குந்திருக்க நற்நூபந்-தேரவையீ ரேழுவகை.'

என்னும் அடிகளில் சொல்லப்பட்டிருக்கும் வெண்முத்து, முத்துச் சிப்பி, பவழம், கொம்பரக்கு, அஞ்சனக்கல், கருடப் பச்சை, கர்ப்பூரம், கல்மதம், பறங்கிப்பட்டை, கல்நார், கருங்குங்கிலியம், வெண்குங்கிலியம், பச்சைக் குங்கிலியம், சாம்பிராணி என்னும் பதினான்கில் கொம்பரக்கு, கர்ப்பூரம், பறங்கிப்பட்டை, கருங்குங்கிலியம், வெண்குங்கிலியம், பச்சைக் குங்கிலியம், சாம்பிராணி என்னும் ஏழும் அக் காரசாரத் துறைத் தொகையில் காணப்படவில்லை. அச்சரக்குகள் ஏழும் எந்த நூலில் உபரசம் என்று சொல்லப்பட்டிருக்கின்றனவோ, அந்த நூல் இப்பொழுது அகப்பட்டிலது.

## II. கருவி

மருந்து முடிக்கக் கருவிகள் தேவை, அக்கருவிகளாவன :

கல்வம், சுரண்டி, அகல், குப்பி (குடுவை), அடைப்பான், சலாகை சட்டி, மூசை (குகை), சீலை, வரட்டி, மணல், விறகு, சுண்ணாம்பு, கரி, குழி, புடம், அடுப்பு, துருத்தி முதலியன வாம்.

**1. கல்வம்.**—இது கருங்கல்லினால் செய்யப்பட்ட குழியுள்ள அம்மி.

**இதன் வகைகள் :**

*(1)* **கருப்புக்கல் :** இதனை நன்னிக்கல் கல்வம் என்றும் சொல்வதுண்டு, இக்கல்வம் தேய்ந்து மருந்துடன் கலவாதாதலால் இதில் மருந்தரைத்தல் உத்தமம். இஃது உடலுக்கு அதிக நன்மை பயக்கும்.

*(2)* **சிவப்புக்கல் :** சன்னிபாத நோய்களுக்கு இதில் மருந்து அரைத்தல் உத்தமம்.

*(3)* **வெள்ளைக்கல் :** மருந்தின் வேகத்தையும் குணத்தையும் அழிக்கும்.

*(4)* **மஞ்சள் நிற கல் :** இதில் செய்யப்பட்ட மருந்துகள் பிணிகளை நீக்கா.

*(5)* **பச்சைக்கல் :** பச்சைக்கல் ஒன்றிருக்கிறதென்றும், அது மிகச் சிறந்ததென்றும், அது கிடைப்பது அருமை என்றும் சொல்கின்றனர்.

இதனை,

''கருங்கற்கல் வத்தவிழ்தங் காணிலுடற் கின்பாம்
நெருங்கிரத்தக் கற்றோடம் நீக்கு(ம்)—ஒருங்குவெள்ளைக்
கன்மருந்தோ வீரமொடு காரமின் மஞ்சளம்மி
யின்மருந்தோ நோய்விலக்கா வெண்.''

என்னும் செய்யுளாலறியலாம்.

**2. சுரண்டி :** இது, கல்வத்திலிட்டு அரைக்கும் மருந்தை வழிக்கும் கருவியாகும். இரும்புச் சுரண்டி துருப்பிடிக்கும்; மருந்தின் குணத்தை மட்டுப்படுத்தும். எஃகு வெள்ளிகளாலான சுரண்டி நன்மை பயக்கும்; இவைகள் உத்தமம். மரம், கொம்பு இவைகளால் செய்யப்பட்டவை மத்திமம். இதனை,

''இரும்பி னற்கல்வம் சுரண்டுறு பொருளினை யியற்றின்
துரும்பி னன் மருந் தின்குணம் சுருக்கிடு முருக்கும்
விருப்பி னலெஃகும் வெள்ளியு முத்தமம்; விருட்ச
மருப்பி னற்புரி கருவியோ மத்திம குணமாம்.''

என்னும் செய்யுளால் அறியலாம்.

**3. அகல் :** இது • வட்டமான மண்தட்டு.

4. குப்பி : இது கழுத்துக் குறுகலாயும், அடி பரவலாயும் உள்ள ஜாடி. இது பூநீற்றினுல் செய்யப் பட்டது.

5. அடைப்பான் : இது மாக்கல்லினுல் செய்யப்பட்டது. இதில் சலாகை நுழையத்தக்க தமர் (தொளே) போட்டுக் கொள்ளப்படும்.

6. சலாகை : இஃது எஃகினுல் செய்யப்பட்ட மெல்லிய கம்பி; குப்பியில் எரிக்கின்ற மருந்துகளேக் கிளறுவதற்கும்; பாகம் (பக்குவம்) பார்ப்பதற்கும் உபயோகப்படுகின்றது.

7. சட்டி : இது, வாய் அகன்ற வட்டமான ஆழமுள்ள மண் பாத்திரம். இதனைக் குண்டுசட்டி என்று சொல்வதும் உண்டு.

8. மூசை : இதுவே ''குகை'' என்றும் சொல்லப்படும். இது மண் மூசை, வச்சிர மூசை என இருவகைப்படும்.

(1) மண் மூசை : இது மணல், கரி, சாம்பல், களிமண், தேங்காய் நார் இவைகளைச் சேர்த்துச் செய்யப்படுவது.

(2) வச்சிர மூசை : இது, களிமண், அயக்கிட்டம், சணல், தார், உமிக்கரி, அடுப்புக்கரி, சுண்ணும்பு முதலியன சேர்த்துச் செய்யப்படும்.

இம்மூசைகள் களங்கு சுண்ணம் முதலியன செய்யப் பயன்படும்.

இவைகளன்றி, வேறுவகைக் குகைகளும் உண்டு. அவைகளைக் கீழ்க்காணும் செய்யுட்களால் தெரிந்துகொள்ளலாம்.

உருக்குக் குகை.

''திடமான குகைதிட்டஞ் சொல்லக் கேளாய்;
திகழ்வான கழுதைலத்தி பலமி ரண்டு
வடமான உமிக்கருகல் சிலேயின் சாம்பல்
வகைக்கிரண்டு பலமாகும் களிமணீ ருறு
குடமான கடுக்காயின் குடிநீர் விட்டுச்
குமுறவே யாட்டிமைபோற் குகைதான் பண்ணு;
படவான மேற்சில்லு மிதிலே பண்ணு
பற்றுகுகை உருக்கினத்திற் பலமா காதே.''

பஞ்சசுண்ணக் குகை.

பெலமாகுஞ் சுண்ணமெனுந் துறைகட் கெல்லாம்
பேசுகிறேன் பஞ்சசுண்ணக் குகையைக் கேளு:
அலமான நண்டுநத்தை சங்கு சிப்பி
அண்டோடு மிவையைந்துங் கல்வத் திட்டு

விலமான எருக்கம்பால் தன்ளு லாட்டி
வில்லை தட்டிக் காயவைத்துப் புடத்திற் போடு
நலமான சுண்ணும்பாங் கல்வத் திட்டு
நாடியரை வெண்கருவும் எருக்கம் பாலும்
நலமான கற்சுண்ண நீரும் விட்டு
நலக்கரைத்துக் குகையின்மேல் சில்லு செய்து
பலமான விதில்வைத்துப் புடத்தைப் போடப்
பலத்துமே கடுஞ்சுண்ண மாகும் பாரே''

**பஞ்ச பூதக்குகை**

கடல்நுரை (175 கிராம்) ஐந்து பலத்தில் கற்சுண்ண நீர் விட்டு நன்ருக அரைத்து, வில்லை செய்து காயவைத்துக் கரியில் ஊதக் கடுஞ்சுண்ணமாகும் இதற்குச் சம எடை நவாச்சாரம் சேர்த்து முன்போலவே செய்க இவ்வாறு சீனத்தையும் சேர்த்துச் செய்க. இதைக் குகை செய்து தாளகம் வெள்ளைப் பாடானம் இவைகளை வைத்துப் புடமிடச் சுண்ணமாகும்

9. சீலை : சீலை என்பது, ஒரு சுத்தமான அழுத்தத் துணியில் மிருதுவாக அரைத்த புற்று மண்ணை ஒரு பக்கத்தில் தடவி, ஒட்ட உபயோகித்தல். இதனுல், குப்பி அகல் இவைகளைச் சீலை செய்யலாம். மண்ணுக்குப் பதில் கோதுமை மாவையும், உளுத்தமாவையும் உபயோகிக்கலாம். சுண்ணும்பைத் தனியாகவாவது முட்டையின் வெண்கருவைச் சேர்த்தாவது உபயோகித்தலும் உண்டு இதை மருந்துக்குத் தக்கவாறு செய்ய வேண்டும்.

10 வரட்டி : இஃது (1) இயற்கை வரட்டி, (2) செயற்கை வரட்டி என இரு வகைப்படும்

(1) இயற்கை வரட்டி : இது காட்டு வரட்டியாகும்; இது மேலானது; இஃது இரண்டு பலம் (70 கிராம்) எடை உள்ளதாம்

(2) செயற்கை வரட்டி : பன்னிரண்டு அங்குல (30 செ.மீ.) அகலமும், அரை அங்குலக் (1.25 செ.மீ.) கனமும் உள்ள எருவை வட்டமாய்த் தட்டிக் காயவைத்தெடுத்ததாம். இதனை,

**எருவின் அகலமும் கனமும்**

''ஆமடா எருவகல மலர்க்கை யாகும்;
அடிக்கனமுஞ் சுண்டுவரற் பரும னுகும்;
நாமடா நாட்டெருவிற் கிந்த மார்க்கம்
நலமான காட்டெருவிற் கிருப லந்தான்;
போமடா புடத்தினது பாகந் தப்பில்
புகைந்துபோ மில்லையே லதனுள் வெந்து
சாமடா அதையறிய வேண்டும் வாதி
சார்வான எரிப்புவகை சாற்றக் கேளே.''

என்ற செய்யுளால் அறியலாம்.

நாட்டெரு நான்கு வகைப்படும்: (1) பசுஞ்சாணத்தால் செய்த வரட்டி உத்தமம், (2) எருமைச் சாணத்தால் செய்த வரட்டி அதமம்; (3) கலப்புச் சாணத்தால் செய்த வரட்டி அதமாதமம்; (4) சாணத்துடன் வைக்கோல், சருகுகள் சேர்த்துச் செய்யப்பட்ட வரட்டிகள் மருந்தின் வீரியத்தைக் குறைக்கும்.

ஆட்டுச் சாணத்தினுல் செய்யப்பட்ட வரட்டிகள் மருந்திற்கு அதிக வீரியத்தைக் கொடுக்கும் என்றும், அம்மருந்துகள் பிணிகளை விரைவில் நீக்கும் என்றும் கூறுவர்.

குறிப்பு.—வரட்டிகள் செய்யக் கெட்ட நாற்றம் உள்ள எருவை உபயோகித்தல் கூடாது.

11. மணல் : வாலுகாயந்திரத்துக்கு இது தேவை, எப்பொழுதும் ஆற்று மணலே சிறந்தது. சிறுமணல், சீக்கிரம் சூட்டை இழுத்துப் பரப்பும். பெருமணலோ சிறுமணலைப் போலச் செய்யாது. ஆதலின், செய்யப்படும் மருந்திற்கு அதிகச் சூடு வேண்டுமெனில் சிறுமணலையும், குறைந்த சூடு தேவையெனில் பெருமணலையும் உபயோகிப்பது வழக்கம்.

12. விறகு : தோடங்களுக்குத் தக்கவாறும், மருந்துகளில் சேர்க்கப்படும் உலோக பாடாணங்களுக்குத் தக்கவாறும் விறகை உபயோகித்தல் வழக்கம்.

உதாரணமாக வாததோடத்திற்கு—நூணு, வன்னி, மாவிலிங்கம், வாகை இவை போன்ற மரங்களின் விறகுகளையும், பித்த தோடத்திற்கு—நெல்லி, இலந்தை, வேம்பு, விளா ஆகிய மரங்களின் விறகுகளையும், கபதோடத்திற்கு—உசிலம், வேல், கொன்றை, வேங்கை இவைகளின் விறகுகளையும் இரசம் சேர்ந்த மருந்துகளுக்கு—வேம்பு, பனை, தென்னை இவற்றின் விறகுகளையும், இரும்பு சேர்ந்த மருந்துகளுக்கு—வேல் வேங்கை இவைகளின் விறகுகளையும் உபயோகித்தல் வழக்கம்.

எரிப்பு வகை : அக்கினியை மூவகையாய்ப் பிரிக்கலாம். அவை (1) தீபாக்கினி, (2) கமலாக்கினி, (3) காடாக்கினி என்பவை. இவற்றை,

> ''சாற்றுவேன் தீபமதற் கொன்றே காட்டம்
> தாக்கான கமலமஃ திரண்ட தாகும்
> சாற்றுவே னெரிவுகா டாக்கினிக்குக்
> காட்ட மஞ்சு''

என்ற அடிகளால் அறியலாம் கதலியாக்கினி என்னும் இன்னெரு வகையும் உண்டு.

விறகின் திட்டம் : இதனைக் கீழ்க்காணும் கருக்கடைச் சூத்திரவடிகளால் அறியலாம் :

''சாடியே விறகினது திட்டங்கேளாய்
சாணீள மிரண்டுவிரற் கனதியாகும்.''

13. சுண்ணும்பு : சுண்ணும்பு எரிப்பில் இது உபயோகிக்கப் படும்; தாதுப் பொருள்களை மண்ணிற்குப் பதிலாகச் சுண்ணும்பின் உதவியால் எரித்துச் சுண்ணமாக்க உதவும்; தாளகம் போன்ற பாடாணங்களைப் பற்பமாக்க எரிக்கும் பொழுதும் இஃது உபயோகப்படுகிறது.

14. கரி : துருத்தி உபயோகிக்கும் பொழுது கரி உபயோகப் படுகிறது. சில உலோகங்களை மடித்துப் பற்பச் செந்தூரமாக்க தான்றி போன்ற குறிப்பிட்ட மரங்களின் கரியை உபயோகிக்கலாம் என்று கூறப்பட்டிருக்கிறது.

15. குழி : இது பூமியில் வட்டமாகத் தோண்டும் பள்ளம். இஃது ஒன்பது அங்குலக் (22.5 செ.மீ.) குறுக்களவு, ஒன்பது அங்குல (22.5 செ.மீ.) ஆழம் முதல் மூன்றடிக் (90 செ.மீ.) குறுக்களவு, மூன்றடி (90 செ.மீ.) ஆழம் வரை மருந்திற்கு தக்கவாறும் புடத் திட்டத்திற்குத் தக்கவாறும் சிறிதாகவும் பெரிதாகவும் தோண்டிக் கொள்ளப்படும்.

16. புடம் : இது வரட்டியின் உதவியால் எரிக்கப்படும் எரிப்புத் திட்டம் இஃது எழுவகைப்படும்; (1) காடைப்புடம்-எரு ஒன்று; (2) கவுதாரிப் புடம்-எரு மூன்று; (3) குக்குடப் புடம் (சேவற்புடம்)-எரு பத்து; (4) வராகபுடம்-எரு ஐம்பது (5) கெஜபுடம் எரு ஆயிரம் (6)மணல்மறைவு புடம் எருதொண்ணூறு; (7) பூமிப் புடம்-ஆட்டெரு அகல நீளம் நான்கு விரற்கிடை இவற்றைக் கீழ்க்காணும் செய்யுளால் அறியலாம்;

''விள்ளுகிறேன் புடபாகம் செப்பக் கேளாய் :
மேலான காடையொன்று; கௌதாரி மூன்று;
தள்ளுவரோ குக்குடமோ எருவீ ரைந்து;
சதுரமாம் வராகபுடம் ஐம்ப தாகும்;
உள்ளபடி கெஜபுடந்தா னீரைந் நூறு;
உத்தமனே! மணல் மறைக்காம் எருத்தொண்ணூறே;
அள்ளவே பூப்புடத்துக் கெருவைக் கேளாய்
ஆட்டினெரு நான்குவிரற் கிடைதா னுமே.''

மேற்கூறிய புடங்களல்லாமல், கீழ்க்காணும் புடங்களும் உபயோகத்திலிருக்கின்றன.

(1) உமிப்புடம் : இஃது உமியிற் புதைத்துவைத்து எடுத்தலும் உமியிற் புடமிட்டெடுத்தலுமாம்.

(2) தானியப்புடம் : இது முடித்த மருந்தை நெல்லுக்குள் குறிப்பிட்ட நாளளவும் புதைத்து வைத்திருந்து எடுத்தல்.

(3) சூரியபுடம் : இது வெயிலிற் காயவைத்தல்.

(4) சந்திரபுடம் : இது சந்திர வெளிச்சத்தில் வைத்து எடுத்தல்.

(5) அமாவாசைப் புடம் : இஃது அமாவாசையன்று திறந்த வெளியில் மருந்துகளை வைத்து எடுத்தல்.

(6) பருவ புடம் : இது பருவத்தன்று திறந்த வெளியில் மருந்துகளை வைத்து எடுத்தல்.

(7) பனிப்புடம் : இது பனியில் மருந்துகளை வைத்து எடுத்தல்.

(8) பட்டைப்புடம் : மரத்தைத் துளைத்து, அதற்குள் மருந்தை வைத்து, குடைந்தெடுத்த தூளால் துளையை மூடி வைத்திருந்து, குறிப்பிட்ட நாள் கழித் தெடுத்தல்.

17. அடுப்பு : இதில் பலவகையுண்டு. (1) கொம்மூட்டி அடுப்பு—இவ்வடுப்பைச் சுற்றி மூன்று குமிழ்கள் இருக்கும். (2) சக்கர அடுப்பு—வாய் வட்டமாய் இருக்கும்; குமிழ் இராது. (3) புகை போக்கிச் சக்கர அடுப்பு—சக்கர அடுப்பில் புகை செல்ல வழியமைக்கப்பட்டிருக்கும். (4) உலை அடுப்பு—பூமியில் தோண்டப்பட்டு துருத்தி இணைக்கப்பட்டிருக்கும்.

18. துருத்தி : இஃது இருவகைப்படும். (1) ஒற்றைத் துருத்தி; இஃது ஒரு முழ ஆட்டுத்தோலாற் செய்யப்பட்டது. (2) இரட்டைத் துருத்தி : இது கன்றின் தோலால் செய்யப்பட்டது.

ஊதுமுறைக்குத் துருத்திவகை : சுண்ணம் செய்வதற்கு ஒரு துருத்தியும், சத்து உருக்குவதற்கு இரண்டு துருத்திகளும், செம்பு, இரும்பு இவைகளை ஊதிச் சத்தெடுக்க நான்கு துருத்திகளும் வேண்டும் என்பர்.

# III பொறி (இயந்திரங்கள்).

## அவியந்திரம்.

**வேண்டும் பொருள்கள்:** *(1)* வாய் பொருந்தும் இரண்டு மட்பாண்டங்கள், *(2)* நீர்ப் பொருள், *(3)* சீலை, *(4)* அவிக்கவேண்டிய சரக்கு, *(5)* தீ.



### உபயோகிக்கும் முறை.

ஒரு பாண்டத்தில் நீர் அல்லது நீர்ப்பொருளை விட்டு, அதன் வாய்க்குச் சீலையால் ஏடுகட்டி, அச்சீலையின் நடுவில் அவிக்கபடவேண்டிய பொருளை வைத்து, மற்றொரு பாண்டத்தால் மூடி, உள்ளிருந்து எழும் நீராவி வெளிப்போகாமல் ஈரத்துணியால் விளிம்பைச் சுற்றிவிடுக. சிறு தீயால், பாண்டத்திலுள்ள நீர்ப்பொருள் முக்காற்பங்கு வற்றும்வரை எரிக்கவும். அஃது ஆறியவுடன் அவித்த சரக்கை எடுத்துக் கொள்ளவும்.

### அவிக்கும் சரக்குக்கு உதாரணம்.

தாளிசாதி வடகம், பறங்கிச்சக்கை, சிவதை, பலாசு வித்து, அமுக்கிராங்கிழங்கு.

## துலாயந்திரம்.

வேண்டும் பொருள்கள்: (1) நீளமான மட்பாண்டம், (2) நீர்ப் பொருள், (3) சரக்கு, (4) சீலை, (5) கயிறு, (6) சட்டம், (7) தீ.



### உபயோகிக்கும் முறை.

சரக்கைச் சீலையில் தளர்ச்சியாய் முடிந்து, கயிற்றின் ஒரு முனையில் கட்டி, மட்பாண்டத்தில் நீர்ப்பொருளை ஊற்றி அடுப் பேற்றி, கட்டிய கிழியை நீரில் அமுழ்ந்தியிருக்கவோ அல்லது ஆவிபடும்படியோ தொங்கவிடுவதற்கு அளவுபார்த்துக் கயிற் றின் மற்றொரு முனையைப் பாண்டத்தின் வாயில் குறுக்கே இடப்பட்ட சட்டத்தில் கட்டிவிடவும். அதை நீர்ப்பொருள் வற்றும் வரை எரித்தெடுக்கவும்.

### உபயோகிக்கும் சரக்குக்கு உதாரணம்.

நேர்வாளம்—மூழ்கவைத்து (சுத்தி).
சேங்கொட்டை—மூழ்கவைத்து (சுத்தி).
பூரம்—மூழ்கவைத்து (சுத்தி).
வீரம்—நீர்ப்பொருளில் படாமல் (சுத்தி).
கொம்பரக்கு—மூழ்கவைத்து (குடிநீர்).

## தூப இயந்திரம்.

### வேண்டும் பொருள்கள்.

(1) வாய் அகன்ற மட்பாண்டம், (2) தூபச்சரக்கு, (3) சல்லடைக்கொப்பான சீலை, (4) சரக்கு, (5) வாய் பொருத்தமான மேற்சட்டி, (6) சீலை மண்.



### உபயோகிக்கும் வகை.

ஓர் அகன்ற மட்பாண்டத்தில் தூபச்சரக்கை இட்டு, சட்டியின் வாய்க்குச் சல்லடைக்கொப்பான சீலையை வாய்மூடிக் கட்டி, சரக்கை சீலையின் மேல் பரப்பி, அடிச்சட்டியின் வாய்க்குப் பொருத்தமான மற்றொரு சட்டியை மேலே மூடி, அவ்விரண்டு சட்டிகளையும் பொருத்திய வாய்க்கு மண்பூசிச் சீலை செய்து அடுப்பேற்றிச் சிறு தீயால் எரிக்கவும்.

### உபயோகிக்கும் தூபச் சரக்குகளுக்கு உதாரணம்.

கோரைக்கிழங்கு, பூலாங்கிழங்கு, சாம்பிராணி.

### தூபமிடப்படும் சரக்குக்கு உதாரணம்.

பறங்கி ரசாயனம்.

## மெழுகுத் தைல இயந்திரம்.

### வேண்டும் பொருள்கள்.

*(1) மேற்பாகத்தில் ஓர் அங்குலக் (2.5 செ. மீ.) குறுக்களவுள்ளதும் துளையுள்ளதும், கழுத்து நீண்டதுமான பெருங் கடம், (2) பக்க நடுவில் சிறுதொளையுள்ள சிறுகடம், (3) கயிறு, (4) சீலை மண், (5) பெருங் கடத்திலுள்ள துளையை மூட ஒடு, (6) அவ்வோட்டை மூடச் சாணம், (7) தைலச் சரக்கு, (8) தைலம் சேகரிக்கப் பீங்கான் பாத்திரம், (9) தீ, (10) சிறு கடத்தின் மேலே போட ஈரத்துணி.*



### உபயோகிக்கும் முறை.

*நான்கு (8 லிட்.) அல்லது ஐந்து படி (10 லிட்) கொள்ளத் தக்க கழுத்து நீண்ட கடத்தில் தைலச் சரக்கை இட்டு, அதன் வாய்க்குப் பொருத்தமான வாயுள்ளதும், அக்கடத்திற்கு நான்கிலொரு பங்கு அளவுள்ளதுமான மற்றொரு சிறு கடத்தை, கவிழ்த்து, பொருத்து வாய்க்குச் சந்தில்லாமல் மண் பூசி மெல்லிய கயிற்றினால் இரண்டு கடங்களின் வாயையும் சேர்த்துக் கட்டி அதன் மேல் ஏழு சீலை செய்து அவ்விரு கடங்களின் நடு இடங்களில் பெரிய கடத்தின் மேற்புறத்தில் விரல் நுழையத்தக்க துவாரமும், சிறு கடத்தின் கீழ்ப்புறத்தில் சிறு துவாரமுமிட்டு, பெருங்கடத் துவாரத்திலிருந்து புகைவெளியே போகாதிருக்க ஓட்டால் மூடி, அதன்மேல் பசுவின் சாணத்தை அப்பி, அவ்விடம் மேற்புறமாகவும் சிறுகடத்திலிட்ட துவாரம் கீழ்ப்புற*

மாகவும் இருக்கப் பெருங்கடத்தை ஒருக்கணித்து அடுப்பேற்றி, சிறு கடத்தின் துளை வழியாகத் தைலமிறங்க மெல்லிய குச்சிகளைச் செருகி, தைலஞ் சேகரிக்கும் பீங்கானைக் குச்சிகளின் மற்றொரு முனைபட வைத்து எரிக்கவும், எரிக்கப் புகையுடன் தைலமிறங்கும் எரிக்கும் தீயிற்கும், தைலத்தோடு வெளிவரும் புகைக்கும் சம்பந்தம் ஏற்படாமல் கவனித்து வருதல் வேண்டும். இல்லையேல், சிலபோது புகை தீப்பற்றிக் கடத்திற்குள் சென்று கடம் வெடித்து நஷ்டமாவதுடன், செய்பவர்களுக்கும் தீங்கை விளைவிக்கும்.

செய்யப்படும் மருந்து—மெழுகுத்தைலம்.

## சுடர்த் தைலக் கருவி.

வேண்டும் பொருள்கள்.

(1) சரக்கு, (2) சீலை, (3) கோப்பை, (4) சலாகை, (5) சுடர்க்கொண்டெரியவிடவேண்டிய நெய், (6) தீ.



**உபயோகிக்கும் முறை :**

ஒரு முழ வெள்ளைச் சீலையில் தைலச் சரக்கைத் தடவி, திரியை போல அதைத் திரித்து, வளையமாகவாவது குட்டையாகவாவது மடித்துக்கட்டி, சிறிது நெய் தோய்த்துச் சலாகையினால் குத்தி இடக்கையிற் பிடித்துக் கொண்டு தீயிட்டு எரியச் செய்து, அதனடியில் ஒரு கோப்பையை வைத்துச் சொட்டும் தைலத்தைச் சேகரிக்கவும்.

செய்யப்படும் மருந்து.

கந்தகச் சுடர்த்தைலம், ஓஞன் தைலம்.

## குப்பிப்புடக் கருவி.

### வேண்டும் பொருள்கள்.

*(1) புட்டி, (2) செருகச் சிக்குள்ள கம்பி, (3) சால், (4) இரும்பு அடுப்பு, (5) வரட்டி, (6) பீங்கான் பாத்திரம்.*



### உபயோகிக்கும் முறை.

*தைலம் இறக்குவதற்காக கூறப்பட்ட சரக்குகளை ஏழு சீலை செய்த ஒரு புட்டியினுட் செலுத்தி, வாயினின்று கழுத்துவரை மெல்லிய கம்பி வலையைச் சிக்காக்கி உட்செலுத்தி, புட்டியினுள்ளிட்ட சரக்கு வெளிவராதவாறு அடைத்து விடவும். ஒரு சாலின் அடிப்புறத்து மத்தியில் புட்டியின் கழுத்து நுழையும் வண்ணம் துவாரம் செய்து, அதனை ஓர் இரும்பு அடுப்பின் மேல் வைத்து, சரக்கிட்ட புட்டியின் வாயைத் துவாரத்தின் வழியாகச் செருகி, சந்திற்கு மண் பூசிப் புட்டியைச் சுற்றி அரை அடி (15 செ. மீ.) கனமிருக்க எருவடுக்கிப் புடமிட, சரக்குகள் தீய்ந்து, புட்டியின் வாய் வழியாகத் துளித்துளியாய்த் தைலமிறங்கும். அதனை ஒரு தூய்மையான பீங்கானில் வாங்குக.*

### செய்யப்படும் மருந்துகள்.

*அண்டத் தைலம்.*
*கடலைத் தைலம் (வீரிய விருத்திக்கு உபயோகப்படும்).*

## குழித்தைலக் கருவி.

### வேண்டும் பொருள்கள்.

*(1)* அடியில் துவாரங்களிட்ட குடுவை, *(2)* தைலம் சேகரிக்கப் பீங்கான், *(3)* எரு, *(4)* குழி.



### உபயோகிக்கும் முறை.

ஒரு குடுவையின் அடியில் பத்து அல்லது பன்னிரண்டு சிறு துவாரங்களையிட்டு, அக்குடுவையில் சரக்கை இட்டு, வாய்க்கு ஓடு மூடிச் சீலை செய்து உலர்த்தி, பின்னர் பூமியில் சிறு பள்ளந் தோண்டி, பீங்கான் பாத்திரமொன்றை வைத்து, முன் சித்தப் படுத்திய குடுவையின் துளையிட்ட பாகம் பீங்கானுக்கும் நடுவிலிருக்கும்படி பொருந்தவைத்து, சந்தில்லாமல் பீங்கானுக்கும் குடுவைக்கும் இரண்டொரு சீலை செய்து, பீங்கானை சுற்றி மண் போட்டமுத்தி, குடுவை மறைய அரையடி கனத் திற்குச் சூழ எருவடுக்கித் தீ இடவும். புடம் ஆறிய பின்னர் குடுவையை நீக்கிப் பார்க்கப் பீங்கானில் தைலம் நிரம்பி யிருக்கும்.

### செய்யப்படும் மருந்துகள்.

சிவனா வேம்புக்குழித் தைலம்.

சிரட்டைத் தைலம்.

துவரை வேர்க் குழித்தைலம்.

## செந்தூரம் எரிக்கும் கருவி.

### வேண்டும் பொருள்கள்.

*(1)* இரண்டு சட்டிகள், *(2)* விறகு, *(3)* மண் சீலை, *(4)* அடுப்பு.



### உபயோகிக்கும் முறை.

அடிமட்டமாயும் வாய் பொருத்தமுள்ளதாயும் இருக்கும் இரண்டு சட்டிகளை எடுத்து, அடிச்சட்டியில் எரிக்கப்படவேண்டிய சரக்கை வைத்து, மேல் சட்டி கொண்டு வாய் பொருந்த மூடி, ஏழு சீலை செய்து உலர்த்தி, அடுப்பேற்றி, எரிக்க, பதங்கம் ஏறும் அல்லது செந்தூரமாகும்.

### எரிக்கும் மருந்துகள்.

அயக்காந்த செந்தூரம், ஆறுமுகச் செந்தூரம், பஞ்ச பாடாணச் செந்தூரம்.

## பதங்கக் கருவி.

### வேண்டும் பொருள்கள்.

*(1) சிறிய பானை, (2) பெரிய பானை, (3) சீலை மண், (4) அடுப்பு.*



### உபயோகிக்கும் முறை.

சிறிய பானையில் எச் சரக்கிலிருந்து பதங்கம் எடுக்கவேண்டுமோ, அச் சரக்கையிட்டு, மேற்பானையின் உட்புரத்தில் ஏறும் பதங்கம் ஒட்டக்கூடிய இலையின் சாற்றைப் பூசி யுலர்த்தி, வாய் பொருந்த மூடி, ஏழு சீலை செய்துலர்த்தி, அடுப்பேற்றி, எரிக்க, பெரும் பானையின் உட்புறத்தில் பதங்கம் படியும். ஆறியவுடன் எடுத்துச் சுரண்டிக் கொள்ளவும்.

### செய்யப்படும் மருந்துகள்.

இரசப் பதங்கம் (இலிங்கமும் கொடிவேலி வேரும் கீழ்ப் பானையில் வைக்கப்படும்), சாம்பிராணிப் பதங்கம்.

### பாண்டத்தில் பதங்கம் ஒட்டப் பூசும் இலைகள்.

ஊமத்தையிலை, கலியாண முருங்கையிலை, வெற்றிலை, கோவையிலை, துளசியிலை, குப்பைமேனியிலை.

## வாலுகா இயந்திரம்.

### வேண்டும் பொருட்கள்.

(1) மட்கடம், (2) மணல், (3) குப்பி, (4) சீலை மண், 5) அடைப்பான், (6) அடுப்பு, (7) தீ.



### உபயோகிக்கும் முறை.

எரிக்கவேண்டிய சரக்கை ஏழுசீலை செய்த குப்பியிலிட்டு, குப்பிவாயை மருந்திற்குத் தக்கவாறு மாக்கல்லால் அடைத்துச் சீலை செய்துலர்த்தியும், அடைக்காமலே ஒரு சட்டியில் இரண்டு மூன்று விரற்கிடை மணற் கொட்டி அதன் மீது மருந்திட்ட குப்பியை வைத்து மூடியும், அன்றி, மூடாமலே கழுத்தளவு மணல் நிரப்பியும் அடுப்பேற்றிக் கூறப்பட்ட கால அளவு முத்தீயால் எரித்து ஆறவிட்டெடுக்கவும்.

### செய்யப்படும் மருந்துகள்.

காளமேக நாராயண செந்தூரம், பூரண சந்திரோதயம், தங்க உரம், வெள்ளி உரம், இரசச் செந்தூரம்.

## திராவக வாலை இயந்திரம்.

### வேண்டும் பொருள்கள்.

(1) கடம், (2) மண்வாலை, (3) சரக்கு, (4) குளிர்ந்த நீர், (5) அடுப்பு, (6) தீ.



### உபயோகிக்கும் முறை.

உப்பு இனங்களை இடித்துக் கடத்திலிட்டு, அதற்குப் பொருத்தமான மண்வாலையைச் செருகி, மண் சீலை செய்து, காய்ந்தபின் அடுப்பேற்றி, எரிக்கும்போது வாலையின் மேல் குழாயை அடைத்துக் குளிர்ந்த நீர் விட்டு வைக்கவும், மேல் விட்ட நீர் வெப்பமாகும் போதெல்லாம் குழாயைத் திறந்து நீரை வெளியாக்கி, மீண்டும் குழாயை அடைத்துப் புதிதாகக் குளிர்ந்த நீர் விட்டு எரிக்க, உட்புறமாய் உப்பினிடமிருந்து சத்தாக எழும் ஆவி, நீர்வடிவமாய் உள்ளிடத்தில் நிரம்பி உட் குழாயின் வழியாய்ச் சொட்டும், அதனை வசதியான குப்பி யிலிட்டுக் கல்கார்க்கினால், அடைத்து வைத்துக் கொள்க. உள்ளிட்ட உப்புக்கள் சிறு சத்தத்துடன் வெடிக்குமாயின், திரா வகம் வராதென்பதை அறியவும், பின்னர் கடத்தினின்று வாலையை எடுத்து உள்ளிட்ட உப்புக்களை நீக்கி ஒரு பெரிய பாண்டத்தில் நீர் விட்டு, அதில் வாலையையும் கடத்தையும் ஒரு நாள் ஊறவைத்து அலம்பி எடுத்துக் கொள்க. இங் ஙனம் செய்யாவிடில், கடமும் வாலையும் உளுத்துக் கெடும்.

### செய்யபடும் மருந்துகள்.

வெடியுப்புத் திராவகம், சங்கத் திராவகம், கறியுப்புத் திராவகம், கெந்தகத் திராவகம்.

நண்டுத்தீநீர், ஓமத்தீநீர், சோம்புத்தீநீர் ஆகியவைகளை இறக்க செம்பு போன்ற உலோகங்களாலான பொறியைப் பயன் படுத்துவது மரபு.

## IV. மாரணம்.

### அஷ்டலோக மாரணம்.

வெங்காரம், வெடியுப்பு, வெள்ளை, வீரம், பூரம், கந்தி, ரசம், சாரம்—இவ்வெட்டுச் சரக்குகளும் கூடி உலோகங்களை மாரணஞ் செய்யக் கூடியனவாதலால், இவற்றிற்கு அஷ்டலோக மாரணச் சரக்குகள் என்பது பெயர்.

எந்த உலோகத்தை செந்தூரமாக்க விரும்புகின்றோமோ அந்த உலோகத்தின் எடைக்கு, இவ்வெட்டுச் சரக்கும் சேர்ந்து சமமாயிருத்தல் வேண்டும்.

உதாரணம் : பொன்னோ, வெள்ளியோ ஒரு பலம் (35 கிராம்) எடையுள்ளதாய்க் கொள்வோம். மேற்கண்ட 8 சரக்கு களும் தனித்தனி $1\frac{1}{4}$ வராகனெடை (4.4 கிராம்) அல்லது எட்டும் சேர்த்து $8 \times 1\frac{1}{4} = 10$ வராகனெடை அல்லது 1 பலமாய் (35 கிராம்) இருக்க வேண்டும்.

**உபயோகம் :** அஷ்டலோகச் சரக்கை நான்கு பங்காக்கி, ஒவ்வொரு பங்கையும், எலுமிச்சம்பழச் சாறுவிட்டரைத்து எடுத்துக்கொண்ட லோகத் தகட்டிற்கு இருபுறமும் பூசிக் காய வைத்து, லோகத்திற்குத் தக்கபடி புடமிட்டுக்கொண்டு, மறுபடியும் மற்றப் பங்குகளைப் பூசி, அவ்வாறே புடமிட்டுக் கொண்டு. கடைசியில், லோக எடைக்கு நேரெடை கந்தகமும், இரண்டுங்கூடிய எடைக்கு 4-ல் 1 பங்கு வீரமும், சேர்த்து அரைத்து, சிறு வில்லைகள் செய்து உலர்த்தி ஓட்டிவிட்டு, மேலோடு மூடி, சீலை செய்து, செந்தூரமாகும் வரை புடமிட்டுக் கொள்ளவும்.

### ஏகமூலம்.

மேற்படி எண்சரக்குகளுடன் படிகி, பூநாதம், புழுகு சேர்த்துக் கொண்டால், அக்கூட்டுச்சரக்குகள் ''ஏகமூலம்'' என்று பெயர் பெறும்.

இஃது அஷ்டலோக மாரணைச் சரக்குகளைப்பார்க்கிலும் அதிக நன்மை தரத்தகுந்தது.

இதனுல் முடியும் செந்தூரம், அதிக வீரியமும், பிணிகளை வெகு விரைவில் போகக்கூடிய ஆற்றலும் பெறும்.

### உலோக மாரணம்

வெள்ளியம் தாளகத்தாலும், காரியம் மனேசிலையாலும், உருக்கு லிங்கத்தாலும், தாம்பிரம் கெந்தியாலும், வெள்ளி ஏமமாஷிகத்தாலும், பொன் நிமிளையாலும், மாளும். மாள வேண்டிய சரக்குகளைத் தகடுதட்டி மாரணச் சரக்கைச் சம்பீரச் சாற்றாலரைத்துத் தகட்டிற்குப் பூசி, அதை ஒரு சட்டிக்குள் வைத்து, மேற்சட்டி கொண்டு மூடி, வலுவாய்ச் சீலை செய்து கஜபுடம் இடவும்.

---

## V. செயநீர்.

### செந்தூரச் செயநீர்

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஐந்தாங் காய்ச்சல் வெடியுப்பு | | | .. | .. | 10 | பங்கு |
| அட்டுப்பு .. | .. | .. | .. | .. | 5 | ,, |
| படிகி | .. | .. | .. | .. | 5 | ,, |
| சாரம் | .. | .. | .. | .. | 5 | ,, |
| வெள்ளை | .. | | .. | .. | 5 | ,, |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கெந்தி | .. | .. | .. | .. | 3 ,, |
| எவட்சாரம் | .. | .. | .. | .. | 2 ,, |
| அன்னபேதி | .. | .. | .. | .. | 2 ,, |
| | | | | | 37 பங்கு |

கோது நீக்கிய பழம் புளி .. 15 பங்கு

இவற்றுள் புளி நீங்க மற்றவைகளைத் தனித் தனி பொடித்து, பிறகு ஒன்று சேர்த்துப் புளியுடன் சிறிது சிறிது கலந்து அரைத்து, கடைசியில் ஒன்றுபடும்படி இருசாமம் இரும்புலக்கையால் இடித்து, சிறு சிறு மெல்லிய வில்லைகள் செய்துலர்த்தி, புதிய பானையோட்டிலிட்டு, அடுப்பேற்றித் தென்னை ஓலையிட்டு எரித்து, எடுத்துச் சீலையில் மூடிகட்டி, பீங்கான் பாத்திரத்தில் தொங்க விட்டு, இப்பாத்திரத்தை வேறு ஒரு பெரிய மட்பாத்திரத் துக்குள் அமைத்து, மேலே மூடிச் சீலை ஏழு செய்து சதுப்புள்ள பூமியில் புதைத்து, ஒரு மண்டலஞ் சென்றெடுக்கப் பீங்கான் பாத்திரத்தில் நீர் படிந்திருக்கும். பனிக்காலமாயின், பீங்கான் தட்டில் ஒரு புறம் பரப்பிப் பனியில் வைக்க நீரிறங்கும். இந்நீர் நவமணி, நவலோகம், இரசம், உபரசம், உபரச சத்துக்கள் இவற்றைச் செந்தூரமாக்கும் வல்லமை பெறும்.

மற்றொரு முறை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஐந்தாங் காய்ச்சல் வெடியுப்பு | | | .. | .. | 10 பங்கு |
| அட்டுப்பு .. | .. | .. | .. | .. | 5 ,, |
| சீனக்காரம் | .. | .. | .. | .. | 5 ,, |
| சாரம் .. | .. | .. | .. | .. | 5 ,, |
| துருசு .. | .. | .. | .. | .. | 5 ,, |
| கெந்தி .. | .. | .. | .. | .. | 3 ,, |
| எவட்சாரம் | .. | .. | .. | .. | $3\frac{1}{2}$ ,, |
| அன்னபேதி | .. | .. | .. | .. | 2 ,, |
| | | | | | $37\frac{1}{2}$ பங்கு |

பழம் புளி .. .. .. .. 15 பங்கு.

மேற்கண்டபடி செயநீர் செய்து கொள்ளவும். இஃது உலோகங்களைச் செந்தூரிக்க உதவும்.

## மற்றொரு முறை.

| | |
|---|---|
| ஏழாம் காய்ச்சல் வெடியுப்பு .. .. | 10 பங்கு |
| பழம் புளி .. .. .. .. | 7 ,, |

இரண்டையும் சேர்த்தரைத்து, வில்லைத் தட்டிக் காய வைத்து, அடுப்பில் எரித்து, தூள் செய்து, இதற்குச் சமன் நாட்டு நவச்சாரம் சேர்த்துப் பணியில் வைக்க நீர் இறங்கும்.

## அண்ட எருக்கஞ் செயநீர்.

| | |
|---|---|
| எருக்கம்பால் .. .. .. .. | 4 பங்கு |
| மூட்டை வெண்கரு .. .. .. | 1 ,, |
| வீரம் .. .. .. .. .. | சிட்டிகை. |

இவற்றை ஒரு புட்டியிலிட்டு வைத்திருந்தால், செயநீர் தோன்றும். இது கடுங்காரப் பற்பங்கள் செய்வதற்கும், சுண்ணங்கள் செய்வதற்கும் பயன்படும்.

## சிப்பிச் செயநீர்.

உயிருள்ள கும்பிடுகிளிஞ்சல்களின் வாயைக் கவனமாய்ப் பிளந்து, அதில் வெங்காரம், வீரம், பச்சைக் கற்பூரம் சரி பங்கு எடுத்து, பொடித்த தூளில் ஒரு சிட்டிகையை இட்டு மூடிப் பீங்கான் பாத்திரத்தில் வைத்தால் நீர் இறங்கும். இந்நீரைப் புட்டியில் விட்டுவைக்கவும். இதுவே சிப்பி செயநீர். இந்நீரை உலோகபாடாண உபரசங்களுக்கு விட்டரைத்துப் புடமிடச் சுண்ணமாகும்.

# VI. திராவகம்.

## செந்தூரத் திராவகம்

| | |
|---|---|
| அன்னபேதி .. .. .. .. | 85 பங்கு |
| வெடியுப்பு .. .. .. .. .. | 45 ,, |
| படிகாரம் .. .. .. .. | 20 ,, |
| பூநீறு .. .. .. .. .. | 10 ,, |
| கெந்தி .. .. .. .. .. | 10 ,, |
| கறியுப்பு .. .. .. .. | 5 ,, |
| | 175 பங்கு |

இவற்றுள் ஒவ்வொன்றையும் தனித்தனி கல்வத்திட்டரைத்து முடிவில் ஒன்று சேர்த்து, பனியில் வைத்து, அதை மூன்று பங்கு செய்து, ஒரு பங்கை வாலையிலிட்டு திராவகமிறக்கி, இரண்டாம் பங்கில் சேர்த்து, மறுபடியும் வாலையிலிட்டு திராவகமிறக்கி, அதை மிச்சமாயுள்ள மூன்றும் பங்கிற் கூட்டித் திராவகமெடுக்கவும்.

இது லோகாதி தாதுப்பொருள்களைச் செந்தூரிக்க உதவும்.

(வேறு)

| | |
|---|---|
| வெடியுப்பு .. .. .. .. | 15 பங்கு |
| சீனக்காரம் .. .. .. .. | 10 ,, |
| நவச்சாரம் .. .. .. .. | 1 ,, |
| பூநீறு .. .. .. .. .. | 1 ,, |
| அன்னபேதி .. .. .. .. | 1 ,, |
| துருசு .. .. .. .. .. | ½ ,, |
| இந்துப்பு .. .. .. .. .. | ½ ,, |
| கறியுப்பு .. .. .. .. | ½ ,, |

இவற்றை மேற்கண்டபடியே பொடித்துச் சேர்த்து இரு பங்கு செய்து, மேற் கூறியவாறு திராவகம் இறக்கிக் கொள்ளவும்.

உபயோகம் : இது குப்பிச் செந்தூர முறைகளில் அரைப்புக்கு உபயோகமாகும்.

## சங்கத் திராவகம்.

| | |
|---|---|
| வெடியுப்பு .. .. .. .. | 3 பங்கு |
| இந்துப்பு .. .. .. .. .. | 2 ,, |
| சோற்றுப்பு .. .. .. .. | 1 ,, |
| நவச்சாரம் .. .. .. .. | 2½ ,, |

| | | |
|---|---|---|
| அன்னபேதி | .. .. .. .. | $\frac{1}{4}$ பங்கு |
| துருசு | .. .. .. .. .. | $\frac{1}{4}$ ,, |
| படிகாரம் | .. .. .. .. | $\frac{3}{4}$ ,, |
| பூநீறு | .. .. .. .. .. | $\frac{3}{4}$ ,, |
| வெங்காரம் | .. .. .. .. | 1 ,, |

மேற்கூறிய சரக்குகளைப் பொடித்துத் திராவக இயந்திரத்திலிட்டு முறைப்படி திராவகம் இறக்கிக் கொள்ளவும், இதனால், உலோகங்களும் உபரசங்களும் நீராகும். இதனை நீரில் கலந்து துளிக்கணக்கில் கொடுக்க, மார்புவலி, வாயு, குன்மவலி நீங்கும் என்பர்.

---

# VII. நிறைகள் அளவுகள்.

## நிறுத்தலளவை.

*1 உளுந்து சுமார் 1 கிரெயின் நிறையாகும் (65 மி. கிராம்).*

| | | |
|---|---|---|
| 4 யவம் | .. . | 1 குன்றி (சுமார் 2 கிரேன்ஸ்) (130 மி. கிராம்). |
| 1 மஞ்சாடி | .. .. | சுமார் 4 கிரெயின்ஸ் (260யிமி. கிராம்). |
| 6 குன்றி | .. .. | 1 மாஷம் (780 மி. கிராம்). |
| $3\frac{3}{4}$ குன்றி | .. .. | 1 பணவெடை (488 மி. கிராம்). |
| 32 குன்றி | .. . | 1 வராகனெடை (1 டிராம்), (4.2 கிராம்). |
| 40 குன்றி | . .. | 1 கழஞ்சு (5.1 கிராம்). |
| 10 வராகனெடை | | 1 பலம் (41 கிராம்). |
| $\frac{1}{4}$ பலம் | .. .. | 1 கஃசு அல்லது 1 கைசா (10.2 கிராம்). |
| 1 தோலா | .. | 1 ரூபாவெடை (180 கிரெயின்ஸ் (12 கிராம்). |
| 1 அவுன்ஸ் | .. .. | சுமார் $2\frac{1}{2}$ ரூபா நிறை (30 கிராம்). |
| 3 தோலா | .. | 1 பலம் (35 கிராம்). |
| 8 பலம் | .. .. | 1 சேர் (280 கிராம்). |
| 40 பலம் | .. .. | 1 வீசை (3 பவுண்டு 2 அவுன்ஸ்) (1.4 கிலோ கிராம்). |
| 50 பலம | .. .. | 1 துாக்கு (1.7 கிலோ கிராம்). |
| 2 தூக்கு | .. .. | 1 துலாம் (3.5 கிலோ கிராம்). |

## முகத்தலளவை.

| | | |
|---|---|---|
| 360 நெல் | .. .. | 1 சோடு. |
| 5 சோடு | .. .. | 1 ஆழாக்கு (சுமார் 6 அவுன்ஸ்) (168 மி. லிட்.) |
| 2 ஆழாக்கு | .. .. | 1 உழக்கு (336 மி. லிட்.). |
| 2 உழக்கு | .. .. | 1 உரி (672 மி. லிட்). |
| 2 உரி | .. | 1 நாழி (1.3 லிட்.) |
| 8 நாழி | .. .. | 1 குறுணி (5.3 லிட்.) |
| 2 குறுணி | .. .. | 1 பதக்கு (10.7 லிட்.). |
| 3 குறுணி | .. .. | 1 முக்குறுணி (16.1 லிட்.). |
| 2 பதக்கு | .. .. | 1 தூணி (21.5 லிட்.). |
| 3 தூணி | .. .. | 1 கலம் (64.5 லிட்). |
| 1 தேக்கரண்டி | .. | சுமார் 1 டிராம் (4 மி. லிட்.) |
| 1 குப்பி | .. .. | சுமார் 24 அவுன்ஸ் (700 மி. லிட்). |

## முகத்தலளவை (வேறு).

| | |
|---|---|
| தீர்த்தக்கரண்டி .. | 1.33 (மி.லிட்.). |
| நெய்க்கரண்டி (1டிராம்) | 4.00 (மி.ல்ட்.). |
| உச்சிக்கரண்டி (1 மேஜைக்கரண்டி). | 16 (மி.லிட்.). |
| பாலாடை (1 அவுன்ஸ்) | 30 (மி.லிட்.). |
| எண்ணெய்க்கரண்டி (8 அவுன்ஸ்). | 240 (மி.லிட்.). |
| 5 சேர் .. .. | 1 சொம்பு |

## பண்டு வழக்கிலிருந்த மருத்துவ அளவைகள்.

*(இவற்றுள் சிலவே இப்போது வழக்கிலுள்ளன.)*

வீடுகளின் கூரை இரந்திர வழியிற் காணும் சூரியகிரணத்தில் தோன்றுகின்றதுவே பரம அணுவாம்.

| | | |
|---|---|---|
| அணு .. | .. .. | 1 திலம் (0.003 கிராம்). |
| 2 திலம் | . .. | 1 காகிணி (0.006 கிராம்). |
| 4 காகிணி | .. | 1 விரிகி (நெல்) (0.024 கிராம்). |
| 2 விரிகி | .. | 1 விதளம் ($\frac{1}{4}$ குன்றி) (0.048 கிராம்). |
| 4 விரிகி | .. | 1 குஞ்சம் ($\frac{1}{2}$ குன்றி) (0.096 கிராம்). |
| 2 குன்றி | .. .. | 1 மாஷம் (உளுந்து). |
| 4 குஞ்சம் | .. .. | 1 பணவெடை. |
| 5 மாஷம் | .. .. | 1 தனகம். |
| 3 தனகம் | .. .. | 1 சாணம். |
| 4 சாணம் | .. .. | 1 நிட்கம் |
| 2 சாணம் | .. .. | 1 வடகம் (முக்கழஞ்சு). |

| | | |
|---|---|---|
| 1/10 பலம் | .. .. | 12 பணவெடை. |
| 2 உரி | .. .. | 1 நாழி. |
| 2 குன்றி | .. .. | ½ பணவெடை. |
| 6 குன்றி | .. .. | 1 மாஷம். |
| 12 மாஷம் | .. .. | 1 தோலா. |
| 8 தோலா | .. | 1 பலம் (16 வராகனெடை). |
| 32 பலம் | .. .. | 1 சுபம். |
| 2 சுபம் | .. .. | 1 பாரம் (கலம்). |

---

## VIII. மருந்து அளவு அட்டவணை.

வயதுக்குத் தக்கபடி மருந்துப் பிரமாணத்தைச் கிரமப் படுத்திக்கொள்ள வேண்டும். ஏனெனில், பிரமாணத்தில் அதிகப்பட்டால், மருந்து விடமாதலோடு, தேகத்தையும் கெடுக்கும்.

வாலிபருக்கு ஒரு வேளைக்குக் கொடுக்கின்ற மருந்தின் அளவு 1 வராகனெடை அல்லது 60 உளுந்து நிறையாகில்,

1 ஆண்டுக்குட்பட்டால், 12 பங்கில் 1 பங்கு அல்லது 5 உளுந்து நிறை.

2 ஆண்டுக்குட்பட்டால், 1/8 பங்கு அல்லது 8 உளுந்தெடை.

3 ஆண்டுக்குட்பட்டால், 6 பங்கில் 1 பங்கு அல்லது 10 உளுந்தெடை.

4 ஆண்டுக்குட்பட்டால், $\frac{1}{6}$ பங்கு அல்லது 15 உளுந்தெடை.

7 ஆண்டுக்குட்பட்டால், 3 பங்கில் 1 பங்கு அல்லது 20 உளுந்தெடை.

14 ஆண்டுக்குட்பட்டால், $\frac{3}{8}$ பங்கு அல்லது 30 உளுந்தெடை.

20 ஆண்டுக்குட்பட்டால், 3 பங்கில் 2 பங்கு அல்லது 40 உளுந்தெடை.

21 முதல் 60 வயது வரையில் முழுப்பிரமாணம் அல்லது 60 உளுந்தெடை முறையே கொடுக்கவேண்டும்.

---

# IX மருந்து

இஃது இருவகைப்படும். அவை அக மருந்து, புற மருந்து என்பன. இவ் விருவகை மருந்துகளும் தத்தம் வகையில் முப்பத்திரண்டு வடிவுடையனவாகும்.

**அகமருந்து 32-ம் அவற்றின் ஆயுள் அளவும்.**

'' உள்மருந் துசுரசஞ் சாறுகுடி நீர்கற்க
முக்களியடை யோர்சாமம்.

உயர்சூர ணம்பிட்டு வடகம்வெண் ணெய்நான்கி
னுயிர்மூன்று திங்களாகும்

விள்மணப் பாகுநெய் ரசாயன மிளகுநால்
மேவுமறு திங்களெண்ணெய்

விரலிடுமு யர்ந்தமாத் திரைகடுகு பக்குவம்
மிளிருதே னூறல்தீநீர்.

கொள்ளாறு மோராண்டு மெழுகொடு குழம்பைந்து
கோப்பதங் கம்பத்தாகும்

குருதி பொடி யெழுபானொ டைந்தாண்டு நீறுகட
டுருக்குக் களங்குநானூ

றெள்ளிடாச் சுண்ணம்ஐந் நூறுகற் பஞ்சத்து
குருகுளிகை மிக்காயுளென்

றெவருமகிழ் சித்தர்முப் பத்திரண் டாகமருந்
திசைத்தவா யுள்ளனவரோ ''.

**(வேறு).**

'' பேசிடு சுரசங் கற்கங் குடிநீர் பெலனு மொருசாமம் ;
பிணியெதிர் வடகம் சூரணம் வர்த்தி பெலனது திரி
திங்கள்;

ஆசறுகிருதம் ரசாயன லேகிய மவைபல னறுதிங்கள் ;
ஆனதோர் தைலத் தின்போக் கதுவுமோ ராண்டுக்
கதிகமிரா;

வீசிடு நன்னூல் மாத்திரை மெழுகொடு ரைந்திடும் பற்பமுதல்
மேலாங் கட்டுகு டோரிகள் கண்மை வீரிய மாபலனும்:

ஆசறு வழியில் நற்செந் தூர மாதிகற் பாந்தபலன்
அன்றி சுரனுர் நந்திக் குரைசெய் யௌடதப்
பலனிதுவே. ''

சுரசம், சாறு, குடிநீர், கற்கம், உட்களி, அடை : இவை ஒரு சாமம் என்னும் ஆங்கில மூன்று மணி நேரம் வரை வன்மை யுள்ளனவாம். ஆகையால், இவைகளில் எது செய்வதாயிருந் தாலும், அவ்வப்போது புதிதாகத் தயார் செய்து, மூன்று மணி நேரத்திற்குள் கையாண்டுவிட வேண்டும்.

சூரணம், பிட்டு, வடகம், வெண்ணெய் : இவை மூன்று திங்கள் வன்மை உள்ளனவாம்.

மணப்பாகு, நெய், இரசாயனம், இளகம் : இவை ஆறு திங்கள் வன்மை உள்ளனவாம்.

எண்ணெய், மாத்திரை, கடுகு, பக்குவம், தேனூறல், தீநீர் : இவை ஓர் ஆண்டு வன்மையுள்ளன.

மெழுகு, குழம்பு : இவை ஐந்தாண்டுகள் வன்மை யுள்ளன.

இரசப்பதங்கம் : இதற்கு ஆயுள் அளவு பத்தாண்டு.

செந்தூரம் ; இஃது எழுபத்தைந்தாண்டு வன்மை யுள்ளது.

நீறு, கட்டு, உருக்கு, களங்கு : இவை நூறாண்டு வன்மை யுள்ளன.

சுண்ணம் : இஃது ஐந்நூறாண்டு வன்மையுள்ளது.

கற்பம், சத்து, குருகுளிகை : இவை அநேக ஆண்டுகள் வன்மை உள்ளனவாய் இருக்கும்.

ஆகையினால், இம்மருந்துகளை அந்தந்தக் கால அள விற்குமேல் பயன்படுத்துதல் கூடாது.

## உள்மருந்து அல்லது அகமருந்து முப்பத்திரண்டின் செய்முறை.

### 1. சுரசம்.

இஃது இலை. வேர், பட்டை, பூ, காய், இஞ்சி, இஞ்சி யைப் போன்ற சரக்குகள் ஆகிய இவற்றுள் ஒன்றைப் பழுது படாததாய் எடுத்து, அதை இடித்தோ, கல்லிலிட்டு அரைத்தோ, துணியிலிட்டுப் பிழிந்தோ எடுத்த சாற்றை யாவது, சுக்கு முதலிய உலர்ந்த சரக்குகளை இடித்துப் பொடி யாக்கித் தண்ணீர் விட்டரைத்துப் பிழிந்த நீரையாவது ஒரு மண்சட்டியில் வார்த்துக் கொதிக்கவைத்து, முரித்து எடுத்துக் கொள்வதாகும்.

### 2. சாறு.

இஃது இலை, வேர், பட்டை, பூ, காய், முதலிய ஐந்து உறுப்புகளுள் ஏதாவதொன்றையாவது, ஐந்தையுமாவது இடித்துப் பிழிந்தோ, அரைத்துப் பிழிந்தே , இடித்துப் பிட்டவித்துப் பிழிந்தோ வந்த சாற்றை எடுத்துக்கொள்வதாகும்.

### 3. குடிநீர்.

இது மருந்து நீர், உண்ணீர், வாய்குடித்திடும் புனல் என்னும் பேர்களாலும் வழங்கப்படும். இதை வடநூலார் கஷாயம் என்பர்.

இஃது உலர்ந்த சரக்குகளையாவது, ஈரமாயுள்ள இலைகளையாவது இடித்து, அதற்குச் சொல்லப்பட்டுள்ள அளவின்படி தண்ணீர்விட்டு இரண்டுக்கொன்றுகவாவது, நான்குக்கொன்றுகவாவது ஆறுக் கொன்றுகவாவது, எட்டுக் கொன்றுகவாவது, பதினாறுக் கொன்றுகவாவது, இருபத்துநான்குக்கு ஒன்றுகவாவது காய்ச்சி வடிக்கட்டி எடுத்துக் கொள்வதாகும்.

சிறப்பு : இது, தொகைக் குடிநீர் வழியாகவும் செய்யப்படும். இது ஐங்கோலக் குடிநீர் (பஞ்ச கோலக் குடிநீர்), ஐம்மூலக் குடிநீர் (பஞ்ச மூலக் குடிநீர்) போன்ற தொகைச் சரக்குகளால் மேற்சொல்லப்பட்டபடி காய்ச்சி வடிக்கட்டி எடுத்துக் கொள்வதாகும். இதை,—

'' குடிநீர்வினையறமோதிடு குடிநீரினி தறைவாம்
குதிர்பஞ்ச மூலக் குடிநீர் வகைகேள்
குறிமுக் கடுகரி குடச வேர் மணிவேர்
குல்லிவை யடுவது குடிநீர் பருகிடீர்.''

என்பது போன்ற செய்யுட்களாலும், எட்டுக் கொன்றுகவாவது நான்குக்கொன்றுகவாவது என்பதை,

''கண்ணினடு வேருங் கரியமா லின்தொடையும்
நண்ணு மலையாளி நாகரமென்—றெண்ணுன்கும்
திக்குக் குடிநீர்செய் தேன்விட் டருந்திவிடு
பக்கவா தாச்சுரம்போம் பார் ''

என்னும் வெண்பாவாலும் தெரிந்து கொள்ளவேண்டும்.

### 4. கற்கம்.

இஃது ஈரமாயுள்ள சரக்குகளையாவது, உலர்ந்த சரக்குகளையாவது, தூய்மைசெய்த இரும்புத்தூள், இரும்புச் சிட்டத்தூள் என்னும் இவற்றில் ஏதாவதொன்றைச் சில இலைகளோடாவது

சரக்குகளோடாவது சேர்த்துக் கல்லோடு கல்லாய் ஒட்ட அரைத்துக் கெட்டியாய் எடுத்துக் கொள்வதாகும். இதை,—

''வந்திடு சரக்கைக் கல்லில்
கல்லுற வரைத்தல் கற்கம்.''

என்று தசாங்க நிகண்டு கூறுவதால் அறிதல் வேண்டும்.

### 5. உட்களி.

உள்ளே களிப்பும், மேலே சிறுவறட்சியுமடைவதால் இதற்கு இப்பெயர் வழங்கலாயிற்று.

இது பச்சரிசியையாவது, புழுங்கலரிசியையாவது வறுத்து மாவரைத்தும், உளுந்தை மாவரைத்தும், விதைகளைப் பொடியாக இடித்தும், அப்பொடிக்குத் தக்க நீர்விட்டுப் பிசைந்தும், அதற்குத் தக்க சர்க்கரையையாவது வெல்லத்தையாவது சேர்த்துக் கரைத்து, ஒரு மண் சட்டியில் ஊற்றி, அடுப்பேற்றிக் களிப்புப் பதம் வருகிற வரையும் வேக்விட்டு கிளறி, கொஞ்சம் நெய் விட்டுக் கைகளில் ஒட்டாத பக்குவமாகச் செய்து எடுத்துக் கொள்வதாகும்.

### ௬. அடை.

இஃது அரிசிமாவுடன் சில இலைகளைக் கூட்டியரைத்து, சட்டியை அடுப்பில் வைத்து, அதிற் கொஞ்சம் நெய் தடவி, அதில் மேற்படி அரைத்த மாவை அடையாய்த் தட்டி இட்டு, வெந்தபின் எடுத்துக் கொள்வதாகும்.

### 7. சூரணம்.

இஃது உலர்ந்த சரக்கானல் மீண்டும் உலர்த்தாமலும், ஈர சரக்கானல் உலர்த்தியும், தூயனவும் புதியனவுமாக எடுத்து வறுக்க வேண்டியவைகளை மட்டும் வறுத்தும், மற்றவைகளை வறுக்காமலும், தனித்தனி இடித்துத் துணியில் வடிகட்டி, எடை எடுத்துக் கலந்து வைத்துக்கொள்வதாகும்.

இவ்வாறு செய்யப்படும் ஒவ்வொரு சூரணமும் தூய்மை செய்யப்படவேண்டுமென்பது முன்னேர்கள் கொள்கை. ஆகையால் எச்சூரணங்களை கையாளவேண்டியிருந்தாலும், அவற்றை லேகியமாகச் செய்து கொள்ள வேண்டியிருந்தாலும், முன்னர் அவ்வவற்றின் சூரணங்களைத் தூய்மை செய்தே ஆகவேண்டும்.

### சூரணத் தூய்மை.

சூரணங்களுக்கு வேண்டும் சரக்குகளை எடுத்துத் தனித்தனி உலர்த்தி, தனித்தனி இடித்து, துணியில் வடிகட்டி, தனித்தனி எடைப்படி நிறுத்துக் கலந்து, பிறகு அச்சூரணத்தைக் கொஞ்சம் பசுவின் பால்விட்டுப் பிசைந்து, குடைவான ஒரு மண்சட்டியில் பசுவின் பாலும் நல்ல தண்ணீரும் சரியளவாகக் கலந்து ஊற்றி அச்சட்டியின் வாயில் தூய்மையான துணியைக் கொஞ்சம் பள்ளம் விழும்படி கட்டி, அதில் மேற்படி சூரணத்தைப் பிட்டு மா வைப்ப பது போலவைத்து, மேலே சட்டியை மூடி, சந்துவாய் வழி ஆவி போய்விடாதபடி துணி சுற்றி, அடுப்பின் மேல் வைத்துப் பால் சுண்ட எரித்து எடுத்து, அப்பிட்டை வெய்யிலில் உலர்த்தி, மறு படியும் இடித்துத் துணியில் வடிகட்டி எடுத்துக் கொள்வதாகும்.

### 8. பிட்டு.

இது சரக்குகளைத் தனித்தனி இடித்துக் கலந்து, தூய்மை செய்யப்பட்ட பொடியைக் குடைவான மண்சட்டியில் பசுவின் பாலும் தண்ணீரும் சரியளவு கலந்து விட்டு, மேலே துணிகட்டி அதன்மேல் மேற்படி பொடியில் பசுவின்பால் விட்டுப் பிசைந்து பிட்டுச் சுடுவதற்கு மாவை வைப்பதுபோல் வைத்து, மேலே ஒரு சட்டியால் மூடி, ஓர் ஆவி வெளிக் கிளம்பும் வரைக்கும் எரித்து, அப்பிட்டை ஒரு மட்பாண்டத்தில் இட்டு, நாட்டுச் சர்க்கரையாவது வெல்லமாவது சேர்த்துப் பிசைந்து எடுத்துக் கொள்வதாகும்.

### 9. வடகம்.

இது சரக்குகளை தனித்தனி இடித்துத் துணியில் வடிகட்டி, ஒவ்வொன்றும் சேர்க்க வேண்டிய எடை எடுத்துக் கலந்து, அத்து டன் நாட்டுச் சர்க்கரையயையாவது வெல்லத்தையாவது வேண்டும் அளவு கலந்து வைத்துக் கொண்டு, குடைவான மண்சட்டியில் பசுவின்பாலும் தண்ணீரும் சரியளவு கலந்து ஊற்றி, சட்டிவாய்க் குத் துணி கட்டி, அந்தத்துணியின்மேல் இப்பொடியைப் பிட்டு மா வைப்பது போல வைத்து, மேலும் ஒரு குடைவு சட்டி கொண்டு மூடி, அடுப்பேற்றிப் பால்வற்றும்வரை எரித்து, எடுத்துப்பிரித்து, மேற்படி பிட்டை உரலிலிட்டு இடித்து, வேண்டும் அளவு உருட்டி உலர்த்தி வைத்துக் கொள்வதாகும்.

### 10. வெண்ணெய்.

இஃது இதற்கு வேண்டிய சரக்கை அல்லது சரக்குகளை எடை போட்டு எடுத்து, அவற்றை நன்றாய்ப் பொடி செய்து, இருப்புக்

கரண்டியில் இட்டுச் சரக்கெடைக்கு இரண்டு பங்கு பசுவின் நெய் சேர்த்து, அடுப்பிலிட்டு எரித்து, அந்தச் சரக்குகள் நன்றாய் உருகி நெய்யுடன் கலந்த பொழுது, அதை வேறொரு மண்சட்டியில் தண்ணீர் வைத்திருந்து, அதில் ஊற்றி, மத்திட்டுக் கடைந்து எடுத்துவைத்துக்கொள்வதாகும்.

### 11. மணப்பாகு.

இது சில சரக்குகளையாவது வேர்களையாவது, பூக்களையாவது, பழங்களையாவது, கொடிகளையாவது தனித்தனிக் குடிநீர் செய்தாவது, சில பழங்களிலிருந்தெடுக்கும் சாற்றைப் பிழிந்தாவது ஒரு மண்சட்டியில் விட்டு அதற்குத் தகுந்த கற்கண்டாவது வெள்ளைச் சர்க்கரையாவது எடைப்படி சேர்த்து, எரித்து, மணம் வரும் பக்குவத்தில் இறக்கி ஆற்றி வைத்துக் கொள்வதும் அப்பக்குவக்காலத்தில் சில சரக்குப் பொடிகளைத் தூவிக் கிளறி இறக்கி ஆற்றி எடுத்துவைத்துக் கொள்வதுமாகும்.

### 12. நெய்.

இது பசுவின் நெய்யுடன், தனி இலைச்சாறு அல்லது தனிக் கிழங்குச்சாறு சேர்த்தாவது, பல இலைகளின் சாறு அல்லது பல கிழங்குகளின் சாறு அல்லது இரண்டு வகைகளின் சாறும், கற்கங்களும் சேர்த்தாவது, அல்லது சில சரக்குகளின் குடிநீர், சில பச்சிலைகளின் குடிநீர், சாறுகள் இவற்றைச் சேர்த்தாவது ஒரு மண்சட்டியில் ஊற்றி, அடுப்பேற்றி எரித்து, நெய்ப்பக்குவத்தில் காய்ச்சி, இறக்கி வடிகட்டி வைத்துக்கொள்வதாகும்.

### 13. இரசாயனம்.

இது சரக்குகளைச் சூரணஞ் செய்து, சர்க்கரையும் நெய்யும் ஏடைப்படி சேர்த்து, இளகலாகப் பிசைந்து எடுத்து வைத்துக் கொள்வதாகும்,.

இதைக் குழம்பாகச் செய்துகொள்வதும் ஒருவகை. இதைக் குழம்பு என்னும் தலைப்பில் கண்டு கொள்க.

### 14. இளகம் (இலேகியம்).

இது குடிநீர்வகைகள், சாறுவகைகள் ஆகிய இவைகளைத் தனித்தனி யாகவாவது கலந்தாவது வைத்துக்கொண்டு, சேர்க்க வேண்டிய அளவு சர்க்கரை சேர்த்து அடுப்பேற்றி, சிறுதீயாக எரித்து, சாறு சுருங்கி மணம் வருஞ்சமயத்தில், சூரணஞ்செய்து வைத்துக்கொண்டிருந்த சரக்குப் பொடியை அதில் சிறுகச் சிறுகத் தூவி, விடவேண்டிய தேனை முன்னரும் நெய்யைப் பின்னரும் விட்டுக் கிளறிப் பக்குவத்தில் எடுத்து வைத்துக்கொள்வதாகும்.

(வேறு)

சர்க்கரையையாவது ,கரும்பு வெல்லத்தையாவது சேர்க்கவேண்டிய அளவு நிறுத்தெடுத்து ஒரு மண்சட்டியை அடுப்பிலேற்றி, அதில் விட வேண்டிய அளவு தண்ணீரையாவது, பசுவின்பாலையாவது விட்டு, அதில் மேற்படி வெல்லத்தை இட்டு, அது மணக்குஞ் சமயத்தில் தேனை விட்டு, ஒருதரம் பொங்கிவரும்போது சரக்குப்பொடியைச் சிறுகச் சிறுகத் தூவிக் கிளறி, பிறகுத் தேனையும் நெய்யையும் விட்டுப் பக்குவத்தில் எடுத்து வைத்துக் கொள்வதாகும்.

## 15. எண்ணெய்.

எள்+நெய் என்பது ''எண்ணெய்'' என்றாயினமையின், எள்ளிலிருந்து எடுக்கப்படும் நெய்யே எண்ணெயாம்.

அதுபோலவே, வடமொழியில் திலத்தினின்றும் எடுக்கப்படும் நெய் ''தைலம்'' என்றாயிற்று. திலம் என்பது எள். திலசம்பந்தமுடையது தைலம் என்றறிக. இது சமவாய சம்பந்தம். ஆதலின், விதை, கொடி, பட்டை, கிழங்கு, பசு முதலிய உயிர்கள் முதலாகச் சொல்லப்பட்ட எவ்வகைப் பொருள்களிலும் உட்கிடையாயுள்ள நெய்ப்புப் பொருளே நெய் என்று வழங்கப்படுவதாகும் என்றறிதல் வேண்டும்.

இவ்வாறு அளவை நூல்வழி யிருப்பதால், வடமொழிச் சொல்லாகிய ''தைலம்'' என்னும் சொல்லை, விதைகளிலிருந்து எடுக்கப்படும் ஆமணக்கு நெய் போன்றவைகளைச் சேர்த்துச் செய்யப்படும் பொருள்களுக்கும், பட்டை, கொடி, வேர், கிழங்கு, கொட்டை, முதலியவற்றால் குழி வழியாய்ச் செய்யப்படும் பொருள்களுக்கும் (தைலம் எனப் பெயர்) இட்டு வழங்குதல் முரணாகும்.

அதுபோலவே ஆமணக்குமுத்து முதலியவற்றிலுண்டாகும் நெய்களாற் செய்யப்படும் பொருள்களுக்கெல்லாம் ''எண்ணெய்'' என்று பேரிட்டு வழங்குதல் முரணாகும்.

ஆகையால், எண்ணெய்க் கலப்புள்ளதை வடமொழிப் பெயராகிய ''தைலம்'' என்று வழங்குவதை நீக்கி, ''எண்ணெய்'' என்றும், மற்ற வற்றைக் கூறுங்கால், அவற்றில் தனித்தனி எந்தப் பொருளின் நெய் கலந்து செய்யப்படுகிறதோ, அந்தப் பெயரை முன்வைத்து அந்த நெய் என்றும் பெயரிட்டு வழங்கவேண்டும்.

இப்படிப் பெயர்வைக்குமிடத்துத் தனிச் சரக்குப் பெயராகவும், இரண்டு முதல் கலந்த பெயராகவும், சிறப்புச் சரக்குப் பெயராகவும், தொகைச் சரக்குப் பெயராகவும், நோய்ப் பெயராகவும் செய்யும் பண்பின்பெயராகவும் வைக்கப்படும்.

(1) வல்லாரை நெய் : இது தனிச் சரக்கினலும் நெய்யாலும் பெயர் பெற்றது.

இதைப்போலவே :

(2) தூதுவேளைநெய் : (3) பிரமி நெய் முதலியவை.

(4) சிவனார் வேம்புக் குழி நெய் : இது சிறப்புச் சரக்கினலும் செய்கைப் பொறியினலும் தன்னுள் உள்ள நெய்ப்பசை வெளிப்படுத்தப்பட்டதாகலான், சிறப்புப் பெயர் ஒன்றனலேயே பெயர் பெற்றது.

(5) கந்தகச்சுடர் நெய் : இது சிறப்புச் சரக்காலும், அதில் விடும் நெய்யாலும், செய்கைப் பெரும்பொருளாகிய சுடராலும் பெயர் பெற்றது.

(6) ஓமன் சுடர் நெய் : இது சிறப்புச் சரக்காலும் வேப்ப முத்து நெய்யாலும் செய்கைப் பெரும் பொருளாகிய சுடரினலும் பெயர் பெற்றது. இதைச்சுடர் என்கிற சொல் சேர்த்தும், சேர்க்காமலும் சொல்லுகிறார்கள். சேர்க்காமல் சொல்வது குற்றமே யாகும். இதை, ஓமன் சுடர்த்தைலம் என்றும் வழங்குவதுண்டு. இதில் எள்ளின் நெய் இல்லாமையால், அப்படி வழங்குவதும் தவறேயாகும்.

நம் தமிழ் மொழியில் எண்ணெய் என்ற பெயர் நேரான காரணமாயிருக்க, அதைவிட்டுப் பிறமொழிப் பெயராகிய ''தைலம்'' என்று வழங்குவதில் பயன் என்ன இருக்கிறது? ஒன்றுமில்லை என்றறிதல் வேண்டும்.

(7) மேக நெய் : மேகம் என்னும் நோய்ப் பெயரும், அதில் சேர்க்கப்படும் நெய்யும் சேர்ந்து பெயர்பெற்றது.

(8) பெருநோய் நெய் : பெருநோய் என்னும் நோய்ப்பெயரும் அதில் சேர்க்கப்படும் நெய்யும் சேர்ந்து பெயர்பெற்றது.

(9) ஐங்கூட்டு நெய் : இஃது ஐந்து நெய்களைச் சேர்த்து, அதில் சில சரக்குகளைக் கூட்டிக் காய்ச்சப்படுவது. ஆகையால், இஃது ஐந்து என்னும் தொகைப் பெயர்பெற்றது.

மேலே எடுத்துக் காட்டப்பட்டவற்றல் மேற்படி வழக்குகளை உணர்ந்து எள்நெய் சேர்க்கப்பட்டவற்றை ''எண்ணெய்'' எனவும், மற்றவை சேர்க்கப்பட்டவற்றை ''நெய்'' எனவும் வழங்குவது மிகவும் நலமாம்.

## நெய்யின் விரிவு.

### (1) கொதி நெய்.

இஃது ஆமணக்கு முத்து முதலியவற்றை வறுத்திடித்துத் தண்ணீரில் கலக்கி அடுப்பேற்றிக் கொதிக்க வைப்பதினின்றும் பிறப்பது.

(2) உருக்கு நெய்.

இது வெண்ணெய் கோழிமுட்டைக் கரு, முதலிய பொருள்களை உருக்குவதால் உண்டாவது.

(3) புடநெய் அல்லது குழிப்புடநெய்.

இஃது அடியில் சிறு சிறு துளைகளிட்ட ஒரு குடத்தில், சேங்கொட்டை, சிவனார் வேம்பு முதலியவற்றைச் செய்யவேண்டியபடி செய்து நிரப்பி, மேல் மூடி, வாய்க்கு மண் சீலை செய்து, ஒரு குழி தோண்டி அடியில் ஒரு சிறு பீங்கானையாவது சட்டியையாவது வைத்து மேலே சரக்குப் போட்ட குடத்தை வைத்துப் புடம் போடுவதால், அடியிலிருக்கும் சட்டியில் இறங்கியிருப்பது.

(4) தீநீர் நெய்.

இது சந்தனக் கட்டை முதலிய மணமுள்ள பொருள்களைத் தூளாக்கி, பானையிற் போட்டுத் தண்ணீர்விட்டுப் பட்டி கட்டி இறக்குகிற தீ நீரினூற் பிறப்பது.

(5) சூரியபுடநெய் அல்லது ஆதவநெய்.

இஃது எள்ளுடன் சில சரக்குகளைச் சேர்த்தரைத்த கற்க மருந்தைச் சூரியனது வன்மையுள்ள வெயிலில் வைக்க, அச்சூட்டால் பிறப்பது.

(6) மண் நெய்.

இஃது ஓதமில்லாத பூமிக்குள்ளிருந்து கொப்பளித்துத் தானே வெளிப்படுவது.

(7) மர நெய்.

இது மரத்தில் வெட்டப்படும் இடத்தினின்றும் பிறப்பது.

(8) சிலை நெய்.

இஃது உயர்ந்த மலைகளிலிருந்து வழிவது.

(9) நீர் நெய்.

இது புழுகுச் சட்டம் முதலியவைகளை இடித்து நன்றாய் நசுக்கித் தண்ணீரில் ஊறவைப்பதனால் உண்டாவது.

(10) ஆவி நெய்.

இது மாட்டுப்பால், சாம்பிராணி முதலிய சரக்குகளை நெருப்பிற் காய்ந்த மண்சட்டியிற்போட்டு, அதன்மேல் தண்ணீர் நிறைந்த தட்டு ஒன்றை வைக்க, அந்தப் புகையால் பிறப்பது.

### (11) சுடர் நெய்.

இது கந்தகம் முதலிய சரக்குகளை எந்த நெய்யாற் செய்யச் சொல்லப்பட்டிருக்கிறதோ, அதனுல் அரைத்து, ஒரு புதுத் துணித் துண்டைத் தண்ணீரில் நனைத்துக் கசக்கி, அதிலிருக்குங் கஞ்சியைப் போக்கி உலர்த்தி, அந்தத் துணியில் தடவி, இருப்புக் கதிரிற் சுற்றிக் கட்டி, ஒரு முனையிற் கொளுத்திப் பிடிக்கச் சுடருடன் இறங்குவது.

### (12) பொறி நெய் அல்லது இயந்திர நெய்.

இஃது எள் முதலிய விதைகளிலிருந்து காணம் (செக்கு) முதலிய கருவிகளால் எடுக்கப்பெறுவது.

குறிப்பு.—இவ்வாறுரைக்கப்பட்ட பன்னிரண்டுவகை நெய்களும் அடியிற்காணும் ஐவகை ஆட்சிகளில் அடங்குவனவாம்.

### ஐவகை நெய்கள்.

(1) முடி நெய், (2) குடி நெய், (3) பிடி நெய், (4) தொளை நெய், (5) சிலை நெய்.

### விளக்கம்.

(1) முடி நெய் : தலைக்கிடும் எண்ணெய்.

(2) குடி நெய்: உள்ளுக்குக் குடிக்கும் நெய். இஃது எண்ணெய், நெய், என இருவகைப்படும்.

(3) பிடி நெய் : தோல் மீது தடவிப் பிடிக்கின்ற நெய்யாகும்.

(4) தொளை நெய் : உடலிலுள்ள ஒன்பது தொளைகளின் வழியாகச் செலுத்துகின்ற நெய்யாகும்.

(5) சிலை நெய் : புரைகளின் வழியாகக் குருதி, சீழ் முதலியவைகளை ஒழுகப்பண்ணுகின்ற கெட்ட இரணங்களுக்கு இடும் நெய்யாகும்.

## 16. மாத்திரை.

இது சில சரக்குகளைச் சேர்த்து, சில இலைச் சாறுகளினுலாவது குடிநீர்களினுலாவது அரைத்து, பல அளவுகளாய் உருட்டி உலர்த்தி எடுத்து வைத்துக்கொள்வதாகும்.

இதற்கு மாத்திரை, உருண்டை என்னும் பெயர்கள் வழங்குவதுண்டு. மாத்திரை என்பது அளவு, எந்த அளவில் இம்மருந்து கொடுக்கவேண்டுமோ, அந்த அளவிலேயே செய்தமைப்பதால் அப்பெயர் உண்டாயிற்று. வடிவத்தால் உருண்டை, உருண்டை ஆயிற்று.

## 17. கடுகு.

இது சில மருந்துச் சரக்குகளை நெய் முதலிய தலப் பொருள்களுடன் சேர்த்துக் காய்ச்சி, அச்சரக்குகள் திரண்டுவரும்போது எடுத்து, அக்கடுகை உள்ளுக்கு உண்டு, அத் தைலத்தை மேலே பூசுவதாகும்.

## 18. பக்குவம்.

(1) இது பக்குவம் செய்ய வேண்டிய கடுக்காய் போன்றதைப் பச்சரிசி கழுவிய நீரிலாவது வெறும் நீரிலாவது ஊறப்போட்டு அது மென்மையானபின் மோர், எலுமிச்சம் பழச்சாறு, இஞ்சிச் சாறு முதலியவற்றில் சில கடைச் சரக்குகளின் பொடியைக் கூட்டிப் பக்குவம் செய்வது.

(2) எலுமிச்சங்காய் போன்றவைகளை ஐந்துப்பு முதலியவை சேர்த்து வேகவைத்துப் பக்குவஞ் செய்வது மற்றொன்றும். ''பாவனக் கடுக்காய்'' போன்றவற்றால் இதைக் காண்க.

## 19. தேனூரல்.

இஃது இஞ்சி, நெல்லிக்காய், கடுக்காய் முதலியவற்றை நீரில் ஊறவைத்து, மேற்புரத்தில் ஊசியாலாவது, முள்ளினாலாவது பல தொளைகள் குத்தி, தண்ணீரை ஆற்றிச் சர்க்கரைப் பாகில் இட்டாவது தேனில் ஊறவைத்தாவது செய்து கொள்வது.

## 20. தீநீர்.

இஃது இரண்டு வகைப்படும்—

(1) சரக்குகளைச் சேர்த்து வாலையிலிட்டுத் தண்ணீர் சேர்த்து அடுப்பேற்றி எரித்து இறக்குவது ஒன்று. இது தீநீர் எனப்படும்.

(2) உப்பு வகைகளை வாலையிலிட்டு எரித்து இறக்குவது மற்றொன்று. இது ''புகைநீர்'' எனவும் ''திராவகம்'' எனவும் சொல்லப்படும்.

இவ்விரண்டையும் "சத்தி நீர்" எனவும் பெயரிட்டு வழங்கி யிருக்கின்றனர். இதை—

" கரிவெடி படிகி காந்த நறும்பூ
பொரிகடல் நுரையோர் பலம்பூ மதுவகை
விரவிடு ரவியில்வை விடுமது முத்தாம்
கரையது சத்தி நீராய் வடியெடு."

என்பதாலறிக.

## 21. மெழுகு.

இஃது இரண்டு வகைப்படும். (1) அரைப்பு மெழுகு, (2) சுருக்கு மெழுகு என்பன—

(1) **அரைப்பு மெழுகு:** இது சில இரசக்கலப்புள்ள சரக்கு களைத் தனித்தாவது, அவற்றுடன் சில கடைச்சரக்குகளைச் சேர்த் தாவது, உப்புகளைத் தனித்தாவது அவற்றுடன் கடைச் சரக்குகளை சேர்த்தாவது, சில சாறுகளாலாவது, தேனுலாவது அரைத்து மெழுகுப் பக்குவமாகச் செய்து கொள்வது.

(2) சுருக்கு மெழுகு: இது சில ரச சரக்குகளையாவது பாஷா ணங்களையாவது, பலவகை மூலிகைகளின் சாற்றுலாவது, சில நெய்பசையுள்ள தைலங்களிலாவது சுருக்குக் கொடுத்து, அவை இளகி மெழுகு பதமாகும்போது, எடுத்துக் குழிக்கல்லிலிட்டுப் பக்குவமாக அரைத்து எடுத்து வைத்துக்கொள்வது.

## 22. குழம்பு.

இது சில சாறுகளைக் கலந்தாவது, தனிச்சாருகவாவது ஒரு சட்டியிலிட்டுச் சர்க்கரை கூட்டிச் சில சரக்குகளைப் பொடி செய்து துணியில் வடிகட்டி, அதில் இட்டு, குழம்புப் பக்குவத்தில் காய்ச்சி எடுத்துக்கொள்வதாகும்.

## 23. பதங்கம்.

இஃது இரசத்தை மாத்திரம் தனியாகவாவது, அதனுடன் இரசக்கலப்புள்ள மருந்துகளைக் கலந்தாவது ஒரு மண்சட்டியில் உப்பும் செங்கல்மாத்தூளும் இட்டு, அதன்மேல் மேற்கூறிய பொருளை அப்படியேயாவது, ஒரு மூசையில் போட்டாவது வைத்து, மேலே உப்பு மூடி, சட்டியைக் கவிழ்த்து, சீலை மண் செய்து அடுப்பேற்றி, அதற்குச் சொல்லப்பட்டிருக்கிற நாழிகை யளவாயும், சொல்லப்பட்டிருக்கிற தீயினளவாயும் எரித்து அசையாமல் கீழிறக்கிப் பிரித்து, மேற்சட்டியில் ஏறியிருக்கும் மருந்துகளைப் பக்குவமாய் எடுத்து வைத்துக் கொள்வதாகும்.

அன்றி, சில பாடாணங்களைச் சில இலைச்சாறுகளால் அரைத்து மூசையும் நடுவில் தொளைவைத்த மேல்மூடியும் செய்து, அம் மூசைக்குள் இரசம் விட்டு, ஒரு சட்டியில் இடவேண்டிய அளவு உப்பிட்டு, அதன்மேல் அம்மூசையை வைத்து, மேல்சட்டியை மூடி, மண்சீலை நாள் ஒன்றுக்கு ஒரு சீலையாக ஏழுநாளைக்கு ஏழு சீலை செய்து, எரிப்புக்குச் சொல்லியிருக்கிற சாமம் வரைக்கும் அதற்குச் சொல்லப்பட்டிருக்கிற தீயளவாய் எரித்துச் சிறிது ஆறின பின், அதை அசையாமல் எடுத்து, மெதுவாய்ப் பிரித்து, மேற் சட்டியில் ஏறியிருக்கிற மருந்தைத் துடைத்து எடுத்து வைத்துக் கொள்வதாகும்.

### 24. செந்தூரம்.

இஃது உலோகங்களையாவது பாடாணாதிகளையாவது, சில இலைச் சாறுகளாலாவது உப்புப் புகை நீரினாலாவது செய்நீரினாலாவது அரைத்துப் புடம்போட்டாவது, எரித்தாவது, வறுத்தாவது அரைத்து வெயிலில் வைத்தாவது சிவக்கும்படி செய்து எடுத்துக் கொள்வது.

1. எரித்துச் சிவக்கச் செய்வன, மிருத்யுஞ்சயம் போன்ற மருந்துகள்.

2. வறுத்துச் சிவக்கச் செய்வன, அயவீர செந்தூரம் போன்ற மருந்துகள்.

3. அரைத்துச் சிவக்கச் செய்வன, சண்டமாருதச் செந்தூரம் போன்ற மருந்துகள்.

4. மற்றவை வழக்கத்திலிருக்கும் அயச் செந்தூரம் போன்ற மருந்துகள் என்பதை உணர வேண்டும்.

### 25. நீறு, வெண்ணீறு அல்லது பற்பம்.

இஃது உலோகங்களையாவது, பாடாணங்களையாவது, உபர சங்களையாவது சில இலைச்சாறுகளினாலாவது உப்புப்புகை நீரினாலாவது செய்நீரினாலாவது அரைத்துப் புடம்போட்டாவது, வறுத்தாவது எரித்தாவது ஊதியாவது வெளுக்கும்படி செய்து எடுத்துக்கொள்வது.

#### பற்பங்களின் நிறம்.

"நீறிருந்த படிக ளெல்லாம் நிறமது வெளுப்பே யாகும்
வேறிந்த வெளுப்பை யல்லால் வேறுநிறம் பற்பமன்று
கூறிந்தத் தங்க மாத்ரம் குலம்பொய்யா நிறமு மஞ்சள்
வாறிந்தப் படியே யல்லால் மற்றெல்லா மருட்டுத் தாமே."

(அ. வைத்திய காண்டம் 600)

என்னுஞ் செய்யுளால் தங்க நீற்றின் நிறம் மாத்திரம் மஞ்ச ளென்பதையுணர வேண்டும்.

## 26. கட்டு.

இது, பாடாணங்களைத் தனித்தனியாகவாவது, இரண்டு முதற் கலந்தாவது, சில சரக்குகளைச் சேர்த்திறக்கப்பட்ட புகை நீரா லாவது, செயநீராலாவது, இலைச்சாறுகளாலாவது, குடிநீர் களாலாவது தேனாலாவது, முலைப்பாலாலாவது, சில சரக்குகள் சேர்ந்த குழிப்புட நெய்யாலாவது, தனிச்சரக்குக் குழிப்புட நெய்யாலாவது சுருக்குக் கொடுத்துக் கட்டிக் கொள்வது.

இது தவிர, சில சரக்குகளைத் தனியாகவாவது, பற்ப செந் தூரங்களாகச் செய்தாவது, கூட்டிச் சாறுகளாலாவது, முலைப் பாலாலாவது அரைத்து உருட்டிக்கொள்வது.

குறிப்பு.—கட்டுகள் மாத்திரைக்கல் எனவுஞ் சொல்லப்படும்.

## 27. உருக்கு.

இது, பாடாணங்களையாவது, உலோகங்களையாவது, கட்டிச் சரக்குகளைக் கூட்டியாவது, பகைச் சரக்குகளைக் கூட்டியாவது, மூசையிலிட்டு மேலே மூடி மண் சீலை செய்து, கட்டைகளின் இயற்கைக் கரியிட்டு ஊதி இளகச் செய்து ஆறவிட்டு எடுப் பது.

## 28. களங்கு.

இது, பாதரசம் முதலிய சரக்குகளை இலைகளின் சாறுகளாலாவது செய்நீர்களாலாவது, புகைநீர்களாலாவது சுருக்குக் கொடுத்துப் புடம் இட்டுக் கட்டிக் கரியிலிட்டு ஊதி, மணியாக்கி, உருக்கி, தங்கமும் நாகமும் கூட்டி ஆறவைத்து எடுத்துக்கொள்வது.

## 29. சுண்ணம்.

இது, பாதரசத்தைத் தனியாகவாவது, பாடாணங்களைத் தனி யாகவாவது, உலோகங்களைத் தனியாகவாவது கலந்தாவது கல்வத்திட்டு சில சாறுகளாலாவது, செயநீர்களாலாவது, புகை நீர்களாலாவது அரைத்துருட்டி உலர்த்தி, மூசையிலிட்டுச் சீலை செய்துலர்த்தி, கரிநெருப்பிலிட்டு ஊதி எடுத்து, ஆறவைத்துப் பூத்தபின் எடுத்துக் கொள்வது.

## 30. கற்பம்.

இது, சில இலைகளையாவது, வேர்களையாவது, சரக்குகளையா வது, உலோக உபரசச் சத்துக்களையாவது, அவ்வவற்றிற்குக் கூறப்பட்டுள்ள பத்தியப்படியும், நாளளவுப்படியும், ஏற்றியும் இறக்கியும் உண்டுவரச் சொல்லியபடி செய்துகொள்வது.

இது, நாள்தோறும் தயார் செய்து சாப்பிடுவதும், முன்னர் முடித்து வைத்திருந்து உண்பதும் என இரண்டு வகைப்படும்.

அவற்றுள் நாள்தோறும் தயார் செய்வன இலை, வேர், சரக்கு முதலியன.

முன்னர் முடித்துவைத்திருப்பன உலோகச் சத்து, உபரசச்சத்து முதலியன.

மூலிகைக் கற்பங்களாவன தேரர் யமக வெண்பாவிலும், மற்ற சித்தர் நூல்களிலும் சொல்லப்படும் மூலிகைகளாகும்.

முன்னர் முடித்துவைத்திருக்கும் சத்துக்களான அகத்தியர் செந்தூரம் முந்நூறு முதலிய நூல்களில் சொல்லப்படுவன.

### 31. சத்து.

இது காந்தம், இரும்புத்தூள், மற்ற உபரசம் முதலியவற்றோடு சில பாடாணங்களைச் சேர்த்து, வெண்கருச் செயநீரால் அரைத் துலர்த்தி, மூசையிலிட்டுச் சீலை செய்து, மூன்று முறை ஊதி எடுக்க வரும் வங்கங்களோடு, தங்கமும் இரசமும் கந்தகமும் சேர்த்து அரைத்துக் குப்பியிலிட்டு எரித்துச் செந்தூரம் ஆக்கிக் கொள்வது.

### 32. குருகுளிகை.

இது, வாலை ரசத்தைச் சில சரக்குகளால் கட்டி, மணிமணியாகச் செய்து கோத்துக்கொள்வது.

இம் முப்பத்திரண்டு மருந்துகளும் கீழ்க் கூறப்படும் செயல்களில் அடங்கும்:—

1. கருக்கல்
2. அரைத்தல்
3. கசக்குதல்
4. கலக்குதல்
5. வறுத்தல்.
6. கழற்றுதல்.
7. உருக்குதல்.
8. இறுத்தல்.
9. உலர்த்தல்.
10. உரைத்தல்.
11. குழப்புதல்.
12. உடைத்தல்.
13. நறுக்குதல்.
14. உருட்டுதல்.
15. நகர்த்துதல்.
16. நசுக்குதல்.
17. பொசுக்குதல்.
18. நனைத்தல்.

19. எரித்தல். 22. இழைத்தல்.

20. வழித்தல். 23. குழைத்தல்.

21. இறுக்குதல். 24. எடுத்தல்.

''கருக்கு மருந்துக ளரைக்கு மருந்துகள் கசக்கு மருந்துகணீர்
கலக்கு மருந்துகள் வறுக்கு மருந்துகள் கழற்று மருந்துகள்
யுருக்கு மருந்துகளிறுக்கு மருந்துகளு லூர்த்து மருந்துகள் மே
லுரைக்கு மருந்துகள் குழப்பு மருந்து களுடைக்கு மருந்துகள் மே

னருக்கு மருந்துகளுருட்டு மருந்துக ணகர்த்து மருந்துகள்கை
நசுக்கு மருந்துகள் பொசுக்கு மருந்துகள் நனைக்குமருந்துகள்தீ
எரிக்கு மருந்துகள் வழிக்கு மருந்துக ளிறுக்கு மருந்துகள் கல்
லிழைக்கு மருந்துகள் குழைக்கு மருந்துகள் எடுக்குமருந்து
களே.''

எனத் தேரர் தரு வில் கூறியிருப்பதனுல் இச்செயல்களை அறியலாம். புறமருந்து முப்பத்திரண்டும் அவற்றுள் சிலவற்றின் ஆயுள் அளவும் :

1. கட்டுதல்.
2. பற்று.
3. ஒற்றடம்.
4. பூச்சு.
5. வேது.
6. பொட்டணம்.
7. தொக்கணம்.
8. புகை.
9. மை.
10. பொடி திமிர்தல்.
11. கலிக்கம்.
12. நசியம்.
13. ஊதல்.
14. நாசிகாபரணம்.
15. களிம்பு.
16. சீலை.
17. நீர்.
18. வர்த்தி.
19. சுட்டிகை.
20. சலாகை.
21. பசை.
22. களி.
23. பொடி.
24. முரிச்சல்.
25. கீறல்.
26. காரம்.
27. அட்டைவிடல்.
28. அறுவை.
29. கொம்புகட்டல்.
30. உரிஞ்சல்.
31. குருதிவாங்கல்.
32. பீச்சு.

என்பன புறமருந்து முப்பத்திரண்டாம்.

இவற்றுள் மை, கலிக்கம், நசியம், பசை, பீச்சு இவை, ஓராண்டு வன்மை உள்ளவை.

நாசிகாபரணம், நீர், வர்த்தி, பொடி இவை, மூன்று திங்கள் வன்மை உள்ளவை.

களிம்பு, சிலை இவை, ஆறு திங்கள் வன்மை உள்ளவை. இதனைக் கீழ்க்காணும் செய்யுளால் அறியலாம் :—

'' வெளிமருந் தேகட்டு பற்றொற்ற டம்பூச்சு
வேதுபொட் டணம்தொக்கணம்

மென்புகைமை பொடிதிமிர்தல் கலிக்கநசி யமூதல்
மேவுநா சிகாபரணமும்

களிம்புசிலை நீர்வர்த்தி சுட்டிகைச லாகைபசை
களிபொடி முறிச்சல்கீறல்

காரமட்டை அறுவைகொம்புரிஞ் சல்குருதி
கண்டுவாங் குதல்பீச்சுவை

வெளிமருந்து முப்பத்தி ரண்டென்று கூறினர்
விண்ணுலவு சித்தராமால்

மேல்வர்த் தியும்பசை பீச்சுமை நசியமும்
மென்கலிக் கங்களோராண்

டொளிவர்த்தி பொடியிநீர் நாசிகா பரணமிவை
யொருமூன்று திங்களாகும்

உயர்சிலைக ளிம்பிவைக ளாறுதிங் களாகுமென்
றோதினு ராயுளமரோ.''

1. கட்டு.

இலைகளையாவது, பட்டைகளையாவது நைய இடித்தோ, அரைத்தோ, வதக்கியோ, புளித்த நீர் முதலியவற்றில் வேக வைத்தோ கட்டுதல் ''கட்டு'' எனப்படும்.

சன்னிக்குத் தலையிலும், கண்ணோய்க்குக் கண்ணிலும், கைகால் எரிவிற்கு உள்ளங்கை உள்ளங்காலிலும், கடுவனுக்கும் கால் வீக்கத்திற்கும் காலிலும், அண்ட வீக்கத்திற்கு அண்டத்திலும், அரையாப்பிற்கு அரையிலும் கட்டுதல் வேண்டும் என்றறிக.

2. பற்று.

இஃது, இலை, பட்டை, வேர், இவற்றின் சாற்றையாவது, அரைத்த சில சரக்குகளைச் சுடவைத்தாவது, சுடவைக்காமலாவது நோயுள்ள இடங்களில் திண்மையாக அப்புதல்.

3. ஒற்றடம்.

இது, சுண்ணும்புக்காரை, தவிடு, செங்கற்பொடி, மணல், சில இலைகள் முதலியவற்றுள் ஏதாவது ஒன்றை வறுத்துத் துணியில் முடிந்து நோயுள்ள இடங்களில் ஒற்றுதல்.

### 4. பூச்சு.

இது, கொதிக்க வைத்த சில இலை இரசங்களையாவது தைலங்களையாவது நோயுள்ள இடங்களில் பூசுவது.

### 5. வேது.

இது, சில சரக்குகளைத் தூளாய் இடித்து, துணித்துண்டில் வைத்துத் திரி திரித்து, ஒரு மண் அகலில் வேப்பநெய் விட்டு, அத்திரியை, அதிலிட்டுக் கொளுத்தி, முக்காடிட்டு அப்புகையை உள்ளே வாங்கி வேர்வையை உண்டாக்கிக் கொள்வதும்; வெந்நீரில் நொச்சித்தழை முதலியவற்றை இட்டு அதினின்றும் கிளம்பும் ஆவியையாவது, செங்கல்லைச் சிவக்கக் காய்ச்சி நீரில் இட்டு அதிலிருந்து எழும் ஆவியையாவது பிடிப்பதும் ஆகும்.

### 6. பொட்டணம்.

இது, சில சரக்குகளை இடித்துச் சிறுமுடிச்சுக்கட்டி, வேப்பெண்ணெயோ, வேறு நெய்யோ சுடவைத்து, அம்முடிச்சை அதில் நனைத்து நோயுள்ள இடங்களில் ஒற்றடம் போடுவது.

### 7. தொக்கணம்.

இது, வாதம் முதலிய முக்குற்றப் பிணிக்கலப்பால் உண்டாகும் உடல் வலியை நீக்க உடலைப்பிடிப்பது.

இது வெறுங்கையால் பிடிப்பதும் தைலங்களைத் தடவிப் பிடிப்பதும் என இருவகைப்படும்.

### 8. புகை.

இது, மயிலிறகு, சீரகம் முதலியவற்றைத் துணித்துண்டில் வைத்துத் திரியாய்ச் செய்து கொளுத்தியாவது, விலங்குகளின் குளம்புகள், மாடு, எருமைக்கொம்பின் சீவல், நல்ல பாம்புச் சட்டை, பன்றிப்புட்டை முதலியவைகளை இடித்து நெருப்பிலிட்டாவது உண்டாக்குவது.

### 9. மை.

இது, சில சரக்குகளை அஞ்சனக்கல் முதலியவற்றோடு சேர்த்து இலைச்சாறுகள் விட்டு உலர அரைத்து உலர்த்தி, பிறகு தேன்விட்டு மைபோல அரைத்துக் கொள்வதும், சில சரக்குகளைக் கருக்கித் தேன் விட்டு அரைத்துக் கொள்வதும், சில குடிநீர்களில் சில சரக்குகளையும் களாப்பூச்சாறு முதலியவைகளையும் சேர்த்துத் தேன்விட்டுக் காய்ச்சிக்கொள்வதுமாம்.

### 10. பொடி திமிர்தல்.

இது, கொள்ளு, மா மஞ்சள் பொடி இவைகளைச் சூடனோடு சேர்த்தாவது, தனியாகவாவது, சில இலைகளை அரைத்தாவது உடம்பில் தேய்த்து உருட்டி உதிர்த்தல்.

## 11. கலிக்கம்.

இது, சில சரக்குகளைச் சில சாறுகளால் அரைத்து, உருட்டி மாத்திரையாக்கித் தேனிலாவது, வேறு சாற்றிலாவது உரைத்துக் கண்ணிற்போடுவது.

## 12. நசியம்.

இது, சில சரக்குகளைச் சாறுகளால் அரைத்து மாத்திரையாக்கி வேண்டும்போது அதைத் துணியில் முடிந்து, முலைப்பாலிலாவது வேறெந்தச் சாற்றிலாவது ஊறவைத்தும், தனி இலைகளையாவது பூக்களையாவது கசக்கியும் மூக்கில் பிழிவதும், தைலம் முதலியவைகளை மூக்கிலிடுவதுமாம்.

## 13. ஊதல்.

இது, சில இலைகள் அல்லது உப்புச் சரக்குகளில் ஏதாவதொன்றை வாயிலிட்டு மென்று, காது முதலியவற்றின் செலுத்த ஊதுவது.

## 14. நாசிகாபரணம்.

இது, சில சரக்குகளையாவது வேர்களையாவது தனியாகவேனும், சில சாறுகளிலோ பால்களிலோ ஊறவைத்தேனும், நிழலில் உலர்த்தி இடித்துத் துணியில் வடிகட்டியேனும் மூக்கில் இடுவது.

## 15. களிம்பு.

இது, சில பாஷாணங்களை துவர்ப்புள்ள காய்ச்சுக்கட்டி போன்ற சரக்குகளுடன் பொடியாக்கிப் பசுவெண்ணெய் சேர்த்து நன்றாய் அரைத்து வைத்துக்கொள்வது.

## 16. சீலை.

இது, சில நச்சுக் சரக்குகளைத் தண்ணீரிலாவது சாறுகளிலாவது அரைத்துக் குழம்பாக்கி, அதில் துணித்துண்டைத் தோய்த்து விரணங்களுக்கு உபயோகிப்பது.

## 17. நீர்.

இது, விரணங்களைக் கழுவுவதற்குச் சில சரக்குகளை நீரில் ஊற வைத்தாவது, குடிநீராகக் காய்ச்சியாவது, சில நச்சுச் சரக்குகளை மிக்க நீரில் அரைத்துக் கலந்தாவது நீர்மயமாய் வைத்துக்கொள்ளுதலாம்.

## 18. வர்த்தி.

இது, சில நச்சுச் சரக்குகளைப் பொடிசெய்து, சில சாறுகளால் அரைத்துக் குழம்பாக்கி, அதில் சீலையை நனைத்தாவது, சில சரக்குப் பொடிகளைத் துணித்துண்டில் வைத்தாவது திரித்து, ஆறுத விரணங்கட்கும் புரை ஓடும் விரணங்கட்கும் வைப்பது.

## 19. சுட்டிகை.

இது, சுடுகை எனவும், சுட்டிகை எனவும் கூறப்படும். இதுவே சூடுபோடுதலாம். மண், மரம், ஊசி முதலியவற்றைக் கொளுத்தி சூடேற்றி நோயுள்ள இடங்களில் இழுப்பது.

## 20. சலாகை.

இஃது ஒரு சிறு மெல்லிய கருவி.

## 21. பசை.

இது, குங்கிலியம் முதலியவைகளை மெழுகுடன் சேர்த்தோ சிறிது நெய்யுடன் சேர்த்தோ உருக்கிப் பசையாக வைத்துக் கொள்ளுவது.

## 22. களி.

இஃது, ஆளிவிதை போன்ற சில விதைகளை அரிசி மாவுடன் கூட்டிப் பசுவின் பால் அல்லது நீர் விட்டு அரைத்துக் கரண்டியிலிட்டுக் கிளறி கட்டுவதற்குக் களிபோலச் செய்துகொள்வது.

## 23. பொடி.

இது, வெங்காரப்பொடி அல்லது சில துவர்ப்புள்ள சரக்குகளின் பொடி இவைகளை விரணத்தின்மீது தூவுதலாம்.

## 24. முறிச்சல்.

இது, கை, கால் முதலிய உறுப்புகளுள் ஏதாவது பிறழ்ந்து சரியான நிலையில் இல்லாமல் மாறி இருந்தால், அதைச் சரியாகத் தள்ளுவதற்குத் தெரிந்து செய்யும் ஒரு தொழில்.

## 25. கீறல்.

இது, கட்டி, பரு, கொப்புளம் முதலியவற்றில் தங்கியுள்ள சீழ், இரத்தம், நீர் முதலியவற்றை நீக்கி அதனால் ஏற்படும் வருத்தத்தை நீக்குவதற்காகச் செய்யப்படுகின்ற கீறும் தொழில்.

### 26. காரம்.

இது, விரணத்தை ஆற்றுவதற்காவது, தோற்றுவிக்கவாவது உபயோகப்படுத்துகின்ற சில நச்சுமருந்துகளும் அவைகளின் கூட்டுக்களுமாம்.

### 27. அட்டை விடல்.

நோயுற்று வீங்கின இடத்தில் குருதியை வாங்கிவிட வேண்டியிருந்தால், அக்காலத்தில் அட்டையை அவ்விடத்தில் பற்றும்படி விடின், அது கடித்து உள்ளிருக்கும் தீய இரத்தத்தையெல்லாம் குடித்து விழுந்துவிடும். வீக்கமும் வாங்கிவிடும். இதுவே ''அட்டை விடல்'' என்பது.

### 28. அறுவை.

இஃது, அறுத்துச் செம்மைப்படுத்த வேண்டிய இடங்களில், அறுக்கும் கருவிகளைக்கொண்டு அறுத்துக் கெடுதிகளையெல்லாம் நீக்கிவிட்டுத் தைத்து விடல்.

### 29. கொம்பு கட்டல்.

இது, நோயாளியின் உடலில் எவ்வுறுப்பு உடைந்து போகிறதோ, அவ்வுறுப்பை இணைத்து மீண்டும் ஒட்டிக்கொள்ளும்படி செய்வதற்கு அவ்வுறுப்புகளில் கொம்பு (மரச்சட்டம்) வைத்துக் கட்டுதலாகும்.

### 30. உறிஞ்சல்

இது, விரணங்களில் உள்ள சீழ், குருதி முதலியன வெளியாகாவிடின் அவைகளை வெளிப்படுத்தக் கருவிகளை வாயில் வைத்து உறிஞ்சி எடுத்தலாகும்.

### 31. குருதி வாங்கல்.

இது, சில நோய்களில் உடம்பில் மிக்க இரத்தம் இருக்குமாளுல் அதைக் குறைப்பதற்கு இரத்தக் குழாயைக் கீறி இரத்தத்தை வெளிப்படுத்தலாகும்.

### 32. பீச்சு.

இது, மலம் வெளிப்படாவிடில் அதை வெளிப்படுத்தக் குழாய் வழியாக நீரையாவது வழுவழுப்பான நீர்ப்பொருளையாவது பீச்சுதலாம்.

இவைகளின் விரிவை இரண நூல்களிற் காணலாம்.

---

# I. உலோககலவை.

## அயம்.

## FERRUM (IRON).

இப்பொருள், அகி, அயசு, அயில், இடி, இரும்பு, ஈச செயம், கருங்கொல், கருப்பி, கரும்பி, கரும்பு, கருப்பு, கருமணல், கரும்பொன், கயசு, கிருஷ்ணவையம், காலில் நெகிளம், ஆதி, சத்து, சிரோசரம், சிட்டம், திரும்பி, துண்டம், பிண்டம், பொன்மணல், லோகம், வாழ்பூமி நாதம், கருந்தாது என்ற வேறு பெயர்களினுலும் வழங்கப் படும்.

இஃது எல்லா மலைகளிலும், நிலங்களிலும், அநேகமாக கந்தகம் போன்ற சில பொருள்களுடன் கலப்புற்றுக் கிடைக் கின்றது. இது, தாது தாவர ஜீவப் பொருள்களில் சிறிதளவு கலந்தும் இருக்கின்றது.

அண்டவோடு, அப்பிரகம், கந்தி, கிளிஞ்சலோடு, கௌரி, சவ்வீரம், சாரம், சிங்கி, சிலாசத்து, சிலை, தரா, நிமிளை, பூநீறு, வங்கம், வெங்காரம், வெண்கலம், வெள்ளைப் பாடாணம் ஆகிய இவைகள் அயத்திற்குப் பகைச் சரக்குகள் என்றும், இராஜவர்த்தம், காந்தம், கெந்திச் செம்பு, சூடன், செம்பு, தங்கம், நாகம், பூநாகம், பூரம், மயூரச்செம்பு, வெள்ளி ஆகிய இவைகள் நட்புச் சரக்குகள் என்றும் கூறப்பட் டிருக்கின்றன.

இதற்குப் பெரும்பான்மை துவர்ப்பும், சிறுபான்மை புளிப்புக் கைப்புச் சுவைகளும், வெப்ப வீரியமும், பசியுண் டாக்கி, உடல் உரமாக்கி (பலகாரி) குருதிப் பெருக்கி, உடல் தேற்றி (வியாதபேதகாரி) ஆகிய செய்கைகளும் உள.

அயம் குருதியின் தன்மையை மேம்படுத்தும். அய சம்பந் தப்பட்ட மருந்துகள் மலக்கட்டை உண்டுபண்ணுவதினுல் அதைத் தவிர்க்க முப்பலை கூட்டிக் கொடுப்பது வழக்கம். உடலின் எல்லா உறுப்புகளின் தொழில்களையும் தூண்டுவிக்கும். இதனுல் இது உடல் தேற்றியாக தொழில் புரிகின்றது.

### பொதுக்குணம்.

"பாண்டுவெண் குட்டம் பருந்தூல நோய்சோபை
மாண்டிடச்செய் மந்தங்கா மாலைகுன்மம் பூண்ட
பெருந்தாது நட்டமும்போம் பேதிபசி யுண்டாங்
கருந்தாது நட்டமிடுங் கால்".

(பொழிப்புரை) இரும்பினால் பித்த பாண்டு, வெண் குட்டம், அதிதூல நோய், சோபை, மந்தம், காமாலை, குன்மம், சுக்கிலநட்டம், கழிச்சல், இவை நீங்கும், பசி உண்டாகும்.

மற்றும், 'இளைத்தவர் இரும்பை உண்ண வேண்டும்' என்ற விதியினை '' எய்ப்புடற் கிரும்பை யுண்மின் '' என்னும் பழமொழியால் அறிக.

சுத்தி.

ஒரு பலம் (35 கிராம்) அயப்பொடிக்கு ஆறு பலம் (210 கிராம்) இலுப்பைப் பூச் சாறு விட்டு, காலைமுதல் மாலை வரை வெயிலில் வைக்க வேண்டும். இவ்விதம் ஆறு நாள் செய்து, இரண்டு நாள் சாறு விடாமல் உலர்த்தி, பின்னும் இதைப்போல இருமுறை செய்து, 25ஆம் நாள் முதல் பத்து நாட்கள் இடைவிடாமல் மேற்படி சாறுவிட்டு, வெயிலில் வைத்துப் பின்பு, சாறுவிடாமல் இரண்டு நாள் உலர்த்தி நீர்விட்டுக் கழுவி எடுக்கச் சுத்தியாம்.

(வேறு)

ஒரு பலம் அயத்தை ஒரு பாண்டத்திலிட்டு, அத்துடன் அல்லி வேர் எட்டுபலமும் (280 கிராம்) புன்னை வேர் எட்டு பலமும் (280 கிராம், இடித்துப்போட்டு பதினாறு பலம் (560 கிராம்) காடி விட்டு இரவும் பகலும் தீபாக்கினியாய் எரிக்க வேண்டும். அப்படி எரிக்கும் போது காடி குறைந்து விட்டால், மறு படியும் அதே அளவு காடி வார்த்து எரிக்க வேண்டும். அப்படி எரித்தால் அயம் சுத்தியாகும்.

(வேறு)

அயத்தைக் கொல்லன் உலையிலிட்டுச் சிவக்க காய்ச்சி, ஆறு மாத அன்னக்காடி, எண்ணெய், ஆவின்நீர், கொள்குடிநீர், இந்நான்கிலும் முறையே மும்மூன்று முறை தோய்த்துத் தோய்த் தெடுத்துக் கழுவிக் கொள்ளச் சுத்தியாம். அலம்புதற்கு ஒவ்வொரு முறையும் புதிய நீரையே உபயோகிக்க வேண்டும்.

(வேறு)

இரும்பின் அரப்பொடியை, எலுமிச்சம் பழச்சாறு, காடி, நாட்டுக் காட்டாமணக்குப் பால் இவை ஒவ்வொன்றிலும் மூன்று நாள் ஊற வைத்துக் கழுவியெடுக்கச் சுத்தியாம்.

(வேறு)

அயப் பொடிக்கு நாவற்பழச் சாற்றை மூழ்கும்படி விட்டு, சாறு சுண்டும் வரை வெயிலில் வைத்துக் கழுவுக. இவ்விதம் ஆறு முறை செய்ய அயம் சுத்தியாம்.

அயத்திற்கு ஐவகைத் தோடங்கள் உண்டென்றும், அவற்றை நீக்கும் வகை இன்னவென்றும் கூறப்பட்டிருக்கின்றது. அதனைக் கீழ்வரும் செய்யுட்கள் உணர்த்தும் :

" வாறுகே ளிரும்புக்கைங் குணங்க ளுண்டு
வகையாகச் சொல்லுகிறேன் நன்ருய்க் கேளும் :

தாறுகேள் திரைசவிடு வுடைச்சலூறல்
சரசமா யிருக்காத குணந்தா னைந்தும்

பேறுகே ளிதைநீக்க வறிந்தோன் வாதி
பிரித்திதனை நீக்காதான் பிணந்தான் பாரே

வாறுகேள் குளம்வெட்ட வூற்றுப் போல
வம்மம்மா விரும்பூறல் அருகா தென்னே "

" அருகாத விரும்பூற லறுக்கக் கேளும்
அடைவான சாரமிடி லருகு மூறல்

தருகாத சவிடறுக்கு சாற்றக் கேளும்
தயங்காத கல்லுப்பால் சவிடு போகும்

மருகாத திரைபோக வரிசை கேளும்
வளமான வீரமிடின் மணிபோ லாகும்.

உருகாத ஜீரணிப்புப் போக வென்ருல்
ஓகோகோ சூதமிட்டே உருக்கிப் பாரே. "

" பாரப்பா வுடைந்ததென்ருல் நானத் தூது
பருவமுட னஞ்சுக்கும் பயனுஞ் சொன்னேன். "

சுத்தி செய்யப்பட்ட அயத்தைப் பற்பம், செந்தூரம், களங்கு, மெழுகு, வடகம், பாணிதம் முதலிய மருந்துகளாக்கி உபயோகித்தல் வேண்டும். இவற்றுள், பற்பம் முழு வன்மையும் செந்தூரம் முக்கால் வன்மையும், மற்ற மருந்துகள் அதற்குக் குறைந்த வன்மையும் கொடுக்கும் என்பதை உணர்தல் வேண்டும். பொதுவாய்ப் பற்பத்தின் மகிமையைக் கீழ்ச் செய்யுளால் அறியலாம்.

பற்ப மகிமை.

" வீரத்து மிக்கவை பற்பங்களே—பரி
காரத்து மிக்கவை பற்பங்களே

பாருக்குள் மானிடர் நோய்போக—வரு
பண்டிதருக்கெல்லா மாமோகம்

வீரகடாரி—பிணிக்கொரு
பாரகுடாரி—விசைபெறு
தீரதடாரி—வினையுடு

சூரிக்குழு நேரொத்தது
மேருக்கினை பாரப்புறம். "

(வீர)
தே. தரு

## அயபற்பம்

சுத்தி செய்த ஒரு பலம் (35 கிராம்) அயப்பொடிக்குக் கீழே பட்டியில் குறித்துள்ள சாறுக்ளை முறைப்படி விட்டு அரைத்து வில்லை தட்டி உலர்த்திப் புடமிட்டு எடுக்கவும். ஒவ்வொரு நாளும் புதிய சாற்றையே உபயோகித்தல் வேண்டும். வில்லையை வெயிலில் வைப்பது போலப் பனியிலும் வைக்க வேண்டும்.

| சாற்றின் பெயர் | அளவு பலம். | அரைப்பு நாள் | வில்லை உலர்த்தும் நாள். | கவசம் உலர்த்தும் நாள். | புடம் வரட்டி |
|---|---|---|---|---|---|
| வேங்கைவேர்ப்பட்டைச்சாறு | 7 | 7 | 5 | 1 | 40 |
| செங்கரும்பின் சாறு | 4½ | 9 | 8 | 1 | 50 |
| புளிமா வேர்ப்பட்டைச் சாறு | 3 | 12 | 11 | 1 | 32 |
| கற்றாழை வேர்ச் சாறு | 1½ | 13 | 12 | 1 | 27 |

குறிப்பு.—அரைக்கும் தொழில் பகலில் நடக்க வேண்டும். இராக் காலத்தில் செய்தால் மருந்து செம்மைப்பட்டு வராது. ஏனெனில், அரைக்கும் தொழிலுக்கு நித்திரை, கோபம், பலக்குறைவு இவை இருத்தலாகாது. ஆதலினால், தாபத குணத்தை உடைய இருட்டை நீக்க வேண்டுமென்க.

| தீரும் நோய். | | துணை மருந்து. |
|---|---|---|
| அண்டவாதத்திற்கு | .. | இஞ்சி இரசத்திலும், |
| பெருவயிற்றிற்கு | .. | மிளகுத் தைலம் அல்லது அதன் இரசத்திலும், |
| வல்லைக்கு | .. | திப்பிலித் தைலம் அல்லது அதன் இரசத்திலும். |
| பக்கச்சூலைக்கு | .. | சுக்கின் இரசத்திலும், |
| வாதப் பிடிப்புக்கு | .. | தேனிலும், |
| குன்மத்திற்கு | .. | கள்ளிலும், |
| வாந்திக்கு | .. | கருப்பஞ் சாற்றிலும். |
| 'சூசிகை' என்னும் நோய்க்கு | | முந்திரிப் பழச்சாற்றிலும். |
| பாரிச வாயுவிற்கு | .. | திராட்சை இரசத்திலும், |
| பித்த சத்திக்கு | .. | சர்க்கரையிலும். |
| விக்கலுக்கு | .. | கற்கண்டிலும். |
| க்ஷயரோகத்திற்கு | .. | வெல்லத்திலும், |
| பித்த உப்புசத்திற்கு | .. | நெய்யிலும் |

| தீரும் நோய். | துணைமருந்து. |
|---|---|
| பித்த கிருமனுக்கு .. | மகா வில்தவாதி லேகியத்திலும். |
| பித்த சுரத்திற்கு .. .. | வித்தாதி உக்களியிலும், |
| பித்தப் பாண்டுவிற்கு .. | தக்கோலாதிக் களியிலும். |
| பித்த சோகைக்கு .. | ஆச்சிய விஜயார்த்தமென்னும் உக்களி அல்வாவிலும், |
| சேத்துமாதிக்க நோய்களுக்கு | பாலிலும், |
| சேத்தும சந்நிக்கு .. | மோரை என்னும் கஞ்சித் தண்ணீரிலும், |
| தலைப்பாரத்திற்கு .. | கோதுமை, சாமை என்னு மிவற்றாலாகிய கஞ்சியிலும். |
| நீராமைக்கு .. | கசகசா அல்லது மூங்கிலரிசியினால் செய்யப்பட்ட பாயசத்திலும், |
| நீர்க்கட்டுக்கு .. .. | முலைப்பாலிலும், |
| நீரிழிவிற்கு .. .. | சிறுநீரிலும், |
| சிரங்கு, சொறி, கரப்பான், குட்டம், என்னும் நோய்கட்கு. | உமிழ் நீரிலும், |
| வீக்கத்திற்கு .. .. | வெந்நீரிலும், |
| கண் வியாதிகட்கு .. .. | துளசிச் சாற்றிலும், |
| ' கபஸ்வேதாரந்தை என்னும் மித மற்ற வியர்வை உண்டாக்கும் நோய்க்கு. | வெற்றிலைச் சாற்றிலும், |

கொடுக்க வேண்டும்.

குறிப்பு—மேற்சொன்ன துணை மருந்துகளை மருந்தினளவிற்கு எண்மடங்காகச் சேர்க்கவேண்டும்,

அளவு : அயபற்பம் அருந்துவதற்கு, உத்தமப் பிரமாணம் சாமையரிசி அளவு என்றும், மத்திமப் பிரமாணம் தினை அரிசி அளவு என்றும், அதமப் பிரமாணம் நெல்லரிசி அளவு என்றும் கொள்க.

நாள் அளவு : அயபற்பத்தை அருந்த வேண்டிய நாள் அளவில், முப்பத்திரண்டு நாள் உத்தமம். பதினெட்டு நாள் மத்திமம். பன்னிரண்டு நாள் அதமம். அவற்றிற்குக் குறைந்த நாட்கள் அதமாதமாகும்.

பத்தியம் : களிப்பாக்கு, வெங்காயம், கஞ்சா, அபினி., தென்னங்கள், பனங்கள், ஈச்சங்கள், சாராயம், அகத்திக்கீரை, தண்ணீர், மோர், காடி, புளி, நெல்லிக்காய், பெண்போகம் ஆகிய இவைகளை நீக்கவேண்டும். இவற்றுள் பெண் போகம் நீக்கல் அதிமுக்கியமானதென்பர். இதனை,

" பத்தியங்கெடா தவிழ்தம் பார் "

என்ற அடியாலும்,

"பெண்ணின்ப மென்ப தாலம் பிறநர ருயிர்நி லைக்கே
எண்ணின்மற் றஃதால் நன்மை எவற்றையுங் கெடுக்கு
முன்னோர்
பண்ணின வவிழ்த மென்னும் பாற்கொரு புரைமோ ராகும்
புண்ணின் மொய் பறவை மானப் புமான்களென் றயிர்ப்
பராலோ."

என்ற சிவமுனிவர் செய்யுளாலும் உணர்க.

பற்பம் (வேறு).

ஒரு பலம் (35 கிராம்) அயத்தைக் கல்வத்திலிட்டு, நாளொன்றுக்கு ஆறு பங்கு குருக்கத்திப் பூச்சாறுவிட்டு மூன்று நாளரைத்து, நான்காவது நாள் வில்லை செய்து உலர்த்தி, ஐந்தாவது நாள் போதுமான புளியிலையை அரைத்து இரண்டு பாகமாக்கி, ஒரு பாகத்தை மூசை செய்து, அதில் வில்லையை வைத்து மற்றொரு பாகத்தால் வில்லை செய்து முடி, சீலை மண் செய்து, அன்றும் ஆருவது நாளும், உலர்த்தி, ஏழாவது நாள் நூற்றெட்டு வலிய வரட்டியில் புடமிட்டு, ஒரு நாள் ஆறவிட்டு, மறுநாள் பிரித்து எடுத்தால் வெண்மையாகும்,

வெண்மையான அயபற்பத்தை உண்டால், மேக ரோகங்கள், பாண்டு, நளிர்சுரம், அத்திச்சுரம், நாட்பட்ட பழைய சுரங்கள், தளிர்த்துண்டான மேகப் புண்கள், ஊறல்கள், இரந்தி, சுவாசகாசம், உளைப்பு, விப்புருதி ஆகிய இவைகள் நீங்கும்.

அயபற்பத்தை உண்பதற்கு அனுபானங்கள் : தேனும், சர்க்கரையும், உத்தமம்; திப்பிலியும், மிளகும் இரண்டாம் பட்சம், இது தின்னுங்காலம், அந்தியும் சந்தியும் ஆகும்.

பத்தியம் : ஒரு வாரம் வரைக்கும் பெண் போகம், எள்ளு, கடுகு, கொள்ளு, புளிப்பு இவைகளை நீக்குதல் வேண்டும்.

இந்த அயபற்பத்தால், பலவீனத்தைக் கொடுக்கும ரோகங்கள் யாயும் விரைவில் நீங்கும், மற்ற நோய்களெல்லாம் மெதுவாக முற்றுங் குணமாகும்: சரீரம் பெருக்கும்.

பற்பம் (வேறு).

மருத நிலத்துண்டாகும் சித்திரமூல இலைச் சாற்றைக் கொண்டு நான்கு புடமிட அயம் பற்பமாகும்.

பற்பம் (வேறு).

காடியாதி திரவத்தில் சுத்திசெய்த அயப்பொடியில் ஒரு பங்குக்கு மூன்று பங்கு வேலிப்பருத்திப் பாலை விட்டு ஒரு நாள் முழுவதும் ஊறவைத்து, பிறகு கல்வத்திலிட்டு, சிறுகச்

சிறுக மேற்படி பால் மூன்றுபங்கு மேலுங் கொள்ளும்படி விட்டு, கைவிடாமலரைத்து வில்லைகள் செய்து, ஈரம் வற்றும் வரை நிழலிலும், ஈரம் வறண்டபின் வெயிலிலும் உலர்த்தி, பூநீறும் கற்சுண்ணாம்பும் கலந்த தெளிநீரில் காய்ச்சிச் சுத்தி செய்யப்பட்ட கும்பிடு கிளிஞ்சலைப் பெருந்துண்டுகளாய் பொடித்து, அயப்பொடி எடைக்கு எண்மடங்கு எடுத்து, ஒரு புதுஅகலில் அரைப்பங்கிட்டு, அதன்மேல் வில்லைகளைப் பரப்பி, அதன்மேல் மறுபாதி கிளிஞ்சற் பொடியை இட்டு, அகல்கொண்டு மூடி, வலுவாய் எழுசீலை செய்து உலர்த்தி, 30 அல்லது 35 வரட்டியில் புடமிட்டு, ஆறியபின்பு எடுத்துக் கிளிஞ்சல் சுண்ணத்தை, நீக்கிப் பார்க்க, அயம் வெளுத்திருக்கும், நன்றாய் வெளுக்காதிருப்பினும், மலராதிருப்பினும் வெளுத்து மலரும் வரையில் மேற்படியாகவே புடமிட வேண்டும். மூன்றுக்குக் குறையாமலும் ஏழுக்கு அதிகப்படாமலும் புடமிடுவதல் நல்லது.

### அயச் செந்தூரம்.

சுத்தி செய்த ஒரு பலம் (35 கிராம்) அயப்பொடிக்கு, கீழ்ப்பட்டியில் காணும் சாறுகளை முறைப்படிவிட்டு அரைத்து, வில்லை தட்டி, உலர்த்திப் புடமிட்டு எடுக்கச் செந்தூரமாம்.

| சாற்றறின் பெயர் | அளவு பலம். | அரைப்பு நாள். | வில்லை உலர்த்தும் நாள். | கவசம் உலர்த்தும் நாள். | புடம் வரட்டி. |
|---|---|---|---|---|---|
| சீதேவிசெங்கழுநீர்ச் சாறு .. | 5 | 5 | 4 | 1 | 30 |
| ஆவாரையிலைச் சாறு .. .. | 5 | 5 | 4 | 1 | 30 |
| முருக்கிலைச் சாறு .. .. | 5 | 5 | 4 | 1 | 30 |
| தென்னங்குருந்துச் சாறு .. | 5 | 5 | 4 | 1 | 30 |
| பனங்குருத்துச் சாறு .. .. | 5 | 5 | 4 | 1 | 30 |
| ஆடாதோடைச் சாறு .. .. | 5 | 5 | 4 | 1 | 30 |
| சீந்திச்சாறு .. .. | 5 | 5 | 4 | 1 | 30 |
| தூதுவேளை சாறு .. .. | 5 | 5 | 4 | 1 | 30 |

| துணை மருந்து. | | தீரும் நோய்கள் |
|---|---|---|
| சர்க்கரை | .. | வாதப்பிடிப்பு. |
| கருப்பஞ்சாறு | .. | பித்தப்பிரமை. |
| தித்திப்பான கள் | .. | க்ஷயம். |
| வெல்லம் | .. | நடுக்குவாதம். |
| வாழைப்பழம் | .. | பாண்டு. |
| பசுவின் பால் | .. | வீரிய நஷ்டம். |
| பசுவின் நெய் | .. | இழுப்புவாதம். |
| பசுவின் மோர் | .. | என்புருக்கிநோய். |
| பசுவின் வெண்ணெய் | .. | சுவேதவாதம். |
| காய்ந்தாறின நீர் | .. | கப சந்தி தோடம். |
| பசுவின் தயிர் | .. | நேத்திரவாயு. |
| சாணப்பால் | .. | பித்தசந்நி. |

இச்செந்தூரத்தின் அளவு, பத்தியம் முதலியன பற்பத்திற்குக் கூறியவாறே கொள்க.

இச்செந்தூரத்தைப் புசிக்க ஏற்ற மாதங்கள்: தை, மாசி, பங்குனி, உத்தமம்; சித்திரை, வைகாசி, ஆனி மத்திமம்; ஆடி, ஆவணி, புரட்டாசி, அதமம்; ஐப்பசி, கார்த்திகை, மார்கழி, அதமாதமம்.

இச்செந்தூரத்தைப் புசிக்க ஏற்ற நிலங்கள்: வாத நோயினருக்கு, முல்லை உத்தமம், குறிஞ்சி மத்திமம்; நெய்தல் அதமம்.

பித்த நோயினருக்கு, நெய்தல் உத்தமம்; குறிஞ்சி மத்திமம்; முல்லை அதமம்.

கபநோயினருக்கு, முல்லை உத்தமம்; நெய்தல் மத்திமம்; குறிஞ்சி அதமம்.

வாத முதல் மூவகை நோயினர்களுக்கு, மருதம் உத்தமத்தில் உத்தமம் பாலை அதமத்தில் அதமம் என்று அறிக.

அயச்செந்தூரத்தைக் கால்மண்டலம் உண்டால், நோய் போகுமென்றும்; அரை மண்டலம் உண்டால், வன்மை உண்டாகுமென்றும்; முக்கால் மண்டலம் உண்டால், உடற்கும் மனத்திற்கும் இன்பமுண்டாகும் என்றும், ஒரு மண்டலமுண்டால், எண்ணிய எண்ணம் கைகூடும் என்றும்; இதனை இவ்வாறு விதிப்படி உண்டவர்களைக் கண்ட பேர்களுக்கும், அவர்கள் உடல் பரிசத்தைக் கொண்டபேர்களுக்கும் சொல்ல முடியாத உடற்சித்திகள் உண்டாகும் என்றும் கூறப்பட்டுள்ளன. இவற்றை,

"மண்டலங் காலில் நோய்போம்; மற்றொன்றில் வலி
வுண்டாகும்:
அண்டுமுக் காலிலின்பம்: அப்புற மெண்ணங் கிட்டும்;
கொண்டவர் தம்மைக் கண்டு கொண்டபேர் பரிச மெய்யுட்
கொண்டபேர் தமக்கு முண்டாம் கூறொணுச் சித்தி தானே".

அயச்செந்தூரத்தினுல் தீரும் பிணிகள்.

அயத்தில்வரு செந்தூர மையமொடு சோபை
வயிற்றிலுறு காமாலை மாற்றும்புயத்திற்கும்
செயல்பல முண்டாக்குந் தீபனத்தைத் தானெழுப்பும்
வெய்யபாண் டோட்டுமிது மெய்.

(பொ—ரை) தூய்மை செய்த இரும்பினுல் செய்யப் பெற்ற செந்தூரமானது, கபத்தையும் சோபையாகிய வீக்கத்தையும் வயிமறின் உள்ளங்கத்தை (ஈரலைப்)பற்றிவரு

வதான உடல் மஞ்சளிக்கும் நோயையும் நீக்கி, முன்னிருந்த வாறு உடலை அமைத்துத் தோளிணைக்கு அழகிய வலிமையை உண்டுபண்ணும்; நீங்கிய பசியைத் தோற்றுவிக்கும்; கொடிய உடல் வெளுப்புப் பிணியைப் போக்கும்.

### செந்தூரம் (வேறு).

அயப்பொடிக்கு, எள்ளின்நெய் விட்டு 60 நாழிகை கழித்து வறுத்தெடுத்து, பீங்கானிலிட்டு, பழச்சாறுவிட்டுக் கிண்டி வைத்திருந்து, நான்கு நாள் கழித்தபின்பு கழுவிக் கொள்ளச் சுத்தியாம். இப்படிச் சுத்தி செய்த அயம் 35 கிராம், கெந்தி 35 கிராம் இவ்விரண்டையும் கல்வத்திலிட்டுப் பழச்சாற்றினுல் 4 சாமமும் ((12 மணி), பொற்றலைக்கையான் சாற்ருல் 4 சாமமும் (12 மணி) அரைத்து, வில்லை செய்து உலர்த்தி, சில்லிட்டுச் பின்பு, மேற்குறிப்பிட்ட சாறுகளினுல் இரண்டாம் முறை அரைதது முன்போலவே புடமிட்டெடுக்கச் செந்தூரமாம்.

அளவு : பணவெடை (488 மி.கிராம்.)

துணை மருந்து : தேனில் கொள்ளப் பாண்டு, பித்த வெட்டை, பித்த வாயு, அரோசகம், அன்னத்துவேஷம், மயக்கம், வாந்தி இவை நீங்கும். இஞ்சிச் சூரணத்தில் தேன் கூட்டிச் செந்தூரத்தைக் கலந்துண்ணப் பித்தம் நீங்கும்.

### (வேறு).

ஓதியம்பட்டையிற் காடி தெளித்து இடித்துச் சாறு பிழிந்து, குழிக்கல்லிலிட்டு, அதில் அயப்பொடியைச் சேர்த்து, மூன்று நாள் வெயிலில் வைத்து, நான்காம் நாள் அச்சாறு விட்டு அரைத்து, வில்லை செய்து உலர்த்தி, ஓட்டிலிட்டு ஓடு மூடி, 7 சீலை செய்து உலர்த்தி, கஜபுடமிட்டெடுக்கவும். இம்மாதிரியே எட்டுப் புடமிட்டு, பிறகு காடிநீர் தெக்ளிகாமல், ஓதியம் பட்டைச் சாறுவிட்டு, அரைத்து மூன்று புடமிட்டெடுக்கச் செந்தூரமாம்.

துணை மருந்து : ஆல் அரசுகளின் பிஞ்சு, வித்து சமனெடைக்கு அதி மதுரம் நெய் கூட்டியும், தனி நெய் அல்லது தேன் கலந்தும்வழங்கலாம்.

தீரும் நோய் : வாயு, வாதபித்தம், கபதோடங்கள் நீங்கும். நாடி முறுக்கேறி விந்து கட்டும்.

குறிப்பு.—இதனைப் பெரும்பாட்டிற்குச் சிறப்பாக வழங்குதல் உண்டு.

மற்றும் அகத்தியர் காப்பியம் 1500-ற்றில் நாவற்பட்டைச் சாற்றிஞல் செய்யப்பட்ட அயச் செந்தூரம், நீரிழிவு நோய்க்கும் நீர்ப்பேதிக்கும், கிரகணி பேதிக்கும் சிறந்தது என்று கூறியிருத் தலேயும் கண்டுகொள்க.

### அயகாந்த செந்தூரம்.

அயம் 1 பலம் (35 கிராம்), கந்தகம் 1 பலம் (35 கிராம்) காந்தம் 1 பலம் (8.75 கிராம்), இலிங்கம், வெங்காரம், படிகாரம், பூநீறு, சோற்றுப்பு, இந்துப்பு, நவச்சாரம், கருப் பூரம்—இவ்வெட்டும் வகைக்கு 1 கழஞ்சு (5.1 கிராம்) வீதம் எடுத்துப் பொடித்துக் கல்வத்திலிட்டு பழச்சாறுவிட்டு, இரண்டு நாளரைத்து, வில்லே செய்து உலர்த்தி, சில்லிட்டுச் சீலே செய்து பன்றிப்புடம் இட்டு எடுக்கச் சிவக்கும்; தப்பாயின் மூன்று புடம் செய்ய முடியும். வில்லேகளேப் பொடித்துத் தக்க அளவில் பாண்டு நோய்க்குக் கையாளலாம்.

### அயவீரச் செந்தூரம்.

''ஆட்டுத் துகள்விந் தோர்தொடி அரைசே வகன்சாரம்
போட்டுக் கலுவத் தில்திரி பொழுதே நனியாட்டி
நாட்டுக் கரித்தீ யில்மணில் நாட்டும் மொருபாண்டத
தோட்டுக் கவிர்நிற மாவறு உறுகால் முதல்போமே.''

அயப்பொடி பலம் 1 (35 கிராம்), இரசம் பலம் 1 (35 கிராம்), ஆகிய இரண்டையும் கல்வத்திலிட்டு அரைத்து, வீரம் ½ பலம் (17.5 கிராம்), நவச்சாரம் பலம் (17.5 கிராம்), சேர்த்து, மூன்று நாள் அரைக்கச் சிவக்கும். இதனேப் புதுச் சட்டியிலிட்டு அடுப்பேற்றி வறுத்து, முருக்கம்பூ நிறமானவுடன், கருகாமல் பதத்தோடு இறக்கிக் கொள்ளவும்.

குறிப்பு.—வறுக்கத் தென்னே ஈர்க்குக் கற்றையை உப யோகித்து, புகைக்கு எதிர்நிற்காமல், சாக்கிரதையுடன் இருக் கவும்.

அளவு : குன்றியெடை (130 மி.கிராம்.).

துணே மருந்து : பனேவெல்லம்.

தீரும் நோய் : சூலே, குட்டம், வாதநீர், விஷக்கடிகள்.

### அயமெழுகு

அயப்பொடி 70 கிராம், பொரித்த வெங்காரம் 35 கிராம் நவச்சாரம் 8·75 கிராம், புளிப்பு மாதுளே இரசம் 700 கிராம் இவற்றுல் முதல் மூன்று சரக்குகளேயும் கல்வத்திலிட்டுச் சாறு விட்டு அரைத்து, இருப்புச் சட்டியிலிட்டு அடுப்பேற்றி, சிறு தீயால் எரித்து, மேற்படி சாற்றில் கொஞ்சம் கொஞ்சமாய் விட்டுக் கிளறிக்கொண்டே சாறு முழுவதும் முடியும்வரை எரித்து, மெழுகுப் பதத்தில் இறக்கிக் கொள்ளவும். பதம் வரும்வரை சாற்றை உபயோகிக்கவேண்டும்.

அளவு : 2 முதல் 4 கிராம்.

துணைமருந்து : நெய், தேன், சோம்புக் குடிநீர், சுக்குக் குடிநீர்.

தீரும் நோய் : எண்வகைப்பாண்டு, பித்தவெட்டை, சோபை, காமாலை.

பத்தியம் : அயபற்பத்திற்குக் கூறியவாறு கொள்க.

### அயபிருங்கராஜ பாணிதம்.

"பாவன மேவிய கருந்தா தின்பொடி படைமுக் கனிமரிசம்
பாணம தன்முதல் கஜவெண் முறையே பலம்பத்
தரையேகம்
மேவிடு மஃதஃ தொன்றரை யொன்றரை விளம்பொன்
றரையாகும்
விரைதேன் பனைவெல் லம்பிரு பானது மிளிர்கை யான்
படியாம்
பாவகன் வைத்திடு புரிபா ணிதமாய்ப் பகரித னபிதானம்
பாரய பிருங்க ராஜம தென்ப பண்டுள வினையாலே

தாவரத் தக்குரை வாலெழு பாண்டுவை தழற்கா
மிலைசோபை
தணியா வுதர மக்கினி மாந்திதயம் தப்பா தொழியும்மே"

(பொ-ரை) : கரிசாலைச் சாற்றிலும், நெல்லிச் சாற்றிலும் பாவனஞ் செய்யப்பட்ட அரப்பொடி பலம் 10 (350 கிராம்), சுக்கு பலம் $\frac{1}{2}$ (17.5 கிராம்), கடுக்காய் பலம் 1 (35 கிராம்), நெல்லிக்காய் பலம் 1 (35 கிராம்), தான்றிக்காய் பலம் 1 (35 கிராம்), மிளகு பலம் $1\frac{1}{2}$ (52.5 கிராம்), திப்பிலி பலம் $1\frac{1}{2}$ (52.5கிராம்) திப்பிமூலம் பலம்$1\frac{1}{2}$ (52.5 கிராம்), தேன் பலம் 20 (700கிராம்), பனைவெல்லம் பலம் 20 (700 கிராம்), புதிய கையான் சாறு 1படி (1.3 லிட்.), இவைகளைக் கலந்து தீயிட்டு எரித்து மணப் பாகு செய்து கொள்ளவும். இதனைத் தக்க அளவுடன் கொடுத்து வர, இரத்தக் குறைவினால் உண்டாகும் பாண்டு, பித்தக் காமாலை சோபை, நீங்காப் பெருவயிறு, அக்கினிமாந்தியம் முதலியன நீங்கும்.

### அயசம்பீர கற்பம்.

"ஆட்டுத் துகள்கரி திரிதொடி பப்பத் தரையை யெண்
யருணக்
காட்டுக் கனியுள்வை யைம்பூ தத்தொரு கலமுள்
ளிடுதிலநெய்
கூட்டுத் தொகைமுற் கூறிரு சில்லிடு குழையிடு மண்டலமே
ஓட்டுப் பிளவொன் றிருபோ துணுபாண் டொடுசோ
பையுமறுமே.

(பொ—ரை) அயப்பொடி பலம் 10 (350 கிராம்), மிளகுத் தூள் பலம் 10 (350 கிராம்), உரித்த பூண்டு பலம் 10 (350 கிராம்) ஆகிய இம்மூன்றையும் அரைத்து நாற்பது பங்காக்கி, எலுமிச்சம்பழம் 40 எடுத்து, ஒவ்வொன்றையும் நாலாகப் பிளந்து விதை நீக்கி, ஒவ்வொரு பங்கை ஒவ்வொரு பழத்தில் வைத்து ஒரு மண்பாண்டத்தில் அமைத்து, அதில் 60 பலம் (2.100 கிராம்) எண்ணெய் விட்டு, ஒடு மூடி, மெழுகுச் சீலை செய்து, தாமரைக் குளத்துக் குழைந்த மண்ணில் புதைத்து, ஒரு மண்டலம் கழித்தெடுக்கவும். இதில் பிளபு ஒன்று இரண்டு வேளை வீதம் உண்டுவரப் பாண்டு நோயும் சோயை நோயும் நீங்கும்.

### அயபிருங்கராஜ கற்பம்.

'' கரும்பொ னயோமல மறைசாத் திரவென் கழறுந் தொடி
பொடிசெய்
கரிசா லைச்சுர தம்படி பெய்து கலக்கெலி லுலரவிடு
விரும்பு சதாபல சுரசத் தவ்வண மீட்டுமுன் விதிபுரிமுன்
விடுசுர சம்பா லந்தஞ் சேரும் விண்டுத ழைக்குழியுண்
கரும்பினில் வந்திடு வட்டென விடுமரி காணப் பொடி
பணமே
கமழ்மது துப்பு முருகு ததிக்குள் கையா டிருபொழுதும்
அரும்புதி வாவொரு பதுபது பதுபது ஆமிலம் விட்டுதிரத்
தழிவுமும் மலநரை அசதிய தாமிவை அழலிடு துலவமரோ''

மற்றும், சத்துச் செந்தூரம், மணி, மிருத்தியுஞ்சயம், வடகம், இலேகியம், சூரணம் போன்ற பல மருந்துகள் **அயக் கூட்டால்** செய்யப்படுகின்றன. அவற்றை விரிவஞ்சி **விடுத் தனம்.**

## அயநாகம்.

இப்பொழுது இது வழக்கிலில்லை. "அயத்திலிருந்து உற்பத்தியான நாகம்" என்று யமக வெண்பா விருத்தி உரையினும், மேற்கோட் செய்யுட்களினும் இஃது அறியக் கிடக்கின்றது. இதனைப் பற்றிய குறிப்புக்கள், தேரன் யமக வெண்பா விருத்தியிலன்றி, வேறு நூல்களில் காணப்படவில்லை. ஆதலின், அதன் வாயிலாய் அறிந்தவற்றைச் சுருக்கிக் கூறுதும் ;

### பிறப்பும், குணமும்.

"இரும்பிலே பிறந்த நாக
மெலும்பிலே நிறைத்த ரோக
மிறங்கவே
துறந்த னேக
மிச்சைப்படி மெச்சப்பெறு
மச்சத்தினை யெவர்பாலுரைப்பார் களேனு மிகுபத்திய
முவமா மடப்பாவை யோர் குறையருக்கி
நவதானியப் பொழிவு நாடுவது நிச்சயம்."

(அக. கரிசல்).

" அயத்திலுதித் திடுநாகப் பெருமை யென்னல்
அரிதறைத்தலெனினு நனியறையக் கேண்மோ ;
பயத்திலுதித் திடுகனலா நோயின் வர்க்கப்
பாராவாரத் தைவரட்ப டுத்த நாளும்
நயத்திலுதித் திடும்பத்யக் கடைப்பா டில்லை
நங்கையொன்றே நன்கையொன்றே நாடிப் பார்க்கில்
சலத்திலுதித் திடுவாகை யாயு ளோர்க்குந்
தரிப்பிக்குஞ் சிரிப்பிக்கும் அவரைத் தானே."

(தன்வந்திரி வாகடம்.)

"கரும்பொனி லான நாகத்தி னதிசயம்
பெரும்புவி மீதிற் பிரசங்கிப் பாரிலை
விரும்பின பேர்க்கு வியாதியுண் டோவிடல்
வரும்பிணி யான மடவர லொன்றுமே."

(திருமூலர் கன்மகாண்டம் ஆயிரம்).

இம்மேற்கோட் செய்யுட்களிலிருந்து, அயநாகம் அயத்திலிருந்து உற்பத்தியாவது என்பது புலப்படும்.

சித்த மருத்துவத்தில் அயம் சோகை, பாண்டு ஆகிய பிணிகட்குச் சிறப்பாகப் பயன்படுத்தும் ஒரு மருந்து என்று கூறப்பட்டுள்ளது.

அயத்திலிருந்து எடுக்கும் சத்தாகிய அயநாகத்தால் ஆன மருந்து, எலும்பினுள் தோன்றும் பிணிகளைப் போக்குமெனக் கூறப்படுகிறது இக்கால மேனாட்டுமுறை மருத்துவத்திலும் —எலும்புக்குள்ளிருக்கும் மூளையினால் உற்பத்தி செய்யப்படும் குருதி செவ்விலங்கள் ( Red blood Corpusceles ) குறைந்தால் அதற்கு எலும்பு மூளையிலுள்ள சத்தால் ஆக்கப் பட்ட மருந்தைப் பயன் படுத்த அச் சத்துக் குறைவால் ஏற்படும் பாண்டு தீரும் என்று சொல்லப்படுகிறது ஆகவே, அவ் வெலும்பு மூளைச்சத்தின்றியே அயநாகத்தைப் பயன்படுத்த, அக்குணத்தைப் பெறலாமென்பது அறியக் கிடக்கின்றது இஃது எலும்பினுள் உள்ள மூளை சம்பந்தமான பிணிகளைப் போக்கும் என்பதையும், இதனால் செய்யப்பட்ட மருந்தை அருந்தும் காலத்துப் பெண் போகம் கூடாது என்பதையும் ஒருவாறு உணரலாம்.

## அயநாக பற்பம் (சுண்ணம்).

சுத்தி செய்த 1 பலம் (35 கிராம்) அயநாகத்திற்கு குப்பைமேனி இலைச்சாறு, செருப்படைச்சாறு, திப்பிலியிலைச்சாறு, கரிசலாங் கண்ணியிலைச்சாறு இவைகளைக் கீழ் காணும் பட்டியலில் குறிப்பிட்டு ள்ளபடி விட்டரைத்து வில்லை தட்டி உலர்த்திப் புடமிட்டெடுக்கப் பற்பமாகும்.

| சாற்றின் பெயர் | அளவு பலம் | அரைப்பு நாள் | வில்லை உலர்த்தும் நாள் | கவசம் உலர்த்தும் நாள் | புடம் வரட்டி |
|---|---|---|---|---|---|
| குப்பைமேனிச்சாறு .. .. | 4 | 8 | 7 | 1 | 44 |
| செருப்படைச்சாறு .. .. | 3 | 7 | 6 | 1 | 36 |
| திப்பிலியிலைச்சாறு .. .. | 2 | 6 | 5 | 1 | 27 |
| கரிசலாங்கண்ணியிலைச்சாறு .. | 1 | 5 | 4 | 1 | 16 |

குறிப்பு.—அளவும், சாப்பிடவேண்டிய நாளளவும் நூல்களில் கிடைக்கவில்லை.

அயநாக பற்பத்தின் துணைமருந்தும் தீரும் நோய்களும்; பனங் கள், தென்னங்கள், ஈச்சங்கள் இவைகளுள் ஒன்றுடன் அயநாகத் தைக் கொடுக்க சுத்தவாத சம்பந்தமான மகோதரம், சூலை, பக்கவாயு, பிடிப்பு, வாதசத்தி, பல்லை, அண்டவீக்கம் என்பவை தீருமென்றும்; தேனில் கொடுக்க தொந்தவாதம் என்கிற வாத சுரம், வாதபித்தவெப்பம், வாதகப உட்டிணம், வாதசந்நி, நீர்க் கட்டு, மேக உட்டிண காங்கை, மேகவாதம், தீருமென்றும்; சுத்த நீரில் கொடுக்க பித்த சம்பந்தமான பித்தவாயு, விக்கல், வாந்தி, வாய்நீரூறல், தலை திருப்பல், அசீரணப் பக்கச் சூலை, வியர்த்தல், அசரீரி உரைத்தல், புன்னகை கோடல் தீரும்.

என்றும்; சர்க்கரை அல்லது கற்கண்டில் கொடுக்க தொந்த பித்த நோய் என்கிற மதுமேகம், வெகு மூத்திரம், மூத்திரத் திரட்சி அருகல், அடைத்தல், வெகு தாகம், வெகுபசி, வாயாடல், பற் கடித்தல் தீரும் என்றும்; பசுவின்பால், முலைப்பால், வெள்ளாட்டுப் பால், சாணைப்பால் இவைகளுள் ஒன்றில் கொடுக்க, கப நோயின் சம்பந்தமான நளிர்ச்சுரம், முறைக்காய்ச்சல், வெக்கை, பெரு வாரிக்காய்ச்சல், சுவேதானலம், நீர்க்கோவை, நீராமை, பெரும் பாடு, பெருங்குட்டம், கருங்குட்டம், மாரடைப்பு, பெருவயிறு தீரும் என்றும்; வெண்ணெயில் கொடுக்க தொந்தக் கபப் பிணி யான சிறங்கு, செவ்வாப்பு, பருக்கட்டி, கொப்புளம், பெருஞ் சொரிக் குட்டம், சிறு சொரிக்குட்டம், மேகவரட்சி, நேத்திரவாயு நேத்திரப் படலம், நேத்திர மாமிசப் பிணி, சாலே சுரப்பிணி, கண்நோய், கண்ணில் நீர்முட்டல், கண்கட்டி, கண்பரு, பீளை சார்தல், புழுவெட்டு, இல்லிக்கண் நோய், மண்டைக்குடைச்சல், ஒற்றைத்தலைநோய், பீனசங்கள், நீர்க்கோவை, விடாவியர்வை முதலியன தீரும் என்றும் அறிக.

---

## எஃகு.

## (STEEL).

இப்பொருள் அயக்கடிசு, அரம், உருக்கு, எஃகு, எழுகு, ஒழுகறை, மணிவாள், கிட்ட லோகம், இரத்தலோகம், தீக்ஷணம், மலைக்குடோரி, வற்றல் லோகம் என்ற வேறு பெயர்களினாலும் வழங்கப்படுகின்றது.

இஃது, இந்தியாவில் மைசூர் போன்ற பல இடங்களில் இரும்பி லிருந்து செய்யப்படுகின்றது. இஃது இரும்பில் கொஞ்சம் பேதப் பட்ட தென்பதை அறிதல்வேண்டும். இதில் அறுவகை உண்டென்று வடநூலார் கூறுவர்.

இதற்குத் துவர்ப்புச் சுவையும் வெப்ப வீரியமும் உண்டு. அயத்திற்குக் கூறிய செய்கைகள் இதற்கும் பொருந்தும்.

பொதுக்குணம்.

" தந்தமந்த மூலவுரு தாதுநட்டஞ் சோபைகண்ணோய்
வந்தமந்தம் பாண்டுவினை வன்மைகுன்றல்—முந்தப்
பெருக்கிடையாய் நீட்டுகப பேத மிவைகட்
குருக்கிடையா தோட்டு முரை."

(பொ-ரை) எஃகு தந்த ரோகம், தந்த மூல நோய், சுக்கில நட்டம், வீக்கம், கண்ணோய், அலசம், உடல் வெளுப்பு, துர்ப்பலம், படுக்கையே கதியாக வீழ்த்தாநின்ற க்ஷயகாச ரோகங்கள் இவை களை ஒழிக்கும்.

## சுத்தி.

ஒரு பலம் (35 கிராம்) உருக்குப் பொடியில் ஆறு பலம் (210 கிராம்) கொட்டை முந்திரிகைப் பூச்சாறு விட்டு, காலை முதல் மாலைவரை வெயிலில் வைக்கவேண்டும். இவ்விதம் ஆறுநாள் செய்து இரண்டு நாள் சாறுவிடாமல் உலர்த்தி, பின்னும் இது போல இருமுறை செய்து, 25 ஆம் நாள் முதல் பத்து நாள் இடைவிடாமல் மேற்படி சாறுவிட்டு வெயிலில் வைத்து, பின்பு சாறு விடாமல் இரண்டு நாள் உலர்த்தி, நீர்விட்டுக் கழுவி எடுத்துக் கொள்ளச் சுத்தியாம்.

(வேறு)

தேய்ந்த பழைய உளியை உலையிலிட்டுக் காய்ச்சி, வெள்ளாட்டுப் பீச்சில் தோய்க்க வெட்டையாகும். வெட்டையாகும் வரை தோய்க்கவும். ஒவ்வொரு முறையும் புதிய பிச்சை உபயோகிக்க வேண்டும்.

(வேறு)

உளியைப் புளியிலைக் கனத்தில் தகடாக அடித்துக் கொல்லனுலையில் சிவக்கக் காய்ச்சி காடி, எள்நெய், பசுவின் நீர், கொள்ளுக் குடிநீர் இவைகளொவ்வொன்றிலும் மும்மூன்று முறை தோய்த்து, அரத்தால் அராவித் தூளாக்கி உபயோகிக்கவும்.

## எஃகுப் பற்பம்.

ஒரு பலம் (35 கிராம்) சுத்தி செய்த எஃகுப் பொடியை பின் வரும் பட்டியில் குறித்த சாறுகளில் முறைப்படி அரைத்து, வில்லை தட்டி உலர்த்திப் புடமிட்டு எடுக்கவும். ஒவ்வொரு நாளும் புதிய சாற்றையே உபயோகித்தல் வேண்டும். வில்லையை இரவியில் வைப்பதுபோலப் பனியிலும் வைக்கவேண்டும். பனியில் அவிழ் தங்கலை வைக்காவிட்டால், பக்குவப்படாது கெட்டுவிடும் என்பதை,

"நனிபட்ட வாகடர் நாட்டு முறைபொருள்
துனிபட்ட கங்குவிற் றுன்னிய சீதப்
பனிபட்ட தில்லையேற் பாடுபட் டுங்கரி
கனிபட்ட வரமெனக் கண்டு கொள் வீர்களே."

என்னும் திருமூலர் கன்மகாண்டம் ஆயிரத்திரட்டில் உள்ள செய்யுளாலும்,

" கோனுட்டுக் குட்டித்தாய் ராமநாட்டுக் குள்ளே
கூடாவிட் டாற்பாலைக் கூட்டக் கூடாதே
வானுட்டை வெள்ளாடு செம்மறி யாட்டின்
மார்க்க மறிநல்ல கம்பளி யாடே
தேனுட்ட நீர்கூட்டி மேலாள மந்தை
சின்ன குடிசையிற் சிக்கவைப்பாயே.

நானாட்ட வேணுமோ நீயாட்டொ ணாதோ
நாமக்கோன் கைத்தடி தாயும்போ காதோ.''

**என்னும் இடைக்காட்டுத் தேவநாயகனார் பாசுரத்தாலும் அறிக.**

| சாற்றின் பெயர் | அளவு பலம் | அரைப்பு நாள | வில்லை உலர்த்தும் நாள | கவசம் உலர்த்தும் நாள | புடம் வரட்டி |
|---|---|---|---|---|---|
| கருவேல வேர்ப்பட்டைச்சாறு | 3 | 6 | 5 | 1 | 64 |
| மாமர வேர்ப்பட்டைச்சாறு | 2 | 6 | 5 | 1 | 48 |
| [illegible]ணன்கொடிவேர்ப்பட்டைச் சாறு | 1½ | 6 | 5 | 1 | 36 |

பற்பசோதனை : தென்னங்கள், பனங்கள், ஈச்சங்கள், இவைகளுள் ஏதாவது ஒன்றில் எள்ளளவு பற்பத்தைப் போட்டால் உடனே கள் சாறாய் மாறிவிடும் என்பர்.

அளவு : எஃகுப் பற்பம் அருந்துவதற்குக் காற்கடலையளவு உத்தமமென்றும், அரைக்கடலையளவு மத்திமமென்றும், முக்காற் கடலையளவு அதமமென்றும் முழுக்கடலையளவு அதமாதமம் என்றும் கொள்க.

நாளளவு : இப்பற்பத்தை உண்ண ஒன்பது நாள் உத்தமம் என்றும், பதினெட்டு நாள் மத்திமம் என்றும், இருபத்தேழுநாள் அதமம் என்றும், முப்பத்தாறு நாள் அதமாதமம் என்றும் அறிக.

பத்தியம் : புளிப்பும், புளிப்பை உடைய மாங்காய், மாம்பிஞ்சு முதலியனவும், பெண்போகமும் நீக்கபடவேண்டும். வெண்ணெய், நெய், பால் பாற்குழம்பு, பால்வடை, பாற்கண்டம், கற்கண்டு, சருக்கரை, கோதுமை மா, கடலை மா இவை ஆகும் பொருள்களாம்.

மற்றும் இது தாம்பிர பற்பத்தைப் போன்று, ஆண்மையையும் குணத்தையும் காண்பிக்கும். ஆதலினால் தாம்பிர பற்பத்திற்கு வான்முறைப்பத்தியம் எப்படியோ அப்படியே, இதற்கும் பார்த்துக்கொள்ள வேண்டும்.

| துணை மருந்து. | தீரும் நோய். |
|---|---|
| குளிர்ந்த நீர் .. | வாதம்: இதற்கு கூட்டுறவான அண்ட வாதம், தனுர் வாதம், பாரிச வாயு, நேத்திர வாயு. |

| | |
|---|---|
| வெண்ணெய் .. .. | பித்தம் : இதற்குக் கூட்டுறவான வாத பித்தம், பித்த வெப்பம், பித்தச் சந்நி, பித்தப் பாண்டு, பித்த விக்கல், பித்தானிலம், பித்த வரட்சி, பித்தச் சூலை, பித்த மகோதரம், பித்த நீர்க்கட்டு. |
| உள்ளிப்பூண்டுச்சாறு .. | கபம் : இதற்குக் கூட்டுறவான சேட்பவாத சூலை, சேட்பச் சுரம், சேட்பப் பாண்டு, சேட்பப்பல்லை. |
| பனங்கள், தென்னங்கள், பேரீச்சங்கள், கருப்பஞ்சாறு இவைகளுள் ஒன்று. | இலங்கணத்தில் அவபத்தியத்தினால் வந்த சந்நி என்ற பித்த சந்நி விட பாதச் சந்நி, குரோகதச் சந்நி, மாரகச் சந்நி, உன்மத்த சந்நி. |
| எள் ஊறின நீர் | குன்மம். |
| தேங்காய்ப்பால் .. .. | அதிவெட்பம் என்கிற மகா சுரம், அதனுடன் சேர்ந்த சுரானிலம், சுரபல்லை, சுர மாந்தியம், சுர மீசுரம், முதலிய சுரத்தொடர்ந்த வியாதிகள். |
| தேன்நீர்க்கலப்பு .. .. | நடுக்கல் நோயின் பிரிவான நடுக்குவாதம், நடுக்கு உன்மத்தம், நடுக்கானலம். |

மருந்து ஒன்றாயினும் அனுபானப் பொருள் நோயாளன் இருக்கும் நிலம், உடற்கூறு இவைகளை நூல்நெறியால் அறிந்து செய்ய வேண்டுவதேமுறைமை என்பதை,

"ஆயுள்வே தியராலே பண்ணு மாதி
அவுடதத்தை யெஞ்ஞான்று மனுபானிக்கு
மீயுயர்தந் திரந்தந்து வாக்ய முண்மை
விதரணைவாய் பாடிவைகள் விளங்கச் செய்து
பாயுமுவை யுழைகவர்த லெனப்பொய் யாமற்
பண்ணுவவெண் பிரயோகம் பண்ணப் பின்னர்
நோயுறுதா னமுநோயும் நெறியும் நாடி
நோக்கறித லெப்படியோ நுவலொண்ணுதே"

என்ற செய்யுளால் அறிக.

## பற்பம் (வேறு)

உருக்கு அரப்பொடியைக் காய்ச்சி, தூதுவேளைச் சாற்றில் தோய்த்துக் கழுவியெடுக்கச் சுத்தியாம். இங்ஙனம் சுத்தி செய்த உருக்கு அரப்பொடி 10 பங்கு, வீரம் வெள்ளைப் பாடாணம் வகைக்கு 1 பங்கு இவைகளைக் கல்வத்திலிட்டு, சங்கத் திராவகம் விட்டு அரைத்து முறைப்படி புடமிடப் பற்பமாம்.

இதனைச் சடதாரிப் பொடியுடன், நெய் அல்லது தேன் கூட்டி அளவுடன் கொடுக்க, குந்த மேலேறல், வயிற்றைப்பற்றிய நோய் அறுபது ஆகிய இவை நீங்கும் என்ப.

## (வேறு)

சுத்தி செய்த எஃகுப் பொடிக்கு, ஐந்து மடங்கு புளிப்புமாதுளம் பழச்சாறு விட்டு, ஒருநாள் முழுதும் வெயிலில் வைத்திருந்து, கழுவி எடுக்கவும். இங்ஙனம் மும்முறை பாவனை செய்யவும். பிறகு, தூளைக் கல்வத்திலிட்டு, வேண்டும் அளவு கறுப்புமணித் தக்காளிச்சாறு விட்டு, நான்கு சாமமரைத்து, வில்லை செய்துலர்த்தி சில்லிட்டுச் சீலை செய்து உலர்த்தி, இரண்டடிப் சதுரப் புடமிட்டு, ஆறியபின் எடுக்கப் பற்பமாம். முடியாவிடின், இது போலப் பின்னும் இருமுறை செய்ய முடியும்.

**அளவு** : 200 மி.கிராம் முதல் 400 மி. கிராம் வரை.

**துணை மருந்து:** : சர்க்கரை, நெய், தேன், சந்தன மணப்பாகு, பன்னீர் மணப்பாகு முதலியன.

சீரகத்தூள் 4 கிராம், தேன் 4 கிராம் ஆகிய இரண்டையும் கலந்து, அதில் பற்பத்தை வைத்து அருந்த சூலை, கைகால்முடக்கு முதலியன தீரும்.

கருஞ்சீரகத்தூள் 4 கிராம், தேன் 4 கிராம் ஆகிய இரண்டையும் கலந்து, அதில் பற்பத்தை வைத்து அருந்தக் கருமேகம், புள்ளி மேகம், மேகப்புண் முதலியன தீரும்.

## எஃகுச் செந்தூரம்.

ஒரு பலம் (35 கிராம்) சுத்தி செய்த எஃகுப்பொடிக்கு, கமுகம்பாளைச் சாறு (பாக்குமரம்), காந்தள் சமூலச்சாறு, ஆத்தியிலைச்சாறு, மாவிலைச்சாறு இவைகளைத் தனித்தனியாக முறைப்படி விட்டு அரைத்து, வில்லை தட்டி உலர்த்தி, சில்லிட்டுச் சீலை செய்து உலர்த்திப் புடமிட்டெடுக்கச் செந்தூரமாம்.

| துணை மருந்து. | தீரும் நோய். |
|---|---|
| வெண்ணெய் | விகடவாதம். |
| கள் | இருமல். |

| | | |
|---|---|---|
| நெய் | .. .. .. | உடும்பு வீக்கம். |
| பன்னீர் | .. .. | கயகுன்மம். |
| கருப்பஞ்சாறு | .. | ஆபத்துச் சந்நிதோடம். |
| தீவதாட்சிச் சாறு | .. | பித்த மயக்கம். |
| மிளகு | .. .. | கபாலச் சந்நி. |
| வெள்ளுள்ளி | .. .. | உருத்திர வாயு. |
| மூங்கிலின் இரசம் | .. | மரணவாதை நோய். |

இதை வாசிட்டத்தில்,

'' எகுவின்கவின் குணந்தனையே யினிதாயயில் வார்க்கே
மிகுவெண்ணெயை முதலாகிய வெகுபண்டித நலமே
குகுவென்பது நகுமென்பது குணமென்ப குணமோ,
மகுவின்படி யடலார்பெரி மணமென்பது குணமே.''

என்று கூறியிருத்தலால் உணரலாம்.

(வேறு)

பழைய உளி 10ஐ உலையிலிட்டுச் சிவக்கக காய்ச்சி, சமபாகம் வெள்ளாட்டு நீரும் ஆவின் நீரும் கலந்து அதில் துவைக்க உதிர்ந்து விழும். தேவையான அளவு உளித் துகள் சேரும் வரையில் காய்ச்சிக் காய்ச்சித் தோய்க்கவும்.

இப்பொடியைக் கரிசாலைச் சாறு விட்டு அரைத்து, வில்லை தட்டி உலர்த்தி, ஒரு சட்டியில் ஆலிலையைப்பரப்பி, அதன்மீது வில்லையை வைத்து, மேலும் மேற்படி இலையால் மூடி, மேலோடு கொண்டுமூடி, சீலை செய்து கஜபுடமிட்டெடுக்கவும். பிறகு ஓரிலைத் தாமரைச் சாற்றினால் ஒரு புடமும், குமரிச்சாற்றினால் ஒரு புடமும் முன்போலவே இட்டு எடுக்க, முருக்கம்பூ நிறத்துடன் கூடிய செந்தூரமாம்.

அளவு : 1 பணவெடை (488 மி. கிராம்.)

துணைமருந்தும் தீரும் நோயும்.—திரிபலைச் சூரணம், வெல்லம், தேன் கூட்டிக்கொடுக்கப் பருத்த உடல் இளைக்கும்; நெய்யில் கொடுக்க, சிறுத்த உடல் பருக்கும்.

மகிமை : நரை திரை மாறும்.

(வேறு)

1௰ பலம் (350 கிராம்) உருக்கைத் தகடாக அடித்து, கொல்ல னுலேயிலிட்டுக் காய்ச்சி எட்டியிலேச் சாற்றில் 10 முறை தோய்க்கத் தோய்க்க, உதிரி உதிரியாய்ச் சாறுவைத்த சட்டியில் தூள் விழும். இத்தூளில் ஒரு பலம் (35 கிராம்) எடுத்துக் கல்வத்திலிட்டு, மருதம் பட்டைச் சாறு விட்டு நான்கு சாமம் அரைத்து வில்லே செய்து உலர்த்திச்சில்லிட்டுச் சீலே செய்துலர்த்தி, கவச எடைக்கு இருபத்து நான்கு பங்கெடை வரட்டி கொண்டு புடமிடவும். புட மிட்டதை நாவற்பட்டைச் சாற்ருல் இரு சாமம் அரைத்து முன் போல மூன்று புடமிடச் செந்தூரமாம்.

அளவு : 200 முதல் 300 மி. கிராம் வரை.

துணை மருந்து : வெண்ணெய், நெய், தேன் கருப்பஞ்சாறு, வெள்ளேப் பூண்டுச்சாறு.

தீரும் நோய் : பாண்டு, காசம், குன்மம், சந்நி, கிருமி, வாயு, நீங்கும். நரம்புகளுக்கு முறுக்கேற்றும்; உற்சாகத்தையும் ஊக்கத் கத்தையும் உண்டுபண்ணும்.

திரிலோகச் செந்தூரம்.

சுத்தி செய்து அயம், காந்தம், அப்பிரகம் வகைக்குப் பலம் ஒன்று (35 கிராம்) கந்தகம் பலம் மூன்று (105 கிராம்), இரசம் பலம் ஒன்றரை (52.5 கிராம்) இவைகளேக் கல்வத்திலிட்டுப் பழச் சாற்ருல் அரைத்து, பூந்று கழஞ்சு மூன்று (15.3 கிராம்) கூட்டி யரைந்து, பிறகு பொற்றிலேக் கரிப்பான் சிறு செருப்படை, குமரி இவைகளின் சாற்ருல் வகைக்கு நாலு சாம (12 மணி) மாட்டி, வில்லே செய்து காயப்போட்டு, நூறு எருவில் புடம் போட்டு, இலிங்கம் அரைப்பலம் (17.5 கிராம்) கூட்டிச் குமரிச் சாற்ருல் நாலுசாம மாட்டி, வில்லே தட்டிக் காயவைத்து, முப்பது எருவில் புடம் போடச் செந்தூரமாகும். அதைச் சஞ்சீவி சூர ணத்தில், பண வெடை (488 மி. கிராம்) செந்தூரம் வைத்து நெய்யில் மத்தித்துக் கொள்ள மேகநீர், பாண்டு, பித்தம், பிர மேகம், வாயு, உட்சூடு, இருமல், நீங்கும்; தேகம் குளிரும்.

---

## கருவங்கம்.

# PLUMBUM

## (LEAD)

ஈயம், காரீயம், கருநாகம், சீசம் என்னும் பல வேறு பெயர் களினல் வழங்கப்படுகின்ற கருவங்கம் இருவகையாகக் கிடைக் கின்றது. எக்காரணத்திஞலும் சலனமுருத வங்கம், மலைகளி லுள்ள சில பாகங்களில் செண்டு செண்டாகக் காணப்படுகின்றது. சில பாகங்களில் குழிப்புள்ள இடங்களிலும், சில பாகங்களில் குறுக்கு நெடுக்காக ஒழுங்கின்றி ஓடுகின்ற இரேகைகளிலும் இஃது இருக்கக் காணலாம்.

அன்றியும், மலைகளிலிருந்து வரும் அருவிகளில் அணுவணுவாய் மணலுடனும் சிறு கற்களுடனும் கலப்புற்றுக் கிடைப்பது ஒரு வகை; செம்பு, இரும்பு, பாஷாணுதியுப்புக்களுடன் கலந்து கிடைப்பது மற்ருெரு வகை. இது முன்வகையினும் தாழ்ந்ததே யாயினும், இதைச் சுத்திசெய்து உபயோகிக்கலாம்.

காரீயம் பல தாவரப் பொருள்களிலும், சிறிய அளவில் இருக் கின்ற தென்பதைக் கீழ்ச் செய்யுள் உணர்த்தும்:

'' சிதைமுத்தி ருக்கஞ் செவிவெள்ளைச் சார்வேளை
பாதுகைவே ளிருப்பருத்தி முஸ்தையும்—கோதில்சுரை
சீந்தில் விழுதி சிறுபீளை வெள்ளறுகும்
ஏந்திழையீ ரீயமூ லி.''

உலோகச் சத்துக்கள், சிறிய அளவில் தாவரப் பொருள்களி லிருப்பதனுல், நம் முன்னேர் நோய் ஆரம்பகாலத்தில் தாவரப் பொருள்களைக் கொண்டு சிகிச்சை செய்து, அச்சிகிச்சைக்கு நோய் வயப்படாவிடில், பிறகு உலோகத்தை நேராக உபயோகித்துக் குணம் கண்டனர். இதனை,

'' வேர்பாரு தழைபாரு மிஞ்சினக்கால்,
மெல்லமெல்லப் பற்பச்செந் தூரம்பாரே.''

என்பதால் அறிக.

இது நிற்க, கருவங்கத்திற்குப் பகைச் சரக்குகள்: அப்பிரகம், அண்டம். அயம், கல்லுப்பு, கந்தி, காந்தம், கிளிஞ்சல், கௌரி நண்டு, நந்தை, நிமிளை, வெடியுப்பு, கல்நார், சாத்திரபேதி என்றும்; நட்புச் சரக்குகள்; சூதம், நாகசெம்பு, பூநாகம், மயூரச் செம்பு, வெள்ளி, வெள்வங்கம் என்றும் கூறுவர்.

கைப்புச் சுவையை உடைய கருவங்கத்திற்கு, வீரியம் வெப்பம், விபாகம் கார்ப்புமாகும். இது வெப்பமுண்டாக்கல், பசித்தீயைத் தூண்டுதல், கிருமி நாசஞ்செய்தல், துவர்த்தல், சிறு நீரைப் பெருக்குதல் முதலிய செய்கைகளை உடையது. கருவங்கம் நீர்க்கூற்றின்பால் சேர்ந்தது. இதன் பொதுக்குணத்தைக் கீழ்க் காணும் செய்யுள்களால் உணர்க.

"பன்மரநஞ் சக்கிநோய் பாகர்த் தபிவிரணங்
குன்மங்கால் சூலங் குதவிரணஞ்—சன்ம
பெருநாக மேகப் பிணிசுரமி வற்றைக்
கருநாக மேநீக்குங் காண்."

(பொ-ரை) ஆற்றலரி முதலிய தாவரங்களினால் உண்டாகும் விடம், கண்நோய்கள், கர்த்தபி நோய், குன்மம், வாதநோய், சூலை, பகந்தர விரணம், யானைக்குட்டம் (கஜசரும குட்டம்) மேகப்பிணி, சுரம் இவை களைக் கருநாகம் நீக்குமென்க.

"ஆகத்தி லுண்டான வத்திசுரம் பித்தசுரம்
போகப் பசிமூளப் பூதலத்தில்—வாகைபெருஞ்
சங்கத்தை நேராகச்சாற்றுமுறை பண்டிதர்கள்
வங்கத்தை நீருக்கு வார்."

(பொ-ரை) கருவங்கம் எலும்பைப் பற்றிய சுரம், பித்த சுரம் இவற்றை நீக்கி அதிகப்பசியை உண்டுபண்ணும்.

"சொன்னதோர் காரீயக் குணத்தைக் கேளாய்
சுத்தபிர மேகத்தைப் போக்கு விக்கும்

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

சொன்னதோர் பெருவயிறு உப்பு சங்கள்
சூரான பாண்டோடு விரணம் போக்கும்
நின்னதோர் நேத்திரத்தின் வியாதி யெல்லாம்
நீக்கிவிடும்."

(பொ-ரை) பிரமேகம், பெருவயிறு, உப்புசம், பாண்டு, விரணம், நேத்திரப்பிணி முதலியவற்றைக் காரீயம் நீக்கும்.

இது நிற்க, மேகக் கிரந்திக்குச் சிறப்பு மருந்து இரசமென்றாலும் இரசம் உபயோகிக்குமுன் வங்கத்தை உபயோகிக்கவேண்டுமென் பதைக் கீழ்க்காணும் அடிகளால் உய்த்துணர்க :

"காரீயத்தினால் வெல்ல வரிய மேகக் கிரந்தியை ரசத்தினால்
வெல்லுங் காரீயத்தினை லோக நாயகன் காட்ட லெனவே."

மேலை நாடுகளில் சில புற்று நோய் ஆராய்ச்சியாளர்கள் வங் கத்தை ஊசிமூலம் உடலிற் செலுத்தி புற்று நோயில் குணங் கண்டதாக அறியக் கிடக்கின்றது.

நிற்க, "வங்கம் கெட்டால் பங்கம்" என்னும் ஒரு பழமொழி யும் இருத்தலின், வங்கத்தை நன்முறையில் சுத்தி செய்து மருந்தாக்கி உபயோகிக்க வேண்டும்; தவறின் தீங்கை விளைவிக்கும் என அறிக.

## வங்கத்தின் சுத்தி முறைகள்.

ஒரு பலம் (35கிராம்) வங்கப் பொடிக்கு, ஆறு பலம் (210 கிராம்) ஐவேலிச் சமூலச்சாறு விட்டு ஒரு நாள் முழுவதும் வெயிலில் வைத்து, மறுநாளும் அதுபோலவே செய்து, இவ்வாறு பத்து நாள் வரைக்கும் செய்து, இரண்டு நாள்சாறு விடாது உலர்த்தி, மறு படியும் முன்போலவே ஒருமுறை செய்து, பிறகு ஒரு பானைக்குள் மேற்படி வங்கத்தை இட்டு, அதில் மேற்படி சாறு ஒரு மரக்கால் (5.3 லிட்) விட்டு, வாய்பொருத்த முள்ள பாண்டத்தால் மூடிச் சீலை செய்து, பூமியில் குழி தோண்டி அதற்குள்ளிட்டு, சாம்பல் எருவால் மூடி, இருபது நாள் கழிந்த பிறகு எடுக்க பூமியினின்று எழும் ஆவியால் வங்கம் ஒருவிதச் சிறந்த குணத்தை யடைந்து சுத்தி யாகும். இவ்வாறு சுத்தி செய்த வங்கம் பற்பம், செந்தூரம் மாத்திரை முதலியன செய்தற்கும், வாத வேதைக்கும் ஆகும். என்பர். இச்சுத்தி வெள்வங்கத்திற் குரியதா யிருப்பினும், கருவங்கத்திற்கும் நன்ருகப் பொருந்தும். இதனை, '' காரியத்தினை மாரச சுத்தி போல் நீறப்படியே காணிர்'' என்பதால் அறிக.

(வேறு)

ஒரு பாண்டத்தில் வெள்ளாட்டு நீர் விட்டு, அதில் பிரண்டை வேர்கல்கத்தை இட்டுக் கலந்து, நல்லெண்ணெயைச் சேர்த்து, வங்கத்தை உருக்கிச் சாய்த்து, ஆறவிட்டுக் கழுவி எடுக்கச் சுத்தி யாம்.

(வேறு)

நொச்சிச் சாற்றில் மஞ்சள் பொடியைக் கலந்து வைத்துக் கொண்டு, அதில் வங்கத்தை உருக்கிச் சாய்க்க இப்படி இருமுறை செய்யச் சுத்தியாம். வங்கப் பொடியை நொச்சிச் சாற்றிலிட்டு வெயிலில் வைத்தாலும் சுத்தியாம்.

(வேறு)

''இந்துருணிப்பீ இழுக்கு மீயநீர்'' என்ற அடியால் பெருச் சாளி மலத்திஞல், ஈயத்தின் நீரை வாங்கிவிடலாமென்பது அறியக் கிடக்கின்றது. விவரம் வல்லோர்வாய்க் கேட்டறிக.

## வங்க பற்பம்.

ஒரு பலம் (35 கிராம்) சுத்தி செய்த வங்கப் பொடிக்கு, கீழ்ப் பட்டியில் குறிப்பிட்ட சாறுகளைக் கொண்டு முறைப்படி அரைத்து உலர்த்திப் புடமிட்டெடுக்க, நீர் குடிக்க வந்த வெண்மேகத் தையொத்த நிறத்தை அடையும்.

| சாற்றின் பெயர் | அளவு பலம் | அறைப்பு நாள் | வில்லை உலர்த்தும் நாள் | கவசம் உலர்த்தும் நாள் | புடம் வரட்டி |
|---|---|---|---|---|---|
| பசறையிலை சாறு | 6 | 6 | 5 | 1 | 45 |
| ஆகாசத்தாமரை சாறு | 5 | 5 | 4 | 1 | 36 |
| வன்னியிலைச் சாறு | 4 | 4 | 3 | 1 | 26 |
| பசு மஞ்சள் சாறு | 3 | 3 | 2 | 1 | 18 |
| செப்புநெருஞ்சிச் சமூலச் சாறு | 2 | 1 | 1 | 1 | 16 |
| கருணையிலைச் சாறு | 1 | 1 | 1 | 1 | 9 |

இவ்விதம் முடித்த வங்க பற்பத்தின் அளவு, துவரையின் காற் கூறு உத்தமம் என்றும், அரைக்கூறு மத்திமம் என்றும், முக்காற் கூறு அதமம் என்றும், முழுக்கூறு அதமாதமம் என்றும் கூறப்பட்டுள்ளன.

துணைமருந்தும் தீரும் நோய்களும்.

"*சிரவலியாற் பாறு சிகாவளமா வென்றார்
சிரவலியாற் பாறுளைகா றீவச்—சிரவலியாற்
கானமழை மானமுது கன்னியறல் வன்னியறல்
கானமழை பானமிவை கள்."

(பதவுரை) சிரவல்—கவுதாரி, இ—ஈ, ஆல்—துரிஞ்சி, பாறு—பருந்து, சிகாவளம்—மயில், மா—வண்டு (இவைகள் பறக்கும் பாதுண்டாம் ஒலி பதைப்பு, துடிப்புகளை), என்று ஆர்—(முறையே எப்போதும் பொருந்திய, சிரவலி—தலைநோய், ஆல்—நடுக்குவாதம் த் று—விடவாயு, உளை—சிணுக்கு வாதம், கால்—படர் வாதம், —திணறுவாதம் (என்னும்) இவைகட்கு முறையே, வச்சிரவல்லியால்—பிரண்டைச் சாற்றிலும், கானமழை—துளசிச் சாற்றிலும், மான் அமுது—முலைப்பாலிலும், கன்னி அறல்—கற்றாழைச் சோற்றுச் சாற்றிலும், வன்னி அறல்—வெந்நீரிலும், கானமழை—தேனிலும் கொடுக்க, இவைகள்—இப்பொருள்கள், பானம்—அநுபானங்களாகும்.

(விளக்கவுரை) கவுதாரிப்பட்சி பறப்பதைப் போலச் சத்தமும், பதைப்பும் துடிப்பும் தலையில் உண்டாய், வலியும் இரைச்சலும் உண்டாகும் சிணுக்கு வாதத்திற்கும், அதைச் சேர்ந்த பாண்டுவுக்கும், முறைநளீர்க் காங்கை வெள்ளோக்காளம் போன்ற பிணிகளுக்கும் அநுபாணம் பிரண்டைச்சாறு.

சுவலிறைச்சி பித்தம் சிலேத்மமந்தம் தாதம்
கதலையற வேனட்டியுடல் காக்கும்; புவனமதில்
மெய்க்கும் பலஞ்செய்யும்;—வீரியமுண்டாகும்;
சிக்கியமலங்கழிக்கும் செப்பு.

"* கவுதாரியைச் சிவலென்று ஆண்டிருப்ப தேரர் கிரவலென்று ஆண்டிருக்கின்றார் இத்து ஐக் காலத்து வழக்கு போலும்.

எப்படிப் பறந்து அசையுமோ, அப்படி ஒருவிதத் சத்தமும் அசைவும், திடுக்கிடலும் கன்னத்தில் உண்டாகி உடம்பை நடுங்கச்செய்கின்ற நடுக்குவாதம், அதைச் சேர்ந்த திமிர்வாதம், பசி மந்தத்திஞல் உண்டாம் வெப்பம் மயிர்க்கூச்சத்துடன் கூடிய நளிர் இவைகளுக்குக் துளசிச்சாறு.

துருஞ்சில் பறப்பதுபோல் உடலெங்கும் துன்பத்தைப் பெருக்குவதான விடவாயு, மார்ஜால வாயு, பாரிசவாயு, ஆகிய இவைகட்கு அனுபானம் முலைப்பால்.

பருந்து எப்படி வட்டமிட்டு அசைந்து பறக்குமோ, அப்படி உச்சந்தலையில் சத்தமும் சுழற்சியும் உண்டாகி மயிர்க்கால்களிலெல்லாம் வியர்வை உண்டாகி கடுக்கப்பட்ட சிணுக்குவாதம், அதைச் சேர்ந்த காக்கை வலி, பெரும்பாட்டு மூர்ச்சை, மரணவலி, பாரிச வாதக் கிராணி, வாதக் கிராணி மூர்ச்சை போன்ற பிணிகளுக்குக் காற்ருழைச் சோற்றினது சாறு அனுபானமாகும்.

அரசமயில் எப்படி இறகு விரித்து ஆடியொழிந்தவுடன் பறக்குமோ, அப்படி நெற்றியில் கிறுகிறுப்பு உண்டாகி, அசீரணம், குன்மம், புளித்தேப்பம். வாந்தி, விக்கல், சரீரத் தினவு, முதலியவற்றை உண்டுபண்ணும் படர்வாதம், அதைச் சேர்ந்த பயித்தியகாசம், பிடிப்பு, பல்லை, மகோதரம், நீரிழிவு, நீரருகல் போன்ற பிணிகளுக்கு வெந்நீர் அனுபானமாகும்.

வண்டு ரீங்காரம் செய்து பறப்பது போலத் தலையின் பின்புறத்தில் சத்தத்தையும் வலியையும், உடல் பாரிப்பையும் உண்டு பண்ணுகின்ற திணறுவாதத்திற்கும், அதைச் சேர்ந்து வரும் (கொஞ்ச நேரம் குளிர் இருந்து பின்பு காய்கின்ற) பல்வகைச் சுரங்கள், நேத்திரவாயு, துர்மாமிசப்படலம் போன்ற பிணிகளுக்குத் தேன் அனுபானமாகும்.

மற்றும் வாதப் பிணிக்குக் கள்ளிலும், பித்தப் பிணிக்கு குளிர்ந்த நீரிலும், கபப் பிணிகளுக்குக் கருப்பஞ் சாற்றிலும், அனுபானித்துக் கொடுக்கவேண்டும். இதனைக் கீழ்க்காணும் செய்யுளால் அறிக :

'' கறுத்த வங்கத் தடலையை யுணுமுறை
சிவத்த கங்கைச் சடையவ ரெனுமொரு
கருத்த நந்திக் கருளிய மனுநெறி—இதுபாராய்
கருத்த றிந்தப் படியள வைகளொரு
பருப்பி னுஞ்சிற் றளவைக ளவைகொடு
கணித்தி டும்பத் தியவகை தொகைவிரி—யனுபானம்
மறுத்தி டுஞ்சொற் பிழைவரு மது நினை
யகத்தி யன்பொத் தகநெறி வகைபல
மலைத்தி டும்பெற் றிமையல வறிவொடு—மொழிவாயே
வரித்தி டுஞ்சித் தர்கள்பல முறைவழி
வெளுத்தி டும்பற் பமுமுள வதுவிது

வழுக்கி னுங்கெட் டுடிமுள மிழுதைய—ரறியாரே
பறக்கு நண்பற் பலகுரு விகளென
வசைக்கு நொந்தப் படிதலை வலிபடு
பனிப்பின் வெப்பிற் பிணிமிகு மதுகெட—வறிநீயே
பசுத்த கஞ்சத் தறல்மது சுடுபுனல்
கருப்பி னமுமப் படிபிழி கனிமழை
பயத்தொ டும்பற் பலவுள வகையது—கொளலாமே
அறுக்கு முந்தைப் பிணிகளை யடியொடும்
எடுத்த தந்தத் தடிமுன மிறுகிடு
மசட்டை யுந்திப் பெருமையை நிறுவிடு*—நிசமாயே
அருக்க விம்பத் தொளிதரு மதியென
முகத்தை யுஞ்சக் கதிர்விடு மதரதி
அணைக்கு மின்பப் பருவமு மிகவரு—மினிமேலே,''

(வேறு)

''கற்கவசம் புக்கமலங் காயமுறு காயமெனிற்
கற்கவசம் புக்கமலங் காரீயங்—கற்கவச
மாரிசியு மேல்வலையு மாலுமறுங் காமனுக்கு
மாரிசியு மேல்வலையு மாய்.''

(பரை) காயம்—சரீரத்திற்கு, உறு—உற்ற, காயம்—காயங்கள் (நீங்கி), கற்கு—மலைக்கு, அவ் வசம்—(நிகரான) அத்தன்மை, புக்கு—அடைந்து, அமலம்—பரிசுத்தம், எனில்—ஆக வேண்டுமானால், கற்கவசம் புகமலம்—கடைச்சரக்காகிய வசம்புக் குடிநீரில், காரீயம்—காரீய பற்பத்தைக் கொள்ள, கல்கவசம்—(தேகத்துக்கு) இது வச்சிர கவசமாகும்; மாரிசியும்—மிளகையும், மேல்—மேற்கூறியபடியே (குடிநீர் செய்து அனுபானமாக உபயோகிக்க), வலையும்—வல்லைக் கட்டியும், மாலும்—பித்த சோகையும், அறும்—நீங்கும்; காமனுக்கு—திப்பிலிக் குடிநீரில், மார் இசியும்—இருதய சம்பந்தமான ரோகங்களும், மேல்வலையும்—சரீரத்தில் கவிந்திருப்பதான பித்தப் பாண்டும், மாய்—மாய்ந்து போம்.

இதனைக் கீழ்க்காணும் மேற்கோட் செய்யுள்களும் வலியுறுத்தும்:—

''நோயப்பா முதலில் வகை மூன்றப் பாலே
நூறுநூ றுயிரமா மதிலே தோற்றம்;
பேயப்பா பிடித்ததென வேறு வேறு
பிணிக்கணம்வே றனுபான மருந்தொன் றேனும்
வாயப்பா குணமொன்றே யதிலே மாயும்
வழிவழிக்கே குணித்தமுறை வருவ தாகும்
நீயப்பா கற்கவகை மூன்றுங் கற்று
நீறுமுதல் பிணிகளையு மறிகு வாயே.''

(போகர் ஆயிரம்.)

* பாடபேதம்; ''மகத்தை இந்தப் புவியுறவலிதரும்

''நோய்வகை மூன்று மறந்து வந்து
நோக்கு மவிடத் மனுபானந்
தாய்வகை யென்னப் பிரயோகஞ் செய்யத்
தப்பாது கற்கமென் றுடாய்பாம்பே.''

(பாம்பாட்டிச் சித்தர் விருத்தக் குருந்துறை.)

காரீயப் பற்பத்தை உண்ணும் நாளளவும் பத்தியமும்..

இதனை ஒரு மாதகாலம் அருந்தி, தினை, வரகு, அபினி, கொள், புளி, அகத்தி, பூசனி, பெண் போகம் இவற்றை நீக்கிப் பத்தியமாயிருக்கப் பிணி நீங்குமென்ப.
இதனை,

''அனுபானித் தவிழ்த மிவ்வா றயிலுமுன் னினைத்த பத்தியந்
தினைவர கபினி கொள்ளு சிந்தமச் சங்கூழ் பாண்டம்
வனிதைய ராகா; ஆகில் வாட்டுமிவ் வவிழ்தந் தானே;
வினையரை யரைம திக்குள் வீயுமற் றதும்பின் னுலே.''

என்ற செய்யுளால் உணர்க.

கருவங்க பற்பம் (வேறு).

தேட்கொடுக்கிலைச் சாற்றைக் கருவங்கத்திற்குச் சுருக்குக் கொடுத்து வெட்டையாக்கிப் பிறகு மேற்படி இரசத்தில் அரைத்து, வில்லை செய்து உலர்த்தி, சில்லிட்டுச் சீலை செய்து, புடமிட்டெடுக்கப் பற்பமாம். இதனை நீரில் அனுபானித்துக் கொடுக்க, க்ஷயம் நீங்குமென்ப. இதனைக் கீழ்க் காணும் அடிகளால் உணர்க :

''தேட்கொ டுக்கிற் சீருள நீறுசெய்
தாட்க ருத்தகா சமறலி லறவீட்கும்.''

(வேறு)

''காரீயம் பதுமநாப னலர்மழையாற் பற்ப மாகும்''

(பொ—ரை) கருவங்கத்தைத் துளசிச் சாற்றால் அரைத்துப் புடமிட்டெடுக்கப் பற்பமாம்.

(வேறு)

இலைக்கள்ளிச் சாற்றைக் கருவங்கத்தில் விட்டு மூன்று நாளரைத்து வில்லை செய்துலர்த்திப் புடமிட்டெடுக்கப் பற்பமாம். இப்பற்பத்தால் காசம் நீங்கி, ஆகம் தங்கத்தைப் போலாம் என்ப.

## வங்கச் செந்தூரம்.

ஒரு பலம் (35 கிராம்) சுத்தி செய்த வங்கப் பொடியில், நாகமல்லியிலைச்சாறு, வாழைக் கிழங்கின்சாறு இரண்டையும் தனித்தனியாக நான்கு பலம் (140 கிராம்) வீதம் விட்டு, நான்கு நாளரைத்து, வில்லை செய்து மூன்று நாள் உலர்த்திக் கவசித்து, ஒரு நாள் உலர்த்தி முப்பது வரட்டியில் புடமிட்டெடுக்கச் செந்தூரமாம்.

| துணைமருந்து. | தீரும் நோய். |
|---|---|
| வெல்லம் .. .. | பித்த சன்னி. |
| பால் .. .. .. | கழலை (புரை குழல்) |
| ஆலம்பால்.. .. .. | சல வியாதி. |
| கருப்பஞ்சாறு .. .. | கழுத்தில் வருகிற விரணப்புற்று (கண்டமாலை). |
| சந்தனக் குழம்பு .. .. | சத்தி குன்மம். |
| சர்க்கரை .. .. | நேத்திரவாயுக் கபம். |
| வன்னியிலைச் சாறு .. | தலைக்காங்கை, பித்த வறட்சி. |
| கள் .. .. .. | சேத்மவிக்கல். |
| சிறுநீர் .. .. .. | காசரோகம். |
| தேன் .. .. .. | தேமல். |

(வேறு)

ஒரு பலம் (35 கிராம்) காரீயத்தைச் சட்டியிலிட்டு உருக்கி, உருக்கு முகத்தில் எட்டுப்பலம் (280 கிராம்) பச்சை மஞ்சள் தூளைச் சிறிது சிறிதாகக் கிராசம் கொடுத்துக்கொண்டு, நாயுருவிச் சமூலத்தால் பதினைந்து நாழிகை வறுத்துப் பிறகு காற்பலம் (8.75 கிராம்) சவுக்காரம் இட்டு வறுத்து, பின்பு ஒரு கழஞ்சு (5.1 கிராம்) வெடியுப்புச் சேர்த்து வறுத்து, முடிவில் ஒரு கழஞ்சு (5.1 கிராம்) அரிதாரம் சேர்த்து வறுத்தெடுக்கச் செந்தூரமாம்.

## கருவங்கச் செந்தூரத் தொழில்.

கருவங்கச் செந்தூரத்தைக் கொடுக்க, உள்ளே அடங்கியுள்ள பிணிகள் (சருமத்தில்) மேலெழும்பி ஆறிவிடும். மேகப் பிணி தலைகாட்டாதோடும். இதைக் கீழ்ச் செய்யுள் உணர்த்தும் :

"உள்ளி ருந்தவினை மேலெ ழும்பியொரு
கோடி கோடிபிணி யாகிடும்

எள்ள தளவுமி நூற் கன்ம மேதுமிலை
மேலு மேலுமொளி யாவதாய்க்
கள்ள மில்லைகரு வங்க முண்டவர்கள்
கற்ப தேகசிவ யோகிகாண்
விள்ள லாமோபெரி யோர்க ளிட்டவிதி
மேக மென்றவையொ ளிக்குமே.''

### விரணத்திற்கு வங்கப் புகை.

காரீயம், இரசம், துருசு, தாளகம், கருங்குங்குலியம், கடுகு, எருக்கு இவைகளைப் பச்சைப் புகையிலைச் சாற்றால் அரைத்து, புளியம் பட்டைத் தணலில் இட்டு, மூன்று நாள், கிரந்தியால் உண்டான விரணத்து (வெடிசூலை)க்குப் புகை பிடிக்க நீங்கும் என்ப.

### விரணத்திற்கு வங்கச் சீலை.

ஈயச் செந்தூரம் ஒரு சேர் (280 கிராம்), நல்லெண்ணெய் இரண்டு சேர் (560 கிராம்) சேர்த்து இருப்புச் சட்டியில் இட்டுக் காய்ச்சி, இருப்புக் கரண்டி கொண்டு துழாவிப் பக்குவத்தி லெடுத்து, சீலையில் தடவி விரணத்திற்குப் போட்டுவரின் அது தீரும்.

### விரணத்திற்கு வங்கக் களிம்பு.

வங்கச் செந்தூரம், மிருதார்சிங்கி ஆகிய இரண்டும் வகைக்கு பலம் ஐந்து (175 கிராம்) துருசு பலம் இரண்டரை (87.5 கிராம்) இவைகளைக் கல்வத்திட்டு நுண்பொடி செய்து, ஒரு வீசை (1,400 கிராம்) வெண்ணெய் சேர்ந்தரைத்து விரணங் கட்குத் தடவிவரின் குணமாகும்.

### வங்க விரணக் களிம்பு.

தேங்காய் எண்ணெய் 2 லிட்டரை அடுப்பேற்றிக் கொதிக்க வைத்து அதில் தேன், மெழுகு 800 கிராமை சிறு துண்டுகளாக்கிச் சேர்த்து உருகிக் கலந்ததும் கீழிறக்கி, வங்கச் செந்தூரம் 100 கிராம், இரச செந்தூரம், 50 கிராம், இரச கர்ப்பூரம், 50 கிராம், மிருதார்சிங்கி 100 கிராம் இவைகளைத் தனித்தனி யாய்ப் பொடித்துக் கலந்த தூளை எண்ணெயில் தூவி ஆறிக் கெட்டியாகும் வரை துழாவி எடுக்கவும்.

இதனை விரணங்களுக்கு வெளிப் பிரயோகமாகப் பயன் படுத்தலாம்.

### காரீயக் கோல்.

காரீயக் கோலினால் அஞ்சனத்தை எடுத்துக் கண்ணில் இட்ட, கண் வியாதிகள் நில்லாதோடும் என்பதை.

"ஊரியக் கோல்கள் தம்மிற்
கருதுமஞ் சனத்தை வாங்கி
நேரதாய் விழியில் தீட்ட
நிலை நில்லா ரோக மாகும்."

என்ற அடிகளால் அறிக.

### வங்க நஞ்சுக் குறி குணங்களும் தீர்வும்.

வங்கம் நாட்பட்டு விடமித்த குறி குணங்கள்.—பல் ஈறு கறுத்தல் அல்லது நீல வர்ண மாதல், வயிற்று நோய், கொப்பூழ் வலி, மல பந்தம், உப்புசம், கைகால் தளர்ச்சி, பாரிச வாயு, காமாலை, இளைப்பு, ஈளை முதலியன உண்டாதலும் தேகத்தின் மேல் ஒருவிதச் சொறி உண்டாதலுமாம்.

### முறிவு.

கறுப்புப் புல்லாஞ்சி இலையை இடித்துப் பிழிந்த சாற்றை, வேளைக்குக் காலாழாக்காக (42 மி.லி.) காலை மாலை இரண்டு வேளையும் நஞ்சு மாறும் வரைக்கும் குடிக்கவேண்டும். கருங் கோழி மாமிசத்தைச் சமைத்துச் சாப்பிடவேண்டும். காட்டுப் புளியரணைவேர்க் கல்கம் சுண்டைக்காயளவு நஞ்சு நீங்கும் வரை கொள்ள வேண்டும்.

## காந்தம்.

## MAGNETIC OXIDE OF IRON

காந்தம் என்பது சிவலோகச் சேவகன், தரணிக்கு நாதம், சூத அங்குசம், நவலோகத் துரட்டி, காயசித்திக்குப் பாத்திரவான், முருகன் புராணம் என்ற வேறுபெயர்களினாலும் வழங்கப்படுகின்றது. இஃது ஐவகைப்படும். அவை : 1. பிராமுகம், 2. சும்பகம், 3. கர்ஷகம், 4. திராவகம், 5. ரோமகம் என்பன. இவற்றை முறையே, 1. கற்காந்தம், 2. ஊசிக்காந்தம், 3. பச்சைக்காந்தம், 4. அரக்குக் காந்தம், 5. மயிர்க்காந்தம் என்றும் கூறுவர். இவற்றுள் பிராமுகம், லோகத்தைப் பிரமிக்கப் பண்ணும் என்றும்; சும்பகம், லோகத்தை இழுத்துக்கொள்ளும் என்றும்; கர்ஷகம், *லோகத்தைத் தூர ஓட்டிவிடும் என்றும்; திராவகம், லோகத்தைத் தண்ணீராக்கும் என்றும்; ரோமகம் லோகத்தில் மயிர் போலத் தொத்துவிக்கும் என்றும் கூறப்பட்டுள்ளன. லோகத்தை மிடுக்காய் இழுக்கின்ற இடத்திற்கு "முகம்" என்பது பெயர். இதற்கு ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து முகங்களும் அதற்கு மேற்பட்ட முகங்களும் இருப்பதுண்டு. ஐந்து முகங்களுக்கு மேற்பட்ட சர்வ முகங்களுள்ள காந்தமே சிறந்தது. மற்றும், பிராமுகத்தையும், சும்பகத்தையும் நோய் தீர்க்கவும்; கர்ஷகத்தையும், திராவகத்தையும் இரசாயனத்திற்கும் (உடல் தேற்றவும்); ரோமகத்தை இரசத்தை கட்டுவதற்கும் உபயோகிக்கவேண்டும் என்ப.

*கர்ஷம், சற்றுத் தூரத்திலுள்ள லோகத்தை தன்னிடம் இழுக்கும் சக்தியுள்ள காந்தம் என்று "இரச ரத்ன சமுச்சயம்" என்னும் வடநூல்கூறுகின்றது. போகர் காந்தத்தின் பரிவுகளை வடநூலிருந்து தம் நூலில்கையாண்டிருப்பதாய்த் தெரிகிறது. ஏனெனில் மற்றைய சித்தர் நூல்களில இதுகாணப்படவில்லை

காந்தத்திற்கு, அயத்திற்கு இருக்கும் குணங்களே உண்டு என்று பல நூல்கள் கூறினும், அயத்தினுங் காந்தம் மேன்மை உடையது என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதைத் தேரர் கீழ்ச் செய்யுள் மூலமாய் விளக்கிக் காட்டியிருக்கின்றார்.

''இரும்பினுங் காந்தம் மேன்மை
 என்பதவ் விரும்பைக் கூட
விரும்பியுள் ளடக்கிக் கொள்ளும்
 மேன்மையி னுலல் லாது
பெரும்பிணி யினங்கட் கெல்லாம்
 பெரும்புலி யெனவு ரக்குந்
திரும்பவு மவைகட் கெல்லாந்
 திறம்பெறு நண்பு மாமே.''

பொதுக் குணம்.

''காந்தத்தாற் சோபைகுன்மங் காமிலமே கம்பாண்டு
சேர்ந்ததிரி தோடவெட்டை சீதங்கால்—ஒய்ந்தபசி
பேருதரங் கண்ணோய் பிரமியநீ ராமையும்போம்
ஓரினிறை யாயுளுறும் உன்.''

(பொ—ரை) காந்தக்கல் வீக்கம், குன்மம், காமாலை, மேகம், பாண்டு, முத்தோடம், வெள்ளை வீழல், சீதளம், வாதநோய், மந்தம், மகோதரம், விழிநோய், பிரமியம், நீராமைக்கட்டி முதலியன நீங்கும். பூரண ஆயுளும் உண்டாம்.

காந்தத்தால் செய்த பாத்திரத்தில் பால் விட்டுக் காய்ச்சிக் குடித்து வந்தால் இரத்த விருத்தி உண்டாகும்; துர்ப்பலம் நீங்கும்; தேகம் மேனிதரும். காந்தப் பாத்திரத்தில் பால் விட்டுக் காய்ச்சினுல், பொங்கி உள்ளேயே நிற்கும். பால் வெளியில் வராது. இஃது ஒரு விசேட குணம்.

சுத்தி.

ஒரு பலம் (35 கிராம்) காந்தப் பொடிக்கு, ஆறு பலம் (210 கிராம்) பொன்னுவாரை வேர்ப்பட்டைச் சாறு விட்டுக் காலை முதல் மாலை வரை வெயிலில் வைக்கவேண்டும். இவ்விதம் பத்து நாள் செய்து, இரண்டு நாள் சாறு விடாமல் உலர்த்திப் பின்னும் இதுபோல இருமுறை செய்து, கழுவி எடுக்கச் சுத்தியாம். இவ்விதம் சுத்திசெய்த காந்தத்தினுல் செய்யப்பட்ட மருந்துகள் உயிரை இரட்சித்து வாத கணப் பிணிகளைப் கொல்லும் என்ப.

(வேறு)

''முன்னரக் காந்த சுத்தி
முறையறை கின்றேன் கொன்றைப்
பன்னநீர் தொடிக்கெண் கூறு
பாய்ச்சிநித் தியமொன் பானுள்
உன்னவா தபத்தின் மீட்டும்
ஒன்பது பிருந்தைச் சாற்றில்
பின்னரப் படிவல் லாரை
பேசுதா ரகைநா ளாமே.''

(பொ-ரை) ஒரு பலம் (35 கிராம்) காந்தத்தை ஒரு மண் சட்டியிலிட்டு, கொன்றை இலைச்சாறு எட்டுப் பலம் (280 கிராம்) விட்டு, வெயிலில் வைக்கவும். இவ்வாறே நாள் ஒன்றுக்கு எட்டெட்டுப் பலம் (280 கிராம்) வீதம் ஒன்பது நாள் விட்டு வெயிலில் வைத்துப் பின்பு துளசிச்சாறு ஒன்பது நாளும், வல்லாரைச் சாறு ஒன்பது நாளுமாய் இருப்பத்தேழு நாள் ஆனபின் தூய்மை செய்து வைத்துக்கொள்ளவேண்டும்.

(வேறு)

காந்தத்தை பொடித்து முடிகட்டி, காடியிலும் கொள்ளுக் குடி நீரிலும் முறையே அவித்து எடுத்துக் கழுவி, உலர்த்திக் கொள்ளச் சுத்தியாம்.

(வேறு)

எலுமிச்சம்பழச்சாறு, புளித்த காடி, புளித்த மோர் இவை களில் முறையே மும்மூன்று நாள் காந்தத்தை ஊறவைத்து வெயிலில் வைத்துக் கழுவி எடுக்கச் சுத்தியாம்.

(வேறு)

காந்தத்தைக் கொல்லன் உலையிலிட்டுக் காய்ச்சி 7 அல்லது 21 முறை கொள்ளுக் குடிநீரில் தோய்த்துக் கழுவி எடுக்கச் சுத்தியாம்.

பற்பம்.

ஒரு பலம் (35 கிராம்) சுத்தி செய்த காந்தப்பொடியைக் கீழுள்ள பட்டியில் குறித்த முறைப்படி அரைத்து, வில்லை தட்டி உலர்த்திப் புடமிட்டெடுக்கவும், ஒவ்வொரு நாளும் புதிய சான்றையே உபயோகித்தல் வேண்டும். வில்லையை வெயிலில் வைப்பதுபோல பனியிலும் வைத்து எடுக்கவேண்டும்.

| சாற்றின் பெயர். | அளவு பலம். | அரைப்பு நாள் | வில்லை உலர்ந்தும் நாள். | கவசம் உலர்த்தும் நாள். | புடம் வரட்டி. |
|---|---|---|---|---|---|
| கடப்பம்வேர்ப்பட்டைச்சாறு | 5 | 20 | 19 | 1 | 80 |
| தும்பை வேர்ப்பட்டைச்சாறு | 4 | 15 | 14 | 1 | 60 |
| நூறுவயதானவேப்பவேர்ப பட்டைச்சாறு | 3 | 10 | 9 | 1 | 40 |
| செப்புநெரிஞ்சில் சமூலச்சாறு | 2 | 5 | 4 | 1 | 20 |

இவ்விதம் செய்து முடித்த காந்த பற்பம் சகல பிணிகளை யும் போக்கும் வன்மை உடையது என்பதை,

''காந்தத்தின் பற்பத்தைக் காணவொண்ணு தம்மா
நீந்தப்ப டாப்பிணி நீரைக் கடக்கலாம்
பாந்தப்படுநாவாய்ப் பண்டித மீகாமன்
சாந்தக் குணமுடைத் தண்டுக்கோ லாகுமே.''

என்ற திருமூலர் கன்மகாண்டம் ஆயிரத்திலுள்ள செய்யு ளாலும்,

''கேளப்பா காந்தபற்ப முறையைச் செய்யக்
கிடையாது; கிடைத்தக்கா லஃதே நன்மை;
நாளப்பா வளருமடா மனிதர்க் கெல்லாம்
நரராக மாட்டார்கள், சுரரா வார்கள்;
தூளப்பா காந்தமென்று லயத்தை வாங்குந்
தொழிலெனவே பிணிக்கூட்டந் தொலைய வாங்கும்;
வேளப்பா குருமுனிவர்க் குரைத்த மார்க்கம்
வேறல்ல வாங்கதுவே விசித மாமே.''

என்ற போகர் முந்நூற்றிலுள்ள செய்யுளாலும்.

''காந்த மென்று காந்த வெண்மை
யாந்த போத நாந்தகம்
ஏந்தலாதி மீந்த பேர்க
ளாந்த கத்தி னீந்துமே.''

என்ற தன்வந்திரி வாகடப் புராண விருத்தச் செய்யுளாலும்,

''காந்தத்தா லயமுட் பட்ட கருத்தெனப் பன்னி ரண்டில்
கேந்திர திருந்த செவ்வாய் கேதுவைப் பணியச் செய்யில்
வேந்தர்க்குப் பதினொன் றுகில் வெள்ளியு மஃதே யாகும்
மாந்தர்க்குப் பெருமை வாழ்வு வருவது திண்ண மாமே.''

என்ற மய நூலுள்ளமுடையான் சோதிடக் கணித நூல் செய்யு ளாலும் உணரலாம்.

அளவு.

குன்றி மணி (130 மி.கிரா.) யை நான்கு கூறுக்கி, முதற்கூறு உத்தமமென்றும், இரண்டாவது மத்திமமென்றும், மூன்ருவது அதமமென்றும், நான்காவது அதமத்தில் அதமம் என்றும் பிரித்துக்கொள்க.

காந்தபற்பத்தின் துணை மருந்துகளும் தீரும் நோய்களும்.

| | |
|---|---|
| நல்ல தண்ணீர் .. .. .. | வாதம், அதற்கு உறவான பெருவயிறு, பல்லே. |
| வெந்நீர் .. .. .. .. | பித்தம், அதைச் சேர்ந்த பயித்திய வாயு, பயித்தியப் பாண்டு, பயித்தியச் சந்நி, மகா சந்நி, காமாலே. |
| உள்ளிப்பூண்டின் தைலம் .. | கபம், அதைச் சேர்ந்த கப சந்நி பாதம், பாலக்கிராணி, சேட்ப வாதனே, பெரும்பாடு, வயிற்று வலி, பக்கச் சூலே, உப்புசச் சூலே, வேகச் சுவாச நீர்க் கட்டு, பாணுகம்ப வாயுவுடன் கூடிய கபக் காய்ச்சல், வெப்ப பிணி, குட்டம். |
| மிளகுத் தைலம் .. .. | மேற் சுவாசத்திஞல் உண்டாம் அதி உப்புசம், இரைப்பு, வாய் மூச்சு விடுதல், வெப்பம், வாதானல சுரம், பெரும் பாட்டுப் பிணி வர்க்கம், வயிற்றுச் செருகலிஞல் குடலேப் பின்னிக் கொண்டு முறுக்கும் பிணிகள், பாரிசவாயு, பல்லே, மகோதரம், பொருமல், மாரடைப்பு இருமிப் பொருமும் வயிற்று வலி. |

துளசிச் சாறு .. .. .. மேகக் காங்கை, இரத்த காச ரோசம், இரத்த பீனசம், இரத்த இருமற் சுவாசகாசம், இரத்தக் கழிச்சலின் கூருன அதிசாரச் சன்னி, இரணத்தாப சுரக்கோபம்.

தேன் .. .. .. .. சயரோக இருமல், சுவாச விக்கல், வாதப் பிடிப்பு, மார்பு நோய், மாரடைப்பு, விடாத வேர்வை, வாதப்பிணி வாத சந்நிப்புரட்டு, பித்தச் சந்நிக்காதரம், எரிகுன்மம், வாந்தி, எரிகுன்மசத்தி எரிகுன்மப் பாண்டு, பாரிச சூலை, பெரு வாரி காய்ச்சல்.

உருத்திராக்கத்தின் இரசம் .. வாதசந்நி, காக்கைவலி, மூர்ச்சை வலி, பயித்தியச் சந்நி, உன்மத்த ஆங்கார மனோரத மூர்ச்சை, பாரிசவாயு, ஊர்த்த சுவாச விக்கல், திரிதோட தொந்த சுரம், இலிங்கப் புற்று, குன்மம், யோனிப் புற்று, இரணச் சந்நிக் காய்ச்சல், துர்மாமிச மூலப்பிணி, பவுத்திரப் பிரிமியம்.

**காந்த பற்பத்திற்கு விதிவிலக்கு.**

''ஆச்சியம்பா லக்கார மையா டகிமூலி
ஆச்சியப்பா லக்கார மைதோரை—யாச்சியம்பால்
சிந்தமலை யையவிகொள் சேறெண்மோர் காடிபுகை
சிந்தமலை யையவிகூழ் தே.''

(ப-ரை) ஆச்சியம்—நெய்யும, பால்—பசுவின் பாலும, அக்காரம்—சர்க்கரையும், ஐ—வெண்ணெயும், ஆடகி—துவரை வருக்கமும், மூலி—ஈருள்ளியும், ஆச்சி—தாயினது, அம்—மேன்மை பொருந்திய, பால்—முலைப்பாலும், அக்காரம்—

ஒருவர் மேற்படி மருந்துக்கு விரோதமின்மையை விசாரித்து அறிந்துகொள்ளும் விருப்பமுள்ள பண்டங்களும், ஐ—தண்ணீர், வெந்நீர், பானகம் முதலியவைகளும், தோரை—கோதுமை வருக்கம், மூங்கிலரிசி முதலியவையும், ஆச்சு இயம்பு—ஆகு மெனச் சொல், (ஆல்—அசை) சிந்தம்—புளி வருக்கங்களும், அளை—தயிர் வருக்கங்களும், ஐயவி—கடுகோதன முதலியவைகளும், கொள்—கொள்ளாலாய உணவுகளும், சேறு—கள் முதலிய லாகிரி வஸ்துக்களும், எள்—எள்ளோதன வருக்கங்களும், மோர்—மோர்க்கட்டியல் முதலியவைகளும், காடி—காடிச்சோறு, காடிக்கறி முதலியவைகளும், புகை—புகையிலை சம்பந்தமானவைகளும், சிந்து—சமுத்திர தீரத்து வாசமும், உப்பங் காற்றும், அமளையை—பெண் போகமும், அவி—(யாகாதிகளைச்செய்து அடையவேண்டிய சம்பத்தான) பொன்னுரைசையும், கூழ்—கேழ்வரகு, சாமை, தினை முதலிய கூழ்வகைகளும் ஆகியவற்றை, தே—கருணையுடன் நீக்குவாயாக.

இக்கருத்தின் உண்மையை,

''ஆன விதிவிலக் கிரண்டி லேபலன்
மான பரடுத் திரும்பி ஞர்சில
அதுதான் பலவிதி
யாம்பொருள்
அக்கா ரத்தொடு நெய்பா லிப்படி
எக்காலத்தினு மெய்தா ணிப்படி
யாம்பிர மாங்கனி
தேம்பிழி வீண்புகை
அரிவை யிதுதளல்
வரிசை யறிமினே.''

என்னும் அகத்தியர் கரிசல் செய்யுளாலும்,

''தள்ளலாம் வெள்ளாட்டுக் குட்டியா ரன்றே
தானக்கோன் பெண்ணுடு வொன்றுமே தீதாம்
விள்ளாமற் செம்மறி யாட்டுக்கு நன்மை
விதிவிலக் கென்பது வீரக்கோ ஞரே.''

என்றும் இடைக்காடர் செய்யுளாலும் அறிக.

பற்பம் (வேறு).

தூய்மை செய்த காந்தம் பலம் 1 (35 கிராம்)-ஐக் கல்வத்தி லிட்டுத் துளசிச்சாறு பலம் 2 (70 கிராம்) வீதம், மூன்று நாள் தனித்தனியாய் விட்டு ஊறவைத்து, நான்காவது நாள் காலையில் அத்திப்பால் பலம் 4 (140 கிராம்) விட்டு அரைத்து, அப்படியே நான்கு நாள் வரைக்கும் நாள் ஒன்றுக்கு 4 பலம் (140 கிராம) வீதம் விட்டரைத்து, எட்டாவது நாள் காலையில் அதை வில்லையாகத் தட்டி அன்றைய பொழுதும். ஒன்பதாவது நாளும் அவ் வில்லையை நன்ருய் உலர்த்தி, பத்தாவது நாள் காலையில் அதை

அகலிலிட்டு, மேலகல் மூடி மண் சீலை செய்து, அன்றைக்கெல்லாம் நன்ருய் உலர்த்தி பதினேராம் நாள் காலையில் நூறு எருவிற் புடம் போட்டு, பன்னிரண்டாவது நாள் ஆறவிட்டு, பதி மூன்ருவது நாள் எடுத்துப்பார்த்தால், இந்திரன் உண்வாகிய அமுதம் போன்று வெண்மையாய்க் காணப்படும், இப்பற்பத்தை உண்டவர்கள் அமரர்களைப் போல நீண்ட ஆயுளையும் வன்மையையும் பெறுவார்கள். இம்மருந்தைச் செய்து வைத்துக் கொண்டிருக்கும் வயித்தியர்கள் வலிய ஆண்டன்மையில் இந்திரனென்று சொல்லும்படி விளங்குவார்கள்.

### காந்த பற்பம்.

(இணை மட்டு விருத்தம).

''சுத்தி செய்த காந்தத்தை நிறுத்துக் கொண்டு
தொடியொன்றுக் கிரண்டுபலந் துளசிச் சாறு
துய்க்க நிதம் இவ்வாறே மூன்று வைகல்
துய்ப்பித்துங் கூறியபின் நாலாம் நாளில்

அத்திப்பால் நாற்ருடிவிட் டதைமத் திப்ப
தப்படிநா ளிரட்டையிணை யான பின்னர்
அதையுருட்டி வில்லைசெய்து ரவியோர் நாள்வை
ஐயிரண்டாம் நாளிலதைச் சீலை மண்செய்

வித்தொருநாள் வெயிலுலர்த்திப் பதினே ராநாள்
விராட்டியெழு பத்திரண்டு மிருபத் தெட்டும்
மேவுபுட மிட்டதனை யொருநா ளாற
விட்டெடுத்துப் பதின்மூன்ரும் நாளிற் பார்க்கச்

சுத்தமாக பதியுணவு போலத் தோன்றும்;
சுரரெனவே திறமாவர் துய்த்த பேர்கள்;
சொல்லுமதைப் படைத்தவயித் தியர்வல் லாண்மை
சுவேதவா கனனெனவே துலங்கு வாரே.''

இப் பற்பத்தை உண்ணும் அளவும் துணைமருந்தும் தீரும் நோயும்.

இப் பற்பத்தை கடுகு, தினை, நெல், குன்றி அளவுகளில், தேன், நெய், வெல்லம், சீந்தில் உப்பு இவைகளில் சேர்த்து உண்டால், அசதிசுரம், சேத்தும சுரம், இரத்த காசம், உளைமாந்தை, அச்சரம், சுவாசம், வாத நோய்கள்; வாத பித்தக் கலப்பு நோய்கள் ஆகியவை தீரும்.

''காந்தப்பற் பத்தை யுண்ணக்
கடிப்பகை தினைநெல் குன்றி
ஆந்தர வவிழ்தந் தின்னும்
அனுபான மதுநெய் வெல்லம்
சீந்திலுப் பசதி வெப்புச்
சீதவெப் பிரத்த காசம்
மாந்தவைச் சரஞ்சு வாசம்
வாதபித் தங்கள் போமே.''

### இப்பற்பத்திற்குப் பத்தியம்.

இதற்குப் பத்தியம் இச்சாபத்தியமாகும், கலியாணப் பூசினிக்காய், கொள், கடுகு, காடி இவைகள் ஆகா. நெய், பால், சர்க்கரை, கோதுமை, இவைகள் உத்தமம். நெல்லரிசி மா, மத்திமம், சோளம் எப்போதும் கூடாது, அப்படித் தவறிச் சேர்த்துக்கொண்டால், தின்ற மருந்து ஒரு பலனையும் தராது வீணாய் முடியும். அங்ஙனமாயின், பெண்ணைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா?

''பத்தியம் இச்சா பத்தியம்
  பறங்கிகொள் கடுகு காடி
சுத்தமா காது; நேயம்
  சுவைதச்சருக் கரைகோ தும்பை
உத்தமம்; நென்மா மத்தி;
  உறவொண்ணு திறுங்கெப் போதும்;
நத்திடில் விருதா வாம் பெண்
  நாமினி யுரைப்ப தென்னே.''

### காந்த பற்ப நாளளவின் பலன்.

ஒரு மாதமானல் நோய்களெல்லாம் ஓடிப் போய் விடும்; இரண்டு மாதங்களானல் உடலுக்கு மிக்க வன்மை உண்டாகும். இதனை.

''ஒருமதி யமையுமுன்னே யோடிடும் பிணிக ளெல்லாம்;
வருமுடற் கதிக லாபம் மாதமற் றிரண்டே யாகில்;
பெருமித மாகும்.''

என்பதாலுணர்க.

### காந்தச் செந்தூரம்.

ஒரு பலம் (35 கிராம்) சுத்தி செய்த காந்தப் பொடியை இருபத்து நான்கு நாட்களுக்குள்ளே, வாழைக் கிழங்குச் சாறு, விளாமரப் பட்டைச் சாறு. முருங்கைப் பட்டைச் சாறு, எலுமிச்சம் பழச்சாறு இவைகள் ஒவ்வொன்றுலும் தனித்தனியே அரைத்து, வில்லை தட்டிக் கவசித்துலர்த்திப் புடமிடவும். அப்பொழுதுகாந்தம், முருக்கம். பூநிறச் செந்தூரமாகும்.

### காந்தச் செந்தூரத்தின் பயன்.

| துணை மருந்து. | | | | தீரும் நோய். |
|---|---|---|---|---|
| வெண்ணெய் | .. | .. | .. | மேகப் பிணிகள். |
| தண்ணீர் | .. | .. | .. | சுரப்பிணிகள். |
| ஏலம் | .. | .. | .. | கப நோய். |

| நுணை மருந்து | | | தீரும் நோய் |
|---|---|---|---|
| கடுகின் இரசம் | .. | .. | கீல் பிடிப்பு. |
| அத்தியிலைச் சாறு .. | .. | .. | உப்புச நோய். |
| ஓம இரசம் .. | .. | .. | காதிரைச்சல். |
| சர்க்கரை .. | .. | .. | நடுக்கு வாதம். |
| வெந்நீர் .. .. | .. | .. | வெப்பத் தேமல். |
| வெள்ளாட்டுப்பால் | .. | .. | பக்கச் சூலை. |
| பசுவின் பால் .. | .. | .. | கய நோய். |

காந்த செந்தூரத்தின் குணம்.

''காந்தச்செந் தூரங் கருதரிய வுந்திவலி
போந்தவதி சாரசுரம் போவதன்றி—வாந்திகப
காசசு வாசவினை காமாலை பாண்டுவொடு
பூசலிடும் நோயனைத்தும் போம்.''

(பொ-ரை) காந்தச் செந்தூரம் நாபிவலி, பேதிச்சுரம், வாந்தி, கயம், இருமல், இரைப்பு, காமாலை, பாண்டு, நீங்கா நோய் இவைகளை விலக்கும்.

காந்தச் செந்தூரத்தின் பத்தியம்.

''பத்தியம் புளியுப் பின்றேற்
பலிதமாம் வாரத் துள்ளே;
நத்திடி லிரண்டு வாரம்
நவிலுமிச் சாபத் யங்கொள்
கத்திரிக் காய சுத்தி
கடுகுகூஷ் பாண்டம் எள்ளு
கொத்தவ ரைக்காய் மாங்காய்
கூலக்கா யிவையா காவே.''

(பொ-ரை) காந்தச் செந்தூரத்திற்குப் புளி உப்பு நீக்கில் அஃது ஒரு வாரத்துக்குள் பயனைத் தரும். அவைகளை விரும்பினல், இச்சா பத்தியத்துடன் இரண்டு வாரமுண்ணவேண்டும். இச்சா பத்தியமாவது, கத்திரி, அகத்தி, கடுகு, பூசணி, எள், கொத்தவரை, மாங்காய், பாகற்காய் இவைகளை நீக்கி உண்பதாகும்.

அபத்தியத்தில் காணும் தீக்குணம்.

''ஆகிய போது மாதர் ஆசையா காதுண் டாகிற்
போகுமிவ் வவிதழ்த நன்மை; போகத்தை யதுவே
மாட்டும்;
தாகமுண் டாகும்; கொண்டாற் சன்னிதோ ஷங்க ளேறும்;
தாகவன் மிகந் தேகம் நமனது முடிவுக் காமே.''

## காந்தச் செந்தூரம் (வேறு).

காந்தம் ஒரு பலத்திற்கு (35 கிராம்) ஆடுதீண்டாப் பாளைச் சாறு இடு பங்கு விட்டு ஒரு நாள் முழுநும் அரைத்து, இரண்டாம் நாள் காலை முதல் மாலை வரை அதற்கு இஞ்சிச் சாறு விட்டரைத்து, மூன்ருவது நாள் மேலே கூறியது போலவே புலி தொடக்கிச் சாற்ருலரைத்து, நான்காவது நாள் பிரண்டைச் சாற்ருலை முன்போல அரைத்து, ஐந்தாவது நாள் காலையில் அரைத்தவற்றை உருட்டி, வில்லை செய்து, நிழலில் உலர்த்தி, இவ்வில்லை ஒரு பலத்திற்குக் காட்டாமணக்கின் இலை ஐந்து பலம் (175 கிராம்) நிறுத்தெடுத்து, அதற்கு வேலிப் பருத்திச் சாறுவிட்டு அரைத்து, ஒரு பாதியை எடுத்து மூசை செய்து அதற்குள் காந்த வில்லையை வைத்து, மறுபாதிக் கல்கத்தைக்கொண்டு மூசையை மூடி, அன்று முழுதும் வெய்யி வில் உலர்த்தி, மறுநாள் சீலை மண் செய்து உலர்த்தி, நூறு வல்லெருவில் புடமிட்டெடுக்கவும், இது பாடல நிறமாகும், இதனைக் கவிர் நிறமாக்க எட்டாவது நாள் வில்லையைப் பாண்டத் திலிட்டுப் பலத்திற்கு (35 கிராம்) ஐம்பது பலம் (1,750 கிராம்) வீதம் தினம் புதிய வெள்ளாட்டுநீர் விட்டு, அடுப்பேற்றி விளக்கு போல மூன்று தினம் எரித்து எடுத்து, பன்னிரண்டாம் நாள் அதனுடன் வெள்ளாட்டுப்பால் பலத்திற்கு (35 கிராம்) பத்துப் பலம் (350 கிராம்) வீதம் விட்டுப் பிசைந்து, உருட்டிச் சக்கரம் போல வில்லை செய்து, அன்று உலர்த்தி, மறுநாள் சீலை மண் செய்து, இரவியில் வைத்து உலர்த்தி, மறுநாள் காற்றில்லா விடத்தில் நூறு எருவில் புடமிடவும், பிறகு தேட்கொடுக்கிலைச் சாறு, ஆகாசத் தாமரை இலைச்சாறு, கையாந்தகரைச் சாறு இவைகளால் இருபத்தொன்பது நாட்களுக்குள் முடியும்படி தனித் தனியாய் அரைத்து, வில்லை செய்து உலர்த்தி, மண் சீலை செய்து, புடங்களை இட்டு எடுக்கவும். அப்போது கவிர் நிறத்தை அடையு மென்ப.

**இக்காந்தச் செந்தூரத்தின் குணம் துணைமருந்தின் அளவு, தீரும் நோய் முதலியன.**

''ஆகிய சிந்தூ ரத்தை
அயிலுமா றறிந்துண் போர்க்குந்
தேகமா வயிர மென்னத்
திறம் பெறும்; குட்ட மாறும்;
வேகமாய்ப் பசியுண்டாகும்;
வெறுத்திடா தசனஞ் செல்லும்;
போகுமே பழஞ்சு ரங்கள்
பொய்ப்பசி பித்தந் தாமே.''

''தானிதற் கனுபா னம்பால்
சருக்கரை யிளநீர் நீர்கள்
தேனிவை யன்றி நெய்மோர்
சீரக ரசமு மாகும்
தானவி டதப்ர மாணந்
தண்டுலஞ் சாலி குன்றி
ஆனவுத் தமமூன் றற்கும்
அப்புறந் துவரை யாமே.''

''தாபமாம் பித்த வெம்மை சந்நிபா தங்கள் வாதஞ்
சோப நோய் குட்டம் பாண்டு சுரப்பிணி யசதி காசம்
மாபிர மியங்காமாலை வரளத்தி சுரஞ்சுட்கித்தல்
ஞாபக மறதி விந்து நாசமுப் புசமி தற்கே.''

செந்தூரம் (வேறு).

காந்தத்திற்குச் சமன் கந்தி கூட்டி, கல்வத்திலிட்டுக் கரிசாலைச் சாற்றாலாட்டி, வில்லை தட்டிக் காயவைத்து, ஓட்டிலிட்டு, ஓடு மூடி ஏழு மண் சீலை செய்து, கசபுடமிட்டெடுத்து, இவ்வெடைக்குக் கந்தி கூட்டி, முன் சாற்றாலரைத்து, முன்போலக் கசபுடமிட்டெடுத்து, இவ்வெடைக்குக் கந்தி கூட்டிப் பழச்சாற்றாலரைத்து முன்போல கசபுடமிட்டெடுத்து, அவ்வெடைக்குக் கந்தி கூட்டி அவ்வெடைக்கு சித்திர மூலங் கூட்டி முலைப்பாலாலரைத்து, வில்லை தட்டி ஓட்டிலிட்டு, முன்போலப் புடமிட்டெடுத்து, கந்தியும் சித்திர மூலமும் இவ்வெடைக்கு ஒன்றாய்க் கூட்டி, கோழி முட்டை வெண்கருவினாலரைத்து வில்லை செய்து புடமிட்டு எடுத்து கல்வத்திலிட்டு எருக்கம்பாலால் நாலு சாமம் அரைத்துப் புடமிட்டெடுக்கச் செங்கறுப்பாய் இருக்கும்.

அளவு : பணவெடை (488 மி. கிராம்).

துணை மருந்து: தேன்.

பத்தியம் ; இச்சா பத்தியம்.

தீரும் நோய் : விஷப்பாண்டு, கவிசைச் கட்டி, சோகை, பித்தப்பாண்டு, நீராம்பல், அண்டவாயு, ஆநந்தவாயு, வாயு.

(வேறு)

முறைப்படி சுத்தி செய்த காந்தம் பலம் ஒன்றை (35 கிராம்) வெள்ளெருக்கம் பூச்சாற்றினால் நான்கு சாமம் அரைத்து காசுப் பிரமாணத்தில் சிறு வில்லைகளாக்கிக் காயவைத்து, அகலிற் பரப்பி, மேலகல் மூடி, ஏழு சீலை மண் செய்து, நன்றாய்க்காய்ந்த பின்னர் இருபத்தைந்து எருவில் புடம் போடவும். இந்தப்படி மூன்று புடங்கள் இட்டு எடுத்துப் பார்க்க நல்ல செந்தூரமாம்.

அளவு : 1 (130 மி.கிராம்) அல்லது 2 (260 மி. கிராம்) குன்றிமணி எடை.

துணை மருந்து : தேன்.

தீரும் நோய் : நளிர்ச் சுரம், கைகால் வீக்கம், பாண்டு முதலியன.

## செம்பு.

## Cuprum (Copper),

உலகத்தின் பல பாகங்களிலும் செம்பு கிடைக்கின்றது; இது வடஅமெரிக்காவில் ''லேக் ஸுப்பீரியர்'' (Lake Superior) என்ற பெரு நீர்நிலைக் கருகிலுள்ள இடங்களிலும் நேபாளத்திலும் கிடைக்கின்றது. . செம்பு சுயமாகவும், பொன், வெள்ளி, வெள்ளீயம், காரீயம், நாகம், இரும்பு, நிமிளை, கெந்தி, பாஷாணம் போன்ற சரக்குகளுடன் கலப்புற்றும் கிடைக்கும். அசல் செம்பை இதரப் பொருள்களிலிருந்து பிரித்தெடுக்க, அந்தந்தத் தேசத்தார் பல முறைகளைக் கையாளுகின்றனர். இஃது ஆங்கிலேயர் முறை (English Method) என்றும், ஜெர்மானியர் முறை (German Method) என்றும் கூறுவனவற்றால் விளக்கமாகும்.

செம்பினாற் செய்யப்பட்ட மருந்துகள் இரைப்பை, சிறுகுடல் இவற்றின் சளி சவ்வினூடாக கிரகிக்கப்பட்டு ஈரலில் சேமிக்கப்படுகிறது. பிலீகத்திலும், பிருக்கத்திலும் சிறிய அளவில் காணப்படும். ஈரல், பிருக்கம், உமிழ்நீர் கோளம், குடல் கோளங்கள் இவற்றின் வாயிலாக வெளியேற்றப் படும்.

பல ஜீவ தாவரப் பொருள்களில் செம்பின் சத்திருப்பதாய்த் தமிழ் வைத்திய நூல்களில் கூறப்பட்டிருக்கின்றது. உதாரணமாக நாங்கூழ்ப் புழு (பூநாகப் பூச்சி), இந்திர கோபம் (பட்டுப் பூச்சி), மயில் இறகு, தலை மயிர் போன்ற பொருள்களையும்,

''கொவ்வை சிவப்புக் கொடியின் சிறுகீரை
செவ்வலிகை யான்மிரி செந்தரா அய் ஒவ்வுமிடம்
மூக்கி புளிக ரணை மூதோ ரிலைக்கஞ்சந்
தேக்கவுரி மூலமிவை செம்பு.''

(தே-அந்தாதி.)

என்ற இச் செய்யுளில் கூறப்பட்ட தாவரச் சரக்குகளையும் கொள்ளலாம். மற்றும், மேற்படி பொருள்களிலிருந்து செம்பின் சத்தை எடுக்கக்கூடிய முறைகளை நிகண்டுகளில் பரக்கக் காணலாம்.

இது நிற்க, செம்பு செங்கபில நிறத்தையும், மினுமினுப்புள்ள பிரகாசத்தையும், துப்புப் பிடிக்கும் தன்மையையும், சுத்தியால் அடிக்க அடிக்க அடிபட்ட இடத்தில் பட்டுப்போலத் தோன்றும் குணத்தையும் உடையது; மாசற்ற செம்பு கடினமாயிருப்பினும், கத்தி வெட்டுக்கு எளிதாய் வெட்டுப்படும். வெட்டுவாயில் செந்நிறமும் பிரகாசமும் பளிங்கு போன்ற தெளிவுங் காணப்படும். இது பிற சரக்குகளுடன் கலப்புற்று இருப்பின், வெட்டுவாய் சிலும்பலாய் இருக்கும். செம்பு உருகும்போது பச்சைப் புகை வெளிக்கிளம்பும். ஆறியபின் மேற்பாகம் கருநிற

மாகும். ஈரக் காற்றில்லா விடத்தில் இதன் நிறம் வேற்றுமை அடைவதில்லை. இது வெடியுப்புத் திராவகம் ஒன்றிலேதான் கரையும்; நெருப்பின் துணையின்றி, கறியுப்புத் திராவகத்தி லேனும் கந்தகத் திராவகத்திலேனும் கரைவதில்லை. இதில் நாதமுண்டு. இக் காரணத்தினாலேயே ஓசை எழுப்பக் கூட்டுகிற கூட்டு லோகங்களில், இதற்கு முதன்மை இடம் கிடைக்கிறது. உஷ்ணத்தையும் மின்சாரத்தையும் கிரகிக்கும் தன்மை இதற்கு உண்டு.

வேறு பெயர்கள் : அவுதும்பரம், உதும்பரம், இரவி, இராசி, இரவிப் பிரியம், எருவை, சீருணம், சீருணி, சுற்பம், சுல்பம், தாமிரம், தாம்பிரம், தாம்பரம், பரிதி, வடு, விடம் என்பன வாகும்.

மற்றும், இதனுடைய பகைச் சரக்குகள் காரீயமும் வெடி யும் என்றும்; நட்புச் சரக்குகள் அயம், சூதம், தங்கம், நாகம் என்றும் கூறப்பட்டிருக்கின்றன.

குணம் : கார்ப்புக் கைப்புச் சுவைகளையுடைய செம்புக்கு, வீரியம் உஷ்ணமென்றும், விபாகம் (பிரிவு) கார்ப்பு என்றும், செய்கை வறட்சி யுண்டாக்கி, வெப்ப முண்டாக்கி, இசிவகற்றி, உடல் தேற்றி என்றும் கூறுவர்.

செம்புள்ள உலோகக் கலவைகள் : (1) பித்தளை—இதில் செம்பு 66 பங்கும் துத்தம் 34 பங்கும் சேர்ந்திருக்கும். (2) மணி லோகம்—இதில் செம்பும் தகரமும் சேரும். (3) வெண் கலம்—செம்பு 91 பங்கு, துத்தம் 6 பங்கு, தகரம் 2 பங்கு, ஈயம் 1 பங்கு, சேர்ந்து உண்டாகும். (4) பூர்வகால பித்தளையில் செம்பும் தகரமும் சேர்ந்திருக்கும். (5) பீரங்கி லோகம் —செம்பு 90 பங்கும் தகரம் 10 பங்கும் சேர்ந்தது. (6) தரா —8 பாகம் செம்பும், 5 பாகம் காரீயமும் சேர்ந்தது.

தாம்பிரம் தீக்கூற்றின்பால் சேர்ந்தது. இதன் பொதுக் குணத்தைக் கீழ்க்காணும் செய்யுளினால் அறியலாம்.

"தாம்பிரத்தாற் சோரி பித்தஞ் சந்நியகு வைகபம்
வீம்பார்பி லீகமந்தம் வெண்மேகந்—தேம்பழலை
சூதகநோய் புண்கிரந்தி தோடசுவா சங்கிருமி
தாதுநட்டங் கண்ணோய்போம் சாற்று."

(ப.கு.)

(பொ-ரை) செம்பினால் இரத்த பித்தம், சந்நி, கல்லீரல் நோய், கப தோய், பிலீகம், அக்கினி மந்தம், வெண்மேகம் பித்தவழலை, சூதக நோய், புண், கிரந்தி, திரிதோட சுவாசம், கிருமி, கண்ணோய் முதலியன தீரும். தாது நஷ்டம் நீங்கும்.

எமனுக்கு உயிரை நீக்குந்தன்மை யிருப்பதுபோலச் செம்பிற்குக் குன்மத்தை விரைவில் போக்க கூடிய தன்மை இருத்தலின், இதற்குக் குன்ம காலன் என்னும் ஒரு பெயரும் உண்டு. இதனைக் கீழ்க்காணும் அடிகளால் உணரலாம்.

''உற்பவமே தினியஞரா மனித வர்க்கம்
ஓகோகோ செம்பினன்மை யுரைக்கொணுதே
கற்பனைக ளல்லவடா மகனே குன்ம
காலனென்ருல் வாதசந்நி கலங்கும் பாரே.''

(போகர் குறுந்திரட்டு 300.)

செம்பை மருந்தாக்கி உபயோகிக்குமுன் சுத்தி செய்யவேண்டும். ''இவ்வகை புரிந்த தாம்பிர பற்பத் தியற்கையை என் சொல்வேன் பிசகில் இடையருக் களிம்பால் கொல்லுவ ததுவே'' என்று கூறப்பட்டிருத்தலின், சுத்தி முறையேனும் பற்பமுறையேனும் பிசகின், செம்புடனே இருக்கும் களிம்பினுல் விடமுண்டாய் இறக்க நேரிடும்.

செம்பு சுத்தி.

தேரன் யமகமுறை: செம்புப் பொடி பலம் ஒன்றுக்கு (35 கிராம்), செம்பருத்தி இலைச் சாறு பலம் ஆறு (210 கிராம்) விட்டு வெயிலில் காலை முதல் மாலை வரை வைக்கவும். இவ் விதம் ஆறு நாள் தினமும் சாறுவிட்டு உலர்த்தி வந்து, ஏழாம் நாள் முதல் இரண்டு நாட்கள் சாறுவிடாமல் வெயிலில் உலர்த்தவும். பிறகு வெள்ளாட்டு நீரிலும், செந்நிறப் பசுவின் நீரிலும் முன் போலவே செய்யவும். முடிவில் முள்ளங்கிச் சாறு பலம் ஆறு (210 கிராம்) வீதம் பத்து நாள் வரை விட்டு, மேற்கூறிய வண்ணமே ஒவ்வொரு நாளும் வெயிலில் வைத்து, பிறகு இரண்டு நாள் சாறு விடாமலே உலர்த்தி, புதிய ஓட்டில் இட்டு, உமி நெருப்பில் ஈரஞ் சிறிதுமின்றி வறுத்து, தூய நீர்விட்டுக் கழுவி, துணியால் ஈரத்தைப் போக்கி, வெயிலில் ஈரமின்றி உலர்த்தி எடுக்கச் சுத்தியாம்.

குறிப்பு.—ஒவ்வொரு சாறு அல்லது நீருக்கு மத்தியில் இரண்டு நாள் உலர்த்தும்படிச் சொன்னபோதிலும், நீர் சுண்டி உலர வில்லையேல், உலரும்வரை வெயிலில் வைத்து நன்ருய் உலர்ந்த பின் அடுத்த நீரில் அல்லது சாற்றில் பாகப்படுத்தவேண்டும். வெய்யிலில் வைப்பதற்குச் சூரிய புடம்'' என்பது பெயர். சூரிய கிரணத்தில் ஏழு நிற ஒளிமுன் வைக்கப்பட்ட சரக்குகள் அல்லது மருந்துகள்; அபாரமான நற்குண சக்தியைப் பெறுகின்றனவென்பது வெளிப்படை.

வேறு சுத்தி.

செம்பை ஈசல் இறகு போலத் தட்டிச் சிவக்கக் காய்ச்சி (1) கொள்ளுக் குடிநீர், (2) புளியிலைச்சாறு, (3) கற்ருழைச் சாறு,

(4) புளித்த மோர், (5) பொன்னாங்காணிச்சாறு இவைகளில் தனித்தனியே ஏழுதரம் தோய்த்தெடுக்கச் சுத்தியாம்.

### செம்பு பற்பம்.

செய்முறையும், மகிமையும்: ஒரு பலம் (35 கிராம்) சுத்தி செய்த செம்புப் பொடியைக் கீழுள்ள பட்டியலில் காணும் முறைப்படி அரைத்து, வில்லை தட்டி உலர்த்திப் புடமிட்டெடுக்கவும். ஒவ்வொரு நாளும் புதிய சாற்றையே உபயோகித்தல் வேண்டும். வில்லையை வெயிலில் வைப்பது போலப் பனியிலும் வைக்கவேண்டும். பற்பமான பிறகும் பனியில் வைத்துப் பூத்தவுடன் எடுத்து உபயோகிக்கவும்.

| சாற்றின் பெயர் | அளவு பலம் | அரைப்பு நாள் | வில்லை உலர்த்தும் நாள் | கவசம் உலர்த்தும் நாள் | புடம் வரட்டி |
|---|---|---|---|---|---|
| வெற்றிலைச்சாறு .. .. | 3½ | 16 | *6†8 | 1 | 66 |
| முன்னையிலைச்சாறு .. .. | 3½ | 12 | *4†7 | 1 | 44 |
| இலைக்கள்ளியிலைச்சாறு .. | 3½ | 8 | *2†5 | 1 | 33 |
| வன்னியிலைச்சாறு .. .. | 3½ | 4 | *1†2 | 1 | 22 |

*வில்லையை நிழலில் உலர்த்த வேண்டிய நாட்கள்.

†வில்லையை வெயிலில் உலர்த்த வேண்டிய நாட்கள்.

இங்ஙனம் செய்ய ஆறில் நான்குகூறு பற்பமாகும். இதற்கு தினம் இரண்டு பலம் புன்னைவிதைத் தைலத்தால் மூன்று நாள் சுருக்கிடவும். இங்ஙனமே தோன்றிக் கிழங்குத் தைலத்தாலும் சுருக்கிட முழுக்கூறு பற்பமாகும்.

செம்புடனே பிறந்து இடையறு நட்புப் பூண்டு ஒழுகும் கன்மடம் என்னும் களிம்பும் வெப்பும் அற நீங்கி செம்பு நற்குணம் பெற்ற பற்பமாயின், அது வேகத்தில் பாசுபதாஸ்திரத்தையும், வன்மையில் சஞ்சீவியாகிய பிராண பதார்த்தத்தையும், வாக்குத் திறத்தில் ஆதிக்கிய சிந்தாமணியையும், உபகாரத்தில் பயாதர சீமூதத்தையும், ஆக்ருஷ்ணத்தில் காருடாதி பிரயோகங்களையும் ஒக்கும். வசியாதி அறுபத்து நான்கு கலைக்கியான விருத்தியைப் பண்டிதர்களுக்கு எக்காலத்தும் அளிக்கும். இக்குற்றமற்ற பற்பத்தின் மகிமையை கீழ்க்காணும் மேற்கோள்களினால் உணரலாம்:

''பஸ்பாங் கேஞ ராஜ ராஜேந்த்ர தாம்ர நாமானி
பாசுபதம்.''

''பற்பமென்றுற் றும்பிரமே பற்ப மாகும்;
பாசுபத மஃதேயாம் பார்த்த பேர்க்கு
விற்பனபண் டிதத்தாலே கால கேய
வினைக்கூட்ட வெம்படையை வீக்கு மப்பா!''

(போகர் குறுந்திரட்டு *300.*)

''செம்பி னடலை சிவாத்திர மாகுமே;
நம்பியெய் வார்கள் நமனைவெல் வார்; பிணி
வெம்பி யகல விடாரியை நேர்பாயும்
வம்பியல் லார்பலன் வாய்க்கவல் லார்களே.''

(திருமூலர் திருமந்திரம் கன்ம காண்டம் *1000.*)

''கேளப்பா வுண்மை யறி வாக ரப்பேர்
கேவலா நமையாடிக் கிருதா நீவிர்
மூளப்பா வனலான பரம வாளி
முதன்மையா ணவப்பிணியாம் பகையைச் சாடும்
மீளப்பா வனிலத்தை யடக்கும் நாகம்
வேறல்ல செம்பினது பற்ப மப்பா
நாளப்பா லஃகுவதோர் பொழுது மில்லை
நாரணுத் திரமிதற்கு நாணிப் போமே.''

இது நிற்க, இவ்வுலகத்திலுள்ள மக்களுள் எவன் ஒருவன் செம்பில் பொருந்திய களிம்பை நீக்கும் வகையும், அதனைப் பற்பஞ் செய்யும் முறையும், பற்பத்தை உண்ணும் சிறந்த வகையும் அறிகின்றானோ, அவன், மிக்க பசியையும், தேக பலத்தையும், தவத்தில் உயர்ந்த மிருகண்டுமகாரிஷி புத்திரனாகிய மார்க்கண்டேயனைப் போல ஆயுள் விர்த்தியையும் அடைவான் என்பதைக் கீழ்ச் செய்யுள் வலியுறுத்துகின்றது :

''உறுவங்குறும் பசியும்பெறும் உரமும் பெறும் உரமாம்
மிருகண்டருள் தநயன்பெறு மிகையும்பெறு குவரே;
வருசெம்புறு மலினந்தெறு வகையும்பொடி வகையும்
பருகும்பெரு விதமுந்தெளி பவரம்புவி மிசையே.''

குறிப்பு.—தாம்பிர பற்பத்தைக் கொள்ளுங்கால், பத்தியம் கண்டிப்பாய் இருக்கவேண்டுமென்பதைப் ''பருகும் பெருவிதம்'' என்றார்.

(பற்பம் வேறு.)

சுத்தி செய்த செம்பின் பொடி பலம் (35 கிராம்) ஒன்றுக்கு, ஆத்திச் சாறு பலம் இரண்டு (70 கிராம்) விட்டு, இரண்டு நாள் அரைத்து, வில்லை செய்து, நான்கு நாள் வெயிலில் உலர்த்திப் பிறகு ஆட்டு எருவினால் புடமிட்டெடுத்து, இப்படியே ஆடு

தீண்டாப் பாளைச்சாறு, வேம்பின் சாறு, கடுக்காய்ச் சாறு, செம்பைச் சாறு இவற்றுள் ஒவ்வொன்றினுலும் அரைத்து வில்லை செய்து, காயவைத்துப் புடமிட்டெடுக்கப் பற்பமாம்.

(தே. கரிசல்.)

(வேறு)

''சீதாங்கி முனியருளாலே இந்திரன் புதல்வன்
பஞ்சாக்கினி
யோமம் பக்கதினத்துக்குள்ளே சந்திரகலை பெற்று....''

(தே. மருத்துப்பாரதம்.)

(பொ-ரை) முள்ளங்கியின் சாற்றைக் கொண்டு செம்புப் பொடிக்கு விட்டு, முறைப்படி அரைத்து, ஐந்து புடமிட்டெடுக்கப் பதினைந்து நாளில் பற்பமாம்.

## செம்பு பற்பத்தின் அளவு.

கடுகு, தினை, சாமை, கொள் இவற்றுள் ஒவ்வொன்றையும் நன்ருன்கு கூருக்கி, அப்பங்கினளவாய்க் கொள்ளல் வேண்டும். இவை முறையே உத்தமம் ஆதியாய் அதமாதமம் இறுதியாய்ப் பதினுறு பாகம் என்று இதன் அளவுப் பிரிவை முன்னோர்கள் கூறியுள்ளார்கள். இதனை கீழ்க்காணும் செய்யுட்களினுல் அறியலாம் :

''சுத்த வவுடதஞ் சொன்ன பிரயோகம்
வித்தள வாக நால் வேற்றுமை யாயினும்
உத்தம மாதி யுரைக்கு மிரண்டிரண்
டத்தனை யேதொகை யாகும் பதினுறே.''

(திருமூலர்.)

''உத்தம மாதிமுன்னுல் அகப்பேய்!
ஓதும் மருந்தளவே
வித்தள வாகுமடி அகப்பேய்!
மேலது சோடசமே.''

(அகப்பேய்ச் சித்தர்.)

## மருந்துண்ணும் நாளளவு.

ஏழு நாள் உத்தமம்; பதினுன்கு நாள் மத்திமம்; இருபத்தொரு நாள் அதமம்; இருபத்தெட்டு நாள் அதமாதமம் என்று கூறப்பட்டிருக்கின்றது.

**செம்பு பற்பத்தின் துணை மருந்தும், பிணிநீக்கமும்.**

செம்பு பற்பத்தை அளவாய்க் கீழ்க்காணும் அனுபானங்களில் கொடுத்துவர, அவைகளின் நேரே குறித்துள்ள நோய்கள் நீங்கும்.

| துணை மருந்து. | தீரும் நோய்கள். |
|---|---|
| நீர் | சேத்ம நோய்கள். |
| வெந்நீர் | வாத நோய்கள். |
| நெய் | பித்த நோய்கள். |
| பசுவின் பால் | வல்லை நோய் (ஈரல் குறுக்கு வீக்கம்). |
| வெண்ணெய் | தலை நோய். |
| சர்க்கரை | கைவலி. |
| துளசிச் சாறு | முலையில் வரும் சிலந்தி, கொப்புளம், பரு, கட்டிகள். |
| வெற்றிலைச் சாறு | விடாச் சுரம், பிரமியக் காய்ச்சல், நளிர்ச் சுரம், பித்த பிரமைக் காய்ச்சல். |
| கருப்பஞ்சாறு | நடுக்கு வாதம். |
| கற்றாழைச் சாறு | கீல்களில் நரம்பு சுருட்டி வலித்து, மேனியில் வியர்வையை உண்டாக்கும் பித்தவாத சயித்திய விகடோபத்திரவம், வாதக் கிராந்தி வலி, பித்த மேக வாயு, கப வாதானலம். |
| தேன் | மறதியை உண்டுபண்ணுகின்ற உன்மத்தசேத்மம், வாயு, பைசாச சுரம், மேகானலம், மூர்ச்சைச் சந்நி. |

| துணை மருந்து. | தீரும்நோய்கள். |
| --- | --- |
| நீலோற்பலம், தாமரை, அல்லி, நெய்தல், கொட்டி இவற்றுள் ஒன்றின் பூச்சாறு. | அனுமத்தசாத்திய ரோகங்களாகிய காக்கைவலி, ஆதங்கானலவலி பாரிடாதிதிரிவலி, பெருவாரிக் காய்ச்சல், தொந்தாதி வலி, பூத வேதாள சந்நி வலி, பிராந்தியக்கிருதி வலி, வாதபிவல் வியாதி. மகாமூதண்டானு சாரம், மேனேக்கானலானு சாரம், பித்தசுர விக்கல், வாத நாராயணார்த்த சுவாசம், முயல் கனப்பொருமல், பாண்டு வையானல விக்கல், ஈளை இருமலானலப்பிரமை, நீருறுதிணறல், மகாசுவேதானலம், பருவாலாதி யுப்புசம், பயித்தியக்கய பருவரலோபத்திரவம், பித்தசேத்மவன்மீகம். |

இதனையே திருமூல நாயனுர் பின்வருமாறு சுருக்கிக் கூறினார்;

''வல்லை முதலாய் வருமல வாதைக்கு
நல்லை வடுப்பொடி நாட்டு மனுபானம்
ஒல்லை உதகம் உரமாகு மாதொரு
குல்லை யிறுதி கொடுப்பதா யுண்மையே.''

இதனைத் தேரர் கீழ்க்காணும் செய்யுளால் விரித்துக் கூறினார் :

''வல்லைக்குக் கங்கை வளிக்கறற்றீக் காச்சியம்பால்
வல்லைக்குக் கங்கை வளிக்கைபுலம்—வல்லைக்குத்
தண்டரிக்கு நாகவல்லி சாய்க்கிக்கு நோய்க்கமரி
கண்டரிக்குத் தேனலிக்குத் தார்.''

## பத்தியம்.

பண்டிதர்களால் விதிக்கப்பட்ட அளவுடனும், ஏற்பாடான நாளின் படியும் அவிழ்தத்தைப் புசிக்கும் காலத்தில், கூட்டிக் கொள்ளக் கூடிய நற்பத்தியப் பொருள்கள் நெய், வெண்ணெய்,

பால், அப்பம், அடை, சருக்கரை, பூரி, அவல், பொரி, பயறு, வாழைப்பழம் இவைகளும், இவைபோன்ற மற்றைய பொருள்களுமாம். இம்மருந்திஞல் உண்டாம் காங்கையின் கடுமையானது, நோயின் கூட்டங்களைப் பற்றற்றுப் போகும்படி செய்யும். இம்மருந்தின் வேகம், நோய் போனபின்னும், மீறியெரிந்தால், அப்பொழுது அத்தீயின் வேக வெப்பமடங்க, தண்ணிர் போன்ற பண்டங்களை ஆகாரமாகக் கொடுக்கவேண்டும். அவ்வாறு கொடுத்தால், ரசவர்க்கம் உடலில் பற்றிப் பாய்ந்து, மயிர்காலுக்கு மயிர்க்கால் இரத்த புஷ்டியை உண்டாக்கக் கூடிய் வல்லமையைக் கொடுக்கும்; மற்றும் வாலிபத்தையும், வன்மையையும், பராக்கிரமத்தையும் கொடுக்கும். இதனைக் கீழ்க்காணும் மேற்கோளாலுணர்க :

''முசிவ கற்றுமதை நெளிவு பத்யவழி
  முறைகொ ளப்பிணிகள் வதிதல்போம்
முளரி யொத்தகடு பசிமி குக்கவெரி
  முடுகு மற்றவது தணியவே
முகிலெ னக்கிருத மிழுது மப்பமடை
  முதிய சர்க்கரைக ளபூபமாம்
முனைய வற்பொரிப யறுக ணித்திரள்கள்
  முதலு ணப்பரவு முடலெலாம்
இசைய ரத்தமிகு தசைய ழுத்தமிகு
  மெழில்வி ருத்தியுறு மொளிர்வுசேர்
இரணி யத்தைநிகர் வணமி னப்பரவு
  மிசைவ நித்யமக லதிகமாம்
இனியு ரைப்பதிலை யதன்ம கத்வமகி
  யிடைம ருத்துவக ளறியவே
இரகசி யப்பொருளை வழுவர் றச்சொலுவ
  எவரு மச்சமிலை சரதமே.''

மற்றும் எலுமிச்சம்பழம், மாம்பழம், மாதுளம்பழம், கிச்சிலிப் பழம், நாரத்தம்பழம், நாவற்பழம், வெள்ளரிப்பழம், நெல்லிப் பழம், பனங்கள், தமரத்தங்காய், காய்'சொரிக்கீரை, பீர்க்கங் காய், இலந்தைப்பழம், பெருங்களா, விளாம்பழம், கஞ்சி சுற்றிய சோறு, தயிர், மோர், பாகற்காய்கறி, அத்திப்பழம், மொச்சை, அதற்கு இனமான பொருள்கள் ஆகியவற்றைத் தாம்பிர பற்பத்தைப் புசிக்கின்ற நாள் எத்தனையோ அத்தனை நாட்கள் மறுபடியாகிற (மறுபத்தியம்) வரைக்கும் கூட்டக்கூடாது. அவற்றை மத்தியில் கூட்டிஞல், அவிழ்த பலத்தை இளமையிலேயே கெடுத்துவிடும்; பின் பலம் செய்யாது. மருந்து பலப் பட்டவுடன் தீபனம் வடவாமுகாக்கினியைப் போலிருத்தலின், ஒரு நாளைக்குப் பல்வகையான பண்டங்களைப் பன்முறை புசிக்கினும் காய்ச்சிய இரும்பில் நீர் விட்டால் எப்படி வற்றுமோ,

அப்படிச சீரணித்து விடும். சரீரத்திற்கு அதிக பலத்தை நித்தியமும் கொடுக்கும். இதனைக் கீழ்க் காணும் செய்யுளாலும் உணரலாம் :

''புளியொன்று தவிர வெல்லாம்
புசிக்கினு நவையு றுதை
இளைபெரு நெருப்புக் கீர
மில்லையென் பதுபோ லாகும்;
அளைமுசர் லிகுசங் காடி
யாமில மடாது பாகற்
சுளையா மகட்பழ நெய்
சுதைசருக் கரைமா நன்றே.''

பத்தியம் கடைப்பிடித்தால் நன்மை பயக்கும்.

### செம்பு பற்பத்தின் சிறப்பு.

இது செங்குட்டம், க்ஷயம் போன்ற கொடிய நோய்களைப் போக்கக் கூடியது. இது பாசுபதாஸ்திரத்துக்குச் சமானம். எங்ஙனமெனில், அருச்சுனன் பாசுபதாஸ்திரத்தினால் சயிந்தவனைச் சங்காரம் பண்ணியபொழுது அவனுடைய தகப்பனையும் கொன்றான். அதைப்போலத் தாம்பிர பற்பமாகிற பாசுபதாஸ்திரம், வாதசந்நி விடதோடத்தைப் போக்கி, அவ்வியாதிக்கு முதற்காரணமாகிய அஜீர்ண மந்தாக்கினிக் கபத்தையும் போக்கும் என்பதாம்.

பின்னும், தாம்பிர பற்பத்தைக் காயாம்பூ இரசத்தில் அனுபானித்துக் கொடுக்க, வாத குன்மம் தீரும் என்பதை,

''....ரவிசேயைத் தனஞ்செயன் மாயன் போல்
கொல்வே னெனவு ரைத்தான்....''

என்றும்,

''வயித்திய ஞன கல்வ ணினிமேல்
வடிக்கனை தொடுத்துயிர் குடித்திடுங் கிவனை
தாமச மினிவேண் டாபுரிந் திடுநீ
தனஞ்செய வெனுந்தொறு முனிந்தன னிகலித்
தாம்பிர முதலாம் பெயர்பெறு கின்ற
தனிக்கனை யினத்தொடு நினைத்ததை யெடுத்
தனுபான மந்திர மெனும்பிர யோக
வாக்கினை யாக்கியே போக்கின னதுபோய்
ஆதவன் மகன்கழுத் தைக்கறுக் கென்ன
அறுத்துயிர் பறித்தது தெறித்தது தலையே.''

என்று கூறும் தேரன் மருத்துப் பாரதத்தால் அறிக.

இது நிற்க, முசுமுசுக்கைச் சாறு, துளசிச் சாறு சமன் கூட்டிப் புளியின் வித்தளவு எடுத்து, அதில் தாம்பிர பற்பத்தை எள் முனையளவு சேர்த்து உண்டால், மரத்தின் வேரைத் தோண்டியகற்றக் கிளை முதலியன

பட்டுப்போவதுபோல சாதலைத் தடுத்துவிடும். அதனால், கபம் மூரிய, அதனால் வருகின்ற மற்றைப் பிணிகளும் தீரும் என்பதைக் கீழுள்ள செய்யுள் உணர்த்தும் :

"முசுமு சுக்கையிலை துளவ பத்ரிரசம்
மொழியி வைகலவை செய்ததில்
முனையெ ளிற்சிறிது புளியின் வித்தளவில்
முழுக வைத்திதையு ணயிலவே
முதன்மி ருத்தையடு மதைய டக்கபமு
முரியு மற்றதுவு முரியுமே
முதல றக்கிளைக ளறலெ னப்பிணிகண்
முழுது மற்றுவிடு மிதுமெயே."

மற்றும் தாம்பிர பற்பத்தினை யருந்தியவர்களடையும் சிறப்பைக் கீழ்க்காணும் செய்யுளால் நன்குணரலாம்.

"செம்பின் பொடியுண்டு தேக முரமுண்டு
செம்பின் வடிவுண்டு செய்தவங் கையுண்டு
செம்பின் முடிவெலாந் தெய்வத மாகவோர்
செம்பின் குலந்திகழ் கரதின மாகுமே."

(திருமூலர்.)

## செம்புச் செந்தூரம்.

ஒரு பலம் (35 கிராம்) சுத்தி செய்த செம்புப் பொடியை முப்பத்திரண்டு நாள்களுக்குள்ளே தாமரையிலைச் சாறு, கரந்தையிலைச் சாறு, சண்பகத்தின் சாறு, வேம்பின் சாறு இவை ஒவ்வொன்றாலும் தனித்தனியே அரைத்து, வில்லை தட்டி, கவசித்து உலர்த்திப் புடமிடவும். அப்பொழுது செம்பு, செம்பசுமைநிறச் செந்தூரமாகும்.

## செம்புச் செந்தூரத்தின் பயன்.

| துணை மருந்து. | தீரும் நோய்கள். |
|---|---|
| முலைப்பால் | மாரடைப்பு வாயு |
| வெண்கடுகின் இரசம் | முறைக்காய்ச்சல் |
| கற்கண்டு | வெப்பம். |
| வெந்நீர் | காச ரோகம். |
| நீர்முள்ளியிலைச்சாறு | தாபச் சுரம். |
| தண்ணீர்விட்டான் கிழங்கின் சாறு | தலையிடிப்பு. |

| துணை மருந்து. | தீரும் நோய்கள். |
|---|---|
| பலாக்கனிச் சாறு .. .. .. | மரணவாதை வலி |
| தண்ணீர் .. .. .. .. | சரீரக் கடுப்பு வாதம். |
| வெள்ளுள்ளிச்சாறு .. .. .. | தளர்ச்சி நோய் |
| நெய் .. .. .. .. .. | சத்தி நோய் |
| துளசிச்சாறு .. .. .. .. | செங்குட்ட நோய் |
| வெல்லம் ... .. .. .. | இருமல். |
| கட்டுக் கொடிச்சாறு .. .. .. | வெள்ளை மேகம் |
| வில்வச்சாறு .. .. .. .. | உன்மத்தம். |
| தேன் .. .. .. .. .. | பாண்டு ரோகம். |

### சிறுமுறைகள்.

சுத்திசெய்த செம்புப் பொடியைப் பொன்னுங்காணிச்சாறு விட்டரைத்து, முறைப்படி பத்துப் புடமிட்டெடுக்கச் செந்தூரமாம். இது கைம்முறை.

(வேறு)

தாம்பிரத்தைச் சிவதைச் சமூலத்தின் இரசத்தினாலும், தழுதாழைச் சமூலத்தின் சாற்றினாலும் பொதுவிதிப்படி அரைத்து, வில்லை செய்து உலர்த்தி, சில்லிட்டுச் சீலை செய்துலர்த்தி, புடமிட்டு ஆறினபிற கெடுக்கச் செந்தூரமாம் என்பதைக் கரிசலிற் கீழ்க் காணும் அடியால் உணரலாம்:

"சிவதைதழு தாழையினாற் சிந்தூரமாந் தாம்பிரமும்."

(வேறு)

"இந்திரன் புதல்வன் ..........................
.................பகர் சலசத்துரு முனி அருளாலே
மேற்படி மேற்படி யங்கிகளை பெற்றான்".

(பொ-ரை) கடுசிலைச் சாற்றைக்கொண்டு செம்புப்பொடியை முறைப் படி அரைத்து, ஐந்து புடமிட்டெடுக்க, பதினைந்து நாளில் செந்தூரமாம்.

தே. ம. பாரதம்.

இது நிற்க, செம்பினால் கண்ணோய்கள் தொண்ணூற்றாறும் தீரும் என்று கூறப்பட்டிருப்பதற்குக் காரணம் யாதெனில், கண் தீக்கூற்றை உடைய உறுப்பாகும். செம்பும் மேற்படி பூதாமிசம் பொருந்தியதாதலின், செம்பு கண்ணுக்கு நட்புப் பொருளாகின்றது. ஆதலின், இது நோய்களை அணுகவொட்டாமல் கண்ணைக் காக்கின்றது. இக்காரணத்தை முன்விட்டே காசம் குத்தும் சாஸ்திரமும், கண் மருந்துகள் இடுகின்ற அஞ்சனக்கோலும், மற்றைய சாஸ்திரங்களும் சிறப்பாக செம்பினால் செய்யப்பட்டனவாய் இருக்கின்றன. இதன் உண்மையைக் கீழ்க்காணும் மேற்கோள்களால் நன்குணரலாம்:

காசம் குத்தும் சஸ்திரம்.

''குத்துங் காசம் முத்துப்போல்
கூடிப் பிரியுங் குன்றாமல்
சற்றுங் களிம்பொன் றில்லாமல்
தாமிரச் சிலாகை முப்பட்டம்
போற்றும் ஆறு விரல்நீளம்
முன்னும் பின்னும் விரல்நீக்கி
மாற்று திலையை வைத்தணைந்து
வைத்துக் கட்டிக் குறைதீரே.''

அஞ்சனக்கோல்.

''அஞ்சன மெழுதுங் கோலின்
அளவினை அறியக் கேளாய்
அஞ்சல மில்லாச் செம்பு
வெள்ளியுந் தங்கத் தாலும்
மிஞ்சுநல் விரலா லஞ்சு
விரற்கிடை மிறிடாமல்
கஞ்சமாம் விழியிலாடும்...............''

கண்பற்று அரைக்கும் கல்வம்.

''சோற்றுப் பற்றுந் நிருநீறுந்
தோகை யன்னயாள் முலைப்பாலும்
போற்றுஞ் செப்பு கல்வத்திற்
பொருந்தும் குழவி யாலரைத்துக்
காற்றுப் படாது காத்திருந்து
கண்ணைச் சூழ வரைந்தக்கால்
தோற்றுப்போமே கண்ணோவுஞ்
சொன்னார் முனிவர் சொன்னாரே.''

மற்றும் தாம்பிராதி, மகா தாம்பிராதி, பச்சைத் தாம்பிராதி கனக தாம்பிராதி, குங்குமத் தாம்பிராதி, சரபேந்திரன் போன்ற, கண்ணோய்களுக்குரிய பெருமருந்துகளாகிய மாத்திரைகளில் செம்பு சேர்கின்றதை நயன நூல்களில் பரக்கக் காணலாம்.

மற்றும், தனிச்செம்பு, பிரளயகால ருத்திரன் போன்ற களங்கு களிலும் செம்பின் பற்பம், சன்னிக்காக உபயோகிக்கும் பைர வங்கள் ஆகியவற்றிலும் பெரும்பாலும் சேர்வதைக் காணலாம்.

**செம்பின் நஞ்சுக் குறிகுணங்களும், தீர்வும்.**

சுத்தி, பற்ப, செந்தூர முறை பிசகினலும், அதிக அளவில் மருந்தைப் பிரயோகித்தாலும், பத்தியம் தவறினலும் செம்பால் விடமுண்டாம். அவ்விடக்குறி குணங்களைக் கீழே கண்டுகொள்க:

"பிசகு பற்பமுறை யெனின லத்தினெறி
பிறழு மச்சமிகு மிருமலே
பெருகு விக்கலொடு தலைதி ருப்பிவரும்
பிரமைமி குத்துவரு மறல்கள்வாய்
பெருகி யக்குலரு முரமெ ரிச்சலுறும்
பிளிறல் மெத்தவரு மிவைகள்தீர்
பெலம ருத்துமுறை யுணர்ம ருத்துவர்கள்
பெலமு ரைப்பரிய தவர்செய்வார்."

(பொ-ரை) செம்பின் நஞ்சால், உடல் நன்னெறியினின்று மாறி அச்சத்தை விளைவிக்கும். இருமல், விக்கல், தலைதூக்கவொட்டாத மயக்கம், கள்ளைப் போல ஒழுகாநின்ற வாய் நீர், தொண்டை உணக்கும், மார்பு எரிச்சல், யானையின் பிளிறல் போன்ற ஒலி முதலிய குணங்கள் உண்டாம்.

மேற்குறிப்பிட்ட தீங்குகள் தீர, எலுமிச்சம்பழச் சாற்றில் சுக்குத் தூளைக் கலந்து உட்கொள்ள வேண்டும் என்பர்.

"இவ்வகை புரிந்த தாம்பிர பற்பத்
தியற்கையை யென்சொல்வேன் பிசகின்
இடையறுக் களிம்பாற் கொல்லுவ தது வே
எலுமிச்சை சுக்கினு லதுபோம்,"

என்பதைக் காண்க.

குறிப்பு.—செம்பு சேர்ந்த கண் மாத்திரைகளைப் பன்னிரண்டு ஆண்டுகள் பழகவைத்து பிறகுதான் உபயோகிக்வேண்டும். அப்பொழுதுதான் உலோகம் மருந்துடன் உறவாகும் என்பர்.

## தண்டவாளம்.

### சுத்தி.

தண்டவாளத்தூளை இருப்புச்சட்டியிற் போட்டு, பசு மூத்திரத் தைத் தூள் மூழ்கும்வரை விட்டு அடுப்பேற்றித் தீயிட்டுக் கரண்டிகொண்டு கிண்டிச் சுண்டவைக்கவும். இப்படி மும் முறை செய்யத் தண்டவாளம் சுத்தியாம்.

## தண்டவாளச் செந்தூரம்.

தண்டவாளத்தூள் சேர் ஒன்று (280 கிராம்.), நெல்லிக்காய்க் கந்தகம் சேர் ஒன்று (280 கிராம்) இந்த இரண்டையும் கல்வத்திலிட்டுக் கருவூமத்தைச்சாறு விட்டு ஏழு நாள் அரைத்து, வில்லை தட்டிக் காயவைத்துச் சில்லிட்டு, ஐந்து சீலை செய்து, பூமிக்கு மேல் 1½ சாண் உயரத்தில் புடம் போடவும். இந்த விழுக் காட்டிற்குக் கருவூமத்தைச்சாறு விட்டு, நாலு சாமம் (12 மணி) அரைத்து, முன்போல ஐந்து புடமிட்டெடுக்கவும். பிறகு, கற்றாழைச் சாற்றினால் நன்னான்கு சாமம் அரைத்து, வில்லை தட்டிச் சீலை செய்து, இரண்டு சாண் உயரத்தில் ஐந்து புடம் இடவும். இது பார்வைக்கு நல்ல வர்ணமாக வராவிட்டால், மறுபடியும் இரண்டு புடமிடவும்.

## தண்டவாளச் செந்தூரத்தின் குணம்.

சீரண சுரம், அதிசாரம், கிராணி, அக்கினி மந்தம், மூலம், குன்மம் பாண்டு முதலிய நோய்களுக்கு ஆரம்ப காலத்திலும், நோய் நீங்கியபின்னும் அவற்றின் சல்லியம், இரத்தக் குறைவு இவைகள் நீங்கவும், உடல் வலுக்கவும் கொடுக்கலாம். நோய் பலமாய் இருக்கும்போது கொடுக்கக்கூடாது.

## துணை மருந்தும், தீரும் நோய்களும்.

| | |
|---|---|
| சுக்கு வராகனெடை 1¼(5.1 கிராம்)<br>மல்லி வராகனெடை 1¼(5.1 கிராம்) | இவ்விரண்டிலும் நீர் விட்டு நசுக்கிப் பிழிந்து அதில் தேன் ½வராகனெடை (2.1 கிராம்) கூட்டி, தண்டவாளச் செந்தூரம் கூட்டிக் காலையில் கொடுக்கவும். |
| சுக்கு வராகனெடை 2(8.4 கிராம்)<br>மல்லி வராகனெடை 3(12.6 கிராம்)<br>கோரைக் கிழங்கு வராகனெடை 2 (8.4. கிராம்). | இரண்டு சேர் நீர் (560 கிராம்) 8-ல் ஒன்றாகக் குறுக்கிக் குடி நீர் செய்து, இதில் தண்டவாளச்செந்தூரம் கூட்டி மாலையில் கொடுக்கவும். |

இப்படிப் பத்துத் தினங்கள் கொடுத்தால், சீரண சுரம் நீங்கும்.

பத்தியம்: புளி, நல்லெண்ணெய், நெய், தயிர், பால் இவை ஆகா.

தண்டவாளச் செந்தூரத்தை ¼ வராகனெடை (1.05 கிராம்) தேனில் அனுபானித்துக் கொடுத்துக் கிராம்பு உருண்டையை அருந்த, அதிசாரம், கிரகணி, மூல நோய் முதலியன நீங்கும்.

### கிராம்பு உருண்டை.

கிராம்பு, சாதிக்காய், சுக்கு, சிறுநாகப்பூ, ஏலம் வகைக்கு வராகனெடை 2¼ (9.3 கிராம்) எடுத்து, வாதுமை நெய்யில் அல்லது பசுவின் நெய்யில் தனித் தனியாய் வறுத்துப் பொடி செய்து ஒன்று சேர்த்து, இரும்புப் பாண்டத்தில் இட்டு, நல்லதேன் ¼ சேர் (70 கிராம்) சேர்த்து, அடுப்பேற்றிக் கிண்டி, பக்குவத்தில் இறக்கிக் கொள்ளவும். 2½ வராகனெடை (10.5 கிராம்) அளவு உருண்டை செய்யவும்.

தண்டவாளச் செந்தூரத்தை, இஞ்சிச்சாறு, வராகனெடை 1½ (6.3 கிராம்) கற்கண்டு வராகனெடை 1½ (6.3 கிராம்) சேர்த்துக் கொடுக்க அக்கினிமந்தம் தீரும்.

தணடவாளச் செந்தூரத்தைச் சித்தாதி லேகியத்தில் கொடுக்க. பாண்டு நோய் நீங்கும்.

(வை. ரா. சி.)

## தரா

இது ''மதுகம்'' என்ற வேறு பெயரிலும் வழங்கும்; இஃது எட்டுப் பாகம் செம்பும், ஐந்து பாகம் காரீயமும் கலந்த ஓர் உலோகம்.

(திவா. நி.)

### பொதுக்குணம்.

''சூலையொடு மேகமிவை தோன்றும லோட்டிவிடும்
மேலைவரு காலை விலக்குங்காண்—ஆல
அராமே வியவல்குல் ஆரணங்கே! வெட்டைத்
தராவெனுமு லோகமது தான்.''

(அக. குண்)

(பொ-ரை) வெட்டைத் தரா என்னும் உலோகம் சூலை, மேகம், கபவாதம் முதலிய நோய்களைப் போக்கும்.

### தரா பற்பம்.

தராவைத் தகடாகத் தட்டி, கனமானத் தும்பியிலைக் கவசம் கட்டி, அகலில் வைத்துச் சீலைமண் செய்து, கெஜபுடமிட்டு, மூன்றுநாள் கழித்து எடுத்துப் பார்க்க பற்பமாகும்.

இப் பற்பத்தை மகோதரம், பிலீகம், கவுசை, அகுவை, குன்மம் போன்ற பிணிகளுக்குக் கொடுக்கத் தீரும்.

### (வேறு).

தராத் தகட்டிற்குக் கவிழ்தும்மைத் தழையை அரைத்துக் கவசங்கட்டி, கெஜபுடம் போடப் பற்பமாகும். இந்தப் பற்பத்தைக் குன்மம், நீர்க்கோவை, வண்டுக்கடி, சில்விடங்கள் குட்டம், கயம், சூலை, இருமல், தலைவலி முதலியவற்றிற்குக் கொடுக்கத் தீரும்.

## நாகம்.

### (துத்த நாகம்.)

### ZINCUM
### (ZINC)

உருக்கு முகத்தில் பாம்புபோலச் சீறுதலின், இப் பொருளுக்கு நாகம் என்னும் பெயர் வழங்குகிறது. இது சீறல், பொருமல், பொங்கல், இரைச்சல், ஐம்புகை, சோரம், வாசுகி, வெண்ணாகம், தாம்பிரத்தின் வேதை, வாதத்திற்கு உயிர் என்னும் வேறு பெயர்களினாலும் வழங்கப்படும்.

இயற்கையில் இது மற்றைப் பொருள்களுடன் கலந்தே இருக்கின்றது. பிரித்தெடுத்தபின் இது வெண்மையும் நீலமும் கலந்த நிறமாயும், பளபளப்பாயும், கட்டியாயும் இருக்கும். இதனைக் கம்பிகளாக நீட்டுதலும், தகடுகளாகத் தட்டுதலும் செய்யலாம். இது திராவகங்களில் கரையும். காற்றில் பட்டால் நாளடைவில் இதன் மேல் உப்புப் பூத்துவிடும். இதனுடன் செம்பு சேர்த்து உருக்கப் பித்தளையாம். இப்பொருள், அதிகமாகச் சீன தேசத்திலிருந்தும், பர்மா தேசத்திலிருந்தும் இந்தியாவிற்கு வருகின்றது.

நாகத்தில் இருவகை உண்டு. அவை, (1) பெருங்கண் நாகம் (2) சிறு கண் நாகம் என்பவை. அணுக்கள் அடங்கப் பட்டது சிறு கண் நாகம்.

நாகத்தினுடைய பகைச் சரக்குகள் அண்டம், அபினி, அன்னபேதி, கல்லுப்பு, கிளிஞ்சல், சிங்கி, தங்கம், தரா, நண்டோடு, மிளகு, வளையலுப்பு, வீரம், வெடியுப்பு,

வெங்காரம், வெள்ளி, வெள்ளைப் பாஷாணம் என்றும், நட்புச் சரக்குகள் அப்பிரகம், இரும்பு, கந்தி, காந்தம், காரீயம், கௌரி, நவச்சாரம், சிலாசத்து, சூதம், செம்பு, மயூரச் செம்பு என்றும் கூறப்படுகின்றன.

இதற்குத் துவர்ப்பி, குருதிப்பெருக் கடக்கி, உடல்தேற்றி ஆகிய செய்கைகள் உள. இதன் பொதுக்குணத்தைக் கீழ்ச் செய்யுட்கள் உணர்த்தும் :

''மேகங் கிளர்பேதி வெட்டையழலைத் தணிக்கும்
வேகங் கிராணி விலக்குங்காண்—போகாப்
பரியமுளை புண்ணைப் பயித்தியத்தைப் போக்கும்
அரியதுத்த நாக மது.''

(பொ-ரை) : துத்தநாகம், மேகம், பேதி, வெள்ளை, உட்சூடு, கிரகணி, முளைப்புண், பித்தம், முதலிய நோய்களை நீக்கும்.

''சொல்லி முடியாது துத்தநா கம்பொடியாய்
மெல்லத் துரத்தும் வியாதிகளை—நல்ல
உரனுடைமை யுண்டாக்கும் உண்டவரை யென்று
கிருமிமனை மண்மகிமை கேள்.''

(பொ-ரை): துத்தநாகம் பிணிகளை நீக்கி, உடலுக்கு வன்மையை அளிக்கும்.

### நாகத்தின் சுத்தி முறைகள்.

உருத்திராட்சம் இழைத்தெடுத்த குழம்பு 4½ பலத்தை (157.5 கிராம்) புன்னைப் புட்பத்தின் மகரந்தப் பொடியுடனே கலந்துள்ள தேன் 1⅛ பலம் (39.4 கிராம்) சேர்த்து, அதில் ஒரு பலம் (35 கிராம்) துத்தநாகப் பொடியிட்டு, வெயிலில் வைக்கவும். இவ்விதம் ஒரு மாத காலம் செய்து வர நாகம் சுத்தியாம். இங்ஙனம் சுத்தி செய்த நாகத்தினால் செய்யப்பட்ட பற்ப செந்தூர மருந்து, உயிர் நிலையைத் தேகத்தில் வெகு காலம் உறுதியாய் இருக்கச் செய்யும்.

(தேரன் முறை)

(வேறு)

ஒரு சட்டியில் இலுப்பை நெய்யை ஊற்றி, இரண்டு நவச்சாரக் கட்டியெடுத்து, அந்த இலுப்பை நெய்யுள்ள சட்டியின் இரண்டு பக்கங்களிலும் பக்கத்துக்கு ஒன்றாக அக் கட்டிகளை அந் நெய்யில் அரைக் கட்டி முழுகும்படி வைத்து, துத்தநாகத்தை இருப்புச் சட்டியிலிட்டு, உலையில் வைத்துக் குலுக்கி உருக்கி, 21 முறை அந் நெய்யில் ஊற்றவேண்டும். ஒவ்வொரு முறையும் கழுவி உருக்க வேண்டும்.

(வேறு)

குழந்தை மூத்திரத்தில் பழச்சாறு சேர்த்து, கற்சுண்ணம் போட்டு வைத்துக்கொண்டு, கரண்டியில் ஆட்டுநெய் சிறிது விட்டு நாகத்தை உருக்கி, மேற்படி நீரில் பத்து முறை சாய்த்து எடுக்கில் சுத்தியாம் ஒருகால் சீறுமானுல், நீர்ச்சட்டி விளிம்பின் நான்கு மூலையிலும். நான்கு நவச்சாரத் துண்டுகளை [1½ அங்குலம் (3.75 செ.மி.) நீளம்] நீரில் படும்படி வைக்கவும்.

(அ. கன்ம சூத்திரம் 150)

நாக பற்பம்.

ஒரு பலம் (35 கிராம்) சுத்தி செய்த நாகத்தைப் பொடித்துக் கீழ்ப்பட்டியில் குறிப்பிட்டுள்ள சாறுகளைக் கொண்டு முறைப்படி அரைத்து வில்லை செய்து உலர்த்திப் புடமிட்டெடுக்குங்கால் பற்பமாம்.

| சாற்றின் பெயர். | அளவு பலம். | அரைப்பு நாள். | வில்லை உலர்த்தும் நாள். | கவசம் உலர்த்தும் நாள். | புடம் வரட்டி. |
|---|---|---|---|---|---|
| வெண்சாலிநெற்கதிர்பசுங்காய்ச்சாறு | 5 | 5 | 4 | 1 | 36 |
| நெல்லிஇலைச் சாறு .. .. | 5 | 5 | 4 | 1 | 36 |
| கருப்பஞ்சாறு .. .. .. | 5 | 5 | 4 | 1 | 36 |
| குறுஆல்வேர்ப்பட்டைச் சாறு .. | 5 | 5 | 4 | 1 | 36 |
| வெள்ளல்லிச் சமூலச் சாறு ... .. | 5 | 5 | 4 | 1 | 30 |
| காந்தள் சமூலச்சாறு ... ... | 5 | 5 | 4 | 1 | 30 |
| தண்ணீர்விட்டான் கிழங்குச் சாறு ... | 5 | 5 | 4 | 1 | 30 |

(வேறு)

''கூறவே நாகபற்பஞ் சொல்லக் கேளாய்
குலவியதோர் நாகமொரு கட்டி வாங்கி
ஆறவே அயக்கரண்டிக்குள்ளே யிட்டஃ
தடுப்பேற்றிக் கரிசாலைச்சாறு நாழி
வீறுடனே நாற்சாமம் சுருக்குப்போடு
விதமுடனே நாகமது நீறிப்போகும்
காறுடனே கரிசாலைச் சாறி லாக்கால்
கனசருள் ளிச்சாற்றுல் நீறுந்தானே.''

'' நீறுமடா இல்லையெனில் சிறியா நங்கை
நிகரின்றிக் குகைதன்னில் கீழ்மேலுப்பை
மாறுபடா நாகத்தை நடுவே வைத்து
வாய்மூடி யுலையினிலிட் டூது
ஊறுடனே பொருமியது நீறிப்போகும்
உற்பனமா யனுபான மறிந்தங்கூட்ட
காறுமே யிளைப்பிரும லீளை காசம்
காணுது வைத்தியரே விரைந்து பாரே.''

(போகர் 700)

மேற்குறித்தவாறு செய்து முடித்த துத்தநாகப் பற்பமானது, நோயினால் வருகின்ற மெய் இடையூறுகளையெல்லாம் மாற்றித் தேகத்தைச் செம்மைப்படுத்திக் காப்பாற்றும். அஃது எப்படி என்றால், உலோகத்தினால் செய்த பாண்டங்கள் மெலிந்து தேய்ந்து ஓட்டையாய்விட்டால் அப்போது துத்தநாகத்தைப் பற்றாக வைத்துப் பற்றவைத்தால், எப்படி அஃது ஓட்டையை மாற்றிச் செம்மைப்படுத்துமோ, அப்படியே மெலிந்துபோன சரீரத்தைக் காப்பாற்றி நன்மையைத் தரும். இதனைக் கீழ்ச் செய்யுள் உணர்த்தும் :

''எய்திளைத் திடுமி யாக்கை
இயங்குபு திரிந கம்போற்
சொத்தமாக் குதற்குச் சுண்ணத்
துத்தநாகத்தின் வேறில் ;
வித்தகக் காட்சிக் கஞ்சா
வெண்கலம் பித்த ளைக்கே
வைத்தரைஃதே லுண்மை
மானிடர்க் கிலக்கி தாமே.''

மேற்படி பற்பத்தின் அளவு யாதெனில், அவரைக் கொட்டையில் ஆறில் ஒரு கூறு உத்தமம்; இரண்டு கூறு மத்திமம்; மூன்று கூறு அதமம்; நான்கு கூறு அதமாதமம்; ஐந்து கூறு ஒருபுடைத் துணிவு; முழுக்கூறு முழுமைத் துணிவாம்.

இது நிற்க, மருந்து நன்றாய்ச் செய்து முடித்திருந்த போதிலும், அளவுப் பிரயோகத்தில் பிசகு வந்தால், மிகுந்த தீங்கு நேரிடும். அஃது எப்படி என்றால், மயிலிறகு அதிக இலேசாய் இருப்பினும், அதை அளவின்றி ஒரு வண்டியில் ஏற்றினால், அவ் வண்டியின் அச்சாணி ஒடிந்து முதலுக்கே நஷ்டம் உண்டாவதுபோல, நூல்கள் குறிப்பிட்ட அளவுகளை விட்டு அதிக அளவிலே மருந்தைப் பிரயோகித்தால், அதை உண்ட பிணியாளனுடைய உடல் மேற்படி சகடத்தைப் போலக் கெட்டு இன்னலை அடையும். இதை வள்ளுவர் குறளில்,

''பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டஞ்
சால மிகுத்துப் பெயின்.''

என்றும், அகத்தியர் இருபத்தோராயிரத்தில்,

''மொழிந்ததுகே ளப்பனே யவிழ்த நன்மை
முறையான போதுமுனே யளவை வேணும் ;
அழிந்துவிடு மல்லக்கா லதுவே காலன்
ஆகுமடா புலத்தியனே! அறிந்து செய்வாய் ;
இழிந்தபல னைமயி லிறகென் றாலும்
ஏற்றினால் மிகைச்சகட மிறுதி காட்டும் :
மழிந்தமுது மறையாயுள் வேத மான
வாகடத்தி னிலைமையிது மதித்துப் பாரே.''

என்றும், சட்ட முனிவர் வாகடம் ஆயிரத்தில்,

''அனுமான மில்லையடா வாகடம் ஆயிரத்தில்
ஆயினுமே லதுமிதமா மளவையாகும்
முன்னையான வதுவதறி லுண்ட பேர்க்கு
மோசமது தப்பாது முடிக்கு மப்பா!
பினுமதனுக் குவமானம் வேறொன் றில்லை
பீலிபெய் சாகாடு பெயரொன்றுமே
முனிவர்களுஞ் சித்தர்களு மிதுவே சொன்னார்
மூவகையா கியவினைக்கு முதலி தாமே.''

என்றும் கூறியிருத்தலால் அறிக.

நாகபற்பத்தைப் புசிக்கும்பொழுது நெய்தல் நிலவாசத்தை நீக்கி, மருத நிலத்தில் வசிக்க வேண்டுமென்றும்; ஆனி, பங்குனி, மார்கழி ஆகிய மூன்று மாதங்களையும் நீக்கி, மற்றைய மாதங்களில் அருந்த வேண்டுமென்றும் கூறப்பட்டுள்ளன.

நாகபற்பத்தைக் கீழ்க்காணும் அனுபானங்களில் கொடுத்துவர அவைகளின் நேரே குறித்துள்ள நோய்கள் நீங்கும்.

| துணை மருந்து. | தீரும் நோய்கள். |
|---|---|
| செருப்படை இலைச்சாறு .. | வாதப் பிணி. |
| வன்னியிலைச் சாறு .. | மந்தப் பிணி. |
| தண்ணீர்க்காணிலைச் சாறு | கனமிகுதிப் பிணி. |
| நெல்லிச் சமூலச் சாறு .. | அசாத்தியமான காய்ச்சலுங் குளிருமாகிய விடசுரப் பிணி. |
| சர்க்கரை .. .. | சயரோகம் |
| கருப்பஞ்சாறு .. .. | மேக வெட்டை. |
| மோர் .. .. .. | சத்திகுன்மம். |
| பால் .. .. .. | அத்திசுர முதலிய விடாமலெரிகின்ற சுரங்கள். |
| நெய் .. .. .. | சன்னி ரோகங்கள். |
| வெள்ளைவேளைச் சாறு .. | வெண்குட்ட முதலிய பாண்டுவைப்பிணி. |
| தண்ணீர் .. .. | கருங்குட்ட முதலிய மேககுட்ட வினைகள். |
| வெண்ணெய் .. .. | கை, கால் உதறிக் கீழே தள்ளுகிற விதிர்ப்பு வாதம். |
| பன்னீர் .. .. .. | கபத்தைப் பற்றி வரும் சேத்மசந்நிப்பிணி. |
| புளித்த காடி நீர் .. | அரோசகப் பிணி. |
| கட்டுக்கொடியிலைச் சாறு .. | பித்த சந்நிப்பிணி. |
| தயிர் .. .. | தீர்க்க வினையான சயரோகம். |

| துணை மருந்து. | தீரும் நோய்கள். |
|---|---|
| முலைப்பால் .. .. | சோகசந்நி, மகாமூர்ச்சையுடன் கூடிய சந்நி, நாவறட்சி கண்ட அதிசாரச் சந்நி, வெக்கைப் பிணிகளினலுண்டான சந்நிகள். |
| மனிதன் சிறுநீர் .. .. | நேத்திரவாயு, பித்தகாசப் படலம், பாரிசவாயு, பெரும்பாடு, வேகசுரம். |
| உமிழ்நீர் .. .. .. | பல்லைமகோதரம், நீர்க்கட்டு, வெட்டை, பாரிச சந்நி, மார்பு நோய் விப்புருதி. |

இனையே திருமூல நாயனர் சுருக்கி—

'' ஆந்துத்த நாகத் தடலைக் கனுபானஞ்
சாந்தச் செருப்படைச் சாறு முதலாக
மாந்தத் தலைப்பிணி மாறு மிதுநிசம்
ஈந்தத் தயிரை யிறுதியில் வைத்தாரே.''

என்றும் பாம்பாட்டிச் சித்தர்,

'' மாதுத்த நாகத்தைச் சாம்ப லாக்கி
மாட்டுஞ் செருப்படைப் பாலி னலே
யேதுக்கென் றுலிறை யாதி நோயை
யிப்பா லொழிக்கவென் றடாய் பாம்பே!''

என்றும், தேரர்,

'' கானலை யாமலகை கன்னலிக்கு மோர்சுதை நெய்
ஊனலை யாமலகை காசமெரி—கானலை
பாண்டுமையால் வெண்ணெய் பனிகாடி, வல்லியளை
பாண்டுமையா லைகைவெறி பாழ்.''

என்றும் கூறியிருத்தலால் தெளிக.

புடநடை.

''தம்பிக்கக் காளைச் சதியாக் கலின்மூர்ச்சை
தம்பிக்கக் காளைச் சதியாவா—தம்பிக்க
வல்லாரை யார்பொருவு வார்துத்த நாகமறி
வல்லாரை யார்பொருவு வார்.''

(பொ-ரை) தம்பிக்கு அக்காளை சதியாக்கலின்—தம்பிக்குத் தமக்கையை முறை பிறழ மணம் செய்கின்ற பொல்லாங்கைப் போன்று, மூர்ச்சை தம்பிக்க —மூர்ச்சையாகிய வாயு தம்பிக் கும்படி கடத்தின் வாயை மூடிச் சந்திற்கு மண்பூசி மறைத்தல் போல மேற்குழையில் சுவாசத்தை ஓடவொட்டாமற்படிக்கு நிறுத்தி, காளை—சேனுதிபதியாகிய கபம் மீறி, பலத்துடன் மேலிடும்பொழுது, விழிகள் அசைவில்லாமல் விழித்தபடியும் நீர் பெருகியும், மயிர்க்கால் தோறும் விடா வியர்வை பெரு கியும், வாயில் நுரை தள்ளியும், பேச்சில்லாதபடியும், இருக்க, சதியா—(அரசாகிய வாதத்தையும், மந்திரியாகிய பித்தத் தையும்) நிராகரித்து அதிகரித்த சேனைத் தலைவனைக் கோட்டை யாகிய மெய்யில் வைத்தால் பலப்படுவான் என்ற அவநம்பிக்கை யினுல், வாதம்பிக்க—அரசனுகிய வாதம் மேலிட்டுக் கீல்கள் நாடி நரம்புகள் முதலிய உறுப்புகளிலெல்லாம் தேள் கொட்டி னுலொத்த கடுப்பையும் வேதனையையும் உயிர் பிரிந்து போவது போன்ற வாதனையையும் பண்ணுகின்ற வாதமாரக மூர்ச்சை சந்நிக்கு, வல்லாரை—நாகபற்பத்தை வல்லாரையிலைச் சாற்றில் அனுபானித்துக் கொடுக்க வேண்டும்; ஆர்— மாரடைப்பு முதலிய மேற்படி குறி குணங்களுடனே மதுமயக் கத்தில் உள்ள பேச்சும் ஆட்டமும், முதலிய குணங்களையுடைய பித்தமாரக மூர்ச்சைச் சந்நிக்கு, மருந்தைத் திருவாத்தியிலைச் சாற்றில் அனுபானித்துக் கொடுக்க வேண்டும், பொருவுவார் —மேற்படி குணங்களுடனே பல் கிட்டி, நாவரட்சியாகி, மரத் தினுல் செய்தது போல நாவும், பனங்கருக்கைப் போல் நாவிளிம்பும் உதட்டின் விளிம்பும், தோஷ குணத்தைக் காட்டித் தாகத்தை அதிகப்படுத்தி மயக்கத்தை உண்டு பண்ணுகின்ற கப மாரக மூர்ச்சை சந்நிக்கு, தும்பையிலைச் சாற்றில் பற்பத்தை அனுபானித்துக் கொடுக்க வேண்டும்; துத்தநாகமறி—இந் நன் மருந்தாகிய துத்தநாகபற்பம் கிரமம் தப்பினுல் தேகத்தை இரட்சிக்காது பட்சிக்கும்; வல்லாரையார் பொருவுவார்— இதைக் கிரமப்படி பத்திய வித்தியாசம் வாராதபடி நிருவாகம் பண்ணப்பட்டவர்களுக்கு நிகரானவர்கள் இவ்வுலகில் யார்? ஒருவரும் இல்லை.

இதனை மாபுராணத்தில்,

"வாதமுதன் மூவகைகண் மாறுபட வந்த
பேதமுறு மாரக வபேதமிகு மூர்ச்சை
வீதலனு பானமது மேலுரைவ லாரை
யாதவடி யாகுமவை யாருமறி வாரே."

என்றும், கோரக்கர் தம் நூலில்,

"மாரக மூர்ச்சைசனி வாதமு னுகவர
னுரத மாதவர்போ னுடிய வல்லாரை
யாரசிவ னுர்வெற்றி யாமனு பானமிதே
தாரணி வாகடநூல் சால்பிது காண்பரே."

என்றும் புகன்றிருப்பதால் உணர்க.

(வேறு)

மேகவெட்டை வெப்பத்தினுல் உடலில் உண்டாகும் விரணப் பிணிகள் அறுவகைப்படும் அவை (1) கடினவாத விரணம், (2) லலிதவாத விரணம், (3) கடின பித்த விரணம், (4) லலித பித்த விரணம், (5) கடின கப விரணம், (6) லலித கப விரணம் என் பன.

இவ்வறுவகைப் பிணிகளின் குறி குணங்களையும், இவைகளைத் தீர்க்கும் வகையையும் கீழே காண்க:

மேகவெட்டை வாதக் கடின விரணத்தில், மேல் மூச்சு, விக்கல் வயிற்று வலி, பொருமல், பசிமந்தம், புளியேப்பம், விடாச்சுரம் இடுப்பில் கடுவனைப் போலப் பட்டையாய்ப் பருக் கட்டி உண்டாய் அதில் திமிரும் தினவும் கடினமும் பொருந்தியிருக்கும். இதற்கு, நாகபற்பத்தைக் குளிர்ந்த நீரில் வேப்ப நெய்யை அரைப் பங்குக் கூட்டிக் கொடுத்து, மேல் பூச்சிற்கும் மேற்படி கலப்பையே (நெய் மாத்திரம் சரியளவுகூட்டி) உபயோகித்து, இலுப்பைப் பிண்ணாக்கை அரைத்துத் தேய்த்து வெந்நீர் விட்டுச் சுத்தி செய்யவும்.

மேகவெட்டை வாத லலித விரணத்தில், வலத்தோள், கை, இடுப்பு இவ்விடங்களில் வீக்கம், காதில் பரு, பக்கத்தில் சொறித் தேமலைப் போலத்தினவுடன் எரிச்சல், வாய்நீர் பெருகல், வயிற்றில் எரி குன்மத்தைப்போன்ற எரிச்சல், குடல் புரட்டல், விக்கல் முதலியன காணும். இதற்கு, நாகபற்பத்தைப் பனங்கள்ளில் தேங்காய் நெய் சேர்த்துக் கொடுத்து, மேற்பூசித் தேய்த்துக் கழுவப் பயற்றையும் வெந்நீரையும் உபயோகிக்கவும்.

பித்தத்தினுல் உண்டாம் கடின விரணத்தில், குடல் முறுக்கி நெஞ்சடைத்தல், புளியேப்பம், விக்கல், வாந்தி, செரியாமை, பேதி, வயிற்றில் எரிச்சல், உடலில் காங்கை, புயத்தில் புள்ளித் தேமல், பக்கத்தில் சொறி சிரங்கு, புண்ணுண்டாய்த் தினவு, எரிச்சல் இருக்கும். இதற்கு அனுபானம், காய்ச்சிய பட்டைச் சாராயமும் ஆமணக்கு நெய்யுமாகும். தேய்த்துக் கழுவச் சீக்கிரான் இலையை உபயோகிக்க வேண்டும்.

பித்தத்தினுல் உண்டாம் லலித விரணத்தில், விட்டுவிட்டுத் தோன்றும் உடற்காங்கை, வாந்தி வருவது போலிருத்தல், பசி கண்டு மறைதல், வயிற்று வலி, அஜீரணம், பேதி, முழங்கால் அடியில் கட்டிகண்டு, பிறகு புண்ணுகிப் புண்ணீரும் இரத்தமும் கசிந்துகொண்டு தினவைக் கொடுத்தல், இவற்றிற்கு அனுபானம் வெந்நீரும் இலுப்பை நெய்யும் ஆகும். கழுவுவதற்கு புளியிலையிட்டுக் காய்ச்சிய நீரை உபயோகிக்கவும்.

கபக் கடின விரணத்தில், வாய் நாக்குகளின் அடியில் புண், பல் வீற்றடியில் இரத்தம் வடிதல், வாய்மூச்சு நாற்றம், வயிற்று வீக்கம், வலியின்றி கால் வீக்கம், பசியின்மை, கால் பக்கம் இவ்விடங்களில் கட்டியும் புண்ணும் உண்டாய் அதில் சீழ் இரத்தம் வடிதல்

முதலியன உண்டாகும். இதற்கு அனுபானம் முந்திரிப் பழச் சாறும், காட்டாமணக்கு நெய்யுமாகும். தேய்த்துக் கழுவச் சிகைக் காய் பயன்படுத்த வேண்டும்.

கப லலித விரணத்தில், அதிமூத்திரம், அதிதாகம், வாய்ப்புண், கை வீங்கி வெடித்துப் புண்ணாகிச் சிலை நீர் காணல், சில சமயம் பக்கு கட்டி ஆறுதிருத்தல் முதலியன உண்டாகும். இதற்கு அனு பானம் தேனும் பிரமதண்டி நெய்யுமாகும். தேய்த்துக் கழுவக் கொள்ளினை உபயோகிக்கவும்.

மேற்கண்ட நோய்களுக்குத் துத்தநாகப் பொடியை இரண்டு மாதம் உபயோகித்தல் நல்லது. நாக்கு வெடிப்புப் பிணியைப் போக்க, மேற்படி துத்த நாக பற்பத்தையே உபயோகிக்க வேண் டும்.

இதனை மாபுராண ஆசிரியர் கீழ்ச் செய்யுளால் விளக்கியிருக் கின்றார் :

''வாதமுதற்பிணி மூவகை மேகத்தை மன்னியறு
பேதவிரணமு மீதென வந்தது பின்னகல
நீத வழியனு பான வவிடத்தி னேரறிந்து
மாத மிரண்டுவ ரைக்கும்முண் பார்சொன்ன வாகடரே.''

நாகபற்பம் (வேறு)

நாகம் உருக்கு முகத்தில் சிறிது தீய்ந்து சிறுபொறியுண்டாம் சம யத்தில், இவ்விரண்டு குன்றிமணி (520 மி. கிராம்) அளவு அபின் கொடுத்துத் தேய்த்து, நன்றாய் ஊதிவிடப் பொரி போலப் பூக்கும். அதை அரைத்துத் துணியில் வடிகட்டி உபயோகிக்கவும்.

மேற்படி தூளுக்குச் சிறு அம்மான் பச்சரிசி துத்தி இவற்றின் சாறு களைத் தனித்தனியாய் விட்டு அரைத்து, நன்றாக புடமிட்டெடுத் தலும், வழக்கம். இதனைச் சீதபேதி, இரத்த சீதபேதி முதலிய நோய்களுக்குச் சிறப்பாய் வழங்கலாம்.

(வேறு)

சுத்தி செய்த நாகம் அரைப் பலத்தைக் (17.5 கிராம்) குகையி லிட்டு உருக்கிக் கண்விட்டாடும்போது, சிற்றாமணக்கிலையைக் கசக்கி ஐந்தாறு சொட்டுப் பிழியச் சத்த முண்டாகும். மறுபடியும் ஐந் தாறு சொட்டுப் பிழியச் சத்தமடங்கும். மேற்படி நாகத்தின்மீது படும்படி துருத்தியால் ஊதி மறுபடியும் ஐந்தாறு சொட்டுப் பிழிந்து சிற்றாமணக்கின் வேரினால் கிண்ட, மல்லிகைப் பூப்போல நீறும். இதனை வெள்ளை, வெட்டை, கபம், குன்மம், மூலம் முதலிய பிணிகளுக்கு வழங்கலாம். தாது விருத்தியுண்டாம்.

ஆந்திரப் பிரதேச வட சர்க்கார்களில் துத்தநாக பற்பத்தை குழந்தைகளுக்கு வயிற்றில் காணும் கட்டிகளுக்கு (ஈரல் வீக்கம்) சிறந்த மருந்தாக பன்னெடுங்காலமாகப்பயன்படுத்தி வருகின்றனர் துத்தநாக பற்பம் 65 மி.கிரா. ஆனந்தபைரவம் 65 மி.கிரா. இரண்டையும் சித்தரத்தைத் தைலம் 4 மி. லிட். இஞ்சித் சுரசம் 2 மி. லிட். தேன் 2 மி. லிட். கலவையில் காலையில் கொடுத்து மாலையில் தேனில் பற்பத்தை மாத்திரம் வழங்க வேண்டும். ஒரு வாரம் கழித்து குணம் கண்டவுடன் தைலத்தையும் சுரசத்தையும் ஒரு நாள் விட்டு ஒருநாள் கொடுத்தது, பற்பத்தை மாத்திரம் தேனில் மத்தித்து காலை மாலை கொடுக்க வேண்டும்.

## நாகச் செந்தூரம்.

ஒரு பலம் (35 கிராம்) சுத்தி செய்த நாகப்பொடியில், காந்தள், அல்லி, பாகல், சங்கஞ் செடி, அகத்தி, கிளிமல்லிகை இவைகளின் அரும்புச் சாற்றைத் தனித் தனியாய் விட்டு, முறைப்படி அரைத்து வில்லை செய்துலர்த்திக் கவசித்துப் புடமிட்டெடுக்கின் செந்தூரமாகும்.

| துணை மருந்து. | தீரும் நோய். |
|---|---|
| நாவற்கனி ரசம் | நீர்க்கோவை. |
| நெய்தற்பூ ரசம் | சேத்ம நோய். |
| மாதுளம் பழச்சாறு | உடல் வலி. |
| தண்ணீர் | பிடிப்புப் பிணி. |
| வெந்நீர் | சேத்ம சந்நி. |
| சர்க்கரை | காரகம். |
| தாமரைப்பூச்சாறு | சரீர வீக்கம். |
| தயிர் | எலும்புருக்கிக் காய்ச்சல். |
| கொன்றைச்சாறு | அதிசாரம் |
| முலைப்பால் | வாதகுன்மம். |
| வெண்ணெய் | பயித்தியப் பிரமை. |
| கள் | பித்தசத்திப் பிணி. |
| தேன் | நடுக்குவாதப் பிணி. |

(வேறு)

இலுப்பை நெய்யில் சுத்தி செய்த நாகத்தைப் புதுச் சட்டியி லிட்டு உருக்கி, சீதாச் செங்கழுநீர்ப் பூண்டு இட்டு, அயக்கரண்டி யால் நான்கு சாமம் கிண்டினால், நாகம் மாண்டு போகும். பிறகு சீதாச் செங்கழுநீர்ச் சாறுவிட்டு, அரைத்துக் கனமான வில்லை செய்து காயவைத்து, ஓட்டிலிட்டு மேலோடு கொண்டு மூடி வலுவாய் சீலைசெய்து கஜபுடமிட்டெடுத்துத் திரும்பப்பொற்றலைச் சாறுவிட்டரைத்து, மூன்று முறை புடமிட்டெடுக்க, நாகம் செந்தூரமாகும். இச்செந்தூரம் மஞ்சள் நிறச் சிவப்பாய் இருக்கும்.

அளவு : பணவெடை (488 மி. கிரா.)

துணை மருந்து : பசு வெண்ணெயில் குழைத்து இருவேளை வீதம் அரை மண்டலம் கொள்ள, மூலம், மூலவாயு, மேக நோய் பித்தம் நீங்கும்.

பத்தியம் : கரப்பான் பண்டம் ஆகாது.

நாகச்செந்தூரம் (வேறு)

நல்ருய்ச் சுத்தி செய்த சிறுகண் நாகம் நான்கு பலம் (140 கிராம்), எடுத்து, ஒரு சட்டியிலிட்டு, அடுப்பேற்றி, அந்த நாகம் நன்ருய் உருகுகின்ற சமயத்தில், வெடியுப்பு, ஓமம், சீவின சுக்கு, பூசு மஞ்சள், இந்நான்கும் சமமாய்ப் பொடி செய்து, ஒரு படி (1.3 லிட்) எடுத்துக்கொண்டு அந்த நாகத்தில் கொஞ்சம் கொஞ் சமாகப் போட்டு, அத்தூள் ஆகும்வரை வறுக்க வேண்டும். அப் படி வறுக்கப்பட்ட அந்த நாகத்தூளை, சிவப்பு நாயுருவிச் சமூலம் இடித்து, முன்போலவே கொஞ்சம் கொஞ்சமாய் ஒரு படி (1.3 லிட்.) தூள் போட்டு வறுத்து, அந்தத் தூளைப் பிறகு எலுமிச்சம் பழச் சாற்ருலரைத்து, மாதுளம்பூ நிறம் வரும் வரைக்கும் புடம் இட்டு வைத்துக்கொண்டு, இந்தச் செந்தூரத்தைப் பணவெடை (488 மி. கிரா.) திரிகடுகு சூரணத்துடன் சேர்த்து (நெய்யிலாவது தேனிலாவது, பசுவின் பாலிலாவது) கொடுத்தால், சில நாட்களில் குன்மம், பெரு வயிறு, கவிசை, மூலம், மேக நோய்கள், கால் கை எரிச்சல், மேகத் தடிப்பு, குஷ்டம், விந்து நஷ்டம், வெள்ளை முதலிய நோய்கள் தீரும்.

அனுபானம் நாளளவு இவற்றை கூருமையால், ஏற்றவாறு கொள்க.

வறுக்குஞ் சரக்குகளுக்குத் தனித்தனி எடை கூருமையால், எல்லாஞ் சமமாகச் சேர்ந்து ஒரு படி (1.3 லிட்). என்றெழுதப் பட்டது. அவ்வாறே நாயுருவிக்குங் கொள்க. சிவப்பு நாயுருவி என்றது வழக்கு.

## பித்தளை BRASS

இஃது ஆரகூலம், சிருணம், இரதி, மாயாபுரி என்னும் வேறு பெயர்களினாலும் வழங்கப்படும். பித்தளை, செம்பும் துத்தநாகமும் சேர்ந்த கூட்டு உலோகமாகும். இதில் நூற்றுக்கு முப்பந்தைந்து பங்கு துத்த நாகம் கலக்கப்பட்டிருக்கிறது. இது கலப்பு உலோகமென்பதை,

''ஈயம் செம்பிரும் பிரசித மென்பவும் புணர்பால்
தோயும் பித்தளை.''

என்று திருவிளையாடல் இரசவாதம் செய்த படலம் செய்யுள் 23-ல் கூறியிருப்பதால் உணரலாம்.

**சுவை :** துவர்ப்பு, உப்பு.

**வீரியம் :** சீதம்.

**பிரிவு :** இனிப்பு.

**செய்கை :** உடல் தேற்றுதல், உடல் உரமாக்குதல்.

### பொதுக்குணம்.

''தாதுவிர்த்தி யுண்டாகுந் தாபச் சுரம்போகும்
சீதளமாம் வாதஞ் சிதையுங்காண்—பூதலத்துள்
மாட்டியதோர் பித்தகுன்மம் மாறும் மலர்த்திருவே!
நாட்டியதோர் பித்தளையினால்.''

(அக. குண.)

(பொ-ரை) பித்தளையினால் தாதுவிர்த்தி உண்டாம். சீதளம் விருத்தியாகும் தாபசுரம் போகும். வாதம், பித்தகுன்மம் இவை நீங்கும்.

வேறு மருத்துவ நூலில், பித்தளை, ராஜரீதி ''காதுகளிம்பு'' என்று இரு வகைப்படும் என்றும், அதற்குச் சோதனை இன்னதென்றும், அவற்றால் பாண்டுக் கிருமிகள் நீங்கும் என்றும் கூறப்பட்டிருக்கின்றன.

வெண்கலத்தைப் போன்றே சுத்தி, பற்பம் முதலியன செய்து கொள்ள வேண்டும் என்று ''அனுபோக வைத்திய பரம ரகசியம்'' என்னும் நூல் கூறும்.

### வெண்கலம், தரா, பித்தளைப் பற்பம்.

"வெண்கலந் தராபித் தளைமூன்றும் வெவ்வேறு
யங்கரப் பொடியது வாக்கிடு மாட்சியும்
வீரனும் மெட்டொன்று விட்டரை சங்கநீர்
பாரிற் புடங்கள் செய் பற்பம் தாய்விடும்
பெருநூல் வழியனு பான மறிந்திட
வருகும் பணவெடை யிட்டிடச் சுரநோய்
மண்டைநோய் கண்ணோய் செவிநோய் வளர்பெருந்
தொண்டைநோ யண்டநோ யும்பல் லீறுநோய்
உதட்டில் வியாதி யுறுங்கன்ன நோய்களும்
மார்புதன நோயும் வயிறு மூலநோய்
கால்நோய் படைநோய் கணத்தினில் மாறுமே."

(பொ-ரை) வெண்கலம், தரா, பித்தளை இவைகளைத் தனித் தனியாய்ப் பொடி செய்து, ஒவ்வொன்றிற்கும் ஏமமாட்சிகம் (பொன் நிமிளை), வீரம் எட்டில் ஒரு பங்கு வீதம் கூட்டி, சங்கத் திராவகம் விட்டு அரைத்துப் புடமிடின் பற்பமாம்.

மேற்படி பற்பங்களைப் பெரு நூல்களில் கூறிய அனுபானங்களில் பணவெடை(488 மி. கிரா.) கொடுக்கச் சுர நோய், மண்டை நோய், கண்ணோய், செவி நோய், தொண்டை நோய் அண்ட நோய், பல் ஈறு இவைகளைப் பற்றிய பிணிகள், உதடு, கன்னம், மார்பு, தனம், வயிறு, மூலம், கால் இவற்றின் நோய்கள், படை முதலியன நீங்கும்.

பித்தளைப் பற்பத்தை இரண்டு (130 மி. கிரா.) முதல் நான்கு உளுந்தெடை (260 மி. கிரா.) வரையில் பாலில் அனுபானித்துக் கொடுக்க துவர்ப்பி, கோழையகற்றி, சிறுநீர் பெருக்கியாக வேலை செய்வதோடு, இரத்த மூலம், பாண்டு, வயிற்று வலி சுவாசகாசம் முதலிய் நுரையீரலைப் பற்றிய பிணிகளையும் நீக்கும்.

(வேறு)

## பொன்.
## AURUM GOLD.

தங்கம், ஆரியர் வருகைக்கு முன், நாகரிக உலகெங்கும் பரந்து கிடந்த ஸெமித்திய திராவிட மக்களனைவரிடையேயும் பரவி யிருந்தது. சிறப்பாய், எகிப்து, அஸ்ரியா, மினோவா, எருதுஸ்கா, இடங்களில் உள்ள மக்கள் பண்டைக்காலந்தொட்டே பொன்னை என்னும் வழங்கியதுடன், அதன் வாணிபத்திலும் முதன்மை பெற்றிருந்தார்கள்.

இன்று உலகில் தங்கம் மிகுதியாய்க் கிடைப்பது, தென்னாப் பிரிக்கா டிரான்ஸ்வாலிலுள்ள இராந்து என்ற பாறையிலேதான். அதன்பின் இது படிப்படியாய்க் கானடா, உருசியா, அமெரிக்கா ஒன்றிய நாடுகள் ஆகியவற்றுக்கும் உரியதாயிற்று. உலகின் பொன் விளைவில் இந்தியாவின் பங்கு நூற்றுக்கு மூன்றுதானுகிறது.

இதுவும் குறைந்து வருகிறது. இச் சிறு பகுதியில், நூற்றுக்குத் தொண்ணூற்றைந்து பகுதி, மைசூரைச் சார்ந்த கோலாற்றுத் தங்க வயலிலும், அதனைச் சார்ந்த வயல்களிலும் கிடைக்கின்றது. இக்கோலாற்றுச் சுரங்கப் போக்கில் ஒன்பது பாறைகள் இருப்பதாகக் கூறப்படுகின்றது. அவற்றுள் தலைமையானவை, கோலாறு, மைசூர், ஊர்காம், நந்திதுர்க்கம், பாலக்காட்டம் என்பவையாம்.

தங்கம் நுண்பொடியாய் மணலுடன் கலந்தும், கலவைக் கற்களிலும் (Nuggetrs) பாறைகளிலும் கிடைக்கின்றது. காவிரி ஆற்றில் பொன் கலப்பு உண்டு என்னும் குறிப்பினாலேயே அதற்கு ''பொன்னி'' எனப் பெயரிட்டிருக்கின்றனர். மற்றும் பல திடப் பொருள்களிலும் பாதரசத்திலும் பொன் கலந்திருக்கின்றது.

பொன் சேகரிப்பவர், பொன் கலந்த மண்ணைப் பரந்த ஓடுகளில் இட்டு நீருடன் கலந்து, சுழற்றிக சுழற்றிச் கொட்டுவர். பொன், கனமான பொருளாதலால், மண்ணும் மணலும் நீருடன் கலந்து போகும்போது, அஃது அடியில் நின்றுவிடும். பொன்பொடிகளையும் பிற திண் பொடிகளையும் இங்ஙனம் பிரித்தெடுப்பர். அதிலிருந்து பொன்னைப் பிரித்தெடுக்க அக்காலத்துச் சிறந்தமுறை புடமிடுவதேயாகும்.

பொற்கலவையை உருக்கி நீட்டித் தகடாக்கி, அரை (1.25 செ.மீ.) அல்லது அரையே அரைக்கால் அங்குல (1.36 செ.மீ.) அகலமும், இரண்டு (5 செ. மீ.) அல்லது இரண்டரை அங்குல (7.5. செ.மீ.) நீளமும் உள்ள துண்டுகளாக்கி, அவற்றைப் புளி நீரால் கழுவுவர்; பின்பு உப்பும் இருப்புக் கந்தகியும் (Iron Sulphale கலந்த செங்கற் பொடியில் இட்டுப் புரட்டி, இரண்டு ஓட்டுச் சில்லுகளிடையில் வைத்துக் கீழே காற்றுப்புகும் தொளையுடைய அகன்ற சட்டி அல்லது ஓட்டில், வரட்டியின் கொழுங்கனலினிடையே பல மணிநேரம் வைப்பர். இங்ஙனம் நாற்பத்தொரு முறை புடமிட்டால், பொன்கலவை முற்றிலும் மாசு தீர்ந்து பத்தரை மாற்றுத் தங்கம் ஆகுமென்பர்.

இப்பொழுது மின் வன்மையின் உதவியால், சுரங்கங்களில் உடைத் தெடுத்த பெரும் பாறைகளையும் துண்டுகளையும் பொடியையும் ஆலையிலுள்ள பெரிய அரைக்கும் கருவிகளால் தூளாக்குகின்றனர். பின்பு விரைவாய் ஓடுகின்ற நீர் அத்தூளை இழுத்துச் செல்கின்றது. வழியில் பாதரசம் பரப்பிய பலகைகள் இருக்கும். பாதரசம், பொன்னுடன் கலக்கும் நீர்வடிவுடைய திடப்பொருள். மணலிலுள்ள பொன்பொடிகளில் ஒரு பகுதி இங்ஙனம் பாதரசத்துடன் சேர்கிறது. இக்கலவையைத் தனியாய்த் தீயில் காய்ச்சப் பாதரசம் ஆவியாகிச்சென்று தங்கம் கீழே தங்கிவிடுகிறது. ஆவியாய்ச் சென்ற பாதரசமும் வீணுவதில்லை. தட்ட மிக்க குழாய்களில் சென்று, மீண்டும் நீர்மை உருப்பெற்றுப் பாதரசமாகிறது. அதன்பின்,

களின் வழியே செலுத்தப்படும். நுண்ணிய எடை மிக்க பொற் பொடிகள் மயிர்த்துய்களில் சிக்கி தங்கிவிடும். துண்டுகளைப் பின்பு எடுத்து உலர்த்திப் பொடிகளைச் சேர்த்து உருக்குவர். இவ்விரு முறையிலும் தப்பிச்செல்லும் கண்ணுக்குத் தெரியாத மிக நுண்ணிய பொடிகளை, பொன்னுடன் எளிதாய்க் கலப்பதும் நீரில் எளிதாய்க் கரைவதும் ஆகிய (ஸயனைடு என்ற) பொருளின் உதவியால் பிரித்தெடுப்பார். தங்கம் நுத்தத்தின் கவர்ச்சியினால் ஸயனைடை விட்டுப் பிரிந்து, துத்தத்தின் மீது பொடியாய்ப் படிந்துவிடும். இவ்வகையில் மூன்றுமுறையில் தங்கம் பிரித்தெடுக்கப்படுகிறது.

அப்போதும் பொன் ஓரளவு மாற்றுக் குறைவாகவே இருக்கும் தனித்தும் பிறபொருள்களுடன் கலந்தும் உருக்கப்படும் போது அது மாற்றில் உயரும்.

ஒரு காலத்தில் பொன்னே திடப்பொருள்களுள் எடை மிகுதியிலும், விலை உயர்விலும் முதன்மை உடையதாய்க் கருதப்பட்டது. பொன்னினது ஒப்ப எடை எண் (Specifc graigty) 19.32 ஆகும். 14.1 அங்குலம். (35.25 செ.மீ.) நீள அகல உயரமுடைய பொற்கட்டி ஒரு டன் எடை உள்ளதாயிருக்கும். பொன் போற்றப்படுவதற்குத் தலைமையான காரணங்கள், அதன் நிறமும். மினுமினுப்பும் எளிதில் பளபளப்புக்கெடா நிலையுமேயாகும். பொன்னின் இயற்கை நிறம் மங்கின பசுமையான மஞ்சள் நிறம். காற்றிலுள்ள உயிர்க்காற்றுடன் (oxygen) கலந்து களிம்பு பிடிப்பதில்லை. பொன்னில் வெள்ளி கலக்குந்தோறும், அது பசுமையாகியும் வெளிறியும் தோன்றும். செம்பு கலக்குந்தோறும் பழுப்பும் செந்நிறமும் மிகுதியாகும். சுரங்கங்களில் பொன் உருகி ஓடும் போது, பச்சைப்பசேலென ஒளி வீசுவது, அதில் கலந்த வெள்ளி துத்தம் முதலியவற்றுலே தான். பொன்னின் தனிச்சிறப்புகளுள் ஒன்று, அஃது எளிதில் பிற பொருள்களுடன் சேராதிருப்பதே. மற்ற எல்லாத் திடப் பொருள்களும் நீரகங்களுக்குத் (acid) திரிந்துபோகும் தன்மை உடையவை. ஆனுல் பொன் மட்டும் பெரும்பாலும் நீரகங்களுடன் சேர்ந்து திரிவதில்லை. இப்பண்பைப் பயன்படுத்தித்தான் மனிதர் பொற்கலவையிலிருந்து பொன்னை எளிதில் பிரித்தெடுக்கின்றனர். பொன்னுடன் எளிதில் சேரும் பொருள்கள் அரச நீரகம் (Aqua Regia) என்னும் கலவை நீரகமும், பாதரசமும், ஸயனைடு என்பவைகளுமாகும். மற்றும் உயர்வெப்ப நிலையுடைய வேறு இரு நீரகங்களிலும் (Selleric acid Telluric acid) தங்கம் கரையும்.

பொன் இயற்கையின் பரப்பிலுள்ள பொருள்களுடன் எளிதிற் கலவாது. எகிப்தில் அரசர் கல்லறைகளிலுல்ல பொன்னணிகளும், பொன் ஆடைகளும் 7,000 அல்லது 8,000 ஆண்டுகள் கல்லறைகளுக்குள்ளிருந்தும், அழியாதும் நிறம் கெடாதும் இருக்கின்றன. 18-ஆம் நூற்றுண்டின் இறுதியில் ''லுதீன்'' என்ற கப்பல் ஹாலந்து கடற்கரையருகில் மூழ்கிற்றும். அதையும், அதிலிருந்த பாரமான பொற்குவையையும் அண்மையில் வெளியில் எடுத்தார்கள். அப்போது அத்தங்கத்தின் பண்பைக்கண்டு, யாவரும் வியந்தனராம். 150 ஆண்டுகள் உப்புநீரில் கிடந்த வேறு எப்பொருள், அன்று உருக்கிவார்த்து அடித்ததுபோல இருக்கக்கூடும்.

ஓர் அவுன்ஸ் (28.3 கிராம்) தங்கத்தைத் தாள்களின் இடையில் வைத்து அடித்து அடித்து ஒன்றேகால் (3.1 செ.மீ.) அங்குலச் சதுர அளவுள்ள 2,500 தகடுகள் வரை செய்யமுடியுமாம். இவ்வாறே ஒரு கிராம் தங்கத்தைக் கிட்டதட்ட இரண்டு மைல் தொலைவு நீளமுள்ள கம்பியாக நீட்டக்கூடும் என்கின்றனர்.

பொன்னின் நேர்மை என்பது, அதில் உள்ள தூய பொன்னின் அளவே. இதனைத் தமிழர் மாற்றுக்களால் அளப்பர். முழுமையும் தூய்மையுடைய தங்கம் ''பத்தரைமாற்று'' என்றும், கலப்புத் தங்கம், மிக மிகக் குறைந்த மாற்றுடையதென்றும் கொள்ள வேண்டும். பொன்னின் மாற்றை உரைக்கல்லில் உரைத்துக் காண்பர். பொன்னின் நேர்மையை மேலை நாட்டினர் (வேறு) முறையில் இருபத்துநான்கு மாற்று நிலைகள் (Carat என வகுப்பர். பொன்நூலினால் ஆடைகளும், தலை ஆபரணங்களும் செய்கின்றனர். பொன் கலங்கள் செய்வதற்கும் உபயோகமாகின்றது. பொன்னே மருந்தாகவும் நல்லுணவு (Tonic) முறையாகவும் வழங்கப்படுகிறது. சித்தர் நெறியில், தங்கம் நீறுக்கப்பெற்று மருந்துகளில் சேர்க்கப்பெறுகின்றது. அஃது உடலுக்கு நலனையும் நீண்ட வாழ்நாளையும் பொலிவையும் தரும் என்று நூல்கள் கூறுகின்றன. சில தாய்மார் இன்றும் சிறு குழந்தைகளுக்குச் சிறிது அளவேனும் பொன்னை உரைத்து கொடுக்கின்றனர்.

### பொன்னின் வேறு பெயர்கள்.

மாசை, பீதகம் பீதம், மாடை, மாடு, வேங்கை, ஆசை, சுவணம், காரம், அருத்தம், காஞ்சனம், காணம், தேசிகம், கனகம், கைத்து, செந்தாது, பொலம், அத்தம், சாமி, வித்தம், தனம் உடல்பண்டம், இரணியம், நிதி, வெறுக்கை, ஈகை, கல்யாணம், ஏமம், பொருள், உரை, சந்திரம், சாம்பூநதம், பூரி, ஈழம், திரவியம், சாதரூபம், செங்கோல், நிதானம், மாழை அரி, தபனியம், தமனியம், ஆடகம் என்பன.

(சூடா-நிக.)

### பொன்னின் வகை 4.

(1) ஆடகம், (2) கிளிச்சிறை, (3) சாதரூபம், (4) சாம்பூநதம் எனப் பொன் நான்கு வகைப்படும்.

### பொன்னுக்குச் சத்துருச் சரக்குகள்.

முட்டைஓடு, அப்பிரகம், கந்தகம், காந்தம் குதிரைப்பல் பாடாணம் கோமுகப் பாடாணம், கௌரி, சவுட்டுப்பு, மிருதார்சிங்கி, மனோசிலை, சூதம, தாளகம், நாகம், நிமிளை, பொன்னம்பர், வீரம், வெடியுப்பு, வெள்ளைப் பாடாணம், வங்கம் துருசு, இலிங்கம் என்பன பொன்னுக்குச் சத்துருச் சரக்குகளாம்.

## மித்துருச் சரக்குகள்.

மற்ற உபரச கார சாரங்கள் பொன்னுக்கு மித்துருச் சரக்குகளாம்.

சுவை : இனிப்பு.

வீரியம் : வெப்பம்.

பிரிவு : இனிப்பு.

மகிமை : இனிப்புச் சுவையுள்ள பொருள்கள், கபத்தை விருத்தி செய்வதுபோலப் பொன் செய்யாது. அதைக் குறைப்பதே இதன் மகிமை.

செய்கை : பொன்னுக்கும், பொன் சேர்ந்த மருந்துகளுக்கும் நரம்பு உரமுண்டாக்கி, காமம் பெருக்கி, ருது உண்டாக்கி, உடல் தேற்றி செய்கைகள் உள. அவை உடல் பலத்தையும் அழகையும் கொடுத்து அறிவு, ஞாபகசக்தி, தொனியை அதிகப்படுத்தும். இரைப்பையை ஊக்குவிக்கும். தோல், பிருக்கம் இவற்றைத் தூண்டி வியர்வை, சிறுநீரைப் பெருக்கும். மாதாந்திர ருதுவை அதிகப்படுத்தும். அதிக அளவில் விடமித்து இரைப்பையிலும் குடலிலும் தீவிர தாபிதத்தை விளைவித்து குறக்குவலி, வலி, மயக்கத்தை உண்டுபண்ணும். முட்டை வெண்கரு, பால், மாப்பண்டம் இதற்கு முறிவாம்.

### பொதுக் குணம்.

''அடற்று வரவிடங்க ளங்கவொளி மங்கல்
கடத்தாமுத் தோடகயங் காசம்—உடற்றுபஞ்
சோகை* யிருந் தாதுநட்டந் திட்டிநோய்க ளேயிவை
ஈகையிருந்£ தாலேகு மெண்.''

(பொ-ரை.) பொன்னினல் தாவரவிடங்கள், உடம்பில் ஒளிக் குறைவு, சன்னி, இளைப்பு நோய், காசம், உடல்வெப்பு, முதிர்ந்த கபக்குற்றம், தாது நட்டம், விழிநோய், கோழைக்கட்டு இவை விலகும்.

மேலைநாட்டு நூலொன்றிலே இதன் குணமும் செய்கையும் கீழ்க் காணுமாறு குறிப்பிட்டிருக்கின்றன :—

"Gold in different forms has been used emphirically in diverse conditions. It is much less poisonous than other heavy metals.

---

* சோகை—முதிர்ந்த கபக் குற்றம்.

£ ஈகை—பொன்.

In combination with arsenic it has been used in tertiary Syphilis and with Bromides in epilepsy. It is used in neurasthenia, but any benefit that may follow its use in possibly mental.

Gold in the form of Sanocrysin was introduced by Moleguard in he treatment of tuberculosis. It has no marked effect on tubercle bacilli in Vitro. How it acts is not clearly understood and it has been suggested that it penetratef the lipoid covering of the bacilli which in kills. It is also possible that it stimulates phagocytosis of the reticulo endothelial tissues and acts as a catalytic agent and brings about the acceleration of slow spontaneous healing process.

The injections are often followed by some reaction such as albuminiuria, fever exanthemata, loss of weight and intestinal disturbances. There may also be some focal reaction.

Under its use the tubercle baacillus disappears in early cases and there is diminution of sputum, cough and pyrexia. Early cases certainly improve but the results are not so favourable in advanced eases.

In the form of Myocrisin gold is extensively used in the continent in rheumatoid Arthritis. It brings on increased range of movements relief of pain and stiffness and checks further disability. In long standing cases where the joints are completely ankylosed gold is of little value. Gold treatment has given favourable results in Lupus.

Excretion about 50 p.c. of the metal is eliminated by the kidney and partly by the intestine. Part is retained in the liver and muscle for a long time."

பொன் சுத்தி.

தங்கத் தகட்டிற்குச் செம்மண்பூசி, அகலில் இட்டு அடுப்பேற்றி வாட்டிக் கழுவி, இங்ஙனம் மேலும் ஆறுமுறை செய்யப் பொன் சுத்தியாம்.

தங்க பற்பம்.

ஒரு பலம் (35 கிராம்) சுத்திசெய்த தங்கத்திற்கு, கீழ்ப்பட்டியிற் காணுமாறு சாறுகளை அளவின்படி விட்டு, முறைப்படி அரைத்து வில்லை செய்து உலர்த்திப் புடமிட்டு எடுக்க சிமின் நிறத்தையுடைய பற்பமாம். சிமின் நிறமென்று கூறியிருப்பினும், பற்பங்கள் யாவும் வெண்மை நிறத்தையடையும் என்றும், தங்கபற்பம் மாத்திரம் மஞ்சள் நிறத்தையடையும் என்றும் அகத்தியர் கூறியிருப்பதைக் கீழ்ச் செய்யுளால் உணரலாம்.

" நீறிருந்த படிக ளெல்லாம் நிறமது வெளுப்பே யாகும்
வேறிந்த வெளுப்பே யல்லால் வேற்றுநிறப் பற்ப மில்லை
கூறிந்தத் தங்க மட்டும் குலம்பொய்யா நிறமு மஞ்சள்
வாறிந்தப் படியே யல்லால் மற்றெல்லா மருட்டுத் தானே."

(அகத். வைத்தி. காண்டம் 600.' பாண்டவைப்பு, செ. 152.)

| சாற்றின் பெயர். | அளவு பலம். | அரைப்பு நாள். | வில்லை உலர்த்தும் நாள். | கவசம் உலர்த்தும் நாள். | புடம் வரட்டி. |
|---|---|---|---|---|---|
| துவரையிலைச் சாறு .. | 5 | 15 | 14 | 1 | 35 |
| ஆத்தியிலைச் சாறு .. | 4 | 12 | 11 | 1 | 32 |
| ஆமணக்கிலைச் சாறு .. | 3 | 9 | 8 | 1 | 25 |
| அகத்தியிலைச் சாறு .. | 2 | 2 | 1 | 1 | 16 |
| வாழைக்கனி ரசம் .. | 1 | 1 | 1 | 1 | 9 |

இப்படிச் செய்துமுடிக்கப்பட்ட பற்பம், ஏனைய பற்பங்களைப் போன்று உடலில் ஏற்பட்ட பிணிகளை நீக்குவதுடன், உடலில் மேலும் பிணியண்டா வகையில் பாதுகாக்கும் சிறப்புமுடையது.

### அளவு.

அவரைக் கொட்டையில் 6-ல் 1 கூறு உத்தமம்; 2 கூறு மத்திமம்; 3 கூறு அதமம்; 4 கூறு அதமாதமம்; 5 கூறு நிமித்தியாதிகம்; 6 கூறு நின்னிமித்தியாதிகம் ஆம்.

### தங்க பற்பம் உண்ண ஏற்ற மாதங்கள்.

தை முதல் வைகாசி வரையுள்ள ஐந்து மாதங்களும் தங்க பற்பமுண்ண ஏற்ற மாதங்கள் ஆம்; மற்ற ஏழு மாதங்களும் ஆகாவாம்.

### தங்க பற்பம் உண்ண ஏற்ற நிலங்கள்.

மருதமும், முல்லையும்.

### தங்க பற்பத்தின் துணை மருந்தும், தீரும் நோய்களும்.

தங்க பற்பத்தை அளவாய்க் கீழ்க்காணும் அனுபானங்களில் கொடுத்துவர, அவைகளின் நேரிற் குறித்துள்ள நோய்கள் நீங்கும்.

| துணை மருந்து. | தீரும் நோய்கள். |
|---|---|
| கம்மாறு வெற்றிலைச்சாறு .. | காரணம் இன்றிச் சரீரம் நடுக்குதல் (பிலாரிவாதம்). |
| குளிர்ந்த நீர் .. .. | கைகள் நடுக்குதல் (பித்த வாதம்). |
| சர்க்கரை .. .. .. | சுரக்காங்கை. |
| தயிர் .. .. .. | சேத்துமப் பிணி |
| வெந்நீர் | மேக ரோகங்கள். |
| பால் .. .. .. | வாத ரோகங்கள். |
| வெண்ணெய் .. .. | பித்த ரோகங்கள். |
| கற்றாழைச் சோற்றுச் சாறு | இரணங்கள். |
| ஆத்தியிலைச் சாறு .. | பிடிப்புகள். |

## தங்க பற்பத்திற்குப் பத்தியமும் உணவும் நன்மையும்.

மருந்து அருந்தும் காலத்தில் பெண்போகத்தை நீக்க வேண்டும். பற்பம் அருந்துவதனுல், அசீரணத்தால் வரும் தீமைகள் நீங்கி உடலில் பொன் போன்ற நிறமும், அபரிமிதமான வலிவும், பலமும் இளமையும், அறிவும், பசியும் ஏற்படும். அப்ப வகைகள், பழ வகைகள், நெய், சர்க்கரை, மாப்பண்டங்கள், பால் இவைகளைப் புசிக்க வேண்டும்.

(வேறு)

தங்கத்தை மூன்று நாள் முள்ளிக்கீரை சாற்றில் ஊறவைத்துக் கழுவிப் பொடியாய் அராவி, கலவத்திலிட்டுச் சிவப்புச் சித்திரப் பாலாடைச்சாறு விட்டு, நன்ருய் அரைத்து, வில்லை தட்டி உலர்த்திக் கடம்பு இலையை அரைத்து மேற்படி வில்லைக்குக் கவசம் செய்துலர்த்தி, ஓட்டிலிட்டு ஏழு சீலை மண்செய்து, நூறு எருக் கொண்டு புடமிட வெளுக்கும்.

துணை மருந்து : எட்டுப்படி (10.4 லிட்.) சௌரி இலைச் சாற்றை ஒரு பாண்டத்திலூற்றி வெயிலில் வைத்து, மெழுகுப் பதத்தில் சுண்டவைத்துத்தெடுத்து, அதன் எடை ஆடாதோடை இலையை அரைத்துக் கலந்து, புனுகு பலம் ஒன்றும் (35 கிராம்), தங்க பற்பம் கழஞ்சு இரண்டும் (10.2 கிராம்) கூட்டி நன்ருய் அரைத்து, நெல்லிக்காய் அளவு உருண்டை செய்துலர்த்தி, நல்லெண்ணெயி லிட்டு வாணலிட்டு ஊறவைத்து ஓர் உருண்டை அந்தி சந்தி ஆறு தினம் உட்கொண்டு, மருந்தூறும் எண்ணெயிட்டு, எட்டு நாட்களுக்கொருமுறை தலைமூழ்கி வர வேண்டும்.

பத்தியம் : பெண்கள் சையோகம் ஆகாது.

தீரும் நோய் : வெளுத்த குட்டம், பறங்கிக் குட்டம், தடித்த வெண் குட்டம், மேகக் குட்டம்.

## தங்கச் செந்தூரம்.

ஒரு பலம் (35 கிராம்) சுத்தி செய்த தங்கத்தைத் தகரையிலைச் சாறு, கடுக்காயிலைச் சாறு, ஆனைக்காஞ்சொரியிலைச்சாறு, பசறை யிலைச் சாறு இவைகளுள் ஒவ்வொன்ருலும் தனித்தனியே தங்க பற்பத்திற்குக் கூறியவாறு அரைத்து, வில்லை தட்டிக் கவசித்து உலர்த்திப் புடமிட, சிவப்பிற் சிறு பசுமை தங்கிய சிவந்த நிற மான செந்தூரமாம்.

தங்கச் செந்தூரத்தைப் பின்காணும் துணைமருந்துகளிற் கொடுக்க நோய்கள் நீங்கும்.

| துணை மருந்து. | | தீரும் நோய். |
|---|---|---|
| பசுவின் வெண்ணெய் | .. | தனுர் வாதம் |
| சர்க்கரை .. | .. | கபம். |

| நுணை மருந்து | தீரும் நோய். |
| --- | --- |
| வெந்நீர் .. .. .. | உப்புசம். |
| நெருஞ்சிச்சாறு .. .. | வயிற்று நோய். |
| தண்ணீர் .. .. .. | கயநோய். |
| மிளகு ரசம் .. .. | காசம். |
| மோர் .. .. .. | மூல நோய்கள். |
| கற்றாழைச் சாறு .. .. | மகோதரம். |
| பால் .. .. .. | சேத்ம விக்கல். |
| களிப்பாக்குரசம் .. .. | இரணச்சன்னிச் சுரங்கள். |
| தேன் .. .. .. | சீதசுர நடுக்கம். |

### தங்கச் செந்தூரத்தின் மகிமை.

தங்கச் செந்தூரம் மூலப்பிணிக் கூட்டத்திற்குச் சிறந்தது.

### தங்கச் செந்தூரம் (வேறு).

தங்க ரேக்கில் முருங்கைப்பட்டைச் சாறு விட்டரைத்து, சிறு வில்லை செய்து காயவைத்து, சில்லிட்டுச் சீலை செய்து, புடமிட்டெடுக்கவும். இவ்விதம் மற்றுமிருமுறை செய்யச் செந்தூரமாகும்.

அளவு : அரை (32 மி. கிராம்) முதல் ஓர் உளுந்தெடை (65 மி. கிராம்) வரை

குணம் : நரம்புத் தளர்ச்சி நீங்கி, ஆண்மைத் தன்மையும் வீரியமும் உண்டாம்.

### (வேறு)

சுத்தி செய்த பொன்னை ஈசலிறகுபோல மெல்லிய தகடாகத் தட்டி, கந்தகத்திற்குக் கருப்பஞ்சாறு விட்டரைத்து, மேற்படி தகட்டிற்குப் பூசி, உலர உலர ஏழுதடவை பூசி, அகலிலிட்டு மூடிச் சிலை செய்து, கசபுட மிடின் செந்தூரமாம்.

இதனைப் பணவெடை (488 மி. கிராம்) அளவு, வெண்ணெய், அல்லது தேனிற் சேர்த்து உட்கொள்ள, கயம் போன்ற பெரும் பிணிகள் நீங்கும். காயம் தங்கமாகும்.

---

* முருங்கைப்பட்டைச்சாற்றுக்குப் பதிலாக ரோஜாப்பூச் சாறு அல்லது பொடுதலைச் சாறு இவற்றை உபயோகித்தும் செந்தூரம் செய்யலாம்.

(வேறு)

தங்க ரேக்கு வராகனெடை 1 (4.2 கிராம்) இரசம் வராகனெடை $1\frac{1}{2}$ (6.3 கிராம்), ஏழாங்காய்ச்சல் வெடியுப்பு வராகனெடை $2\frac{1}{2}$ (10.5 கிராம்), அன்னபேதி வராகனெடை $2\frac{1}{2}$ (10.5 கிராம்) இவற்றைப் பொடுதலைச்சாறு விட்டு இரண்டு சாமம் (6 மணி) அரைத்து, வில்லை தட்டிக் காயவைத்து, கலயத்திலிட்டுச் சீலை செய்து, குக்கிட புடமிட்டு ஆறியபின் எடுக்கச் செந்தூரமாம்.

அளவு : ஒரு அரிசியெடை (65 மி. கிராம்).

துணை மருந்து : அதிமதுரத்தூளுடன் வெண்ணெய் அல்லது நெய் சேர்த்துத் தினம் இருவேளை நாற்பது நாள் அருந்தத்தாது விருத்தியாம்.

(வேறு)

தங்கம் வராகனெடை ஒன்றுக்கு (4.2 கிராம்) உருக்குமுகத்தில் இரசம் வராகனெடை இரண்டு (8.4 கிராம்) கூட்டி, வெட்டையாக்கி, உப்பிலாங் கொடிச்சாறு விட்டு ஆறு சாமம் (18 மணி) அரைத்து, வில்லை தட்டி உலர்த்திச் சில்லிட்டுச் சீலை செய்து புடமிட்டெடுக்கவும்.

அளவு : அரை (32 மி. கிராம்) முதல் ஓர் உளுந்தெடை (65 மி. கிராம்) வரை.

குணம் : இளைப்பு நோய், காசம், நீரிழிவு நீங்கும். இதனால் பசி தீபனம் உண்டாகும். தாது விருத்தியாகும். இச் செந்தூரத்தைத் தேனிற் சேர்த்து உட்கொள்ள வேண்டும்.

(வேறு)

ஓர் இரும்புச் சட்டியில் அரைப்பலம் (17.5 கிராம்) எஃகுப் பொடியை இட்டு, உலையில் வைத்து ஊதி, அரை வராகனெடை (2.1 கிராம்) தங்கக் குந்தன ரேக்கைச் சிறிது சிறிதாய்ச் சேர்த்து, வெண்குன்றி வேர்ப்பட்டை, வெண்காரம் வகைக்குப் பலம் அரை (17.5 கிராம்) இடித்துவைத்துக் கொண்டு, இதில் சிறிது சிறிதாய்த் தூவி, செந்தூரம் ஆகும் வரை சுத்தியால் தேய்த்து வர, செந்தூரமாம்.

இதில் யாதொரு களங்கமும் இல்லாவிடில் உபயோகிக்கலாம். குற்றம் மிருப்பின் சிறுசெருப்படைச் சாறுவிட்டு, ஒரு சாமம் அரைத்து வில்லை செய்து உலர்த்தி, சீலை செய்து ஐம்பது வரட்டியில் புடமிட்டெடுக்க, குற்றமற்ற செந்தூரமாகும்.

(வேறு)

தங்கரேக்கு ஒரு தோலாவிற்கு (12 கிராம்) ஒரு வராகனெடை (4.2 கிராம்) வீரம் சேர்த்து, மாசிப்பத்திரிச் சாறு விட்டு அரைத்து, வில்லை தட்டி உலர்த்தி, தக்க அளவு வரட்டி கொண்டு புடமிட்டு எடுக்கவும். இங்ஙனம் ஆறு புடமிட்டெடுத்தால் செந்தூரமாகும்.

அளவு : அரை (32 மி.கிரம்) முதல் ஒரு உளுந்தெடை (65 மி. கிராம்).

குணம் : பசி தீபனத்தை உண்டுபண்ணும்.

தீரும் நோய் : இளைப்பு நோய்.

மற்றும் தங்கமானது பூபதி மாத்திரை, மகா ஏலாதி மாத்திரை, பூரண சந்திரோதய மாத்திரை, பூரண சந்திரோதய செந்தூரம், மகா வசந்த குசுமாகரம், மகாராஜ மிருகாங்கம், யகுலாந்தகம் இவை போன்ற பெருமருந்துகளிலும் சேர்க்கப்பட்டிருக்கின்றது என்பதைப் பிற நூல்களில் பரக்கக் காணலாம்.

* குறிப்பு—16-ம் நூற்றுண்டிலிருந்த பாவமிஸ்ரா காலத்தி லிருந்து இதனை மகரத்துவஜம் என்ற பெயரில் வடமொழி நூல் களில் கூறப்பட்டு வந்திருக்கிறது. மகரம்—மீன், துவஜம்—கொடி. பாண்டிய நாட்டிலிருந்து பிற இடங்களுக்குப் பரவிய மருந்தாக ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்.

---

## மண்டூரம்

## FERROSO FERRIC OXIDE

## IRON REST IMPURE OFIRON

இஃது அயத்தைக்காட்டிலும் நிறைந்த வன்மையுடையது.

இது கிட்டம், சிட்டம், அயோமலம், அயக்கிட்டம், அயச்சிட் டம், சிட்டான், லோகமண்டூரம் என்ற வேறு பெயர்களினுலும் வழங்கப்படுகின்றது.

இப்பொருள், கொல்லன் உலையில் இரும்பினுல் விடப்பட்டு, அக்கினியில் வெந்து, மெழுகின் பதத்திலே கட்டியாகின்றது என் பதனுல், இதன் பிறப்பை அறியலாம்.

இதன் சுவை, வீரியம், செய்கை முதலியன அயத்தை ஒத் திருக்கும்.

நாட்பட்ட நோய்களிலும் பசி மந்தத்துடன் மலக்கட்டிருக்கும் பொழுதும் காணும் கனல் வேகம் (உட்காய்ச்சல்) இருக்கும் பொழுதும் மண்டூரத்தை பிரயோகிக்கக்கூடாது.

பொதுக் குணம்.

சிட்டமொன்றுற் சோபை கிளைவிக்க மத்திசுரந்
துட்டவிட பாகஞ் சுவாசமையங்—கெட்டகொடும்
பாண்டிருமல் நீராமை பாழும் பிரமியமுன்
தாண்டிவிடு முண்டிரத்த தாது.

(பொ-ரை) மண்டூரத்தினுல், வாதசோபை முதலிய வீக்கங்கள், அத்திசுரம், கொடிய விடபாகம், இரைப்பு, கபகோபம், தேகம் வெளிறல், காசம், நீராமைக்கட்டி, பிரமியம் இவை நீங்கும். இரத்தம் விருத்தியாகும்.

சுத்தி.

அயக்கிட்டத்தை உரலிலிட்டு இடித்து, வஸ்திரகாயம் செய்து, ஒரு பீங்கான் பாத்திரத்தில் இட்டு, அதன் மேல் நாலு அங்குலம் நிற்கும்படியாகக் காரமான சீமைத் திராட்சைக் காடியைவிட்டு, இரண்டு வாரம் ஊறவைத்து, வெள்ளைப் பூண்டை இடித்துப் பிழிந்த சாற்றை முன்போலவிட்டு ஒரு வாரம் ஊறவைக்க வேண்டும். ஊறவைக்கும் போது, மூன்று நாளைக்கொரு முறை ஊறவைத்த சாற்றை இடையிடையே ஊற்றிவிட்டு, அச்சாற்றையே புதிதாய் விட வேண்டும். இவ்விதம் முறையே முன்சாறுகளால் செய்த பின்பு, வாதுமை நெய்யில் அல்லது பசுவின் நெய்யில் சிட்டத்தை நன்றாய் வறுத்துப் பொடித்துக் கொள்வதே கிட்டத்தின் சுத்தி.

(வேறு)

கிட்டத்தை கல்லுரலிலிட்டு இடித்து, வாயகன்ற ஒரு சட்டியிலிட்டு, அதன்மேல் நாலு பங்கு எடை புளியிலையைப் போட்டு, எண்மடங்கு நீர் விட்டு, ஒரு சாமம் (3 மணி) வேகவைத்து, ஆறிய பின் இலையையும் பொடியையும், சேர்த்து நன்றாய்த் தேய்த்துக் கழுவி உலர்த்தி, முறத்திலிட்டுப் புடைத்து, இலையை நீக்கிவிடுக. பிறகு, கிட்டப்பொடியை அம்மியிலிட்டுப் பொடித்து, ஒரு சட்டியிலிட்டு, எட்டுப் பங்கு கோ மூத்திரத்தை விட்டு, அடுப்பேற்றிச் சிறு தீயால் எரித்து, மூத்திரம் சுண்டியபின் இறக்கி, நீர் விட்டும் கழுவி எடுத்துக்கொள்ளச் சுத்தியாம்.

உலோக மண்டூரச் செந்தூரம்.

"இரும்பினுஞ் சிட்டை யிலவணைபெண் ணுண்கை
இரும்பினுஞ் சிட்டைகணி யின்பை—இருப்பி
அரைத்துப் புடமிட்டி யாமுலோ கத்தை
அரைத்துப்பு மண்டூர மாம்."

(பொ-ரை) இரும்பினுஞ் சிட்டை—இரும்பினால் விடப்பட்டு அக்கினியில் வெந்து மெழுகின் பதத்தில் கட்டியான சிட்டத்தை, இலவணை—பாதி நிறையான பஞ்சலவணமும், பெண்—சுந்தியும், ஆண்—இரசமும், கை—மிளகு, திப்பிலி, சுக்கு, உள்ளி இந்த நான்கும், இரும்பின்—இவைகளை வெள்ளாட்டு நீரில் ஊற வைத்து அரைத்து, நாம்—நம்மாலே செய்யப்பட்ட, சிட்டை—நன்மையான பணிக்கை, கணி—கையாந்தகரைச் சாற்றிலும், இன்பை—துளசிச் சாற்றிலும், இருப்பி—(இப்படி இரண்டிலும்) கலந்து, அரைத்துப் புடமிட்டு—மத்தித்து மருந்தை வில்லை தட்டி அவ்வாறே அடிக்கடி புடத்தையும் போட்டெடுப்பாயாக; (நான்கு நாட்களுக்கொருமுறை) ஆமுலோகத்தை—இப்படியாகவே இந்த உலோகத்தைச் செய்தால், அரைத்துப்பு ஆர் மண்டூரமாம்—அரைவாசி சிவந்த நிறமுள்ள மண்டூரச் செந்தூரமாகும். இதனை,

''ஆதி லோகத் தயமெனுஞ்சிட்டத்திற்
பாதி லோகப் பாடலி தோன்றவே
வேதி யாது விவரமதை நாடொறும்
ஓதி யோதி யொழியவொண் ணுதரோ.''

என்னும் மாபுராணச் செய்யுளாலுமறிக.

அளவு : ஒரு குன்றி (130 மி. கிராம்) அளவு உத்தமமென்றும், இரண்டு, மூன்று, நான்கு முறையே மத்திமம், அதமம், அதமாதமம் என்றும் கொள்க.

இச்செந்தூரத்தைப் புசிக்க ஏற்ற நிலம், மாதம், நாட்பிரமாணம் முதலியன அயச் செந்தூரத்திற்குக் கூறியவை போன்றனவேயாகும்.

| துணை மருந்து. | தீரும் நோய்கள். |
|---|---|
| குளிர்ந்த நீர் .. .. | வாதம். |
| நாரத்தம் பழச்சாறு .. | உப்புசம். |
| கள் .. .. .. | சலோதய சந்நிவாதம். |
| இலந்தைக்கனி இரசம் .. | விடபாகம். |
| பன்னீர் .. .. .. | மறதி உன்மத்தசந்நி. |
| புன்னைப்பூச்சாறு .. .. | மகோதரம். |
| நன்னாரிச்சாறு .. .. | பித்தநோய். |
| தேன் .. .. .. | முப்பிணி முதலான அசீரண மந்த வியாதியிலே பிறந்த சுரம். |

பத்தியம்—அயச் செந்தூரத்திற்குக் கூறப்பட்டதே இதற்கும் பத்தியமாம்.

## செந்தூரம் வேறு.

நாட்சென்ற நான்கு பலம் (140 கிராம்) மண்டூரத்தை இடித்து நாலுபடி (5.2 மி.லி.) வெள்ளாட்டு நீரில் ஒரு நாள் ஊரவைத்து நீர்ச்சுண்டக் காய்ச்சி, பிறகு நெருப்பிலிட்டு பழுக்ககாய்ச்சி, பசுநீரில் பத்துமுறை தோய்த்துக் கழுவி எடுத்து, கல்வத்திலிட்டுச் சோற்றுக் கற்றாழைச் சாற்றால் ஒரு நாளரைத்து, வில்லை தட்டி, உலர்ந்த பின் ஒட்டிலிட்டுச் சீலை மண் செய்து, இரண்டு முழ உயரம் புடம் போடவும். இவ்விதமாகச் சோற்றுக் கற்றாழைச் சாற்றில் பத்துப் புடமும், நீர்முள்ளி, கரிசலாங்காணி, வீழி, வேலிப்பருத்தி, மாதுளம் பழம் இவைகளின் சாற்றினால் வகைக்குப் பத்துப் புடமும் போட்டு எடுத்து வைத்துக்கொண்டு, இதில் வேளைக்குப் பண வெடை (488 மி. கிரா.) வீதம், கரிசலாங்கா ணிச் சாற்றில், தினம் காலை மாலை இருவேளையும் கொடுக்க, மகோதரம், விஷபாகம், விடநீர்க்கோவை, பாண்டு, சோகை, சூலை, குன்மம், நீர்க் கடுப்பு, தாகம், வாதம், குடல்வாதம், கிரகணி முதலியன தீரும்.

## (வேறு)

ஆயிரம் ஆண்டு சென்ற சிட்டத்தைக் காய்ச்சிப் பத்துமுறை பசுவின் நீரில் தோய்த்துத் தோய்த்தெடுத்துக் கழுவி, கல்வத்திலிட்டுப் பொடித்து, அதற்குப் பத்தில் ஒரு பங்கு கந்தகம், சூதம், இலிங்கம், பூநீறு, வெங்காரம் கூட்டி, பழச் சாறு விட்டரைத்துப் பத்துப்புடமும், கரிசாலைச் சாறு விட்டரைத்துப் பத்துப்புடமும், செருப்படைச்சாறு விட்டரைத்துப் பத்துப் புடமும், செம்பைச்சாறு விட்டரைத்துப் பத்துப்புடமும், அரசம் பட்டைச்சாறு விட்டரைத்துப் பத்துப் புடமும் இட்டு எடுக்கச் செந்தூரமாம்.

அளவு : இரண்டு பணவெடை (976 மி. கிரா.).

துணை மருந்து: திரிகடுகு சூரணத்தில் தேன் விட்டுக் கலந்து, உட்கொள்ளுக.

தீரும் நோய் : இதனால் விஷப்பாண்டு, அறுவகைக் காமாலை பாண்டு, பித்தம், கப நோய் தொண்ணூற்றுறு அரோசகம், அன்னத்துவேஷம். வாந்தி, விக்கல், வாயு, நீர்த்தோடம் நீங்கும். விந்து ஊறும். தேகம் இறுகும். வெண்ணிறத்தை அடைந்த தேகம் கருநிறத்தை அடையும்.

சுத்த மண்டூரம், மகா மண்டூரம், சித்த மண்டூரம், திரி கடுகாதி மண்டூரம், நாராயண மண்டூரம் என மண்டூரம் சேர்த்துச் செய்யப்படும் மருந்து முறைகள் பல உள.

### இலைகளின் பொதுக்குணம்.

சுத்தமண் டூரந் துதிமகா மண்டூரஞ்
சித்தமண் டூரந் திரிகடுக—மொத்திடுமண்
டூரநா ரயணைமண் டூரமிவை கட்குவெகு
தூரமாம் பாண்டொடுசோ பை.''

(பொ-ரை) சுத்த மண்டூரம், மகாமண்டூரம், சித்த மண் டூரம், திரிகடுகாதி மண்டூரம், நாராயண மண்டூரம் இவை களினால் ஐவகைப் பாண்டு நோய்களும் ஆறுவிதச் சோபை நோய்களும் ஒழியும்.

### மகா மண்டூரம்.

திரிகடுகு, திரிபலை, வாய்விடங்கம், மஞ்சள், சித்திர மூல வேர், பட்டை இவைகளின் சூரணம் சமவெடை கூட்டி, இதற்குச் சமவெடை மண்டூரம் சேர்த்துக் கரிசாலைச் சாற்றால் அரைத்துக் கொள்ளவும்.

அளவு: இலந்தைக்கொட்டை அளவு.

துணை மருந்து : சர்க்கரை, நெய்.

தீரும் நோய் : பாண்டு, சோபை.

### சித்த மண்டூரம்.

கோ மூத்திரத்தில் சுத்தி செய்த மண்டூரம் பலம் எட்டைப் (280 கிராம்) பொடித்து, நுண்ணிய தூளாக்கி, அறுபத்துநான்கு பலம் (2.240 கி. கிராம்) கோ நீரிலிட்டு அடுப்பேற்றிக் கொதிக்க வைத்துக் குழம்பு பக்குவத்தில் வரும் போது, திரிபலை, திப்பிலி மூலம், திரிகடுகு, செவ்வியம், சிவதைவேர், சாறணைவேர், கடுகு ரோகணி, வாய்விடங்கம் தேவதாரம், மஞ்சள், மரமஞ்சள், சித்திரமூலம், குடசப் பாலை வித்து, கோரைக் கிழங்கு, புஷ்கரமூலம் (கோஷ்டம்) நாட் வாளம் இவைகளின் சூரணம் வகைக்குப் பலம் ஒன்று சேர்த்து, மேற்படி குழம்பில் கூட்டிப் பிசைந்து கொள் ளவும்.

அளவு : கழற்சியளவு.

துணை மருந்து : மோர்.

தீரும் நோய் : பாண்டு, சோபை.

### திரிகடுகாதி மண்டூரம்.

திரிகடுகு, திரிபலை, ஏலம், சாதிக்காய், கிராம்பு, காட்டாத்திப்பூ, திப்பிலி மூலம், கோரைக் கிழங்கு, சடா மாஞ்சில், கர்க்கடகசிங்கி இவைகளை சூரணம் செய்து, சமபாகங் கூட்டி, கூட்டிய எடைக்குச் சரியாக மண்டூரப் பொடி கூட்டி, சேர்த்த மண்டூர எடைக்குப் பாதி லோகப்பொடி கூட்டி கரிசாலைச் சாற்றாலரைத்து, இலந்தைக் கொட்டை அளவு மாத்திரை செய்து, சர்க்கரை அல்லது தேனில் அனுபானித்துக் கொடுக்கப் பாண்டு, சோபை, காமாலை, க்ஷயம், சுரம் முதலியன நீங்கும்; பசி உண்டாம்.

### நாராயண மண்டூரம்.

திரிகடுகு, திரிபலை, திப்பிலிமூலம், யானைத் திப்பிலி, செவ்வியம், சிறுதேக்கு, ஓமம், குரோசானி ஓமம், வசம்பு, மஞ்சள், கடுகுரோகணி, வெள்ளுள்ளி, பெருங்காயம், மயிலிறகு, சாம்பல், வாளம், பிரண்டை காட்டாத்திப்பு நில வேம்பு, சாதிக்காய், தண்ணீர்விட்டான் கிழங்கு, கட்கா வேலைவேர், சாறடைவேர், கரிசாலை, ஆலவிழுது, அம்பட்டிக் காய், இவைகளைச் சமபாகமெடுத்துச் சேர்த்து, சேர்த்த எடைக்குச் சமன் மண்டூரங் கூட்டி, கூடாதோடைச் சாறு, கரிசாலைச்சாறு, எலுமிச்சம் பழச்சாறு, இஞ்சிச்சாறு, ஆயில் பட்டைக் குடிநீர், தெளிந்த கடி, நெல்லிக்காய்ச் சாறு இவைகளில் முறையே அரைத்துக் கொள்க.

அளவு ; புளியங்கொட்டையளவு, காலை, மாலை இரு வேளையும் கொள்க.

துணை மருந்து : வெந்நீர், மோர்.

தீரும் நோய் ; பாண்டு, சோபை, காமாலை, அக்கினி மந்தம், குன்மம், சூலை, பார்சச் சூலை, க்ஷயம், பீநசம், சுவா சகாசம், அருசி முதலியவை.

இவையல்லாமல், அம்சமண்டூரம, குடமண்டூரம், போன்றவை பல உள. இவைகளும் மேற்குறித்த மண்டூராதிகளைப் போலவே பிணி தீர்க்கும் என்று கொள்க.

### கருங்குழம்பு.

''கட்டாக வின்னங் கழறுகிறேன் வல்லெத்துங்
கிட்டமொடு காந்தங் கிருபையாய்—நட்டமில்லை
நீர்வடியின் முத்து நிறையாய்க் கழஞ்சொன்று
நேர்வாளம் இரண்டாகுநேர்.''

''நேர்ந்திந்த நாற்சரக்கை நேரிழையே சுத்திசெய்து
போர்நிறைந்த கல்வத்திற் போட்டரைப்பாய்—சீராக
மேதிச் சிமிள்வைத்து வேண்டிப் பணவெடைதான்
பாதிபனே வெல்லத்திற் பாய்ச்சு.''

'' வெல்லமதி லுண்டுபார் மெல்லியர்கள் சூதகமும்
அல்லூருங் கட்டிநீ ராம்பலெங்கே—சொல்லக்கேள்
காணு மகோதரமுங் காமாலே காய்ச்சற்கட்டி
பூணுபல வாயுவும் போம்.''

(பொ—ரை) வல்லத்துச் சிட்டம், காந்தம், தோல் நீக்கிய நீரடி முத்து இவை வகைக்கு ஒரு கழஞ்சும் (5.1 கிராம்) நேர் வாளம் இரு கழஞ்சும் (10.2 கிராம்) சுத்தி செய்து, கல்வத்தி லிட்டு மெழுகு பதமாக அரைத்து, எருமைக் கொம்புச் சிமிழில் வைத்துக்கொள்ளவும்.

அளவு : அரைப் பணவெடை (244 மி. கிராம்).

துணை மருந்து பனைவெல்லத்திற்குள் வைத்து அருந்து.

சூதக தீரும் நோய்கள் : சூதக வாய்வு, இரத்த வாத குன்மக் கட்டி, நீராம்பல், மகோதரம், காமாலை, காய்ச்சற் கட்டி, வாதநோய்கள்.

### மாண்டூர மாத்திரை.

கிட்டம், காந்தம், இந்துப்பு கருஞ்சீரக, திரிகடுகு, இவை வகை ஒன்றுக்கு ஒரு பலம், இவற்றைக் கல்வத்திலிட்டுக் கையாந்த கரைச்சாற்றால் மூன்று நாள் 12 சாமம் அரைத்துக் காசளவு வில்லைகள் செய்துவைத்துக் கொள்ளவும். காலை மாலை இரண்டு வேளையும், வேளை யொன்றுக்கு ஒவ்வொரு வில்லையைத் தேனில் உரைத்து ஏழு நாள் கொடுக்க, பித்தப்பாண்டும், விஷப் பாண்டும் குணமாகும். பத்தியம், உப்பு இல்லாத பத்தியம், நோய் இலகுவாயிருந்தால், இருபது நாள் இச்சாபத்தியமாய்க் கொடுக்க தீரும்.

### மண்டூர அடைக்கஷாயம்

சங்கு நெருஞ்சில் சாரணை கோவை
தன்னுட னீர்முள்ளி
தான்றி கடுக்காய் புளியிலை நெல்லி
தாரெனும் வேப்பந்தோல்
மங்கிய கிட்டமி ரும்பின் அரப்பொடி
மஞ்சள் நன்னாரி
வழுதலை கொன்றை விழுதி குமாரி
மணலி சுரைக்கொடியும்
பங்கம் பாலை செங்கத்தாரி
பாதிரி குறிஞ்சானும்

பழகிய காடி கோசலம் விட்டே
பாகம தெட்டொன்ருய்ப்
பொங்கிய குடிநீ ரானது பருகப்
பொருமலும் வீக்கமுடன்
போத வயிற்றிற் கட்டியு முப்பலும்
பொடியா குந்தானே.''

(பொ—ரை) சங்கன் வேர், சிறுநெருஞ்சில் சமூலம், சாரணை வேர், கோவைத்தண்டு, நீர்முள்ளிச் சமூலம், புளியிலை, கண்டங்கத்திரி வேர், கொன்றைப்பட்டை, விழுதிக்கீரை, மணலிக் கீரை, ஆடுதின்ஞப்பாளைச் சமூலம், நன்னரி வேர்ப்பட்டை, சுரைக்கொடி, தான்றிக்காய்த்தோல், நெல்லிவற்றல், கடுக்காய்த்தோல், கற்ருழைவேர், வேப்பம்பட்டை, கறி மஞ்சள், செங்கத்தாரிப்பட்டை, பாதிரிப்பட்டை, சிறுகுறிஞ்சான் வேர், இரும்புச் சிட்டம், அரப்பொடி இவைகளை எல்லாம் ஒரு பெரிய மண் பானையில் ஒவ்வொரு பலம் (35 கிராம்) வீதம் இட்டு, புளிப்புத் தண்ணீரும் பசுநீரும் கலந்து எட்டுப்படி (10.4 லிட்.) விட்டு ஒரு படியாக (1.3 லிட்டர்) காய்ச்சி, நோய்வன்மைக்கும் உடல்வன்மைக்கும் தக்கபடி இருவேளையாவது ஒருவேளையாவது குடித்துக்கொண்டு வந்தால், பொருமல், வீக்கம், வயிற்றி லுண்டாகும் கட்டிகள், உப்புசம் ஆகிய இவைகள் நீங்கும்.

## வெண்கலம்

## BRONZE

இஃது உறை, கஞ்சம், தாரம் என்ற வேறு பெயர்களி ஞலும் வழங்கப்படும். வெண்கலம், செம்பும், வெள்ளீயமும் சேர்ந்த கூட்டு உலோகமாகும். இதனைக் கீழ்ச் செய்யுளால் உணர்க :

''எட்டெடைச் செம்பில் இரண்டெடை யீயமிடில்
திட்டமாய் வெண்கலமாஞ் சேர்த்துருக்கில்—இட்டமுடன்
ஓரேழு செம்பில் ஒரு மூன்று துத்தமிடில்
பாரறியப் பித்தளையாம் பார்.''

(குறுக்கையூர் காரி நாயஞர்).

சுவை ; துவர்ப்பு.

வீரியம் : வெப்பம்.

செய்கை : உடலைத் தேற்றுதல், உடலை உரமாக்குதல்.

பிரிவு : கார்ப்பு.

### பொதுக் குணம்.

" நேத்திரநோய் சோமவினை நீர்ப்பெருக்கி ரத்தபித்தம்
வீழ்த்துசுவா சம்மந்தம் மேகங்கால்—ஆழ்த்துகபம்
வாதவலி சூலை மகோதரம்போம்; பித்தமொடு
தாதுவுமாம் வெண்கலத்தாற் சாற்று."

(அக. குண).

(பொ—ரை) வெண்கலத்தினால் கண் நோய், சோம நோய், வெகு மூத்திரம், இரத்தபித்தம், சுவாசகாசம், மந்தம், வாதப் பிரமேகம், கபம், வாதவலி, சூலை, பெருவயிறு முதலியன நீங்கும். பித்தமும் தாதுவும் அதிகப்படும்.

மற்றும் இதனைப் பொருந்து வெண்கலத்தின் தன்மைப் புகன் றிடிற் கபத்தை மாற்றும்", என்று பதார்த்த சூடாமணியிற் கூறியிருப்பதாலும் உணரலாம்.

### சுத்தி.

வெண்கலத்தை உருக்கி மூன்று முறை புளியிலைச் சாற்றில் ஊற்றி, பிறகு கொள்ளுக் குடி நீரில் மூன்று முறை ஊற்றி எடுக்கச் சுத்தியாம்.

### வெண்கலப் பற்பம்.

சுத்தி செய்த வெண்கல அரப்பொடிக்குச் சமனெடை கந்திக் கூட்டி, எருக்கம்பால் விட்டரைத்து வெயிலில் வைக்கவும். இவ்விதம் ஏழுமுறை செய்து, பிறகு வச்சிர மூசையில் இட்டு, வாய்மூடிச் சீலைமண் செய்து ஏழுமுறை கஜபுடம் இட்டு, எடுக்கில் பற்பமாம். இதனால், வயிற்று வலியும் மார்பு வலியும் குண மாகும்.

### வெண்கலச் செந்தூரம்.

மேற்கண்ட வெண்கலப் பற்பத்திற்குப் பாதி எடை இலிங்கம், அதிற் பாதி எடை கந்தி, கந்தியிற் பாதி எடை இரசம் சேர்த்துக் கல்வத்திலிட்டு ஆலம்பால், செருப்படை வேரின் சாறு, அரசம் பட்டைச்சாறு, கருவேலம்பட்டைக் குடிநீர், புரசம்பட்டைக் குடிநீர், பூனைக்காலி வேரின் குடிநீர், எலுமிச்சம் பழரசம் இவை ஒவ்வொன்றினாலும் ஒவ்வொரு நாள் அரைத்துக் கஜ புடம் இட்டு எடுக்கச் செந்தூரமாகும். முடியாவிடின், மருந் தைக் குகையிலிட்டுக் கொல்லன் உலையில் வைத்து ஊதினால் செந்தூரமாகும். இது பல் வகைப்பட்ட பிணிகளையும் போக்கும்.

### தீயகுணம்.

சரியானபடி முடியாத வெண்கலப் பற்பத்தால் ஆயுள் குறைதல், மார்பு நோய், உடல்தாபம் முதலிய துர்க்குணங்கள் உண்டாகும்.

---

* காட்டு முருக்கம் பட்டைச்சாறு.

நவலோக இரத்தினுதி மாத்திரை, இரத்தினுதி மாத்திரை போன்ற பல கண்மருந்துகள் ஆகியவற்றில் வெண்கலம் சேர்க்கப்பட்டு வந்ததை நயன விதியிற் காணலாம்.

## வெள்வங்கம்

## STANNUM (TIN)

இது, வெள்ளீயம், வெண்ணுகம், குடிலம், தவள வங்கம், சுவேத வங்கம், பாண்டீ, மாரசம் என்னும் வேறு பெயர்களினுலும் வழங்கப்படுகின்றது. இது குரகம், மிஸ்ரகம் என இருவகைப்படுமென்பர் வட நூலார். குணத்தில் சிறந்த குரகம் வெண்மை நிறத்தையும், கனம், நயப்பு, நெய்ப்பு, குளிர்ச்சி, விரைவில் உருகல், ஓசையின்மை முதலிய குணங்களையும் உடையதாயிருக்கும். மிஸ்ரகம், குரகத்திற்குத் தாழ்ந்த குணமுள்ளது; வெளுப்புங் கறுப்புங் கலந்த நிறமுடையது. இதனை மருந்தில் உபயோகிப்பதில்லை.

வெள்வங்கத்திற்குக் கைப்புச் சுவையும், வெப்ப வீரியமும், கார்ப்புப் பிரிவும் உண்டு. இதற்குக் கிருமி நாசனிச் செய்கையும் தாதுவெப்ப கற்றிச் செய்கையும், துவர்ப்பிச் செய்கையும், வீக்கமுருக்கிச் செய்கையுமுள. இதன் பொதுக் குணத்தைக் கீழ்க்காணும் செய்யுள் உணர்த்தும்:

'' தாகங் கரப்பான் சலமேகம் பித்தகப
மேக மொளிமங்கல் வெப்புபலம்—மாகிரந்தி
துள்ளியமந் தார சுவாசமுமந்தாக்கினியும்
வெள்ளீயம் போக்கும் விதி.''

(போ—ரை) தாகநோய், கரப்பான், சலப்பிரமேகம், பித்த கபத் தொந்தம், மேகம், தேஜசு குன்றல், சுரம், துற்பலம், கிரந்தி, மந்தார சுவாசகாசம், அக்கினி மந்தம், இவைகளை வெள்ளீயம் நீக்கும்.

இது சிறப்பாக ஜனன, சல உருப்புகளைப் பற்றிய நோய்களிலும், குருதி, புப்புசம், சம்பந்தப்பட்ட பிணிகளிலும் வழங்கப்படுகின்றது. மேலை நாட்டினர் கட்டிகளுக்குப் பயன் படுத்தி வருகின்றதும் குறிப்பிடத் தகுந்தது.

"In the west, Oxide of has been advocated as a therapeutic agent in Staphylococcal infection in the treatment of boils, etc.

இது நீற்க: மேற்கண்ட நோய்களை நீக்க இதனைச் சுத்தி செய்யாது மருந்தாக்கி உபயோகிக்கில் நஞ்சாகுமாதலினால், சுத்தி செய்து கொள்க. முன் கருவங்கத்திற்குக் கூறிய சுத்தி முறைகளே இதற்கும் ஒக்குமாதலின் ஈண்டுக்கூறாது விடுத்தோம்.

வங்க பற்ப முறையும் அதன் ஆட்சியும்.

"படலிகையாங் கோவைவரை பட்சமைமுன் பாண்டீ
படலிகையாங் கோவையனு பானம்—படலிகையாங்
கீரந்தே மையங் கிலாலங்கா மன்மரிசங்
கீரந்தே மையமிது கேள்."

பற்பம்.

(ப—ரை) படலிகை—பெரும் பீர்க்கின் சமூலச்சாறு, ஆம்—வெள்ளரிச் சமூலச்சாறு, கோவை—கோவைச் சமூலச்சாறு இவை ஒவ்வொன்றிலும் பின்வரும் விவரப்படிக்கு அரைத்தும் உலர்த்தியும் புடமிட நற்குண விசேடம் பொருந்திய பற்பமாகும்.)

| சாற்றின் பெயர். | அளவு லம். | அரைப்பு நாள். | வில்லை உலர்த்து நாள். | கவசம் உலர்த்து நாள். | புடம் வரட்டி. |
|---|---|---|---|---|---|
| பெரும் பீர்க்கு | 4 | 15 | 14 | 1 | 60 |
| வெள்ளரி | 3 | 10 | 9 | 1 | 40 |
| கோவை | 2 | 5 | 4 | 1 | 20 |

மருந்தளவும் நாளளவும் துணைமருந்தும் பிணிநீக்கமும்.

வரை—துவரையின் (அளவு), பட்சம்—(பிணியாளி கொள்ள வேண்டிய நாள்) பதினைந்துநாள், ஐமுன்—வாதாதி தோடக் கிரமங்களுள் கடையில் வரப்பட்ட சேத்மத்தை முன்னமைத்து எண்ணுகையில் வரப்பட்ட சேத்மம் பித்தம் வாதப் பிணிகட்கும் அவைகளைச் சேர்ந்து வரப்பட்ட பிணிகளுக்கும், பாண்டீ—வெள்ளீயபற்பம் (எப்படி யென்றால்), ஆம்—(தேகமென்கிற வீட்டிற்குள் முப்பிணிகளாகிய சோரர்கள் புகாத படிக்குத் தடுக்க) உதவும், படலிகை—மூடி என்கிற) கதவாகவும், கோவை—(ஒருகால் மீறின் அவைகளை ஒழித்துத் தேகத்தை) ஒழுங்குபடுத்தும் (வீரனாகவும் உள்ளது); அனுபானம்—(இதற்கு இசை

வான) அனுபானமெதுவெனில், படலி—(முன் முதனிலைப் படுத்திய கபப்பிணிக்குத்) துளசி இலைச் சாற்றிலும், கை—(கபத்தில் வாதந் தொந்தித்துண்டான மகோதர உப்புசம், நீரேற்றம், இவைகட்கு)கையாந்தகரைச்சாற்றிலு, ஆம்—(கபத்தில் பித்தம் தொந்தித்துண்டான பித்தசன்னி, பித்த சோபை பெரும்பாடு முதலிய பிணிகட்கு) கடுகிலைச்சாற்றிலும், கிரம்—(தனிப் பித்தமான பைத்தியரோகத்திற்கு) பாலிலும், தேன்—(பித்த கப தொந்தமான உன்மத்த சன்னி, மரண மூர்ச்சை வாயுவென்னும் இவைகட்கு) தேனிலும், ஐயம் (பித்தவாதத் தொந்தமான பித்த வாதவெப்பம், பித்த வாத மார்பு வலி, பித்தகாரக வெட்டை, பித்த உஷ்ணாதிசாரய் இவைகட்கு வெண்ணெயிலும், கிலாலம்—(தனி வாதத்தினு லுண்டாம் பிணிகட்கெல்லாம்) குளிர்ந்த நீரிலும், காமன்—(வாத பித்த தொந்தத்தினுலுண்டாகும் வாதபித்த சுரம், விக்கல், பித்த சூலை, வாதானலசுரம், வாதவல்லை, பெரு வயிறு, வாதபித்த முளைமூலம், வாதபித்த சீமூலம் இவை கட்குத்) திப்பிலி ரசத்திலும், மரிசம்—(வாத கப தொந்தத் தினுலுண்டாம் கை கால் அசதியுள்ள வாதசன்னி, பந்தமென்கிற பிடிப்புடன் கூடிய வாதநீர்க்கோவை, மரம்போல் மரத்துப் போன ''துன்மவுடிகாஷிலம்'' என்கிற வாதம், பக்கவாயு வுடன் கூடிய ஒற்றைத் தலை நோய், மகோதரச்சூலை, பாரிச வாதப் பொருமலான பிராந்திநோய் இவைகட்கு) மிளகின ரசத்திலும் (கொடுத்தலேயாகும்): (மேற்கண்ட பிணிகளல் லாமல் வேறு ரோகங்கள் வருமேயானுல்), ஐயம்—(அவைகளை எப்படி அறிந்து தீர்க்கப்போகிருேமென்று) சந்தேகங் கொள்ளா மல், கீர்—(நோயாளி பேசும்) பேச்சின் ஒலியையும், அம்—(அவனுடைய) நீரையும், தேம் (அவன் குடியிருந்து வாழும்) இடத்தின் தன்மையையும் நோக்கி, இப்படிப்பட்ட எண்வகைத் தேர்தலில் மேற்சொன்னவை நீங்க மற்றவை களின், கேள்—சம்பந்தத்தைக் கொண்டறிந்து (இப் பற் பத்தைத் தக்க அனுபானத்தில் பிரயோகிப்பாய்).

அளவு '' துவரை '' என்று கூறியதால், கால்கூறு உத்தமம், அரைக்கூறு மத்திமம்; முக்காற்கூறு அதமம்; முழுக்கூறு அதமாத'மம் என்று கொள்க.

கொள்ளும் நாள் ஒரு பட்சம் என்றதனுல், ஒரு பட்சம் உத்தமம்; இரண்டு பட்சம் மத்திமம்; மூன்று பட்சம் அதமம்; நான்கு பட்சம் அதமாதம மென்று அறிக.

இது நிற்க, மேலே குறிப்பிட்ட நூலாசிரியருடைய கருத் தைப்போலவே, மற்றைய நூலாசிரியர்களும் வெள்வங்கத்தின் அருமையையும் பெருமையையும் பாராட்டிக் கூறி இருத்தலைக் கீழ்க்காணும் செய்யுட்களால் அறிக :

'' தாவள வங்கத்தவளத் தருமையை
நாவள வென்று நவிலுதற் கம்மம்ம!
கோவள மாகுங் குடர்வாதம் போகுஞ்சி
காவள மாகுங் கடுங்காற் பிணிகட்கே.''

(திருமூலர் திருமந்திரம்.)

"வெள்ளீய பற்ப மெய்ப்புற்றுக் குள்ளே
மேக வளிப்பிணி யாதி யான
துள்ளு மெலிகளைக் கொல்ல வந்து
தோன்றி யதாமென் றுடாய் பாம்பே."

(பாம்பாட்டிச் சித்தர் நேரிசைப்பா)

"வெண்மை வங்கமடி—அகப்பேய்!
மேலான மூலியடி அது
வண்மை மெய்க்குறுதி தன்னை
வாடிக்கை தேடுமடி—அகப்பேய்!

(அகப்பேய்ச் சித்தர்.)

**வெள்வங்கப் பற்பமகிமை.**

வெள்வங்கப் பற்பத்தினை சிறப்பாகத் தொண்டை சீல்கள் பற்றிய கபநோய்களுக்குக் கொடுக்க, நற்பலனை அளிக்குமென் பதனை கீழ்ச் செய்யுளும் அதன் உரையும் விளக்கும்:

"பாண்டுவங்கக் கூடா படரவொட்டா வாரபந்தப்
பாண்டுவங்கக் கூடாமெய் பண்பாகப்—பாண்டுவங்க
வெள்ளத்தை யேய்நுகர் மேலேயுல் லாபமெனும்
வெள்ளத்தை யேயடைதி மெய்."

(ப-ரை) பாண்—(வீணை முதலிய கருவியின் இசை போல மிடற்றின் ஒத்தாசையால்) இசை பாட, துவங்க—ஆரம்பஞ் செய்வதற்கு, கூடா—(வாதமும் கபமும் ஒன்றுகூடி, நெஞ்சு முதல் அண்ணம் வரை நீர் கொண்டு, குரற்கம்மல், இருமல், தும்மல், தொண்டைக் கட்டு முதலிய பிணிகளை விளைவித்ததினால்) கூடாத, படரவொட்டா—(மேலும் கபம் வாதத்துடன் சிக்கிக்கொண்டு சீல்களில்) தங்கி நடக்கவொட்டாதபடி இரண்டு பாதங்களிலும் வலியையுண்டாக்கி, வாரபந்தம்—சிறுதளவேனும் நீரை வெளிவரவொட்டாமல் அடைத்துக் கொண்டு மிக்க உபத்திரவத்தைக் கொடுக்கும், †பாண்டு—முன்னுளிலிருப்பதான, வங்கு—வளைந்த, அக்கு—எலும்பு நரம்புகளினது சந்துக்கட்டான, ஊடாம் மெய்—உள்ளிடங்களிலிருந்து கபம் வெளிப்பட்டுத் தேகம் செம்மைப் படவேண்டுமானுல், பண்பாக—இலட்சணப்பழுது சிறிதும் இன்றி முடித்த, பாண்டு வங்கம்—வெள்வங்கத்தின், வெள்ளத்தை—பற்பத்தை, ஏய—பக்குவமாய்ப் பங்கிட்டுத் தக்க அனுபானத்தில், நுகர்—நீ புசிப்பாய்; மேலே—பின்னுலே (அனுபோகத்தில்), உல்லாபமென்னும்—உற்றநோயொழிந்ததெனும் உள்ளக்களிப்பாகிய, வெள்ளத்தையே—பரமானந்த சாகரத்திலே மூழ்கிய இன்பத்தையே, அடைதி—அக்கணமே அடைவாய், மெய்—(இஃது) உண்மை. ஆகையால், நீ இதை நம்பி நடந்து கொள்வாயாக என்றவாறு.

---

†'பண்டு என்பது' 'பாண்டு' என நீண்டது.

மற்றும், சிவனுக்கு ஒப்பான வெள்ளீய பற்பம், சுர முதலிய நோய்களை ஓட்டி உடம்பை வளர்க்கும் என்பதனை ''சுரமுதலா நோய்போம் துளிர்க்கு முடம்பு, அரன்நிகர் வெள்ளீய பற்பத் தாலே'' என்ற அடிகளால் உணர்க.

### வெள்வங்கப் பறபம் (வேறு).

வாலைரசம் மூன்று கழஞ்சு (15.3 கிராம்), வெள்வங்கம் மூன்று கழஞ்சு (15.3 கிராம்) ஆகிய இவ்விரண்டையும் நன்றாய்த் தொந்தித்து, கல்வத்திலிட்டுக் கருபபூரச் சிலாசத்து மூன்று கழஞ்சு (15.3 கிராம்) கூட்டிச் சுண்ணநீரால் அரைத்து வில்லை தட்டிக் காயவைத்து, பின்பு ஓட்டிலிட்டுச் சீலை செய்து, முப்பது எருவில் புடமிட்டு, ஆறியபின் எடுத்துச் சுண்ணநீரால் இரண்டு சாமம் (6 மணி) நன்றாயரைத்து, சூரிய ஒளியில் உலர்த்தி, ஓட்டிலிட்டுச் சீலைமண் செய்து, ஐம்பது எருவில் புடமிட்டு எடுக்க, மல்லிகைப்பூ நிறம்போல வெண்மையாம்.

அளவு : பணவெடை (488 மி, கிராம்).

அணுபானம் : உலர்த்திய மாதுளம்பூவிதழும், சீரகமும் சம வெடை கூட்டிய சூரணம் நான்கு பணவெடையுடன் நெய் கலந்துகொள்ளவும்.

**தீரும் நோய் :** நவமூலம்.

**உண்டாகும் நன்மை :** நாடிகள் வலுத்துத் தாது உண்டாகும்.

**பத்தியம் :** உளுந்து, மொச்சை, பூசணி இவற்றை நீக்க வேண்டும்.

### (வேறு)

நொச்சியிலைக் கற்கத்தில் ஈசல் இறகு போலத் தட்டிய வெள்வங்கத் தகட்டை, சிறுதுண்டுகளாய்க் கத்தரித்துப் புதைத்துப் சீலை செய்து, கஜபுடமிட்டெடுக்க, வங்கம் சோளப் பொரிபோலச் பொரிந்து இருக்கும். அதை எடுத்து நொச்சியிரசம் விட்டு அரைத்து, சிறுவில்லைகளாகச் செய்துலர்த்தி, முறைப்படி புடமிட்டெடுத்து உபயோகிக்கவும்.

### வங்கச்சுண்ணம்.

வங்கம் நான்கு பங்கெடுத்து உருக்கி, உருக்கு முகத்தில் நான்கு பங்கு இரசம் சேர்த்து, வெட்டையாக்கி அரைத்துப் பிறகு நான்கு பங்கு அண்டவோடு சேர்த்து அரைத்து, ஒரு பங்கு வீரம் சேர்த்துத் தூளாக்கி, சுண்ணாம்பு நீரைச் சிறிது சிறிதாக விட்டு நன்றாய் மடியும்படி அரைத்து, வஜ்ர மூசை யிலிட்டுச் சீலைமண் செய்து உலர்ந்த உடன் உலையிலிட்டு மூசை அழுக ஊதியெடுக்கச் சுண்ணமாம்.

அளவு : ஒரு அரிசி யெடை (65 மி.கிராம்).

தீரும் நோய் : தேனில் அனுபானித்துக்கொடுக்க மேகசூலை தீரும்.

சிறப்பாக அரசாங்க இந்திய மருத்துவமனையில் இச்சுண்ணம் தேனில் அனுபானித்து மேகசூலைக்குக் கையாளப்படுகிறது.

### வெள்வெங்கச் செந்தூரம்.

ஒரு பலம் (35 கிராம்) சுத்தி செய்த வெள்வங்கப் பொடியைக் கீழ்வரும் பட்டியில் குறித்த முறைப்படி அரைத்து, வில்லை செய்து, உலர்த்திப் புடமிட்டெடுக்கவும். ஒவ்வொரு நாளும் புதிய சாற்றையே உபயோகித்தல் வேண்டும்.

| சாற்றின் பெயர். | அளவு பலம். | அரைப்பு நாள். | வில்லை உலர்த்து நாள். | கவசம் உலர்த்து நாள். | புடம் வரட்டி. |
|---|---|---|---|---|---|
| புளியிலைச்சாறு | 6 | 6 | 5 | 1 | 30 |
| ஆலங்கொழுந்துச்சாறு | 6 | 6 | 5 | 1 | 30 |
| விழுதியிலைச்சாறு | 6 | 6 | 5 | 1 | 30 |
| சீதாப்பழமரவிலைச்சாறு | 6 | 6 | 5 | 1 | 30 |
| பொன்முசுட்டைச்சாறு | 6 | 6 | 5 | 1 | 30 |
| சிற்றரத்தையிலைச்சாறு | 6 | 6 | 5 | 1 | 30 |

### வெள்வங்கச் செந்தூரத்தின் பயன்.

| துணைமருந்து. | தீரும் நோய்கள். |
|---|---|
| நீர் .. .. .. | சேத்மத் தொந்தவியாதி. |
| சருக்கரை .. .. | சுரப்பிணி. |
| பசுவின் நெய் .. .. | எலும்புருக்கி நோய். |
| மிளகு ரசம் .. .. | சிரோவலி கூட்டப்பிணி. |
| வெந்நீர் .. .. .. | வாதத் தொந்த நோய். |
| கருப்பஞ்சாறு .. .. | மூர்ச்சை வாயு |
| கம்மாறு வெற்றிலைச்சாறு | திரிபாதவிடச் சன்னி ரோகம். |
| மூங்கில் இலைச்சாறு .. | குன்மச்சன்னி. |
| வேலம்பட்டைச் சாராயம்.. | வெண்மேகக் கிரந்தி ரோகம். |

### தங்க உரம்.

### STANNIC SULPHIDUM
### (MOSAIC GOLD BISULPHURETTE OF TIN)

"சாரம் தவளவங்கம் சத்திசிவம் ஓரெடையாய்
காரப்படிகாரம் காற்கூட்டி— நேரே
வளையல்குப் பிக்கேற்றி வன்னியிடு மாணே!
விளையும் பொன் னப்பிரகமே

(பொ-ரை) நவாச்சாரம் வெள்வங்கம், கந்தகம், இரசம் இவைகளைச் சமவெடை சேர்த்து வெடியுப்புத் திராவக மெழுகுபோல் அரைத்துச் குப்பியிலிட்டு முறைப்படி சீலைமண் செய்து வாலுகா இயந்திரத்தில் 25 மணி நேரம் எரித்தெடுக்கப் பொன் அப்பிரகம் போலப் பளபளவென்றிருக்கும் இது தங்க உரம்.

அளவு : *130 மி.கிரா. முதல் 260 மி.கிரா. வரை.*

இது ஆண்பெண் ஜனன உருப்புகளைப் பற்றிய நோய்களில் பயன படுத்தப்படுகிறது. நாட்பட்ட வெள்ளையில் நல்ல குணத்தைக் கொடுக்கும். உடலைத் தேற்றவும், உரமுண் டாக்கவும், பசி, ஞாபகம், வீரியம், இவற்றை விளைவிக்கவும் மேகம் விந்து நட்டத்தைப் போக்கி புத்துணர்ச்சி அளிக்கவும் உதவும்.

**வெள்ளி உரம்.**

மேற்படி சரக்குகளுடன் படிகாரம் காற்பங்கு சேர்த்துச் செய்ய வெண்ணிறத்தை அடையும் இது வெள்ளி உரம்.

அளவு : *½ (65 மி.கிரா.) முதல் 1 குன்றி (130 மி. கிரா.) வரை.*

அநுபானம் : *ஜாதிக்காய் லேகியம்.*

இதனுல் தாது விர்த்தி அடைந்து நரம்புகள் வலுவடையும்.

குறிப்பு.—மேற்படி மருந்தை அமுக்கிராக் கிழங்குச் சூரணத் துடன் தேன் கலந்து கொடுக்க மேகருசுலை, தீருவதை அனு பவத்தில் கண்டனம்.

## வெள்ளி.
## ARGENIUM
## (SILVER)

இப்பொருள் அரன்பதி, துய்யான், வெண்தாது, சுல்லு, தாரம்' களதௌதம், வெண்பொன், இரசிதம், இரசதம் சுக்கிரன் என்னும் வேறு பெயர்களினுலும் வழங்கப்படுகின்றது இவை யன்றி, தேரர், இதனை ''மதுரைப் பொது'' என்றும் ஆண் டிருக்கிருர்.

இவ்வுலோகம் பொன், செம்பு, பாடாணம் போன்ற தாதுப்பொருள்களுடன் கலப்புற்றுக் கிடைக்கின்றது. பண்டை நாளில் மிருதார் சிங்கியிலிருந்து வெள்ளியைப் பிரித்தெடுத்திருக் கின்றுர்கள். இக்காலத்திலும் மிருதார்சிங்கியில் சிறிய அளவில் கலந்திருக்கின்ற வெள்ளியைப் பல இடங்களில் பிரித்தெடுக்கின் றுர்கள், சிந்து, ஆக்ரா, டில்லி, இலாகூர் போன்ற இடங் களில் வெள்ளிச் சுரங்கங்கள் இருந்தன என்று கூறப்பட்டுள்ளது.

மருந்துகளில் உபயோகிக்க வேண்டிய வெள்ளி ஊட்டம், இதர பொருள்களுடன் கலப்பின்மை நெருப்பிலிட்டுக் காய்ச்சினும் நெய்ப்பு, சங்கை யொத்த நிறம், மினுமினுப்பு, வெட்டுவாய், வெண்மை, மிருது, நெருப்பிலிட்டுக் காய்ச்சியோ காய்ச்சாமலோ சுத்தி என்னும் கருவி கொண்டு அடிக்கப் பொறி கிளம்பாமை, ஒடிபடாமை ஆகிய குணங்களைப் பெற்றிருக்க வேண்டும்.

ஊட்டமின்றி, இலேசத்துவம், கரகரப்பு, வறட்சி, பொறி கிளம்பல், நெருப்பிலிட்டுக் காய்ச்சினல் செம்மை, மஞ்சள், கறுப்பு நிறம்பெறல் ஆகிய குணங்களுக்குள்ள வெள்ளியை உபயோகித்தல் கூடாது.

குணம் : இதற்கு, அதிகப் புளிப்பும், குறைந்த துவர்ப்பும் இனிப்புச் சுவைகளும், சீதவீரியமும், இனிப்புப் பிரிவும் உள.

செய்கை : வெள்ளிக்கு இசிவகற்றி, வெப்பமுண்டாக்கி, உடல் உரமாக்கி, காமம் பெருக்கி, மலமிளக்கி, வாந்தியுண்டாக்கி, பசித்தீத் தூண்டி, தாது வெப்பகற்றி, உள்ளழலாற்றி முதலிய செய்கைகள் உளவென்று கூறுவர். மற்றும், இஃது உடலுக்குப் புத்துணர்ச்சியையும், மூளைக்கும் அறிவிற்கும் வன்மையையும் பண்ணும்.

பொதுக் குணம்.

" பாய்க்கூட்டங் காட்டாப் பழையசுரந் தாருவிடம்
வாய்க்கூட்டச் செய்மேக வாதமுதல்—நோய்க்கூட்டம்
அண்டாது காணிக்கொளுமந்திமே கக்கசிவும்
வெண்டாது காணின்மெய் மேல்".

இதுவுமது.

" இரத்தங் கயம்பித்தம் ஈளைகண்ணோய் காசம்
உரத்தையம் அட்டகுன்மம் ஊதை—வருத்தும்
விரணஞ் சிலேட்டுமநோய் மெய்ப்புளிப் புண்ணூரல்
மரணமுறும் வெள்ளியினல் வாழ்த்து".

(பொ-ரை) வெள்ளி, படுக்கைக்கு கனமில்லாபடி துர்ப்பலஞ் செய்கிற புராண சுரம், மரவிடம், ஒருவரால் உணவை ஊட்டச் செய்கிற மேகவாதப் பிடிப்பு முதலிய நோய்களையும்; ஒழுக்கு வெள்ளை, உதிர பேதி, கயம், பைத்தியம், கோழை, விழிநோய், இருமல், மார்புச்சளி, அஷ்ட குன்மம், வாதகோபம், கிரந்தி, நீர்க்கோவை, லாஞ்சனம், சிரங்கு, சொறி முதலியவைகளையும் விலக்கும்.

சுத்தி.

வெள்ளியைச் சுத்தி செய்யாமல் உபயோகித்தால், ஆயுள், சுக்கிலதாது, பலம் இவற்றைக் குறைத்து, மலபந்தம், தாபம் இவைகளினல் தோன்றும் பிணிகளைப் பிறப்பிக்கும் என்பர்.

சரிகை வெள்ளியை உருக்கி, தகடாகத் தட்டிக் காய்ச்சி, மணித் தக்காளிச்சாற்றில் தோய்த் தெடுக்கவும். இங்ஙனம் வெள்ளி மடியும் வரையிற் காய்ச்சிக் காய்ச்சித் தோய்த்துக் கழுவி எடுக்கச் சுத்தியாம்.

(வேறு)

மேற்கூறியவாறு வெள்ளியை, மகிழம்பூச் சாற்றிலாவது, பிரம தண்டியிலைச் சாற்றிலாவது காய்ச்சித் தோய்த்துக் கழுவி யெடுக்கச் சுத்தியாம்.

(வேறு)

மேற்கூறியவாறு அதைப் பழுபாகற் கிழங்கின் சாற்றில் ஏழு முறை காய்ச்சித் தோய்த்துக் கழுவியெடுக்கச் சுத்தியாம்.

### வெள்ளிப் பற்பம்.

சுத்திசெய்த ஒரு பலம் (35 கிராம்) வெள்ளிப்பொடியை, கீழ்ப் பட்டியில் காணும் சாறுகளைக் கொண்டு முறைப்படி அரைத்து, உலர்த்தி, வில்லைசெய்து கவசித்துப் புடமெட்டெடுக்கப் பற்பமாம்.

| சாற்றின் பெயர். | அளவு பலம் | அரைப்பு நாள். | வில்லை உலர்த்தும் நாள். | கவசம் உலர்த்தும் நாள். | புடம் வரட்டி. |
|---|---|---|---|---|---|
| கறுப்புமணித் தக்காளிச் சமூலச் சாறு. | 7 | 9 | 8 | 1 | 45 |
| கறுப்பு ஊமத்தைச் சமூலச்சாறு | 6 | 7 | 6 | 1 | 36 |
| கறுப்பு ஆத்திச் சமூலச்சாறு | 5 | 5 | 4 | 1 | 26 |
| கறுப்புச் சாமந்திச் சமூலச்சாறு | 4 | 3 | 2 | 1 | 14 |

இங்ஙனம் முடித்த வெள்ளிப் பற்பத்தின் அளவு, காக்கை மூக்கின் முனையில் தங்கப்பட்ட அளவில் ஆறில் ஒரு கூறும் உத்தமம்; இரண்டு கூறு மத்திமம்; மூன்றுகூறு அதமம்; நான்கு கூறு அதமாதமம்; ஐந்து கூறு மிகுதி; முழுக்கூறு அதிக மிகுதி என்று கூறப்பட்டுள்ளது.

அருந்த வேண்டிய நாளளவில் ஒரு மண்டலம் உத்தமம், முக்கால் மண்டலம் மத்திமம்; அரை மண்டலம் அதமம்; கால் மண்டலம் அதமாதமம் என்று கொள்க. இவற்றைக் கீழ்ச்செய்யுள் வலியுறுத்தும் :

'இரசித பருப்பத் தளவையா றுங்காங் கிசைவன வறிவதே திறமை
வரசித மாமவ் வடலையை யுணுநாள் மண்டல மாமது நாற்பால்
விரிசித அரனுறிருப்பிட மஃதேல் வேண்டுமோ வதற்கினி வேறே?
உரசிதப் புகரி னுமமு மஃதேல் உலகினி லவன்றிசை பெரிதே''

## துணை மருந்தும் தீரும் நோய்களும்.

முக்குற்ற மாறுபட்டால் தோன்றும் வாந்திபேதியுடன் கூடிய அசாத்திய சுரத்திற்குக் கள்ளிச்சாற்றிலும் வாதத்தினால் பிடிப்புண்டாய் அஜீரணத்தை உண்டாக்கும் வாதசுரத்திலே நடுக்கலைத் தரும் அசாத்திய நோய்க்கு மோரிலும் வாதசந்நியினால் அதிவெப்பம், தாகம், சோகம், மெய்த் திமிர் முதலியவைகளைக் கொடுக்கும் அசாத்திய நோய்க்குத் தேனிலும்; பித்த சம்பந்தப்பட்ட வெட்டை காசம், குன்மம், திமிர்வாதம், பெரும்பாடு, பத்துவித வெப்ப நோய்கள், வெப்ப சந்நிபாதம், ரத்த மூலம், காமாலை முதலியவற்றிற்குப் பசுவின்பாலிலும்; சேட்ப சம்பந்தப்பட்ட கன்னச் சிலந்தி, கன்னக்கிரந்திக் கூடி, பல்லடி வலித்து ஈறுகட்டிக் கொண்டு பற்சந்துகளில் இரத்தம் பொசியும் தந்தரூடிப்பிணி, கரப்பான் சொறி, சிரங்கு, தேமல், தினவினால் சொறிந்து தடிக்கக் கடிபோல் தோன்றும் நோய், பாண்டுவைச் சோபை போலக் கை கால்களில் நீர் ஏறி வீக்கத்தை உண்டாக்கும் நோய், விடாது கை கால்களை அசையும்படி செய்கின்ற நோய் முதலியவற்றிற்கு நெய்யிலும்; வாதத்தினால் தோன்றும் ஒரு பக்கத்தில் வலி, பிடிப்பு, மூச்சுவிடாதபடியும், வாய் பேசாதபடியும் விக்கலையும் கடுப்பையும் உண்டு பண்ணும் நோய்களுக்கு மிளகு இரசத்திலும்; பல்வகைப்பட்ட சந்நிகளுக்குத் திப்பிலி இரசத்திலும்; பல்வகைப்பட்ட பாண்டு நோய்களுக்குச் சுக்கு ரசத்திலும்; பல்வகைப்பட்ட உறக்கப் பிணிகளுக்கு பொன்னாங்காணிக் கீரைச் சாற்றிலும்; முப்பிணி சம்பந்தத்தினால் அக்கினி மந்தப்பட்டு, சுரம் அரட்டல், புரட்டல் விவகாரங்களை உண்டு பண்ணும் நோய்க்குப் பனங்கள்ளிலும்; உடல் நலத்தைப் போக்குகின்ற நளிர்ச்சுரம் மிகுந்த வெப்பாக்கினி வியாதிகளினால் தேகம் மெலிந்து விடும்படி செய்த உற்பாத சந்நிபாத மூர்ச்சைகளுக்கு வெந்நீரிலும்; நோய் சேடமாகிப் பின் போன பிணிகளை வருவிக்கின்ற நோய்களுக்குப் பன்னீரிலும்; பல்வகைப் பட்ட வாயுக்களுக்குக் குளிர்ந்த நீரிலும் வாதமோக சயிந்தவ நோய்க்குத் துளசிச்சாற்றிலும்; பித்தமோகச் சயிந்தவ நோய்க்குச் சர்க்கரையிலும் வெள்ளிப் பற்பத்தை முறையே கொடுக்க இவையாவும் நீங்குவனவாகும்.

### (வேறு)

நாக்கு, கை, தலை, தோல், வாய் என்னும் இவ்விடங்களில் விநோதமாய் இறுக்கிக் கட்டியது போல வலியை உண்டு பண்ணுகின்ற வாயுவிற்கு ஆமணக்கு, காட்டாமணக்கு, மாசீந்தில், சுரபுன்னை என்னும் இவைகளின் இலைச் சாற்றில், வெள்ளிப் பற்பத்தை முறையே அனுமானித்துக் கொடுக்க வேண்டுமென்றும்; பித்தாதிக்கத்தால் மேற்சொல்லிய இடங்களில் காணும் நோய்களுக்குச் சூரியகாந்திப்பூ, அல்லி, பசுமஞ்சள், குப்பைமேனி, கையாந்தகரை என்னும் இவற்றின் சாற்றில் மேற்படி பற்பத்தை முறையே அனுமானித்துக் கொடுக்க வேண்டுமென்றும்; கபாதிகத்தால் மேற்சொல்லிய ஐந்து இடங்களில் காணும் நோய்களுக்குக் களிப்

பரட்டை கட்டுக்கொடி, கீழாநெல்லி, பாகலிலை, வில்வ இலை என்னும் இவைகளின் சாற்றில் மேற்படி பற்பத்தை முறைப்படி அனுமானித்துக் கொடுக்க வேண்டுமென்றும் கூறப்பட்டுள்ளது.

### மகிமை.

வெள்ளிப் பற்பமானது, மாதர்களுக்கு வாயாலும் நிதம்பத்தாலும் வரும் உதிரத்தைநிறுத்திக் குன்ம வலியைப் போக்கிச் சகல நன்மைகளையும் தரும்.

இது நிற்க, இரசித பற்பத்தால் சேத்மச் சந்நி நீங்கும் என்பதை,

''வஞ்சக் கோதார் சகுனியைச் சாதேவன்
மாய்ப்பே னெனன வுரைத்தான்.''

என்றும்,

'' தம்பி சகாதேவன் வெம்பி யெதிர்த்திட்ட
சகுனி மாமன்தலை யறுத்தான்;
சபத முடித்தேனென் றப்போது ஞானத்தாற்
தன்னைத்தா னேமெத்த வெறுத்தான்''.

என்றும், தேரர் மருத்துப் பாரதத்தில் கூறியிருத்தலான்றிக.

மற்றும், தேரர் பொருட் பண்பு நூலில் கீழ்க்காணுமாறு இரசித பற்பமகிமையைக் குறிப்பிடுகின்றார்.

'' இரசித பற்பவண்ணம் நவிலவெளி தாமோ?
உசிதம் எனுமஃதே யுண்மை—வசியம்
பெருகும் பசிவளரும்; பேதமிலை நோய்மை
அருகும் உடலுறுதி யாம்''.

### பற்பம் (வேறு).

வெள்ளிப் பொடி ஒரு பலத்திற்கு (35 கிராம்) இரண் பங்கு வீதம் நெட்டியிலைச்சாறு ஒவ்வொரு நாளும் விட்டு ஊறவைத்து, ஆறுநாள் கழித்தெடுத்து, பிறகு ஒரு நாள் கொவ்வைச் சாற்றில் ஊறவைத்து எடுத்து, மறுநாள் மேற்படி சாற்றாலரைத்து, வில்லை செய்து உலர்த்திக் கொண்டு, கருவேலின் தோலை வேம்பின் நெய்யால் நாலு நாழிகை அரைத்து மூசை செய்து, நிழலில் உலர்த்தி மகிழம்பூத் தூளை மூசையில் சிறிது இட்டு, வில்லையை வைத்து மேலே மேற்படித் தூளை நிறைத்து தினம் ஒரு சீலை மண் செய்துலர்த்தி, அதுபோலவே மற்ற ஆறு நாளும் சீலை செய்து, உலர்ந்த பின் நூறு எருவில் புடமிட்டெடுக்கின் பற்பமாம்.

இங்ஙனம் முடித்த பற்பத்தின் அளவு, துணை மருந்து தீரும் நோய்கள், பத்தியம் முதலியவற்றைக் கீழ்க்காணும் செய்யுளாலறிக :

" இசையுமிவ் வெள்ளிப் பற்பநல் லவிழ்தம்
என்பதன் முன்னுறும்வாத
மேதரித் தணைத்த மேகவா தங்கள்
இரணங்கள் ஊறல்கள் மேகக்
கசிவுறு புள்ளிப் புண்பழஞ் சுரங்கள்
கபப்பிணி பைத்திய வெப்புக்
காதர மீதெலா மிதற்கனு பானங்
கன்னல்தேன் நெய் சருக்கரையாம்
வசையுறுநோய்கட் கிதுநிரை நிரையாம்
வகையறிந் தாடகி யளவு
வருமிருபொழுதுமுண்பது தசநாள்
வரகுகொள் கடுகுகூஷ் பாண்டம்
தசைதிலம் பிரமபத்திரி மடவார்
தகாதிது பத்தியம் புளிகால்
தருமதன் குணமும்பின் னையிருதினத்தில்
சடலம்வச் சிரமலை யாமே".

(வேறு)

ஊதுகட்டி வெள்ளியைக் குகையிலிட்டு, உருகும்போது இரண்டு பங்கெடை மகிழம்பூச் சாற்றைக் கொஞ்சங் கொஞ்சமாய் விட்டு ஊத, வெள்ளி மடிந்துவிடும். இந்தப் பொடியை முன்சாற்றால் அரைத்து, வில்லை செய்து காயவைத்து, வில்லைக்கு முட்காய்வேளை வேரை, முன் சாற்றாலரைத்துக் கவசம்செய்து, குகையிலிட்டு சில்லு மூடி உலர்த்தி, மண்சீலை செய்து, நூறு எருவில் புடமிட் டெடுத்திடின் பற்பமாம்.

அளவு : வேளைக்கு ¼ பணவெடை (244 மி. கிராம்).

துணைமருந்தும் தீரும் நோய்களும் : வெண்ணெயில் கொடுக்க காசம், இரத்தகாசம் தீரும். திப்பிலித்தூளில் கொடுக்க, மேக காசம், மந்தார காசம் நீங்கும். தக்க அனுமானத்தில் கொடுக்க, பவுத்திரம், மூலம், சூலை முதலிய நோய்களும் தீரும்.

பத்தியம் : புளியும் புகையும் நீக்க வேண்டும்.

(வேறு)

வெள்ளி, கந்தகம், நிமிளை ஒவ்வொன்றும் ஒவ்வொரு பங்கு எடுத்துக் கொண்டு, கந்தியையும், நிமிளையையும் எருக்கம்பால் விட்டு நான்கு சாமம் அரைத்து, வெள்ளியைத் தகடாகத் தட்டி, அதன் இருபுறமும் பூசி உலர்த்தி, அகலிலிட்டு, ஏழு சீலை மண் வலுவாய்ச் செய்து, ஒரு நாள் உலர்த்தி கஜபுடமிடப் பற்பமாம்.

இதனை, ஆடாதோடைக் குடிநீரில் கொடுக்க, கபநோயும், இரத்த பித்தநோயும் நீங்கும். தாமரைபூச் சாற்றில் தேன் கலந்து கொடுக்க உடல் உரமாகும். வெள்ளாட்டு நெய் அல்லது பாலில் கொடுக்க, அஸ்திசுத ரோகம், சயம், நாட்பட்ட சுரம் நீங்கும்.

(வேறு)

வெள்ளி 1 பங்கு, வெள் வங்கம் 1/8 பங்கு, இரசம் 1 பங்கு சேர்த்துச் சங்கத்திராவகத்தால் அரைத்து, வில்லை செய்து புடமிட்டெடுக்கவும் இங்ஙனம் மற்றும் இருபுடமிட்டெடுக்கின் பற்பமாம்.

துணை மருந்து : அஸ்வகாந்தாதி சூரணம்.

தீரும் நோய்கள் : பித்தப் பிரமை, ஊழி, காமாலை, வாந்தியுடன் கூடிய கிறுகிறுப்பு, வாயு, கிரகணி, உளைமாந்தை, சுரமாந்தை, சலக்கழிச்சல், எலும்புருக்கி, அத்திசுரம் பித்தவெட்டை, திராப்பிரமைகள் முதலியன.

வெள்ளிச் செந்தூரம்.

ஒரு பலம் சுத்திசெய்த வெள்ளிப்பொடியிற் பாதிரிச்சாறு, தண்ணீர் விட்டான் கிழங்குச்சாறு, நிலப்பனைக் கிழங்குச் சாறு, சித்திரமூலச்சாறு இவைகளைத் தனித்தனியாய் விட்டு, முறைப்படி அரைத்து, வில்லை செய்து உலர்த்திக் கவசித்துப் புடமிட்டு எடுக்கச் செந்தூரமாம்.

| துணை மருந்து. | தீரும் நோய்கள். |
|---|---|
| பால் | கபநோய். |
| குளிர்ந்த நீர் | காமாலை. |
| வெந்நீர் | குன்மம். |
| மோர் | பக்கசூலை. |
| பாலையிலைரசம் | கயநோய். |
| கள் | மாலைக்கண். |
| தேன் | பிடிப்புப்பிணி. |
| சாராயம் | மார்பு எரி குன்மம். |
| நெய் | சுரப்பிணி. |
| கடப்பஞ்சாறு | பாண்டுநோய். |
| கற்றாழைச்சாறு | செங்குட்டமேகத் தேமல் |
| வாதுமை நெய் | வெகுமூத்திரம். |

### மகிமை.

வெள்ளிச் செந்தூரம், வாத பித்த கபதோடங்களையும் அவைகளைப் பற்றி வருகின்ற மற்றைய பிணிக்கூட்டங்களையும் நீக்கி, உடற்குச் சுகத்தையும் அழகையும் கொடுப்பதோடன்றி, முக்கியமாய்ச் செங்குட்டம், வெண்குட்டம், கருங்குட்டம் என்ற மூவகைக் குட்டங்களையும் போக்கும் வல்லமை உடையது.

### செந்தூரம் (வேறு).

பழுபாகற் கிழங்கின் சாற்றில் சுத்தி செய்த வெள்ளியை, ஈச லிறகு போலத்தட்டி, காகமாட்சிகத்தை மணித்தக்காளிச்சாறு, முலைப்பால் இவைகளினால் முறையே நான்கு சாமம் அரைத்து, தகட்டிற்கு இருபுறமும் உலர உலரப் பூசி, மூசைக்குள் வைத்து ஏழு சீலைமண் செய்து கஜபுடமிட்டெடுக்கப் பற்பமாம். இப்படி பற்பத்திற்குச் சரிபாகம் இலவங்கம் கூட்டி, வேலம்பட்டைக் குடிநீர், எருக்கம்பால், சிறுசெருப்புடைச்சாறு ஆலம்பால், வெள்வேலம்பட்டைக் குடிநீர், கருப்பஞ்சாறு இவைகளைக்கொண்டு முறையே தனித்தனியாய் ஒவ்வொரு சாமம் அரைத்து, முப்பது வரட்டியில் புடமிட்டெடுக்கச் செந்தூரமாம் இச் செந்தூரத்தால் க்ஷயம் நீங்குமென்ப.

### வேறு உபயோகங்கள்.

வெள்ளியை மிக மெல்லிய தகடாய் அடித்து, காகிதங்களின் இடையில் வைத்து கடைகளில் கட்டுக்கட்டாக விற்கின்றனர். இது ''வெள்ளிரேக்கு'' என்று கூறப்படும். இதனைத் தனவந்தர்கள் தாம்பூலத்துடனும், இனிப்புள்ள மிட்டாய் வர்க்கங்களுடனும் கூட்டி உண்கின்றனர்.

மற்றும் பூபதி மாத்திரைகளிலும், தேரர் கூறிய பூரண சந்திரோதயத்திலும், எமதண்டக் குளிகையிலும், கண்ணோய் மருந்துகளிலும் வெள்ளி சேர்கின்றது.

வெள்ளியைத் தங்கம் உபயோகிக்கக்கூடிய இடங்களில் உபயோகிக்கலாம் என்னும் விதியும் உண்டு. ஆனால், தங்கத்தைக் காட்டிலும் வெள்ளி தாழ்ந்த குணத்தை உடையது.

### வெள்ளிச் செந்தூரம் (வேறு).

'' இரசித செந்தூர மின்புற்றுக் கேண்மின்
நிரைவெள்ளி வெள்ளி நிறையை—உருக்கிக்
குடுக்கைசெய்து சூதபலம் கூட்டுள் தமரிட்
டிடுவயக் கம்பிமே லீ.''

''ஈவாயதிற்கட் டிடுநாதஞ் சேர்பொடித்து
மாகுடத்தின் மத்தியிட்டு வாகதன்மேல்—தாவாமல்
மேற்குடுக்க கம்பியிட்டு மேற்கவசஞ் செய்தடுப்பில்
காலறிந்தோர் சாமமெரி காண்.''

"காணிரசி தக்குடுக்கை கண்டுகொள்ளாச் செந்தூரம்
பூண வவிழ்தெடுத்துப் பூசித்துத்—தோணுகின்ற
நோய்விலகுந் தேகத்தில் நோவேதி ரத்தவிர்த்தி
வாய்க்குமிதைக் கற்பமதாய் வை.''

### வெள்ளிச் செந்தூரம்.

வெள்ளிரேக்கு 2 தோலாவுக்கு (24 கிராம்), மணித்தக்காளிச் சாறு 10 பலம் (350 கிராம்) சிறிது சிறிதாக விட்டு, 12 மணி நேரம் கைவிடாமல் அரைத்து, தம்படிப் பிரமாணம் வில்லைகள் செய்து உலர்த்தி, சில்லிட்டுச் சீலைசெய்து, நூற்றைம்பது பலம் எடை வரட்டியில் புடமிட்டெடுக்கவும். பிறகு முன்போலவே சாறுவிட்டு அரைத்துக் காயவைத்து, சில்லிட்டுச் சீலை செய்து, முந்நூறு பலம் எடை வரட்டியில் புடமிட்டு எடுக்கச் செந்தூரமாம்.

### வெள்ளிச் சுண்ணம்.

வெள்ளிரேக்கு 3 தோலா (35 கிராம்), அண்டவோடு 3 பலம் (105 கிராம்), 3 வராகனெடை (12.6 கிராம்) எடுத்து, இவைகளுக்குச் சுண்ணாம்பு நீர் விட்டு அரைத்து, உலர்த்திக் குகையிலிட்டுச் சீலைசெய்து, காயவைத்து, உலையிலிட்டு மூன்று மணி நேரம் ஊதி எடுக்கச் சுண்ணமாகும்.

---

# II பஞ்சசூதம்.

## இரசம்

## HYDRARGYRUM
## (MERCURY QUICK SILVER)

இரசத்திற்குக் காரம், சூதம், புண்ணியம், கற்பம், சாமம், சத்து, சூரியவிரோதி, சாதி, சூத்திரன், துள்ளி, ஈசன், வீரியம், சூழ்ச்சி, நீர், விண்ணினீர், விண்மருந்து, இரதம், சுக்கிலம், போகம், ஞானம், சுயம் புரு, வண்டு, நாகம், இக்கியம், விசயம் வேதம், மூலம், சித்தூரம், சிந்து, பக்கிரம், பதினெனண்பந்தி, பாரதம், கனல், பூதம் என்னும் சிவனுக்குள்ள பெயர்கள் தசாங்க நிகண்டில் வழங்கப் பெற்றிருக்கின்றன. இவற்றை,

காரமே சூதம்புண்யம் கற்பமாஞ் சாமஞ் சத்து
சூரிய பகையாஞ் சாதி சூத்திரன் துள்ளி யீசன்
வீரியஞ் சூழ்ச்சி நீராம் விண்ணினீர் விண்ம ருந்து
சீர்பெறு மிரத மென்று செப்பினு ரொப்பி
ல்லோரே.

சுக்கிலம் போக ஞானம் சுயம்புரு வண்டு நாகம்
இக்கியம் விசயம் வேத மூலசிந் தூரஞ் சிந்து
பக்கிரம் பதினெண் பந்தி பாரதங் கனலே பூதம்
நக்கனூர்க் குள்ள நாம நவிற்றலா மிரதப்பேரே.''

என்னும் செய்யுட்களினுல் அறியலாம்.

இனிமை, சிவசத்தி, வருணத்தோன், தனிமை, சங்கரன்விந்து, பனிமை, பராபரம், பாய்ந்திடு தூமம், கனிமை, சரக்கிற் கலந்திடு சீவன், சிவன் விந்து, காவன், சிதறிக்காண்போன், கேசரி, வேந்தன், பாவன், அந்தரகந்தன், ஆதி, வராட்டியன், சுந்தரம், சொற்குறி, தூமம், மகாமரம், மந்தரம், மஞ்சி, மாருதம், மகிபன், விந்தரம், சிலை, கணவன், மலைக்குறவன், வாசுகிநாதன், கந்தன், காவக்குடியோன் என்னும் பெயர்களினுல், சட்டமுனி நிகண்டில் இரசம் வழங்கப்பட்டிருக்கின்றது. இதனை,

'' இனிமை சிவசத்தி ஏற்றிய வர்ணத்தோன்,
தனிமை சிவசத்தி சங்கரன் விந்துதான்
பனிமை பராபரம் பாய்ந்திடு தூமமாம்
கனிமை சரக்கிற் கலந்திடு சீவனே.

சீவன் சிவன்றன் சிறந்திடு விந்துவாம்
காவன் சிதறிக் காணுவோன் முற்றிலும்
ஆவனற் கேசரி யாகிய வேந்தனும்
பாவனற் சூதமப் பகர்ந்திடு நாமமே.

அந்தர கந்த னுதி வாராட்டியன்
சுந்தரஞ் சொற்குறி தூம மகாமாம்
மந்தர மஞ்சி மாருத மகிபனும்
விந்தரஞ் சூத பாஷா ணப்பேருமே.

சிலையான சூதமாம் சேர்ந்த கணவனும்
மலையாங் குறவனும் வாசுகி நாதனும்
கலையான கந்தனும் காவக் குடியோனும்
நிலையான சூதநற் பாஷாணப் பேருமே.''

என்ற பாடல்களால் உணரலாம்.

சில நூல்களில் சிவம், விந்து, வஞ்சகம், மனவேகி, கமலினி, மகாதேவபலம் அரவீரியம், ரௌத்ராகாரம், கந்தம், சாறு எனவும் இதற்குப் பேர்கள் வழங்கப்பட்டிருக்கின்றன.

இரசம் ஸ்பெயின், கலிபோர்னியா, இத்தாலி, இரஷியா சைனு, ஜப்பான் போன்ற நாடுகளின் கனிகளில் கிடைக்கும் இஃது இலிங்கத்திலிருந்து பிரித்தெடுக்கப்படுகின்றது. இரசமாகவே கனிகளிருந்து (மினு மினுப்புடன் கூடிய சிறிய துளிகளாய் கிடைப்பதைக் குறைந்த அளவில் சேகரிக்கின்றனர். நல்ல இரசம், சூரிய ஒளியை வெளிப்புறத்தும், சிறிது நீல ஒளியை உட்புறத்தும் உடைத்தாய் இருக்கும். கடைகளில் வாணிபத்தின் பொருட்டுக் கிடைக்கின்ற இரசத்தில், ஈயம், தகரம், கல், மண், தூசி முதலிய மலினங்கள் கலப்புற்றிருக்கின்றன. மலினம் நிறைந்ததைப் பயன்படுத்தினுல் நோய்களை உண்டுபண்ணும். இலிங்கத்திலிருந்து எடுக்கப்படுகின்ற வாலேரசம், தூய்மையானதாயும் உட்கொள்ளுதற்கு சிறந்ததாயும் கருதப்படுகின்றது.

இரசத்திற்குச் சிங்கி, கௌரி, வெள்ளை, குதிரைப்பல், சத்திச்சாரம், வெடியுப்பு, இரும்பு, காந்தம், சூடன், பூரம், பொன்னம்பர், கற்சவடு, நிமிளை, பூநீறு, ஆகிய இவைகள் பகைச்சரக்குகள் என்றும்; அப்பிரகம், காரீயம், சிலை, கெந்தி, வீரம், தாளகம், தொட்டி, வெள்ளி, செம்பு, துருசு, சாரம், காரம், துத்தம், தீமுருகல், பவளப்புற்று, அஞ்சனக்கல், ஆகிய இவைகள் நட்புச்சரக்குகள் என்றும் இயம்பப்பட்டிருக்கின்றன.

### இரசத்தின் பிரிவுகள்.

இவ்விரசமானது, பஞ்சபூதக் கூட்டுறவினுல், உற்பத்தியாகின்றமையின், எந்தப் பூதத்தின் தன்மையையும் குணத்தையும் அதிகமாய்ப் பெற்றிருக்கின்றதோ, அதற்கேற்ப இஃது ஐவகையாய்ப் பிரிக்கப்படும்.

1. இரசம் : இச்சொல், பொதுவாய்க் கடையிற் கிடைக்கும் சாதாரண இரசத்தையே குறிப்பதாயிருப்பினும், இது சிறப்பாய்ச் செந்நிறமுடையதும் சுத்தமானதும், குற்றமற்றதுமான இரசத்தையே குறிப்பதாகும். இஃது இக் காலத்தில் இயற்கையில்

கிடைப்பது அருமையாயினும், இதைச் செயற்கையில் செய்யும் முறைகளைச் சித்தமருத்துவ நூல்களில் காணலாம்.

2. இரசேந்திரன் : இது கருமை நிறமுடையதென்றும் கூறப்பட்டிருக்கின்றது. குணத்திலும் தூயதன்மையிலும் செந்நிற இரசத்திற்கு ஒப்பாகும்.

3. சூதம் : இது மஞ்சள் நிறம் பொருந்தியது; தோடமுள்ளது. இதைச் சுத்தி செய்ய வேண்டியதவசியம்.

4 மிசரகம் : இது பல நிறம் பொருந்தியது. இதையும் சுத்தி செய்யவேண்டும்.

5. பாரதம் : இது வெண்ணிறமானது. தற்காலம் கடைகளில் கிடைக்கும் பாதரசம் என்பதிதுவே. இதில் தோடம் நிறைந்திருக்கின்றமையின் சுத்தி செய்ய வேண்டியதவசியம்.

இவ் வகைகளைக் கீழ்க்காணும் அடிகளால் உணரலாம்.

''ஆறியே சூதமஃதைந்துவித மாகும்
அதன்விவர மேதென்னி லறையைக் கேளு
ஊறியே ரசமென்றும் இரசேந்திர மென்றும்
உற்றபா ரதமென்றுஞ் சூத மென்றும்
மீறியே மிசரகமென் றைந்து மாச்சு.''

(போகர் 7,000, 2-ம் காண்டம்.)

சுவை, வீரியம், பிரிவு.

இதற்கு இடப்பட்ட ''இரசம்'' என்னும் பெயரே இஃது அறுசுவையும் உடையதெனத் தெரிவிக்கின்றது. இதற்குள்ள ''இனிமை'' என்னும் பெயர், பொதுவாய் அறுசுவையையும் சிறப்பாய் இனிப்பையும் உடையதிதுவென உணர்த்துகின்றது. இதனாலேயே இனிப்பு உடலை வளர்ப்பது போல இஃது உடலை வளர்க்கும்மென்பதும், பல சுவைகளும் இதில் அடங்கியிருத்தலால் (அச்சுவைகளால் உடலுறுப்புகளுக்கு வன்மை உண்டாவதுபோல்) இது வேறு பொருள்களின் உதவியின்றியே உறுப்புகட்கு வன்மையைத் தரும் என்பதும் விளக்கமாகும். இக்காரணத்தால், இஃது உலகில் தோன்றியுள்ள எல்லாத் தாதுபொருள்களுக்கும் உயிர்ப் பொருள்களுக்கும் மேம்பட்டதாய்க் கொள்ளப்படுகின்றது.

எல்லாப் பொருள்களும் ஐம்பூதத்தினாலாய தென்பது வெளிப்படை. அப்பொருள்கள் யாவற்றிலும் இந்த ரசம் பரமாத்மாவைப் போல வியாபித்திருக்கின்றது. இதனை, ''சரக்கிற் கலந்திடு சீவன்'' என்ற அடியால் அறியலாம்.

இவ்விரசமானது எப்பொருளினின்றாவது நீங்கிவிடின், அப்பொருளைச் சாரமில்லாப் பொருள் அதாவது உருசி அற்ற பொருள் என்கிறோம்.

### வீரியம்.

இது, மற்றச் சரக்குகளைப் போலன்றி, ஒரு தனித்தன்மை உடையது அஃதாவது, வெப்ப சீத வீரியங்களிரண்டையுமுடையது.

### பிரிவு.

எப்பொருளை இதற்குத் துணைமருந்தாக்கிக் கொடுக்கின்றேமோ அப்பொருளின் பிரிவையே இஃது அடையுமென்று நம்பப்படுகின்றது.

### செய்கை.

உடல்தேற்றி உடல் உரமாக்கி, மலம்போக்கி, பித்தநீர் அகற்றி, வீக்க முருக்கி, உமிழ்நீர் பெருக்கி, சிறுநீர் பெருக்கி, மேகநாசனி.

### மகிமை (பிரபாவம்).

தாதுப்பொருள்களைப் பற்றித் தென்மொழி, வடமொழி, அரபிமொழி முதலிய மொழிகளில் கூறப்பட்டுள்ள இந்திய மருத்துவ குண பாடங்களில், தாது, தாவர, உயிர்ப்பொருள்களுள் எவ்வகையிலும் இரசத்திற்கு ஒப்புவமை வாய்க்கப்பெற்ற பொருள் ஒன்றேனும் கூறப்படவில்லை என்பது அறிய ஆச்சரியத்தை உண்டாக்கும்.

இரசத்திற்கு அதோடு சம்பந்தமானதும் அதைப் போன்றதுமான மற்றத் தாதுப்பொருட்கட்கில்லாத ஒரு சிறப்புத் தன்மையை இயற்கைத் தாய் கொடுத்திருக்கின்றாள்.

வேறு சில சரக்குகள், சில நோய்கட்குச் சிறப்பாய் எடுத்துக் கூறப் பட்டிருப்பினும், அவை சில நோய்கட்குக் கொடுக்கக்கூடாதென மறுக்கப்பட்டிருக்கின்றன. சான்றாகச் சீதத்தினால் உண்டாகும் நோய்கட்குப் பயன்படும் மருந்துகள், வெப்பத்தினால் உண்டாகும் நோய்கட்குப் பயன்படா. உள்ளாட்சிக்குச் சிறந்தாய்க் கூறப்படும் சில மருந்துகள், வெளியாட்சிக்குச் சிறந்த தாகா. இதைப் போன்றே ஒன்றிற்கு நன்மை பயப்பது மற்றொன்றிற்குத் தீமை பயப்பதாகும். ஆனால், இரசமோ, அத்தன்மையதன்று. இது சீதத்தால் உண்டாகும் நோய்கட்கன்றி, வெப்பத்தால் உண்டாகும் பிணிகட்கும் உள்ளாட்சிக்கன்றி, வெளியாட்சிக்கும் எல்லாவற்றிற்கும், தலைசிறந்தது.

இரசம், முன்கூறப்பட்டது போன்று, வெப்பம் அல்லது சீத வீரியங்களை மட்டுமுடைய மற்றப்பொருள்களைப் போலன்றி, வெப்ப சீத வீரியங்களிரண்டையும் சம அளவினுடையது. ஆகையால், இஃது எவ்வீரியமுடைய பொருளோடு சேருகின்றதோ, அதன்

$ சரகர், சுருதர் இவர்களின் நூல்கள் இரசத்தைப்பற்றிக் குறிப்பிடவில்லை. நாகார்ச்சுனர் காலத்திற்குப் பிறகு தான் இரசத்தைப்பற்றிய பிற ஆயுள்வேத நூல்களில் எழுதத் தொடங்கினர்.

வீரியத்தையும் செய்கையையும் அடையும் தன்மை வாய்ந்துள்ளது மற்றைய பொருள்கள், தம் வீரியமல்லாத எதிரிடையான வீரியத்தையுடைய பொருள்களோடு சேருங்கால், தன் சுய வீரியம் முற்றையும் இழந்தோ, அல்லது தன் இயற்கை வீரியத்தில் சிறிதும், எதிரிடை வீரியத்தில் சிறிதும் பெற்றோ வரும்.

மேற்கூறிப்போந்தவையால், இரசம் எல்லாவற்றிற்கும் தலை சிறந்தது என்பதும், சக்கிரவர்த்தி போன்றதென்பதும்,

1. தேக நன்னிலையை உண்டாக்கல்.

2. அவ்வாறு உண்டாக்கிய தேகநிலையைக் காத்தல்.

3. அந்தநிலைக்கு அழிவை உண்டாக்குகின்ற வியாதிகளை அழித்தல், ஆகிய முத்தொழில்களையும் உடையதன்றி உடலில் எஞ்ஞான்றும் இளமையை நிலைபெறச் செய்வதால் ஈசனுக்கு ஒப்பானதென்பதும் வெள்ளிடைமலை.

இரசமானது மனித உடலின் நன்னிலைக்கு இன்றியமையாத சிறந்த தன்மையுடையதாதலின், மகா சித்தர்களெல்லாம் இதன் பெருமையைப் பற்றிச் சிறப்பித்துக் கூறுகின்றனர்.

இரசம் அறம், பொருள், இன்பம் மூன்றையும் பயப்பது: சகல மந்திர பூத பைசாங்களால் ஏற்படும் வினைகட்கு எமன் போன்றது.

இஃது, ஆகாய கமனம் முதலிய அட்டமா சித்திகளையும், 1 அணிமா(பரமாணு போலாதல்),2 இலகிமா (இலேசாதல்), 3 கரிமா (அதிக கனமாதல்), 4 மகிமா (பெரிய உருவெடுத்தல்), 5 பிராப்தி (விரும்பியவாறடைதல்) 6 பிரகாமியம் (கூடுவிட்டுக் கூடுபாய்தல்), 7 ஈசத்வம் (மேம்படல்), 8 வசித்வம், (வசமாக்கல்) முதலிய வற்றையும் அளிக்கும். இதன் பெருமை அருந்தவத்தாரால் உணரப்படும்.

இது, பவழம் கனிந்தாலொத்த செம்மேனியராம் சிவபிரானை ஒக்கும்; இது சிவனேயாகும். இதனை நவநிதி என்றும் கூறலாம்.

இது, கடலால் சூழப்பட்ட உலகுமுற்றையுமே வேதிக்கும் தன்மையுடையது எனக் கூறியதால், இதை உண்பவர் காயசித்தி யுடன் பொன்மயமான மேனி பெறுவர். இது கட்டுக்கதையன்று துருவி ஆராய்வார்க்கு உண்மை புலனாகும். இதனை,

"அத்த மாக்கும் அரசும் அளித்திடும்
சுத்த மாக்கும் சுகத்தை மிகத்தரும்
புத்த மந்திர பூதபை சாசபேய்
இத்த னைக்கும் இயம னிதாகுமே.

கவன வேகங் களுக்கிது மூலமாய்ப்
புவன மீதப் பொருளு மளித்திடும்
சிவன றிந்தது செப்பவொண ணாதது
தவமு ளாற்றினர் தங்கட்கு வாய்ப்பதே.

இடிவி லக்கும் எறியனல் மாற்றிடுந்
தடிவி லக்கும் மெய்தனில் வெட்டைக்
கடிவி லக்கும் கடிவிலங் கைத்தெறும்
மிடிவி லக்கும் விரைபுன லாற்றுமே.

வேதை காட்டு மிகுதிறற் சத்துரு
வாதை காட்டும் மகிமையைக் காட்டுமேற்
காதை காட்டும் கவனத்தைக் காட்டுமா
போதை காட்டும் பொருணிலை காட்டுமே.

பவளம தரிதிற் கனிந்து பழுத்தசெம் பழமீ தென்ன
உவமமில் லாமற் றோன்றும் உயர்பொரு ளதனை யாக்கும்
சிவமெனும் பொருளி தென்னச் செய்யுமே தகுநன் மைந்தா
நவம ரி நவமணிப்பொன் நவநிதி யென்ன லாமே.

வேதையாய் உலக மெல்லாம் வேதிக்கப் பரிச வேதி
ஓதைநீர் உலகு வப்ப உண்ணின்மா மேரு வென்னப்
பூதலத் தவர்க்குப் பஞ்ச பூதத்தி னுடல்பொன் னாகும்
காதையீ தல்ல கற்பம் காயஞ்சித் திக்கு மாமே."

(தே. சேகரப்பா.)

என்ற செய்யுட்களால் உணரலாம்.

### தோடங்கள்

இயற்கையிலேயே இரசத்திற்கு இருவகைத் தோடங்கள் உண்டு. அவற்றுள் ஒன்று "தோட" மென்றும், மற்றொன்று "சட்டை" (கவசம்) என்றும் கூறப்படும்.

### எண்வகை இரசதோடம்

1. உண்டீனம், 2. கௌடில்யம், 3. அநவர்த்தம், 4. சங்கரம், 5. சண்டத்தவம், 6 பங்குத்வம், 7. பளுவால் சமலத்வம், 8. சவிஷத்வம் என்பன.

இத்தோடங்கள் நீக்கப்படாத இரசத்தினுல் ஏற்படும் நோய்கள் :

1. உண்டூனம்-சூலே, 2. கௌடில்யம்-கபால நோய், 3. அநவர்த்தம்-பிரமை, 4 சங்கரம்-தாது நட்டம், 5. சண்டத்வம்-சந்தாபம், 6. பங்குத்வம்-தாகம், குட்டம், 7. சமலத்வம்-சுரம், மூர்ச்சை, 8. சவிஷத்வம்-சரீர இளைப்பு என்பன.

இவற்றை,

"உண்டூனங் கௌடில்யம் ஒது மநவர்த்தம்
சண்டத்தவம் பங்கோடு சங்கரம்—விண்ட
பனுவாற் சமலத்வம் பன்னுசவி ஷத்வம்
வினுமெண் ரசதோடம் வேறு.

உண்டூனம் சூலேநோ யுண்டாகுங் கௌடில்யம்
மண்டை நோயாகு மநவர்த்தம்—உண்டாம்
பிரமைசண் டத்வம்சந் தாபம்பங் குத்வம்
வருதாக மாங்குட்ட மாகும்.

ஆகுமே சங்கரத் தந்தாது நட்டமலம்
வேகுமே மூர்ச்சைசுர மேதினியில்—வாகு
சவிஷத்வ மேயுடலம் தானிளைப் புண்டாகும்
இவிஷத்தை யோட்டில் நலம்."

என்னும் செய்யுட்களா லறிக.

### வேறு எண்வகைத் தோடங்கள்.

நாகம், வங்கம், மலம், வன்னி (அக்னி), சாஞ்சல்யம், விடம், கிரி, அசக்யாக்னி.

1. நாகம்-மூல நோய், தாமசம், 2. வங்கம்-குட்டம், 3. மலம்-நிறமாறல், மூர்ச்சை, 4. வன்னி-தாகம், 5. சாஞ்சல்யம்-தாது நட்டம், 6. விடம்-மரணம், 7. கிரி-சொறி, 8. அசக்யாக்னி-மேகம் என்பன.

இவற்றுள், விடம், வன்னி, மலம் என்னும் முத்தோடங்கள் முக்கியமானவை. இத்தோடங்கள் உடைய இரசத்தை அப்படியே கையாண்டால், இவை, முறையே மரணம், தாகம், மூர்ச்சை என்பவைகளையும்; நாகம், வங்கம் என்னும் இத்தோடங்கள் உள்ள இரசத்தைக் கையாண்டால், நோய் மத்தியில் குட்டம் முதலியவைகளையும் உண்டாக்கும்.

### இரசத்தின் ஏழுவகைச் சட்டைகளும் அவற்றின் நோய்களும்.

1. நாகம், 2. வங்கம், 3. மலம், 4. அக்கினி, 5. விடம். 6. கிரி, 7. சபலம்.

1. நாகம்-மூலம், 2. வங்கம்-குட்டம், 3. மலம்-அறிவின்மை, 4. விடம்-மரணம், 5. அக்கினி-தாகமோகம், 6. கிரி-சாட்டியம், 7. சபலம்-வீரிய நாசம் என்பன.

இரச சுத்தா சுத்த குணம்.

சுத்தி செய்யப்பட்ட இரசம், மரணத்தைப் போக்கும் அமிர்தம் போன்றது; சுத்தி செய்யப்படாத இரசம், மரணத்தை உண்டாக்கும் விடம் போன்றது.

இரச சுத்திக் கிரமம்.

இரசத்தை நல்லோரையில் 100, 50, 25, 12, 5, 1 என்னும் கணக்காய் எடுத்துச் சுத்தி செய்யவேண்டும். ஒரு பலத்துக்கு (35 கிராம்) குறைந்து சுத்தி செய்யக்கூடாது.

எண்வகைத்தோடம் போக்கும் உபாயம்.

1. நாகம் : இரச எடைக்குப் பதினாறெடை செங்கல் தூள் மஞ்சள் தூள் இவைகளை ஒன்றன்பின் ஒன்றாகப் போட்டு, எலுமிச்சம் பழச்சாற்றால் ஒருநாள் அரைத்துப் புளித்த தண்ணீரில் கழுவினால் நாக தோடம் நீங்கும்.

2. வங்கம்: விசாலம் (கடம்பு), அழிஞ்சில்வேர் போட்டுப் பழச்சாற்றால் ஒரு நாள் அரைத்துக் காடிநீரால் கழுவ வேண்டும்.

3. மலம் : இலந்தைவேர் சேர்த்துப் பழரசத்தால் ஒரு நாள் அரைத்துக் காடி நீரால் கழுவ வேண்டும்.

4. அக்கினி : சித்திரமூலப்பட்டைச் சேர்த்துப் பழரசத்தால் அரைத்துக் காடியினால் கழுவ வேண்டும்.

5. சாஞ்சலயம் : கருவூமத்தை வேர் சேர்த்துப் பழரசத்தால் அரைத்து காடியினால் கழுவ வேண்டும்.

6. விடம் : திரிபலைச் சூரணம் சேர்த்துப் பழச் சாற்றினால் அரைத்துக் காடியினால் கழுவ வேண்டும்.

7. கிரி : திரிகடுகுச் சூரணஞ் சேர்த்துப் பழச்சாற்றால் அரைத்துக் காடியினால் கழுவ வேண்டும்.

8. அசக்யாக்னி : நெருஞ்சில் சூரணம் சேர்த்துப் பழச் சாற்றால் அரைத்துக் காடியினால் கழுவ வேண்டும்.

இவைகளை எல்லாம் * தப்த கல்வத்தில் செய்ய வேண்டும்.

இவைகள், இரண்டுவிதமான எண்வகைத் தோடங்களையும்,

ஒரு வகையான எழுவகைத் தோடங்களையும், அவற்றால் உண்டாகும் நோய்களையும் கூறுகின்றன.

இவற்றுள் நாகம் முதலிய எண்வகைத் தோடங்கள் கூறும் ஒரு வகைக்கே, அத் தோடங்களை நீக்கும் வழியும் சொல்லப் பட்டிருக்கிறது.

---

* தப்த கல்வ இலக்கணம்

இரும்லாவது கறுத்த நன்னியிலாவது கல்வம் செய்து தனிவீட்டில் பள்ளம் தோண்டி அப்பள்ளத்தில் வெள்ளாட்டு மயிர் உமி இவைகளை இட்டு நெருப்பிட்டுத் தீயுறைக்கும்படி கல்வத்தை அக்குழியின்மேல்வைத்துச் சுத்திசெய்வதேயாம்.

இவைகளல்லாமல் தோட நோய்களும், ஒன்றற்கொன்று மாறுதலாய் இருக்கின்றன. இவை நிற்க, தேரையர் எண்வகைத் தோடங்களும், அவற்றால் உண்டாகும் நோய்களும்; அகத்தியர் எழுவகைத் தோடங்களும், அவற்றால் உண்டாகும் நோய்களும் அவற்றைப் போக்கும் வழிகளும் கூறுகின்றனர். அவற்றுள் முதலாவது:

### தேரையர் கூறும் எண்வகைத் தோடங்களும் நோய்களும்.

1. சர்ப்பம்-கொப்புளம், 2. வங்கம்-குட்டம், 3 கந்தி அக்கினி, 4. வன்னி-எரிச்சல், 5. சாஞ்சலம்-கோதுநிறம், 6. மலம்-விந்து நட்டம், 7. காளம்-இறத்தல், 8. மந்தம்-மூர்ச்சை என்பன.

இதை,

சர்ப்பவங்கங் கந்திவன்னி சாஞ்சலம லங்காளம்
ஒப்பில்மந்த மெண்தோட மோட்டிரதத்—தைப்புசியார்
கொப்புளங்குட் டங்கியெரி கோதுவிந் திளைப்பித்தல்
அப்புளமூர்ச் சைக்குமுரி யார்.

என்னும் செய்யுளாலறிதல் வேண்டும்.

### அகத்தியர் கூறும் ஏழு தோஷங்களும் நோய்களும்.

1. நாகம்-துர்க்கந்தம், 2. வங்கம்-குட்டம், 3. கந்தி-தாகம், 4. வன்னி-தாது நட்டம், 5. சாஞ்சலம்-உயிர் போக்கல், 6. விடமம்-விடப்பிணி, 7. லோகம்-மோகம் என்பன.

இதை,

''தானே ரசத்திற்குச் சத்ததோ டங்களுள்
மானே யதன்பேர் வகுத்துரைப்பேன்—ஈனமாம்
நாகவங்க தோட நவில்கந்தி தோடமோ
டாகுவளி சாஞ்சலதோ டம்.

தோடவிட மம்லோக தோடமதி லேநாக
தோடந் தனக்குண்டு துர்க்கந்தம்—தாமுமந்த
வங்கதோ டத்தில் வருங்குஷ்ட நோய்கந்தி
யங்கதோ டந்தாக மாம்.

ஆம்வன்னி தோடத் தருந்தாது நட்டமாம்
போம்சாஞ் சலமுயிர் போக்கிவிடும்—தாம்விடம்
என்னுந்தோ டத்திற் கிசைந்தபிணி யுண்டாகும்
கன்னிலோகத் தோடமோகம்.''

என்னும் வெண்பாக்களால் அறிதல் வேண்டும்.

இனி, இவ்விருவர் கொள்கைகளில், தேரையர் கூறிய எண் வகைத் தோடக் கூற்றில், முதல் ஐந்து தோடங்களின் பேர் களும் ஒத்திருக்கின்றன. மற்ற மூன்றான மலம், காளம், மந்தம் என்பனவும், அகத்தியர் தோடக் கூற்றில், மற்ற இரண்டான விடமம், லோகம் என்பனவும் வேறுபடுகின்றன. தோடக்குற்றங்களில் வங்கதோடம் ஒன்றற்கு மாத்திரம் இருவர் கொள்கைகளும் ஒத்தும், மற்றவை ஒவ்வாமலும் இருக்கின்றன.

இவையல்லாமல், இன்ன தோடமுள்ள இரசம் இன்ன வடிவாய் இருக்குமெனவும், அக்குற்றம் நீக்கிய பின்னர் அஃது இன்ன வடிவாய் இருக்குமெனவும் கண்டறியும் சோதனை, இவ்விருதிறத்தினர் நூல்களிலேனும் வேறு நூல்களிலேனும் காணப்படவில்லை.

தேரையர் எண்வகைத் தோடங்கள் சொன்னவாறே, அவற்றை நீக்கும் வழியும் சொல்லியிருத்தல் வேண்டும். அவ்வழிகள் கிடைக்காமையால் அவர் அவற்றைச் சொல்லவில்லை போலும் என நினைக்க இடந்தருகின்றது.

எழுவகைத் தோடங்கள் சொன்ன அகத்தியர் மாத்திரம், அவற்றை நீக்கும் வழியையும் சொல்லியிருக்கிறதாகத் தெரிகிறது.

இவையே அல்லாமல், தேரையர் கரிசல் 300 என்னும் பின் வந்த நூல், எழுவகைத் தோடங்கள் உளவெனத் தொகை கூறி, அவற்றைத் தீர்க்கும் வழியையும் சொல்லுகின்றது :

''செங்க லுப்பொடு சாரி பண்ணை நேர்
சீன மாவெடி காரநீர்
செறியு மாவரி குமரி நீரது
செலுத்தி யோர்சேர் சாற்றினில்

அங்க ரைப்பது மேழு நாளதில்
சட்டை யேழறுஞ் சுத்தியாம்.''

இவையல்லாமல், வேறுபல நூல்களும் பலவகையான இரச சுத்திகளைச் சொல்லுகின்றன.

ஆனல், ''போகர்'' தாம் செய்தருளிய 7,000-த்தில், இரசத்தின் தோடம் ஏழோ எட்டோ இருப்பினும், அவற்றை நீக்கின பின்னரே பதினெட்டுச் சுத்தி செய்ய வேண்டும் என்று சொல்லுகிறார்.

'' எடுப்போர்க்குச் சூதமென்ற ரசத்தைக் கேளாய்
எழிலான பொற்கென்ற நிறமாய்க் காணும்
தொடுப்போர்கட் கேழுவித தோட நீக்கிச்
சுத்திசெய்து பதினெட்டுப் பின்பு தானும்.''

எனப் புகன்றிருப்பதால் இதனை அறிதல் வேண்டும்

திருமூலர், இரசத்தின் சட்டையை நீக்கும் முறையைக் கீழ்க் காணுமாறு கூறியுள்ளார்:

" ஏதுவாய் நின்ற எழிலான சூதத்தில்
கோதுவாய் நின்ற குடிலமய லேழுமே
கேதுவாய்ப் போகாட்டால் கெவனமெ டுக்காது
வாதுவாம் வாதத்துக் காகாதா காதே."

" ஆகாத கன்மச மகற்ற முறைகேளு
வாகான கல்லுப்பு மாட்டு சமபாகந்
தாகான குமரிப்பூ சாறெரு மூன்றுநாள்
பாகாய்க் கழுவிப் பதனமாய் வாங்கிடே."

(திருமூலர் 600, செய்யு 524,25.)

பாதசரத்தின் பொதுக்குணம்.

" விழிநோய் கிரந்திகுன்மம் மெய்ச்சூலை புண்குட்
டழிகாலில் விந்துவினல் அத்தை—வழியாய்
புரியுவிதி யாதும் புரியினே யெல்லாம்
இரியுவிதி யாது மிலை."

(பொ-ள்) சிவவீரிய மென்கிற இரசத்தை, முறைப்படி மருந்தாக்கிக் கொடுக்க, அது கண்நோய், கிரந்தி, எண்வகைக் குன்மம், சூலை, பெரும் புண், தொழுநோய், வளிக்குறைவு முதலிய நோய்களை நீக்கும் என்ப.

இரசத்திற்கு நற்குணம் தீக்குணம் என இருவகைக் குணங்களுண்டு.

நற்குணம்.

1. குருதியைச் சுத்தி செய்து துர்நீரை நீக்கல்.

2. குருதியையும் சுக்கிலத்தையும் பெருக்கல்.

3. பசியைத் தூண்டல்.

4. கிருமிகளைக் கொன்று புண் புரைகளை ஆற்றல்.

5. உடல் முழுவதையோ அல்லது உள்ளும் புறமுமான உறுப்பின் பகுதியையோ, உறுப்பின் முழுவதையோ பற்றிய வியாதிகளைக் குணமாக்கல்

6. மூலவசிகரத்தை உண்டு பண்ணல்.

7. மறதியை ஒழித்து மூளைக்குக் கவன சக்தியைத் தால்.

8. நரம்புக் கூட்டங்களை வன்மையுறச் செய்தல்.

9. மனத்தை ஒரு நிலையில் நிறுத்தி ஞானத்தை விருத்தி செய்தல்.

10. மூப்பை ஒழித்து ஆயுளை வளர்த்தல்.

தீக்குணம் : இரசத்தைச் சரியான முறையில் முடித்து உண்ணுததால் வருங் குற்றங்கள் அநேகம். அவைகளைக் கீழ்க்காணுமாறு தேரர் கூறுகின்ருர்:

**இரசம் பகைத்தால் செய்யும் குணம்.**

'' வேகமுந் திமிருஞ் சோம்பும் வெகுண்டதோர் தாக முற்றும்
ஆகமுந் தளர்ந்துப் பின்னும் அகோரமாய் உதிரஞ் சாய்க்கும்
போகமும் புணர்ச்சி தானும் பொரிஞ்சுடன் தீய்ந்து போகும்
யேகமாயிரத தோடம் இவ்வண்ணஞ் செய்யுந் தானே.

பத்தின யிரத தோடம் பாண்டுவாம் மேனி யெல்லாம்
சத்தியே ளுேக்கும் பித்தஞ் சத்தமுங் கெடுதியாகும்
பித்தமு மதிக மாகிப் பிரலாப மாகப் பேசும்
பத்திய யிரத தோடக் குணமெனப் பகரலாமே.

கலையைக் கிழிக்கும் அவிழ்த்தெறியங் கல்லைத் தேடி யெடுத்தெறியும்
மலையிற் குதிக்கும் புனல்மூழ்கும் மருள்சேர் பித்தந் தனைக் கொடுக்கும்
உலையின் அனல்போல் உடல்வெதுப்பும் ஓயா உழலை வியர்வாக்கும்
பலகா லமுமே வாய்பிதற்றும் பாத ரசதோ டமுமிஃதே.

மேகம் பறக்கும் அறிவழிக்கும் மேனி யெங்கும் வெளுத்துவரும்
ஆகந் தளர்ந்து வயிறிழியும் அரக்கு போலே உதிரம்விழும்
தாக மெடுக்கும் உப்பிசமாம் சரீர மெங்கும் வேர்த்துவிடும்
பாக மிழக்கும் வாய்குழறும் பாத ரசத்தின் குணமிதுவே.

வாலை யிரதங் கோபித்தால் மருள தாகவே தான்பிதற்றுங்
காலை கைகள் நோவெடுத்துக் காது செவிடா யடைப்பாகும்
பாலை யனைய வாய் குழறிப் பாண்டு ருவமாய் மெய்வெளுக்கும்
வேலை யனைய கண்ணீரும் விகார வெறிக ளாய்விடுமே.

தேக்கிய யிரத தோடம் சிரங்குபுண் சூலை காட்டும்
தாக்கிய யீரல் வற்றித் தாகமுஞ் சுரமு முண்டாம்
வாக்குள கரமுங் காலும் மண்டியே யெரியும் பற்றி
யேக்கமும் விசாரந் தானுஞ் செய்யுமிவ் வண்ணஞ் சூனே.

படுக்கையுந் திமிருஞ் சோம்பும் பாதபங் கயமி ழக்கும்
அடுக்கிய பழுவைப் பற்றி யனலெழப் பித்தஞ் சோரும்
திடுக்கெனத் தலைநோ யுண்டாந் தீயெனச் சுரமு முண்ட
டாம்
நடுக்கலும் விக்க லுண்டாம் ரசகுண நாடி தானே.

சத்தியே நோக்கும் பித்தஞ் சங்கிர கிரணி யாகும்
நித்தலுங் கழிச்ச லுண்டாம் நெருப்பெழச் சுரமு
மெய்தும்
சத்தமு மடத்துச் சோதி தன்னையு மறைத்துப் போடும்
சுத்திய ரசத்தின் தோடம் தொலைவிலா வியாதி யாமே.''

மற்றும், இது மரணத்தையும் உண்டுபண்ணும். இதனைச் சரியான முறையில் முடிக்காமல் உபயோகிப்பதால் ஏற்படுங் கேடுகளைப் பார்த்தும் கேட்டுமுள்ள பண்டிதர்களும் பாமரர் களும் இதை வெறுப்பார்கள்.

மனிதன் செய்யும் பஞ்சமா பாதகங்களைவிட, இரசத்தைச் சரியான முறையில் சுத்தி செய்து, பற்ப செந்தூரங்களாய் முடிக் காது கொடுப்பது மகா பாதகமாகும். அவ்வாறு உபயோகிக் கும் மருத்துவன் மனிதவர்க்கத்தினுள் சேர்க்கத் தக்கவனல்லன்; அவனே கொடிய இயமன் ஆவான்.

சுத்தி செய்யாத இரசத்தை உபயோகிப்பதால். உடல் முற் றும் வெந்து போவதன்றிப் பற்களெல்லாம் கழன்று போய் விடும்.

இரசத்தை உபயோகப்படுத்துவதால் ஏற்படும் நன்மை தீமைக் குணங்கள், அதனுடைய சுத்திமுறையையே பொறுத்துள்ளன.

எத்தோடத்தாலேற்பட்ட எந்த வியாதிக்கு இரசத்தைக் கொடுக்கவேண்டுமோ அவ்வியாதிக்கு, சிறந்ததாகிய சுத்தி முறையையும், பற்ப செந்தூரங்கள் முதலியன செய்யும் முறை களையும் சிறிதளவும் தவறாமல் செய்து அதைக் கொடுப்பின், அவ்வியாதி குணமடைவது திண்ணம். மேலும் அவரவர் தேகபலத்திற்கேற்ப அனுபானத்தையும் உணவையும் புகட்ட வேண்டும்.

### இரச நஞ்சு முறிவு.

குண்டியைப் பிடித்தக்கால், சாயப்பட்டையைப் பொடித்து வெல்லத்துடனே கலந்து கொடுக்கவும்.

பல்லுக்கிட்டினால், கோவைத் தண்டுச் சாற்றை நாக்கில் பிழியத் தீரும்.

நெஞ்சுவற்றி, உள்வெதும்பி, மேல் எரிவு எடுத்து, கை கால் மண்டி யெரிந்து நினைவில்லாமற் கிடந்தால், அறுகங்கிழங்கை ஆய்ந்து எடுத்து அரைத்து, வெள்ளாட்டுப்பால், பசுவின் பால பருத்திக்கொட்டைப் பால், மோர் இவைகள் ஏதாவதொன்றில் கரைத்து வடிகட்டிக் கொடுக்கவும்.

"இந்த இரத தோடத்துக் கவிழ்தம் குண்டி யைப்பிடித்தா
லிசையுஞ் சாயப் பட்டைபொடி யினிய வெல்லத் துடன்
கொள்ளத்
தந்தங் கிட்டி ஞற்கோவைத் தண்டுச் சாறு நாக்கிலிடத்
தானே தீரும் நெஞ்சுவற்றித் தளர வுள்ளே வெதும்பிடினும்
பந்து வுடம்புங் கைகாலும் பற்றி மிகவே யெரிந்திடினும்
பகரு முணர்வும் நினைவற்றும் பதறிக் கிடந்தால் மூதண்ட
கந்தந் தனையே யாய்ந்தரைத்துக் கனவான் பால்வெள்
ளாட்டுப்பால்
கனத்து பருத்திக் கொட்டைப்பால் கண்டா லரைத்துக்
கொள்வீரே.'

என்ற செய்யுளால் இதனை அறிக.

### இரசத்திற்கும் மற்ற உலோகங்கட்குமுள்ள சம்பந்தம்.

1. குற்றமற்ற செந்நிற இரசமும் கந்தியும் சம அளவில் சேர, தங்க முண்டாம்.

2. குற்றமுள்ள இரசமும் கந்தியும் சம அளவில் சேர, தாம்பிர முண்டாம்.

3. குற்றமுள்ள இரசம் சிறு அளவிலும் குற்றமுள்ள கந்தி பெருமளவிலும் சேர அயமுண்டாம்.

4. குற்றமுள்ள இரசம் பெரிதும், குற்றமுள்ள கந்தி சிறிதும் சேர, வெள்ளீயமுண்டாம்.

5. குற்றமுள்ள இரசம் அதிகமாகவும், அதைவிட குற்றம் அதிகமுள்ள கந்தி குறைவாகவும் சேர, காரீயம் உண்டாகும்.

6. குற்றமுள்ள இரசமும் அதைவிட அதிக குற்றமுள்ள கந்தியும் சேர, நாகமுண்டாகும்.

7. சுத்தமான இரசமும் தாளகமும் சம அளவில் சேர, வெள்ளி உண்டாம்.

### இரச சுத்தி.

ஒரு பலம் (35 கிராம்) இரசத்திற்குத் தும்பைச்ச மூலச் சாறு $4\frac{3}{4}$ பலம் (166.25 கிராம்) விட்டு, சூரியபுடம் வைக்கவும் இவ்வாறே 10 நாட்களுக்கு நாள் தோறும் புதிய சாறு விட்டு வெய்யிலில் வைக்கவும். பிறகு, சாறு விடாமல் முற்றிலும் சுவறும்படி வெய்யிலில் வைத்தெடுக்கவும்.

இம்முறையை, மேலும் ஒரு முறை செய்யவும்; இவ்விரசத்தையும், இரசத்துடன் உள்ள தூளையும் ஒரு மட்பாண்டத்திலிட்டு, இரண்டுபடி (80 பலம்) (2,800 கிராம்) தும்பைச்சாறு விட்டுக் கவசம் செய்து, பூமியில் 20 நாள் புதைத்தெடுக்கவும்; பிறகு நீர்விட்டுக் கழுவி எடுக்கவும். இவ்வாறு சுத்தி செய்த இரசம் பற்பம், செந்தூரம், குரு, குளிகை முதலியவற்றிற்காகும்.

(வேறு)

வேண்டிய அளவு இரசத்தைத் தூய கெட்டித் துணியிலிட்டு ஆயிரம் முறை பிழிந்தெடுக்கவும்.

இதை ஒரு மட்சட்டியிலிட்டு அதன்மீது ஓர் அங்குலமிருக்கும்படி சுத்தநீர் விட்டுச் சிறு தீயில் எரிக்கவும்; நீர் குறையாமல் அந்த அளவைக் காத்துக் கொள்ளவும். நீர் கருநிறமடைந்தவுடன் எடுத்து நீரை நீக்கிக் காடிநீரில் நான்கு அல்லது ஐந்துமுறை கழுவி எடுக்கப் பூரண சுத்தியாம்.

(வேறு)

ஐந்துபலம் (175 கிராம்) இரசத்திற்கு, சித்திரமூல வேர்ப்பட்டைத்தூள் ஒரு பலம் (35 கிராம்) திரிகடுகுப்பொடி ஒரு பலம் (35 கிராம்) காயம் ஒரு பலம் (35 கிராம்) இந்துப்புத்தூள் ஒரு பலம்(35 கிராம்) இத் தூள்களைச் சிறிது சிறிதாய்ச் சேர்த்துக் கல்வத்திலிட்டு, 36 மணிநேரம் அரைத்திடுக; பின்பு ஒரு குழல் கொண்டு தூள்களை ஊதி நீக்குக.

இவ்விதம் ஏழு முறை செய்ய இரசம் உயர்தர சுத்தியை அடையும்.

(வேறு)

ஒரு பலம் (35 கிராம்) இரசத்தை, செங்கல் மாத்தூளிலும் மஞ்சட் பொடியிலும் ஒவ்வொரு மணி நேரம் ஆட்டி, சுத்த நீரிலலம்பி, 1 படி (1.3 லிட்) மேனிச் சாற்றிலிட்டு அடுப்பேற்றி சாறு சுண்டும்படி எரித்து எடுக்கில் சுத்தியாம்.

(வேறு)

விதை நீக்கின் மிளகாயில் இரசத்தை விட்டு, கோவையிலையை அரைத்து நான்கு விரற்கிடை கனம் கவசித்து, சீலை மண் ஏழு செய்து குக்கிட புட மிட்டெடுக்கில் சுத்தியாம்.

இரச சுத்தி 18.

" ஆச்சிது ரசத்தின் சுத்தி யறைகிறே னடைவாய்க்
 - கேளாய்
போய்ச்சுற்று புகையூ றற்றான் மஞ்சளுஞ் செங்கற்
 றூளும்

பாய்ச்சுவாய் பொடியி ருப்பு பண்ணிடு வரைசெய் பின்னர்த்
தேய்ச்சிடு மேனிச் சாறும் தேன்பிரண் டையுமா மத்தி.

மத்தித்துப் பின்பு கேளாய் மருவிய விஞ்சிச் சாறு
கொத்தினு வாரைப் பட்டைக் குறுகிய குடிநீர் தன்னில்
சித்திர மூலச் சாற்றைச் சேர்த்தரை திரிப லாதி
வற்றிய குடிநீர் தன்னில் மத்தித்தல் வளமை கேளே.

கேளினி யமுரி யோடு கிளர்ந்திடு மத்தி யித்தி
நாளினில் நாவற்பட்டை நன்ருகக் குடிநீர் செய்து
வாளினில் வெவ்வே ருக மத்திக்கப் புனித மாகும்
ஆளினி யிரத சூது மற்றுவெவ் வேற தாமே.

ஆமினி வகைவ கைக்கோ ரளவதாய்க் கொண்ட ரைத்துத்
தாமினி யொவ்வொன்ருகச் சலத்தினிற் கழுவிப் போடின்
ஓமினி வாலே சூத வூறுநீங் கிந்தச் சுத்தி.''
(அகத்தியர் கன்மசூத்திரம் 150.)

செங்க லுப்பொடு சாரி பண்ணைநேர் சீன மாவெடி காரநீ
செறியு மாவரி குமரி நீரது செலுத்தி யோர்சேர் சாற்றினில்
அங்க ரைப்பது பேழு நாளதில் சட்டை யேழறும் சுத்தியாம்.
(தேரன் கரிசல் 300)

ஏழு சுத்தி.

(வேறு)

கொன்றை யழிஞ்சில் கொடிவேலிக் கோலப் பட்டையில் மத்திக்க
இன்றே யொட்டடை யதனோடே யிட்டே நாழிகை மத்திக்கத்
தென்றற் சந்தம் பழுபாகற் றெண்ணீ ரிட்டே மத்திக்க
நன்றே கற்ரு ழஞ்சாற்றில் நாள்மத் திக்க நலமாமே.

ஒன்பது சுத்தி.

முருங்கை யிலேச்சா றதுவாகும் முதிர்ந்த வழிஞ்சிற் பட்டையுமாம்
முருக்கூ மத்தை யிலேச்சாறு முதிர்கொடி வேலிச் சாற்றிலுமாம்
அருங்காச் சாரணை யிஞ்சியுட னை கையான் சாற்றிலுமாம்
இருங்கா வெற்றிலேச் சாற்றிலுமா மென்ரு ரகத்திய மாமுனியே.

## பதினான்கு சுத்தி.

"-இரதந் தனக்குச் சட்டை யேழெட்
டறைந்தார் முன்னோ ரவற்றின் தனித்தனி
தூய்மை சொல்லிச் சுகித்தனர் நிற்க
வாய்மை யதற்கு வன்மை யேற்றும்
தூய்மை விதிசில தொகுத்துச் சொல்வன்
ஆய்வுற் றவற்றை யறிந்து செய்யின்
நோய்பல பிளந்தெறி நுண்கோ டரியாம்
ஆகச் சூத மதுகுழிக் கல்லில்
பாகம் வேண்டும் பருவள விட்டங்
கவ்வள வேயெடை யரித்துகள் புகையூ
றவ்வள வேவெற் றிலைச்சா றுக்கி
அட்பாற் றுழை நீர்கத்தடுநீர்
செப்பரத் தம்பூ சிதைசா றேடல்
வெற்றிலைச் சாறு மிளிர்பா கற்கிழங்
கத்நகு சாறு மைங்கோ லத்தாம்
சத்தம் மான்பச் சரிசிச் சாறும்
தத்நுசா ரணைய ரசம்பட் டைச்சா
றுற்ற கொன்றை யுடற் றேற் சாறும்
கொத்தான சாறுங் கூட்டித் தனித்தனி
மூன்று கடிகை முறையா யரைத்திட்
டப்போ தப்போ ததனைக் கழுவி
னிப்பாற் சூத மிரவி புரையும்
பன்னான் கென்னும் பகர்பொருட் டூய்மை
நன்று யுரைத்து நாட்டி னேமே
குன்று மருத்துவர் குறியறிந்திடவே."

(மா-வ)

அல் வெற்றிலை = கம்மாறு வெற்றிலை.

ஐங்கோலத்து ஆம் = அழிஞ்சில் சாறு.

சுத்தி செய்யப்பட்ட இரசத்தைக் கொண்டு பற்பம், செந்தூரம், சுண்ணம், பதங்கம், மாத்திரை, மெழுகு, கட்டு, களங்கு, எருவை, கரிம்பு, புகை, பூச்சு, தைலம் போன்ற பல மருந்துகள் செய்யப்படுகின்றன. வைத்தியத்திற்கும் வாதத்திற்கும் ரசக் குருவும் சித்தர் தன்மை அடைய இரசக்குளிகையும் செய்யப்பட்டதாய் அறிகிறோம்.

## இரச பற்பம் செய்யும் முறை.

"இயக்குரோ தச்சிறையை யேய்புல்க ருமத்தை
யியக்குரோ தச்சிறையை யீந்தை— யியக்குரோ
நத்தை யரத்தை தசபஞ்ச மிகுருகு
நத்தை யரத்தையிர தம்."

(ப-ரை) இயக்குரோதச் சிறையை ஏய்புல்— அசுணப்புள் வால்மயிர் போன்ற கவுரிவால் புல்லின் சாறு; கருமத்தை— கருத்த ஊமத்தைச் சாறு; இயக்கு ரோதத் சிறை— ஆல மொக்குச் சாறு; ஐ— கம்மாறு வெற்றிலைச் சாறு; ஈந்தை— ஈச்சஞ்சாறு; (இவைகளின் உதவியால் செய்யப்பட்ட பற்பம்) இயக்குரோதத்தை—வாத முதலிய பிணிகளிலே வந்து கூடிய மேக உட்டணத்தால் ஏற்படும் துன்பத்தை நீக்கவும், அரத்தை —கிரந்தி சேட்டையை நீக்கவும், தசபஞ்சமி குருகு—ஐம்பது நாள் பற்பத்தைப் பழக வைத்து வழங்க நோய் நீங்கும்; நத்தை யரத்தை யிரதம்—மேக வெப்பதுடன் கூடிய கிரந்திக் கூட்டங் களை இரசம் நீக்கும் என்ப.

ஒரு பலம் (35 கிராம்) சுத்தி செய்த இரசத்திற்கு மேற்கண்ட சாறுகளைக் கொண்டு, முறையே பட்டியலில் கண்டபடி அரைத்து வில்லை தட்டி உலர்த்தி கவசம் கட்டிப் புடமிட்டெடுக்கில் பற்ப மாம்.

| சாற்றின் பெயர். | அளவு பலம். | அரைப்பு நாள். | வில்லை உலர்த்தும் நாள். | கவசம் உலர்த்தும் நாள். | புடம் வரட்டி. |
|---|---|---|---|---|---|
| கவுரிவால் புல்சாறு | 3 | 5 | 5 | 1 | .. |
| கருஊமத்தைச்சாறு | 3 | 5 | 5 | 1 | .. |
| ஆலங்கொழுந்மிச்சாறு | 3 | 5 | 5 | 1 | ... |
| கம்மாறு வெற்றிலைச்சாறு | 3 | 5 | 5 | 1 | 40 |
| பேரீச்சஞ்சாறு | 3 | 5 | 5 | 1 | 35 |

## இரச பற்பத்திற்கு அளவும் மகிமையும்

"சூதத் தருவெண்மை தொன்மங் களமீபொற்
சூதத் தருவெண்மை தோரையொன்றே— சூதக்
குருகுளிகை யூராறு கொண்டறிவார் கண்ட
குருகுளிகை யீராறு கொள்."

(ப-ரை) சூதத்தரு வெண்மை—மாமரத்தின் கண்ணுள்ள விமலம் என்னும் மாவிலையானது தொல் மங்களம் ஈபோல்— பழைய மங்களக் குறியைக் கொடுப்பதுபோன்று, சூதத்து அரு வெண்மை— இரத்தத்தின் அருமையான பற்பம், தோரை யொன்றே— * ஒரு துவரையின் அளவே, சூதக் குரு—இச்சூத பற்பமாகிற குருவைக் கொண்டும், குளிகை—குளிகையாக்கிக் கொண்டும், ஈர் ஆறு கொண்டு அறிவார்— வைத்தியம் வாதம் என்னும் இரண்டு மார்க்கத்திற்கும் கருவியாய்க் கொண்டு அதன் பயனை உணர்வார்கள் பண்டிதர்கள்; கண்ட குருகு குளிகை ஈர் ஆறுகொள்— புழுவைப்பார்த்த குளவியானது அதனிடத்துள்ள குற்றஞ்களை யறுப்பது போல (இப்பற்பமும் உடலிலுள்ள பிணி களை ஒழிக்கும் என்று) நீ அறிந்து கொள்வாயாக. இதனை,

* துவரையை பன்னிரண்டு கூறாக்கி உத்தமத்தில் மூன்றும் மத்திமத்தில் மூன் றும் அதமத்தில் மூன்றும் அதமாதமத்தில் மூன்று கூறுமாக கொள்ளல் வேண்டும்.

"சூதத் துருமத் துறையா னவையிற்
சூதத் தருமைத் தொகுமா மவைபோற்
பேதந் திருமா பெருமைக் கொருமை
பெருவா கடரா லொருவா றறிவார்

வேதைக் கிஃதே பிணிகட் கிஃதே
வெகுவா கடரா லெறிவா ரறிவார்
மாதைப் பிரியா ரருண் முன் னியமா
வரிசைக் கிரமத் தடியார் மறையே."

என்னும் செய்யுளால் அறியலாம்.

இரச பற்பத்தினுல் தீரும் நோய்களும் துணை மருந்துகளும்.

"கரும்புறவு வெள்ளைசெம்மை கங்கைநிற மூன்று
கரும்புறவு வெள்ளைசெம்மை கங்கை—கரும்புறவு
மாதமுத வாரிமிச்சில் வன்னியைபால் மோரளைநெய்
மாதமுத வாரியனு வாய்."

(ப-ரை) கரும்புறவு—கறுப்புப் புருவைப் போன்றும், வெள்ளை—வெள்ளைப் புருவைப் போன்றும், செம்மை—சிவந்த நிறப் புருவைப் போன்றும், கம்—தலையிலும், கை—கைகளிலும் நிறம்—மார்பிலும், ஊன் —மற்றறிடங்களிலும், து— சந்து கீல்களிலும் (தேமல்களிருந்தாலவை கட்கு), கரும்புறவு—தேனும், வெள்ளை— கள்ளும், செம்மை— பழரசச் சாராயமும், கங்கை— குளிர்ந்த நீரும், கரும்பு— கருப்பஞ்சாறும், உறவு—சர்க்கரையும், மாதமுது— முலைப்பாலும், அவாரி— மூத்திரமென்கிற சிறுநீரும், மிச்சில்— எச்சில் என்கிற உமிழ்நீரும், வன்னி—வெந்நீரும், ஐ— வெண்ணெயும், பால்— பசுவின் பாலும், மோர் — பசுவின் மோரும், அளை— தயிரும், நெய்— நெய்யும், மாதம் உதவு ஆரியன் ஆவாய்— மேற்படி பற்பத்தை ஒரு மாதம் வரைக்கும் கொடுத்தால், நீ அந்நோய்களைத் தீர்க்கத்தக்க பண்டிதனுவாய்.

புற நடை.

"கருமத்தங் காய்வித்தை கண்டநெய் மேகம்
கருமத்தங் காய்வித்தக் கண்ப— கருமத்தம்
பூசினி ரதத்தவளம் புல்லளைமோ ராம்பிரமை
பூசினி ரதத்தவளம் பொய்."

(ப-ரை) கருமத்தங்காய்— கருப்பு ஊமத்தங்காய், வித்தைக் கண்ட நெய்— விதையிலிருந்து இறக்கிய குழித்தயிலத்தில், மேகம்— மேகப் புண்கள், கருமத்து— செயற்கையாலுண்டான, அம்காய்வு— சில நீரொழுகுங் காயங்கள், இத்தைக்கண்— இவைகளை ஆராய்தறிந்து, பகரும்— மேற் சொல்லிய இரதத் தவளம் —இரத பற்பத்தை, அத்தம் பூசின்— முற்கூறிய தைலத்துடன் கலந்து உள்ளுக்கும் கொடுத்து மேலுக்கும் பூசிவந்தால் குணமாம்.

இதற்குப் பத்தியம்; புல்—சர்க்கரை, அளை—தயிர், மோர்—மோர், ஆம்பிரம்—புலி, ஐ—வெண்ணெய், பூசு—அலங்கரித்துக் கொள்ளும், இன்—இனிமையான, இரதத்தவள்—சுரதமுடையவளது, அம்—அழகு இவைகளை விரும்புதல், பொய்—ஆகாது.

## கருப்பூமத்தங்காய் விதைக்குழித் தைலம்.

கருப்பூமத்தங்காய் விதை 1 வீசை (1,400 கிராம்) பூவரசின் விதை, பிரண்டை விதை, காரை விதை, அழிஞ்சில் விதை, நில ஆவாரை, விதை, முள்ளிக்காய் விதை, பெரும் பூசினிக்காய் விதை, வில்வ விதை, எட்டி விதை, பொன்னுவாரை விதை, புன்னைக்கொட்டை, பேரீச்சங்காய் விதை, பேய்ப் பீர்க்கு விதை, பனங்கொட்டை, பேய்ப்புடல் விதை, துளசி விதை, முசுமுசுக்கை விதை, மிளகாய் விதை, விசிறி விதை—இவைகள் எல்லாம் சேர்ந்து 1 வீசை இருக்க வேண்டும்.

வெள்ளைக் குங்கிலியம்—10 பலம் (350 கிராம்).

மெழுகு—5 பலம் (175 கிராம்).

கொப்பரைத் தேங்காய்—5 பலம் (175 கிராம்).

இவைகளை ஒன்று சேர்த்துக் கடத்திலிட்டுக் குழித்தைலம் (முடுகு தைலம்) இறக்கி, 20 நாள் ஆறவைத்து எடுத்துக் கொள்ளவும்.

**மேகப் புண் :** இஃது இரு வகைப்படும்.

1. கருப்பத்தைப் பற்றினது; தாய்தந்தையர் சுரோணித, சுக்கிலமென்னும் இருவகைச் சம்பந்தத்தினுல் கருப்பத்திலே ஊறி வந்தது.

2. பெண்போக மிகுதியால் வந்தது.

1. **கருப்பத்தைப் பற்றிய மேகவிரணம் :** கால், கை, மார்பு, முகம், வாய் ஆகிய இடங்களில் சூட்டைக் காட்டி, சுரங் காய்வது போலக் காய்ந்து, அன்னத்தை வெறுக்கச் செய்து, பசி, தாகம் முதலியவற்றை உண்டாக்கி, சூட்டுடன் சிவந்த பருவைப்போலவும், கோடைக் கொப்புளத்தைப் போலவும், புன்னைக்காயைப் போலவும், சங்கம் பழத்தைப் போலவும் இரணம் காணுமென்பதாம்.

வாதமிகுந்த உடலானுல், பாதத்தின் பின்கால், குதிகாலடி, பக்கவிலா, முழங்கால், கணுக்கால், மேற்புறம், புறவடிப்பள்ளம் முதலியவைகளில் இரணம் ஏற்படும்.

பித்த மிகுந்திருந்தால், மார்பின் பள்ளத்திலும், முலைக்கண்ணிலும், புறமார்பிலும் புறப்படும்.

கபம் மிகுந்திருந்தால். முகம், அக்குள், தோள்களின் மேற் பக்கம், பல்லடி, வாய் இவ்விடங்களில் புறப்படும்.

2. பெண்போக மிகுதியால் வந்த புண் : வாத உடம்பில் துடையடியின் மடிப்பு, விதை, வாய் இவ்விடங்களில் புறப்படும்.

பித்த உடலானால், முகம், கால், தனம், விலாப்பக்கம் இவ் விடங்களில் புறப்படும்.

கப உடலானால், மூக்குத்தண்டின் விளிம்புகள், காது, கன்னம், இவ்விடங்களில் புறப்படும்.

இப்படிப் புறப்படுவதற்குமுன் உடலில் வலி, சுரம் உண்டாகும். நான்கு நாள் கழித்து, கருமை செம்மை அல்லது வெண்மை நிறம் மேனி முழுதும் கண்டு, கொப்புளம் பழுத்து உடையும், காய்ச்சல் காணாமல் உடையாமல் மறைந்து விடுவதும் உண்டு. மருந்தைத் தக்க அனுபானத்தில் கொடுத்துப் பூச்சு மருந்தும் இட்டால், பழுத்துடைந்து ஆறிப் போகும். தானாகவே உடைந்து புண்ணாகும் பொழுது, சுரம் இல்லையெனில் சாத்தியம் என்றும், சுரம் இருந்தால் அசாத்தியம் என்றும் கொள்ள வேண்டும்.

இம் மேகப் புண்ணைப் பற்றிக் கொங்கணவர் 3,000த்தில்,

''பாரப்பா விரணவகை மேகத் தாலே
படுமியற்கை யிரண்டுவகைப் பழமையாகச்
சேரப்பா தாய்தந்தை சங்கத் தாலே
தெரிவையரைப் பார்த் தணுகச் சேர்த தாலே
நேரப்பா விவையாவும் மேலுண் டாகி
நிரை நிரையாய் வருமிதைநீ நேம மாகத்
தேரப்பா விவையறிந்த பேர்கட் காமே
சித்தியெல்லாம் ஒருக்காலே தெளிந்திட் டாயே.''

என்றும், மாபுராணத்தில்,

''அன்னைபிதா வெனுமிருவர் சுக்கிலசுரோணி
தக்கருப்பத் தணுகிப் பின்னர்
வன்னியென வொருக்காலே வளர்மேகப்
பருவரலால் வளர்ந்த புண்ணி

லுன்னிலிரு வகையியற்கை யென்பதுன்மே
லொன்றுரைத்தா மொன்று மாறாகக்
கன்னியரைக் கூடுதலா லணுகுமது
புண்ணாகக் காணு மாலோ.''

என்றும் கூறியிருப்பதினால் உணரலாம்.

செயற்கைப் புண்ணில் ஊறினல் வந்த புண் இருவகைப்படும். வாள், கதை, பாணு இவைகளினல் வருவதற்குச் செயற்கைக் கருவியூறு என்றும், முள், கல், பல்கடி, நகத்தின் கிள்ளு, மாட்டின் பாய்ச்சல் இவைகளினல் வருவதற்கு இயற்கைக் கருவியூறு என்றும், சுரமில்லாதிருந்தால் சாத்தியமென்றும், சுரமிருந்தால் அசாத்தியமென்றும் சொல்லப்படும். இது,

"மாருன வகைக்காய் மெடுத்த தேக
மானிடரி லிரண்டுவகைப் பதிப்ப தான
ஊருன விதமறிவா ரவர்காண் முன்ன
ருத்தமபண் டிதத்தலைவ ருரைத்தா ரிங்கு
வீருன கதைவாள்பத் திரத்தி ஞலு
மேயநகம் பல்கல்பாய் தல்வீட்டாலுங்
கூருன யிவையிவையே பகுத்துப் பார்க்கக்
கொள்ளவரு முறைமை யெலாங் கோட னன்றே."

என்று அகத்தியர் 21,000-த்திலும்.

"என்னந் தியார்முன் னிசைத்த முறைப்படி
சொன்னந் திடமிலாச் சோகைமெய் மேகமாம்
பின்னந் தனிலொன்று பின்வாளி னூறென்றே
யின்னந் தனிலே யிரண்டிரண் டாகுமே."

என்று திருமூலர் திருமந்திரத் திரட்டிலும் சொல்லப்பட்டுள்ளது.

மேலே கூறப்பட்ட பிணிகளுக்கும் புண்களுக்கும் முடுகு தைலத்தை மேலுக்குப்பூசி, பற்பத்தை ஒன்றிரண்டு குன்றி (130 மி.மி. முதல் 260 மி.கி. வரை) அனுபானித்துக் கொடுக்க வேண்டும்.

பத்தியம் : வெப்பத்தைக் கொடுக்கக் கூடிய உணவாதிகளை நீக்குக.

சர்க்கரை, வெல்லப்பாகு, கற்கண்டு, தயிர், காடிக் குழம்பு, புளிக்கறி, மோர்க்குழம்பு, நீர்மோர், புளிக்கறிச்சாறு, புளித்த கறி, புளித்த கனி வகைகள், வெண்ணெய், அபூபம், பாளிதம் இலட்டுகம், பால், நெய் முதலியன ஆகா. பூசினிக்காய், பழங் கீரை, கீரைத்தண்டு, முள்ளங்கி, சுரை முதலியன ஒருபுடையாம். பெண்போகம் ஆகாது.

## பாதரசத்தின் பத்தியம்.

(வேறு)

மற்சமுப்பு சீதோஷ்ண மந்தாதி வத்தெண்ணெய்
துற்சமத்தி யங்கைப்பு தூவுபுளி—யைச்சற்றுங்
கூட்டாமற் சூதங் கொடுப்பருண்டா ரைச்சமன்பாற்
காட்டாமற் றுமிருத்தக் காண்.

(பொ-ள்) இரச சம்பந்தமான மருந்துகள் அருந்துங்காலத்து மீன், உப்பு, மிகு சீதம், மிகு உட்டணம், மந்தப் பொருள், எண்ணெய், மதுபானம் கைப்பு, கார்ப்பு, புளிப்பு சுவையுள்ள பொருள்கள் பெண்போகம் ஆகா.

## இரசபற்பம்.

(வேறு)

"பாரப்பா சூத பற்பம் சொல்வேன் மெய்யாய்ப்
  பரிவாகச் சூதமதைச் சுத்தி செய்து
காரப்பா ஒருபலந்தான் கல்வத் திட்டுக்
  கரியபனை மட்டையிற் சாறு வாங்கி
சேரப்பா சாமமொரு யெட்டு நன்றாய்த்
  திடமாக வரைத்தனைவில்லை கட்டே.

சுட்டப்பா காசினுட கதுமம் போலக்
  காயவிட்டு பனையோலைக்குள்ளே வைத்து
எட்டப்பாசீலையொரு மூன்று செய்து
  உலரவே ரவிமுகத்தில் காய்ந்த பின்பு
தொட்டப்பா முப்பதெருக் குள்ளே வைத்து
  கூசாதே புடம்போடப் பற்ப மாமே.

ஆமென்ற சூதபற்பங் கண்டி வீத
  மப்பனே சன்னிக்கு யிஞ்சிச் சாற்றில்
போமப்பா மேகத்துக் கெல்லா நெய்யில்
  பொல்லாத பித்தத்திற் கிடுவாய் தேனில்
வேமென்ற சுரத்துக்குச் சுக்கு நீரில்
  வெடிக்கிரந்திக் கேயிடுவாய் வெல்லந் தன்னில்
ஓமென்ற நோயெல்லா மனுபானத்தி
  லுத்தமனே தெரிந்திடநோ யோடிப்போமே."

(வேறு)

"பார்புக ழினியொரு சேரெடு சுத்திசெய்
நீரழ லுப்பொடு செங்கலி விட்டதை
மேலிடு கடமெரி சுடுதழல் தனிலிடு
சாலிடு நீற்றினை யெடுசரி நிறையே
எடுவிடு சங்கநீ ரதிலரை ரவியில்வை
கடுமதி நிறமது காசரை யிருகால்
நீர்தனி விடுநா ளேழதில் வெகுரணம்
வேர்கெடும் ரணசூலை கள்வெடி சூலைகள்
திண்படு மாரிகிரந் திகள் பல வகைசேர்
புண்படு ரணவிப் புருதிகள் பிளவைகள்
வாதம் படுவன் வருமரை யாப்பு

மீதி னிரண மேக முதிர
வாயுக ணெஞ்சடை வலிரணம் வயிறுநோய்
தேயுந் தொடைரணம் சிராவண முதலாம்
ரணமதில் வருமறு நூற்றுக்கும் வெகு
குணமிகு பாத ரசமிதை யுள்ளிடக்
களிகடு கருவேல் கருநெலி நாவல்
வளிதீ யெரிநீர் வைத்திடு கொப்புளி
வாய்வே மதுவிடும் வைத்திடு வறுகும்
காயநீர் மிளகுட னிட்டிடு வெண்ணெயை
அதிலிடு குடிரச வீறஃதடிபடும்
அதிகுண பாதரச பற்ப மதற்கே.''

(ப—ரை.) பார்—(மருத்துவ) உலகத்தார், புகழ்—சிறப்பிக்கின்ற, இனி—இரசத்தை, ஒரு சேர் எடு—எட்டுப்பலம் எடு, சுத்தி செய்—தங்கரச பற்பத்திற்குச் சொல்லியிருப்பது போலத் தூய்மை செய், நீர்—கடல் நீரானது, அழல்—சூரிய வெப்பத்தால் பூக்கிற, உப்பொடு—சோற்றுப்புடன், செங்கல்லில்—செங்கல் தூளிலும், இட்டு அதை—மேற்படி தூய்மை செய்த இரசத்தை விட்டு,மேல்கடம்இடு—அப்படி இரசம் வைத்திருக்கிற சட்டிமேல் சட்டி மூடி (மண் சீலை செய்து) உலர்த்தி, சுடுதழல் தனில் இடு—நெருப்பில் வை, எரி—(எட்டுச் சாமம்) எரிப்பாய் (அப்படி எரித்து அடுப்பைவிட்டு இறக்கி பிரித்து) சால் இடு நீற்றினை—மேற்சட்டியில் ஏறியிருந்த பதங்கத்தை, எடு—எடுப்பாய், (அவ்வாறு எடுத்து அதை நிறுத்துக் குழிக்கல்லிவிட்டு அதை) சரி நிறை—அந்த பதங்கத்தின் எடை, சங்க நீர் எடுவிடு—சங்கத் திராவகம் எடுத்துவிட்டு, இதில் அரை—இத்திராவகத்தால் அரைத்து, ரவியில் வை—அரைத்த கல்வத்துடன் வெய்யிலில் வை, (அவ்வாறு உலர்த்தினால்), அது கடு மதி நிறம்—திங்களினது வெள்ளிய நிறமாயிருக்கும், அது—அதை, காசு அரை—அரைக்கா செடை இருகால்—இரண்டு வேளையும், நாள் ஏழ் நீர்தனில் இடு—ஏழு நாள் தண்ணீரில் கொடுப்பாய் அதில்—அவ்வேழ் நாள்களில் வெகு ரணம் வேர் கெடும்—அநேக ரண நோய்களின் வேரற்றுப் போம் (அவை) ரண சூலைகள் வெடி சூலை வருமாறு நூற்றுக்கும்—ரண சூலைகள், வெடி சூலைகள், அரிகிரந்தி, பலவகைப் பட்ட புண்ணோடு வருகின்ற ரணவிப்புருதிகள், பிளவைகள், வாதநோய்கள், படுவன், அரையாப்பு, தோல்மேல் வருகின்ற விரண நோய்கள், மேகம் என்னும் நீர் நோய்கள், வலி நோய்கள், இதர ரண நோய்கள், வயிற்று நோய், தொடையில் வரும் விரண நோய்கள், சிராவணம் முதலாகச் சொல்லப்படுகின்ற அறுநூறு இரண நோய்களுக்கும், வெகு குணம் மிகு—மிக்க நற்குணத்தைச் செய்கின்ற, பாதரசம் இதை—இவ்விரச பற்பத்தை உள் இட—உள்ளுக்குக் கொடுத்தால், களி கடு கருவேல் கருநெலி நாவல்—களிப்பாக்கு கடுக்காய்த் தோல், கருவேலம்பட்டை, கறுத்த நிறத்தை அடைவிக்கின்ற நெல்லி வற்றல், நாவற் பட்டை என்னும் இவைகளையெல்லாம் சரி எடை எடுத்து இடித்து ஒரு மட்சட்டியிலிட்டு எட்டுக் கொண்ட நீர் விட்டு, வைத்திடு வளிதீயெரி நீர்—அடுப்பிலிட்டுக் காய்ச்சின குடி நீரால், கொப்புளி—வாய் கொப்புளிக்க வேண்டும் (அவ்வாறு செய்தால்) வாய்வேம் அது விடும்—மேற்படி இரசபற்பம் தின்றதினால்

உண்டான வாய் இரணம் ஆறிவிடும், வைத்திடு அறுகும்—கணு நீக்கின அறுகங்கட்டையும், மிளகுடன்—மிளகும் (சிதைத்து இட்டு), காய்நீர்—குடி நீராக, இட்டிடு—காய்ச்சிவிடு, அதில் வெண்ணெய்யை இடு—அக்குடி நீரைக் குடிக்கும் ஒவ்வொரு முறையும் ஒரு கொட்டை பாக்களவு பசு வெண்ணெய் போட்டு அது கரைந்தவுடன், குடி—குடிப்பாய் (அப்படிக்குடித்தால்,) ரசவீறு அஃது அடிபடும்—ரசபற்பத்தால் நேர்ந்த வாய் வேக்காட்டை மேற்படி களிப்பாக்கு முதற் குடிநீர் ஆற்றிவிட்டது போல் வயிற்றினுள் ஏற்படும் இரச பற்ப வீறும் ஆறும்; (ஆகையால்) அதற்கு—அப்படிப்பட்ட நற்றன்மை வாய்ந்த அந் நீற்றினுக்கு, அதிகுண—மிக்க நற்குணத்தைச் செய்கின்ற, பாத ரச பற்பம்—பாதரச பற்பம் என்கிற பேராகும்.

(மா.வ.)

### இரச பற்பம்.

(வேறு)

கறுத்த வுன்மத்தத்தின் காய்விதை நெய்யாற்
பறித்திட வருரசம் பற்பம தாமே.

(பொ-ள்) கரு வூமத்தங்காய்க்குள்ளிருக்கும் விதையினின்று எடுத்த தைலத்தால் இரசம் பற்பமாகும்.

செய் முறை.—சுத்தி செய்த இரசம் பலம் 1 (35 கிராம்) இதைக்கருவூமத்தை வித்தின் தைலத்தால் ஐந்து நாள் அரைத்து வில்லை தட்டி, ஐந்து நாள் வெய்யிலில் காய வைத்து, ஓட்டி விட்டுச் சீலைமண் செய்து லகுபுடமிட பற்பமாம்:

அளவு : அரை உளுந்து (32 மி.கிராம்).

துணை மருந்து : தேன், நெய், சருக்கரை.

தீரும் நோய் : இருமல், ஈளை, சுரம், மேக நோய் ஆகியவைகள்.

(தேரன் காப்பியம்).

### இரச செந்தூரம்.

ஒரு பலம் சுத்தி செய்த இரசத்திற்குத் துவரை இலைச்சாறு, வேங்கை யிலைச் சாறு புலி தொடக்கி இலைச்சாறு, களா இலைச்சாறு, கடம்பிலைச் சாறு, பண்ணையிலைச் சாறு, சுரையிலைச் சாறு, ஆரையிலைசசாறு இவைகளை முறைப்படி தனித்தனியாகவிட்டு அரைத்து, வில்லை தட்டிஉலர்த்தி, சில்லிட்டுச் சீலை மண் செய்துலர்த்தி, புடமிட்டு ஆறவிட்டெடுக்கின் செந்தூரமாம். இதனை,

"துவரா மிரதத் துறையினி தறைவாம்
துவரை முதலிய சொற்றரு மூலித்
துவரத் துறந்தோர் துகிற்கிணை தருமே."

என்ற வாகட குணமணி அடிகளால் உணரலாம்.

இரச செந்தூரத்திற்குத் துணைமருந்தும் தீரும் நோய்களும.

| துணை மருந்து. | தீரும்நோய்கள். |
|---|---|
| துளசிச் சாறு .. .. | விரை வாதம். |
| எருக்கிலைச் சாறு .. .. | பித்தகாங்கைப் பிணி. |
| தாமரையிலைச் சாறு .. .. | பித்த உன்மத்தத்தைச் சேர்ந்த குன்மம். |
| சிவகரந்தைச் சாறு .. .. | கய நோய். |
| கோரைச் சாறு .. .. | பித்த அரோசகம். |
| வன்னியிலைச் சாறு .. .. | வயிற்று வலி. |
| தண்ணீர் .. .. .. | உட்டண வாதம். |
| நெற்பொரி ரசம் .. .. | மயக்கத்தை உண்டாக்கும வெப்பப் பிணி. |

இரச செந்தூரம்.

(வேறு)

இரசம் பலம் 4 (140 கிராம்), கெந்தி பலம் $\frac{1}{4}$ (17.5 கிராம்), அரிதாரம், பலம் $\frac{1}{2}$ (8.75 கிராம்) இவை மூன்றையும் பொடித்துக் குப்பியிலிட்டு, 12 சாமம் (36 மணி) எரித்துப் பார்க்க, குப்பியின் மேற் புறங்களில் செந்நிறமாகப் பதங்கித்திருக்கும். இதை வெடி திராவகத்தினுல் அரைத்து, உமி நெருப்பில் வறுத்துக் குப்பியிலிட்டு, 12 சாமம் (36 மணி) எரிக்கச் செந்தூரமாகும். செந்தூர எடைக்கு எட்டில் ஒரு பங்குத் தங்கமும், நாகமும், இரதமும் சேர்ந்த பிட்டுங்கூட்டி, மேற்படி திராவகத்தால் அரைத்து, உமி நெருப்பில் வாட்டிக் குப்பிக் கேற்றி 8 சாமம் (24 மணி) எரிக்கச் செந்தூரமாம். இதைச் சகல நோய்களுக்கும் கொடுக்கலாம்.

குறிப்பு.—வெடித் திராவகத்திற்கு வெடியுப்பு பலம் 10-ம் (350 கிராம்) சீனக்காரம் பலம் 24-ம் (840 கிராம்) வாலையிலிட்டு முறைப்படி திராவகம் இறக்கிக்கொள்ள வேண்டும்.

(யூகி உலர, 2,000 )

(வேறு)

சூதம் 1 பங்கு, கெந்தி 1 பங்கு, நவச்சாரம் 1 பங்கு இம்மூன்றையும் சேர்த்து, மூன்று நாள் அரைத்துக் காசிக் குப்பியிலிட்டு, மாக்கல் கொண்டு, குப்பிவாய் மூடி, குப்பிக்கும், குப்பி வாய்க்கும் சீலை மண் செய்துலர்த்தி, அடி கனமுள்ள குண்டு சட்டியினடியில் தொளையிட்டு சட்டிக்குள் 1 படி (1.3 லிட்.) உப்பைக் கொட்டி, அதன் மீது குப்பியை வைத்து, மேலும் 1 படி (1.3 லிட்) உப்பைக் கொட்டிக் குப்பியை மறைத்து, அதற்கு மேல் மணல் கொட்டி, மற்றொரு சட்டியில் குண்டு சட்டியின் வாயை மூடிச் சீலை செய்து, அடுப்பேற்றி 12 சாமம் (36 மணி) புகையாமல் கமலாக்கினியாய்க் காற்றில்லாவிடத்தில் எரித்து, நன்றாய் ஆறின பின் எடுக்கச் செந்நிறமுள்ள செந்தூரமாகும்.

(வேறு)

சூதம் 1 பங்கு, கெந்தகம் 1 பங்கு சேர்த்து சிறு செருப்படைச் சாறு விட்டு 1 சாமம் (3 மணி) அரைத்து, சிறு சிறு உருண்டை செய்து உலர்த்திக் குப்பியிலிட்டு, வாய்மூடிச் சீலைமண் செய்து மேலே கூறப்பட்ட முறைப்படியே சட்டியிலிட்டு, மூடிச் சீலை செய்து, 12 சாமம் (36 மணி) கமலாக்கினியாய் எரித்து எடுக்கச் செந்தூரமாம்.

செந்தூரம் 1 பங்கு, நாபி 1-8 பங்கு, மிளகு 1-8 பங்கு கூட்டியரைத்து வைத்துக்கொள்ளவும்.

**அளவு :** ½ முதல் (65 மி.கிரா.) 1 குன்றி (130 மி. கிரா.) வரை.

சூதக் கருப்பு.

சுத்தி செய்த இரசம் 1 பங்கு, வெடியுப்புச் சுண்ணம் 1 பங்கு, பச்சை விடதாரி வேர்ப்பட்டை 8 பங்கு இம்மூன்றையும் குப்பைமேனிச் சாறு விட்டு 6 மணி நேரம் விடாமல் அரைத்து, வில்லை தட்டிக் காய வைத்து சில்லிட்டு எழுசீலை செய்து, எண்மடங்கு வரட்டிகொண்டு புடமிட்டு ஆறவிட்டு எடுக்கவும். வில்லையைப் பொடித்துக் குப்பியில் அடைத்துக் கொள்ளவும்.

**அளவு :** 2 (130 மி. கிரா.) முதல் 4 உளுந்தெடை (260 மி.கிரா.).

**அனுபானம் :** பசு நெய், தேன், பால் முதலியன.

**தீரும் நோய் :** வாத நோய், கீல்வாயு, குன்மம், புண்கள், நரம்புக் கிரந்தி முதலியன.

## இரச பதங்கம்.

இரசத்தை வேண்டிய அளவு எடுத்து, வெடியுப்பு, திராவகத்தால் அரைத்துப் பில்லை தட்டிக் காயவைத்து, மூன்று பங்கு உப்பும், ஒரு பங்கு செங்கல் தூளும் கலந்து அதில் பாதியை ஒரு சட்டியில் கொட்டி அதற்கு மேல் பில்லையை வைத்து, மேல் சட்டி மூடி சீலை செய்து, முத்தியாக 12 மணி நேரம் எரிக்கவும். ஆறின பின் மேல் சட்டியில் படிந்துள்ள பதங்கத்தை எடுத்து, மேற்படி திராவகத்தை விட்டு முன் போல் அரைத்துப் பில்லை செய்து எரிக்கவும். இப்படியே பதங்கிக்காமல் அடியில் தங்கு மட்டும் எரிக்கவும். இஃது இரச பதங்கம். இதனைச் சண்டரச பற்பம் என்றும் சொல்லுவர்.

**அளவு :** ¼ (16 மி.கி.) முதல் ½ (32 மி.கி.) அரிசி எடை.

தக்க அனுபானத்தில் கொடுக்க மேகம், மேகப் புண், குன்மம் சூலை, குட்டம், கப நோய்கள், சந்நிபாத சுரம், வாத நோய்கள் நீங்கும். கடும் பத்தியம் வைக்கவும்.

## இரச மெழுகு.

''வாட்டமா மின்னமோ ரநுபா னங்கேள்
மைந்தனே வாலைரசம் வராகனி ரண்டே ''

''வராகனெடை யிரண்டப்பா பறங்கிப் பட்டை
வீருன திப்பிலியி லவங்கம் ரண்டும்
வராகனெடை நாலப்பா கரும்பு வெல்லம்
விசையடங்கத் தானரைத்தே யுண்டை கேளு
வராகனெடை முக்காலா யுருட்டி மைந்தா
வீறுகெட்ட மானிடர்க்கு மேழு நாள்தான்
வராகனெடை முக்காலா யந்தி சந்தி
விவரமுடன் றுன்கொடுத்து மேலுங் கேளே.''

''கேளப்பா பத்தியந்தான் உப்பா காது
கிருபையுடன் பசுவின்பால் கூட்டிக் கொள்ளு
நாளப்பா பதினைந்தா நாளி லேதான்
நன்மையுடன் தலைமுழுக்கு முழுக வாட்டு
கேளப்பா வொன்றுமிலைக் கோழிச் சாறு
கூட்டியே பத்தியத்தை முறித்துப் போடு
வேளப்பா வாயெல்லாம் வெந்து காணும்
விதமாகத் தான்றுனே யாறுந்தானே.''

''தான்தானே யாறுகையிற் றீரு நோய்கேள்
தண்மையிலா மேக வெள்ளை தடிப்புப் புண்கள்
சேர்ந்ததொரு அழிகிரந்தி குழியென் கிரந்தி
தீராத அரையாப்பு மேக சூலை
போந்தானே கால்முடக்குக் கைமுடக்குப்
பொல்லாதநோய்களெல்லாம் போகுஞ் சொன்னேன்
நாந்தானே வாலையிட கருணையாலே
நன்மையிலா வியாதியெல்லா நலம தாமே.''

குறிப்பு—"வாயெல்லாம் வெந்து காலும்" என்று பாட்டில் கூறியிருந்தபோதிலும், மருந்து பழகி இருந்தாலும், தக்க அளவிலும் நாள் குறைவாகவும் சாப்பிட்டாலும் வாய் பிடிப்ப தில்லை.

## இரசத் தைலம்.

" சூலினி பற்ப ணம்பிம்பி முப்பன்னந் தொடிகளைந்தைந்
தாலினிக் கந்தங் கஃசிட் டிடிமுத் தவிப்படிசேர்
கோலினி ருமித் தமுழிய ளாவிக் குடிகஃசுண்
மேலினி ரைத்த நுணுக்காய்க் கிரந்தி விரணங்களே."

(பொ-ள்) வெற்றிலை, பாவட்டையிலை, கோவையிலை, இம் மூன்றையும் வகைக்கு 5 பலமாக (175 கிராம்) நிறுத்துக் கல்லுரலி விட்டுப் பாதரசம் பலம் $\frac{1}{4}$ (8.75 கிராம்) விட்டு இருப்புப் பூணில்லாத உலக்கை கொண்டு மைபோலிடித்துக் கடைந்து திரட்டி, ஒரு பாத்திரத்திற் போட்டு, ஆமணக்கு நெய் 1 படி (2 லிட்) ஊற்றி, மர அகப்பையால் ஒன்றுபடக் கரைத்து, மூன்று நாள் சூரியபுடம் வைத்து எடுத்து, இதை மேற்படி அகப்பை யால் கலக்கி, பலம் $\frac{1}{4}$ (8.75 கிராம்) வீதம் போதுமான நாள் அளவு சாப்பிட்டால், நிறைபடுகின்ற நுணுக்காய்க் கிரந்தி விரணங்கள் நீங்குவதாகும்.

## இதுவுமது.

" விரண மடர்படர் தாமரை பாமை வெடிப்புணினஞ்
சரண முறுப்பங்கை யாங்கரும் புள்ளி சதுமணிநோய்
கரண மிலாஞ்சன மேகக் கசிவுகண் டத்தலங்கற்
கிரண முறுமிர தத்தெண்ணெ யீதுப்பிற் கெஞ்சினுமே."

(பொ-ள்) விரண நெருங்கிய படர்தாமரை, சிரங்கு, கீற்றுக வெடிக்கின்ற புண்களின் கூட்டம், பாதம், உடம்பு, கை இவ்விடங்களிலுண்டாகின்ற கரும்புள்ளி என்கிற கருமேகம், சதுமணிரோகம் கணக்கிலடங்காத லாஞ்சனரோகம் என்னேர மும் கசிந்தொழுகா நின்ற மேக ரோகம், கண்டமாலை என்னும் இவைகளை உள்ளிலும் வெளியிலும் நிலையாவாம் இதுவே பச்சை ரசத் தைலம். இதற்குப் பத்தியம் உப்பு, புளிப்பு மன்முடி னும் இல்லையாம்.

## இரசக் களிம்பு (மேகவிரணக் களிம்பு).

சூதம், இலிங்கம், பூரம், வீரம், பால்துத்தம், மயில்துத்தம், மிருதார் சிங்கி, நீரடிமுத்து, கார்போகரிசி, கசகசா, மஞ்சள் மெழுகு—வகைக்கு பலம் அரை (17.5 கிராம்) மெழுகு நீங்க மற்றவைகளைக் கல்வத்திலிட்டுப் பொடித்து வைத்துக்கொண்டு

தேங்காய் எண்ணெய்க் காய்ச்சி அதில் மெழுகைச் சேர்க்கக் கரைந்துபோம். சூடாறுமுன் பொடியைத் தூவி ஆறும் வரை கைவிடாமல் துழாவிவரக் களிம்பாம். இதனை தடிப்புள்ள விரணங்கட்குத் தடவி வர, தடிப்புக் கரைந்து ஆறும்.

இரசப் புகை.

இரசம் $1\frac{1}{4}$ வராகனெடை, (5.1 கிராம்), இலவங்கம் $1\frac{1}{4}$ வராகனெடை (5.1 கிராம்), வீரம் $1\frac{1}{4}$ வராகனெடை (5.1 கிராம்), வெள்ளைக் குங்குலியம் $2\frac{1}{2}$ வராகனெடை (10.2 கிராம்), எருக்கன் வேரின் சுட்ட கரி 4 வராகனெடை (16.8 கிராம்) இவைகளைக் கல்வத்திலிட்டு அரைமணி நேரம் அரைத்துத் தூளானபின், பருத்தி இலைச்சாற்றில் ஒரு வெள்ளைத் துணியை நனைத்து உலர்த்தி, நாயுருவி விதை ஐந்து வராகனெடையை (21 கிராம்) மேற்படித் தூளுடன் கலந்து பொட்டலம் கட்டி, புளியந்தணலில் போட்டு, கொட்டாங்கச்சி வைத்து மூங்கில் குழல் வழியாகப் புகை அருந்தவும். இவ்விதம் ஏழு வேளை அருந்தவும். பத்தியம்: புளியும் உப்பும் கூடா.

தீரும் நோய்கள் : வாத நோய்கள், கை கால் முடங்கு, சூலைக்கட்டு, குத்தல் முதலியனவாகும்.

மற்றும் இரசம், இரண மருத்துவத்தில் காரநீர், திரி, பற்று முதலியவைகளுக்கும் பயன்படுவதை இரண வைத்திய நூலில் பரக்கக் காணலாம்.

இரசக் கட்டு.

''கற்கடகத்தினுற் கட்டுமே யிரதம்'' என்ற அடியினுல் இரசம் நண்டின் இரசத்தினுல் கட்டிடும் என்று அறியலாம்.

(தேரன் காப்பியம்.)

குரு.

'' குருவினற் பெருமையைக் கூறுதுங் கேட்டி
வச்சிரச் சுதைநிலம் வற்றல் தேங்கா
யச்சுறப் பொருந்தியு ளமைவுற விரதஞ்
சேமித்த ரக்கினுற் சேர்த்திமண் சினமதி
யாமுறு பின்னரதற்குள வகைசெயிற்
பாண்டரங் கன்கடப் பவளவண் ணம்பெறுந்
தாண்டவம் புரியுமித் தாணு லோகத்தி
லிருவழி நடத்திடு மியல்பென வாத
வைத்திய மிரண்டையும் வாய்த்திடப் பாக்கு
நயத்தோடு குளிகையை நானுரைத் திடக் கேள்
செயத்தொடு மிரதமுன் செப்பிய படியே.''

(பொருள்) ஒரு கொப்பரைத் தேங்காய்க்குள் சதுரக்கள்ளிப் பால், எள், பாதரசம், இவற்றை அளவின் முறைப்படியே அடைத்து, அரக்கினுல் வாய் மூடி, ஒரு மாதம் வரைக்கும்

பூமியில் புதைத்து வைத்து எடுத்து, அதற்காம் முறைமைகளைச் செய்யும் இடத்தது. அது பலனை நிறத்தை அடையும். இஃது உலகத்தின்கண் வாத வைத்தியங்களாகிய இரு விஷயங்களுக்கும் உபயோகமாகும்.

(தேரர் காப்பியம்.)

குளிகை.

'' நந்திப்பி யுட்டசை நண்ணவைத் தருக்க
முருக்குவெட் பாலையா மூலிகை யினங்களிற்
செய்வன புரிந்துரத் தினவுப ரசங்கள்
பெய்துருக் கிடவது பெயர்பெறு குளிகை
பாகும தன்றிறம் யாரறிந் துரைப்போர்
கூறுங் கவன குளிகைய தாகும்.''

(பொ-ள்) மேற்சொல்லியபடி சுத்தியாக்கப்பட்ட ஜெய ரசத்தைக் கைபாக அளவு முறைகளின்படி நத்தையின் தசைக்குப் பொருந்த வைத்து, மேல் எருக்கிலை, முருக்கிலை, வெட்பாலை இலை இவைகளால் முறையே கவசித்து, மற்றை உபரசங்களாலும் வேண்டியன செய்து, உருக்க, அது பெருமை பொருந்திய குளிகையாகும். அதுவே கவனக் குளிகையுமாகும்.

(தேரர் காப்பியம்.)

குரு குளிகை.

'' குருகுளிகை சூதநத்து கொப்பை விடத்தேர்பால்
குருகுளிகை சூதநத்து கொண்மூ—குருகுளிகை
மாறன்று ராகநிதி மாகிமையெண் சித்திவண்மை
மாறன்று ராகமநூன் மை.''

(ப-ரை) குரு —முதன்மையான மருந்து; குளிகை—முன்னோர் பொருண்மையான சித்தியும்; சூதம்—இரண்டும் இரசத்தினல் ஆகவேண்டியதெப்படியென்றல்; நத்து—சங்கு; கொப்பை—தேங்காய்; விடத்தேர்—விடதேரி இரசம்; பால்—சதுரக் கள்ளிப் பால்; குருகு—தேன் மெழுகு; உளிகை—எள்; சூதநத்து கொண்மூ—மாம்பிசின் (மேக விந்து என்றதால் வசந்த காலமும் மழைக் காலமுமாயிற்று) குரு—செந் நிறமும்; குளிகை—உள்ளங் கையாலே எல்லாச் சித்தியும் ஆகும்; மாறன்றுராக நிதி மாகிமையெண் சித்தி வண்மை—வேப்பிலைச் சாறு, சிவனார் வேம்புச் சாறு மாற்றுப் பொன்னுகவும், அஷ்டமா சித்தி மகிமையுண்டாகவும்; மாறன் றுராக மநூன்மை—இப்படிக் குருவாக்கிக்கொண்டு

வாதத் தொழில் பொன் முதலாகவும், குளிகையாக்கிக்கொண்டு காரிய சித்தியட்டாங்க மகிமா, லகிமா, கவன சித்தி, முதலாகவும் பண்ணிக் கொள்ளலாம். இதற்கு அனுபானம் ஒருகாலும் இல்லை. இது பெரிய சித்தாதிகள் சொன்ன நூற்படிக்கு இந்த நூலுடையாரும் கூறினர்.

"இதநூ கேளப்பா குருகுளிகை யிரண்டேபாரில்
கிடையாத சிவ சந்தியுடலான் மாவில்
வாளப்பா லெளகீக வைதீ கம்போல
மாருத வேதாந்த சித்தாந்த தம்போல்

லாளப்பா நீயிதனைச் சூத வித்தை
யாகுமடா பொன்னுலகை யடக்குஞ் சித்தி
நீளப்பா சௌபாக்கிய மிருவே யாகு
நின்மலமா குந்தேக நெடிது தானே."

என்ற கொங்கணர் செய்யுளாலும் அறியலாம்.

## இரச செந்தூரம்.

## RED SULPHIDE OF MERCURY.

இஃது இரசமும் கெந்தகமும் சேர்த்துச் செயற்கையில் செய்யப்பட்டுக் கடைகளில் கிடைக்கும் சரக்காகும். இரச செந்தூரம், பார்ப்பதற்குப் பானைஓட்டுச் சிறு துண்டுகள் போலச் சிவந்த நிறத்தில் கடைகளில் கிடைக்கின்றது. இதைத் தனியாய்ப் பற்பமோ, செந்தூரமோ செய்து வழங்குவதாய்த் தெரியவில்லை. அநேக கூட்டுப் பெரு மருந்துகளில் ஒரு சரக்காய்ச் சேர்க்கப்படுகின்றது.

இரசத்தின்கீழ்க் கூறப்பட்ட இரச செந்தூரத்திற்கும் இப்பொருளுக்கும் வேறுபாடுண்டு. இதன் குணம் பதார்த்த குண சிந்தாமணியிலும் கூறப்பட்டிலது. இதனை மருந்துகளில் சேர்க்கு முன்னர்ச் செய்யப்படும் தூய்மை ஒன்றே, நூல்களில் கூறப்பட்டிருக்கின்றது.

(சுத்தி)

இரச செந்தூரத்தைத் தாய்ப் பாலில் 24 மணி நேரம் ஊறவைத்துக் கழுவி உலர்த்தி எடுக்கின் சுத்தியாகும்.

(வேறு)

எலுமிச்சம் பழச்சாற்றிலும் இங்ஙனமே செய்துகொள்ள இது சுத்தியாம்.

(வேறு)

வேப்பம் பட்டைக் குடிநீரில் 12 மணி நேரம் அரைத்து உலர்த்திப் பொடியாக்கச் சுத்தியாம்.

இரச செந்தூரத்தினுடைய சுவை, வீரியம், விபாகம், குணம், செய்கை, முதலியன சற்றேறக் குறைய இலிங்கத்தை ஒக்கும்.

இரச செந்தூரத்தைக் கொண்டு செய்யப்படும் சிரங்குப் பூர்சு என்ற மருந்தைக் கீழே காண்க.

தேங்காய் எண்ணெய் 2 லிட்டர், நீரடிமுத்து எண்ணெய் 1 லிட்டர், வேப்ப எண்ணெய் 1 லிட்டர், இம்மூன்றையும் ஒன்றாகக் கலந்து அடுப்பேற்றிக் கொதிக்க வைத்து, அதில் தேன் மெழுகு 1,500 கிராமை சிறு துண்டுகளாக்கிச் சேர்த்து, உருக்கிக் கலந்தவுடன் கீழிறக்கி, இரச செந்தூரம் 20 கிராம், கெந்தகம் 40 கிராம், மிருதார்சிங்கி 20 கிராம் இம்மூன்றையும் தனித் தனியாய்ப் பொடித்து ஒன்றாகக் கலந்து அதை எண்ணெயில் தூவி ஆறிக் கெட்டியாகும் வரை துழாவி எடுத்துப் பத்திரப்படுத்தவும்.

இது வெளிப் பிரயோகமாக சிரங்குகளுக்கும், புண்களுக்கும் உபயோகிக்க நல்ல பலனைத் தரும்.

## இலிங்கம் (ஜாதி இலிங்கம்)

## (RED SULPHIDE OF MERCURY (NATURAL) (CINNABAR OR VERMILTION)

இப்பொருள் ஆண்குறி, இங்குலிகம், இராசம், கடைவன்னி கர்ப்பம், கலிக்கம், காஞ்சனம், காரணம், சண்டகம், சமரசம், சானியம், செந் தூரம், மணிராகம், மிலேச்சம், வனி, வன்னி, என்னும் வேறு பெயர்களினாலும் வழங்கப்படுகின்றது.

சிவன் திரிபுரத்தை எரித்த காலத்து நெற்றிக் கண்ணின் பொறி, இரசமிருக்கின்ற பூமியில் பட்டு இலிங்க பாஷாண மாயிற்று என்றும், இது மேருவுக்குக் கிழக்கே வங்கமிருக்கின்ற மலையின் அடியில் இரசமும் கெந்தியும் கட்டி உண்டாயிற் றென்றும் இதன் பிறப்பு வரலாறு கூறப்பட்டுள்ளது. தற்காலம் நம்மால் கையாளப்பட்டு வருவது, வைப்புப் பாஷாணங்களின் கீழ்க் கூறப்பட்ட ஜாதிலிங்க பாஷாணம் என்று மேற்கூறிய வரலாற்றால் தெளியலாம்.

## செய்முறை.

சுத்தி செய்த ரசம் பலம் 8 (280 கிராம்), கந்தகம் பலம் 2 (70 கிராம்), வெடியுப்புப் பலம் 2 (70 கிராம்) எடுத்து, சூதத்தைக் கந்தகத்துடன் உறவாக்கி, வெடியுப்பைக் கலந்து காசிக் குப்பியிலடைத்து, வாலுகையிலிட்டு ஆறு சாமம் (18 மணி) எரித்து, ஆறவிட்டு உயர்கம்பிலிங்கத்தை எடுத்துக்கொள்ளவும்.

## குணம்.

இதற்கு கனத் தன்மையும், நெருப்பிலிடப் புகையுந் தன்மையும் நீரில் கரையாத் தன்மையும் உண்டு, வாசனையும் உருசியும் கிடையா. வன்னி கர்ப்பம் என்னும் இதன் பெயர் நெருப்பின் நிறத்தையும் வெப்ப வீரியத்தையும் உடையது என்பது விளக்குவதாகும். இலிங்கத்திற்கு உடல் தேற்றிச் செய்கை உண்டென்று கூறுவர். இதன் பொதுக் குணத்தைக் கீழச் செய்யுட்களாலும் உணர்க.

"பேதிசுரஞ் சந்நி பெருவிரண நீரொடுத
காதகடி காசங் கரப்பான்புண்— ணோத
வுருவிலிங்க சங்கதமா யூறுகட்டி யும்போங்
குருவிலிங்க சங்கமத்தைக் கொள்."

"ஆதி யிரதவுருக் காதலாற் சாதிலிங்க
மோதி விரதகுண முற்றுடலிற்—றீதுபுரி
குட்டங் கிரந்தி கொடுஞ்சூலை வாதமுத
லுட்டங்கு நோய்களையோட் டும்."

(பொ-ள்) தோற்றத்தில் பாதரச உருக்காகிய சிவந்த நிறத்தை யுடைய சாதிலிங்கமும், அது சேர்ந்த மற்றைய மருந்துகளும், அந்த இரச குணத்தைக் கொண்டு துன்பத்தை உண்டு பண்ணுகின்ற பேதி, சுரம், சந்நிபாதம், தீராப் புண்கள், அதிமூத்திரம், காணுக்கடிவிடம், காசம், கரப்பான், சிரங்கு, சொல்வதற்கும், பார்ப்பதற்கும், வெறுப்புத் தோன்றும் பரவு நுணுக்காய்க் கிரந்தி, குட்டம், கிரந்தி, கொடுமை செய்கின்ற சூலை, வாத நோய் முதலியவைகளையும், மற்றும் உடலில் மறைந்து இருக்கும் பிணிகளையும் நீக்கும் என அறிக.

வேறொரு நூலாசிரியர் இதன் குணத்தைக் கீழ்க்காணுமாறு கூறுகின்றார்.

"நிலத்தி லெழுந்தபிணி நீங்காக் கிரந்தி
சலத்துடனே சூலைவெடி தானகற்றும்—பலத்ததாம்
சாதிலிங்கத் தின்குணத்தைச் சாற்றினேன் சன்னிமுதல்
ஓதுசுரம் போமே ஒளிந்து."

நிலத்தெழுந்த பிணி—பிருதிவி பூத உறுப்புகளில் உண்டாம் நோய்கள்; சலப்பிணி—அப்பு பூத உறுப்புகளில் உண்டாம் நோய்கள்.

மற்றும் சரக்குகளுக்கெல்லாம் இலிங்கம் இறையெனவும், மேக நோய்களுக்கு நமன்போன்றதெனவும் புகன்றிருப்பதை,

''இங்குலிகச் சரக்கொன்றே சரக்குக்கெல்லா மிறை யாகும்''.

''மேகவகை வினைக்கு நமனை லிங்கம்.''

என்னும் தொடர்களால் உணர்க.

தேரன் மருத்துப் பாரதத்தில், அலறு சந்நிக்கு இலிங்கத்தின் ஆட்சி கூறப்பட்டிருக்கின்றது.

சுத்தி முறைகள்.

அழிஞ்சிற் பட்டை ஒரு வீசையை (1,400 கிராம்) நறுக்கி இடித்து, நான்கு படி (5.2 லிட்) புளித்த காடியில் போட்டு இரவு பனியில் வைத்து, மறுநாள் காலை நன்றாய் பிசைந்து கலக்கி யதில் ஒரு பலம் (35 கிராம்) இலிங்கத்தைச் சீலையில் கட்டியிட்டு, மேல் சட்டி மூடி, சீலை மண் செய்து உலர்த்திப் பிறகு பனியில் வைத்தெடுத்து, அடுப்பேற்றி விளக்கு போல நீர் வற்றும்படி எட்டுச் சாமம் எரித்து, எடுத்துத் துடைத்து, முன்போலவே, புளி கருணைச் சமூலம் கலந்த காடி நீர், நன்னாரி வேர் கலந்த காடி நீர் இவ்விரண்டிலும் தனித் தனியாய் எரித்தெடுக்க இது சுத்தியாம், இதனை,

''சொல்லக்கேள் புலத்தியனே மகனே யிந்தத்
துறையான சாதிலிங்க சுத்தி தானே
வெல்லக்கே ளழிஞ்சில்புளிங் கருணை யோடு
மேலான நன்னாரிக் காடித் தண்ணீர்
புல்லக் கேளதிலதிலோர் மூன்று வைகல்
புகையாமல் விளக்கிலெரி யழுக்கு நீங்கும்
வெல்லக்கே ளளவுதொடிக் கொன்றே வீசை
வெறுந் தண்ணீர் நாலுபடி வீத மாமே.''

''மேகப் பிணிமுதல் போக வென்றால்
மேலாம் லிங்கம் சுத்தி செய்ய
மாகத் தழிஞ்சி கருணை நாரி
வாய்த்த புளிநீ ரொன்பா நாள்
பாகத் தழலெரி தீவி கைபோற்
பாம்புப் பிடகர் கைப்பண் பிதென
வேகமதை நீக்கென் றுடாய் பாம்பே
மேலாஞ் சரக்கிதென்றுடாய் பாம்பே.''

என்னும் செய்யுட்களாலறிக.

(வேறு)

பழச்சாறு, பசும்பால், மேனிச்சாறு இம்மூன்றையும் சம வெடைகூட்டி, இலிங்கத்திற்குச் சுருக்கிட்டெடுக்க, இது சுத்தியாம்.

(வேறு)

முலைப்பாலிலும், எலுமிச்சங்கனி இரசத்திலும், முறையே ஒவ்வொரு நாள் ஊறவைத் தெடுக்கச் சுத்தியாம். இதனை,

''முன்னுசாதி லிங்கந் தன்னை முலைப்பாலி லூறவைத்தே
பின்னருநற் சம்பீரத்தின் பெருங்கனிச் சாற்றிற் சுத்தி.''

என்ற வடிகளாலறிக.

அளவு.

இதனைப் பத்து உளுந்தெடை (650 மி.கி.) வரை உள்ளுக்கும், அரை வராகனெடை (2.1 கிராம்) புகை போடுவதற்கும் உபயோகிக்கலாமென்று பைஷஜ கல்பம் கூறுகின்றது.

பற்பம்.

ஒரு பலம் (35 கிராம்) சுத்தி செய்த இலிங்கத்திற்கு கீழ்ப்பட்டியில் குறிப்பிட்ட சாறுகளைக்கொண்டு முறைப்படி அரைத்து உலர்த்திப் புடமிட்டெடுக்கில் இது பற்பமாம். இப் பற்பம், இராம சரத்தொடு ஒப்பிடப்பட்டுள்ளது.

| சாற்றின் பெயர். | அளவு பலம் | அரைப்பு நாள். | வில்லை உலர்த்தும் நாள். | கவசம் உலர்த்தும் நாள். | புடம் விரட்டி. |
|---|---|---|---|---|---|
| சரக்கொன்றை சமூலச்சாறு | 4 | 4 | 3 | 1 | 32 |
| நாட்டெட்டிக்கனிரசம் | 4 | 4 | 3 | 1 | 30 |
| சுரபுன்னைச் சமூலச்சாறு | 4 | 4 | 3 | 1 | 32 |
| வாட்கோரை சமூலச்சாறு | 4 | 4 | 3 | 1 | 30 |
| திருவாத்திச்சமூலச்சாறு | 4 | 4 | 3 | 1 | 32 |
| நறுமாமரச்சமூலச்சாறு | 4 | 4 | 3 | 1 | 30 |
| பனைவேல்மரச்சமூலச்சாறு | 4 | 4 | 3 | 1 | 32 |
| கல்லால்சமூலச்சாறு | 4 | 4 | 3 | 1 | 30 |

பற்பத்தின் அளவு—துவரையில் எட்டில் ஒரு கூறு உத்தமமென்றும் இரண்டு கூறு மத்திமமென்றும், மூன்று கூறு அதமமென்றும், நான்கு கூறு அதமாதமமென்றும், ஐந்து கூறு ஒருபுடைத் துணிவென்றும் ஆறு கூறு முழுமைத் துணிவென்றும், ஏழு கூறு அனந்தமென்றும், முழுத்துவரையளவு அபரிமிதமென்றும் கண்டு கொள்க.

புசிக்க ஏற்ற நிலங்கள்.—குறிஞ்சி, நெய்தல் ஆகும் நிலங்களென்றும், மருதம், முல்லை, பாலை ஆகா நிலங்களென்றும் கொள்க.

புசிக்க ஏற்ற திங்கள்.—கார்த்திகை, பங்குனி, சித்திரை, ஆவணி, ஐப்பசி ஆகும். மற்றைய மாதங்கள் ஆகா.

### துணை மருந்தும் தீரும் நோய்களும்.

''மூக்கிரண்டை வீக்க முளரிரண மேகமுழை
மூக்கிரண்டை வீக்க முளரிவனி—மூக்கிரட்டை
யாம்ப லரியா லளைபாலை புல்குளம்நெய்
யாம்பலரி யாலளைநெய் யார்.''

(ப-ரை.) மூக்கிரட்டை—வாத பித்த கப சுவாசகாசம், வீக்கம்—வாத பித்த கப நீர்க்கட்டு, முளரி—வாத பித்த கபசுரம், ரணம்—வாத பித்த கபரணம்; மேகம்—வாத பித்த கப மேகம், உழை—வாத பித்த கபக் குழப்பம், மூக்கு—வாதபித்த கப முக்கல், இரட்டை—வாத பித்த கபப் பிடிப்பு, வீக்கம்—வாத பித்த கப வீக்கம், முள—வாத பித்த கபச் சொறி, அரி—வாத பித்த கபக் குன்மம், வனி—வாத பித்த கபச் சன்னி [இங்ஙனம் கூறிய நோய் வகைகள் (விரிவால்) முப்பத்தாறுக்கும் துணை மருந்துகள்]: மூக்கிரட்டை—மூக்கிரட்டை, இரட்டைப் பிரமட்டை ஆம்பல்--அல்லிகள்; அரி-கடுக்காய், தான்றிக்காய், ஆல்--குருவியால், கல்லால், அளை—தயிர், மோர், பால் முலைப்பால், பசும் பால், ஐ—வெண்ணெய், சர்க்கரை, புல்—கற்கண்டு, பனைவெட்டு, குளம்—வெல்லம், கருப்பஞ்சாறு, நெய்—பசு நெய், தேங்காயெண்ணெய் ஆம்—இளநீர், பன்னீர், பல—துளசி, உருத்திர சடை, அரி—நெல்லி, கீழ்க்காய் நெல்லி, ஆல்—பொன்னாங்காணி, கரிசலாங்கண்ணி அள—வறள்முள்ளி, நீர் முள்ளி, ஐ—தும்பை, சாமந்தி, நெய்—கொட்டி நெய்தல், ஆர்—வெந்நீர், தண்ணீர் (ஆகிய முப்பத்தாறு சரக்குகளும் முறையே ஆகும்).

### குன்ம அனற்புண்ணும் இலிங்கபற்ப ஆட்சியும்.

கொங்கு நாட்டில் வாழ்கின்ற மலையாளிகளும் பைசாசம் போன்ற பிணி என்று வெறுக்கும் குன்ம வகைகளில் ஒன்றாகிய, ''குன்ம அனற்புண்'', வயிற்று வலியையும், அதைப் பற்றித் தோன்றிய மந்தத்தையும், மந்தத்தைப்பற்றித் தோன்றிய நளிரையும் அதனால் உண்டாகும் வெப்பத்தையும் உண்டாக்கி, அதனால் பருக் கட்டித் தோன்றி, பின் அது புண்ணாகி ஆறாமல், அரோசிகத்தையும் விதனத்தையும் மேவிடச் செய்யும். இதற்கு ''ஆறுப்புரவனப் புண்'' என்றும் பெயர் உண்டு. மேலே கூறப்பட்ட வயிற்றுவலியுடனே புண்கள் உண்டாம் இடங்கள் ஆறும். அவை (1) முலைக் கண், (2) தோள், (3) மார்ப்பள்ளம், (4) கன்னப் பள்ளம், (5) வாய், (6) முழங்கால் மடிப்பு ஆகும். இவ்வாறுள் வாதத்தைப் பற்றி வருவன முலைக்கண்ணும் தோளுமாகும். இந்த இரண்டுள் முன்னது சாத்தியம், பின்னது அசாத்தியமாகும். பித்தத்தைப் பற்றி வருவன மார்ப்பள்ளம், கன்னப் பள்ளமாகும். இந்த இரண்டுள் முன்னது சாத்தியம், பின்னது அசாத்தியமாகும். கபத்தைப்பற்றி வருவன வாய், முழங்கால் மடிப்பாகும். இந்த இரண்டுள் முன்னது சாத்தியம், பின்னது அசாத்தியமாகும் என்று கொள்க.

இப்பி ரிக்கு கொங்கு, மல்லிகை, அல்லி, பூசினி, புன்னை, கற்றாழை இவைகளின் மலர் தாதுச்சுன்னம் (மகரந்தப் பொடி) தேன் இவைகள் இரண்டிரண்டு பங்கு எடுத்து ஒரு பங்கு இலிங்கப் பற்பம் சேர்த்து ஒன்பது நாள் மத்தித்து, பிறகு ஒன்பது நாள் நிழலில் உலர்த்தி களி பக்குவமாக்கிக் கொள்ளவும். இக்களியைத் தாமரை, குப்பைமேனி, சீந்தில், அறுகு சர்க்கரை, இஞ்சி ஆகிய துணை மருந்துகளில் கூறப்பட்ட வாத முதலிய ஆறு நோய்களுக்கும் முறையே கொடுக்க, நீங்கும் என்ப. இதை,

''மலையாள மானதொரு கொங்கு தேசத்திலுள மனிதர்
பெருவயிறுகுன்ம
மாருத புண் ரிரண மேகா னலப்பிணிகள் வகையாறு
வாத முதலா
உலையாமல் வாகடர்க் கசையாம லடர்மந்திர வுத்தியினு
மொழிவு ருமெ
லுட்டணப் பெருவெள்ள மிட்டணத்தடி யரியையுறு
மதகயத்தை நிகரா
யலையாமலே வடிவு குலையாமலே நலிமை யாகமலே வேதனை
அண்டாமலே வலிமை தண்டாமலே பிணிமை யாளமலே
காதர
மிலையாகு மாறுவகை சாத்திய வசாத்தியத் தெய்துமவை
யாவுமுண்மை
யிங்கிலிக பற்பத்தி னுங்கலவை மையினு லினமான
வனுபானமே.''

என்று மாபுராண ஆசிரியர் கூறியிருப்பதனாலும்,

''மெய்யப்பா மலையாளர் மெய்க்குள் ளாரு
வெப்பனலாங் குன்மமகா விரண மாரு
யெய்யப்பா லெனவாகி யரந்தை செய்யு
மிப்படியி லிப்படியாம் வகையே தென்றாற்
செய்யப்பா விங்குலிக பற்பத் தாலே
செம்மையுண்டா மிதையறியார் திருட்டு மாந்தர்
பொய்யப்பா வவர்நடத்தை யறியொ ணாது
புன்மையெலா மாறியப்பா னன்மை யாமே.''

என்று போகர் மூவாயிரத்தில் புகன்றிருப்பதினாலும் அறிக.

பற்பம் (வேறு)

''செய்யதொரு சாதிலிங்கக் கட்டி வாங்கிச்
*சிவமூலி வேர்ப்பட்டை யரைத்துக் கூட்டி
வெய்யதொரு குகைதனிலே தைத்துமூடி
விதமாகச் சந்துவாய்ச் சீலை செய்து
துய்யவே குக்குடத்தில் நீறிப் போகும்
சுகமாக நீற்றுப்பார் எடைபோகாது
உய்யவே நோயெல்லாந் தீர வென்றால்
உறப்பாக வனுபான மொன்று கேளே.''

* சிவமூலி—சிவனார் வேம்பு

"ஒன்றுதான் தேனிற் கொள்ள உறுதியாம் குன்ம வாயு
பண்டுள சந்நிவாதம் பாரிச வாயு சூலே
வென்றிடு மிரும லீளை யிளைப்புடன் விரைந்து போகும்
நன்றிது சுரமுந் தீரும் பலங்களு நாடா தோடும்
முன்றிடு மனுபா னங்கள் கண்டுகொள் ளுகந்தி டாயே."

குறிப்பு.—பற்பமென்பது ஈண்டு மெலிதலைக் குறிக்கும். வெளுத்தலன்று மருந்து கொடுக்க ஆரம்பிக்குமுன் மலத்தைக் கழிக்க வேண்டும்.

பத்தியம் : பாலும் சோறும். காரசாரம் கூடா.

அளவு : ஓர் அரிசி (65 மி. கிராம்) எடை வீதம், மூன்று முதல் ஐந்து நாள் வரை கொடுக்கவும்.

(வேறு)

எட்டிக் கொட்டையைக் கரிசாலைச் சாற்றில் ஊறவைத்து அரைத்து இலிங்கக் கட்டிக்குக் கவசித்துச் சீலை செய்து லகுபுட மிட்டெடுக்கவும்.

இலிங்கச் செந்தூரம்.

சுத்தி செய்த இலிங்கம் ஒரு பலத்திற்கு (35 கிராம்) ஒரு படி (1.3 லிட்) ஆற்றுத் தும்மட்டிச் சமூலச்சாறு சுருக்குக் கொடுத்து, கழுவிப் பொடித்துக் கொள்ளவும்.

அளவு : அரிசி (65 மி. கிரா.) யெடை.

துணை மருந்து: தேன்.

தீரும் நோய்கள் : குளிர் சுரம் வாத கபப் பிணிகள், மேக நோய்கள் முதலியனவாம்.

(வேறு)

சுத்தி செய்த இலிங்கம் ஒரு பலத்திற்கு (35 கிராம்) ஒரு படி (1.3 லிட்), வெள்ளைப்பூண்டுச் சாறு, ஒரு படி (1.3 லிட்) வெள் வேளை வேர்ப்பட்டை சாறு இவ்விரண்டையும் தனித் தனியாகச் சுருக்குக் கொடுத்துக் கழுவிப் பொடித்துக் கொள்ளவும்.

இதனை மேலே கண்டவாறு உபயோகிக்கவும்.

இலிங்கக்கட்டு.

ஒரு கட்டி இலிங்கத்தை முலைப்பாலில் ஊறப்போட்டு, பத்தாம் நாள் கழுவிப் பின்பு வெயிலில் உலர்த்தி, இலிங்கத்தின் எடைக்கு எடை கருப்பூரம், பளிங்குச் சாம்பிராணியும் எடுத்துக் கல்வத்தி

விட்டு மெழுகாம்படி அரைத்துச் சூடாக வழித்து, பத்துப் பங்காக்கி ஒரு பங்கைச் சீலையிலூட்டி, இலிங்கத்தை உருட்டி விளக்கில் கொளுத்தவும். ஆறிய பின் எடுத்துக் கரியைச் சுரண்டி, பிறகு மற்றைய ஒன்பது பாகங்களையும் தனித்தனியாய் முன் போலவே செய்து எடுக்கவும்.

இலிங்கக் கட்டைத் தேனில் கொடுக்க வாயுவும், திரிகடுகில் கொடுக்க சந்நி தோடம், பொல்லாத மாரடைப்பு, வாயு, மூர்ச்சை, பேதி, வயிறூதல் முதலியனவும், இஞ்சிச் சாற்றில் கொடுக்க சூலை, பித்தபாண்டு, விடபாகம், வயிற்றுவலி, சோகை ஆகியனவும், கொடிவேலிக் குடிநீரில் கொடுக்க மற்றைய பிணிகளும் நீங்குமென்க.

சுப்படரச பற்பம்.

இலிங்கத்திற்குச் சங்கத்திராவகம் விட்டு அரைத்து, பதங்கக் கருவியிலிட்டு முறைப்படி எரிக்கவும், இலிங்கம்; கீழ்ச்சட்டியிலும் மேற்சட்டியிலும் படிந்திருக்கும். அதைச் சேகரித்து முன் போலவே சங்கத்திராவகம் விட்டரைத்து, மேலுல் நான்கு முறை செய்யக் கீழ்ச்சட்டியில் இலிங்கம் நீறுகிவிடும். இதனை நல்லவெல்லத்தில் பணவெடை கொடுக்க பேதி, ஊழி, சோகை, காமாலை, பாண்டு, பெரு வயிறு, எண்வகைக் குன்மம், உதரவாயு, நாபியைப்பற்றிய சூலைகள், நீர்க்கட்டு, நீரடைப்பு, மலக்கட்டு, கிரகணி, மூலம், நாட்பட்ட சுரம், நடுக்கல், மேகவாயு, வாதசந்நி, கிரந்தி, கைகால் முடக்கல், அண்டவாயு, மூலவாயு முதலிய பிணிகள் நீங்குமென்க.

படிக இலிங்க செந்தூரம் (இலிங்கத்துவர்).

இலிங்கம் பலம் 1 (35 கிராம்), படிகாரம் பலம் 8 (280 கிராம்) இவைகளைத் தனித் தனியே நன்றாய்த் தூள் செய்து, இரண்டையும் கலந்து அரைக்கவும், கடுக்காய்பூ பலம் 1 (35 கிராம்), காட்டத்திப்பூ பலம் 3 (105 கிராம்), இவ்விரண்டிற்கும் அரைப்படி (650 மி. லிட்) நீர் விட்டு நாலிலொன்றாய்க் காய்ச்சி, இக்குடிநீரால் படிக இலிங்கப் பொடியை நன்றாய் அரைத்து எடுத்துக்கொள்ளவும்.

அளவு : மூன்று (390 மி. கிராம்) முதல் ஐந்துகுன்றி (650 மி. கிரா.) வரை நெய் அல்லது வெண்ணெயில் கொடுக்க சீதபேதி, இரத்த பேதி, பெரும்பாடு, ஊழி, சுரத்துடன் கூடிய பேதி முதலியன நீங்கும்.

சாதி சம்பீரக் குழம்பு.

"பாச னத்திலை யிரண்டு பாத வாலு கம்மதைத்
தேச னன்மு னீறதாக்கு தெள்ளு தரத மாம்மிரம்
வாச நன்மெய்ச் சம்பமாது வண்ண நீர்பெய பக்ஷமாய்ப்
பேச நீர்சேர் பதமதாக்கு பெரிய சாதி குழம்பிதே."

''வேந்தர் வானர் முதலினர்க்கு விள்ளு மிக்கு ழம்புசெய்
மாந்த பேதி வெப்பு மூர்ச்சை வமன பித்த தாகமும்
சாந்த விந்து தேக வெண்மை சாற்று மங்கி யின்மையும்
பாந்தள் வாயின் தேரை யென்னப் பாறு மிளகு கொள்
முனே.''

(பொ-ள்) ஒரு சட்டியில் 2½ வராகனெடை (10.5 கிராம்) கருப்பூரத்தைப் பொடித்துப்போட்டு அடுப்பிலேற்றி ஒரு பலம் (35 கிராம்) இலங்கத்தைத் தூள்செய்து 15 பலம் (525 கிராம்) எலுமிச்சம் பழச்சாற்றில் கலந்து வைத்து கொண்டு, மேற்படி கருப்பூரத்துக்குச் சுருக்குக்கொடுத்து, குழம்புப் பக்குவத்தில் எடுத்துக் கொள்ளவும்.

குறிப்பு : (1) கருப்பூரத்திற்கு பதில் பச்சைக் கருப்பூரத்தையும் உபயோகிப்பதுண்டு. (2) இதன் உபயோகத்தை இரண்டாவது செய்யுளில் கண்டுகொள்க.

### மேகப்புண்ணுக்கு இலிங்க ஆட்சி.

இலிங்கத்திற்கு முறைப்படி முசுமுசுக்கை உத்தாமணிச் சாறுகளால் சுருக்குக் கொடுத்துச் சுத்தி செய்து, தக்க அனுபானத்தில் உள்ளுக்குக் கொடுத்து, வெண்ணெயுடன் சேர்த்தரைத்து, மேகப்புண், குட்டம் முதலியவைகளுக்கு மேற்பூசி, சிகைக்காய் நீரினல் கழுவிவர நீங்கும்.

இதை,

''இங்குலிக மானே இலிங்க மாம்வாறு
இரதமும் ரசமுமே யேக மேயிவை
இரணப்புண் குட்டந் தீருந் திறத்தே.''

என்று தேரன் கரிசலில் புகன்றிருப்பதால் உணர்க.

### இலிங்கப்புகை.

சுத்தி செய்த இலிங்கம் பங்கு 1; உலர்த்தின வெண்ணொச்சி யிலை பங்கு 4 எடுத்து, இரண்டையும் நன்ருகத் தூள் செய்து, சீலையில் திரி செய்து புகை குடிக்கலாம். குழிப்புண், அழுகிய இரணம் முதலியவை இப் புகை பிடிப்பதால் நீங்கும்.

### இலிங்கத்திலிருந்து இரசமெடுக்கும் விதம்.

சித்திர மூலவேர்ப்பட்டை நான்குபங்கு எடுத்து இடித்து, இலிங்கத் தூள் ஒருபங்கு சேர்த்துப் பதங்கக் கருவியிலிட்டு முறைப்படி எரிக்க, இரசம் மேற்சட்டியில் ஒட்டிக் கொள்ளும். அதைச் சாக்கிரதையாகப் பிரித்து எடுத்து மயிர்க்குச்சியினல் சேகரித்துச் கொள்ளவும். இதற்கு இலிங்கரசம் என்பது பெயர்.

(வேறு)

முன்னளவுப்படியே மஞ்சள் தூளில் இலிங்கத்தூளைக் கலந்து, வர்த்தி போலச் சீலையிலிட்டுத் திரித்து, ஓர் அகலில் சுற்றி வைத்துக் கொளுத்தி, கீழிருந்து காற்றுப் புகுவதற்காம் இடம் விட்டு, ஒரு பெரிய சாலினை, அகலின் மேல் கவிழ்க்கவும். ஆறின பின் எடுக்க, இரசம் மேல்சட்டியில் படிந்து இருக்கும். சுரண்டிக் கொள்ளவும்.

இலிங்க நஞ்சுக் குறி குணம்.

வாயடி, உண்ணாக்கு, குரல்வளை, பெருங்குடல் முதலியன வெந்து பசும்புண்ணாகிப் பருத்திப்பூவைக் கசக்கி, வெயிலில் இட்டாற்போலிருக்கும். வாயில் காரம் படமுடியாது. உணவு, நீர் முதலியன அருந்துவதற்கும், பேசுவதற்கும், வருத்தத்தைக் கொடுக்கும். வாயில் கெட்ட நாற்றம் வீசி, சுவைகெட்டு, வயிற்றில் எரிச்சலையும் உண்டு பண்ணும். உமிழ்நீர் கெட்ட பனங்கள்ளைப் போலவும், காடித் தண்ணீரைப் போலவும் வெண்மையாகவும், குழம்பாகவும் காணப்படும்.

முறிவு.

சாதிக்காய், வால்மிளகு, செம்பருத்திவேர்ப்பட்டை, கற்கண்டு இவைகளைத் தனித்தனி ஒவ்வொரு வராகனெடை (4.2 கிராம்) எடுத்து, முறைப்படி குடிநீரிட்டு, இருவேளை ஒரு மண்டலம் அருந்திவர வேண்டுமென்ப.

பூரம்.

( ரசக் கற்பூரம்)

HYDRAGYRUM SUBCHLORIDE CALOMEL.

தொகைக் கூறப்பட்ட அறுபத்து நான்கு பாடாணங்களுள் காணப்படாதிருந்தும், பூரம் மருத்துவர்களால் பாடாண வகைகளுள் ஒன்றாகவே கருதப்படுகின்றன. இஃது இரசம் உப்பு இவைகளின் கூட்டினால் செய்ப்படுகின்ற சரக்காகும். இதன் செய்முறை கீழ் காணுமாறு கூறப்பட்டுள்ளது.

செய்முறை.

ஒரு பாண்டத்தில் 16 வராகனெடை (67.2 கிராம்) கந்தகம் வைத்து உருக்கி, 80 வராகனெடை (336 கிராம்) இரசம், சேர்த்து துழாவிக் கொண்டிருந்தால், கறுத்துத் தூளாகி விடும். பிறகு வேறொரு பாண்டத்தில் பாதிக்குச் செங்கல் பொடியைப் போட்டு, அதன்மேல் அரைப்படி (650 மி. லிட்.)

கறியுப்பை வைத்து, உப்பின் மேல் மேற்படி இரசகந்தியை வைத்து, சீலைமண் செய்து, 12 மணிநேரம் காடாக்கினியாய் எரித்து எடுத்துக் குளிர்ந்த பிறகு மேல்பாண்டத்தைச் சாக்கிரதையாய் நீக்கிப் பார்த்தால் பூரம் கட்டியாய்ப் படிந்திருக்கும்.

பூரத்திற்கு, உப்பு கார்ப்புச் சுவைகளும், வெப்ப வீரியமும், கார்ப்புப் பிரிவும் உண்டு. இதற்கு, கடுமை நோய்களைச் சமனம் செய்யக் கூடிய தன்மையும், பேதியை உண்டுபண்ணும் குணமும், பித்த நீரை அதிகப்படுத்தும் குணமும், உடல் தேற்றி, உமிழ் நீர் பெருக்கி, கிருமி நாசினி ஆகிய செய்கைகளும் உள. இதன் பொதுக்குணத்தைக் கீழ்க் காணும் செய்யுள் உணர்த்தும்.

'' இடைவாத சூலை யெரிசூலை குன்மந்
தொடைவாழை வாதமாஞ் சோணி—யிடையாதோ
வொக்குரச கர்ப்பூர மொன்றே யளவொடுநல்
இக்குவெல்லத் தேழுநா ளீ.''

பொ—ரை) நல்ல இரச கர்ப்பூரத்தை அளவுடன் கரும்பு வெல்லத்தில் ஏழுநாள் கொடுக்க, இடுப்பைப் பற்றிய சூலை, ஆங்காங்கு எரிச்சலைத் தருகின்ற சூலை, வாத குன்மம், தொடை வாழை, வாதரத்த நோய் முதலியன தீரும்.

மேற் கூறிய செய்யுள் சில நோய்களையே குறிப்பிடினும், பூரத் ரத சுரம், மஞ்சட் காமாலை, பித்த தோடம், சீதபேதி, நீர்க்கேவை, விரணசந்தி, ஆருத விரணங்கள், மேக வியாதிகள், கல்லீரல் வீக்கம், குழந்தைகளுக்குண்டாம் பேதி, செரியாமை, வாந்தி, பேதி, கிருமி நோய், கீல்வாதம், சொறி சிரங்கு, மலபந்தம் முதலியவைகட்கும், தலைவலி போன்ற மற்றைய நோய்களுக்கும் உபயோகிப்பதைப் பழக்கத்தில் காணலாம்.

இவற்றைக் கீழ்ச் செய்யுட்களால் உணர்க :

'' சசிவன்ன கருப்பூ ரத்தில் சாதித்த கயஞ்சு வாசம்
பசிகலி தாப சோபம் பவுத்திரம் பிளவை குஷ்டம்
வசிதரு கிராணி யோடு வளரதி சார மேகம்
இசிதரு மிசிவு சூலை யிவைபல ரோகம் போமே.''

'' திரண்டவா தங்குடல் வாதம் தீருஞ்சந் நிபதின் மூன்று
மருண்டே குத்து மரையாப்பு மண்டைச் சூலை கபாலவிடி
பரங்கிச் சூலை பற்கிரந்தி பக்கச் சூலை யிவை முதல்போம்
இருண்ட மேனி பொன்னிறமாம் இதுவே கற்பம்
இயம்பீரே.''

பூரத்திலுள்ள மலினங்களை நீக்குதற்கும், விடக்குறி குணங்களை உண்டு பண்ணுதிருத்தற்கும், அதிக வீரியத்தைக் கொடுத்தற்கும் இதனைச் சுத்தி செய்ய வேண்டும்.

### பூரசுத்தி.

கம்மாறு வெற்றிலை, மிளகு ஆகிய இரண்டையும் கால்பலம் (8.75 கிராம்) வீதம் நிறுத்தெடுத்துச் சிறிது நீர் விட்டு அரைத்து, கல்கத்தை ஒருபடி (1.3 லிட்.) நீரில் கலந்து, ஒரு பலம் (35 கிராம்) பூரத்தைச் சீலையில் முடிந்து துலாயந்திரமாய் நீரில் அமிழும்படி செய்து, சிறு தீயால் எரிக்க வேண்டும். நீர் முக்காற்பங்கு சுண்டிய பிறகு, பூரத்தை எடுத்து நீர்விட்டுக் கழுவி வெய்யிலில் உலர்த்தி எடுக்கச் சுத்தியாம்.

### (வேறு)

ஒரு பலம் (35 கிராம்) பூரத்திற்கு முலைப்பாலினால் மூன்று மணிநேரம் சுருக்குக் கொடுத்துப் பிறகு வெள்ளைப் பூண்டுத் தைலத்தினால் ஒன்பது மணி நேரம் சுருக்கிட்டு எடுத்துக் கொள்ளவும்.

இலேகியங்களில் சேர்க்கவேண்டிய பூரத்தை, முசுமுசுக்கைச் சாற்றினால் சுருக்கிட்டுக் கழுவவும்.

### பூர பற்பம்.

சுத்தி செய்த பூரத்தைக் கல்வத்திலிட்டு ஏழுநாள் நன்றாய் அரைத்துப் பிறகு சேகரித்துக் கொள்ளவும். இதுவே பூர பற்பமென்று கையாளப்படுகின்றது.

அளவு : அரை உளுந்தெடை (32 மி. கிராம்) யிலிருந்து மூன்று உளுந்தெடை (195 மி. கிராம்) வரை உபயோகிக்கலாம். இரண்டு உளுந்தொடை (130 மி. கிராம்) க்கு மேற்படக் கொடுத்தால் பேதியாகும்.

துணைமருந்து தீரும் நோய்களும் : கரும்பு வெல்லத்தில் ஏழு நாள் அருந்த, பொதுக் குணத்தின் கீழ்க் கூறப்பட்ட நோய்கள் நீங்கும்.

### பூரக்கட்டு.

ஒரு பலம் (35 கிராம்) பூரக்கட்டியை, முலைப்பாலிட்டுப் பத்துநாள் ஊறவைத்து உலர்த்தி எடுத்துக் கொள்ளவும். வெள்ளைப் பூண்டுத் தைலத்தினால், மேற்படி கட்டிக்கு மூன்று சாமம் (9 மணி) சுருக்குக் கொடுத்துச் சரண்டி, ஓர் ஓட்டில் வெடியுப்பு ஐந்துபலம் (715 கிராம்) பரப்பி, அதன்மேல் பூரக்கட்டியை வைத்து, மேலும் அவ்விதம் மூடி ஐந்து கோழி முட்டையை உடைத்து மேல் ஊற்றி, வாசலில் அடுப்பிட்டுக் கால் நாழிகை கமலம்போல் எரிக்க உப்புப் உருகி

நெருப்புப் பற்றும். அண்டத்தின் மகிமையால் உப்புப் புகையாது. குழம்பு போல உருகிக் கெட்டியாகும். ஓட்டினை இறக்கிக் குளிர்ந்த பின்பு உடைத்துப் பூரக்கட்டியை எடுத்துக்கொள்ளவும்.

தீரும் நோய் : தக்க அனுபானத்தில் கட்டினை உரைத்துக் கொடுக்க சந்நிசுரம், நாவறட்சி, மலவாத சந்நி நீங்கும்.

இலிங்கக் கட்டுடன் பூரக்கட்டையும் சேர்த்துக் கொடுக்கும் பழக்கம், வாதநோய் நீக்கத்திற்காகும்.

(வேறு)

சாம்பிராணி, கருப்பூரம் இரண்டையும் சமனாய்ச் சேர்த்தரைத்து, ஒரு பலம் (35 கிராம்) பூரக்கட்டியின் மேல் கவசமிட்டு, உலர்த்திக் கொளுத்தி எரித்த பிறகு, கவசத்தை நீக்கி விட்டுச் சரக்கை எடுத்துக் கொள்ளவும்.

(வேறு)

வெள்வங்கம், சவ்வீரம், பொட்டிலுப்பு சமவெடை கூட்டி அரைக்கச் செயநீராகும். இதைக் கொண்டு அப்பிரகத் தகட்டிலிட்ட பூரத்திற்குச் சுருக்குக் கொடுத்து, சரக்கை எருக்கம் வேருக்குள் வைத்துச் சீலை மண செய்து முழப்புடத்தில் வைத்து எரித்து எடுத்துக் கொள்ளவும்.

இரசக் கருப்பூரக் குளிகை.

முலைப்பாலில் மூன்றுநாள் ஊறின பூரம் ஐந்து வராகனெடை (21 கிராம்), முனை நீக்கிய வெள்ளைப்பூண்டு 20 வராகனெடை (84 கிராம்) மிளகு 30 வராகனெடை (126 கிராம்), வெற்றிலை 40 வராகனெடை (168 கிராம்) சேர்த்து, வெற்றிலைச் சாறு விட்டு ஐந்து சாமம் (15 மணி) அரைத்து, சுண்டைக்காய் போல் உருட்டி நிழலில் உலர்த்திக் கொள்ளவும்.

அளவு : ஒரு மாத்திரை இருவேளையாய் ஏழுநாள் அருந்தவும்.

பத்தியம் : உப்பு, புளி, நீக்கவும். ஒரு வேளை பசும்பால் சேர்த்துக் கொள்ளவும். ஏழுநாள் சென்ற பிறகு, வறுத்த உப்பு, துவரை கூட்டி, பதினைந்தாம் நாள் ஓமம் தேய்த்துக் தலைமுழுகிப் புளி கூட்டவும். பிறகு எண்ணெயிட்டு முழுகவும்.

தீரும் நோய் : வளிக்கிரந்தி, இலிங்கப்புற்று, சொறி, கிரந்தி, யோனிப்புற்று, குழிபட்ட விரணம், குழிக்கிரந்தி முதலியன.

(வேறு)

சுத்தி செய்த பூரம் அரைப்பலம் (17.5 கிராம்), இலவங்கம், ஏலம், வசம்பு, சீரகம், மாசிக்காய், அதிவிடையம் இவைகள் வகைக்குக் கால் பலம் (8.75 கிராம்) எடுத்துக் கொண்டு கல் வத்திலிட்டு, மாசிப்பத்திரி வேர்ச் சாறு, விட்டுணுகரந்தை

வேர்ச்சாறு இவை இரண்டையும் தனித் தனியாய் விட்டு, ஒவ்வொரு சாமம் (3 ம ணி) அரைத்துக் கொத்தமல்லி அளவு குளிகை செய்து, நிழலில் உலர்த்திச் செப்பில் பத்திரப் படுத் தவும் ஒரு மாத்திரையை மாந்தக் கஷாயத்தில் கொடுக்க, எல்லா வகைப்பட்ட மாந்த ரோகங்களும் தீரும்.

### பூரக் களிம்பு.

இரசகருப்பூரம் ஒரு பங்கு, சுண்ணும்பு அரைப் பங்கு, மெழுகு ஆறு பங்கு சேர்த்துக் கலந்து கொள்ளவும்.

உபயோகம் : இதைப் பறங்கிப் புண்ணுக்கு உபயோகிக்கவும்.

(வேறு)

இரசக்கருப்பூரம் ஒரு வராகனெடையை (4.2 கிராம்), ஐந்து வராகனெடை (21 கிராம்) பசு வெண்ணெயிலிட்டு மைபோல ரைத்து பூச விரணங்களெல்லாம் ஆறி விடும்.

### பூர எண்ணெய்.

இரசக்கருப்பூரம், ஏலரிசி, சுக்கு வகைக்கு ஒருபலம் (35 கிராம்) எடுத்துப் பொடித்துக்கொண்டு, பூரத்தையும், நன்ருய்ப் பொடித்து, சிற்ருமணக்கெண்ணெய் 40 பலம் (400 கிராம்) எடுத்து அதை சிறிது சிறிதாய்ப் பூரப் பொடியில் விட்டரைத்து. முடிவாய் மற்றைய இரண்டு சரக்கையும் கலந்து கொள்ளவும்

அளவு : அரை (14 மி.லிட்.) முதல் ஒரு அவுன்ஸ் (28 மி.லிட்.) மூன்று நாள் காலை மாத்திரம் கொடுக்கவும்.

பத்தியம் : உப்பு, புளி நீக்கவும்.

உபயோகம் : மலம் கழியும். குழந்தைகளின் மாந்த நோய் தீரும். மேக ரோகங்களும் குன்மமும் நீங்கும்.

இவ்வெண்ணெயுடன் வாய்விடங்கத்தூள் சேர்த்து உபயோ கிக்க கிருமி நீங்கும்.

### பூரப் பொடி.

கடுக்காய்த் தோல், காய்ச்சுக்கட்டி, மிர்தார்சிங்கி இவை களைத் தனித் தனி ஒவ்வொரு பலம் (35 கிராம்) எடுத்து, சமவெடை பூரம் சேர்த்துத் தூள் செய்து வைத்துக் கொள் ளவும்.

உபயோகம் : கொறுக்குக்கு (ஆண் குறியில் கிரந்தியினுல் உண்டாம் புண்) இத்தூளை மேலே தூவிவரக் குணமடையும். இப்பொடியை வட நூலார் பறங்கிக் கேசரி என்று கூறுவர்.

(வேறு)

வெள்ளைக் காய்ச்சுக்கட்டி, சூடன், மாசிக்காய், படிகாரம் ஒவ்வொரு பலம் (35 கிராம்) பூரம், மிர்தார்சிங்கி, ரசம் தனித்தனி அரைப்பலம் (17.5 கிராம்) இவற்றைச் சேர்த்து தூளாக்கி வைத்துக்கொள்ளவும்.

உபயோகம் : கொறுக்குக்கு மேலே தூவிவரக் குணமாம். புரைகளுக்குத் திரியாக வைக்கக் குணமாம். இதனை 'ஸரூரே மதானி' என்று யூனானி வைத்தியர் கூறுவர்.

பூர நஞ்சுக்குறி குணம்.

பூரம் விடமித்தால், முகத்தில் செவ்வாப்புப் போல முகப் பரு, வேர்க்குரு அதிகமாய் உண்டாதல், மார்பின் பள்ளத்தில் பருக்கட்டி புண்ணிரணம் காணுதல், இதைப் பக்கத்தில் வலி, வாயில் காரம் படாதபடி புண்ணாதல், பீசவீக்கம், உண்ணாக்கில் விரணம், பேதி, இரத்தக் கழிச்சல் முதலிய துர்க் குணங்களைக் காண்பிக்கும்.

முறிவு.

நிலப்பனை கிழங்கு, வல்லாரை வேர், பொன்னாங்காணி வேர், தண்டு பாரங்கி, ஆகிய இவை ஒவ்வொன்றும் தனித்தனிக் காற்பலம் (8.75 கிராம்) எடுத்து, ஒன்று சேர்த்துக் குடிநீரிட்டு, இருவேளை வீதம் இரண்டு அல்லது மூன்று வராம் பத்தியத் துடன் அருந்த நீங்கும்.

## வீரம்.

(சவ்வீரம்)

## HYDRARGYRUM PERCHLORIDE
## CORROSIVE SUBLIMATE.

இப்பொருள் மீனாஷிமைந்தன், கொச்சிவீரம், பூவிந்து, சேவகன், சரக்குச் சுண்ணம், பறங்கிப் பாஷாணம், சாரத்தின் சத்துரு, பறிமித்துரு, என்ற பல்வேறு பெயர்களினாலும் வழங்கப்படுகின்றன. பாஷாண வகைகள் அருபத்துநான் கனுள், வீரம் இயற்கையில் கிடைக்கக் கூடிய பாஷாணங் களுளொன்று. தற்காலம் கடைகளில் கிடைக்கக் கூடியதும், இரசம் சேர்ந்த வைப்புப் பாஷாண வகைளுளொன்றானதுமான சவ்வீரம், மன்மதன் சங்கார காலத்துச் சிவனின் நெற்றிக் கண்ணிலிருந்து தோன்றிய நெருப்புப் பொறி, சூதம் இருந்த இடத்தில் பட, அது கொழுந்து படர்ந்தாற்போல வளர்ந்து

வீரமாயிற்று என்றும், கொடிய நஞ்சென்றும், கைலாசத் தருகே சூழ்ந்த மலைகளில் உற்பத்தியாகின்ற இச் சரக்கை, வாயில் இரசமணியிட்டுச் சென்று, மான்தோலில் எடுத்துக் கட்டவேண்டுமென்றும் இதன் பிறப்பு வரலாறு கூறப்பட்டுள்ளது இவ்வரலாற்றை நோக்குமிடத்து, நமக்கு எளிதில் கடைகளில் கிடைப்பதும், நம்மால் கையாளப்பட்டு வருவதுமான இப் பொருள் இயற்கை வீரமன்று, சவ்வீரமே ஆகுமென்பதும், சவ்வீரத்தையை வீரமென்று வழங்கி வருகின்றோம் என்பதும் வெளிப்படை. இச்சவ்வீரத்தைக் களங்கு, செந்தூரம் ஆகிய வைகளைத் தாக்கக் கொடுப்பதினால் வீரமென்று வழங்கினர் போலும். இதனை முதற்குறையென்றும் கொள்ள இட மிருக்கின்றது. நிற்க, மேனாட்டார் சவ்வீரத்தை ஏழாம் நூற் றாண்டில் கண்டுபிடித்தனர். இதனைப் பதினெட்டாம் நூற் றாண்டின் மத்தியில்தான் கிரந்தி நோய்க்கு மருந்தாய் முதன் முதலில் பிரயோகித்தனர். நம் முன்னோர் அநேக நூற்றாண்டு களுக்கு முன்னதாகவே சவ்வீரத்தின் வைப்புமுறைகளையும், அதனைக் கொண்டு செய்யும் பலவகைப்பட்ட மருந்துகளையும், அவைகளைப் பலவகைப்பட்ட நோய்களுக்குப் பிரயோகம் செய்யும் முறைகளையும் கண்டுபிடித்து, மிக விளக்கமாய் கூறியிருக்கின் றனர். காய்தல் உவத்தலின்றி ஆராயின் இதனைத் தெள்ளிதின் உணரலாம்.

### சவ்வீரம் செய்முறை.

சவ்வீரம் செய்கின்ற முறைகள் பலவற்றுள் ஒன்றைக் கீழே கூறுவோம் :—

பூரம் 80, கறியுப்பு 80, துருசு 40, படிகாரம் 20, பொட் டிலுப்பு 20, பூநீறு 20, அன்னபேதி 10, நவச்சாரம் 5 பங்கு களாக இவைகளை நிறுத்தெடுத்து, அரைத்துக் குப்பியிலிட்டு, மூடி, சீலைமண் செய்து எரித்து, இறக்கிக் குளிர்ந்த பிறகு பார்வையிட்டால் மூடிமேல் அடையாய் வீரம் படிந்திருக்கும்.

### சவ்வீரச்சுத்தி.

இப்பொருள் கொடிய நஞ்சாதலின், அளவில் சிறிது அதிகப் படினும் நஞ்சாகிக் கொல்லும். இதனைத் தூய்மை செய்தே கையாளல் வேண்டும். இதனைத் தூய்மை செய்யும் முறைகள் சிலவற்றைக் கீழே கூறுவோம் :—

ஒரு பலம் (35 கிராம்) வீரக்கட்டிக்கு, மிளகு குடிநீர் விட்டு ஆறு மணி நேரம் சுருக்குக் கொடுத்துப் பிறகுமிளகுக் கல்கத்திற் குள் வைத்து, ஒரு பாண்டத்தில் அரைப்படி கறியுப்புடன் ஒரு பலம் (35 கிராம்) சூடனைக் கலந்து அதற்குள் மேற்படி வீரத்தைப் புதைத்துச் சில ம ரிநேரம் சிறு தீயால் எரித்து எடுப்பது.

(வேறு)

இளநீரில் சிறிது சூடனைக் கலந்து ஒரு பானையிலிட்டு, வீரத்தைத் துலாயந்திரமாக நீரில் படாமல் அரைமணி நேரம் எரித்து எடுத்தல்.

(வேறு)

படிகாரம் ஒரு பலம் (35 கிராம்), சூடன் ஒரு பலம் (35 கிராம்) இரண்டையும் பொடித்து வைத்துக் கொண்டு, வீரக் கட்டிக்கு கொஞ்சம் கொஞ்சமாய் கிராசம் கொடுத்து எடுத்தல். கிராசம் கொடுக்கும்பொழுது வீரம் புகையாவண்ணம் பார்த்துக் கொள்ளவேண்டும்.

(வேறு)

சவ்வீரத்தை ஒரு பீங்கானிலிட்டு, அது முழுகும்படி முலைப்பாலிட்டு, பால் முழுவதும் சுண்டும்வரை வெய்யிலில் உலர்த்தி யெடுத்துக் கொள்ளல். முலைப்பாலுக்குப் பதிலாய்ப் பசுவின்பாலை உபயோகிப்பது உண்டு.

(வேறு)

பாகற்காயைப் பிளந்து நடுவில் சவ்வீரக்கட்டியை வைத்துக் கயிற்றால் கட்டி, துலாயந்திரமாய் நீரில் முழுகாமல் இளநீர் அல்லது பழச்சாற்றில் ஒருமணி நேரம் எரித்து எடுக்க இவைகளும், இவை போன்ற பிறவும் ஆகும்.

சவ்வீரத்தின் சுவையும் செய்கையும்.

இதற்குக் கார்ப்பு உப்புச் சுவைகளும், வேப்ப வீரியமும், கார்ப்புப் பிரிவும் உண்டென்று கூறுவர் முன்னோர். இதற்கு, உடல்தேற்றி, கிருமிநாசினி, அழுகலகற்றி, புண்ணுண்டாக்கி ஆகிய செய்கைகள் உள்ளன.

இதன் பொதுப்பண்பினைக் கீழ்க்காணும் செய்யுளால் உணர்க :—

'' குன்மமொடு குட்டங் கொடியவனி லத்திரட்டு
துன்மாங் கிசப்பெருக்கஞ் சூலைநோய்—வன்மையுறு
காமியப்புண் ணுதியநோய் கண்டாற்சவ் வீரனெனுஞ்
சாமிநா மத்தையுச் சரி ''.

(பொ-ரை) சவ்வீரத்தின் நாமத்தை உச்சரித்தாலே குன்மம், குறைநோய், தீங்கை விளைவிக்கின்ற மகா வாத ரோகங்களின் கூட்டம், துர்மாமிச வளர்ச்சி, சூலைநோய்கள், வன்மைபொருந்திய பெண் போகத்தினால் விளைகின்ற (கொறுக்கு, அரையாப்பு, முதலிய) புண்கள் ஆகிய இவை நீங்கும்.

இதனைப் பலவகைப்பட்ட கண்ணோய்களுக்கும் உபயோகிக்கின்றனர். இவ்வுபயோகத்தினை விளக்கமாக கீழே கூறுவோம் :—

**சவ்வீரத்தின் அளவு.**

இதனை 1/32 உளுந்தெடை (2 மி. கிரா.) யிலிருந்து 1/16 உளுந்தெடை (4 மி.கிரா.) வரை உபயோகிக்கலாம். மேற்படின் நஞ்சாம்.

**உபயோகிக்கும் வகைகள்.**

வீரஜெயநீர் : வீரம் நவாச்சாரம் வகைக்கு 10 உளுந்தெடை (650 மி.கிரா) நிறுத்து, சுத்த நீர் முக்கால் புட்டியில் (500 மி. லிட்.) கலந்து கரைத்துக் கொள்ளவும். இதனை 30 துளிவரை கொடுக்கலாம். (பைஷச கல்பம்).

**மகாவீர மெழுகு.**

வீரம் பலம் ஒன்றுக்கு (35 கிராம்) ஒரு படி (1.3 லிட்), முருங்கைப் பட்டைச் சாற்றைச் சுருக்குக் கொடுத்து, அதனுடன் ஒரு பலம் (35 கிராம்) பூரத்தையும், ஒரு பலம் (35 கிராம்) பூடரத்தையும், ஒரு பலம் (35 கிராம்) இலிங்கத்தையும் சுத்தி செய்து சேர்த்து முக்கடுகு வகைக்குப் பலம் ஒன்று (35 கிராம்), சித்திர மூல வேர்ப்பட்டை பலம் ஆறு (210 கிராம்) ஆகமொத்தம் 12 பலத்தைச் (420 கிராம்) சேர்த்து, வேண்டிய அளவு தேனும் முலைப்பாலும் விட்டரைத்துக் கடைசியில் குங்குமப்பூ, கோரோசனம், பச்சைக் கருப்பூரம் வகைக்கு ஒரு வராகனெடை (4.2 கிராம்) சேர்த்து மெழுகாய் அரைத்துக் கொள்ளவும்.

அளவு : ஒன்று முதல் இரண்டு பயறளவு.

தீரும் நோய் : வாத நோய் மேக ரோகங்கள்

பத்தியம் : பாலும் சோறும்.

குறிப்பு : மகாவாதரோகங்களில் மலத்தைக் கழிக்க வேண்டியிருப்பின் வாளம் சேர்த்த ‘‘மலங்கழிக்கும் வீர மெழுகை’’ ஆள்வது பழக்கத்திலிருக்கிறது.

**வீரமாத்திரை (திரிதோட மாத்திரை) என்னும்
முக்குற்ற மாத்திரை.**

‘‘மிளகு நால் வீரமொன்று வீழ்த்தரையக் காய்நீர்
மிளகளவு ருண்டை விரவித்—தளராமல்
முத்தோட முண்டானல் மூட்டொன்று தக்கபடி
முத்தோட மாத்திரையா முன்.’’

(பொ-ள்) சுத்தி செய்த வீரம் ஒரு பங்கு, மிளகு நான்கு பங்கு இரண்டையும் மிளகுக் குடிநீரினால் நன்றாயரைத்து, மிளகளவாய் உருண்டை செய்து உலர்த்தி, தக்க அனுபானங்களில் கொடுத்து வர. முத்தோடங்களினால் உண்டாம் சுரம் முதலிய பிணிகள் நீங்குமென்பதாம்.

குறிப்பு.—மிளகுக் குடிநீருக்குப் பதிலாய் நொச்சி சுரசம் விட்டு அரைக்கின்ற பழக்கமும் இருக்கின்றது. இதனால், மூக்கு நீர்ப்பாய்ச்சல், குளிர் சுரம் முதலியன நீங்கும் என்று கூறுவர்.

சவ்வீர செந்தூரம்.

சவ்வீரம், வெங்காரம் இவ்விரண்டையும் சமவெடை எடுத்துப் பொடித்து, அகலிலிட்டு நெருப்பில் வாட்டச் செந்தூரமாம்.

தக்கவளவு அனுபானத்தில் கொடுக்க, சுரம், சன்னி, பிதற்றல், வலிமையுள்ள வாத நோய்கள், வாந்தி பேதி, சூலை, முதலிய பிணிகள் நீங்கும்.

சவ்வீரக்கட்டு.

ஓர் அகலில் ஒரு பலம் (35 கிராம்) கருப்பூரத்தை இட்டு, அதன்மேல் ஒரு பலம் (35 கிராம்) சவ்வீரத்தை இட்டு, மேலும் ஒரு பலம் (35 கிராம்) பொடித்த கருப்பூரத்தைக் கொட்டி மூடிச்சிலைசெய்து லகுபுடமிட்டெடுக்கக் கட்டாம்.

வீர ரச பற்பம்.

வீரம் பத்துப் பங்குடன், தண்டவாளப்பொடி இரண்டு பங்கு சேர்த்தரைக்க, இரசத்தை வீரம் கக்கிவிடும். மேற்படி ரசத்தை, ஒரு சட்டியில் உப்பிட்டு அதில் வைத்து, மேலே மூடிச் சீலை செய்து உலர்த்தி எரித்திட வெள்ளையாய் நீறும். சுரண்டி எடுத்துக் கொள்ளவும்.

அளவு : பணவெடை (488 மி. கிரா.) என்று கூறியிருப்பினும் நோய்வன்மைக்குத் தக்கபடி மிகவும் குறைந்த அளவில் வெல்லத்தில் அனுபானித்துக் கொடுக்கவேண்டும்.

வீரநீர் (வெளியாட்சிக்கு).

வீரம் கிரெயின் ஒன்றுக்கு (65 மி. கிரா.) எட்டு அவுன்ஸ் (240 மி. லிட்) நீர் விட்டுக் கலக்குவதே வீரநீர். இதைப் பூச்சிகளைக் கொல்லவும் விரணங்களைக் கழுவவும் உபயோகிக்கலாம்.

(வீரக்களிம்பு விரண முண்டாக்க.)

வீரம் ஒரு வராகனெடை (4.2 கிராம்) அரைப்பலம் (17.5 கிராம்) வெண்ணெயிலரைத்து, மேகத்தால் சொறி சொறியாகவும், புள்ளி புள்ளியாகவும், உலகத்தார் வண்டுக்கடி என்று சொல்லுமாறு காணப்படுவதுமான புண்களின்மேல் பூசவிரணமாகும்.

வீரக்குழம்பு (அமிர்தமெழுகு-அமிர்தவெண்ணெய்).

ஒரு கழஞ்சு 1¼ வராகனெடை (5.1 கிராம்) சவ்வீரத்தை பொடித்துக் கால்படி (350 கிராம்) வெண்ணெயிலிட்டு, நன்ருய் இரண்டு சாமம் (6 மணி) அரைத்து, நீரில் கழுவி எடுத்துக்கொள்ளவும். இதனை பிளவை, மார்பில் ஆணி புண் இவைகளுக்குச் சீலையிலிட்டுப் போட்டுவர குணமாகும். புண்களைப் புளியிலையிட்டுக் காய்ச்சி காடி நீரினுல் கழுவி வரவும். அன்றியும், இதனை வீக்கங்களுக்கும், கண்டமாலைக்கும், விரணங்களினுல் உண்டாம் நெறிகட்டுக்கும், அரையாப்பிற்கும் மேலே தடவிவருவதும் பழக்கத்தில் இருக்கின்றது. இதனை ஆசன வாயில் தடவி வர, வெளி மூலமும் ஆசனத்தில் உண்டாம் தாபிதமும் நீங்கும்.

குறிப்பு — வீரக்களிம்புக்கும், அமிர்த மெழுகுக்கும் உள்ள வேற்றுமை யாதெனில், பின்கூறப்பட்டதில் வெண்ணெய் அதிகமாய் இருப்பதினுல் விரணத்தை ஆற்றுகின்றது.

ஜெய வீர ரணசிங்கிக் கயிறு.

புது ஒட்டிலிட்டு நீர்சுண்டும்படி அடுப்பேற்றி எரித்து எடுத்த எண்ணெய், வெங்காரம் வராகனெடை 10 (42 கிராம்) வீரம் வராகனெடை 1 (4.2 கிராம்), உளுந்தின் மா வராகனெடை 2 (8.4 கிராம்) இவற்றைக் கல்வத்திலிட்டு, மழை நீர் விட்டு அரைத்து, மெழுகுப்பதத்தில் மாத்திரை யாக்கி, நிழலில் உலர்த்திக் கொள்ளவும், நாளாவுல் மாத்திரையின் வெண்ணிறம் பழுப்பாகும் ; குற்றமில்லை.

அனுபானம் : சுத்த நீர் ஒன்றேயாம். இக்கயிற்றை ஓர் ஆண்டு பழகவைத்த பிறகே உபயோகித்தல் வேண்டும்.

உபயோகங்கள்.

இம்மாத்திரையை இழைத்துப் பொட்டுப் போலத் தடவி வர, விரணங்கள் படர்தாமரை, அரிகிரந்தி, சொறி கிரந்தி, பருக்கள், பக்கப் பிளவை, இராஜ பிளவை, உச்சிப் பிளவை, இலிங்கப்புற்று, கண்டமாலை, அழுகண்ணி, கடி, மேகவிரணம், ஆசனக் கிரந்தி, புண்களின் மேலுள்ள கொழுமை முதலியன தீர்வனவாம்,.

இதனால் தீரும் கண் நோய்களாவன : இமைப்பரு, பருமுலை, விரண சுக்கிரன், குந்தம், படலம், சொறிப்பில்லம், நீர்ப்பில்லம், கழலை குவளை, விரைப்பு, கண் சூடு, இமைத் தடிப்பு, இமைச்சிவப்பு, பார்வையை மறைக்கின்ற விரணம், கரையாத பூ முதலியன.

வீர நஞ்சுக் குறிகுணம்.

இஃது இரத்தத்தில் விரைவில் கலந்து விடத்தை விரைவில் விளைவிக்கும். இதனால், களிம்புச் சுவையும், வாய் நீருறல், வாய் தொண்டை, ஆமாசயம், இவை வீங்கிப் புண்ணாதல். வாந்தி, பேதி, இரத்த பேதி, எச்சில் விழுங்கவொட்டாமற்படி தொண்டை நோதல், முகம் வீங்கல், தோல் வெடித்துச் சிலை நீர் வடிதல், பக்கவலி, தாகம், விக்கல், மயக்கம், மூர்ச்சை, வலி முதலியனவும் உண்டாம். அன்றியும் மரணமுண்டாம்.

முரிவு.

முறையாகச் சவ்வீர மொய்குழலாய் கொண்டால்
சிறுநெருஞ்சிற் சாறுண்ணத் தீரும்—அறையக்கேள்
நீலிவே ராகுமே நெய்ச்சட்டிச் சாறுமே
பாலி தென்னங் கள்ளும் பகர்.

(பொ-ள்) சிறு நெருஞ்சிற்சாறு, நீலிவேர்ப்பட்டைக் கல்கம், நெய்ச் சட்டிக் கீரைச்சாறு, தென்னங்கள் இவை களிலொன்றை நஞ்சின்வன்மைக்குத் தக்கவளவில் நஞ்சு முரியுமட்டும் கொடுக்க வேண்டுமென்பதாம்.

நிற்க, கோழிமுட்டை வெண்கருவைத் தண்ணீர் அல்லது பாலுடன் கலந்து அடிக்கடி கொடுத்து வந்தாலும், இளநீர், அருந்தினாலும் வீரத்தின் நஞ்சு நீங்குமென்ப. இதனை,

" அண்டத்தின் வெண்கருவை யாவின்பா லிற்கலந்
துண்டுவர வீர னுரமகலுங்—கண்டரிவாய்
ஏணற்கொடியே யிளநீ ரருந்திடுனு
மாணப்பெருமை வழுத்து. ;;

என்ற கருவூரார் தண்டகச்சய்யுளால் உணர்க .

# III. பாடாணங்கள்.

## அஞ்சனக்கல்.

## LUMBI SULPHURATUM SULPHAIDE OF LEAD-

இது, நீலாஞ்சனம், கருமாக்கல், கருநிமிளை என்னும் வேறு பெயர்களினாலும் வழங்கப்படுகின்றது. இப்பொருள் விசயநகரத்திலும் பஞ்சாப்பிலும் கிடைக்கின்றது; வெள்ளை யும், நீலமும் கலந்த நிறமுடையது, படைபடையாயிருக்கும், எளிதில் ஒடியும்; எரித்தால் உருகும்; அதிகத் தீப்பட்டால் பறந்துபோகும்; நீரில் கரையாது; இதனை அரைக்கக் கறுப்பு நிறமாயிருக்கும். இதை, வட இந்தியாவில் உள்ள பெண்கள், கண் இமையிலும், கண் புருவத்திலும் மையாகத் தீட்டிக் கொள்ளுகின்றார்கள். இது, சூரிய வெப்பம் கண்களில் தாக் காதபடி பாதுகாப்பதாகவும், வனப்பை உண்டுபண்ணுவதாக வும் கருதப்படுகிறது. இதனைச் சாதாரணமாய் உள்ளுக்குக் கொடுப்பதில்லை. குதிரைகளுக்குப் பலத்தை உண்டுபண்ணு வதற்காகக் கொடுப்பதுண்டு.

நிற்க, இதில் ஆறு வகைகள் உண்டெனக் கூறப்பட் டுள்ளது: 1, சுரோதாஞ்சனம், 2. நீலாஞ்சனம், 3. புஷ் பாஞ்சனம், 4. சவ்வீராஞ்சனம், 5. ரசாஞ்சனம், 6. ரக் தாஞ்சனம். இவற்றுள் சுரோதாஞ்சனம் புற்றின் மீது உண் டாகும் காளான் போன்ற உருவத்தைப் பெற்று, கொஞ்சம் கறுப்பு நிறமுடையதாய்க் காவிக்கல்லைப்போன்று இருக்கு மென்றும், சவ்வீராஞ்சனம், வெண்மையொடுங்கூடிய புகை நிறத்துடன் இருக்குமென்றும், இவை இரண்டையும் திரிபலைக் குடிநீர் கரிசாலைச் சாறு இவைகளில் வேகவைக்கச் சுத்தி யாகும் என்றும் கூறப்பட்டிருக்கிறது. நீலாஞ்சனத்தைத் தவிர மற்றைய ஐந்தும் கிடைப்பதில்லை. இவ்வைந்திற்குப் பதிலாய்க் கூட்டு மருந்துகளில், மரமஞ்சள் குடிநீரில் சம பாகம் வெள்ளாட்டுப்பால் சேர்த்து நன்றாய்க் காய்ச்சிக் குழம்புப் பக்குவத்தில் எடுத்துச் சேர்க்கின்றனர். இதனைத் "தாரு ஹரித்திரா ரசக்கிரியா" என்று வட நூலார் கூறுவர்.

நீலாஞ்சனத்திற்கு உரமூண்டாக்கி, வெப்பகற்றி, சமன காரி, வாந்தி உண்டாக்கி, வியர்வை பெருக்கி ஆகிய செய் கைகள் உள. இதன் பொதுக்குணத்தைக் கீழ்ச் செய்யுட் களால் அறிக.

> சந்நிகரம் மேகம் க்ஷயதாகம் நேத்திரநோய்
> வன்னிரச வேகம் மறைவதன்றி—மன்னுடலம்
> விஞ்சு குளிர்ச்சியோடு வீறழகு காந்தியுமாம்
> அஞ்சனக் கல்லுக் கறி."

* Sauvirajanam is obtained from the mountains of Souvira, a country along the hindus where its derives it name.

(வேறு)

''வாரிருக்கும் பூண்முலையாய் வாய்த்தநீ லாஞ்சனத்தால்
நீருறுத்துங் கண்ணோய் நிலைகெடுங்காண்—பாரினிலே
எல்லாச் சுரமும் இரத்த பித்த தோஷமுதற்
பொல்லா அறுபுண்ணும்போம்.''

(பொ-ள்) அஞ்சனக் கல்லால் சந்நி, சுரம், மேகம், கயம், தாகம், நீரை வடித்துக்கொண்டிருக்கின்ற கண்ணோய், வன்னியென்னும் இரச தோடம், இரத்த பித்தம், புண் முதலியன நீங்கும். சரீரத்திற்கு குளிர்ச்சியையும் அழகையும் ஒளியையும் கொடுக்கும் என்ப.

## இரசாஞ்சனத்தின் குணம்.

அரியர சாஞ்சனத்தால் அம்புவியில் உள்ள
வரிவிழி நோயெல்லாம் மறையும்—மருவி
வருகா மியவிரணம் மாறுமே புண்ணுறும்
ஒருமா மயிலே உரை.

(பொ-ள்) இரசாஞ்சனத்தினல் விழிநோய்கள், ஆண்குறிப் புண், புண்கள் நீங்கும் என்ப.

## நீலாஞ்சனத்தின் சுத்தி.

நீலாஞ்சனத்தைப் பொடித்துப் பழச்சாறுவிட்டு அரைத்து, ஒரு நாள் வெய்யிலில் வைத்தெடுக்கச் சுத்தியாம்.

(வேறு)

மாதுளம்பழச் சாற்றில் அஞ்சனக்கல்லை ஊறவைத்தெடுத்தாலும் சுத்தியாம்.

## உபயோகங்கள்.

சிறுநாகப்பூ அபின் இவைகளுடன் நீலாஞ்சனம் இரண்டு உளுந்தெடை (130 மி. கிரா.) கொடுக்க, அதிசாரம் கிரகணி நீங்கும்.

நீலாஞ்சனம், இந்துப்பு, கோஷ்டம், தகரை விதை, வாய் விளங்கம், கடுகு இவைகளைப் புளித்த நீரில் அரைத்து லேபமிட மண்டலகுட்டம், நமைச்சல் நீங்கும்.

சர்க்கரை, நெய் இரண்டிலும் கலந்து கொடுக்கப் பித்தம் சாந்தமாகும். சுக்கு, கடுக்காய், வெல்லம் இவற்றில் கொடுத்தால், கபரோகம் நீங்கும்.

நீலாஞ்சனம், சுத்த சுவர்ண பற்பம் இரண்டையும் கலந்து, வெண்ணெய், சருக்கரை, தேன் இவற்றின் அனுபானத்தோடு குன்றி எடை (130 மி. கிரா). அருந்தி வந்தால் க்ஷயம் நீங்கும்; பலமுண்டாகும்.

## நீலாஞ்சன பற்பம்.

அஞ்சனக்கல் பொடி 1 பங்கு, மான் கொம்புச் சீவல் 2 பங்கு இவைகளை ஒரு மூசையிலிட்டு இடைவிடாமல் கிளறி, புகை எழாவண்ணம் எரித்து, அடியில் நிற்பதைப் பொடித்து, ஒரு தக்க மூசையிலிட்டு, வெள்ளை நிறமாகும் வரை (2 மணி நேரம்) தீயைப் படிப்படியாய் அதிகரித்து எரித்து, அடியில் நிற்பதை மெல்லிய பொடியாகும்படி அரைத்துக்கொள்ள வேண்டியது.

அள்வு : 3 (195 மி. கிரா.) முதல் 6 உளுந்தெடை (390 மி. கிரா.) வரை.

இதைச் சுரம், கீல் வாதம், நாட்பட்ட தோலைப்பற்றிய நோய்கள் இவற்றிற்கு உபயோகிக்கலாம்.

## நீலாஞ்சன மை.

''கருங்கல் கண்டொவ் வொன்றுதொடி
கனகச் சகலை துருக்கமலர்
பரும்படி கவ்வெளை பனிமீனும்
பகர்முறை நிட்கம தொன்றேகால்.

வருமை யரைக்கா லஃதையரை
வளவில் வையிரு குரக்கத்தம்
தருவெண் சாரணை பெண்ணைமடல்
சாலைச் சேப்பூ வரையிரண்டே

சாம மரைதனிக் காயவிடு
தன்னை யளிக்கோ டன்னிலரை
ஆமஃ தேகுழம் பாயினெடு
வதுகண் ணிடுகண் பூபடலம்

நாம முத்துக் காசபிலம்
நன்றுய்த் தீருஞ் சின்னுளில்
நாம மஞ்சனக் கண்மையென
நாட்டி னும்ரெம் முனிவரரோ.''

(பொ-ள்) அஞ்சனக்கல் பமலம் 1, சீனுக் கற்கண்டு பலம் 1, பீதரோகணி வராகன் $1\frac{1}{4}$, குங்குமப்பூ வராகன் 5/8 படிக பற்பம் வராகன் 5/8, பச்சைக் கர்ப்பூரம் வராகன் $2\frac{1}{2}$ இவைகளைப் பொடித்து ஒன்று சேர்த்து, வில்வ இலைச்சாறு முசுமுசுக்கைச்சாறு, வெள்ளை சாட்டறணைச் சாறு, பனை மட்டைச் சாறு, கரிசாலைச் சாறு, நந்திப்பூச்சாறு, இவை களால் வகைக்கு இரண்டு சாமம் (6 மணி) அரைத்து உலர்த்தித் தேனில் அரைத்துக் குழம்புப் பக்குவத்தில் எடுத்துக் கொள்ளவும், இதனைக் கண்ணில் தீட்டிவரவரப் பூ, படலம், பித்த கண் காசம், பில்லம் முதலியன நீங்கும் என்ப.

## எலிப்பாடாணம்.

வேறு பெயர் : எலிக் கொல்லி.

எலிப்பாடாணத்தை உணவுப் பொருள்களுடன் கலந்து, எலிகளைக் கொல்லப் பயன்படுத்துகின்றனர். இதனைத் தனியாய் பயன்படுத்துவதில்லை. இஃது இராமபாணம் என்ற சுரத்திற்கு வழங்கும் மாத்திரையில் சேருகிறது. இதைக் கீழ்க்காணும் செய்யுள் குறிக்கும்.

''சுத்திசெய் வன்னிக் கர்ப்பம திரண்டுசுக
 சுத்தியெலி கொல்லி மூன்றுமா மருளூ
மத்த நீர் தனில் மூன்று நாளரைத் ததனை
 மணிசிறிய பயறளவி லமுத மதிலிடவே
சர்க்கரையி லிட்டிட வெதுப்புசுர மாறும்
 தனிப்பாலி லேகஞ்சி பத்தியமு மாகும்
உற்றதொழில் சுரராம பாணமிது வாகும்
 உண்டையது பழகியிட வோடும் வெகு சுரமே.''

(பொ-ரை) சுத்தி செய்யப்பட்ட இலிங்கம் இரண்டு பங்கும், சுத்தி செய்யப்பட்ட எலிக்கொல்லிப் பாடாணம் மூன்று பங்கும் எடுத்து, கல்வத்திலிட்டு மருள் ஊமத்தைச் சாறுவிட்டு மூன்று நாள் அரைத்துப் பயறளவு மாத்திரை செய்து உலர்த்தி, மாத்திரை பழகியபின் முலைப்பால், சர்க்கரை இவைகளுள் ஒன்றில் கொடுக்கச் சுரம் நீங்கும்.

பத்தியம்.—கஞ்சியும் பாலும் கூட்டிக் கொடுக்கவேண்டும்.

குறிப்பு.—வெள்ளைப் பாடாணத்திற்குக் கூறிய சுத்தி முறைகளே எலிக் கொல்லிப் பாடாணத்திற்கும் பொருந்தும் என்ப.

---

## கந்தகம்.

## SULPHUR;

இப்பொருள் காரிழையின் நாதம், பரை வீரியம், அதீதப் பிரகாசம், பீஜம், செல்விவிந்து, சக்தி, சத்திபீசம், செந்தூரத்தாதி, தனம், தேவியுரம், நாதம், நாற்றம், பரை நாதம், பொன்வர்ணி, இரச சுரோணிதம் என்ற வேறு பெயர்களினாலும் வழங்கப்படுகின்றது.

பாடாணங்கள் அறுபத்து நான்கில், பிறப்புக் கந்தகம், வைப்புக் கந்தகம், கோழித்தலைக் கெந்திவைப்பு, வாணகெந்தி வைப்பு என்று நான்கு பாடாணங்கள் கூறப்பட்டுள்ளன. இவற்றுள் முற்கூறப்பட்ட ஒன்று மலையில் பிறக்கின்ற சரக்காகும். பின்னே கூறப்பட்ட மூன்றும் பிறப்புக்

கந்தியினை முதன்மையாய்க்கொண்டு மற்றைய சரக்குகளின் உதவியால் செய்யப்படுகின்ற சரக்குகளாகும். இவற்றுள் கோழித்தலைக் கெந்தியின் நிறம் மாத்திரம், கோழித்தலைச் சூட்டின் நிறம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. மற்றும் கெந்தக பேதம் கூறுமிடத்து, நால்வகை கூறி நால்வகைச் சாதிக்கொப்பிட்டு அவைகளின் நிறமும் பலனும் கூறப்பட்டுள்ளன : 1. வெண்மை நிறத்தையுடையது; எல்லா நோய்களையும் தீர்க்கும். 2. கிளி மூக்குச் சிவப்பு நிறத்தையுடையது. நவலோகத்தை ஏமமாக்கும். 3. பொன்மை நிறமுடையது; குற்றமற்ற நெல்லிக்காய் போன்று இருக்கும்; சூதகத்தோடு உறவாகிச் சுத்தமாய் இருக்கும். 4. காகத்தின் நிறத்தையுடையது; அகப்படாது; அகப்பட்டால் நரை திரைகள் அற்றுப்போம். நிற்க, பதார்த்த குண சிந்தாமணியில் நெல்லிக்காய்க் கந்தகம், வாண கந்தகம் இவைகளின் குணங்கள் மாத்திரம் கூறப்பட்டிருக்கின்றன. ஆயினும், மருந்துகளில் கையாளப்படுவது நெல்லிக்காய்க் கந்தகமேயாகும் என்று உணர்க.

நேபாளம், காஷ்மீர், ஆப்கானிஸ்தானம், பர்மா முதலிய இடங்களில் கந்தகம் கிடைக்கின்றது. தாது தாவர ஜீவப் பொருள்களிலும் இது கலப்புற்றிருக்கின்றது.

மற்றும், ''சொல்லுமே தாம்பிரத்தைக் கெந்தி கொல்லும்'' ''கந்திக்கினமு மிரசந்தா னென்றுரே'' என்ற வடிகளால் இதன் பகையையும் நட்பையும் அறியலாம், ''செந்தூரந் தனக்காதி சிலை கெந்தி தாளகமும்'' என்ற அடியால், செந்தூரம் செய்வதற்குக் கந்தகம் உபயோகமாம் என்பதனையும் உணர்க.

## சுவை, செய்கை, குணம்.

இதனுடைய பெயரே இதற்கு மணமுண்டென்பதை விளக்கும். கந்தகம், கப்புச் சுவையையும் துவர்ப்புச் சுவையையும் உடையது. இதற்குப் பித்தநீரை அதிகப்படுத்தும் செய்கையும், மலமிளக்கிச் செய்கையும், உடல் தேற்றி வியர்வை பெருக்கி, கிருமிநாசனி ஆகிய செய்கைகளும் உண்டென்ப. சிறிய அளவில் கந்தகத்தை உள்ளுக்கு அருந்த அஃது உடம்பில சேர்ந்து வியர்வை, பால், சிறுநீர், இவற்றின் வாயிலாக வெளிப்படுவதைக் காணலாம். தோல், அசுகங்களின் சளி சவ்விலுள்ள கோளங்களின் சுரப்பை அதிகப்படுத்தும். விரேகியில் சிறப்பாகச் செயல்பட்டு சுரப்பை அதிகப்படுத்தும். கந்தகத்தை, அதிக அளவில் அருந்தப் பேதியை உண்டு பண்ணும்.

கீழ்ச் செய்யுட்களால் கந்தகங்களின் பொதுக் குணத்தை உணர்க.

### நெல்லிக்காய்க் கந்தகத்தின் குணம்.

''நெல்லிக்காய்க் கந்திக்கு நீள்பதினெண் குட்டமந்தம்
வல்லை கவிசைகுன்ம வாயுகண்ணோய்—பொல்லா
விடக்கடிவன் மேகநோய் வீறுசுரம் பேதி
திடக்கிரக ணீகபம்போந் தேர்.''

(பொ-ள்) நெல்லிக்காய்க் கந்தகத்தினால் பதினெண் குட்டம், மந்தம், கல்லீரல் வீக்கம், பெருவயிறு வகைகளுள் ஒன்றாகிய கவிசை, குன்மவாயு, கண்ணோய்கள். கொடுமையைச் செய்கின்ற விடக்கடிகள், நாட்பட்ட மேக நோய்கள், வாத சுரம், பேதி, நாட்பட்ட கிரகணி, கபம், முதலியன நீங்கும் என்ப.

### வாணக் கந்தகத்தின் குணம்.

''வாணக் குழாய்க்கந்தி வாசனையைக் கண்டவுடன்
காணக் கிருமி சொறி காணுவாம்—தோணும்
பெருவியா திக்கூட்டம் பேருமதனூலின்
மருவியா ழுங்கொடியே வாழ்த்து.''

(பொ-ள்) வாண மருந்துக்கான குழாய்க் கந்தகத்தின் வாசனையைக் கண்டவுடன் இரச இரத்த தாதுக்களில் பிறந்த கிருமிகள், சொறி, குறைநோய்க் கூட்டங்கள் நீங்குமென்ப. மற்றும் இதனை, நாட்பட்ட கீல் வாதம், சுவாசகாசம், மார டைப்பு, இருமல், கண்டமாலை, மூலம், குத நெகிழ்ச்சி போன்ற நோய்களுக்கும் உபயோகிப்பதுண்டு.

கந்தகம், தாய் மகவை வளர்ப்பது போல நோய்களின் வெப்பத்தை மாற்றி உடம்பைத் தேற்றுவிக்குமென்பதை,

''மாதர் மகவை வளர்ப்பதுபோ லேயுடம்பை
யாதரவா கத்தேற்றி யாக்கையினல்—மீதாக
மேவி யடர்நோயின் வெப்பத்தை மாற்றுதலாற்
றேவியுர மென்பதுடல் தேர்.''

என்னும் தேரன் பொருட் பண்பு நூலில் கூறப்பட்ட செய் யுளால் அறிக.

### சுத்தி முறைகள்.

புளியம்பழ வோட்டைப் பற்றியிருக்கும் கசிவை ஊற வைத் திறுத்த நீர், காடிநீர், புளித்தமோர், காளான் சாறு இவைகளைத் தனித்தனி ஆறுபலமாக (210 கிராம்) எடுத்துக் கலந்து, ஒரு சட்டியிலிட்டு அச்சட்டிக்குச் சீலையினல் வேடு கட்டி, அதன்மேல் ஒரு பலம் (35 கிராம்) கந்தகத்தை வைத்து மேல் மூடி, அடுப்பேற்றித் தீபாக்கினியால் இரண்டு சாமம் (6 மணி) எரிக்க, மலினம் மேல் தங்கி கந்தகம் சுத்தியாகித் தீழிறங்கும் என்ப.

(வேறு)

மருதோன்றிக் கல்கத்தைப் பசுவின் தயிரில் கலந்து, ஒரு சட்டியிலிட்டுச் சீலையால் வேடு கட்டி, மேல் கந்தகத்தை வைத்து மற்றொரு சட்டியால் மூடிச் சீலை செய்து, குழியில் புதைத்து, மேல் சட்டிமேல் ஐந்து வரட்டி கொண்டு புடமிட, கந்தகம் உருகிக் கீழிறங்கும். சேகரித்துக் கொள்ளவும். இவ்விதம் ஏழு முறை செய்யவும்.

(வேறு)

கந்தகத்தை ஒரு இரும்புக் கரண்டியிலிட்டுச் சிறிது பசு வெண்ணெய் இட்டு உருக்கிப் பசும்பாலில் சாய்க்கவும். இவ்விதம் முப்பது முறை செய்யக் கந்தகம் சுத்தியாம். ஒவ்வொரு முறையும் புதிய பாலையே உபயோகிக்க வேண்டும்.

(வேறு)

பாலுக்குப் பதில், வாழைக்கட்டை நீரில் கெந்தியைப் பத்து முறை உருக்கி உருக்கிச் சாய்த்தெடுக்கச் சுத்தியாம். இம் முறையால், கந்தகத்திலுள்ள எண்ணெய் நீங்குமென்றும் கூறுவர்.

அளவு

இதனை 10 (650 மி. கிரா.) முதல் 30 உளுந்தெடை (1.9 கிராம்) வரை கொடுக்கலாம். 1 (4.2) கிராம்) முதல் 3 வராகனெடை (12.6) கிராம்) கொடுக்க மலம் கழியும்.

பற்பம்

ஒரு பலம் (35 கிராம்) கந்தகத்திற்குக் கீழ்ப்பட்டியில் கண்ட சாறுகளால், முறைப்படி அரைத்து உலர்த்திச் சில் விட்டுச் சீலை செய்து புடமிட்டெடுக்கப் பற்பமாம்.

| சாற்றின் பெயர் | அளவு பலம் | அரைப்பு நாள் | வில்லை உலர்த்தும் நாள் | கவசம் உலர்த்தும் நாள் | புடம் வரட்டி |
|---|---|---|---|---|---|
| கொம்புப்பாகல் சமூலச் சாறு | 4 | 8 | 7 | 1 | 40 |
| இலுப்பைப்பூச் சாறு | 4 | 7 | 6 | 1 | 35 |
| கரிசலாங்கண்ணிச் சாறு | 3 | 6 | 5 | 1 | 30 |
| அறுகின்சமூலச் சாறு | 3 | 5 | 4 | 1 | 25 |
| வெண் குன்றிச் சமூலச் சாறு | 2 | 4 | 3 | 1 | 20 |
| நிலப்பனைச் சமூலச் சாறு | 2 | 3 | 2 | 1 | 15 |
| கரும்புல்லாஞ்சிச் சாறு | 1 | 2 | 1 | 1 | 10 |
| ஆவின் சமூலச் சாறு | 1 | 1 | ·1 | 0 | 5 |

பற்பததின் அளவு : துவரையில் எட்டில் ஒரு கூறு உத்தம மென்றும், இரண்டு கூறு மத்திமமென்றும், மூன்று கூறு அதமமென்றும், நான்கு கூறு அதமாதமமென்றும், ஐந்து கூறு அநந்தமென்றும், ஆறு கூறு அபரிமிதமென்றும், ஏழு கூறு ஒருவழித் துணிவென்றும், எட்டுக்கூறு முழுமைத் துணி வென்றும் கண்டு கொள்க.

புசிக்க ஏற்ற நிலம் : மருதம் ஆகுமென்றும், நெய்தல் ஆகாதென்றும், குறிஞ்சியும் முல்லையும் மத்திமமென்றும் கொள்க.

புசிக்க ஏற்ற திங்கள் : மார்கழி ஆகாதென்றமையின் மற்றையன ஆகுமென்று கொள்க.

மேற்படி பற்பத்தை தக்க அளவுடன், மேற்கூறப்பட்ட திங்களிலும் நிலத்திலும் அருந்த, முப்பிணிகளும் அவை களினுல் உண்டாம் மற்றைய நோய்களும் நீங்கும் என்ப. இதை,

''சத்தி பீசத் தாவளப் பொடிநிறை
யுத்தம மாதி யோரிரு நாற்பால்
வினைமதி யாகா விதிமற் றுளசில்
வாருணத் தினைமுதல் வரைவன மத்திமம்
வாருறு நூன்மைய வாய்த்திடும் வளிமுத
லாகிய நோய்க்கண மடைக்கலப் படுமுனம்
வேகிய மருத்துவர் வெருக்கொளச் சென்றது
நோய்ப்பகை யாளரும் நொடிந்தனர் சிதறி''

என்ற சங்கச் செய்யுளொன்றினுல் உணர்க.

### துணைமருந்தும் தீரும் நோய்களும்.

''சத்தியுர முக்கால் சனியரிவை வல்லைவெண்மை
சத்தியுர முக்கால் சனியரியை—சத்தியுர
மாரி கடுகலமா மஞ்சணெய்மோர் பாலனை யை
மாரி கடுகலமா வார்.''

(ப-ரை) சத்தி—வாதத்தில் கலப்பாகிய கப சம்பந்தப் பிடிப்பு, உரம்—மார்படைப்பு, முக்கால்—மேல் சுவாசம், சனி—சந்நி, அரி—சுரம், ஐ—கபவினை, வித்தியாசம், வல்லை —பெருவயிறு, வெண்மை—பாண்டு நோய். சத்தி—வாந்தி உரம்—திமிர்வாதம், உக்கு—இளைப்பு, ஆல்—நடுக்கல் நோய் சனி—தலையிடிப்பு, அரி—காசநோய், ஐ—பெரு வியாதி (முதலிய பிணிகளுக்கு), சத்தி உரம்—கெந்தக பற்பத்தை, மாரி—கள், கடுகு—கடுகு ரசம், அலம்—இஞ்சிச் சாறு, மா— மாமரச் சமூலச் சாறு, மஞ்சள்—பசுமஞ்சள் சமூலச் சாறு,

நெய்—பசு நெய், மோர் பசுமோர், பால்—பசும்பால், அளே—பசுத் தயிர், ஐ—பசுவெண்ணெய், மாரி—தண்ணீர், கடு—கடுக்காய் இரசம், கல்—செங்கழுநீர்ச் சமூலச் சாறு, மா—மாதுளைச் சமூலச் சாறு, வார்—வெந்நீர் (இவைகளில் முறையே கொடுக்க நீங்கும்).

பெருநோய்க்குக் கந்தக பற்பத்தை வெந்நீரில் அனுபானித்துக் கொடுக்க நீங்குமென்று மிகச் சிறப்பாய்க் கூறியிருத்தலைப் பின்காணும் செய்யுட்களால் உணர்க:—

''தேவி யுரமென் றுலகறியச் செப்பா நின்ற கெந்தகத்தூள்
சிறிது பூட்சி யெனுமரணிற் செரியா முன்னர்ப்
பிணிவருக்கப்
பாவி யுரமு மடலிகலும் பாறுமி தன்றிப் பெரிதான
பாழி வரைநே ராகுமுடல் பருவ முயற்சிப் பைங்கூழா
மேவி யுரமா முனிவர்குழா மிழற்ற நின்ற வுவமியமா
மெய்யிற் பெரிய பிணியரந்தை மெலிவாற் கைகால்
குறைவுவரா
வோவி யுரகத் தோலினிற்றீ தொழியு மழியா துயிர் நிலையே
யுண்மைப் படியே யாகுமிதை யுரையா ரேரனே
ருலகினிலே.''

(மாபுராணப் பெருநூல் வாகடம்.)

''பூமலி நறுந்தேன் வாய்மடுத் தளிக்குல
மிசைப்பா மிழற்று நசைத்தா மரைக்கோன்
விதிவழிச் சனிக்கு முதுமறை யுலகின்
மானிடப் பேய்கட் கேளைய வினைக்கணத்
ததிகமா பெருநோ யாவது முற்பவத்
தலவனைப் பதமுறித் தட்டயின் றமையா
னல்வினை யிப்பவ நண் ணுமே லாங்கு
வனமலி மறைமலர் மானங் குலியெலா
மனவென வீந்துமா மழுங்கியீ டின்றி
யரந்தைநோ யினத்தையே யாக்கியா யுளர்க்குமேல்
பரந்தப வியற்றியும் பனிப்பினை யளித்து
மருந்தனு பானமா மணிமந் திரவிதி
யாவுமெய் தாநெறி யாக்கிய புரிநனிப்
பாவியி லெறும்வலிப் பரங்கெடுத் திடுமா
லாகிய வினைக்கிணை யாவதொன் றின்றிப்
போகிய வாதனைப் புகரளச் செய்வான்
சத்திபீ சப்பொடி தனைப்பிர மாண
புகுத்ததி லோததி பொன்மை யினுடி
வகுத்த நுண்மைப் புடிவருமனு பான
நற்செய லான நவையறுத் தொளிரும்
வற்சர மின்றி மரபுளி வழாத
வுட்டணே தகமென வுரைகொடு மீறிய
வட்டிடு புனலினி லனுபா னித்தயை
யுண்டுமென் மதிப்பினி லோங்கிய கட்டளை
விண்டிடாக் கடைப்டி விதிவிலக் கறிந்து
நடப்பவர் புடவியி பின்னேறி யவரே.''

(சங்க மதுமலர்த் தண்டார்ப்பதுமர்.)

## பிரமையும் கந்தக பற்ப ஆட்சியும்.

பிரமை மூவகைப்படும்: 1. வாதப் பிரமை, 2. பித்தப் பிரமை, 3. கபப்பிரமை, இவற்றுள் வாதப் பிரமை சாத்தியம், பித்தப்பிரமை அசாத்தியம், கபப் பிரமை மாரணம் என்று கொள்க.

வாத சாத்தியப் பிரமைக்கு, இலவங்கத்தின் இரசம், இஞ்சிச்சாறு, தேன் இம் மூன்றையும் வகைக்குக் கால்பலம் (8.75 கிராம்) கூட்டி, அதில் கந்தகபற்பத்தை அளவுடன் சேர்த்து, உள்ளுக்குக் கொடுத்துப் பிறகு சிரசில் தடவி அனலில் காட்ட வேண்டும். இங்ஙனம் இச்சாபத்தியத்துடன் ஒன்பது நாட்கள் செய்த பிறகு சிகைக்காயிலை அரைப்பைத் தேய்த்து வெந்நீரில் முழுக்காட்ட வேண்டும் என்ப. இதனை,

''அரசனென வருகின்ற வாதவினை யுட்டணத் தண்மியது
விண்மணியைநே
ராகியதில் வெயிலைநிக ரானசுர மீறலா லையதி லுதித்த
வளவி
லொருசரச மதிலாகி வரன்முறைக ளில்லாம லொவ்வுவதி
லாமாற்கமும்
உணவுபசி மந்தமு மதிகமா கியதுயிலு மொப்புரவி
லாவமைதியுங்
தருமதனை யாமாத்தி யர்சாத்ய மென்பது முதாரணப்
படியாமரோ
தள்ருமுறை யஃதையெப் படியென்னி லாயுண்மறை
தன்னிலோ தியவண்மையே
யுரிசைபெறு மிஞ்சிரச மிலவங்க மதுமும்மையோதுமிவை
யனுபானமா
முண்மையிதை யேபூச னெற்றி முற் சிரமீதி லொன்பது
தினத்தினளவே

என்று ஆயுள்வாசிட்டப் பெருநூல் திரட்டுப் புகன்றிருப்பதால் அறிக.

பித்த அசாத்தியப் பிரமைக்குத் துளசிச்சாறு, சீரகம் [illegible]ஙள்கள் மூன்றையும் முன்போலவே கூட்டி, அதில் கந்தக பற்பத்தைச் சேர்த்து, மேற்கூறியபடியே பதினெட்டு நாள் ஆட்சி செய்து, முடிவில் பயற்றை அரைத்துத் தேய்த்துத் தலை முழுகி, பயற்றுக்கறி அருந்த வேண்டுமென்ப. இதனை,

''அமைச்சனென் றுரைக்கும் பயித்தியப் பிணியை
யார்கொலோ தவிர்ப்பவ ரடங்கா
தாயினு மொருசா ரறைகுதுங் கேண்மோ
வூனனம் விழிசிவப் பாகும்
நமைச்சலு நற்றுயி லிலாமையும் பசியும்
நாடொறுந் தாகமும் பயமும்
நகையுமோர் கோரமாம் வசனமு மருட்சி
நயனமும் நடையுமே லுண்டாம்

குமைக்குமப் பிணியினை யொழிப்பதற் குபதை
  கூறுதும் போசனக் குடாரி
கோவிந்தன் மாலையுடன் பனங்கள்ளுங்
  கூட்டிமே லுண்டதே பூசில்
நமைக்கொலு மியம னிஃதென்ன வோடு
  நலியெலா மக்கணத் தாங்கே
நாதரு மிதையே யோதினரிதனை
  நானுமிம் முறையுரைத் தனன்கேள் ''

என்ற மாபுராணப் பெருவாகடச் செய்யுளாலுணர்க.

கபமாரணப் பிரைமக்குப் பேரரத்தைச்சாறு, திப்பிலிச் சாறு, காய்ச்சின சாராயம் மூன்றையும் கந்தக பற்பத்திற்கு துணைமருந்தாய்க் கொண்டு முன்போலவே இருபத்தேழு நாள் ஆட்சி புரிந்து, இலுப்பைப் புண்ணாக்கால் இறுதியிற் கழுவ வேண்டும் என்ப. இதனை,

''கபப்பயித் தியத்தி னனலை யார்கொலோ கணிப்பா
ருபத்திர வத்தினை ராட்டமுங் காமனு மொழிக்கும்
விபத்தினு லிதையே மெய்யிற் பூசுதல் விதியே
சுபத்தையீ தலாதெ வையுமே லளிப்பது சுதமே.''

என்ற மாபுராணச் செய்யுளால் உணர்க.

நிற்க, பிரமை நோயில் கந்தகத்தை ஆட்சி புரியுங்கால் பால், சர்க்கரை, நெய், பெண் போகம், கள், மிளகாய் இவைகளைத் தள்ள வேண்டுமென்று அறிக.

### சர்விட தோடாரிக் குளிகை.

| | |
|---|---|
| கந்தக பற்பம் .. .. .. .. | 2 பங்கு |
| திரிகடுகு .. .. .. .. .. | வகைக்கு $\frac{1}{4}$ பங்கு |
| இலவம்பணிடை, கல்லால் பணிடை .. | வகைக்கு $\frac{1}{4}$ பங்கு |
| மான் கொம்பு .. .. .. | $\frac{1}{4}$ பங்கு |
| இலிங்கம் .. .. | $\frac{1}{4}$ பங்கு |

இவைகளை மத்தித்து 4 பங்குப் பசுநெய் விட்டு, 8நாள் அரைத்துப் பயிறளவு மாத்திரையாய்ச் செய்து நிழலில் உலர்த்திக் கொள்ளவும். இதனை,

"பாரப்பா தேவியென்னுங் கெந்திச் சுண்ணம்
பண்ணைவல்ல மாத்திரைகட் கெண்ண மெட்டே
யாரப்பா விதுபுரிவார் புரியி னன்மை
பாருமடா சந்தேக மணுகி டாது

சேரப்பா முக்கடுகு மான்கொம் பாதி
செகமறிய வாச்சியமுஞ் சேர்த்துக் கொண்டு

நேரப்பா வறிந்தரைத்து நன்மையாக
நிதியெனவே யாயுளர்முன் னிலேத்தி டாயே."

(போகர் 300)

என்ற செய்யுளால் உணர்க.

நாபி, வெள்ளைப் பாடாணம், அபினி இவைகளின் நஞ்சால், வாத பித்த, கப தேகிகட்குக் காணும் ஒன்பது வகை ரோகங்களும், பாம்புக் கடி நஞ்சு, பயப்பிணி (நீரில் விழுந்ததினுல் ஏற்க பட்ட அவஸ்தை), பெண் போகப் பிணி ஆகிய மூன்றுவகை நோய்களும் கூடிய பன்னிரெண்டிற்கும் சர்வவிடதோடாரி மாத்திரையை அனுபானித்துக் கொடுக்கவேண்டும் என்று கூறப்பட்டிருக்கிறது. இதனை,

'மூன்று நாலுவிட மென்ற தாகுமொரு மொத்தமான பிணி வற்குவா
லான்ற தானவளி யீன்ற தேகமிசை யான நாவிமுதன் மூன்றுமே
தோன்ற நாலுநலி நீண்டபோதுகுண தோடமான நவபேதமும்
ஏன்ற நாகமுதல் மூன்று தோடமிவை யேகமானதிவைர்யோகமே

என்ற தேவிகாலோத்திரத்தாழிசை விருத்தத்தினுலும்,

"பன்னிரு வகைபெரு முன்னிய பருவர
லினமிவை முதலென நனவுறு வளிமுத
லாகிய பருவர லண்மிய.. வுயிர்நிலே
யேகிய நாபியி னுலுறு விடமுறப்
பெறுமொரு நலிவரப் பெற்றதான் மேன்முறை
செறிவுறு மொன்பது தீவினை வகையொடு
பொறியர வுருவிடப் போக்குமேன் மீறிய
பெண்போ கப்பிணி நண்பயப் பிணியோடு
பன்னிரு வகையெனப் படருறு மிடரென
வந்தடர் தானேயு மறவரு மிறுதிசெய்
காலனிற் காந்துபு கனலெனக் கன்னல்
வேலென பற்பல வினையமா விளேத்துழி
நால்வகை யாணமு மேலணிக் காப்பும்
பவனனேக் கண்டுழி பஞ்சினி லிரியவாங்
கெய்திய மீளியை யொய்தினிற் கண்டுழிக்
கவன்ற நெஞ்சினர் கவன்றவா னனமென

பங்கயங் குவியப் பொங்கொளி கான்று
நெடுமா லுந்திக் கடிமலர் பூத்தெனப்
பின்னருங் கவினூறு முன்னிய கங்குலில்''

என்ற செய்யுளினாலும் உணர்க.

சர்வ விடதோரிக் குளிகையை, கீழ்க்காணுமாறு வடங்ளுக்கு அனுபானித்துக் கொடுத்து, அம்மருந்தையே மேலுக்கும் மேற்படி அனுபானப் பொருளில் கலந்துபூசக் குணமாம்.

குறிப்பு.— இம் மாத்திரை நெருப்பிற்கு நிற்கும் என்று கூறப்பட்டிருக்கிறது.

| விடத்தின் பெயர். | நோய்ப் பெயர். | துணை மருந்து. |
|---|---|---|
| நாபிவிடம் .. | வாததேசிக்கு—சமிகாகாலரோகம் .. | கடுகிலைச்சாறு. |
| | பித்ததேகிக்கு—சுவாலாகால ரோகம் .. | சித்திரமூலச் சமூலச்சாறு. |
| | கபதேகிக்கு—மாலினியாகாலரோகம் ... | கள்ளிச்சாறு |
| வெள்ளைப் பாடாணம் ... | வாததேகிக்கு—சண்டிகாகாலரோகம் ... | விழுதியிலைச்சாறு. |
| | பித்ததேகிக்கு—நமிகாகாலரோகம் ... | கற்றாழைச் சாறு |
| | கபதேகிக்கு—ஆரியாகாலரோகம் ... | துளசிச்சாறு. |
| அபினிவிடம் ... | வாததேகிக்கு—ரவுத்திராகாலரோகம் ... | துளசிச்சாறு. |
| | பித்ததேகிக்கு—காலாந்தகாகாலரோகம் ... | பாகவிலைச்சாறு. |
| | கபதேகிக்கு—துன்முகாகாலரோகம் .. | வசம்பிலைச்சாறு |
| பாம்புக்கடி .. | கோரதெரிசனகாலரோகம் .. | ஆவாரைச்சாறு |
| பெண்போகப் பிணி .. | விகாராகாலரோகம் .. | வெண்குன்றிச் சமூலச்சாறு. |
| பயப்பிணி .. | விகடாகால ரோகம் .. | நரிவிளாவிலைச் சாறு. |

பத்தியம் : புளி, பூசணை, மோர்; காடி, மதுபாணம் போகம் இவற்றை நீக்க வேண்டும் உப்புக் கூட்டிக் கொள்ளலாம்,

குறிப்பு : இங்குக் கூறப்பட்ட பிணிகளின் பெயர்கள் வேறு மருத்துவ நூற்களில் காணப்படவில்லை. இதனைத் தேரன் யமகவெண்பா விரிவுரையில் காண்க.

## பற்பம்
## (வேறு).

சுத்தி செய்த கந்தகம் ஐந்து பலத்திற்கு (175 கிராம்) தினமென்றுக்கு ஐந்து பலம் (175 கிராம்) வெள்ளை வெங்காயச்சாறு விட்டுப் பதினைந்து நாட்கள் அரைக்கவும். பிறகு இஞ்சிச்சாறு நாள் ஒன்றுக்கு ஐந்து பலமாக (175 கிராம்) விட்டு, 15 நாட்கள் அரைக்கவும். தினமும் புதிய சாற்றையே விடவேண்டும். பின்பு வில்லை செய்து நன்றாய் உலர்த்தி, மருதம்பட்டைச் சாம்பல், அல்லது புளியம் புறணிச் சாம்பல் ஒரு சட்டியில் அரைப்படி (1 லிட்) சாம்பலைக் கொட்டி, 12 மணி நேரம் தீபாக்கினி, கமலாக் கினியாய எரித்தெடுக்கப் பற்பமாம். இதனால், மேகம், குட்டம், சொறி சிரங்கு, சருமத்திமிர் முதலிய பிணிகள் நீங்கும்.

(வேறு)

''பரையினுர மாலூரச் சாற்ருல் பற்பமாகும்'' என்ற தேரன் கரிசல் அடியால், கந்தகம் வில்வ இலைச்சாற்ருல் மடியும் என்பதை உணரலாம்.

பற்பம் (வேறு).

''கோனென்ற கெந்தியுட பற்பங் கேளு
குளிரவொரு கட்டிக்கு அலரிப்பா லூட்டி
தானென்ற ரவிவைத்துப் புத்து மண்ணுல்
நன்ருகச் கவசமிட் டுமியில் வைத்து
வானென்ற அவிபுடமாய் யேழு போடு
மறுபடியும் பாலூட்டிக் கவசங் கட்டே.''

கட்டியதோர் கட்டிதனை சாண்புடத்திற் போடு.
கண்கொள்ளா வெள்ளையப்பா கெந்தி பற்பம்

(அகத்தியர் பலதிரட்டு, 47, 48)

கந்தக பற்பம்.

கரட்டுக் கந்தகத்திற்கு வெள்ளைக் காட்டாமணக்குப் பால்விட்டு ஒரு சாமம் சுருக்குக் கொடுத்துப் பிறகு இரண்டு நாள் மேற்படி பால் விட்டு அரைத்து வில்லை தட்டி உலர்த்தி, சில்லிட்டுச்சீலை செய்து, ஐந்து வரட்டி கொண்டு புடமிட்டெடுக்கப் பற்பமாம்.

அளவு : 1 (130 மி. கிரா.) முதல் 2 குன்றி (260 மி. கிராம்) மளவு

துணைமருந்து : தேன், நெய்.

தீரும் நோய் : மேகம், தோற் பிணிகள் முதலியன.

(வேறு)

ஒரு பலம் (35 கிராம்) சுத்தி செய்த கந்திக்கு, எருக்கம் பால் அரை அங்குல கனம் எல்லாப்புறமும் சமமாக ஏற்றிக் காயவைத்து மறுபடியும் எருக்கம்பால் பூசி, ஈரமாய் இருக்கும்பொழுது செந் நாயுருவிச் சாம்பலில் புரட்டி எடுத்து அரைப்படி (1லிட்.) செந் நாயுருவிச் சாம்பலைச் ஒரு குடுவையிலிட்டு, அதன் நடுவில் மேற் படி கந்தகத்தைப் புதைத்து, ஓடு கொண்டு வாய் மூடிச் சீலைமண் செய்து, காயவைத்து லகுபுடமிட்டுச் சாம்பலைச் சாக்கிரதையாய் நீக்கிப் பற்பத்தை எடுத்துக்கொள்ளவும்.

கந்தகச் செந்தூரம்.

தேவி யுரத்தைச் சிவப்பாக்க வாமணக்கு
தேவி யுரத்தை திருக்குவளை—தேவி
யருக்க முறைப்படியே யாறுஉமயா ருக்கி
யருக்க முறைப்படியே யாம்.''

(பொ-ள்) ஒரு பலம் (35 கிராம்) சுத்தி செய்த கந்தகத்திற்கு ஆமணக்கிலைச்சாறு, கர்ப்பூரவள்ளிச்சாறு, உத்தாமணிச்சாறு, தேவிசெங்கழு நீர்ச்சாறு, தேவதாரு இலைச்சாறு, எருக்கிலைச்சாறு இவை ஒவ்வொன்றிற்கும் ஐந்து நாள் வீதம் மொத்தம் 30 நாட்களுள் முறைப்படி அரைத்து, வில்லை செய்து உலர்த்தி, சில் லிட்டுச் சீலை செய்து, புடங்களிட்டெடுக்கச் செந்தூரமாம்.

இதனை,

'' கெந்திச் சிவப்பின் கிரமத் துறைகெட்டி
முந்திச் சிதமான மூலி வகையாறு
மிந்தச் சகத்தி லியற்றிப் புடஞ்செய
விந்தைக் கிணையாய் விளங்கு மொருதிக்கில்.''

என்ற திருமூலர் செய்யுளினால் அறியலாம்.

### கெந்தகச் செந்தூரத்திற்குத் துணைமருந்தும் தீரும் நோயும்.

| துணைமருந்து. | தீரும் நோய். |
|---|---|
| சர்க்கரை .. .. .. | தனுர்வாதம். |
| தண்ணீர் .. .. .. .. | சுரம். |
| தயிர் | பித்தப்பிணி. |
| தும்பைச்சாறு .. .. .. | விடசன்னிப்பிணி. |
| தாமரைச்சாறு .. .. .. | அரட்டல் நோய். |
| கள் | மிஞ்சின தோடப்பிணி. |
| துளசிச்சாறு .. .. .. | கப நோய். |
| தேன் .. .. .. .. | இளைப்பு நோய் |
| வெல்லம் .. .. .. | வாந்தி குன்மம். |
| நாணல் கரும்புச்சாறு | சுரதோட நோய். |
| நெய் .. .. .. | காசம். |

### கந்தகச் செந்தூரம் (வேறு).

சுத்தி செய்த கந்தி பலம் 10-க்கு (350 கிராம்) கற்றாழைச் சாறுவிட்டு ஏழு தினம் அரைத்து எடுத்துக்கொண்டு, அயத்தூள் பலம் 4-க்கு (140 கிராம்) புரசம் இலைச்சாறு விட்டு, ஏழு தினம்

அரைத்து சிறு வில்லையாகச் செய்து உலர்த்திக் குகையி விட்டு, அதன்மேல் மேற்படி கந்தியை வைத்து குகைக்குச் சில்லிட்டுச் சீலை ஏழு அழுத்தமாகச் செய்து உலர்த்தி உலை யிலிட்டுச் சிவக்க ஊதி ஆறவிட்டு எடுக்கச் செந்தூரமாம்.

அளவு : 2 (130 மி. கிராம்) முதல் 4 உளுந்தெடை (260 மி. கிராம்).

அனுபானம் : தேன், இஞ்சிச்சாறு.

தீரும் நோய் : காமாலை, சோபை, பாண்டு, பெருவயிறு, நீர்ப் பெரு வயிறு, கிரகணியில் வீக்கம், பேதி, அசீரணம் முதலியன வாகும்.

கந்தகச் செந்தூரம் (வேறு).

"தேவியுரஞ் சிவதை தழுதாழையினல் சிந்தூரமாகும்" என்ற தேரன் கரிசல் அடியால், கந்தகத்தைச் சிவதை, தழுதாழைகளின் உதவியால் செந்தூரம் செய்யலாம் என்று உணரக்கிடக்கின்றது.

கந்தக மெழுகு.

சுத்தி செய்த கந்தகத்திற்கு, வெள்ளை வெங்காயச் சாறுவிட்டு ஐந்து நாளரைத்துப் பிறகு இஞ்சிச்சாறு விட்டு ஐந்து நாள் அரைத்து, மெழுகு பதமானவுடன் குப்பியிலடைக்கவும்.

அளவு : 2 (260 மி. கிராம்) முதல் 3 குன்றி (390 மி. கிராம்) வரை.

தீரும் நோய் : வெகு மூத்திரம் போன்ற மேக நீர் ரோகங்கள், சொறி சிரங்கு, குட்டம், மூலம் முதலியன.

கந்தக மெழுகு (வேறு).

"நெகிழ்ந்த நெல்லிக் கந்தகத்தை நேரே நான்கு பலம்வாங்கி
உகந்தீ ருள்ளிச் சாற்றிட்டே யோர்முந் நாளுந் தானரைத்துப்
புகழ்முள் ளங்கிச் சாறிட்டுப் பின்னு மூன்று நாளரைக்கத்
தகர்ந்த மெழுகு தேனிற்கொள் தாறு கிரந்தி சூலையும்போம்".

(அக—600).

கந்தக மாத்திரை.

" கந்தி நாபி கறிசூதம் பூசுணை
தந்த வித்து சமனெடை தாக்கியே
யந்த மாகப் பழரசத் தாட்டியே
பந்த மாகப் பனிப்பய றுண்டையே.

உண்டை செய்து நிழலி லுலர்த்திப் பின்
கொண்டி டாயநு பானங் குறித்ததில்
பண்டை யான பழஞ்சுரம் பாறுமே
கண்டி டாயிது கந்திக் குளிகையே.''

(பொ-ள்) கந்தகம், நாபி, மிளகு, சூதம், பூசுணைவித்து இவைகளைச் சமனெடை கூட்டிப் பழச்சாற்றால் அரைத்து, பதத்தில் பச்சைப் பயறளவு மாத்திரை உருட்டி, நிழலில் உலர்த்திக் தக்க அனுபானத்தில் கொடுக்க நாட்பட்ட சுரம் நீங்கும்.

## கந்தகத் தயிலம்.

'' தயிலங்கேள் கந்தகமும் வெடியுப்புஞ் சிலையுந்
தருவாகப் பலமொன்று பொடிக்கும் போது
அயிலமெதூ நவாச்சாரம் வீரந் தானு
மப்பனே யரைக்கழஞ்சு கூடப் போட்டு
ஒயிலாகப் பலம்நாலு பசுவின் வெண்ணெய்
உத்தமனே கல்வத்தில் விட்டாட்டியே
தயிலமப்பா முன்போல சுடர்தயிலம் வாங்கித்
தருவாகப் பீங்கானிற் பதனம் பண்ணே.

பண்ணியே பணவெடைதா னந்தி சந்தி
பத்துநாள் சர்க்கரையிற் கொள்ளும்போது
உண்ணவே பத்தியமோ யில்லை கண்டாய்
உத்தமனே தீருகிற வியாதி கேளு,
நண்ணவே குஷ்டஞ்சொறி விரணம் வெள்ளை
நலமான கருமேகம் வாத வாய்வு
திண்ணவே கயரோகங் குன்மங் கூடத் தீருமடா.''

(பொ-ள்) கந்தகம், வெடிப்பு, மனோசிலை இவைகளை வகைக்குப் பலமாக (35 கிராம்) எடுத்து நிறுத்துப் பொடித்து, நவச்சாரம், வீரம் இவைகளை வகைக்கு அரைக் கழஞ்சு (2.5 கிராம்) கூட்டிப் பசுவெண்ணெய் 4 பலம் (140 கிராம்) சேர்த்து அரைத்துச் சுடர் தைலம் வாங்கவும்.

அளவு : அரைப் பணவெடை (488 மி. கிரா.) காலை மாலை இரு வேளை 10 நாள்.

துணை மருந்து : சருக்கரை.

தீரும் நோய் : குட்டம், சொறி, விரணம், வெள்ளை, கருமேகம், வாதம், வாயு, க்ஷயம், குன்மம் முதலியன.

குறிப்பு. —வெடியுப்பு, மனோசிலை இரண்டையும் சேர்த்து அரைத்தால் நெருப்புப் பிடித்து வெடிக்குமாதலினால் ஒன்றின் வாடை மற்றொன்றில் படாமல் தனித்தனியாக அரைத்து வெண்ணெயில் கலந்து கொள்ள வேண்டும்.

(அக. பரிபூரணம்—400.)

## கந்தக வடகம்,

கந்தகம், இரசம், சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய், நாபி இவை களைச் சமவெடை எடுத்து, வெண்செம்பையிலைச் சாற்றினாலும், ஆரையிலைச் சாற்றினாலும் தனித்தனியே 15 மணி நேரம் அரைத்து, குன்றியளவு மாத்திரை செய்து கொள்ளவும்.

அளவு : ஒரு மாத்திரை.

தீரும் நோய் : பாண்டு, க்ஷயம், மூலக்கிராணி முதலியன.

## கந்தக ரசாயனம்.

கந்தகம் பலம் 10 (350 கிராம்), அமுக்கிராங்கிழங்கு பலம் 5 (175 கிராம்), பறங்கிச்சக்கை பலம் 2 (70 கிராம்), கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், சுக்கு, திப்பிலி, மிளகு, வாய்விளங் கம், ஏலம், இலவங்கம், சந்தனம், கடலைப்பருப்பு, சேங்கொட்டை, சித்திரமூலவேர்ப்பட்டை வகைக்கு பலம் 1 (35 கிராம்), இவை களைத் தனித்தனியாய்ச் சூரணம் செய்து, பிறகு எல்லாவற்றை யும் ஒன்றுபடக் கலந்து, சர்க்கரை, தேன், நெய் சேர்க்கவும்.

அளவு : 10 (1.3 கிராம்) முதல் 15 குன்றி (1.கி. கிராம் வரை)

தீரும் நோய் : மேக நோய்கள், மூத்திரக் கிரிச்சரம், குட்டம், கிரகணி, மூலம், குன்மம், வாதம், வீக்கம் முதலியனவாகும்.

## கந்தகக் கட்டு.

கந்தகத்தை மயிலிறகின் உதவியினால் கட்டலாம் என்பதைக் கீழ்க் கண்ட தேரன் வெண்பாச் செய்யுளினால் உணர்க.

" இல்லாமற் றேவியுர மென்ப துலகத்தில்
உல்லாச மாகி யுலவுமே—சொல்லாண்மைச்
சாத்திரிகள் கைவரிசை தப்பாம லெப்போதும்
போத்தின் சிறையாற் புகை."

## கௌரி.

வேறு பெயர் : சிவகாமி, ஈஸ்வரி.

கௌரி பாடாணம், தாளகத்தின் சத்தென்றும், இயற்கையில் கிடைப்பது ஒருவகை என்றும், செயற்கையில் தாளகத்திலி ருந்து எடுப்பது மற்றொருவகை என்றும் கூறப்பட்டுள்ளது. மற் றும், இதன் நிறவேற்றுமையைக் கொண்டு சிவப்பு, மஞ்சள், வெண்மை என்று மூவகையாகவும் பிரிப்பர்.

தாளகத்திற்கு விளக்கெண்ணெய், எலுமிச்சம் பழச்சாறு இவைகளை விட்டுத் தனித்தனியாய் அரைத்துக் குப்பியிலிட்டு, வாலுகா யந்திரத்தில் வைத்து எரிக்க, சிவப்பு கௌரி பாடாணம் தாளகத்தின் சத்தாக வெளிப்படும் என்று சொல்லப்படுகிறது. கௌரி பாடாண சத்து, வெண்மையாய் இருக்கும் என்றும், முத்தோடத்தை நீக்கும் என்றும், இரசத்தைக் கட்டுவதற்கும் வீரியத்தை அதிகப்படுத்துவதற்கும் பயன்படும் என்றும் பிற நூலர் கூறுவர்.

சுத்தி.

ஒரு பலம் (35 கிராம்) கௌரி பாஷாணத்தை முலைப்பாலில் மூன்று நாள் ஊற வைத்தெடுத்து, அகலிலிட்டு அடுப்பேற்றிக் கொட்டைக் கரந்தைச் சாற்றால் ஆறு மணி நேரம் சுருக்குக் கொடுத்தெடுக்கச் சுத்தியாம்.

(வேறு)

ஒரு படி (1.3 லிட்டர்) அமுரியில் அரைப்படி (650 மிலி.) எலுமிச்சம் பழச்சாறு கலந்து. அதில் வெடியுப்பு, படிகாரம், சோற்றுப்பு இவைகளை வகைக்கு ஒரு பலம் (35 கிராம்) கூட்டி, இதை ஐந்து பலம் (175 கிராம்) கவுரிக்குச் சுருக்குக் கொடுத்து (எடை குறையாமல் பார்த்துக் கொள்ளவும்). பிறகு வெடியுப்பு, படிகாரம், சோற்றுப்பு இவை வகைக்கு ஒரு பலம் (35 கிராம்)எடுத்து, அமுரி, பழரசம் கலந்த நீரால் அரைத்து, கவுரிப் பாஷாணக் கட்டிக்குக் கவசம் கட்டி, கரி நெருப்பிட்ட கொம்முட்டி அடுப்பின் மீது அனலிட்டு, அதன்மீது கவசித்த கௌரி பாடாணத்தை வைத்துப் வரட்டிப் புகையாமல் கவசம் வறண்டபின் எடுத்து, கவசத்தைச் சுத்தத் துணியால் துடைத்து முலைப்பாலில் ஊற வைத்துக்கழுவி எடுத்துக்கொள்ளச் சுத்தியாம்.

(வேறு)

பன்றி நெய்யில் ஒரு சாமம் சுருக்குக் கொடுக்கச் சுத்தியாம்.

(வேறு)

கௌரி பாடாணக் கட்டிக்குப் பிரமதண்டிப் பால் விட்டுச் சுருக்குக் கொடுத்தெடுக்கச் சுத்தியாம்.

(வேறு)

கௌரி பாடாணத்தை அவுரி இலைச்சாறு, பாகற்காய்ச் சாறு இவைகள் ஒவ்வொன்றிலும் மும்மூன்று நாள் ஊறவைத்து எடுக்கச் சுத்தியாம்.

செய்கை : வெப்பகற்றி, முறை வெப்பகற்றி, வாதமகற்றி

## பொதுக்குணம்.

'' அவுரியோடு பாகலிவை யாற்சுத்தி செய்த
கவுரிபா ஷாணத்தைக் கண்டால்—சவுரியஞ்செய்
வாதநோய் மந்தமொடு வந்த சுரங்களெல்லாம்
காதிவிழுந் தோடுமெனக் காண்.''

(பொ-ள்) அவுரிச்சாறு, பாகற்சாறு இவைகளில் சுத்தி செய்த கவுரி பாடாணத்தால் வாதநோய், அலசம், சுரங்கள் நீங்கும் என்ப.

பொன்னிறமுள்ள கௌரி பாடாணம், வெள்ளைப் பாடாணத் தின்குணத்தில் காற்பங்கு உடையது. கபம், சன்னிபாதம், வாத நோய், சொறி, கடிவிடம், திரிதோடம், பல விடங்கள், உதரம், எண்வகைச் சூலை முதலிய நோய்களைப் போக்கும். இதனை,

''பொன்னிறந் தானுகுங் கௌரிபா ஷாணம்
பொருந்துமந்த வெண்மைக்குப் பாதிக்குப் பாதி
தன்னரு மைக்குண முண்டாம் வீயும்சீ
தச்சன்னி பாதத்தை யுயர்வாத ரோகத்தை
வண்ணமா கியசொறியைக் கடிவிஷ ரோகத்தை
மருவுதிரி தோஷத்தை வளர்தருபல் விஷத்தை
முன்னராகப் புகன்றவுதர ரோகத்தை யெண்வகைச்
சூலையை யகற்று மென்றனர் பாவலரே''.

என்ற செய்யுளால் உணரலாம்.

குறிப்பு : கௌரி பாடாணத்தைக் கொண்டு செய்யப்படும் பற்ப செந்தூர முறைகள் கிடைக்கவில்லை.

### கௌரி பாடாண மாத்திரை.

(சர்வசுரக் குளிகை).

கௌரி ஒரு பலம் (35 கிராம்) எடுத்து, முலைப்பாலில் மூன்று நாள் ஊறப் போட்டெடுத்து ஒட்டி லிட்டு, முலைப்பாலால் நான்கு சாமம் (12 மணி) சுருக்குக் கொடுத்தெடுக்கச் சுத்தியாம். தாளகம் ஒரு பலம் (35 கிராம்) எடுத்துச் சுண்ணாம்புக்குள் வைத்து, சுத்தநீர் ஊற்றித் தாளித்து எடுக்கவும். இவ்விதம் ஏழு முறை செய்யத் தாளகம் சுத்தியாம். இந்த இரண்டு சரக்கையும் ஒன்ருய்க் கல்வத்திலிட்டு, முலைப்பால் விட்டு நான்கு சாமம் (12 மணி) அரைத்து, உளுந்தளவு (65 மி. கிரா.) மாத்திரை செய்து நிழலில் உலர்த்திப் பதனம் பண்ணவும்.

அளவு : ஒரு மாத்திரை, காலை மாலை மூன்று நாள்.

தீரும் நோய் : பித்தம், சுரம், வாதசுரம், பித்தசுரம், குளிர், ஐய சுரம், மாறல் சுரம் முதலியன

பத்தியம் : புளி, புகை நீக்கவும். துவரை, கத்திரிப்பிஞ்சு ஆகும்.

மருந்தருந்துங்கால் அரோசகம் வந்தாலும் பத்தியம் தவறினாலும் மிளகைக் குடிநீர் பண்ணிக் கொடுக்க மீளும்.

(அக. பரிபூரணம்—400.)

## மாத்திரை (வேறு).

சுத்தி செய்த கௌரி பாடாணம் ஒரு பலம் (35 கிராம்), இலிங்கம் ஆறு வராகனெடை (25.2 கிராம்) எடுத்துக் கல்வத்திலிட்டு, எலுமிச்சம் பழச்சாறு, முலைப்பால், இவைகளால் தனித்தனியே 12 மணி நேரம் அரைத்துக் கேழ்வரகு போன்ற மாத்திரைகள் உருட்டி, நிழலில் உலர்த்திப் பதனம் பண்ணவும்.

ஓராண்டு பழகவைத்துப் பிறகு பயன் டுத்தவும்.

அளவு: ஒரு நோயாளிக்கு ஆறு மாத்திரைக்கு மேல் கொடுக்கக் கூடாது.

துணை மருந்து: இஞ்சிச்சாறு, தேன், முலைப்பால், பழச்சாறு

மருந்தருந்தும் காலத்து விடமிக்காதிருததற்கு நீலிவேர்ப் பட்டை மிளகு, சிறுகீரை வேர் இவைகளைக் கொண்டு செய்யப் பட்ட குடிநீரையும் அருந்தி வரவேண்டும்.

## கௌரி மெழுகு.

கௌரி பாடாணம் ஒரு பலம் (35 கிராம்) எடுத்து, கால்படி (325 மி.லி.) துத்திச்சாறு கொண்டு சுருக்குக் கொடுத்துக் கொள்க. பிறகு 2 பலம் (70 கிராம்) துத்தி இலையைக் கல்கமாக அரைத்து மேற்படி கௌரி பாடாணத்திற்கு கவசம் செய்துலர்த்தி, சுக்கான் கல்லினால் செய்யப்பட்ட மூசையில் வைத்து, மேற்படி சுக்கான் கல்லினால் செய்யப்பட்ட ஓடு கொண்டு மூசையை மூடி, ஏழு சீலை மண் வலுவாய்ச் செய்து மூசை எடைக்கு ஏழு பங்கு கனமுள்ள வரட்டி கொண்டு புடமிட்டு எடுத்துக் கொண்டு, கௌரி எடைக்கு இரண்டு பங்கு புனுகு சேர்த்து, நன்றாய் அரைத்துச் சிறு மாத்திரைகளாய்ச் செய்து உலர்த்திப் பரணியில் அடைத்துக் கொள்ளவும்.

உபயோகம் : நாட்பட்ட சுரத்திற்கும், மாறல் சுரத்திற்கும் இம்மாத்திரையைக் கால்நிமிட நேரம் முகரவும்.

கௌரி பாடாணம், எமதண்டக் குளிகை, வானமெழுகு போன்ற பெருமருந்துகளிலும் சேர்க்கப்படுகின்றது.

### நஞ்சுக் குறிகுணம்.

இது வெள்ளைப் பாடாணத்தின் இனத்தைச் சார்ந்தது. வெள்ளைப் பாடாணத்தின் விடக்குறிகளை ஒத்திருக்கும். உட்கொண்ட சில மணி நேரத்தில் விடமிக்கும்.

பின்னங்கால் கெண்டைச் சதையில் பருக்கள், உள்ளங்கால், மார்பு பள்ளங்களில் வீக்கம், நடுவயிற்றில் புடைத்துக் கட்டிக் கண்டு வருந்தல், உள்ளங்கையில் தோலுரிதல், கண்சிவத்தல், குட்டத்தில் தடிப்புப்போலும் திமிர்போலும் காணல், பற்சந்திலிருந்து ரத்தம் கசிதல், இருமல், உப்புசம், ஒக்காளம், உடல் வெதுப்பு முதலியன காணும்.

### முறிவு.

முன்னை வேர்ப்பட்டை கால்பலம் எடுத்துக் குடிநீர்செய்து' இதில் கறியுப்புக் கால்பலம், பனங்கற்கண்டு கால்பலம் சேர்த்துக் காலை மாலை இருவேளையாக ஒரு மண்டலம் கொள்ளவும். இஃதே எலிப்பாடாணத்திற்கும் விரிவாகும்.

(தே.ய. வெ.வி. 2.)

## தாளகம்.

ARSENIT TRISULPHIDUM TRISULPHURET OF ARSENIC (ORPIMENT, YELLOW ARSENIC TRISULPHIDE).

இது, பீதகி, ஆலம்பி, பிஞ்சனம், பழுப்பு, கோதந்தம், மாலம் அரிதாரம், கால்புத்தி, பொன்வர்ணி, மஞ்சள்வர்ணி, மால்தேவி, அரிதலம் என்ற பெயர்களினுல் வழங்கும்.

இதனுடைய உருவம், நிறம், குணம், முதலியவைகளைக் கொண்டு இதற்குப் பலவகையாய்ப் பெயரிட்டுள்ளார்கள். (1) சிவந்த அரிதாரம், (2) மடல் அரிதாரம், (3) பொன் அரிதாரம், (4) கரட்டுத் தாளகம்.

வட நூலார் பத்திரதாளகம், பிண்டதாளகம் என இருவகை கூறுவர். இவற்றுள் பத்திர தாளகத்தை, உடல்தேற்றி, சுரமகற்றிச் செய்கைகளுக்காகவும், பிண்டதாளகத்தை, வர்ணப்பொருள்களில் ஒன்ருகவும், தாள்களை உருவப்படுத்துவதற்காகவும், சிதல் பாழ்ப்படுத்தாதிருப்பதற்காகவும் பயன்படுத்துவர்.

இந்தியாவில் தாளகம் மிகச் சிறிய அளவில்தான் கிடைக்கின்றது. இஃது இரும்புடன் கலந்து (Aresnic Pyrite) அகப்படுகின்றது. இதை சைனு, சுமித்திரா போன்ற நாடுகளிலிருந்து நம் நாட்டிற்கு இறக்கு

மதி செய்ததாயும், அரிதாரத்தைச் சைனுவிலிருந்தும் (சாதாரண மாய்க் கடைகளில் கிடைக்கும்) பொன் அரிதாரத்தைத் துருக்கி லியிருந்தும் கொண்டு வந்ததாயும் அறிகிறோம்.

தாளகம் கனம் உடையது. அதை நெருப்பிலிட்டால் நீல நிறப்புகை கிளம்பும். "ஹக்கீம்கள் இதனை உள்ளுக்குக் கொடுப்பதில்லை'' என்று ஹிந்துஸ்தான் பெட்டீரியா மெடிகா வில் கூறப்பட்டிருக்கின்றது. இதைத் தமிழ் மருத்துவர்கள் நெடுங்காலமாய் மிகச்சிறிய அளவில் உள்ளுக்குக் கொடுத்துக் கொண்டு வருகின்றனர்கள்.

''அரிதாரப் பொன்னுக்கு ஹானியில்லை'' என்கின்ற ஒரு பழ மொழி வழங்குகின்றமையினால், அரிதாரம் வேதையில் ஒரு முக் கிய சரக்காகும். அரிதாரத்திலிருந்து பிரித்து எடுக்கப்படும் வங் கம், செம்பில் கொடுக்க வர்ணிக்கும் என்றும் கூறப்படுகின்றது இஃது ஆராய்ச்சிக்குரியது.

பொதுக்குணம்.

தாளகம்.

"தாளகத்தின் பேருரைக்கத் தாலுகவுள் நோய்குஷ்டம்
நீளக் குளிர்காய்ச்சல் நீடுகபம்—நாளகங்கொள்
துஷ்டப் பறங்கிப்புண் சூழழுகண் மண்டைநோய்
கிட்டப் படுபமா கிளத்து.''

(பொ-ள்) தாளகத்தினால் நாக்கு, கபோலம் இவைகளைப் பற்றிய நோய், குட்டம், குளிர் சுரம், சுபம், மூத்திர நாளத்தைப் பற்றிய பறங்கிப் புண், அழு கண், மண்டை நோய் முதலியன நீங்கும்.

சிவந்த அரிதாரம்.

" சிவந்தவரி தாரமது செஞ்சிலைபோற் காட்டும்
உவந்ததனை யுண்முறையோ டுண்டால்—இவர்ந்தாழ்
சுரங்குளிர்மா வாதமுடற் சூலைநமை குஷ்டம்.
இரங்குமென நாளும் இசை.''

(பொ-ள்) சிவந்த கல்லைப் போலிருக்கின்ற சிவந்த அரிதாரத்தை நன்மருந்தாக்கி உண்ணும்முறைப்படி உண்டால், சுரத்துடன் கூடிய குளிர், பெரிய வாத நோய், உடலில் குத்தல், நமைச்சல், குட்டம் முதலியன நீங்கும்.

மடல் அரிதாரக் கரடு.

" மடலரி தாரத்தில் வருங்கர டிரண்டும்
உடல்வி ஷங்களைப் போக்கிடும் உண்மை.''

(பொ-ள்), மிடலரிதாரத்தில் வரும் இரண்டு கரடுகளும் (பலகை, கட்டி) உடம்பில் ஊறிய விஷங்களை நிச்சயம் நீக்கும்.

### மடல் அரிதாரம்.

''ஈளை யுடனே யிருமல் குடிவிலகுங்
கோழை மலமகலும் கொம்பனையாய்—நாளும்
அடலுறுக யங்கரப்பான் ஆறுப்புண் ணும்போம்
மடலரிதா ரத்தை மதி''.

(பொ-ள்) மடல் அரிதாரத்தினால் ஈளை, இருமல், கோழை, மலம் நீங்கும். இது வன்மையுள்ள இளைப்பு நோய், கரப்பான், ஆறுதபுண் இவற்றையும் போக்கும்.

### அரிதாரம்.

" காசமுடனே கயநோய் கபவாதம்
பேசரிய குன்மமெட்டும் பேருங்காண்—மாசகன்ற
கீற்று மதிநுதலே கேளாயுள் வேதமது
சாற்றும் அரிதாரத் தால்.''

(பொ-ள்) அரிதாரத்தினால், இருமல், இளைப்பு நோய் கப வாத நோய், எண் வகைக் குன்மம் ஆகிய இவைகள் போம்.

### பொன் அரிதாரம்.

''மந்தாரத் தாலே வளருஞ் சுவாசநோய்
உந்திவரு தீச்சுரநோய் ஓடுங்காண்—முந்து
தொனிக்கயஞ்செய் யான்கடியுந் தோற் குஷ்டும் ஏகுந்
தனிப்பொன் அரிதாரத் தால்''.

( பொ-ள் )பொன் அரிதாரத்தினால் சுவாச காசம், கொடிய சுரம், இளைப்பு நோய், செய்யாள் கடி, தோலைப்பற்றிய குட்டம் முதலியன நீங்கும்.

குறிப்பு.—மேலே கூறப்பட்ட அறுவகைப் பொருள்களுக்கும் ஏறத்தாழ ஒரே குணமுண்டு என்பதை உணரலாம். இவற்றுள் பாஷாணமும் கந்தகமும் கலந்திருக்கின்றன. இவைகளின் ஏற்றத்தாழ்வினால் மேற்கூறப்பட்ட பல இனங்கள் உண்டாகின்றன பைஷஜ கல்ப நூலாசிரியர், சிவந்த அரிதாரம், மடல் அரிதாரம் இவை இரண்டும் மனோசிலை என்று கூறியிருக்கின்றார்.

செய்கை :—கோழையகற்றி, சுரமகற்றி, வாந்தியுண்டாக்கி, நச்ச உடல் தேற்றி, உடல் உரமாக்கி. இஃது அளவு அதிகப் பட்டால் விடமிக்கும்.

### சுத்தி.

தாளகத்தைப் பணம்போலவெட்டி, சீலையில் முடிந்து, கோமயம், காடி, சுண்ண நீர், பூசனிக்காய் நீர், ஆவின் பால், அரசம்பட்டைக் கஷாயம் இவைகள் ஒவ்வொன்றிலும் தனித்தனியாய் ஊறவைத்துத் தோலாந்திரமாக நீர் முக்கால் பாகம் சுண்டும் வரை அவித்து எடுக்கச் சுத்தியாம். ஒரு பலம் தாளகத்திற்கு ஒவ்வொருபடி நீர்ப்பொருள் எடுத்துக்கொள்ள வேண்டும்.

(வேறு)

ஒரு பலம் (35 கிராம்) தாளகக் கட்டியை எடுத்து, சுண்ணாம்புக் கல்லின் இடையில் வைத்துப் பனங்கள்ளினால் 10 தரத்துக்குக் குறையாமல் தாளித்து எடுத்துக் கழுவி உலர்த்திக் கொள்ளச் சுத்தியாம்.

(வேறு)

தாளகத்தைச் சன்னமாக வெட்டி, இரட்டை மடிப்புச் சீலையில் கட்டிக் கோமூத்திரம், அரிசி கழுவிய நீர், புளித்த காடி இவைகளொன்றில் மூன்று நாள் தோலாந்திரமாய் கமலாக்கினி கொண்டு எரிக்கச் சுத்தியாம்.

(வேறு)

அமூரி (சிறு நீர்) ஒரு படியில் (1.3 லிட்.) குப்பைமேனிச்சாறு கால் படி (325 மி. லிட்.), கற்சுண்ணம் கால்படி (325 மி. லிட்.) கலந்து, அடுப்பேற்றித் தாளகத்தைக் கிழிகட்டித் தோலாந்திரமாய் எரித்து எடுத்துக் கொள்ளச் சுத்தியாம்.

(வேறு)

தாளகத்தைக் கற்சுண்ணத்திலிட்டுக் கழுதைநீரிட்டுத் தாளித்து எடுத்தாலும் சுத்தியாம்.

### பற்பம்.

ஒரு பலம் (35 கிராம்) சுத்திசெய்த தாளகத்திற்குக் கீழ்ப்பட்டியலில் காணும் சாறுகளால் முறைப்படி அரைத்து, உலர்த்தி, சில்லிட்டுச் சீலை செய்து புடமிட்டெடுக்கப் பற்பமாம்.

| சாற்றின் பெர். | அளவு பலம். | அறைப்பு நாள். | வில்லை உலர்த்தும் நாள். | கவசம் உலர்த்தும் நாள். | புடம் வரட்டி. |
|---|---|---|---|---|---|
| பனங்கள் .. ... .. | 4 | 10 | 7 | 1 | 40 |
| பொற்கொன்றைச்சாறு .. | 4 | 8 | 9 | 1 | 30 |
| கருடக்கொடிகிழங்கின்சாறு | 4 | 6 | 5 | 1 | 20 |
| வன்னியிலைச்சாறு .. .. | 4 | 4 | 3 | 1 | 10 |

தாளக பற்பத்தின் தீக்குணம் அடங்கி, நற்குணம் மிகுதியும் உண்டாக இது பழக வேண்டும். இப்பற்பம் மூன்று மாதம் பழகிஞல் உத்தமம் என்றும், இரண்டு மாதம் பழகிஞல் மத்திமம் என்றும், ஒரு மாதம் பழகிஞல் அதமம் என்றும், ஒரு மாதத்திற்கு உட்பட்டதெல்லாம் அதமாதமம் என்றும் விதி உண்டு.

இதனை,

'' அரிதாகச் செய்தமொரு தாள கத்தை
யடலையா னதுபழக முதன்மை மூன்று
மிருமாத மத்திமமு மதியொன் ருகி
லிசையதம் மதிலுமென வாடாய் பாம்பே.''

என்ற பாம்பாட்டிச் சித்தர் பாடலாலும்,

'' தாளகச் சுன்னத்தைச் சாதக மாக்கிடக்
கேளக மும்மதி கீழிரண் டொன்றதில்
வாளக மானவவ் வழக்கமுண் டாகுமே
நாளக நோய்க்கெலா நாந்தக மாகுமே''.

என்ற பாடலாலும் உணரலாம்.

தாளகபற்பம் பழஞ்சுரம், புதுச்சுரம், மத்திம சுரம், அஞமத்து சுரம், மந்தசுரம், வல்லைமகோதரம், குன்மம் இவைகளைப் போக்குவதிஞல், இதனை உட்டணுதி நாந்தகம், பிணிப்பகை, பலவினைப் படை, பிணியத்திரம் என்று பெருமைப்படுத்திக் கூறுவதுண்டு. இதனை,

'' சுன்னமா தாளகச் சுராந்த கப்பெயர்
முன்னமே யுளதவை முனிவ ரோதிஞர்
குன்னமா வலிகபக் குடாரி நோயரி
யின்னமு முளதவை யெண்ணி லாதவே.''

என்ற மாபுராணச் செய்யுளிஞலும் அறியலாம்.

### பற்பத்தின் அளவு.

ஓமத்தில் எட்டில் ஒருகூறு உத்தமம் என்றும், இரண்டுகூறு மத்திமம் என்றும், மூன்றுகூறு அதமம் என்றும், நான்குகூறு அதமாதமம் என்றும், ஐந்துகூறு ஒருபுடைத் தீவு என்றும், ஆறுகூறு முழுமைத் துணிவு என்றும், ஏழுகூறு அனந்தம் என்றும், எட்டுக்கூறு அபரிமிதம் என்றும் கொள்க.

இப்படிக் கூறியிருப்பினும் பண்டிதன், பிணியாளனையும் நோயையும் அறிந்து, பின்னம் வராமற் கொடுக்க வேண்டும் ஏனெனில் இது மிகுந்த வேக முடையததாதலின் உடற்பிணி மிகுதியில்லாவிடின் உடலைத் தகித்து விடும். இதனை,

''சுரமெரிக்கு மடலையெனுந் தாளகத்தை
யெண்வகைநேர் சொல்லு மோமம்
புரமெரிக்கும் பாசுபத மெனவுண்டோர்
புரமெரிக்கும் புன்மை விஞ்சிற்
றரமெரிக்குஞ் சன்னிவல்லை மகோதர
மேகவளி தணலி நோயை
யுரமெரிக்கு மாதலினு யுள்வேதிய
ரறிந்தினை யுளுற்று வாரே''.

என்ற மாபுராணச் செய்யுளால் உணரலாம்.

**தாளக பற்பத்தினுல் தீரும் நோயும் துணை மருந்தும்:**

| தீரும் நோய். | துணைமருந்து |
|---|---|
| வாதமிகுதிக்கு .. .. | வெள்ளைப் பூண்டின்சாறு. |
| வாதக்குறைவுக்கு .. .. | குளிர்ந்த நீர் |
| பித்தமிகுதிக்கு .. .. | நெய். |
| பித்தக்குறைவுக்கு .. .. | கல். |
| சேட்பமிகுதிக்கு .. .. | மது (தேன்). |
| சேட்பக்குறைவுக்கு .. | வெந்நீர். |
| வாதசுரத்திற்கு .. .. | புளித்த தண்ணீர் (காடி). |
| பித்தசுரத்திற்கு .. .. | செம்பருத்தி சமூலச்சாறு. |
| சேட்பசுரத்திற்கு .. .. | உருத்திரத்துளசிச்சாறு |
| வாதசன்னிக்கு (வாதசுரம் விடமித்ததினுல் ஏற்பட்டது). | பசுவின் புளித்த மோர். |
| பித்தசன்னிக்கு .. .. | உத்தாமணிச் சமூலச்சாறு. |
| சேட்பசன்னிக்கு .. .. | செங்கடப்பமரச் சமூலச்சாறு. |

இதனை,

''வாத மாதிமுப் பிணிமிக லெஞ்சல்மூ
வன்னிசன் னிகளான
பேத மானநான் மூவகை களுமறப்
பெருமருந் தனுபான

மோத லானவை யறிந்தவை வாகட
　　ருதவுத வியல்பாகு
நீத மிவ்வயி னிகழ்ந்தவை தாளக
　　நீறென லறிவாரே.''

என்ற மாபுராணச் செய்யுளால் அறியலாம்.

நீர் ஏற்றத்தால் உடலில் மூவகை நீர்கள் உண்டாம். அவை உண்ணு நீர், நண்ணுநீர், புண்ணுநீர் என்பன. உண்ணுநீர் தாகத்துக்கு அதிகமாய்க் குடிக்கும் நீர். நண்ணுநீர் சுபாவ மாகச் சிறுநீரை அடக்கியதால் பந்தப்பட்ட நீர், புண்ணுநீர் சுபாவமாயிருக்கப்பட்ட இரத்தநீர். இம்மூவகை நீர்களும் முறையே தலைஉச்சிப் பள்ளத்திலும், மார்புப் பள்ளத்திலும், நாபிப் பள்ளத்திலும் கூடும்.

இதனால், தலை உச்சிப்பள்ளத்தில் சேட்பத்தினது சார்பு தோன்றிய சேட்ப சீதச்சுரப் பொல்லாப் பிணியும், மார்பின் பள்ளத்தில் பித்தத்தினது சார்பு தோன்றிய பித்தசீதச்சுரப் பொல்லாப் பிணியும், தொப்புள் பள்ளத்தில் வாதத்தினது சார்பு தோன்றிய வாதசீதச்சுரப் பொல்லாப் பிணியும் உடலில் வளர்ந்து துன்பத்தைக் கொடுக்கும். இச்சுரங்கள் மாறி மாறி வருவதில் மூன்று விதமாகும். சேட்பசீதச் சுரம், ஒரு சாமம் நடுவே விட்டு மறு சாமத்தில் முன்னே நளிர் வந்து வரும். இப்படி ஆறுமாதம் வரை வந்து விட்டுவிடும். பித்தச்சீதச்சுரம், ஒரு பகல் நளிருடன் வந்து மறுபகல் நடுவில் நீங்கி, மறுதினம் வந்து ஆறு மாதம்வரை வருத்தப்படுத்தி விட்டுவிடும். வாத சீதச் சுரம் ஒரு நாள் முழுவதும் நளிருடன் வந்து, மறுநாள் இடைவிட்டு, மறுநாள்முதல் முன்போலவே காய்ந்து, ஆறு மாதத்தின்பின் சுகமாகிவிடும். ஆறு மாதத்திற்குள் அவிழ்தம் கொடுத்தாலும் சுகமுண்டாகும். மருந்தருந்தும் காலத்தில் பத்தியப் பிழை நேரிடக் கூடாது. நேரிட்டால், மருத்துவராலும் நோயை அடக்க முடியாது என்பதாம்.

இவைகளுக்குத் தக்க மருந்து தாளக பற்பமாகும்.

சேட்பசீதச் சுரத்திற்குக் கார் அவலில் காய்ச்சிய சாராயத்தில் அனுபானித்தும், பித்தசீதச் சுரத்திற்குக் காரரிசியில் காய்ச்சிய சாராயத்தில் அனுபானித்தும், வாதசீதச் சுரத்திற்குக் காரரிசிச் சோற்றிலே காய்ச்சின சாராயத்தில் அனுபானித்தும் கொடுக்க வேண்டும்.

இதனை,

'' முந்நீர் சிவணிய செந்நீரி யாக்கை
முப்பிணி யானல வெப்பமா நளிரே
மாறிய நாள்பகல் வீறிய யாமமு
மாசுறு காய மூசுபு வெவ்வினை

மருந்தனு பானமு மிருந்தையிற் றுளக
வடுநரு முத்திற மிடுமுறையிற் சேயிள
மீசுர மாகிய மீசுரப் படவிகை
பொருமுல வைக்கெதிர் பூரணிக் குவையே
யஃதான்று,
கூறிய வெல்லை குறைத்த னன்றெனிற்
றேறரும் பாயச் சீதவுட் டணப்பிதி
ரானவை யடுமிகு தாயுணூ னெறிபோல்
வன்மைசேர் பாலையிம் மாதொடு காளையு
நின்மிகை கொடியோ நேரிழை யணங்கே.''

என்ற நற்றத்தனர் ஓதிய ஆசிரியச் செய்யுளாலுணரலாம்.

தாளகபற்பம் அருந்தும் காலத்து அபத்தியம் நேர்வதனல் ஏற்படும் கைகால் பிடிப்புகளுக்குக் கொம்புப்பாகல் சமூலச்சாற்றைக் கொடுக்கத்தீரும். இதனை,

''உண்ணப்பா வாகடத்திற் சிலைத்தாள் குற்றத்
துண்டாகும் மந்தமுத லனந்த மின்னல்
வின்னப்பா ழாக்கு மிந்த வூனு மெய்யை
வேறென்ன சொல்லுவ்து கார வல்லி
யென்னப்பேர் பெற்றிருக்கு மாற்றெரன் றுலே.
யெங்கேபோ மோவறியே னின்ன லெல்லா
மன்னப்போ ராடுவரோ பிணியா ளர்க்கும்
வாகடர்க்கு மனுகூலப் படுமி தாலே.''

என்ற போகர் ஆயிரத்திரட்டுச் செய்யுளால் உணரலாம்.

மற்றும், அபத்தியத்தால் ஏற்படும் பல்லசைவையும் இம் முரிப்புப் பொருள் நிறுத்திவிடும் என்று கூறப்பட்டிருக்கிறது.

## பற்பம் (வேறு).

வெடியுப்பும், கோதுநீக்கிய பழம் புளியும் சமவெடை சேர்த்துப் பூணில்லாத உலக்கையாலிடித்து உறவானபின் வில்லை தட்டிக் காய வைத்து ஓட்டிலிட்டெரித்தால் பற்றி எரியும். பிறகு அச் சாம்பலை ஒரு பீங்கானில் போட்டுப் பனியில் வைக்கில் நீர் இறங்கும் இதற்கு வெடியுப்புச் செயநீர் என்பது பெயர்.

கற்சுண்ணும்பில் வைத்துப் பனங்கள்ளால் சுத்தி செய்து தாளகத்தை, ஓர் அப்பிரக தகட்டின் மீது வைத்துச் சிறு தீயாய் எரித்து மேற்படி செய்நீரைக்கொண்டு சுருக்குக் கொடுத்து அச்செய்நீரிலுலே நன்றாக அரைத்து வில்லை தட்டிக் காய வைத்து, ஓர் அகலில் பாதி பாகம் கிளிஞ்சல் சுண்ணும்பைக் கொட்டி, அதன்மீது வில்லையை வைத்து, மேலும் சுண்ணும்பைவைத்து அழுத்தி,

மேல் மூடி, ஏழு சீலை வன்மையாய்ச் செய்து காயவைத்து, ஐந்து பலம் எடையுள்ள 15 வரட்டியால் புடமிட்டு ஆறின்பின்பு எடுக்க, கருத்துக் கட்டியாயிருக்கும். மறுபடியும் இன்னொரு முறை செய்து 25 வரட்டியில் புடமிடவும். மீண்டும் ஒரு முறை மேற்படி செய் நீரால் அரைத்து, வில்லை தட்டிக் காயவைத்து, மேற்கூறியது போன்றே 35 வரட்டியில் புடமிட்டெடுக்கத் தவளம் போல் நீறும்.

**அளவு :** ½ *(65 மி.கிரா.) முதல் 1 குன்றி (130 மி.கிரா.)*—இருவேளை.

**துணை மருந்து :** பனைவெல்லம்.

**பத்தியம் :** உப்பு, புளி நீக்கவும்.

**நாளளவு :** *10 முதல் 12 நாள்.*

**தீரும் நோய் :** க்ஷயம், ஈளை, காசம், சுவாசம் முதலிய கப நோய்கள்.

*(அ. பரிபூரணம் 400.)*

**குறிப்பு.**—இதில் *4.9* பாஷாணம் (Arsenic) இருப்பதாய்ச் சோதனையால் அறியப்படுகிறது. ஆகையால் 1 குன்றி *(130 மி.கிரா.)* தாளக பற்பத்தில் சுமார் *1/20* குன்றி (6 மி. கிரா.) பாஷாணம் இருக்கும்.

## பற்பம் (வேறு).

*சுண்ணாம்புக் கல்லில் 10 முறை சுத்திசெய்த தாளகத்தை ஒரு பல (35 கிராம்) முள்ள ஒரே கட்டியாக எடுத்து, அதனுடன் வெடியுப்புச் சுண்ணம், வீரம், பூநீறு, சீனக்காரம், படிகாரம் இவைகள் வகைக்கு இரண்டு வராகனெடை (8.4 கிராம்) வீதம் எடுத்து, வெள்ளெருக்கம் பால் விட்டு அரைத்துக் கவசஞ் செய்து காயவைத்து, முற்றிய முருக்க மரப்பட்டையின் சாம்பலை ஒரு குடுவையிற் போட்டு, அதன் மத்தியில் வசப்படும்படி அத் தாளகத்தை வைத்து, மேற்சட்டி மூடி ஏழுமண் சீலைசெய்து, சரியாய் அடுப்பிலிட்டுத் தீபாக்கினி, கமலாக்கினி, கடாக்கினி என்னும் மூன்று தீக்களைக் கொண்டு 12 மணி நேரம் எரித்தால் அரிதாரம் பற்பமாம்.*

## துணை மருந்தும் தீரும் நோயும்.

இதைத் திரிகடுகு அல்லது தேனில் தின்றால், சுரம், ஈளை, கிரந்தி, குட்டம், பீநசங்கள், விடநீர்கள் நீங்கும்.

**பத்தியம் :** புகையிலையும், புளியும் நீக்கவும், எண்ணெய் தேய்த்துக் கொண்ட பிறகு மேற்கண்டவற்றைக் கூட்டிக் கொள்ளலாம்.

**சிறப்பு :** இப் பற்பத்தால் சுர நோய், க்ஷய நோய் நீங்கும்.

*(அக. பின். 80.)*

(வேறு)

அரசம் பட்டையின் புறணி நீக்கி, எருக்கம்பால் விட்டு அரைத்துக்குகை செய்து, அதற்குள் சுத்திசெய்த ஒரு பலம் (35 கிராம்) தாளகத்தைக் கட்டியாய் வைத்து, ஏழு சீலை மண் செய்து உலர்த்திக் குக்கிட புடம் போட்டு ஆறவிட்டு எடுத்து, அதற்கு மறுபடியும் எருக்கம்பால் விட்டு, மூன்று நாட்கள் அரைத்து வில்லை செய்து காயவைத்து, சில்லிட்டுச் சீலை செய்து முழ அளவுள்ள புடம் போட்டெடுக்கவும். பிறகு முன்போல ஒருமுறைசெய்து மூன்று எருவில் புடம் போடப் பற்பமாம்.

அளவு : ஒரு குன்றி (130 மி. கிராம்).

தீரும் நோய் : தகுந்த அனுபானத்தில் கொடுக்கக் குறை நோய் நீங்கும்.

(அக. பலதிரட்டு).

பற்பம் (வேறு).

"பெண்ணை மந்திரத்தினுற் பிறங்குமே தாளகங்
கண்ணனு ரண்ணன் கவின்பெறு சாம்பரே."

(பொ—ள்) தாளகமானது பனங்கள்ளினுல் சுத்தியும், ஆகாச கருடன் கிழங்குச் சாற்றுல் பற்பமுமாகும்.

இதன் செய்முறை : பனங்கள்ளினுல் சுத்திசெய்த தாளகம் ஒரு பலத்திற்கு (35 கிராம்), நாலு பலம் (140 கிராம்) ஆகாச கருடன் கிழங்குச்சாறு விட்டு, ஓர் இரவு முழுதும் பனியில் வைத்து, மறுநாள் உதயம் முதல் அத்தமனம் வரைக்கும் அவ வளவே சாறுவிட்டு அரைத்து வில்லை தட்டி, மறுபடியும் அவ் வில்லையை முன்போலவே நான்கு பலம் (140 கிராம்) கருடன் கிழங்குச் சாற்றில் இட்டு, இரவு முழுதும் பனியில் வைத்து மறு நாளும் முன்போலவே அரைத்து, இங்ஙனம் நான்கு நாட்கள் செய்தபின், ஐந்தாம் நாள் வில்லை செய்து, ஒரு நாள் நிழலில் உலர்த்தி, நன்றுய்க் காய்ந்தபின் சீலை மண் செய்து, வெய்யிலில் காயவைத்து 30 எருவில் புடமிடப் பற்பமாம்.

இப்பற்பத்தை ஏழு அல்லது எட்டு மாதங்கள் வரையில் கை படாமல் வைத்திருந்து, அதன்பின் நோய்களுக்கு வழங்குதல் வேண்டும்.

தீரும் நோய்கள் : கப சம்பந்தமான இருமல், சுவாசகாசம் பல்வகை சந்நிகள், பல்வகைச் சுரங்கள் முதலியனவாம்.

துணை மருந்து : நெய், தேன், உத்தாமணிச்சாறு, துளசிச்சாறு, பசு மோர் முதலியன.

அளவு : ஒரு தினை முதல் ஏழு தினை வரை.

## தாளகச் செந்தூரம்.

ஒரு பலம் (35 கிராம்) சுத்தி செய்த தாளகத்தை, தகரையிலைச் சாறு சுரபுன்னையிலைச்சாறு, முசுமுசுக்கையிலைச்சாறு இவற்றில் தனித்தனியாய் அரைத்து, வில்லை தட்டிக் காயவைத்து, சில்லிட்டுச் சீலை செய்துலர்த்திப் புடமிட்டெடுக்கச் செந்தூரமாம். ஒரு மூலிகைக்குப் பத்து நாட்கள் வீதம் முப்பது நாட்களுக்குள் செந்தூரத்தை முடித்துக்கொள்ள வேண்டும்.

### தாளகச் செந்தூரத்தின் துணை மருந்தும் தீரும் நோயும்.

| துணைமருந்து | தீரும் பிணி. |
|---|---|
| திப்பிலி .. .. .. | வாதநோய் |
| மிளகு .. .. .. | சுரம். |
| தண்ணீர் .. .. .. | காங்கையினுல் உண்டானபிணி |
| கள் .. .. .. .. | மயக்கவாதம். |
| களிப்பாக்கு .. .. | உப்புசம். |
| வெந்நீர் .. .. .. | விக்கல். |
| மோடி .. .. .. | இளைப்பு நோய். |
| கர்ப்பூரவல்லியிலைச்சாறு .. | மூர்ச்சை |
| துளசிச்சாறு | காரகம். |
| ஓமம் .. .. .. | மலசலபந்தம். |
| வேலம்பட்டைரசம் .. .. | குடைச்சல் மண்டைவலி |

### செந்தூரம் (வேறு).

அரிதாரத்தைப் பொடித்து, பூசினிக்காய்ச் சாற்றிலும் கற்சுண்ணத் தண்ணீரும் நல்லெண்ணெயும் சரிபங்காய்க் கலந்த கலப்பிலும். நல்லெண்ணெயிலும் தனித்தனியாய் மூன்று முறை அவித்தெடுக்கக் கசடு நீங்கி அரிதாரம் சுத்தியாம்.

மூக்கரட்டைச் சாரணையை அரைத்து, இரண்டு அடையாய்த் தட்டி, ஒரு சட்டிக்குள் ஓர் அடையை வைத்து, அதன்மேல் தாளகத்தை வைத்து, மேலும் மற்றோர் அடையை வைத்து, மேற்சட்டி கொண்டு மூடி, ஏழு சீலை மண் செய்து அடுப்பேற்றி எட்டுச் சாமம் எரிக்கச் செந்தூரமாம்.

அளவு :—*பணவெடை (488 மி.கிரா.)

குறிப்பு.—*பணவெடை என்று கூறியிருப்பினும், இக்கால மக்கள் உடல் வன்மைக்குத் தக்கவாறு அளவைக் குறைத்துக் கொள்ள வேண்டும்.

## துணை மருந்துகளும் தீரும் நோய்களும்.

| துணை மருந்து. | தீரும் நோய். |
| --- | --- |
| தேன் .. .. .. | மண்டைச் சூலை, விடங்கள். |
| பழச்சாறு .. .. .. | கண்ணோய். |
| பனைவெட்டு .. .. | வாதம். |
| பூசினிப்பழச்சாறு .. .. | பிரமேகம். |
| வெள்ளரிக்காய் நீர் .. | நீரடைப்பு. |
| பசுவின்பால் .. .. | சூதக வாயு. |
| வறுத்த கோழிமுட்டை .. | மலசலக்கட்டு. |
| எலிப்புழுக்கை .. .. | இவற்றின் பொடி வெதுப்பிய வெள்ளரிக்காய் இவைகளை நீரில் கலந்து கொடுக்க கல் நீங்கும். |
| கோழிக்காரம் .. .. | |
| கோழிக் கரு .. .. | |

## தாளகக் கருப்பு.

சுத்தி செய்த தாளகம் ஒரு பங்கிற்கு, நான்கு பங்கு நத்தைச் சதை சேர்த்து, கல்வத்திலிட்டு நன்றாய் அரைத்து, ஒரே கனவில்லையாய்ச் செய்து உலர்த்தி, ஓட்டிலிட்டு மேலோடுகொண்டு மூடி, வலுவாய்ச் சீலை செய்து, தக்க வரட்டியில் புடமிட்டெடுத்துப் பொடித்துக்கொள்ளக் கருப்பாம்.

அளவு :1 (65 மி.கிரா.) முதல் 2 உளுந்தெடை (130 மி.கிரா.)

துணை மருந்து : தேன், நெய், தாளிசாதிச் சூரணம்.

தீரும் நோய்கள் : காசம், சுவாசகாசம், ஈளை, சுரம், முதலியன.

## தாளக மாத்திரை.

ஈயபற்பம், இலவங்கம், சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் வகைக்கு ¼ பங்கு, தாளகபற்பம் 1 பங்கு, கடல் நீர், துளசிச்சாறு, கள், இம்மூன்றையும் ஒன்று சேர்த்து நாள் ஒன்றுக்கு 10 நாழிகை விதம் 10 நாட்களுக்கு முன் சொன்ன பொருள்களின் கூட்டுத் தொகைக்கு மூன்றுபங்கு விட்டு அரைக்கவும். பயறளவு மாத்திரை உருட்டிக்கொண்டு, 10 நாள் வெய்யிலில் உலர வைக்கவும்.

தீரும் நோய்கள் : சகல சுரங்கள், சகல விடதோடங்கள்.
துணை மருந்து : நல்ல தண்ணீர்.

(தே. ய. வெ.)

## தாளக மாத்திரை (வேறு).

குன்றியரி தாரங்கோ ரோசனை மூன்று
என்ற விருசச்சா றாட்டியரைத்—தொன்றுன
மாத்திரைதே னீரிலுண வாதசுரஞ் சேட்பசுர
மாத்திரமோ போம்பிணிய மன்.

(தே. வெண்பா)

## அனுபானம்.

நளிரொடு வெம்மையு நண்ணு நோயினுக்
களமுலைப் பாலினி லத்த மாமுரை
புளிதவிர் முரிவினை பொருந்து பாகவே
வளிநிகர் தாளக மாத்திரைக் கீதே.

(தே. சேகரப்பா.)

## தாளக எண்ணெய் (இதுவே விரண சஞ்சீவித் தைலம்).

நீண்ட காம்பை உடைய அகலக் கரண்டியில் (வாற்கிண்ணம்) நல்லெண்ணெய் 10 பலம் (350 கிராம்) விட்டு, அதில், பொடி செய்த தாளகம் காசெடை 1-ம் இரண்டிரண்டாக நறுக்கிய சேராங்கொட்டை 10-ம் சேர்த்து, இவற்றின் சத்துக்கள் அந்த எண்ணெயில் இறங்கும்படி மிருதுவாய் எரித்து, அதனை; கழு நீரும் சுத்த நீரும் சமமாய்க் கலந்து நிறைத்து வைத்திருக்கின்ற வாயகன்ற தாழியில் ஊற்றி, மறுநாள் வார் எண்ணெய் வழிப் பது போலப் பழகிய பாண்டத்தில் வழித்து, மறுபடியும் அதைக் காய்ச்சி வடிகட்டிக் கொள்ளவும்.

இதை வெற்றிலையில் தோய்த்துத் தின்ன சந்நிபாதங்களெல் லாந்தீரும். தோசை, இட்டலி, பழையது இம்மூன்றில் ஏதேனும் ஒன்றை எருமைத் தயிரில் கலந்து, வயிறு நிறையப் புசித்துப் பின்பு விரணங்களின்மேல் கோழியிறகைக் கொண்டு மேற்படி தைலத்தை உதய காலத்தில் தடவி, ஒரு சாமம் (3 மணி) ஊறிய பின்பு உசில் அரைப்பிட்டு இள வெந்நீரில் குளிக்கவும். இவ்வாறு ஏழு நாள் செய்தால் விரணங்களின் துன்பம் சிறிதும் இல்லா தொழியும்.

## தாளக் கட்டு.

தாளகம் அரைப்பலம் (17.5 கிராம்) சுத்தி செய்து, சிவகரந்தைச்சாறு, கரிப்பான் சாறு வகைக்கு அரைப்படி (650 மி.லி.) எடுத்து, இச் சாற்றை மேற்படி கட்டிக்குச் சுருக்குக் கொடுத்து உலர்த்தி, அதற்கு வெடியுப்பைத் தீப்பிடியாதவாறு கவனமாய் வறுத்து, எலுமிச்சம் பழச்சாற்றில் அரைத்து, கட்டிக்குக் கவசம் செய்து காயவைத்து, 7 சீலை மண் செய்து, 15 வரட்டியில் புடம் போட, உருகிக் கட்டும். தக்க அனுபானத்திலிட கபசுரம், சன்னி தீரும்.

## (வேறு)

ஒரு விளிம்பில்லாத மண்சட்டியில், பூவரசம் பூ இதழ்களை மாத்திரம் பாதி நிரப்பி அழுத்தி, அதன்மேல் அரைப்பலம் (17.5 கிராம்) கொம்பரக்குத் தூள் போட்டு, அதன்மேல் ஒரு பலம் (35 கிராம்) சுத்தி செய்த தாளகத்தை வைத்து, மேலும் அரக்குத் தூளை போட்டு, அதற்குமேல் மேற்படி பூவிதழ் போட்டழுத்தி, மேல் மற்றொரு விளிம்பில்லாத மண் சட்டியைக் கொண்டு மூடி, சீலை மண் வலுவாய்ச் செய்து உலர்த்தி, 20 வரட்டியில் புடமிடக் கட்டும். இதனைக் கபசுரம், சன்னி முதலியவைகளுக்குத் தக்க அனுபானத்தில் வழங்கலாம்.

ஆயுர்வேத வைத்தியர்கள் சுத்தி செய்த தாளகத்தை உருக்கிப் பலகையின் மீது ஊற்றி, ஆறியவுடன் எடுத்துப் பொடித்து, அப்படியே கையாளுகின்றூர்கள். இப்படி வறுத்த தாளகத்தில் சிறிய அளவு வெள்ளைப் பாஷாணம் இருப்பதாய்க் கூறப்பட்டிருக்கிறது. வங்காள தேசத்து வைத்தியர்கள், தாளகத்தை வறுத்தால் ஆயுள் குறைகின்றதென்று அதைப் பக்கிரிகளிடமும் சாதுக்களிடமுமிருந்து விலைக்கு வாங்குவதாயும் தெரிகிறது. நிற்க, வறுக்கப்பட்ட தாளகத்தில், சில சமயம் அதிக விஷம், வெள்ளைப் பாடாணத்தின் கூடுதலினுல் ஏற்படுகின்றது எனக் கூறப்பட்டிருக்கின்றது. இதற்குக் காரணம் அது செய்முறையைப் பொறுத்தது.

தாளகம், சுரத்தையும் தோலைப்பற்றிய பிணிகளையும் போக்கி, உடலுக்கு வன்மை, அழகு, ஆயுள் முதலியவற்றைக் கொடுக்கும். இதனை இரசம் நாபி முதலியவற்றுடன் கலந்து மருந்தாக்கிச் சுரத்திற்குக் கொடுப்பதுண்டு.

இது, தோற்பிணிகளை நீக்க வெளிப்பிரயோகத்திற்காகச் செய்யும் பல மருந்துகளில் சேரும்.

உரோமத்தை நீக்க, இது சுண்ணும்புடன் கலந்து பண்டைக் காலம் தொட்டு வழங்கிவரப்படுகிறது.

தாளகம் க்ஷய குலாந்தக செந்தூரம், வானமெழுகு, கஸ்தூரிக் கருப்பு முதலிய பெரு மருந்துகளில் சேருவதையும் காணலாம்,

### தாளக நஞ்சுக்குறி குணம்.

இதை மருந்துக்களில் உபயோகப்படுத்துங்கால் சுத்தி, செய்முறை, அளவு, பத்தியம் ஆகியவை தவறின் நஞ்சாகும். அவ்வாறு விடமித்தால், நகக்கண்களில் இரத்தம் கசிவுதல், பக்குக்கட்டிப் புண்ணாகிச் சீழ் வடிதல், வயிற்றில் எரிச்சல், குரல் மாறல், மூக்கிலிருந்து இரத்தம் பாய்தல், அருசி, உணவு வேண்டாமை, தலையில் நமை உண்டாகி மயிர் முனை சிவத்தல் மேல் சுவாசத்தைக் கிளப்பிப் பந்திக்கச் செய்தல், பிரமை, அடிவயிற்றில் வீக்கச் சாயலைக் காட்டல், இடை, பக்கம், இவைகளில் தீராத வலியைக் கொடுத்தல் முதலிய தீக்குறி குணங்களைக் கொடுக்கும்.

(தே.ய.வை.உ.)

### முறிவு.

சித்திரமூல வேர்ப்பட்டை, மிளகு, கறியுப்பு இவைகளில் முதல் இரண்டும் கால்பலமும் (8.75 கிராம்), மூன்றாவது 1/8 பலமும் (4.37 கிராம்) கூட்டி, முன்னிரண்டைக் குடிநீரிட்டுக் கறியுப்பைச் சேர்த்துக் காலை, மாலைகளில், நோயின் விடத்தன்மைக்கேற்ப அரைமண்டலமாவது, முக்கால் மண்டலமாவது, ஒரு மண்டலமாவது கொள்ளத்தீரும்.

### (வேறு)

நீலிவேர், ஆவாரம்பூ, வெட்டிவேர், சீரகம், மாதுளைவித்து தென்னங்குரும்பை, காசினிவேர் இவைகளை வகைக்குக் கால் பலம் கூட்டிக் குடிநீர் செய்தருந்த, தாளகத்தால் விளையும் நஞ்சு தீரும்.

"தேருவாய் தாளகத்தைத் தின்றோர்க்கு நீலியதன்
வேருடனே யாவிரம்பூ வெட்டிவேர்—சீரகமும்
மாதளைவித் தொடுதென்னம் வன்குரும்பை காசினிவேர்
தீதகல நற்குடிநீர் செய்".

## தொட்டிப் பாஷாணம்.

இயற்கைப் பாஷாணம் முப்பத்திரண்டுள் இஃதும் ஒன்றாகும். செயற்கைப்பாஷாணத்தில் தொட்டி, அயத்தொட்டி புத்தொட்டி செம்புத் தொட்டி பொன்தொட்டி, எருமைநாத்தொட்டி என்னும் பாஷாணங்கள் இருப்பனவாய் நூல்களில் கூறப்பட்டிருக்கின்றன. வைப்பு சுரக்காய்ச் செய்யப்படும் இலிங்கம், இரும்புச் சட்டியிலும் செம்பு சட்டியிலும் செய்யப்படுவதாய் இயம்புகின்றனர். அவ்வாறு இலிங்கம் செய்வதற்குப் பயன்படுத்தப்படும் சட்டி, ஒரு முறைக்குப் பிறகு பயனற்றுப் போகுமாம். அந்தச் சட்டிகளைத் துண்டுகள்ளாய்ச் செய்து முறையே, இரும்புத் தொட்டிப்

பாஷாணம் என்றும், செப்புத் தொட்டிப் பாஷாணமென்றும், வழங்கப் படுவதாய்த் தெரிகிறது. இதன் நிறம் இரசச்செந் துரத்தை ஒத்திருக்கும் என்று நூலில் சொல்லப்பட்டிருக்கிறது. இதன் பொதுக்குணம், சுத்தி முறை தவிர மற்றைய விவரங்கள் ஒன்றும் கிடைத்தில.

பொதுக் குணம்.

''தொட்டிப்பா ஷாணமெனச் சொன்னால் சுரங்கிரந்தி
எட்டிப்பார்க் காவாம் இடருறுத்தக்—கிட்டிவரு
வாயுவின் றன்பெருக்கும் மந்தமுளைக் கட்டியும்போம்
ஆயினது வாதவித்தைக் காம்.''

(பொ-ள்) தொட்டிப் பாஷாணத்தால் சுரம், கிரந்தி, வாத மிருத்தி, மந்தம், முளைக்கட்டி இவை போம். இது வேதைக் குதவும்.

''தொட்டிபா ஷாணத் தன்மை சொல்வாத வித்தைக் கேற்கும்
துட்டமார் கிரந்தி வாயு விடக்கடி தொலைக்கு மென்ப.''

என்ற அடிகளால், இது வேதைக்கும், கிரந்தி, வாயு, விடக்கடி ஆகிய பிணிகளை நீக்குவதற்கும் பயன்படும் என்பதையும் உணர லாம்.

(ப. சூ.)

சுத்தி.

தொட்டிப் பாஷாணத்தைச் சிறு துண்டுகளாக உடைத்து துணித் துண்டில் முடிந்து நெய்யில் வேகவைத்து எடுக்கச் சுத்தி யாம்.

(வேறு)

தொட்டிப் பாஷாணத்தைப் பசு நீரில் ஆறுமணி நேரம் கொ திக்க வைத்துப் பிறகு கற்றாழை நீரிலும், கரிசலாங்கண்ணிச் சாற்றி லும், தண்ணீர் விட்டான் கிழங்குச் சாற்றிலும் மேற்கூறியது போன்றே செய்யச் சுத்தியாம்.

தொட்டிப் பாஷாணம், சரபராஜ குளிகை போன்ற பெரிய மருந்துகளில் சேர்க்கப்படுகின்றது.

அயத்தொட்டிச் சுத்தி.

அயத்தொட்டியை, பசும்பாலில் நாலு சாமம் (12 மணி) ஊற வைத்து அதன் பின்பு தேனிலும் நெய்யிலும் எட்டெட்டு நாட்கள் ஊறவைத்தெடுக்கச் சுத்தியாம். இவ்வாறு சுத்தி செய்யப் பட்ட அயத்தொட்டியை எவ்வித முறைப் பாகங்களுக்கும் உபயோகிக்கலாம் என்று கூறப்பட்டிருக்கிறது.

## நவ பாஷாணம்.

நவபாஷாணக் கூட்டிலுள்ள சரக்குகளின் பெயர்கள் சரியாய் கிடைக்க வில்லை. நவபாஷாணத்தை நல்ல முறையில் சுத்தி செய்து, அதைச் செந்தூரித்து உண்டால் உடல் இறுகும் என்றும் பெரும் பிணிகள் நீங்கும் என்றும் பதார்த்தகுண சிந்தாமணி கூறுகின்றது.

இதனை,

"நவபாஷா ணந்தன்னை நற்சுத்தி செய்தங்
குவகையாய்ச் சிந்தூரித் துண்டால்—நவமாகக்
காயம் இறுகுங் கனத்தநோ யும்போகும்
மாயம்நோய் எல்லாம் மதி."

என்ற செய்யுளால் அறியலாம்.

## பஞ்ச பாஷாணம்.

பஞ்ச பாஷாணக் கூட்டிலுள்ள சரக்குகளின் பெயர்கள் சரியாய்க் குறிப்பிடப்படவில்லை. அரிதாரம், வெள்ளைப் பாஷாணம், கௌரி பாஷாணம், இலிங்கம், தொட்டிபாஷாணம் இவ்வைந்தும் பஞ்சபாஷாணம் என்று கூறப்பட்டிருக்கின்றன. பஞ்சபாஷாணச் செந்தூரம் என்னும் முறை மட்டும் காணப்படுகின்றது. இதில் ஐந்திற்கு மேற்பட்ட சரக்குகள் இயம்பப்பட்டிருக்கின்றன. ஆதலின் இதனை பஞ்ச பாஷாணச் செந்தூர மென்று கொள்வதற்கு ஐயமேற்படுகின்றது. பதார்த்தகுண சிந்தாமணியில் பஞ்ச பாஷாணத்தின் பொதுக்குணம் செப்பப் பட்டிருக்கின்றது.

### பொதுக் குணம்.

"பஞ்சபா ஷாணமெனப் பாரிலுரைத் திட்டாலும்
வெஞ்சதை ஆணிபுற்றும் வீழுங்காண்— விஞ்சிவளர்
கண்புற்றுத் தீருமதி காய்ச்சல்குளிர் மேகம்போம்
பண்புற்ற மாதே பகர்".

(பொ-ள்) துர்மாமிசம், ஆணி, புற்று, கண்புற்று, அதிகாய்ச்சல், குளிர் சுரம், மேக நோய்கள் முதலியன பஞ்சபாஷாணக் கூட்டுச் சரக்கால் நீங்கும் என்ப.

### பஞ்ச பாஷாணச் செந்தூரம்.

சாதிலிங்கம், மனோசிலை, காந்தம், தாரம் கெந்தி, இரசகர்ப்பூரம் வெள்ளைப்பாஷாணம் இவை வகைக்குப் பலம் 1 (35 கிராம்) இவைகளைச் சுத்தி செய்து, குப்பை மேனி, வெற்றிலை, பருத்தி,

வெள்ளறுகு, துளசி, வேலிப்பருத்தி, பொடுதலை இவைகளின் சாற்றால் வகைக்கு நாலு சாமம் (12 மணி) ஆட்டி, வில்லை செய்து நிழலிலுலர்த்தி, அதற்கு வெற்றிலையால் கவசஞ் செய்து, ஒரு சட்டியில் வைத்து, மேற்சட்டி கொண்டு மூடி, ஏழு சீலைமண் செய்து நன்றாகக் காயவைத்து அடுப்பேற்றி தீபம் போல நாலு சாமம் (12 மணி) எரித்தாற்றிப் பார்க்க மேற்சட்டியில் சிந்தூரம் பற்றியிருக்கும். அதை எடுத்துப் பணவெடை (488 மி. கிரா.) தேன், இஞ்சிச்சாறு இவைகளில் அனுபானித்துக் கொடுக்க சன்னி, சுரம், வெண்குட்டம், சூலை, வாயு, வாதம், மேகம், குன்மம், கிராணி, கை கால் முடக்கு, பிளவை, புற்று, கண்டமாலை, கறை நோய் அரிகரப்பான், தேமல், வண்டுக்கடி, கழல்வாதம், அண்டவாதம், குழிவாழை, வலிப்பு, கன்னப்புற்று., கபாலகுட்டம், பவுத்திரம் மூலமுளை, காசரோகம், மேகப்புண்கள், கிரந்தி அரையாப்பு கபாலச்சூலை முதலான வியாதிகள் தீரும்.

## மனோசிலை.

## ARSENI DISULPHIDUM BISULPHURET OF ARSENIC REALGAR OR RED ORPIMENT.

வேறு பெயர்கள்; சிலை, வில், குநடி, நான்முகன், தேவி, சரசோதி, வாணி வெள்ளச்சி, தாமரைவாசினி.

இது பிறவிச் சரக்கு, வைப்புச் சரக்கு என இருவகைப்படும். ஐந்து பங்கு வெள்ளைப் பாடாணமும் (Ars ou Ac d) மூன்றுபங்கு கந்தகமும் சேர்த்து வைப்புச் சரக்கு செய்யப்படுகிறது. சிவந்த அரிதாரம், மடல் அரிதாரம் குதிரைப்பல் பாடாணம் இவைகள் மனோசிலையைக் குறிக்கும் என்று கூறுவாரும் உளர்.

செய்கை : உடல் தேற்றி, வெப்பகற்றி, உடல் உரமாக்கி.

### பொதுக்குணம்.

“கொடிய குஷ்டம்
காய்ச்சல் நடுக்கலஜ கல்லியிரைப் புச்சிலந்திப்
போசறும னோசிலைக்குப் பேசு”.

(பொ-ள்.) மனோசிலையினால் சரும குட்டம், நளிர் சுரம், அஜகல்லிகா* ரோகம் இரைப்பு (சுவாசம்) சிலந்தி விடம் முதலியன போம்.

மற்றும், காசம், கபநோய், கண்ணோய், மூத்திரக்கிரிச்சரம் முதலியன நீங்கும்.

* குறிப்பு.—ஆட்டுக் கழுத்தில் உண்டாம் அதிரைப் போன்ற கொப்புளங்கள். இது குழந்தைகளுக்குக் காணும் நோய்.

(சுத்தி).

இஞ்சிச்சாறு, பழச்சாறு, பசுவின்மோர், இவைகளில் ஒன்றை மனோசிலைக்கு விட்டு, ஒருசாமம் நன்ருய் அரைத்து, உலர்த்தி எடுக்கச் சுத்தியாம்.

(வேறு)

மனோசிலை பலம் 1 (35 கிராம்) இதனைச் சிறு துண்டுகளாகச் செய்து, 5 பலம் (175 கிராம்) புளித்த மோரைப் பீங்கான் பாத்திரத்தில் விட்டு, அதில் இத்துண்டுகளை இட்டு வெய்யிலில் வைத்துக் கிளறிக் கொடுக்க வேண்டும். மாலையில் எடுத்து நீர்விட்டுக் கழுவி, முன்னளவு புளித்த மோர்விட்டு, மறுநாள் வெய்யிலில் வைத்து முன் போல செய்யவும். இவ்விதம் மும்முறை செய்யச் சுத்தியாம்.

(வேறு)

ஐந்து பலம் (175 கிராம்) கொடிவேலி வேர்ப்பட்டையை ¾ படி (975 மி. லிட்.) நீரிலிட்டு, மூன்றில் ஒன்ருகக் காய்ச்சி, அதில் 1 பலம் (35 கிராம்) மனோசிலைத்துண்டுகளைக் குடிநீரில் படும்படி தோலாந்திரமாய் நீர்சுண்டும் வரை எரிக்கவும். பிறகு ஒரு பாண்டத்தில் இரண்டு பலம் (70 கிராம்) ஆட்டுக் கொழுப்பை இட்டு அதில் மனோசிலைத் துண்டுகளை துணியில் முடிந்துபோட்டு, துணி கருகும்வரை வறுத்தெடுத்து எண்ணெய்ப் பசை நீங்க துணியால் துடைத்துக் கொள்ளவேண்டும். இச்சுத்தி, வைத்திய இரசவாத முறைகளுக்குப் பயன்படும்.

குறிப்பு.—குடி நீருக்கு, கொடி வேலி வேருக்குப் பதிலாக சிகப்பு அல்லது கருப்புக் கொடிவேலிப் பூவை உபயோகிக்கலாம். வெண்கொடி வேலியில் சுத்தி செய்யப்பட்ட மனோசிலை வைத்திய முறைகளுக்கு ஆவதுடன் இரசவாதத்தில் வெள்ளி செய்முறைகளுக்கும் ஆகும் என்று கூறப்பட்டுள்ளது.

மனோசிலையை, தாளகச்சுத்திமுறைகளுள் எவ்வகையிலேனும் செய்து கொள்ளலாம்.

(வேறு)

மனோசிலை 2 பலத்தை (70 கிராம்) கிழி கட்டிப் பெண் வெள்ளாட்டு மூத்திரம் 1¾ படியில் (1.625 லிட்). தோலாந்திரமாய் நீர் சுண்டும் வரை எரித்துக் கழுவி எடுத்து, கல்வத்திலிட்டு வெள்ளாட்டுப் பித்து நீர் விட்டு அரைத்து, சிறு வில்லைகளாகச் செய்து, வெய்யிலில் உலர்த்திக் கல்வத்திலிட்டு முன்போலப் பித்துநீர் விட்டு அரைத்து உலர்த்திக் கொள்ளவும். இவ்விதம் ஏழு முறை செய்யச் சுத்தியாம்.

### பற்பம்

''— வில்லைங்
கணையா லடலையைத்தீ காய்தலின்

என்னும் அடியால் மனோசிலைக்குத் திப்பிலி இரசம் விட்டு அரைத்துப் புடமிட்டெடுக்கப் பற்பமாம் என்றும், அப் பற்பத்தை வழங்கக் கபசுரம் நீங்கும் என்றும் கொள்ளக்கிடக்கின்றது.

(தே. கரிசல்).

### உபயோகம்.

மனோசிலையைப் பெரும்பான்மையும் தனியாகக் கையாளுவதில்லை. இதனைப் பிற சரக்குகளுடன் கூட்டிக் கருப்பு, மாத்திரை, தைலங்களாகப் பயன்படுத்துகின்றனர். இது பவுத்திரப் புண்களுக்கு மற்றைய பொருள்களுடன் கலந்து வெளிப்பிரயோகமாய்ப் பயன்படுத்தப்படும்.

மனோசிலையை நாயுருவிச் சாம்பலுடன் கலந்து, வெண்குட்டத்திற்கு மேல்ப் பூச்சாகப் பயன்படுத்தலாம்.

### மனோசிலை மாத்திரை.

சுத்தி செய்த மனோசிலை 1, திரிகடுகு, திப்பிலி மூலம் இவைகளின் சூரணம் வகை 1-க்கு 16, இவைகளைப் பங்குக் கணக்காய் நிறுத்தெடுத்து, துளசிரசம் விட்டு மைபோல் அரைத்து, மிளகளவு மாத்திரை செய்து உலர்த்திக் கொள்ளவும்.

**அளவு :** 1 முதல் 2 மாத்திரை வரை கொடுக்கவும்.

**தீரும்நோய் :** குளிர் சுரம்.

### சிவனார் அமிர்தம்.

''இருவியோ டிரதம் நாவி இசைந்தகந் தகமே சுக்கு
மருவிய சிலைவெங் காரம் மாகதி வகைக்கோ ரொன்று
தருகிய மிளகோ ரெட்டு சாந்தநற் கல்வத் திந்து
பருவமாய் நாள்க ளேழு பதமுட னரைத்தி டாயே.

அரைத்திடப் பொடிக ளுப்பா மனுபான விசேடத் தீய
வருத்துமெண் பதுவாம் வாதம் வன்பித்தம் நாற்பதோ டு
இருதிய திருப தையம் இயம்பிய சுவாசம் ஐந்தும்
பெருத்ததோர் குட்டங் குன்மம் பெருகிய சன்னி தானே,

சன்னிபு மூல ரோகம் க்ஷயமுடன் மகோத ரங்கள்
ஒவ்விய வரணை தேள்கடி வல்விடம் குமர கண்டன்
பன்னிய நரியஞ் செய்து பணவெடை கொள்வீ ராகில்
என்னிய சிவனு ரமிர்தம் ஈசனு ருரைத்த வாறே. ''

(பொ-ள்) இருவி, இரசம், கருநாபி, நெல்லிக்காய்க் கந்தகம், சுக்கு, மனோசிலை, வெங்காரம், அரிசித் திப்பிலி இவைகள் வகைக்குப் பலம் (35 கிராம்) ஒன்று, மிளகு பலம் எட்டு (280 கிராம்) இவைகளை முறைப்படி சுத்தி செய்து, தனித் தனிச் சூரணமாக்கி, மேற்கூறிய அளவாய் நிறுத்துக் கொண்டு, கல்வத்திலிட்டு ஏழு நாட்கள் விடாமல் அரைத்திடவும். இது கறுப்பாகும். அறுபான பேதத்தால் எண்பது வகை வாதங்கள், நாற்பது வகைப் பித்தங்கள், இருபது வகைக் கபங்கள், ஐந்து வகை சுவாசங்கள், குட்டம், குன்மம், சன்னி, மூலரோகம், க்ஷயம், மகோதரங்கள், அரணை தேள் முதலிய கடி விடங்கள் குமரகண்டவலி ஆகிய இவைகள் நீங்கும். சன்னி, விடங்கள், வலிப்பு முதலிய நோய்களுக்கு இதை ஆக்கிராணமாகவும் பண எடை (458 மி. கிராம்) உள்ளுக்கும் உபயோகிக்கலாம்.

சிலர் இருவியைச் சேர்த்தும் சிலர் சேர்க்காமலும் இதைச் செய்கின்றனர். இருவி சேர்ந்திருப்பின் கடும் பத்தியமாய் இருக்க வேண்டும்.

### இருவியின் சுத்தி.

இதனை, நாபியைப் போலவே கோநீரில் ஊறவைத்தெடுத்து நிழலில் உலர்த்திக் கொள்ளவேண்டும்.

### மனோசிலைச் செந்தூரம்.

சுத்தி செய்த மனோசிலை பலம் 1-க்கு (35 கிராம்), ஆவாரை இலைக் கற்கம் பலம் 2 (70 கிராம்) கொண்டு கவசித் துலர்த்தி, கிளிஞ்சல் சுண்ணம 4-பலம் (140 கிராம்) கொண்டு பாதியை ஓர் அகலில் பரப்பிவைத்து, அதன் மேல் கவசித்த மனோசிலையை வைத்து, அதன்மேல், மீதியுள்ள கிளிஞ்சல் சுண்ணத்தைப் போட்டு அமுத்தி, மேல் அகல் கொண்டு மூடி, 5 சீலைமண் வலுவாகச் செய்து காயவைத்து, இதன் மொத்த எடைக்கு 20 பங்கு எடையுள்ள வரட்டி கொண்டு புடமிடச் செந்தூரமாம்.

அளவு : ½ (32 மி. கிராம்) முதல் 1 உளுந்தெடை (65 மி. கிராம்) வரை.

தீரும் நோய் : சரும குஷ்டம், நளிர் சுரம், சுவாசம் முதலியன.

துணை மருந்துகள் : கருஞ்சீரகம், கார்போகி அரிசி முதலியன

குறிப்பு.—இங்கே கூறப்பட்ட கிளிஞ்சல் சுண்ணம், கும்பிடு கிளிஞ்சலைக் கொண்டு செய்யப்படுவதைக் குறிக்கும். இதனைக் கற்சுண்ணும்பும் பூ நீறும் கலந்து கரைத்த தெளிநீரில் சுத்தி செய்து ஓட்டிலிட்டு உலையில் வைத்து ஊதச் சுண்ணமாகும்.

### மனோசிலைப் புகை.

ஒரு பலம் (35 கிராம்) மனோசிலைக்கு, வெள்ளெருக்கம் பால் கொண்டு 6-மணி நேரம் நன்றாய்ச் சுருக்குக் கொடுத்துப்பிறகு மேற்படி பாலால் அரைத்து, சிறு மாத்திரைகளாய்ச் செய்து கொள்ளவும். இம்மாத்திரையில் ஒன்றை நெருப்பிலிட்டு, அதினின்றும் எழும்புகையை, வெண் குட்டம் உள்ள இடங் களில் படும்படிச் செய்யவும் இப்படிச் சின்னாட்கள் செய்ய நிறம் மாறும்.

**பத்தியம் :** செந்தூரத்தை உண்ணும்போதும், புகை போட்டுக் கொள்ளும் போதும் உப்பு, புளி, புகையிலை நீக்க வேண்டும்.

### மனோசிலைச் சூரணம்.

மனோசிலை, மூங்கிலுப்பு, கொம்பரக்கு, கருஞ்சீரகம், கஸ்தூரி மஞ்சள், மெருகன் கிழங்கு, கழற்சிப் பருப்பு இவை களைச் சமவெடை எடுத்து, முறைப்படி சூரணம் செய்து கொள்ளவும்.

**அளவு :** ¼ வராகனெடை (1.0 கிராம்). நாள் ஒன்றுக்கு மூன்று வேளை.

**துணைமருந்து :** தேன்.

**தீரும் நோய் :** நாட்பட்ட சுரம்

(அகத்தியர் தீக்ஷை 21.)

### மனோசிலை எண்ணெய்.

மனோசிலை, தாளகம் வகைக்கு இரண்டு பங்கு, மிளகு நான்கு பங்கு, நல்லெண்ணெய் இருபது பங்கு, எருக்கஞ்சாறு 5-பங்கு இவைகளை ஒன்று சேர்த்துக் காய்ச்சி, பதத்தில் வடித்துக்கொண்டு, தொழுநோய்ப் புண்களுக்கு மேல் ஆட் சிக்குப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

### சந்திரோதய மாத்திரை.

கடுக்காய்ப் பருப்பு, திப்பிலி, மனோசிலை, சுங்கு, கோஷடம், மிளகு, வசம்பு இவைகளைச் சமனெடையாய் நிறுத்தெடுத்துக் கொண்டு, சுத்த நீர் விட்டு ஒரு சாமம் அரைத்துப் பிறகு வெள் ளாட்டுப்பால் விட்டு ஒரு சாமம் அரைத்து, பதத்தில் மாத்திரை களாய்த் திரட்டி நிழலிலுலர்த்தவும்.

உலர்த்திய சந்திரோதய மாத்திரையைத் தகுந்த அனுபானங்களில் இழைத்துக் கண்ணிலிட, பலமாய் வளர்ந்து கிடக்கும் சதைப்படலம், பித்தகாசம், மாலைக்கண், கண்வலி, விரணச் சுக்கிரன், பில்லம் முதலியன தீரும்.

கஸ்தூரிக்கருப்பு, விஷ்ணுச்சக்கரம், கந்தகச் சுடர்த் தைலம், பாஷாண மாத்திரை, பிரமானந்த பைரவம் போன்ற பல பெருமருந்துகளில் மனோசிலை சேர்க்கப்பட்டிருக்கின்றது.

குறிப்பு — மனோசிலையை வெடியுப்புடன் சேர்த்து அரைத்தால், நெருப்புண்டாய் வெடிக்கும். ஆகவே இவை இரண்டும் சேருகின்ற மருந்துகளைச் செய்யும்பொழுது, நெய்யோ அல்லது வெண்ணெயோ சேர்த்து அரைக்கவேண்டும்.

## மிருதாருசிங்கி.

## GALENA SULPHIE OF LEAD LEAD ORE.

இது, சிங்கி என்று வழங்கப்படும். போகர், சிங்கி பாஷாணத்தை வைப்பின் கீழ்க் கூறியிருக்கின்றார். இது மூவகைப்படும். அவை (1) மிருதாரு சிங்கி, (2) இரத்தசிங்கி, (3) ஏமசிங்கி என்பன. மிருதாரு சிங்கியின் வைப்பு முறையைக் கீழ்க்காணும் செய்யுட்களால் உணரலாம்.

"காளாமற் காரியஞ் சேர்தானெட்டுக் கலந்திடவே சுரைக்கெந்தி சேரிரண்டு
மீளாமற் காரீய முருக்கிக் கொண்டு மிடுக்கான கெந்தி யிட்டு வறுத்திட்டக்கால்
வேளாமற் காரீயந் தூளு மாகும் மிடுக்கான கல்வத்தி லிதனைப் போடே
இதனோடே கூடவிடு மருந்து கேளு ஏற்றமாம் வெடியுப்புப் பலமு மெட்டுப்
பதனோடே தாளகமும் பலமு மெட்டுப் பங்காக இவை யெல்லாம் பொடியாய்ப் பண்ணிப்
புதனோடே கண்குவிந்த கலயந் தன்னிற் போட்டுமே வாலுகையின் மேலே வைத்துக்
கதனோடே மூன்று நாள் தீயைப் போடு காரியாய் தொடர்ததனையெரித்தி டாயே
எரித்திட்டு மூன்றுநா ளாறப்போடு எளிதாகக் கலயத்தை யுடைத்துப் பார்த்தால
கரித்திட்டுக் கட்டியாய் பொன்னின் நிறமாய்க் கனமாக மிருதாரு சிங்கியாச்சு'

இவ்விதம் செய்யப்பட்ட மிருதாரு சிங்கியுடன், உடும்பு இரத்தமும் மற்றைய சரக்குகளும் சேர்த்து வைக்கப்பட்டது இரத்த சிங்கி என்றும், இரத்தசிங்கியுடன் தங்கமும் மற்றைய சரக்குகளும் சேர்த்து வைக்கப்பட்டது ஏமசிங்கி என்றும் கூறப் பட்டுள்ளன.

கடைகளில் கிடைக்கின்ற சரக்கு, ஈயமணலைக் குகையிலிட்டு ஊதும் பொழுது உண்டானது ஆகும். இஃது உலோகச் சாயல் கூடிய மஞ்சள் அல்லது பசுமை நிறத்துடன் கல்லைப்போல் கனமாய் இருக்கும். நீரில் கரையாது. இதன் புகையைச் சுவா சித்து வந்தால் பல கொடிய நோய்கள் உற்பத்தியாகும். இதற்கு மஞ்சட்சந்தனத்தின் சுவையும் வாசனையும் உண்டு.

பேரீச்சங்காயின் கொட்டையை நீக்கி, அதனுள் மிருதாரு சிங்கியை வைத்துக் கயிற்றால் கட்டி மூசையிலிட்டு ஊதி எடுக்க, ஈயம் வெளிப்படும்.

இதற்குத் துவப்பி, குளிர்ச்சி உண்டாக்கி, புழுக்கொல்லி ஆகிய செய்கைகள் உள.

பொதுக் குணம்.

"மிருதார சிங்கெனவே மெல்லவுரைத் தாலு
முருவார் புடைகரப்பா னோடு—மொருவிதமோ
சாலச் சிரங்குபுண்ணுந் தப்பாம லாறிவிடும்
வேலொத்த கண்மயிலே விள்."

(பொ—ரை) மிருதாருசிங்கியினால், உடம்பெங்கும் பரவு கின்ற புடை, கரப்பான், கிரந்திக் கூட்டம், மகாவிரணம் இவை நீங்கும்.

சுத்தி.

இதனை, வெள்ளாட்டு நீரில் காய்ச்சி எடுத்துப் பிறகு முலைப் பால், வெள்ளாட்டுப்பால் இவைகளில் முறையே பத்து நாழிகை ஊறவைத்தெடுக்கச் சுத்தியாம்.

சிங்கிபஸ்ம பற்பம்.

நல்ல கரடுகரடாயும் கனமாயும் பளபளப்பாயும் இரு கின்ற மிருதார் சிங்கி தோலா 1 (12 கிராம்). குஞ்சுகளை பொரித்தெடுத்த அண்டவோடு தோலா 1 (12 கிராம்), மூன்றுங் காய்ச்சல் வெடியுப்பு தோலா 1 (12 கிராம்); இவைகளைச் சுத்தி செய்து, மூன்று சாமம் வெள்ளெருக்கன் பாலாலாட்டி, சிறு பில்லைகளாக்கி, நன்றாய்க் காயவைத்து, ஒரு மூசையிலிட்டுக் கொல்லன் உலையில் ஒரும் சாம ஊதி எடுக்க நற்சுண்ணமாகும்.

அளவு : 1/2 (65 மி. கிராம்) முதல் 2 குன்றிஎடை. (260மி. கிராம்).

துணை மருந்துகள் : தேன், நெய்.

தீரும் நோய்கள் : க்ஷயம், காசம், ஈளை, இருமல் முதலியன.

பத்தியம் : புளி, காரம் கிரந்திப் பண்டங்கள், சீதளப் பண்டங்கள், புகை, போகம் இவைகள் ஆகா.

இந்தச் சுண்ணத்தை எந்த மருந்துடன் சேர்த்து உருக்கின போதிலும் அந்த மருந்து வெட்டையாகும்.

### மிருதாருசிங்கிச் செந்தூரம்.

மிருதாருசிங்கி சேர் 1 (280 கிராம்) இதனைப் பொடித்துத் தேனில் மூன்றுநாள் ஊற வைத்தெடுத்துக் குகையிலிட்டு அல்லது இரும்புச் கரண்டியிலிட்டு உருக்கி ஊற்ற ஈயம் புறப்படும். அந்த ஈயத்தை ஓர் அடி கனத்த சட்டியில் வைத்து அடுப்பேற்றி சாடாக்கினியாய் எரித்துக் கண்டங்கத்திரி பொற்றிலைக் கையாந் தகரை, புரசம்பூ இவை மூன்றும் சமஎடை எடுத்துப் பொடித்து வைத்துக் கொண்டு, ஈயத்துக்குக் கிராசம் கொடுத்து செந்தூரம் ஆகும்வரை இரும்புக் கரண்டியால் கிண்டி வரவும். செந்தூரமானபின் ஆறவிட்டுக் குப்பியில் அடைத்துக் கொள்ளவும்.

அளவு : 1/2 பணஎடை (244 மி.கிரா.)

துணை மருந்து : தேனில் இருவேளை வீதம் 1 மண்டலம் கொடுத்துவர, சகல மேக விரணங்களும் நீங்கும்.

பத்தியம்: இச்சாபத்தியம்.

### மிருதாருசிங்கிச் செந்தூரம் (வேறு)

மிருதாருசிங்கியை ஒரு கலயத்திலிட்டு, எலுமிச்சம்பழம் ரசம்விட்டு வாய் மூடி, சீலை மண் செய்து, குழியில் 8 நாள் புதைத்து எடுத்துக் கழுவிப் போட்டு, மேற்படி மருந்திற்கு நான்கில் ஒரு பங்கு கந்தகம் கூட்டி, பொற்றிலைக்கையான் சாற்றால் ஒரு சாமம் (3 மணி) அரைத்து, வில்லை செய்து காய வைத்து, தரையிற் குழி தோண்டி நாழி (1.3 லிட்) செங்கற் றூள் கீழே பரப்பி, அதன் மேல் வில்லை வைத்து, மேலே நாழி (1.3 லிட்) தூள் போட்டு மூடி, அதன்மேல் பத்து எருவடுக்கிப் புடம் போட்டெடுத்து, மறுபடியும் பொற்றிலைக்கையான் சாற்றால் அரைத்து, வில்லை செய்து காய வைத்து, சீலை மண் செய்து புடம் போடுக. இவ்விதம் மூன்று புடம் ஆனபின்பு மறுபடியும் பொற்றிலைக்கையான் சாறு விட்டரைத்துக் காய வைத்துக்

கிளிஞ்சலைச் சட்டியிலிட்டு அதன் மேல் வில்லையை வைத்து மேலும் கிளிஞ்சலால் மூடி, சட்டி மூடி 3 சீலை மண் செய்து, 10 எருவில் புடம்போடச் செந்தூரமாகும்.

அளவு : பணவெடை.

துணை மருந்து : தேன், வெண்ணெய் முதலியன.

மிருதாருசிங்கி பிளாஸ்திரி,

மிருதாருசிங்கி 4 ராத்தல் (1.800 கி.கிராம்), நல்லெண்ணெய் 1 காலன் (4.55 லிட்) நீர் 3 1-2 பயின்ட் (1750 மி. லிட்) இவைகளை இரும்புப் பாத்திரத்திலிட்டு வெந்நீர்மேல் வைத்து 4 அல்லது 5 மணி நேரம் இளந்தீயிலிட்டு எரித்துத் துழாவி, குழம்புப் பக்குவத்தில் எடுத்து, வெட்டுக் காயங்களுக்கு உபயோகிக்கலாம்.

இது வானமெழுகு என்ற மருந்திலும், வங்கக் களிம்பு என்ற மருந்திலும் சேர்க்கப்படுகின்றது.

## வெள்ளைப் பாஷாணம்

## ARSENUM ACIDUM ARSENIOSUM, ARSENIOUS ACID, WHITE ARSENIC.

வேறு பெயர்கள் : வெள்ளை, சங்குப் பாஷாணம்.

வெள்ளைப் பாஷாணம் நிறத்தில் சீமைச் சுண்ணாம்பைப் போலிருக்கும்; தோலில் பட்டால் தடிப்புண்டாகும்; நீர் பட்டால் உள்ளுக்கு இழுத்துக்கொள்ளும்; நெருப்பிலிட புகைந்து வெள்ளைப்பூண்டு வாசனை வீசும்; இது தற்காலம் கிடைப்பது அரிது. சங்கு பாஷாணம், சங்கைப் போன்ற நிறமும் ஒளியும் பெற்றிருப்பதுடன், கையில் பட்டால் ஒட்டாது. வெட்டுவாய், கண்ணாடிப் போலப் பளபளப்பாய் ஒளிரும்; எளிதில் உடைந்து தூளாகும்; நீரில் கரையும். இக்காலத்தில் மருந்து முறைகளில் சங்கு பாஷாணம் என்று கூறப்படும் இடங்களிலேயும் வெள்ளைப் பாஷாணம் என்று கூறப்படும் இடங்களிலேயும் சங்கு பாஷாணத்தையே உபயோகிக்கின்றார்கள்.

பாஷாணம் பூமியில் உற்பத்தியாகிறது; சில சமயம் கலப்புக் குற்றமில்லாமல் கிடைக்கின்றது; பெரும்பான்மையும் இது கந்தகம், அயம், தாமபரம் முதலிய இதர உலோகங்களுடன் கலந்து கிடக்கின்றது.

செய்கை : மிகக் குறைந்த அளவில் பசித்தீத் தூண்டி, உடல் தேற்றி, நரம்புத் தளர்ச்சி நீக்கி, உடல் உரமாக்கி, சுரமகற்றி முதலிய செய்கைகளும் தமரகம் (இதயம்), நுரையீரல், குடல், ஜனனேந்திரியம் இவைகளைத் தூண்டும் தன்மைகளும் வெள்ளைப் பாஷாணத்திற்கு உள.

இஃது உடல் தாதுக்களுக்கு வன்மையை உண்டுபண்ணி நோய் அனுகாமல் பாதுகாக்கும்.

யூனானி வைத்தியர்கள், தாதுவிருத்தினிச் செய்கைக்காக வெள்ளைப் பாஷாணத்தை அதிகமாகக் கையாளுகின்றார்கள். மேலும் யூனானி முறைகளிலும், மேலை நாட்டு மருத்துவத்திலும் வெள்ளைப் பாடாணத்தால் ஆக்கப்பட்ட மருந்துகள், பரங்கி நோயில் அதிகமாகக் கையாளப்படுகின்றது.

## பொது குணம்.

''வெள்ளைப்பா டாணம் விடங்கடிதீ ரும்பூசக்
கொள்ளைச் சுரந்தோஷங் கோரசந்நி—தொள்ளையுறு
நாசிப்புண் வாய்ப்புண் நலிகிரந்தி போமுண்ண
ஆசிக்குங் கும்பமுலை ஆய்.''

(பொ-ள்) வெள்ளைப் பாடாணத்தினால், விஷக்கடி, கொள்ளைக் காய்ச்சல், தோடம், சன்னி, மூக்குப் புண், வாய்ப்புண், கிரந்தி முதலியன நீங்கும்.

மற்றும் இதனால், யானைக்கால் சுரம், தோலைப் பற்றிய பிணிகள், சுவாச காசம் முதலியன நீங்கும்.

அளவு: 1/16 (4 மி.கிரா.) முதல் 1/8 உளுந்தெடை (8 மி. கிரா.) வரை.

## சுத்தி.

1 பலம் (35 கிராம்) வெள்ளைப் பாஷாணத்தைப் பொடித்து, சற்றுத் தளர்ச்சியாய் முரட்டுத் துணியில் முடிந்து கொண்டு. 1 பலம் (35 கிராம்) மிளகை நீர் விட்டு அரைத்து, 1 படி (1.3 லிட்டர்) சிறு கீரைச் சாற்றில் கரைத்து, மண்பாண்டத்தில் இட்டு, அதில் பாஷாண முடிப்பைக் கிழிகட்டிப் பாண்டத்தின் அடியிற் படாமல் தொங்கவிட்டு. அடுப்பேற்றிச் சிறுதீக் கொண்டு எரித்துச் சாறு சுண்டியவுடன் இறக்கி, நீர் விட்டுப் பாஷாணத்தைக் கழுவி எடுத்துக் கொள்ளவும். இவ்விதம் மும்முறை செய்யச் சுத்தியாகும்.

குறிப்பு.— மேற்கண்டபடி நவ பாஷாணங்களையும் சுத்தி செய்துகொள்ளலாம்.

(வேறு)

காடி, பழச்சாறு, புளிமாங்காய்ச் சாறு, புளியம்பிஞ்சுச் சாறு, புளி இலைச் சாறு, புளிச்சக் கீரைச் சாறு, புளியாரைச் சாறு, தமரத்தங்காய்ச் சாறு இவைகளுள் ஏதாவது மூன்று சாறுகளினால் வெள்ளைப் பாஷாணத்தைப் பட்டுத் துணியில் முடிந்து, ஓட்டி விட்டு அடுப்பேற்றி, சிறு தீயால் எரித்து அதற்குச் சுருக்குக் கொடுக்கச் சுத்தியாம்.

குறிப்பு : இவ்விதமே கௌரி பாஷாணத்தையும் சுத்தி செய்யலாம்.

(வேறு அரைப்புப் புட சுத்தி.)

ஒரு பலம் (35 கிராம்) பாஷாணத்தைக் கல்வத்திலிட்டுப் பொடித்து பழச்சாறு 3 பலம் (105 கிராம்) விட்டு அரைத்துச் சிறு வில்லைகளாய்ச் செய்து உலர்த்திக்கொள்ள வேண்டும். இவ் விதம் ஏழு முறை செய்யவும்.

குறிப்பு : இவ்விதமே நவ பாஷாணங்களையும் சுத்தி செய்து கொள்ளலாம்.

(வேறு)

ஒரு பலம் (35 கிராம்) பாஷாணத்திற்கு 2-பலம் (70 கிராம்) பாகல் இலைச் சமூலச் சாறு விட்டு வெய்யிலில் வைக்க வேண்டும். இவ்விதம் 15 நாள் செய்ய வேண்டும். பிறகு மேற்படி பாஷா ணத்திற்கு, பலாக் கொட்டைக் குழித் தைலம் 2 பலம் (70 கிராம்) விட்டுக் கலந்து வெய்யிலில் வைக்கவும். இது போல் மேலும் பதினைந்து நாட்கள் செய்ய நல்ல சுத்தியாம். சுத்தி முறை பிசகின் கொடிய விடமாகும்.

இதனை,

"பாஷாண நாபியென்று மால கலாப்
பண்புநிலை யறிந்ததையே மவின மாற்றிக்
கோடான கோடியெனும் அவிழ்த நன்மை
கொண்டாடு பண்டிதரே குணவா னவார்."

என்னும் போகர் செய்யுளால் உணரலாம்.

இதனால் பிசகு வந்தால், அகத்தி முரிப்பு, பாகல் இலை ரசமாகும். அதனாலும் முரியாவிடின், மிளகைப் பயன்படுத்த வேண்டு என்பர்.

(தே. ய. வே. வி. உரை.)

(வேறு)

வெள்ளைப் பாஷாணத்தை வெள்ளெருக்கன் பாலிலும் எலுமிச்சம் பழச் சாற்றிலும் ஒவ்வொரு நாள் ஊறவைத்துக் காடி விட்டுக் கழுவி எடுத்துக் கொண்டு, பிறகு மெருகன் கிழங்கை துளைந்து, அதற்குள் பாஷாணத்தைச் சொருகி, மேற் படி தூளால் மூடி பசுஞ் சாணத்தால் கவசித்துக் காயவைத்து லகு புடமிட்டெடுக்கச் சுத்தியாம்.

(வேறு)

வெள்ளைப் பாஷாணத்தைக் கற்சுண்ணாம்புக்குள் புதைந்துப் பனங்கள் விட்டு ஏழு முறை தாளித்து எடுக்க சுத்தியாம்.

(வேறு)

வெள்ளைப் பாஷாணத்திற்கு அவுரிச் சாற்றையும், வெள்ளெருக்கன் சாற்றையும் கொண்டு தனித்தனியாய் மும்மூன்று சாமம் சுருக்குக் கொடுத்தெடுக்கச் சுத்தியாம்.

(வேறு)

வெள்ளைப் பாஷாணத்திற்கு, குட்டிப்பலா குழித் தைலம் கொண்டு சுருக்குக் கொடுத்தெடுக்கச் சுத்தியாம்.

(வேறு)

வெள்ளைப் பாஷாணத்தை, வேப்பங்காய்ப்பால், எருக்கம் பால் இவைகளைக் கொண்டு சுருக்குக் கொடுத்தெடுக்கச் சுத்தியாம்.

பாஷாண பற்பம்.

இரண்டுபடி (2.6 லிட்டர்) கொள்ளக்கூடிய மண்பானை ஒன்று எடுத்து, அதில் ஒரு படி (1.3 லிட்டர்) கண்டங்கத்திரிச் சாம்பலைக் கொட்டி, அதன்மேல் ஒரு பலம் (35 கிராம்) சுத்தி செய்த பாஷாணக் கட்டியை வைத்து, அதன்மேல் ஒருபடி (1.3 லிட்டர்) கண்டங்கத்திரிச் சாம்பலைக் கொட்டி யழுத்தி, மேலகல்கொண்டு மூடி, சீலை மண் செய்து, அடுப்பின் மீது ஏற்றி 9 மணி நேரம் எரித்து, ஆறவிட்டுச் சாம்பலை நீக்கிப் பார்க்க பாஷாணம் பற்பமாகி இருக்கும்.

அளவு: 1/4 (16 மி. கிராம்) முதல் 1/2 (32 மி. கிராம்) உளுந்தெடை.

அனுபானம் ; வெண்ணெய், நெய், பால் முதலியன

செய்கை : உடல்தேற்றி.

பற்பம் (வேறு)

ஒரு பலமுள்ள (35 கிராம்) பாஷாணக் கட்டியை, அப்பிரகத் தகட்டின்மீது வைத்து, வெண்நீர் முள்ளிச் சாற்றினால் நன்றாய்ச் சுருக்குக் கொடுத்து எடுக்கவும். இது நெருப்பிலிட்டால் புகைதல் கூடாது. புகைந்தால் மறுபடியும் சுருக்குக் கொடுத் தெடுக்கவும்.

நெருப்புக்கு நிற்கும் மேற்படி பாஷாணத்திற்கு, ஓர் அங்குல கனம் இருக்கத்தக்கதாக வெண்நீர்முள்ளி கல்கத்தைக் கொண்டு கவசம் செய்து, மூசையிலிட்டுச் சுக்கான் கல்லினால் செய்யப்பட்ட ஓடு கொண்டு மூசையை மூடி பண்சீலை செய்து உலர்த்தி, மேற்படி மூசை எடைக்கு 15 பங்கு எடையுள்ள வரட்டிகொண்டு புடமிட்டு ஆறியவுடன் எடுக்கவும். எடுத்த கட்டியை இரண்டு இரவு சந்திர புடம் வைத்து எடுத்துப்பார்க்க பற்பமாம்.

பாஷாண பற்பம்.

பாஷாணக் கட்டியைத் திருகு கள்ளிப்பாலில் ஊறவைத்து, உலர்த்தி எடுத்துக்கொண்டு, பிறகு சீனக்காரம், வெடியுப்பு, பேரண்டம் இம் மூன்றையும் முட்டை வெண்கருவால் அரைத்து மூசை செய்து மேற்படி பாஷாணத்தை இம் மூசையில் வைத்து மேலோடு கொண்டு மூடி, சீலைமண் செய்து குக்கிட புடமிடப் பற்பமாம்.

(நன்வ. 1000.)

பாஷாண செந்தூரம்.

பாஷாணம் பலம் 1 (35 கிராம்), ஐந்தாம் காய்ச்சல் வெடியுப்பு பலம் 1 (35 கிராம்)— இவை இரண்டையும் பொடித்துக் குப்பியிலிட்டு அடைப்பானால் மூடி மணல் பொறியிலிட்டு எரிக்கவும். எரித்து எடுத்து, மறு குப்பியிலிட்டு மறுபடியும் முன்போல எரித்து எடுக்கச் செந்தூரமாம்.

அளவு : 1/2 (32 மி. கிராம்) முதல் 1 உளுந்தெடை (65 மி. கிராம்).

துணைமருந்துகள் : இஞ்சிச் சாறு, தேன், சர்க்கரை, சுக்குத் தூள் முதலியன.

தீரும் நோய்கள் : பல்வகைப்பட்ட சுரங்கள்; முக்கியமாக மாறல் சுரங்கள் முதலியன.

## மாத்திரை (வேறு)

ஒரு பலம் (35 கிராம்) பாஷாணத்திற்குக் கொம்புப் பாகல் சாறுகொண்டு 12 மணி நேரம் சுருக்குக் கொடுத்துத் துடைத்து எடுத்துக்கொள்ளவும். பிறகு ஒரு பெரிய கொம்புப்பாகற் காயை இரண்டாய்ப் பிளந்து அதன் நடுவில் பாஷாணத்தை வைத்துக் கயிற்றால் கட்டி எருமைச் சாணத்தால் கவசித்துக் காய வைத்து, 3 எருவில் மேல்கவசம் கருக லகுபுடம் இட்டாவது, வாட்டியாவது எடுத்துக்கொள்ளவும். உள்ளிருக்கும் பாஷாணத்தை, எடுத்துத் துடைத்துத் தூள் செய்துக்கொண்டு, கர்ப்பூர சிலாசத்து, பாஷாண எடைக்கு இரண்டு பங்கெடுத்துத் தூள் செய்து, ஓர் அகலில் பாதி சிலாசத்தைப் பரப்பி, அதன் மேல் பாஷாணத் தூளை வைத்து, மேலும் மிகுதியுள்ள சிலாசத்தால் மூடி, மேல் கல் கொண்டு மூடி சீலை செய்து, 50 எருக் கொண்டு புடமிட்டு எடுக்கவும். இதற்குப் பாதி எடை மிளகுத் தூள் சேர்த்து, மிளகுக் குடிநீரால் இரண்டு (6 மணி) அல்லது மூன்று சாமம் (9 மணி) அரைத்து, சிறுபயறளவு மாத்திரை செய்து நிழலில் உலர்த்தி எடுத்துக்கொள்ளவும்.

அளவு : 1 மாத்திரை.

துணை மருந்துகள் : இஞ்சிச் சாறு, மிளகுக் குடிநீர்.

தீரும் நோய்கள் : குளிர் சுரம், சுரங்கள், தோற்பிணி, புண், கிரந்தி.

பத்தியம் : புளி, உப்பு நீக்கவும், பாலும் சோறும், ரொட்டியும் பாலும் ஆம்.

## மாத்திரை (வேறு)

பாஷாணக் கட்டிக்கு, எருக்கம்பால் கொண்டு நாலு சாமம் (12 மணி) சுருக்கிட்டுச் சுத்தி செய்து கொள்ளவும். இலிங்கத்தை, முலைப்பாலில் ஒரு சாமம் (3 மணி) ஊற வைத்துச் சுத்தி செய்து கொள்ளவும். இந்த இரண்டு சரக்குகளுடன் வெள்ளை மிளகு சேர்த்துப் பழச் சாறு விட்டு நாலு சாமம் (12 மணி) அரைத்து, உளுந்துபோல் மாத்திரை செய்து நிழலில் உலர்த்தி எடுத்துக் கொள்ளவும்.

அளவு : நாள் ஒன்றுக்கு இருவேளை வீதம் மூன்று நாள் கொடுக்கவும்.

துணை மருந்து : குளிர்ந்த நீர்.

தீரும் நோய் : குளிர் சுரம்.

பத்தியம் : புளி, புகை ஆகா. வழுதுணை, துவரை ஆகும்.

குறிப்பு.—ஏழாம் நாள் மிளகுக் குடிநீர் கொடுத்து, எட்டாம் நாள் ஓமம் தேய்த்து வெந்நீரால் முழுக்காட்டி, சுட்டபுளி கூட்டவும்.

## பாஷாண மாத்திரை.

''அத்திசுர மெங்கே அதற்கடுத்த நாள்தனிலே
மற்றசுர மெங்கே வழுத்தக்கேன்—புத்திரனே
வேதி பொரிகாவி வெண்மரிசம் வெள்ளையுடன்
ஆதிமரி சச்சாற் றரை.''

(பொ-ள்) அன்னபேதி செந்தூரம், வெங்காரம், பூங்காவிக்கல், வெண்மிளகு, வெள்ளைப் பாஷாணம் இவைகளை முறைப்படி சுத்தி செய்து சூரணமாக்கிச் சம அளவாய் எடுத்து மிளகு குடி நீரில் அரைத்து, உளுந்து அல்லது மிளகளவு உருட்டி இரண்டு மாதங்கள் கழித்து உபயோகிக்கவும். இதனால் அத்திசுரம், முறைச்சுரங்கள் நீங்கும்.

## பாஷாண மெழுகு (வெள்ளை மெழுகு).

''வேகுமே வரையாப்புத் தீர வென்றால்
வெள்ளைப்பா டாணமதை மெழுகி லூட்டி
ஏகமே வில்லைதட்டி வெதுப்பிக் கட்ட
விருந்தவிடந் தெரியாம லேகும் பாரே.''

## விஷங்களுக்கு குழம்பு.

வேப்பமுத்து, இரசம், கெந்தகம், துருசு, வெள்ளைப் பாஷாணம், மனோசிலை, பெருங்காயம், சுத்தி செய்த நேர் வாளம் இவைகள் வகைக்குக் கழஞ்சு (5.1 கிராம்) வீதம் கூட்டி, வெள்ளருக்கம் பால் விட்டு ஒரு சாமம் (3 மணி) மெழுகுபோல் அரைத்துப் பிறகு வேப்ப நெய் விட்டு ஒரு சாமம் (3 மணி) அரைத்து எடுத்து, அதைக் கொம்புச் சிமிழில் வைத்துக் கொள்க.

விஷம் தீண்டி வந்தபேர்க்கு, பயறளவு குழம்பை வெற்றிலையில் ஈந்து கடிவாயினும் கொஞ்சம் பூசச் சகலவிடமும் தீரும்

## பாஷாணக் கட்டு.

வெள்ளைப் பாஷாணத்தைப் பாகற்காய்க்குள் வைத்து, பனங் கள்ளிலிட்டு வேகவைத்து எடுக்கக் கட்டும்.

இதைத் தக்க அனுபானத்தில் கொடுக்க, சகல சுரமும் போம்.

(யூகி—சிந்தாமணி)

## வெள்ளைப்பாடண நஞ்சுக்குணம்.

இது சிறிய அளவிலேயே மரணத்தை விளைவிக்கக் கூடியது. உடலுக்குப் பலகாரி செய்கையைப் புரியுமெனினும், அளவுக்கு மிஞ்சிய காலத்தில் மிக்க கொடிய நஞ்சாகும். அதிக அளவில் கொள்ள மரணத்தை விரைவில் விளைவிக்கும். அளவு கடந்த நாட்கள் சிறு அளவில் உபயோகிக்கினும் இது, நாட்பட்ட விடக்குறி குணங்களை விளைவிக்கும்.

## தீவிர விடக்குறி குணம்.

இரத்த முறிவால், சிரங்கு, கொப்புளம் உண்டாதல், கைகால் விரல்கள் வலித்துக் குரங்கு பைசாசங்களின் விரல்களைப் போலாதல், நாளுக்கு நாள் முகத்தில் வீக்கமுண்டாதல், வாய் கசத்தல், மூக்குத் தண்டு வீங்குதல், மேல் வாய் உதடு புண்ணுதல், உள்ளுக்குக் கொண்ட சில நிமிடங்களுக்குள் வாயில் ஒருவிதக் களிம்புச் சுவை உண்டாதல், நீர் சுரத்தல், வாய் புண்ணுதல், வாய் குமட்டல், தொண்டை நோதல், விழுங்க வொட்டாமை, வயிற்றில் எரிச்சல், வாந்தி பேதி, வாந்தியிலும் பேதியிலும் இரத்தம் காணல், வாந்தியில் கவிச்சு வாசனை வீசல், தாகம், நீர் அடைப்பு, மூர்ச்சித்தல், வியர்த்தல், கையுங்காலும் வியர்த்துத் திமிர்தல், குரக்கு வலி வாய் பிதற்றல், அறிவு மங்கல், தலைநோய், மயக்கம், சில வேளைகளில் உடம்பு முற்றும் ஊதல் ஆகிய பல கொடிய குணங்கள் காணும். சிகிச்சை செய்யாவிடின் மரணமும் நேரிடும்.

குறிப்பு.—இதன் குறி குணங்களிற் சில தவிர மற்றவை ஊழி நோயின் குறி குணங்களை ஒத்திருக்கும்.

## நாட்பட்ட விடக்குறி குணம்.

இது நாட்பட்ட விடமாகில் சீக்கிரத்தில் கொல்லாது, தேகம் மூழுவதும் தினவெடுத்தல், நமைச்சல், சொறிபோலப் பக்கு விழ்தல், காமாலை, அசீரணம் முதலிய குணங்களுண்டாகும்.

## முறிவு.

ஏலம் வராகனெடை 1 (4.2 கிராம்) முசுமுசுக்கை வேர் வராகனெடை 1 (4.2 கிராம்) இவ்விரண்டையும் குடிநீர் செய்து அதில் வெள்ளைச் சருக்கரை, படிகாரம் வகைக்கு வராகனெடை 1 (4.2 கிராம்) சேர்த்து ஒரு நாளைக்கு இரு வேளையாய் ஒரு மண்டலம் சாப்பிட வேண்டியது.

(தே. ய. வெ. வி. உ.)

(வேறு)

''கேளப்பா வாந்தியுடன் பித்த மீறில்
கிருபையுடன் மிளகுநீர் குடிக்கத் தீரும்
வேளப்பா பாஷாணந் தின்ற பேர்க்கு
விதமாக மிளகொருசேர் தன்னை வாங்கி
நாளப்பா அரைத்த ரத்தே யுள்ளுக் கீய
நன்மையுள்ள பாஷாணம் வீறு கெட்டுத்
தாளப்பா மலத்துடனே மலமாய்ப் போகுந்
தயவான மாற்றறிந்து தனதாய் நில்லே.''

(வேறு)

இதற்கு அவுரிவேர் கல்கத்தை கொட்டைப்பாக்களவு இருவேளை விதம் கொடுத்தாலும் தீரும்.

## VII. காரசாரம்.

### அப்பளக் காரம்.

### SODII CARBONAS IMPURA OR SODIUM CARBONATE DHOBIS EARTH.

இதை உழமண் என்பர். களர் நிலத்தில் விளைகின்ற உவர்மண்ணைச் சேகரித்து, நீர்விட்டு நன்றாய்க் கரைத்து வடி கட்டித் தெளியச் செய்து, அத் தெளிந்த நீரை காய்ச்சிக் குழம்புப் பக்குவத்தில் தட்டுகளில் ஊற்றி வெயிலில் வைத்து உலர்த்திச் சிறுசிறு பலகைகளாய்த் துண்டித்து சேகரித்துக் கொள்ளல் வழக்கம். இது சிறிது வெண்மை கலந்த பழுப்பு நிறமாய் இருக்கும். இஃது அப்பளம் பொரிவதற்காக இடப்படும் காரமாகையினால், அப்பளக்காரம் என்று பெயர் பெற்றது. இதற்கு வயிற்றுப் புளிப்பகற்றி, அகட்டு வாயுவகற்றி, கற் கரைச்சி, சிறுநீர் பெருக்கி ஆகிய செய்கைகள் உள.

பொதுக் குணம்.

''குடல்வாதஞ் சூலை கொடிதான வாதம்
அடல்புரியு மைய மடுக்கும்—நெடுவயிற்றின்
உப்புசத்தி னோடு உயர்குன்ம நோயகற்று
மப்பளக் கார மது.''

(பொ-ள்) அப்பளக்காரம் வாதக் குடல்விருத்தி சூலை, மகாவாதம் கபாதிக்கம், வயிற்றுப்புசம், வாதகுன்மம் இவற்றை நீக்கும். மற்றும் இதனால் கீல்வீக்கமும் நீங்கும்.

**உபயோகம்.**

அரை (2.1 கிராம்) முதல் ஒரு வராகனெடை (4.2 கிராம்) அப்பளக்காரத்தை நீரில் கலந்து கொடுத்துவரக் குன்மம், வயிற்றுப்புசம், கபம், கில்வீக்கம், வாதநோய் முதலியன நீங்கும்.

எலுமிச்சம் பழத்தை இரண்டாக்கி, விதைகளை நீக்கி, ஒரு பாதியை அப்பளக்காரப் பொடியில் அழுத்தி, அதனைச் சூதக வாயுவினால் வருந்தும் மாதர்க்கு மாதவிலக்கம் வந்த நாள் முதல் மூன்று நாள் வரை காலையில் மாத்திரம் கொடுத்து வர வேண்டும். இங்ஙனம் மும்முறை செய்ய, இது குணத்தைக் கொடுக்கும். இதனால் மலடு நீங்கும்.

**அப்பளக்கார பற்பம்.**

அப்பளக்காரம் 3/4 சேர் (210 கிராம்) எடுத்து, ஒரு வரட்டியின் மீது பரப்பிக் கெஜபுடமிடப் பற்பமாம். சாம்பலை நீக்கிப் பற்பத்தைச் சக்கிரதையாக எடுத்துப் பொடித்துப் பத்திரப் படுத்தவும்.

அளவு : இதனை 2 பணவெடை (9.76 மி. கிராம்) வீதம் எலுமிச்சம்பழச்சாற்றில் கொடுத்து வர, பசியை அதிகப் படுத்தும் பித்த வாயுவை நீக்கும். இம்மருந்தைப் பத்து நாட்கள் வரை கொடுக்க வேண்டும். பத்தியம் இச்சா பத்தியம்.

## இந்துப்பு.

## SODII CHLORIDUM IMPURA OR SODIUM CHLORIDE IMPURA

## ROCK SALT

வைப்பு, உப்புகளில் ஒன்றாகிய இது, சைந்தவம், சிந்தூரம், சந்திரனுப்பு, மதிகூர்மை, மதியுப்பு, மிந்தாச்சொல் என்னும் பெயர்களாலும் வழங்கப்படுகின்றது.

இவ்வுப்பை, சிந்து தேசத்திலும், பஞ்சாப் வடமேற்குப் பாகங்களிலும் பூமியிலிருந்து வெட்டி எடுக்கின்றார்கள். இந்த உப்பு, 2 முதல் 10 பவுண்டு நிறையுள்ள கட்டிகளாயும், மேற்பக்கம் அழுக்குப் படிந்த கபில நிறமாயும், உட்பக்கம் வெண்மையாயும், வாயிலிடில் உப்பாயுமிருக்கும். இதன் வைப்புமுறை பின் காணுமாறு கூறப்பட்டுள்ளது.

சமுத்திர நீர், நூறுபடியைப் (200 லிட்டர்) புதுச் சட்டியில் விட்டுக் காய்ச்சி உப்பெடுத்து, இவ்வுப்பில் நூறு பலம் (3,800 கிராம்) அடி கனத்திருக்கும் சட்டியிலிட்டு, கரும்பாலை அடுப்பின் மீது வைத்துக் காடாக்கினியாய் எரிக்க, உப்பு உருகும். அச் சமயத்தில் வெடியுப்பு 5 பலம் (175 கிராம்), சீனக்காரம் 5 பலம் (175 கிராம்), பூநீறு 3 பலம் (105 கிராம்) இவைகளைப் பொடித்துத் தூவி ஒன்றுபட உருசிக் குளிர விட்டெடுக்க கட்டும், உடைத்துப் பார்க்கில் வைரம் போலிருக்கும். இதில் பச்சைக் கற்பூரம் மடியும் பூரம் முப்பாம். இது மண் பூதச் சரக்காகும்.

### சுத்தி

இதனைக் காடியில் மூன்று நாள் ஊறப்போட்டு, சூரியனொளியில் உலர்த்தி எடுக்கச் சுத்தியாகும்.

(வேறு)

இதனைக் காடி அல்லது வெள்ளாட்டு நீரில் மூன்று நாழிகை மத்தித்து வெய்யிலில் உலர்த்திக் கொள்ள இது சுத்தியாகும்.

### செய்கை.

இந்த உப்பிற்கு மலகாரிச் செய்கை உண்டு. மலகாரிச் செய்கையில் ''க்ரீம் ஆப் டார்டாரைக்''கைக் காட்டிலும் இது மேலானதாகும். இதை ஒன்று (4.2 கிராம்) அல்லது இரண்டு (8.4 கிராம்) வராகனெடை கொடுக்க மலம் இளகும். நான்கு (16.8 கிராம்) அல்லது ஐந்து வராகனெடை (21 கிராம்) கொடுக்க நீர் நீராய்ப் பேதியாகும். இதனைத் தனித்துக் கொடுப்பது மிகவும் அரிது. இது சிறப்பாய்க் காக்கரட்டான் விதைத் தூளுடன் கூட்டிக் கொடுக்கப்படுகிறது. மற்றும் இதற்கு அகட்டு வாயுவகற்றி, சிறுநீர் பெருக்கி, பசித்தீத் தூண்டிச் செய்கைகள் உண்டு.

### பொதுக்குணம்.

''அட்டகுன்ம மந்தம் அசிர்க்கரஞ்சூர் சீதபித்தந்
துட்டவையம் நாடிப்புண் டோடங்கள்—கெட்டமலக்
கட்டுவிட விந்தையக் காமியநோய் வன்கரப்பான்
விட்டுவிட விந்துப்பை விள்.''

### இதுவுமது.

''சென்னிக்கண்ணு பற்றூர் செவிகவுள்கண் டம்பகநோய்
சந்நியா சங்காசந் தாகமிரைப்—புன்னிரத்த
மூலஞ் சிலந்திநளி மூடிகநஞ் சூதை வல்லி
சூலஞ் சிதையுமிந்தாற் சொல்.''

(போ-ள்) இந்துப்பினுல் எண்வித குன்மம், அலசம், அசிர்க்கரம், கபபித்தம், கபாதிக்கம், நரம்புக்கிரந்தி, திரிதோஷம், மலபந்தம், விஷம், சுக்கிலம், கப உபதம்பம், கடுவன் ஆகிய நோய்கள்; தலை, விழி, நா, தந்தமூலம், தாது, கன்னம், கண்டம், யோனி இவ்விடத்து நோய்கள்; சந்நியாசம், நேத்திர காசம், தாகம், சுவாசம், இரத்த மூலம் முதலிய பிணிகள், சிலந்தி, தேள், எலி இவற்றின் விஷங்கள்; வாதக் கடுப்பு, சூலை முதலியன நீங்கும்.

### உபயோகங்கள்.

தேகத்தில் சுளுக்கு வந்தால், இந்துப்பை பற்று போடலாம்; வலியுடன் கூடிய வீக்கங்களுக்கு இதைச் சூடாக்கி ஒற்றடம் இடலாம்; இதை இளஞ் சூடான வெந்நீரில் கரைத்து வாந்தியை உண்டுபண்ண உபயோகிக்கலாம்.

நிலாவாரை, சோம்பு, சுக்கு, கொத்தமல்லி வகைக்கு 1/2 தோலா (6 கிராம்) வீதம் ஒன்றிரண்டாய் இடித்துக் கால்படி (325 மி. லிட்) நீர்விட்டு பாதியாய் குறுக்கிப் பிசைந்து வடிகட்டி அதில் தேகபலத்திற்கேற்ப இரண்டு (8.4 கிராம்) முதல் ஐந்து (21 கிராம்) வராகனெடை வரை இந்துப்பைக் கலக்கி உட்கொள்ளில் பேதியாகும். இதனைப் பித்தக்கஷாயம் என்று வழங்குகின்றனர்.

அக்கினிமாந்தம், நேத்திர ரோகம், கிரந்தி, தாபனம், கபபித்தம், எலி விஷம் இவைகளுக்கு இதை பேதிக்குக் கொடுத்து, நல்ல குணங்கண்டதாக டாக்டர் மொஹிதீன் ஷரீப் அவர்கள் சொல்லியுள்ளார்கள்.

### இந்துப்புச் சூரணம்.

இந்துப்பு 1 பங்கு, சீரகம் 1 பங்கு, ஓமம் 4 பங்கு, திப்பிலி 8 பங்கு, சுக்கு 16 பங்கு, கடுக்காய் 32 பங்கு வீதம் நிறுத்தெடுத்த தூள்களைக் கலந்து கொள்ளவும்.

அளவு : 1 தோலா (12 கிராம்).

தீரும் நோய்கள் : அக்கினி மந்தம், வாந்தி, மகோதரம் முதலியன.

### தேங்காய்க்ஷாரம்.

நீருள்ள தேங்காயொன்றை எடுத்து அதில் ஒரு கண்ணைத் தொளைத்து, அதற்குள் இந்துப்பை நிறைத்து, தொளையை அடைத்து, நன்றாய் ஒரு மண் சீலை செய்துலர்த்திப் புடமிட்டு, உப்பை எடுத்துக் கொள்ளவும். இவ்வுப்பைச் சிறப்பாய் உணவு சீரணமாகும்போது தோன்றும் வயிற்று வலிக்கும் அசீரணத்திற்கும் கையாளலாமென்று சக்கரதத்தர் கூறுவர்.

மற்றும் இந்துப்பு, சோபை மகோதர நோய்களில் வழங்கும் உப்பு மண்டூரத்திலும், சங்கத்திராவகம் போன்ற திராவகங்களிலும் சேர்க்கப்படுகின்றது.

நிலாவரைச் சூரணம் ஒரு பங்கு, சுக்கு, மிளகு, ஓமம், வாய்விடங்கம், சயிந்த லவணம் (இந்துப்பு) இவற்றின் சூரணங்கள் வகைக்கு 1/4 பங்கு, சர்க்கரை 2 1/4 பங்கு வீதங்கலந்து வைத்துக்கொண்டு, ஒன்று முதல் (4.2 கிராம்) இரண்டு வராகனெடை (8.4 கிராம்) கொடுக்க, வயிற்றுப்புசம், வயிற்றுவலி, மலபந்தம் முதலியன நீங்கும்.

## எவட்சாரம்.

## POTASSII CARBONAS IMPURA; POTASSIUM CARBONATE POTASH CARBONATE IMPURE.

இதனை மர உப்பென்றுங் கூறுவர். இவ்வுப்பு, தாது தாவர சங்கமப் பொருள்களில் கலப்புற்றிருக்கின்றது. இதனைச் சாதாரணமாகத் தாவரப் பொருள்களிலிருந்தே பிரித்தெடுக்கின்றனர். தற்காலம் பெரும் பான்மையும், உலர்ந்த யவாக் கோதுமைக் கதிரைச் சாம்பலாக்கி, இவ்வெடைக்கு நான்கு மடங்கு நீர் விட்டுக்கலந்து, மூன்று நாள் கழித்துத் தெளிவெடுத்து, மண்பாண்டத்திலிட்டு எரித்து குழம்புப் பக்குவத்தில் தட்டில் ஊற்றி, வெய்யிலில் உலர்த்தி எடுத்து பத்திரப்படுத்துகின்றார்கள்.

போகர் நூலில் இதன் வைப்பு முறை கீழ்க்காணுமாறு கூறப்பட்டுள்ளது :—

சீனம் பலம் 2 (70 கிராம்), துருசு பலம் 2 (70 கிராம்), வெடியுப்பு பலம் 2 (70 கிராம்) இவற்றைப் பொடி செய்து ஒரு சட்டியிலிட்டுப் பூநீறு பலம் 10 (350 கிராம்), நீர் பலம் 40 (1,400 கிராம்) சேர்த்துக் கலக்கிக் குளிர்ந்த இடத்தில் வைத்து, நான்காம் நாள் தெளிவை இறுத்து, இத்தெளி நீரை மேற்படி உப்பில் கொஞ்சம்கொஞ்சமாய் விட்டுக்காய்ச்ச அடியில் அடுக்கடுக்காய் வரிசையாய் உப்புக் கட்டி நிற்கும். இது யானைத் தந்தம் போலிருக்கும். இதைக் கத்தியால் சீவி வாங்கவும். சாரணைக்கும் கடிசான திராவகத்திற்கும் உறுதியாகும். இதன் சுண்ணம் சாரத்தைக் கட்டுமென்ப.

சுத்தி

வெள்ளாட்டு நீரில் 3 நாழிகை (72 நிமிடம்) நன்றாய் அரைத்து, வெய்யிலில் உலர்த்திக் கொள்ள இது சுத்தியாம்.

(வேறு)

அரிசியின் இரண்டாவது கழுநீரில் ஒரு நாழிகை (24 நிமிடம்) மத்தித்து, வெய்யிலில் உலர்த்திக் கொள்ளச் சுத்தியாம்.

(வேறு)

சுத்த நீரில் ஒரு நாழிகை (24 நிமிடம்) அரைத்துச் சீலையில் முடிகட்டி, கற்சுண்ண நீரில் 24 மணி நேரம் எரித்தெடுக்கச் சுத்தியாம்.

(வேறு)

வெள்ளாட்டு நீரில் கரைத்து வடித்து வெய்யிலில் உலர்த்திக் கொள்ளவும்.

செய்கை : இதற்குப் பசித்தீத் தூண்டி, மலமிளக்கி, சிறுநீர் பெருக்கி, வீக்க முருக்கி, உடல் தேற்றி ஆகிய செய்கைகளுண்டு.

பொதுக் குணம்.

''குய்யம் களம்நா கொடிறுவா யிவ்விடநோ
யைய மிரைப்பிரும லாசனப்புண்—பையவுறு
கீடவிடஞ் சோபை கிராணியையும் பம்பரம்போ
லாடவிடு மெய்யவட்சா ரம்.''

இதுவுமது.

''அட்டகுன்மஞ் சூலை யதிதூல முட்டினத்தா
லொட்டிவரு வாத முதரநோய்—துட்டமந்தம்
நீடுகபம் நீரடைப்பு நீங்காப் பிலீகமிவை
யொடுமெவட் சாரத்தா லுன்.''

(பொ-ள்) எவட்சாரத்தால் குய்யம், கழுத்து, நாக்கு, கன்னம், வாய் இவ்விடங்களில் உண்டாம் நோய்கள், இரைப்பு, இருமல், ஆசன வாயில் உண்டாம் புண், செந்துவிடம், சோபை, கிரகணி எண்வகை வயிற்று வலி, சூலை, உடல் பருத்தல், உட்டிண வாயு, பெருவயிறு, அலசம், கப நோய், நீரடைப்பு, மண்ணீரல் மலர்ச்சி முதலியன நீங்கும்.

அளவு : 5 குன்றியெடை (650 கிராம்).

உபயோகம்.

எவட்சாரம், கற்சுண்ணம், இவ்விரண்டையும் எலுமிச்சம் பழச் சாற்றுலரைத்து உள்நாக்கில் தடவ வளர்ச்சி நீங்கும்.

எவட்சாரம் 5 குன்றி (650 மி. கிரா.), இலவங்கத் தூள் 2 1/2 குன்றி (325 மி. கிரா.) ஆடாதொடை இலைச்சாறு 10 துளிகள் இவற்றைக் கலந்து வெற்றிலையில் வைத்து அருந்திவரக் காசம் நீங்கும்.

எவட்சாரம், இந்துப்பு, சுக்குத் தூள் வகைக்கு 5 பங்கு, கடுக்காய்த் தூள் 10 பங்கு இவைகளை ஒன்றுபடக் கலந்து, 5 குன்றி எடை வீதம் மோர், பால் முறித்து வடித்த நீர், கஞ்சி இவற்றிலொன்றில் கையாள மூலம், இரத்த சீதபேதி, வயிற்றிலுண்டாம் வலி முதலியன நீங்கும்.

அதிக உணவு, அதிக நீர் அருந்துவதைத் தடுப்பதற்கும் நீரடைப்பிற்கும் சோபைக்கும் இஃது ஒரு சிறந்த பொருளாகும்.

இதனை நீரிற் கரைத்து மேலுக்குப் பயன்படுத்த, சர்ம நோய்களையும் நமைச்சலையும் நீக்கும்.

இதனை குளிநீரிற் கலந்து குளித்துவர, மேக சூலை நீங்கும், வைசூரியில் கொப்புளம் உள்ளே கிராந்தினால் மேற்படி நீரை உபயோகிக்கப்பூரிக்கும்.

எவட்சாரத்தை நல்லெண்ணெயிலிட்டுக் காய்ச்சி, கொள்ளை நோயில் காணும் நெறிக்கட்டுகளின் மீது தடவி, வெற்றிலை கொண்டு மூடி, பஞ்சைச் சூடுபண்ணி அடிக்கடு கட்டிவரப் பலனை அளிக்குமென்பர்.

## ஏகம்பச்சரம்.

இவ் வைப்புப்பின் செய்முறையைப் போகர் கீழ்காணுமாறு குறிப்பிட்டிருககின்றார் :—

பூநீறு சேர் 2 (560 கிராம்)
வெடியுப்பு சேர் 2 (560 கிராம்)
வெங்காரம் சேர் 2 (560 கிராம்)
சீனம் சேர் 2 (560 கிராம்)
கல்லுப்பு சேர் 2 (560 கிராம்)
நவாச்சாரம் சேர் 2 (560 கிராம்)

இப்பன்னிரண்டு சேர்களையும் (3,360 கிராம்) கல்வத்திலிட்டு பொடித்து வெடியுப்புச் செய்நீர் விட்டரைத்து, ஒரு பட்சம் வரை வெய்யிலில் போட்டு உலர்த்திப் பொடிசெய்து, ஒரு பாண்டத்தில், பொடிசெய்த அண்ட ஓடு 1 சேர் (280 கிராம்) இட்டு, அதன்மீது மேற்கண்ட பொடியை வைத்து, அப்பொடி மறைய மறுபடியும் அண்ட ஓட்டுப்பொடி 1 சேர் (280 கிராம்) இட்டு, பாண்டத்தின் வாய் பொருந்தும்படி உட்புறத்தை ஊமத்தைச் சாற்றை ஐந்து முறை தடவித் தடவி உலர்த்தி மற்றொரு பாண்டத்தைக் கொண்டு மூடி மண்சீலை செய்து, ஆவி போகாமலும் பாண்டம் அசையாமலும் அமைத்து, முத்தியால் எரித்து ஆறவிட்டு, சீலை மண்ணுக்குத் தண்ணீர் தடவி, பக்குவமாய்

நீர் உட்செல்லாதவாறு சீலையைப் பிரித்து மேல் சட்டியை அசைக்காமல் எடுத்துப் பார்க்க, உப்பு வெளுப்பாய் மாப் போலப் பதங்கித்திருக்கும், சுரண்டி மயிர்க்குச்சியால் வாங்கவும். இதுவே ஏகம்பச்சாரம்.

இவ்வுப்பால் நவலோகம் ஏமமாம் என்று கூறப்பட்டிருப்ப தால், வாதத்திற்குப் பயன்படுத்தப்பட்டிருக்கின்றதாய்த் தெரி கிறது. இதனைப் பற்றிப் பதார்த்த குண சிந்தாமணி ஆசிரியர் ஒன்றும் புகலவில்லை. இது தற்காலம் மருந்துகளில் கூட்டப் படுவதாகத் தெரியவில்லை.

## கடல்நுரை (அக்கினிகை).

இஃது அக்கினிகை, வாரிதி நஞ்சு, மீன்நஞ்சு என்ற வேறு பெயர்களினாலும் வழங்கப்படும். இதன் பிறப்பைக் கீழ்க் காணுமாறு போகர் தம் நூலில் செப்பியிருக்கின்றார். அநேக நாட்கள் கடலுக்குள் வாழ்ந்த முதிர்ந்த முதலை க்ஷிணமடையும் போது, அதன் வயிற்றில் அக்கினி பிறந்து, அது திரியமாட்டா மல் வாயாற் கோழை கக்கி மாண்டு போம். இக்கோழை யானது, கடலில் வீழ்ந்து, அலையால் கரையில் ஒதுங்கி, பரிதி கிரணத்தால் வெந்து உலர்ந்து கிடக்கும். இதனை நாம் கைப் படாது எடுக்க வேண்டும். இதில் 1. கறுப்பு, 2. வெள்ளை, 3. சிவப்பு, 4. மஞ்சள் ஆகிய நான்கு நிறங்கள் உண்டு. இவற்றுள் சிவப்பு நன்று.

கடல் நுரையால் விழி நோய், விரணம், கபம் குன்மம் முதலிய பிணிகள் நீங்குமென்பதை.

''—கடனுரையோ
நேத்திர நோய்விரணம் நீடுகபங் குன்மமிவை
தீர்த்திடுந்தப் பாமலெனச் செப்பு.''

என்னும் பதார்த்த குண சிந்தாமணி அடிகளால் அறியலாம்.

### உபயோகம்.

கடல் நுரையையும் கற்கண்டையும் சம அளவு எடுத்துத் தேன்விட்டு அரைத்துக் கண்ணிலிட்டுவர, கண்சிவந்து, வலித்து பீளை, நீர்வடிந்து பார்வையை மந்தம் பண்ணும் நோய் நீங்கும்.

அகத்தியர் வைத்திய காவியம் 1,500-ல் கூறப்பட்ட கடல் நுரைத் தைலத்தை உடம்பில் தேய்த்துவர, சுரம், வாய்நீர் ஊறல், வரட்சி முதலியன நீங்கும் என்று சொல்லப்பட்டுள்ளது.

அகத்தியர் வைத்திய ரத்தினச் சுருக்கத்தில் கூறப்பட்டுள்ள சலோதராக் மணியிற் கடல்நுரை சேருகின்றது.

## கணவாய் ஒடு.

# OS SEPIAE

(Internal shell of sepia officianalis.)

Family :—Cephalopoda belonging to Mollusca class.

## CUTTLE FISH BONE

வடமொழியில் சமுத்திர பேனம் என்பது கணவாய் ஒட்டிற்குப் பெயர். இக்கணவாய் ஒடு ஒரு வகைக் கடல் மீனின் எலும்பாகும். இஃது ஓர் அங்குலத்திலிருந்து (2.5 செ.மீ. 10 அங்குல (25 செ. மீ.) நீளம் வரை தட்டையாய், ஒரு பக்கம் சுரசுரப்பு வாய்ந்ததாகவும், சீக்கிரம் பொடி படக்கூடியதாயும், மற்றொரு பக்கம் சிறிது மிருதுவும் கடினமும் உள்ளதாயுமிருக்கும். இதற்கும் கடல் நுரைக்குமுள்ள வித்தியாசத்தை உணர்தல் வேண்டும்.

* கணவாய் ஒட்டிற்குத் துவர்ப்பி, சமனகாரி ஆகிய செய்கைகளுள.

கணவாய் ஓட்டைப் பொடித்துக் காதில் தூவிவரக் காதில் வடியுஞ் சீழ் நிற்கும்.

இதை, எலுமிச்சம் பழச்சாறு அல்லது பன்னீர் விட்டு நன்றாய் அரைத்து மேலுக்குப்பூசச் சொறி, தோலைப் பற்றிய பிணிகள் நீங்கும்.

இதன் பொடியைப் பல்பொடிக்கும், பாத்திரங்களைச் சுத்தம் செய்வதற்கும் உபயோகிக்கின்றனர்.

கணவாய் ஒட்டுத்தூளை நல்லெண்ணெயிலிட்டுக் காய்ச்சிக் காதில் சீழ் வடிதலுக்கு வழங்குவதுண்டு.

கணவாய் ஒடு, இந்துப்பு இவையிரண்டையும் பன்னீர்விட்டு அரைத்து அதைக் கண்ணிலிட்டுவரக் கண்ணோய் நீங்கும்.

பில்ல நோயில், சரவண விதிபோலக் கணவாய் ஓட்டை உபயோகித்துப் பலன் கண்டனம்.

* It contains Calcium Carbonate 80 to 85 per cent also Phosphate and Sulphate with Silica. It is antacid like chalk, also astringent local sedative.

## கந்தி உப்பு.

### (கெந்தக உப்பு)

வைப்பு உப்புப் பதினைந்தின்கீழ்க் கந்தி உப்பு என்று ஒன்றும், கந்தி லவணம் என்று மற்றொன்றுங் கூறப்பட்டுள்ளன. இவை ஐயத்தைத் தரும். ஆனால், இவ்விரண்டும் வைப்பு வேறு பாட்டினால் வேறுபெயர் பெற்றன என்று கொள்ளவேண்டும். மற்றும் பதார்த்த குண நூலார் கந்த உப்பிற்கு மாத்திரமே குணங்கூறுகின்றனர். இதனால், கந்திலவணத்திற்கும் கந்தி உப்பின் குணமே உள்ளது என்று கருதவேண்டியிருக்கின்றது. இவ்வுப்புகளின் வைப்பு முறையைப் பின் பக்கத்தில் காண்க.

### கந்தி உப்பு.

கடல் நீரை உப்பாகக் காய்ச்சி, ஆலைச்சாறடுப்பில் வைத்து எரித்து, இளகுஞ் சமயத்தில் எடுத்துக்கொண்ட கடலுப்பு எடை 20 பங்குக்கு, சீனம் 1, வெடியுப்பு 1, வாணகெந்தி 1, நீலம் 1 சேர்த்துப் பொடித்துக் கூட்டி இருப்புச்சிலாகையால் கிண்டி எரித்து இறக்கி ஆறவிட்டுத் தாழியை உடைத்து எடுக்க, உப்பும் கெட்டியாயிருக்கும். இதற்குக் கெந்தி உப்பு என்பது பெயர். இதில் செம்பு நீறுமென்று போகர் நூல் கூறும்.

இதற்கு, அகட்டுவாயுவகற்றி வெப்பமுண்டாக்கி ஆகிய செய்கைகளுள.

### கந்தி உப்பின் குணம்.

''உடல்கரையச் செய்துவிடு முட்டிணமாம் பொல்லாக்
குடல்வாதந் தன்னைவெட்டிக் கொல்லு—மடலாருந்
தந்திமத்த கத்தையடத் தாவுகொங்கை மாதரசே
கந்தியுப்பை நன்றாய்க் கழறு.''

(பொருள்) கந்தியுப்பானது அதிதூலரோகத்தையும், குடலண்ட வாதத்தையும் போக்கும். ஆனால் இது வெப்பத்தை உண்டாக்கும்.

### உபயோகம்.

கந்தியுப்பு, குரோசானி ஓமம், பனைவெல்லம் இம்மூன்றையும் சம அளவாய் எடுத்து, கல்வத்திலிட்டு மெழுகுபதத்தில் அரைத்து வைத்துக் கொண்டு, சுண்டைக்காய் அளவு இருவேளை வீதம் கருப்பிணிக்குக் காணும் கிரகணி நோயில் வழங்கிவர, நற்பலனை அளிக்கின்றது. இதனைக் கருப்பக் கிரகணி மெழுகென்றுங் கூறுவர்.

## கந்தக லவணம்.

கெந்தி பலம் 10 (350 கிராம்). இந்துப்பு பலம் 10 (350 கிராம்).

வாண உப்பு பலம் 10 (350 கிராம்). வளையல் மண் பலம் 10 (350 கிராம்).

இவைகளைப் பொடித்துச் சட்டியிலிட்டு அடுப்பேற்றிக் கமலம் போல் எரித்துக் கரண்டியால் கிண்டிக்கிண்டி, கெந்தகத்தின் தைலத்தை விட்டு, உப்புகள் உண்ணுமட்டும் வறுத்தெடுத்துப் பொடி செய்து, வேறு ஒரு பெரிய பாண்டத்தில் அளந்து போட்டு, 4 பங்கு நீர் சேர்த்து உறவாகும்படி கரைத்து, நாலாம் நாள் தெளிவு வாங்கி, அடிகனத்த சட்டியில் ஊற்றி வற்றக் காய்ச்சி, உப்பு உறைபக்குவத்தில் மறுசட்டியில் சேர்த்து வெய்யிலில் காயவைக்க, இது கந்திலவணமாம்.

கந்தி உப்பிற்கு உரிய செய்கை, குணம் முதலியன இதற்கும் ஆகும். ஆகையினால், அவற்றை ஈண்டுக் கூறாது விடுத்தனம்.

## கல்லுப்பு.

இது கடற்குருவி என்றும் வழங்கப்படும்.

இவ்வியற்கை உப்பு, கடலுக்குள் மலைபோலக் கட்டியாய்ப் பாறையாய் வளர்ந்து நிற்கும் என்றும், கட்டினக்கால் கரியில் பொன்போல் நின்று உருகியாடுமென்றும், மற்ற உப்புகளை மெல்ல மெல்லக் கரி குடித்து விடுமென்றுங் கூறப்பட்டுள்ளன. மற்றும் கல்லுப்புக்குக் குணங்கள் ஏழுவகை என்பதையும், கட்டுப்பட்ட உப்பின் சோதனை இன்னதென்பதையும் பின்காணும் செய்யுட்களால் உணரலாம்.

''பாரென்ற உப்புக்கு ஏழுகுண முண்டு
பாங்கான குறியெல்லாம் பகரக் கேளாய்
காரென்ற கரியில்வைத் துருக்கும் போது
கம்மினாற் சேறுபோ லுருகில் வற்றில்
பூரென்ற புத்தாகில் நெட்டிபோ லாகில்
பொங்கினால் விரிந்ததாற் குணமோ இல்லை
ஆரென்ற கட்டுக்கு அடையா ளந்தான்
அழுந்தியே கனமாகி லுருகிற் கேளே.
உருகினாற் பொன்போலே யாட வேணும்
உசத்தியா முத்துப்போ னிறமோ தோணும்
பருகிற் சுண்ணம்பு போல வேதான்
பாக்குவெற் றிலையுடனே சிவப்போ காணும்

திருகினூற் கைதனிலே வயிரம் போலே
சிக்காம லுதிராமற் கனமோ பூணும்
முருகினு லொன்றுக்கு மாகா துப்பு
முதற்றரமாங் கட்டினுடை முறையுமாமே."

சுத்தி.

இதனைக் காடித் தண்ணீரில் பிசறி, பிறகு ஈரத்தைத் துணியில் துடைத்து வெய்யிலில் உலர்த்திக்கொள்ளச் சுத்தியாம்.

பொதுக் குணம்.

"ஐயமறுஞ் சூலே யரோசிபித்தஞ் சத்தியொடு
வெய்யபிணி யட்டகுன்மம் விட்டேகும்—பெய்வளையே
வாதமதி தாகம் மலக்கட்டும் போமுலகிற்
கோதறுகல் லுப்பைக் கொடு."

(பொ-ள்) கல்லுப்பினுல் கபம், குத்தல், அருசி, பித்தம், வாந்தி, உஷ்ணவாயு, எண்விதகுன்மம், வாதநோய், நாவறட்சி, மலபந்தம் இவை ஏகும்.

கல்லுப்புச் செந்தூரம்.

"அறைகிறேன் லவணத்தின் சொந்தூ ரங்கேள்
அப்பனே கல்லுப்பு பலந்தா னுலு
கரைகிறேன் சூதமது பலந்தா னென்று
கல்வத்தில் தானிட்டு வில்வச் சாற்றால்
மறையவே தானரைத் திரண்டு சாமம்
மார்க்கமாய்க் குகைவைத்துச் சொல்லக் கேளு
விரைகிறேன் போகருட கடாட்சத் தாலே
விபரமுடன் புலிப்பாணி விளம்பக் கேளே.
கேளேதான் உலேவைத்துப் பழுக்க ஊதக்
கிருபையுட னுருகியது மணிபோ லாகும்
கேளேதான் வாராமல் ஆற விட்டுக்
கொற்றவனே கல்வமிட்டுப் பொடியாய்ச் செய்து
நாளேதான் அந்தரதா மரையின் சாற்றால்
நால்சாமந் தானரைத்துப் பில்லே தட்டிப்
பாழேதான் போகாமல் காய வைத்துப்
பக்குவமாய்ச் சில்லிட்டுப் புடமு மாமே.
ஆமேநீ முன்போலே ஐம்புட மிட்டால்
அப்பனே செந்தூர மாகும் பாரு
தாமேநீ யெடுத்ததனைச் சிமிழில் வைத்துத்
தயவாகப் பணவெடைதான் தேனிற் கொள்ள
போமேநீ குன்மமென்ற தெட்டுந் தீரும்
பொல்லாத நெஞ்செரிவு சூலே ரோகம்
பாமேநீ சூதகத்தின் வாயு தீரும்
வல்லமையால் புலிப்பாணி வகுத்திட்டானே."

(போ-ள்) கல்லுப்பு 4 பலம் (140 கிராம்), இரசம் 1 பலம் (35 கிராம்) இவை இரண்டையும் கல்வத்திலிட்டு வில்வச் சாற்றினல் இரண்டு சாமம் (6 மணி) அரைத்தெடுத்துக் குகையிலிட்டு, உலேயில் வைத்துப் பழுக்க ஊத மணி போலாகும். இதனை ஆற விட்டு எடுத்துக் கல்வத்தில் பொடிசெய்து, ஆகாசத் தாமரைச் சாறு விட்டு நான்கு சாமம் (12 மணி) அரைத்து, பில்லைத் தட்டிக் காயவைத்துச் சில்லிட்டுச் சீலே செய்து, முழபுடமிட்டு எடுக்கவும். இவ்விதம் ஐந்து புடம் போட்டால் செந்தூரமாகும்.

அளவு : பணவெடை (488 மி.கிரா.).

துணைமருந்து. : தேன்.

தீரும் நோய்கள் : எண்வகைக் குன்மம், நெஞ்செரிவு, சூலை நோய், சூதகவாயு முதலியன.

இலவண பற்பம்.

"இந்துப் புப்பல மொன்றிடு கல்லுப் பேயொன் றரையாகும்
பந்தூமத்தைக் கள்ளிப்பால் மேனியருக் கம்பால் நாலாகும்
தந்தனை விட்டரை வெவ்வேறு வில்லைசெய் தானே புடமாக்க
தொந்தனை நீறிது பணவெடைகொள் துயர்செய் குன்மம தோடிவிடும்
எந்தவ கைக்குள வாயுகளு மோடிடு மிநுவே சத்தியமாய்
ஐந்தெனு முப்பதி லிப்படி யேயரை பற்பம தாய்விடுமே."

நிற்க, கல்லுப்பைத் தனியாக வழங்குவதில்லை. மற்றைய கூட்டு மருந்துகளுடன் சேர்ப்பதுண்டு. உதாரணமாய்க் குன்மகுடோரி, நவ உப்பு மெழுகு, பஞ்சலவண பற்பம், தயிர்ச்சுண்டிச் சூரணம் ஆகிய இவை போன்ற மருந்துகளில் கல்லுப்பு சேர்க்கப்படுகின்றது.

## கறி உப்பு.

## SODII CHLORIDUM OR SODIUM CHLORIDE COMMON SALT, TABLE SALT

வேறு பெயர்கள் : கறியுப்பு, சோற்றுப்பு, கடலுப்பு, வீட்டுப்பு இலவணம், சமுத்திர லவணம்.

இயற்கையில் கடலோரகங்களில் சூரியவெப்பத்தினல் கடல்நீர் சுண்டி உப்பாவதுண்டு. செயற்கையில், கடலோரங்களிலுள்ள அளர் நிலத்தைச் சீர்படுத்திப் பாத்திகட்டி, கடல்நீரைச் சிறு வாய்க்கால் வழியாகக்கொண்டுபோய்க் கொஞ்சங் கொஞ்சமாய் அப்பாத்திகளில் பாய்ச்சி வைக்க சூரிய வெப்பத்தினல்

பாத்தியிலுள்ள நீர் வற்றி, உப்பு நிலத்தில் உறையும் இவ்வாறு பன்முறை செய்ய, உப்பு ஒழுங்கான பட்டைகள் மிகுந்த சிறு பளிங்குக் கற்களாய்த் தோன்றும். இவ்வுப்பு உற்பத்தி அரசாங்கத்தின் கண்காணிப்பிலிருக்கிறது. உப்பு, தென்னிந்தியாவில் செய்யூர், சூனம்பேடு, மரக்காணம், அதிராம்பட்டினம், ஆறுமுகனேரி, தூத்துக்குடி போன்ற இடங்களில் பயிரிடப்படுகின்றது. பயிரிடும் உப்பு நிலத்தின் சாயலுக்குத் தக்கவாறு வெண்மை, பழுப்பு, அழுக்கு நிறம் உடையதாய் இருக்கும். நிற்க கடல் நீரைப் பெரிய மண்பாண்டம் அல்லது செப்புப் பாண்டத்திலிட்டுக் காய்ச்சிக் குழம்புப் பதத்தில் தட்டுகளில் விட்டு வைக்க உப்பு உறையும். இதில் மண்ணின் கலப்பும் சாரமும் இராது. இதைச் சுத்தமான உப்பென்று வாதிகள் ஒப்புக் கொள்வர்.

குணம் : உப்பிற்கு மணமில்லை; இது கரிப்புச் சுவையும், எளிதில் நீரில் கரையும் தன்மையும் உடையது; சாராயத்தில் கரையாது.

செய்கை : பசித்தீத் தூண்டி, மலம் போக்கி, வாந்தி யுண்டாக்கி, புழுக் கொல்லி, முறைவெப் பகற்றி.

உடற்கு வேண்டிய பொருள்களில் உப்பும் ஒன்றாகும். உப்பிற்கும் குருதிக்கும் சம்பந்தம் அதிகம் உளது. வியர்வை, கண்ணீர், சிறுநீர் இவைகளின்வழியாய் உடலிலிருந்து உப்பு வெளிப்பட்டுக்கொண்டிருக்கிறது. ஆதலின், இதன் குறைவினால் பிணிகள் ஏற்படுவதுடன், உயிருக்கு ஆபத்தும் நேரிடுவதுண்டு. உப்பு, இரைப்பைச் செரிக்கு நீரை அதிகப் படுத்துவதினால், செரியாமை நோயால் வருந்துபவர்கள் உப்பைச் சாக்கிரதையாய்ப் பயன்படுத்தல் வேண்டும். அதிதூலநோய், சோபை, தாகம், சருமநோய் இவைகளில் உப்பைச் சாக்கிரதையாய் வழங்க வேண்டும். கடலுப்பில் அயோடின் என்ற பொருள் சிறிய அளவில் இருக்கிறபடியால், இது கண்டக்கழலை (வீதன கோள விருத்தியும்), கண்டமாலையும் வராமல் தடுக்கும். சிறிய அளவில் உப்பை அருந்துவதினால், அஃது உமிழ்நீரையும் இரைப்பைச் செரி நீரையும் அதிகப்படுத்தி,பசியைத் தூண்டிக் சுாய்கறி உணவைச் செரிப்பிக்கும் உப்பு,தாகத்தை அதிகப் படுத்தி, நீர் ஆகாரத்தை உடலில் ஏற்கச் செய்யும். அழுத்தமாகக் கரைத்த உப்பு நீர், வெட்டுக் காயங்களில் பட்டால் உறுத்தலையும் மேலில் பட்டால் தாபிதத்தையும் உண்டுபண்ணும்; உப்பு, சளி, கோழை இவைகளின் உற்பத்தியை மட்டுப்படுத்தும்; சிறுநீரின் வாயிலாக இது வெளிப்படுகின்றது. அதிக அளவில், 2 முதல் (8.4 கிராம்) 4 வராகனெடை (16.8 கிராம்) நீரில் கலந்து கொடுக்க வாந்தியாம். முக்கியமாய் விடப்பொருள் உண்டவர்களுக்கு அதை வெளிப்படுத்தப் பயன்படுத்துவதுண்டு. இன்னும் அதிக அளவில் கொடுத்தால், பேதியை உண்டு பண்ணும்.

**உப்பின் பொதுக்குணம்.**

"அளத்திலுறை நல்லுப் பனல்வாதம் மாற்றுங்
களத்துநோய் தன்னைக் களையுங்—கிளைத்தகப
ஆசுடைய வல்லைநோய் அஷ்டகுன்ம மும்போக்குங்
காசினியுள் மாதே கழறு."

(பொ-ள்) உப்பினுல் பித்தவாதம், கண்டக்கழலை, கபம், கல்லீரல் நோய், எண்வகைக் குன்மம் முதலியன நீங்கும்.

**கறியுப்பின் குணம்.**

"மந்தம் பொருமலறும் வாயுவும்போம்தீபனமாம்
தொந்தித்த ஐயந் தொடருமோ—சந்ததமும்
அக்கினியின் புஷ்டி அடருங் கறியுப்பால்
சிக்குகின்ற நீரிறங்குஞ் செப்பு."

(பொ-ள்) கறியுப்பால் மந்தம், வயிற்றுப் பொருமல், வாயு, கபம், நீங்கும். நீரடைப்புத் தீரும். பசியும் சயாக்கினியும் அதிகப்படும்.

**சுத்தி.**

கறியுப்பு 1 பலத்திற்கு (35 கிராம்) செங்குவளைச் சமூலச்சாறு 6 பலம் (210 கிராம்) விட்டுக் காலை முதல் மாலை வரை வெய்யிலில் வைக்கவும். இவ்விதம் 6 நாட்களும் காலையில் ஆறு பலம் (210 கிராம்) செங்குவளைச் சமூலச்சாறு புதிது புதிதாக விட்டுச் சூரியபுடத்தில் வைக்கவும். பின்பு, 2 நாள் மேற்படி சாறு விடாமல் சூரியபுடம் வைத்துச் சாறு சுவறிவறண்டபின், 9 ஆம் நாள் காலையில் 6 பலம் (210 கிராம்) கருங்குவளைச் சமூலச்சாறு விட்டு சூரியபுடம் வைக்கவும். இவ்விதம் 6 நாட்கள் செய்து, 2 நாட்கள் சாறு விடாமல் சூரியபுடம் வைத்து, அதில் முன்விட்ட சாறும் சுவறினபின் 17 ஆம் நாள் 6 பலம் (210 கிராம்) கழுநீர் விட்டுச் சூரியபுடம் வைக்கவும். இவ்விதம் 6 நாட்கள் செய்து, முடிவிலும் 2 நாட்கள் கழுநீர் விடாமல் வெய்யிலில் வைத்துலர்த்தி எடுத்துக் கொள்ளச் சுத்தியாம்.

**(வேறு)**

உப்பை ஏழுபங்கு நீர் அல்லது காடிநீர் விட்டுக் கரைத்து வடிகட்டி காய்ச்சிக் குழம்புப் பக்குவத்தில் இறக்கி, இளஞ்சூட்டில் பழச்சாறு அல்லது மோர் சிறிது விட்டு வெய்யிலில் காயவைக்க உப்பு உறையும். இவ்விதம் 10 முறை செய்ய அது சுத்தியாம்.

**(வேறு)**

உப்பை வாழைக்கட்டை நீர் விட்டுக் கரைத்து, வடிகட்டிக் காய்ச்சிக் குழம்புப் பக்குவத்தில் இறக்கி இளஞ்சூட்டில் பழச்சாறு சிறிது விட்டு வெய்யிலில் காயவைத்து எடுக்க அஃது உறைந்து சுத்தியாகும்.

(வேறு)

உப்பைக் கடல்நீர் அல்லது மழைநீர் விட்டுக் கரைத்து, வடி கட்டிக் காய்ச்சிக் குழம்புப் பக்குவத்தில் இறக்கி, வெய்யிலில் காய வைத்து எடுக்க அவ்வுப்பு உறைந்து சுத்தியாம்.

உப்புப் பற்பம்.

ஒரு பலம் (35 கிராம்) உப்பைக காஞன், தண்ணீர் விட்டான், அத்தி, கொட்டி இவைகளின் சாற்றினல் கீழ்க்குறிப்பிடும் பட்டி யலில் காணுமாறு அரைத்து, வில்லை தட்டி உலர்த்தி, சில்லிட்டு சீலை செய்து புடமிட்டெடுக்கப்பற்பமாம்.

| சாற்றின் பெயர். | சாற்றின் அளவு. | அரைக்கும் நாள். | வில்லை உலர்த்தும் நாள். | கவசம் உலர்த்தும் நாள். | புடம் வரட்டி. |
|---|---|---|---|---|---|
| காஞன் சமூலச்சாறு .. .. | 4 | 4 | 3 | 1 | 32 |
| தண்ணீர் விட்டான் கிழங்குச் சாறு. | 3 | 6 | 5 | 1 | 27 |
| அத்திப்பால் .. .. .. | 2 | 10 | 9 | 1 | 18 |
| கொட்டியிலைச்சாறு | 1 | 12 | 11 | 1 | 16 |

அளவு : துவரையின் காற்பங்களவு சாப்பிடுவது உத்தமம். அரைப் பங்களவு சாப்பிடுவது மத்திமம். முக்காற் பங்களவு சாப்பிடுவது அதமம். முழுப்பங்களவு சாப்பிடுவது அதமாதமம்.

இதனை உண்ண வேண்டிய நாளளவில், முப்பத்திரண்டு நாட்கள் உத்தமமென்றும், இருபத்து நான்கு நாட்கள் மத்திமமென்றும், பதினறு நாட்கள் அதமமென்றும், எட்டுநாட்கள் அதமாதமம் என்றும் கொள்ளவேண்டும்.

துணைமருந்தும் தீரும் நோய்களும்.

இந்த உப்புப் பற்பத்தை வெந்நீரில் கொள்ள கபம் மீறி அதனல் வரப்பட்ட தலையிடிப்பு, உன்மத்தம், பெரும்பாடு, மகோதரசூலை, மூர்ச்சை என்னும் இவைபோன்றவைகளும்; மிளகுத்தூள், கடுகுத் தூள் இவை வகைக்குச் சமனெடை கலந்து அதில் வராகனெடை (1 கிராம்) உடன் மேற்படி பற்பத்தைக் கலந்து வெந்நீரிற் கொள்ள, வாதபித்த தொந்தத்தால் வரப்பட்ட வல்லைசத்தி, ஈளை, இருமல், பாண்டு, விக்கல் என்னும் இவை போன்றவைகளும்; தேனிற்கொள்ள, வாதமீறி அதனல் வரப்பட்ட பாரிச வாயு, பிடிப்பு, உப்புசம், இரைப்பு என்னும் இவைபோன்றவைகளும்; திப்பிலிப் பொடியுடன் கொள்ள, வாதம், கபம், அல்லது பித்தத் துடன் தொந்திதப்பால் வரப்பட்ட நேத்திரவாயு, மாலைக்கண், புழுவெட்டு, புளிச்சக்கண், சன்னி, பித்தகாரகம், க்ஷயம் என்னும்

இவை போன்றவைகளும்; புளித்த பசுவின் மோரிற்கொள்ள, பித்த மீறி அதனுல் வரப்பட்ட கை கால் எரிவு, சரீரானலம், வாய் நீர்ப் பெருக்கு, பிரமியம், கண் புகைசல், வறட்டுச்சொறி, சிரங்கு, செவ்வாப்பு, கரப்பான், வெறித்தேமல், தவளைச்சொறி, மருக்கட்டி தினவு, பெருவாரிக்காய்ச்சல், மூலம், பீனசம், அசீரணம் என்னும் இவை போன்றவைகளும்; இஞ்சிரசம் சமமாய்ச் சேர்ந்த தேனிற்கொள்ள, திமிர்வாதம், மாரடைப்பு, பெருமூர்ச்சை, ருத்திரவாயு, பெருவியாதி, குட்டம் என்னும் இவைபோன்றவை களும்; குளிர்ந்த நீருடன் சேர்ந்த பேரரத்தைக் குடிநீரில் கொள்ள, நீர்க்கட்டு, நீரருகல், நீர்ச்சுருக்கு, வயிற்றுவலி, என்னும் இவைபோன்றவைகளும்; கடுக்காய்ப்பொடி, சேர்ந்த நல்ல தண்ணீரிற் கொள்ள, தந்தப்பிளவை, தந்தவாயு, தந்தநோய், பல் வசைவு, பல்ஈறுகட்டல், நாக்குவிரணம், உதட்டு விரணம் என்னும் இவை போன்றவைகளும்; கொன்றைப் பிசின்கூட்டின நல்ல தண் ணீரிற் கொள்ள, மதுமேகம், நீர்க்கிரந்தி, நீரொழுக்கு, நீர்ப் பெருக்கு என்னும் இவைபோன்றவைகளும்; எருக்கிலைச் சாற்றில் நல்ல தண்ணீர் கலந்து அதில் கொள்ள, தேள், நண்டு தெரிக்கை செய்யான், பூரான் பாம்பு, பேய்நாய்க்கடி என்னும் இவைபோன்ற விஷக்கடிகளும் தீருவனவாகும்.

இதனை,

''உலக மனைத்துமா முப்பின் பொடியினுற்
கலக வினைத்திரள் கட்டறுத் தோடு
மலக விடப்பிணி வாராது வந்திடி
னிலக வருத்திடு மிப்படி தானே.''

என்ற திருமூலர் திருமந்திரச் செய்யுளால் உணர்க.

### உப்புப் பற்பத்தின் வல்லமை.

''அன்னஞ் செரிக்கு மசீரணமில் கோமுதலே
யன்னஞ் செரிக்கு மரந்தைகளே—யன்னமேயா
யுப்படலை யால்வளிக்கே யுப்படலை யால்வலிமை
யுப்படலை யாலதமையும்.

(ப-ரை) அன்னம் செரிக்கும் அசீரணமில் அன்னம் சீரணமாகும் அசீணமிராது; கோ முதல் ஏய் அல் நஞ்சு எரிக்கும் வாத முதலாய்ப் பொருந்திய கறுத்த விஷங்களை யழிக்கும்; அரந்தைகள் ஏய் அன்னம்; மெய்-துன்பங்கள் ஒழியும்பழி அன்னப்பறவைக் கொப்ப சரீரத்தினின்றும் பிரிக்கும்; இஃதுண்மை, வளிக்கே ஆயு படலையால்-பிராணவாயுவிற்கு ஆயுளென்னும் கபாடமாகும் உப்பு அடு அலைவலிமை-உப்பு நீர் சேர்ந்த கடல்போற் பெருகிய வலுவைக் கொடுக்கும், அது மேற்சொன்ன சீர்த்தி கள், உப்பு அடலையால் அமையும்—உப்புப்பற்பத்தாற் பொருந் தும்.

### உப்புப் பற்பத்தின் மகிமை.

உப்புப் பற்பமானது, வைத்தியம் வாதம் என்னும் இரண்டிற் கும் முதன்மையானதாய், வாதமுறையில் எவ்வாறு தரித்திரத்தை

அதம் பண்ணத் தக்கதோ, அவ்வாறே வைத்தியத்தில் நோய்களை அதம் பண்ணுவதாம். ஆகையால், இது நோயாளிக்கு அமுதமும் வைத்தியர்க்கு வாளுமாகு மென்பதாம்.

இதனை,

''வேதையென்றுன் முதற்கருவி செயநீர் வைப்பு
வெளியாக்கு மடலையென்ற வீட்டுப் பாலே

நாதரெனு மகத்தியனு மறைந்தா னப்பா
நான்மறையை வெளிப்படையாய் நவின்றே னின்னம்

பாதையென்று லதினலே கெந்தி மையாம்
பாஷாண மெழுகுமது பண்ணச் செய்யும்
வாதையொன்று மில்லையடா வீட்டுப் பாலே
மகத்தான நவலோகம் வசிய மாமே.''

என்னும் கொங்கணவர் ஐந்நூற்றுத் திரட்டு செய்யுளால் உணரலாம்.

(வேறு)

சுத்தி செய்த சோற்றுப்பு 5 பலத்திற்கு (175 கிராம்), ¼ படி (325 மி. லிட்டர்) ஆகாயத்தாமரை சாறு விட்டு அரைத்து, சிறு வில்லைகள் செய்து, சூரியனொளியில் உலர்த்திச் சீலை செய்து, 10 வரட்டியில் புடமிடவும். இவ்வாறு மீண்டும் 9 முறை புடமிட உயர்தரச் செந்தூரமாகும். ஒவ்வொரு புடத்திற்கும் வரட்டியின் அளவை ஒவ்வொன்றாய் ஏற்றிக் கொண்டேபோய் 20 வரட்டியானவுடன் நிறுத்திவிட வேண்டும். 1 (65 மி. கிராம்) முதல் 2 அரிசியெடை (130 மி. கிராம்.) செந்தூரத்தைத் தக்க அனுபானங்களில் கொடுக்கச் சகலவித அசீரணமும் வாதகுன்மமும் சூராவளிக்குமுன் எதிர்ப்பட்ட பட்சியைப் போலாம்.

(வேறு)

சுத்தி செய்த சோற்றுப்புக்கு, மேற்கண்ட முறைப்படி ஆகாசத் தாமரைச் சாற்றிற்குப் பதில் புளியாரைச்சாறுவிட்டு அரைத்து, வில்லை தட்டி உலர்த்தி, சில்லிட்டுச் சீலை செய்து புடமிட்டெடுக்கச் செந்தூரமாம். இதனைச் சிறப்பாய்ப் பித்தகுன்மங்களுக்கு மேற்படி அளவில் பயன்படுத்தலாம்.

(வேறு)

சுத்தி செய்த சோற்றுப்பை, மேற்கண்ட முறைப்படி புளியாரைச்சாற்றுக்குப் பதில்ஆடுதீண்டாப்பாளைச்சாறுவிட்டுஅரைத்து வில்லைதட்டி உலர்த்தி, சில்லிட்டுச் சீலை செய்து புடமிட்டெடுக்கச் செந்தூரமாம். இப்படி முடித்த செந்தூரம் சிறப்பாய்க் கருப்பச்சூலைக்கு வழங்கப்படும்.

(வேறு)

**கறியுப்பை** எருக்கம்பால், திருகு கள்ளிப்பால், தும்பை, கவிழ்த் தும்பை, மருதம்பட்டை, குமரி, எலுமிச்சம் பழம், பொடுதலை இவைகளின் சாற்றில் வகைக்கு இரண்டு புடம் போடச் செந்தூர மாகும்.

**அளவு:** *1 (65 மி. கிராம்) முதல் 2 குன்றியெடை (130 மி. கிராம்).*

**துணைமருந்து :** தேன்.

**தீரும் நோய்கள் :** குன்மம், உதரரோகம், க்ஷயம், சூலை, வீக்கம் வாயு, கிரகணி முதலியன.

## கறி உப்புத் திராவகம்.

சுத்தி செய்த கறியுப்புப் பலம் 8 (280 கிராம்), படிகாரம் பலம் 6 (210 கிராம்) பொடித்து, 8 பலம் (280 கிராம்) கடலைப் புளிப்புச் சேர்த்து வாலையிலிட்டு வடித்தால் திராவகம் இறங்கும்.

**அளவு :** 5 துளி நீரில் கலந்து கொடுக்கவும்.

**உபயோகம் :** மந்தாக்கினி, துர்ப்பலம், வாத நோய், செரி யாமை முதலிய நோய்கள் தீரும்.

## வேறு வழக்குகள்.

உப்பை நீர்விட்டு அரைத்து விடக்கடிவாயின் மீது பற்றிட்டு அனல் காண்பிக்க விடவேகம் குறையும்.

உப்பை நீரில் கரைத்து, அத்தெளிநீரைத் தேள் கடிக்குக் கண்ணில் சில துளிகள்விட, விடம் நீங்கும்.

உப்பு ஒரு தேக்கரண்டியளவு எடுத்து $3\frac{1}{4}$ ஆழாக்கு (546 மி.லி.) வெந்நீரில் கரைத்துக் கொப்பளிக்கத் தொண்டைக்கட்டு, தொண் டை வீக்கம், பல் ஈறல் வீக்கம் முதலியவை நீங்கும்.

உப்பை ஒரு பலம் (35 கிராம்) எடுத்துத் துணியில் முடிந்து, கொதிக்கும் எண்ணெயில் தோய்த்து தாங்கக்கூடிய சூட்டில் ஒற் றடமிட, வீக்கமும் அதனால் உண்டாம் வேதனையும் தணியும்.

மேலை நாட்டு முறைப்படி, ஊழிநோயில் நாடி காணப்படாதவர் களுக்கு உப்பை அளவுப்படி தீநீரில் கரைத்துக் கார் இரத்தக்குழாய் வழியாய் உட்செலுத்துவதுண்டு.

ஆணி, முள் முதலியன பாதத்தில் தைத்தால் எடுத்துவிட்டு அவ்விடத்தில் உப்புப் பொடியை வைத்துச் சுட்டிகை செய்ய, அதனுல் ஏற்படும் விடத்தன்மைகளை வாராமல் தடுக்கும்.

உப்பையும் புளியையும் சம அளவு நீரில் கரைத்துக் கொதிக்க வைத்து, குழம்புப் பதத்தில் எடுத்து, இளஞ்சூட்டில் அடிப்பட்ட வீக்கம், சுளுக்கு இவைகளுக்குப் பற்றிட, இரத்தக்கட்டுக் கரைந்து வேதனை நீங்கி விடும். இப்பழக்கம் சாதாரண மக்களிடம் நிலவி வருகிறது.

பல் தேய்க்கச் செய்யப்படும் பற்பொடிகளில் உப்பைச் சேர்ப்பதுண்டு.

காதிலேனும் குய்யத்திலேனும் ஈ, எறும்பு, அட்டை இவைகள் புகுந்து கொண்டால், அவற்றை வெளிப்படுத்த உப்புநீரைப் பாய்ச்சுவதுண்டு.

உப்புக்கரைத்த நீரை ஆசனவழியில் செலுத்த, கீழ்க் குடலிலுள்ள கீரிப் பூச்சிகளை வெளிப்படுத்தும்.

காடிக்காரம் தின்று விடமித்தவர்களுக்கு உப்பை நீரில் கரைத்துக் குடிப்பிக்க, அஃது அதனுல் உண்டாம் நஞ்சை முறிக்கும்.

மீன், மாமிசம், காய்கறி இவைகள் அழுகிக் கெடாமல் இருப்பதற்கு உப்பைச் சேர்த்துப் பாடம் செய்வார்கள்.

உப்பு நீர்க்குணம்.

''உப்புநீர்க் குணங்கள் தன்னை ஓதியே விளம்பக் கேளும்
நப்பிளைப் பிருமல் வாந்தி நயனரோ கங்கள் போகும்
செப்பினே னதிசா ரங்கள் தேரனி லகுவை சோபை
வெப்புமேற் குன்மந் தீரும் மேதினியில் விளம்பு வாயே.''

(பொ-ள்) உப்பு நீரினுல் இளைப்பு, இருமல், வாந்தி, கண் நோய் சுள், அதிசாரம், வாத கல்லீரல் வீக்கம் சோபை, சுரத்துடன் கூடிய குன்மம் முதலியன நீங்கும்.

சமுத்திர நீர்க் குணம்.

''கடலின் புனலாற் கவிகை பெருநோய்
உடலில் கடுப்புதிரச் சூலையடர்குட்டம்
வாதகுன்மம் வெப்பிரத்த வாதநீ ராமைமக
கோதரம் பிலீகமறுங் கூறு.''

(பொ-ள்) கடல் நீரால் கவிகை, பெருநோய், உடற்கடுப்பு, இரத்தசூலை, குட்டம், வாதகுன்மம், வெப்பம், இரத்தவாதம், நீராமை, மகோதரம் மண்ணீரல் வீக்கம் முதலியன நீங்கும்.

## காசிச்சாரம்.

இதன் வைப்புமுறை, குணம், உபயோகம் முதலியவற்றைப் பற்றிய விவரம் கிடைக்கவில்லை.

காய்ச்சுச் சாரம் என்பது காசிச்சாரம் என்று மருவியிருக்கலா மென்றும் காசி என்ற நாட்டிலிருந்து வந்த சாரம், காசிச்சார மென்று வழங்கப்பட்டிருக்கலாமென்றுங் கூறுகின்றூர்கள். இச்சரக்கும் கிடைப்பதில்லை.

## காய்ச்சுலவணம்.

இது, வைப்பு உப்பில் ஒன்ருகும். இது வழக்கில் இல்லை இதன் வைப்புமுறை, கீழ்க்காணுமாறு போகர் ஏழாயிரம் இரண்டாம் காண்டத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

கடற்கரை ஓரத்தில்பொறிப் பொறியாய் மின்னும் கறுப்பு மணலை வாரிக் குருதுகட்டி, கடல்நீரை அதில் விட்டு அதிலிருந்து வரும் தண்ணீரை வாங்கித் தாழியில் இட்கு அடுப்பேற்றி, அதில் பூநீறு படி மூன்று (3.9 லிட்.) வளையல் உப்பு படி மூன்று (3.9 லிட்.) வெடி யுப்பு படி மூன்று (3.9 லிட்.) அன்னபேதி பலம் எட்டு (280 கிராம்) இவைகளைக் கரைத்து, நான்காம் நாள் தெளிவை வாங்கிக் காய்ச்சி அழுந்தும் பதத்தில் பாய் மீது ஊற்றிக் காயப்போட, காய்ச்சு லவணமாம்.

இதனுல், மயில்துத்தம் குருவாம் என்றும், இது வாதப்போக் கிற்கும் பயன்படுமென்றும் அறியக்கிடக்கின்றன.

## சத்திச்சாரம்.

இது, சுவர்ச்சிகை என்னும் வேறு பெயராலும் வழங்கப்படும்.

இவ்வுப்பின் வைப்பு முறை கீழ்க்காணுமாறு கூறப்பட்டுள்ளது:

பூநீறு படி100 (130 லிட்) சுண்ணும்பு படி 50 (65 லிட்) இரண்டை யுங் கலந்து, அடியில் துவாரமிட்டு, வைக்கோல் செருகப்பட்ட குதிரிலிட்டு, இதில் சுவர் உதிர்ந்த மண் படி 100 (130 லிட்) கூட்டி, நாலு பங்குத் தண்ணீரைக் கொஞ்சங் கொஞ்சமாய் ஊற்றிக் குதிர் அடியில் வாயகன்ற சட்டியிட்டு, வடிகின்ற நீரை வாங்கி, மற் ஞெரு சட்டியிலிட்டுக் காய்ச்சி மெழுகுப் பதத்தில் இறக்கிப் பாய் மீது வில்லை வில்லையாய் வார்த்துக் காயப்போட, உப்பு சத்துச் சாரமாம். இவ்வுப்பு நீர்க்கூருகும்.

### சுத்தி.

இதனைக் காடி அல்லது வெள்ளாட்டு நீரில் மூன்று நாள் மத்தித்து வெய்யிலில் வைத்து உலர்த்தச் சுத்தியாகும்.

### (வேறு)

வெள்ளாட்டு நீரில் கரைத்துத் தெளிவெடுத்துச் சூரிய வெப்பத்தில் உலர்த்திக் கொள்ளச் சுத்தி உண்டாகும்.

### (வேறு)

இதனைக் காடியிலாவது கோமூத்திரத்திலாவது மூன்று நாழிகை அரைத்து, ஆதித்தனொளியில் உலர்த்திக் கொள்ளச் சுத்தி ஏற்படும்.

### பொதுக் குணம்.

''மந்தமொடு தங்கு மலசலம் பிலீகமடி
யுந்திவரு கின்ற வொலியிருமல்—குந்தவைக்கும்
வாதவலி குன்ம மகோதரங்கி ராணியும்போ
மோதுசத்தி க்ஷாரத்தை யுன்.''

(பொ-ள்) சத்திச் சாரத்தினால் மந்தாக்கினி, மலசலக்கட்டு, கபப்பிலீகம், கோழை விழும்படி சத்திப்புடன் வாரா நின்ற க்ஷயகாசம், உட்கார்ந்தே இருக்குமாறு செய்கின்ற வாதம், வயிற்று வலி, பெருவயிறு, கிரகணி முதலியன நீங்கும்.

இச் சரக்கு பனைவெட்டைப்போலச் சில காலத்திற்கு முன்வந்து கொண்டிருந்ததாய்க் கூறப்பட்டிருக்கின்றது. இதனைக் கொண்டு செய்யப்படும் கட்டும், சுண்ணமும், திராவகமும் நூல்களின் அருமையாய்க் காணலாம். இதுவும் வழக்கினின்று மறைந்த உப்புகளில் ஒன்றாகும்.

### சிந்துப்பு (சிந்துலவணம்).

மலைகளில் உற்பத்தியாகும் உப்பு பலம் 100 (3,500 கிராம்), கலைமான்கொம்புச் சீவல் பலம் 100 (3,500 கிராம்) இவற்றைக் கனமான சட்டியில் பாதி சீவலைப் பரப்பி, அதன் மீது உப்பைக் கொட்டி, மேலும் மற்றப் பாதிச் சீவலால் மூடி, சட்டி வாய் பொருந்தும்படி மற்றொரு சட்டி கவிழ்த்து மண் சீலை செய்து அடுப்பேற்றி, நான்கு சாமம் (12 மணி) விடாமல் எரித்து, ஆறின பின் பெடுத்துக்கல்வத்திற் பொடித்து, ஒரு தாழியிலிட்டு, உப்புக்கு நான்கு பங்கு பனித் தண்ணீர்விட்டுக் காய்ச்சி, உறையும் பதத்தில் பலகைமீது ஊற்றி வெய்யிலில் வைக்கில், இஃது இறுகிக்

கனமான உப்பாகும். இது காரமாயுமிருக்கும். இதற்குச் சிந்து லவணம் என்பது பெயர். இதனுல் வெங்காரமும் மனேசிலே யும் கட்டும் என்றும் கூறப்பட்டிருக்கிறது.

நிற்க, சிந்துப்பு என்றுல் சிவந்த உப்பு என்றும், இந்துப்பை வெட்டி எடுக்கும் சுரங்கங்களின் சில பிரிவுகளில் சூரிய வெப்பத் தால் மேற்படி உப்புச் சிவந்து பக்குவமடைவதுண்டு என்றும், அவ் வுப்பையே சிந்துப்புக்குப் பதில் உபயோகிக்கின்றுர்கள் என்றும், இதன் குணம், செய்கை, உபயோகம் முதலியன இந்துப்பை ஒத்து இருக்குமென்றும் கூறப்பட்டிருக்கின்றன.

## சீனக்காரம்.

## ALUMEN ALUM.

**வேறு பெயர் :** படிகாரம், படிகி, சீனம்.

நேப்பாளம், பஞ்சாப், பீகார், கத்தியவார் முதலிய பிரதேசங் களில், பூமியில் விளைகின்ற காரச் சத்துள்ள களிமண்ணைக் கொண்டு வந்து அதிலுள்ள படிகாரத்தைப் பிரித்தெடுத்து விற்பனைக்கு அனுப்புகின்றுர்கள். இது, படிகம் போன்று வெளுப்பாயும் கட்டி களாயும் புளிப்பு, இனிப்பு, துவர்ப்போடுங்கூடிய சுவையுள்ள தாயும் இருக்கும். இதைக் காற்றுட வைத்தால், நீர் நீங்கிக் கட்டிகளின் மேல் தூள் படியும். பொரித்தால், பெங்கி நீர் நீங்கி எடை குறையும்.

### சுத்தி.

இதை நீரில் கரைத்து வடிக்கட்டிக் காய்ச்சிக் குழம்புப் பக்கு வத்தில் இறக்கிக் குளிரும்படி செய்யச் சுத்தியாம்.

**செய்கை :** துவர்ப்பி, குருதிப் பெருக்கடக்கி, அழுகலகற்றி, புண்ணுக்கி, இசிவகற்றி முதலியன ஆகும். இது மலத்தைக் கட்டும்.

**அளவு :** 10 (650 மி. கிராம்.) முதல் 20 உளுந்தெடை (1.3 கிராம்.) அதிக அளவில் கொடுத்தால் குமட்டல், வாந்தி, வயிற்றுக் கடுப்பு, பேதி முதலிய துர்க்குணங்கள் கண்டு, வயிற்றுள் விரண முண்டாகும்.

சுத்தி.

இதனைக் காடி அல்லது வெள்ளாட்டு நீரில் மூன்று நாள் மத்தித்து வெய்யிலில் வைத்து உலர்த்தச் சுத்தியாகும்.

(வேறு)

வெள்ளாட்டு நீரில் கரைத்துத் தெளிவெடுத்துச் சூரிய வெப்பத்தில் உலர்த்திக் கொள்ளச் சுத்தி உண்டாகும்.

(வேறு)

இதனைக் காடியிலாவது கோமூத்திரத்திலாவது மூன்று நாழிகை அரைத்து, ஆதித்தனொளியில் உலர்த்திக் கொள்ளச் சுத்தி ஏற்படும்.

பொதுக் குணம்.

''மந்தமொடு தங்கு மலசலம் பிலீகமடி
யுந்திவரு கின்ற வொலியிருமல்—குந்தவைக்கும்
வாதவலி குன்ம மகோதரங்கி ராணியும்போ
மோதுசத்தி க்ஷாரத்தை யுன்.''

(பொ-ள்) சத்திச் சாரத்தினல் மந்தாக்கினி, மலசலக்கட்டு, கபப்பிலீகம், கோழை விழும்படி சத்திப்புடன் வாரா நின்ற க்ஷயகாசம், உட்கார்ந்தே இருக்குமாறு செய்கின்ற வாதம், வயிற்று வலி, பெருவயிறு, கிரகணி முதலியன நீங்கும்.

இச் சரக்கு பனைவெட்டைப்போலச் சில காலத்திற்கு முன்வந்து கொண்டிருந்ததாய்க் கூறப்பட்டிருக்கின்றது. இதனைக் கொண்டு செய்யப்படும் கட்டும், சுண்ணமும், திராவகமும் நூல்களின் அருமையாய்க் காணலாம். இதுவும் வழக்கினின்று மறைந்த உப்பு களில் ஒன்றுகும்.

சிந்துப்பு (சிந்துலவணம்).

மலைகளில் உற்பத்தியாகும் உப்பு பலம் 100 (3,500 கிராம்), கலைமான்கொம்புச் சீவல் பலம் 100 (3,500 கிராம்) இவற்றைக் கனமான சட்டியில் பாதி சீவலைப் பரப்பி, அதன் மீது உப்பைக் கொட்டி, மேலும் மற்றப் பாதிச் சீவலால் மூடி, சட்டி வாய் பொருந்தும்படி மற்ருெரு சட்டி கவிழ்த்து மண் சீலை செய்து அடுப்பேற்றி, நான்கு சாமம் (12 மணி) விடாமல் எரித்து, ஆறின பின் பெடுத்துக்கல்வத்திற் பொடித்து, ஒரு தாழியிலிட்டு, உப்புக்கு நான்கு பங்கு பனித் தண்ணீர்விட்டுக் காய்ச்சி, உறையும் பதத்தில் பலகைமீது ஊற்றி வெய்யிலில் வைக்கில், இஃது இறுகிச்

னமான உப்பாகும். இது காரமாயுமிருக்கும். இதற்குச் சிந்து லவணம் என்பது பெயர். இதனுல் வெங்காரமும் மனேசிலை யும் கட்டும் என்றும் கூறப்பட்டிருக்கிறது.

நிற்க, சிந்துப்பு என்ருல் சிவந்த உப்பு என்றும், இந்துப்பை வெட்டி எடுக்கும் சுரங்கங்களின் சில பிரிவுகளில் சூரிய வெப்பத் தால் மேற்படி உப்புச் சிவந்து பக்குவமடைவதுண்டு என்றும், அவ் வுப்பையே சிந்துப்புக்குப் பதில் உபயோகிக்கின்ருர்கள் என்றும், இதன் குணம், செய்கை, உபயோகம் முதலியன இந்துப்பை ஒத்து இருக்குமென்றும் கூறப்பட்டிருக்கின்றன.

## சீனக்காரம்.

## ALUMEN ALUM.

**வேறு பெயர் :** படிகாரம், படிகி, சீனம்.

நேப்பாளம், பஞ்சாப், பீகார், கத்தியவார் முதலிய பிரதேசங் களில், பூமியில் விளேகின்ற காரச் சத்துள்ள களிமண்ணைக் கொண்டு வந்து அதிலுள்ள படிகாரத்தைப் பிரித்தெடுத்து விற்பனேக்கு அனுப்புகின்ருர்கள். இது, படிகம் போன்று வெளுப்பாயும் கட்டி களாயும் புளிப்பு, இனிப்பு, துவர்ப்போடுங்கூடிய சுவையுள்ள தாயும் இருக்கும். இதைக் காற்ருட வைத்தால், நீர் நீங்கிக் கட்டிகளின் மேல் தூள் படியும். பொரித்தால், பெங்கி நீர் நீங்கி எடை குறையும்.

### சுத்தி.

இதை நீரில் கரைத்து வடிக்கட்டிக் காய்ச்சிக் குழம்புப் பக்கு வத்தில் இறக்கிக் குளிரும்படி செய்யச் சுத்தியாம்.

**செய்கை :** துவர்ப்பி, குருதிப் பெருக்கடக்கி, அழுகலகற்றி, புண்ணுக்கி, இசிவகற்றி முதலியன ஆகும். இது மலத்தைக் கட்டும்.

**அளவு :** 10 (650 மி. கிராம்.) முதல் 20 உளுந்தெடை (1.3 கிராம்.) அதிக அளவில் கொடுத்தால் குமட்டல், வாந்தி, வயிற்றுக் கடுப்பு, பேதி முதலிய துர்க்குணங்கள் கண்டு, வயிற்றுள் விரண முண்டாகும்.

## பொதுக் குணம்.

''சீனமெனுங் காரமது சீறிவரு பல்லரணை
ஆனைக்கால் கண்ணோய் அனிலமோடு—மாநிலத்தில்
துன்மாங் கிசம்வாயு தோலாத உள்ளழலை
குன்மமிவை போக்குமெனக் கூறு.'

(பொ-ள்) படிகாரத்தினால் பல்லரணை, யானைக்கால், கண்ணோய், நேத்திரவாயு, துர்மாமிச வளர்ச்சி, வாயு, உட்சூடு குன்மம் முதலியவை நீங்கும்.

மற்றும் இஃது இரத்த பித்தநோய், இரத்தப்பெருக்கு, அதிசாரம், சீதபேதி, குழந்தைகளுக்குக் காணும் வாந்தி, பேதி, கக்கிருமல், கபம் விழுதல், தொண்டைப்புண், ஈறுவிரணம், வெள்ளை, பெரும்பாடு முதலிய நோய்களையும் போக்கும்.

## உபயோகங்கள்.

இரண்டு உளுந்து (130 மி. கிரா.) எடை படிகாரத்தை ஓர் அவுன்ஸ் (28 மி. லிட்) நீரில் கரைத்து, கண் கழுவ கண்ணோய் நீங்கும்.

ஒரு பலம் (35 கிராம்) படிகாரத்தை எட்டுப்படி (10.4 லிட்) நீரில் கரைத்து, அந்நீரை அக்கரத்தில் வாய்கொப்பளிப்பதற்கும், புண்களைக் கழுவுவதற்கும் உபயோகிப்பதுண்டு.

வெட்டுப்பட்ட இடங்களில், படிகாரத்தை நீரில் கரைத்து, சீலையில் நனைத்துக்கட்ட அது குருதிப் பெருக்கை அடக்கும்.

படிகாரம், காய்ச்சுக்கட்டி, இலவங்கப்பட்டை இவைகளைச் சம வெடை எடுத்துப் பொடித்து, 15 உளுந்தெடை (975 மி. கிரா.) வீதம் தேனில் கலந்து கொடுத்து வர ஆரம்ப ஊழி, க்ஷயத்தில் காணும் பேதி இவை நிற்கும்.

படிகாரத்தை உளுந்தெடை (65 கி. கிரா.) வீதம் கொடுத்து வர வாந்தி நிற்கும்.

மூன்று உளுந்தெடை (195 மி.கிராம்.) படிகாரத்தைப் பன்னீர் அரை அவுன்ஸில் (14 மி. கலந்து நாள் ஒன்றுக்கு இரு முறை கொடுக்க சுவாசகாச இருமல் நீங்கும்.

ஒன்று (65 மி. கிரா.) முதல் இரண்டு உளுந்தெடை (130 மி. கிரா.) படிகாரத்தைப் ஓமத் தீநீரில் கலந்து கொடுக்க கக்குவான் நோய் குணமாகும்.

பாம்பு கடித்தவர்களுக்கு, 36 குன்றி (4.7 கிராம்) படிகாரத்தை மோரில் கலக்கிக் கொடுப்பதுண்டு.

தலையில் பட்ட பலத்த காயத்திற்கு, இரண்டு உளுந்தெடை (130 மி. கிரா.) படிகாரத்தைச் சர்க்கரையுடன் கலந்து கொடுத்தல் உண்டு.

கக்குவான் நோயிலும் விடாத விக்கலிலும் வாந்தியை உண்டு பண்ணுவதற்காக, இதனை அதிக அளவில் 30 உளுந்தெடை (3.9 கிராம்) தேனுடன் கலந்து கொடுத்தலுண்டு.

நரம்புச் சிலந்தி நோய்க்கு, இதை 20 உளுந்தெடை (2.6 கிராம்) வரை சர்க்கரை மணப்பாகுடன் கலந்து கொடுக்கலாம்.

படிகி இரண்டு குன்றியை (260 மி. கிராம்) ஆடாதோடைச் சாற்றில் நாள் ஒன்றுக்கு மும்முறை வீதம் கொடுத்துவர, பெண்களுக்குக் காணும் வெள்ளையும் அதனுடன் படுகின்ற உதிரமும் நிற்கும்.

இரத்த மூலத்திற்கும், பெரும்பாட்டிற்கும் பாலில் படிகத்தை சேர்த்துக் காய்ச்சி முரித்து, நீரை வடிகட்டித் திப்பியை நீக்கி, நீரை மட்டும் கொடுக்கவும். இந்த நீர் விடசுரத்திற்கும் நன்மை பயக்கும்.

இதை நீரில் கரைத்து மூக்கு, குய்யம், எயிற்றடி இவ்விடங்களில் வரும் இரத்தத்தை நிறுத்தத் தடவலாம்.

மயிருக்கு வர்ணமேற்றச் செய்யும் மருந்துகளில் இது சேருகின்றது.

கற்றாழைச் சோற்றில் படிகாரத்தைப் பொடித்துத் தூவ. சாறு இறங்கும்.

தற்காலம் வீடுகளில் வழங்கப்படும் அலுமினியப் பாண்டங்களில் படிகம் இருக்கின்றது. இப்பாண்டங்களை அதிகமாகப் பயன்படுத்தினால், விடமித்து, உடலில் அசதியையும் வன்மைக் குறைவையும் மலபந்தத்தையும் விளைவிக்கும்.

## படிகாரத்தினால் செய்யப்படும் மருந்துகள்.

### படிகாரப் பற்பம்.

படிகாரத்தை நீரில் கரைத்து, கனத்த சீலையில் வடிக்கட்டி, பீங்கான் பாத்திரத்தில் கொட்டி, தூசுபடாமற் சீலையால் மூடி, இரவி புடத்தில் வைக்கப் படிகாரம் மலினமற்றுக் கட்டியாய் நிற்கும். இதைக் கோழி முட்டை வெண்கருவினால் அரைத்து, சுத்த வெண்மையடையுமட்டும் குக்கிட புடமிட்டு, நீர்க்கட்டு, தசையடைப்பு, நீரெரிவு முதலிய நோய்களுக்குப் பசுவின் வெண்ணெய் நெய்முள்ளி ச்சாறு, சிறு பீளைச்சாறு, சிறு நெருஞ்சிச்சாறு இவைகளில் கொடுக்கக் குணமுண்டாகும்.

அளவு : ஒன்று (130 மி. கிரா.) முதல் நான்கு குன்றியளவு (520 மி. கிராம்).

### படிகாரச் செந்தூரம்.

சுத்தி செய்த படிகாரத்தைப் பொரித்து, ஒரு பலத்திற்கு (35 கிராம்) நாலிலொரு பங்கு இலிங்கங்கூட்டி, எலுமிச்சம் பழச் சாற்றுலாட்டிப் பில்லை செய்துலர்த்தி பத்து வரட்டியில் புட மிடவும். இவ்வாருக மேலும் நான்கு புடமிடுக. ஒவ்வொரு புடத்துக்குப்பின், தேறின எடைக்குக் கால் பாகம் இலிங்கம் சேர்த்து வரவும். இதில் ஒன்று (130 மி. கிராம்) முதல் இரண்டு குன்றிப் (260 மி. கிராம்) பிரமாணம் எடுத்து, வெண்ணெய் அல்லது நெய்யில் சேர்த்துக் கொடுக்க சீதபேதி, இரத்தபேதி பெரும்பாடு நீங்கும்.

### படிகாரப் பற்று.

"கடுக்கா யுடனே படிகாரம் கரிய போளத் துடன்கூட்டி
நெடுக்க கல்வ மதிலிட்டு நிம்பச் சாற்றி லுடனரைத்து
இடுக்கக் காய்ச்சி யிமையின்மேல் இறுகத் தடவக் கண் [சிவப்பும்
நடுக்குங் கண்ணில் நீர்விடுதல் நடுங்கி யோடுங் கண்டீரே".

(பொ-ள்) கடுக்காய்த் தோல், படிகாரம், கரியபோளம் இவற்றுள் கடுக்காய்த் தோலை நன்றுய்த் தூளாக்கிக் கொண்டு, எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து, ஓர் இரும்புக் கரண்டியில் விட்டு மற்ற சரக்குகளையும் பொடித்துச் சேர்த்து நன்றுய்க் காய்ச்சி, கண்ணைச் சூழப் பற்றுப்போட்டால் கண் சிவப்பு, நீர் வடிதல் முதலியன தீரும்.

குறிப்பு — தண்ணீர் சேர்ந்தால் மருந்து கெட்டுப்போகும்.

பேதியை நிறுத்த உபயோகிக்கும் இலிங்கத்துவர், பெரும்பாட்டிற்குப் பயன்படுத்தப்படும் பூங்காவிச் செந்தூரம் முதலிய மருந்துகளில் படிகாரம் சேருகின்றது.

## சூடன்.

## CAMPHOR.

இப்பொருள் கருப்பூரம், சுடர்க்கொடியோன், பூரம், தீபம் என்ற வேறு பெயர்களினுலும் வழங்கப்படுகின்றது.

சீனு, ஜப்பான், சுமத்ரா, போர்னியோ முதலிய இடங்களில் விளை ன்ற சின்னமோமம்காம்போரா (Cinnamomum Camphora) என்னும்

ஒரு வகைச் செடியின் சமூலத்தில் கருப்பூரமிருக்கின்றது. இச் செடியின் வேர், அடிப்பாகம், கிளைகள் முதலியவற்றைத் துண்டு களாக்கி நீருடன் சேர்த்து வாலையிலிட்டுத் தைலம் இறக்கிப் பிறகு பதங்கித்துக் கொள்வது வழக்கம். இப்பதங்கத்தைச் சுண்ணும்புடன் கலந்து பதங்கித்துச் சுத்தி செய்வார்கள். கர்ப்பூரக்கட்டி வெண்ணிறத்துடன், நொய் போன்ற அணுக்களுடன் கூடியிருக் கும்; வாயிலிட்டுச் சுவைக்க முதலில் விறு விறுப்புள்ளதாயும், பின்பு குளிர்ச்சியாயும், வாசனை பொருந்தியதாயுமிருக்கும்; இது, நீரில் மிதக்கும். இதைக் கொளுத்தச் சுடர்விட்டெரிந்து, எரி கின்ற இடத்தில் சிறிது கருநிறம் தங்கும்; இஃது ஆகாயத்தில் பரி ணமித்து விடும். மூடி எரிக்கப் பதங்கித்து விடும்; காற்றில் கரையும்; இலேசாகப் பொடிபடும்; நீரில் கரையாது; எண்ணெய், சாராயம், பிசின் இவைகளில் கரையும். இதைப் பிசின் சருக் கரை, சிற்றண்டத்தின் வெண்கரு இவற்றுளொன்றுடன் கூட்டி நீர் விட்டரைத்துச் சலத்துடன் கலக்கும்படி செய்யலாம்.

**சுவை :** விறுவிறுப்புடன் கூடிய கைப்பும் கார்ப்பும்.

**வீரியம் :** வெப்பம்.

**விபாகம் :** கார்ப்பு.

செய்கை : வெப்பமுண்டாக்கி, அகட்டுவாயகற்றி, சமனகாரி, வேதனு சாந்தினி, இசிவகற்றி., அழுகலகற்றி, தூக்கமுண்டாக்கி, கோழையகற்றி, தாதுபெருக்கி முதலிய செய்கைகள் உள.

பொதுக்குணம்.

''கிருமிசல தோடங் கிளைவலிப்பு சந்நி
பொருமுமந்தம் அங்கிபட்ட புண்ணே—டெரிசுரங்கள்
வாந்திபித்தஞ் சீதமுறு வாதஞ் செவிமுகநோய்
காந்திகருப் பூரமொன்ருற் சாற்று.''

(பொ-ள்) கருப்பூரத்தினுல் கிருமி, நீரேற்றம், இசிவு, சந்நி பாதம், வாத அலசம், தீச்சுட்டபுண், கோரசுரம், வாந்தி, பித்தம், கபவாதம், காதையும் முகத்தையும் பற்றிய பிணிகள் முதலியன நீங்குமென்க.

மற்றும், பிரசவ உன்மாதம், இரைப்பு, மாரடைப்பு, சூதகச் சூலை, பிளவை, பிரமேக சம்பந்தமான ஆண்குறி எரிச்சல், சூதகச் சன்னி, சொட்டு மூத்திரம், கீல்வாதம், அழிவிரணம், அதிசாரம், ஊழி, ஈளை மார்புத்துடிப்பு, சுக்கிருமல், சொப்பன ஸ்கலிதம், போகவிச்சை இவைகளுக்கும் இதை உபயோகிக்கலாம்.

**அளவு :** 1 (65 மி. கிராம்) முதல் 5 உளுந்தெடை (325 மி. கிராம்) வரை தரலாம். பலமான நோய்களுக்கு இதை இரட் டிப்பு அளவு வரையில் உபயோகிக்கலாம்.

**குறிப்பு.—இஃது அளவிற்கு அதிகப்படில் நஞ்சாம். இதைக் கர்ப்ப அழிவிற்காக, அதிக அளவில் வாழைப்பழத்தில் வைத்துச் சாப்பிடுகிழின்ற மூடப்பழக்கமிருக்கின்றது.**

சுத்தி.

இச்சரக்கைச் செங்கழுநீர்ப் புட்பசாற்றில் ஒரு நாழிகை ஊற வைத்தெடுத்து, வெய்யிலில் உலர்த்தி எடுக்கச் சுத்தியாம். சரக்கைப் பார்த்து மண், தூசு முதலிய மலினங்களில்லாமல் சுத்தம் செய்துகொள்ள வேண்டும்.

உபயோகம்.

சுளுக்கு, விரணம், நமைச்சல் இவைகட்கு இதைப் பொடித்து மேலுக்குப் பூசலாம்.

கருப்பூரத்தையும் சீரகத்தையும் பொடித்துப் பொட்டணம் கட்டி முகர, நீரேற்றம் நீங்கும்.

இதனை, ''இந்தரி குடாரி யிரிக்குஞ் சிற்பரம்'' என்ற தேரன் கரிச லடியால் உணர்க..

குங்கிலியத் தைலத்துடன் சிறிது கருப்பூரங் கலந்து வாதக் குடைச்சல், கீல் வாதம், பிடிப்பு, மார்புச்சளி இவைகட்குப் பூசி ஒற்றணமிடல் உண்டு.

பற்பொடியுடன் இதைச் சிறிது சேர்த்துப் பல் துலக்கிவர, வாய் நாற்றம், பற்புழு நீங்கும்.

இதைப் பொடித்துத் தூவ, துணி முதலியவற்றில் பூச்சிகள் உண்டாகா.

கருப்பூராதிச் சூரணம்.

கருப்பூரம் 1 பங்கு, சாதிக்காய், ஏலம், இலவங்கம், மிளகு இவைகளின் தூள் வகைக்கு ½ பங்கு, சர்க்கரை 3 பங்கு இவை களைச் சேர்த்துக் கலந்து கொள்ளவும்.

அளவு : 10 (650 மி. கிராம்) முதல் 20 உளுந்து (1.3 கிராம்) நிறைவரை கொடுக்கலாம். இச் சூரணம் பூரண சந்திரோயத் திற்குத் துணைமருந்தாய்ப் பயன்படும்.

கருப்பூராதி மாத்திரை

கருப்பூரம் 2 பங்கு, அபினி 1 பங்கு சேர்த்துத் தேன்விட்ட ரைத்து 1½ உளுந்தெடைக்கு (97 மி. கிரா.) மேற்படாமல் மாத்தி ரையாக்கிப் படுக்குமுன் அருந்திவர, சொப்பன ஸ்கலிதம், நமைச்சல், நாட்பட்ட கீல் வாயு நீங்கும்.

(வேறு)

கருப்பூரம், காயம் சமவெடை எடுத்துச் சேர்த்து 3 உளுந் தெடை (195 மி. கிரா.) மாத்திரையாக்கி உட்கொள்ள இரைப்பு உப்புசம் முதலியன நீங்கும்.

(வேறு)

இலிங்கம் 1 பங்கு, கருப்பூரம் 1 பங்கு, ஓமம் 1 பங்கு இவைகளைப் பொடித்துத் தேன்விட்டரைத்துக் குன்றியளவு மாத்திரை செய்து. நாள் ஒன்றுக்கு இரண்டு மாத்திரை வீதம் கொடுத்து வரப் பேதி, அதிசாரம், குன்மம், சூலை முதலியன நீங்கும்.

கருப்பூர நீர்.

கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் ஆகிய இவைகள் ஊறின நீரில் சூடனைக் கரைத்துக் கண்ணைக் கழுவுதல் பண்டைய வழக்க மாகும்.

இதனை,

''பொடித்தான் கதிரோன் றிரைநெற்றிப் புகழ்முப் பழநீர்ப் [பளிங்களைஇக்
கடிப்பூ மாலை யவரேந்தக் கமழ்தாமரைக்கண் கழீஇயினான்.''

என்ற செய்யுளால் உணரலாம்.

(சிந்தாமணி— 2356.)

நிற்க, கருப்பூரம், ஊழிநோய்க்காகச் செய்யப்படும் ஊழிகாலன் என்ற மருந்திலும், சிறப்பாகச் சுரம், வாந்தி, மந்தம், பேதி, உடற் சூடு குறைவு முதலிய நோய்களுக்காகச் செய்யப்படும் சாதி சம்பீரக்குழம்பிலும் சேர்க்கப்படுகின்றது.

சூடன் வைப்பு முறையை, அகத்தியர் பரிபூரணம், போகர் ஏழாயிரம் போன்ற நூல்களிற் காணலாம்.

மஜ்ஜை, தந்தவேதனை, தலைவலி, சயரோகம் இவைகளுக்குக் கருப்பூரம் 1 அவுன்ஸ் (28 கிராம்), காடி 20 அவுன்ஸ் (560 மி.லிட் கூட்டித் துணியில் நனைத்து, உபத்திரவமுள்ள இடத்தில் போட்டு அத்துணியை மேற்படி நீரினால் நனைத்துக் கொண்டே இருக்கக் குணமுண்டாகும்.

நீர்த்தாரையில் காணும் தாபிதரோகங்களுக்குக் கருப்பூரத்தை 6 (390 மி. கிராம்) முதல் 8 உளுந்தெடை (520 மி. கிராம்) கொடுத்து, கருப்பூரப் பூசுதைலத்தை மேலுக்கு உபயோகிக் கலாம். பிரசவங்களில் காணும் அபதானக வாதம், வலிப்பு அல்லது இசிவு இவைகளுக்குச் சூடன் 5 உளுந்தெடை (325 மி. கிராம்), பூரபற்பம் 5 உளுந்தெடை (325 மி. கிராம்) சேர்த்துக்

கொஞ்சம் தேன் கூட்டி 2 மாத்திரை செய்து, ஒரு மணி நேரத்திற்கு ஒரு மாத்திரை வீதங் கொடுத்து ஆமணக்கெண்ணெய் அல்லது வேறு விரேசனாதிகளைக் கொடுப்பின் நல்ல குணமுண்டாகும்.

படுக்கை விரணங்களுக்குச் சூடனைப் பட்டைச் சாராயம் (Arrack) அல்லது பிராந்தி (Brandy) யுடன் சேர்த்து அலம்பி வரவும்.

கருப்பூரத்தைக் கொளுத்தி வேது பிடித்தல் வியர்வை பிறக்கும்.

## திலா லவணம்.

எள் சக்கைச் சுட்டசாம்பல் 1 கலத்தை (64.5 லிட்டர்), தண்ணீர் 4 கலத்தில் (25.8 லிட்டர்) கலக்கித் தெளிவெடுத்து ஒரு பாண்டத்திலிட்டுக் காய்ச்சும்போது, பூநீறு, கல்உப்பு, மவடியுப்பு இவை வகைக்கு படி 3 (3.9 லிட்டர்) கூட்டி எரித்து, கரைந்த பின் மறு சட்டியில் வடித்துக் காய்ச்சி, துரும்பில் தோய்த்துப் பனை ஓலையில் குத்த, உறைந்தால் பதமென்றிறக்கி, அசையாமல் சூரிய வெப்பத்தில் 3 நாள் காயவைக்க, நீரெல்லாம் வற்றி உறைந்து கருஞ்சிவப்புள்ள உப்பாகும். இதைத் திலா லவணம் என்பர். இதில் வங்கம் நீறும் என்று கூறப்பட்டுள்ளது.

## நவ உப்பு மெழுகு.

கறியுப்பு, இந்துப்பு, வளையலுப்பு, பொட்டிலுப்பு, அமுரியுப்பு, மூங்கிலுப்பு, கல்லுப்பு, பாறையுப்பு, பூநீறு இவைகள் வகைக்கு ¼ பலம் (8.75 கிராம்) வீதம் நிறுத்தெடுத்துப் பாண்டத்திலிட்டுத் தும்மட்டிச்சாறு, ஆவின் பால் கூட்டித் துத்திவேர் கொண்டு சுழற்றி, மணல் போக்கி வடித்துக் காய்ச்ச சுண்டிய பின் வெண்மையாகும். இதனைக் கல்வத்திலிட்டு வீரம் 1 பலம் (35 கிராம்), கர்ப்பூரம் ½ பலம் (17.5 கிராம்) திரிகடுகு 3 வராகன் (12.6 கிராம்) வாளம் ¼ பலம் (8.75 கிராம்) சேர்த்துத் திரிபலைக்குடிநீரால் 1 சாமம் (3 மணி) அரைத்தெடுத்துப் பிறகு முலைப்பால் விட்டு, 1 சாமம் (3 மணி) மைபோலரைத்து மெழுகாக்கிக் கொள்ளவும்.

**அளவு :** மிளகளவு.

**நாளளவு :** ¼ மண்டலம்.

**துணை மருந்து :** பனைவெல்லம்.

**தீரும் நோய்கள் :** சூலை, மகோதரம், வலிகுன்மம், கிரந்தி, மேகம், நீர்க்கோவை, உதரவாயு, விடவாதம், அண்டவாதம், வலிவாதம், முடக்கு வாதம், தமர்வாதம், சூதகவாயு, எண்வகைக் குன்மம், பாரிசவாதம் முதலியன.

**பத்தியம் :** வெந்நீரும் சோறும், உப்பை வறுத்துக் கூட்டிக் கொள்ள வேண்டும். பசுவின் பால், நீர் மோர், சிறுகீரை, முருங் கைப்பிஞ்சு, கத்தரி, அவரை, பச்சைப்பயறு, துவரை, கோழி, காடை முதலியன ஆகும்.

மற்றும் இதை, சூலைக்குத் தேனிலும், சந்நிக்கு இஞ்சி நீரிலும் சுரத்திற்குப் பஞ்சமூலக் குடிநீரிலும் அனுபானித்துக் கொடுக்க வேண்டும்.

## நவாச்சாரம்.

# AMMONII CHLORIDUM OR AMMONIUM SAL AMMONIAC.

இப்பொருள் இஷ்டிகை, சல்லிகை, சூளிகை, படு என்ற வேறு பெயர்களினாலும் வழங்கப்படுகின்றன. இது கறசூளைகளிற் கிடைக்கும்; இஃது ஒட்டகம் முதலிய மிருகங்களின் சாணச் சாம்பலுடன், நிலக்கரியையும் உப்பையுங் கூட்டிப் பதங்கித்து எடுக்கப்படுகின்றன. கடைகளில் கிடைக்கும் சரக்கு, பார்வைக்குக் கட்டியாயும், வாசனை இன்றியும், நார் நாராயும், தூள் செய்யக் கடினமாயும் நீரிலும் சாராயத்திலும் கரையக்கூடிய தாயும், அழுக்குப் படிந்த வெண்மை அல்லது கபில நிறமுள்ள தாயும், வாயிலிடக் கசப்பு, புளிப்பு, மூத்திர வெகுட்டலுள்ள தாயும் இருக்கும். இதன் வைப்புமுறை கீழ்க்காணுமாறு போகர் நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

### நவாச்சார வைப்பு.

ஆடு, பன்றி, குதிரை, யானை, ஒட்டகம், மனிதர், மாடு இவை களின் மல மூத்திரம் பூமியிற்றங்கி மக்கிக் கிடக்கும். அந்த இடத்தில் உள்ள மண் பூத்து நிற்கும். இதை வாரிப் பாண்டத்தி லிட்டு, 1 பங்கிற்குச் சிறுநீர் 4 பங்கு விட்டுக் குதிர்க்கட்டித் தமரிட்டு வைக்கோற் போட்டுத் தெளிவெடுத்த நீர் படி 100-ல் (1,300 லிட்), சூடன் பலம் 100 (3,500 கிராம்), சீனம் பலம் 100 (3,500 கிராம்), வெடியுப்பு பலம் 100 (3,500 கிராம்) இவைகளைப் பொடித்துக் கூட்டி, எரித்து உப்பெடுத்து, இதை மற்றொரு அடிகனத்த பாண்டத்தில் ½ பாகம் கொட்டி, மேற்சட்டி கொண்டு மூடி, சீலைசெய்து தீபம் போல 6 சாமம் எரிக்கப் பதங்கம் ஏறிக் கட்டும்.

### சுத்தி.

நவாச்சாரத்தை வெந்நீரிற் கரைத்து, சூடாயிருக்கும்போது வடிகட்டி, குளிர ஆறினபின் வாய் அகன்ற பாத்திரத்தில் விட்டு வெய்யிலில் வைக்க உப்பு உறையும். அதைப் புட்டியில் அடைத்துப் பத்திரப்படுத்தவும். இதன் வெகுட்டலைப் போக்கச் சிறிது குன்றிமணி வேரை முடியிட்டுப் புட்டியில் இட்டு வைத்துக் கொள்ளவும்.

### (வேறு)

இதனைக் கோமூத்திரத்தில் கரைத்து, வடிகட்டிச் சுண்ட எரித்து வெய்யிலில் உலர்த்தி யெடுக்கச் சுத்தியாம்.

### செய்கை.

இதனைக் குறைந்த அளவில் நாட்படக் கொடுத்தால் உடல் தேற்றியாகும். அதிக அளவில் கொடுக்க வெப்ப முண்டாக்கி யாகும்.

இதற்குக் கோழையகற்றி, வியர்வை பெருக்கி, சிறுநீர் பெருக்கி, விரண முண்டாக்கி, பித்தமகற்றி ஆகிய செய்கைகளுமுள.

இது முக்கியமாக நிண நரம்புகள், மாமிசக் கிரந்திகள் மீது தன் வேகத்தைச் செலுத்தும்.

### பொதுக் குணம்.

"குன்மம் குடற்சூலை கொல்லும் மகோதரத்தை
வன்மையுறு கல்லடைப்பை மாற்றுங்காண்—சன்மக்
கவிச்சுமுந் தோடங் கனவாத நீக்கும்
நவச்சார மாதே நவில்."

(ப்பா-ள்) நவாச்சாரம் வயிற்றுவலி, குடலில் குத்தல், பெரு வயிறு, கல்லடைப்பு, சருமத்தில் புலால் வாசம், திரிதோடம் கன வாயு இவைகளை நீக்குமென்ப.

மற்றும் இதை, உப்புசம், கல்லீரல் வீக்கம், பிலீக நோய், நீர்க் கோவை, இரத்த காசம், முகச்சந்தி, சூரியாவர்த்த வாதம், சூத கக்கட்டு, கக்கிருமல், முறைக்காய்ச்சல், விடாக் காய்ச்சல் இவை கட்கும் உபயோகிக்கலாம்.

**அளவு :** 2½ குன்றி (325 மி. கிராம்) முதல் 7½ குன்றி (975 மி. கிராம்) வரையாகும். அதிக அளவிற் கொடுக்க பேதியாம்.

**உபயோகம்.**

பால்கட்டு, ஸ்தனவீக்கம், ஸ்தனத்தின்மேல் காணுகிற கட்டி, முலைக்காம்பு விரணம் இவைகளுக்கு நவாச்சாரம் 1 வராகனெடை (4.2 கிராம்), சாராயம் 1 அவுன்ஸ் (28 மி. லிட்), பன்னீர் 20 அவுன்ஸ் (560 மி. லிட்) கூட்டித் துணியில் நனைத்து மேல் போட்டுவர வேண்டும்.

முகச்சந்தி, முகத்தில் காணும் வீக்கம், சந்து வாதம், இடுப்பு வாதம் இவைகளுக்கு, $2\frac{1}{2}$ (325 மி. கிராம்) முதல் $7\frac{1}{2}$ குன்றி (975 மி. கிராம்) வரை சாரத்தை நீரில் கரைத்து, ஒரு நாளைக்கு நான்கு முறை விடா முயற்சியாய்க் கொடுத்துவர, நல்ல குணத்தைக் கொடுக்கும்.

நாட்பட்ட முடக்குவாதம், கீல்வாதம், பல்நோய் இவைகளுக்கு நவாச்சாரத்தை நன்னாரிவேர்க் குடிநீரில் கொடுக்கத் தீரும். இதனை, மார்பு வலி, தசை நரம்புகளின் வீக்கம், அதிக வேலையினால் காணும் சோர்வு, குடல் குத்தல் இவைகளுக்கும் உபயோகிப்பதுண்டு.

கருப்ப வாயு, கருப்பையின் வலி, கருப்பையின் வீக்கம், சூதகக் கட்டு, பித்தவாந்தி, வாந்திக்குப்பின் காணும் தலைநோய், தலைக் குத்தல் இவைகளுக்கு நவாச்சாரத்தைக் கருப்பூரங் கலந்த நீரில் தினம் இரண்டு மூன்று முறை கொடுக்க நல்ல குணமுண்டாகும்.

வயது சென்றவர்களின் நாட்பட்ட இருமலுக்கு நவாச்சாரத்தை குன்றி மணி வேர்ப் பானகத்தில் நீர் கூட்டிக் கலந்து, நான்கு அல்லது ஐந்து முறை கொடுத்துவரக் குணத்தைத் தரும். மற்றும் வெள்ளை, சோணித நோய், நாட்பட்ட சீதபேதி, சூதக சந்நி, சுவாசாசயம், இரைப்பை மூத்திரப்பை இவைகளைப்பற்றிய பிணிகள் நீங்க, 2 வராகனெடை (8.4 கிராம்) நவாச்சாரத்தை இரண்டு சேர் (500 மி. லிட்.) கஞ்சியிற் கலந்து சிறிது சிறிதாகப் பன்முறை அருந்த வேண்டும்.

மஞ்சட்காமாலை, ஊது காமாலை, கல்லீரல் வீக்கம், கல்லீரலில் உண்டாகும் கட்டி முதலிய நோய்களுக்கு, நவாச்சாரத்தை நீர் முள்ளிக் குடிநீரில் கொடுக்க, சிறுநீரைப் பெருக்கிப் பிணியை நீக்கும்.

நீரண்டம், காயம், சுளுக்கு, வீக்கம், ஊமைக்கட்டி, மாமிசக் கிரந்தி இவைகட்கு நவாச்சாரத்தை நீரிற் கலக்கித் துணியில் நனைத்து மேலுக்கு உபயோகிக்கலாம்.

கண்வலி, கண்களில் நீர்முட்டல் இவைகளுக்குப் பொட்டிலுப்புச் சேர்த்த நவாச்சாரக் கிலேதத்தை உபயோகிக்க வேண்டும்.

நவாச்சாரம் செயநீருக்கு ஆதிப்பொருள் என்பதனை அறிதல் வேண்டும்.

சாரத்தைக் கன்னார் தகரம், இரும்பு, செம்பு இவைகளைப் பற்றவைப்பதற்கும், ஈயம் பாத்திரத்தில் பற்றுவதற்கும், ஒளியைக் கொடுப்பதற்கும் உபயோகிக்கின்றனர். சாயம் போடுகின்றவர், வர்ணம் ஏற்ற இதனைப் பயன்படுத்துகின்றனர். நவாச்சாரம் சேர்ந்த மருந்துகளையும், அதனால் செய்யப்படுகின்ற மருந்துகளையும் கீழே காண்க.

### நவாச்சார ஆக்ராணம்.

நவாச்சாரம் 1 பலம் (35 கிராம்), சீமைச் சுண்ணாம்பு 2 பலம் (70 கிராம்) இவை இரண்டையும் சாக்கிரதையாய் உலர்த்திக் கலந்து பதங்கப் பொறியிலிட்டுக் காடாக்கினியாய் எரித்தும் பதங்கித்துக்கொள்ள வேண்டும். இதனை முகர்ந்தால் தலைவலி, நீர்க்கோவை, மூர்ச்சை வலி நீங்கும்.

நவாச்சார ஆக்ராணம் என்பதுவே ஆக்ராண உப்பு எனப்படும். இந்த உப்பு, கட்டிகளாய் நெடியுள்ள வாசனையுடையதாய்க் காரத்துக்குத் தக்கபடி குணங்களுடையதாயிருக்கும். குளிர்ந்த நீரில் கரையும்; சாராயத்தில் செவ்வையாகக் கரையாது. இதைக் காற்றுப்படுமாறு வைத்தால், இதிலிருக்கும் காரம் நீங்கும். அதனால், உப்பிலிருக்கும் பளபளப்பு மாறிப் பொடியாய்ப் போகும். இதை நெருப்பிலிட்டு எரித்தால் பறந்து போகும். இதில் புளிப்புகளைச் சேர்த்தால், நுரைத்துக் கரைந்து போகும். இதற்கு, வயிற்றுப் புளிப்பகற்றி, கோழையகற்றி, வெப்பமுண்டாக்கி, வியர்வை பெருக்கி முதலிய செய்கைகளுள. அதிகமாகக் கொடுத்தால் இது வாந்தியை உண்டாக்கும். இஃது அளவுக்கு மிஞ்சினால் விடமாகும்.

பொதுக் குணம் : இதைக் குலை எரிவு, ஈரல் குழியல் வேதனை, நுரையில் நோய், இரத்த மசூரிகா (வைசூரி) நோய் முதலியவைகளுக்குக் கொடுக்க அவற்றை உடனே கண்டிக்கும்.

சொறி, சிரங்கு, அக்கி, பித்தத்தழும்பு, குட்டம் முதலிய சர்மவியாதிகளுக்கு இது மிகவும் விலையுயர்ந்த மருந்து. காக்கைவலி, சூதகசந்தி, ஸ்தம்பவாதம், தொடைவாழை, பிரசவப் பைத்தியம், இரைப்பு முதலியவைகளுக்கும் இதைக் கொடுத்துக் குணங் கண்டதுண்டு. நாட்பட்ட இருமலுக்கும் இது கொடுக்க உதவும். வாந்திபேதி ரோகத்திற்கு 10 கிரெய்ன்ஸ் (650 மி. கிராம்) வீதம் இதை நீரில் கரைத்து அடிக்கடி கொடுத்துக் குணங் கண்டதுண்டு. வாந்தி உண்டாக அபூர்வமாய் ½ வராகனெடை (2.1 கிராம்) அளவு கொடுக்கலாம்.

இதை 5 (325 மி. கிராம்) முதல் 10 கிரெய்ன்ஸ் (650 மி.கிராம் வீதம் நீரில் கலந்து உபயோகிக்கலாம்.

### நவாச்சாரக் குழம்பு.

1 பலம் (35 கிராம்) நவாச்சாரத்தைக் கல்வத்திலிட்டுக் கொடிக் கள்ளிப்பால் விட்டு நன்றாய் மைபோலரைத்துச் சிமிழில் பதனம் பண்ணிக் கொள்ள வேண்டும்.

அளவு : குன்றியளவு (130 மி. கிராம்).

தீரும் நோய்கள் : மலக்கட்டு, சலக்கட்டு, பெருவயிறு, வாயு, கட்டி, நீராம்பல் முதலியன நீங்கும்.

போக்கு நிற்க முறிவு : எலுமிச்சம்பழம்.

### நவாச்சார எண்ணெய்.

எண்ணெயில் நவாச்சாரத்தையும் நீர்முள்ளிச் சாற்றையும் கூட்டி அருந்த வேண்டும்.

தீரும் நோய்கள் : மகோதரம், நீராம்பல், எண்வகைக் குன்மம், பித்தம், உளைமாந்தை, பாண்டு, சோகை, கரப்பான், பழைய மலம், இரைச்சல், புழு, கிருமி முதலியனவாகும்.

### நவாச்சாரச் செந்தூரம்.

சுத்தி செய்த ரசம் பலம் 10 (350 கிராம்), சுத்தி செய்த கெந்தகம் பலம் 10 (350 கிராம்), நவாச்சாரம் பலம் 5 (175 கிராம்) இவைகளைக் கல்வத்திலிட்டு முருங்கைப்பூசாறுவிட்டு 12 சாமமரைத்து (36 மணி) நிழலில் உலர்த்திக் காசிக் குப்பியிலடைத்து மாக்கல்லால் வாய் மூடி, 7 சீலைமண் செய்து, அடிகனத்த சட்டியில் 3 விரற்கிடை உப்பைப் பரப்பி, அதில் குப்பியை வைத்துக் குப்பியைச் சுற்றிலும் உப்புப்போட்டு, நிறைய மணலைப் போட்டு, வேறொரு சட்டியால் மூடி, சீலைமண் செய்து, காற்றில்லாத இடத்தில் அடுப்பை வைத்து, அதன் மேல் சட்டியை வைத்து 12 சாமம் (36 மணி) கமலாக்கினியாய் எரித்தால் குங்குமம் போல் செந்தூரமாகும்.

பணவெடை (488 மி. கிராம்) வீதம் தக்க அனுபானத்தில் கொடுக்கக் குன்மம், சூலை, கைகால் இழுத்துக் கொள்ளல், விரணம் முதலியன நீங்கும்.

### நவாச்சாரக் கட்டு.

"நெகிழாமல் நவாச்சாரக் கட்டு கட்ட
நேர்த்தியாய் பூநீறு சீனக் காரம்
மகிழவே வெங்காரங் கறியு மப்பா
மாசிலா வெடியுப்பு வகைக்குப் பலமாய்

புகழிதயாய்ப் பழச்சாற்று லரைத்து நன்றாய்ப்
புளிதயாய்க் கரண்டிதனில் வழித்தெ ரித்தால்
இகழாத சுண்ணாம்பாந் தேனி லாட்டி
யியலான நவாசாரந் தன்னிற் கட்டே.''

''கட்டுவாய் சுண்ணாம்பைத் தேனி லாட்டிக்
களங்கமறக் கவசித்து வெயிலு லர்த்தித்
திட்டமாய்க் குண்டுசட்டி மேலி ரும்பு
மணலதனை வரைச்சட்டி மட்டுங் கொட்டி
மட்டான நவார்சாரக் கட்டி தன்னை
மத்தியிலே வைத்துப்பின் மணலைக் கொட்டி
இட்டமுடன் மேற்சட்டி மூடிச் சீலை
இதமாகச் செய்தடுப்பி லேற்றி டாயே.''

''ஏற்றியே யெரித்திடுவா யிரண்டும் சாமம்
இயல்பாக வாறினபின் கவசச் சுண்ணம்
போற்றியே யெடுத்து வைத்துக் குன்மந் தீரப்
பூரணமாய்ப் பணவெடைதான் தேனிற் கொள்வாய்
நீற்றிட்ட நவாசாரக் கட்டி தன்னை
நீலவரிக் கற்றாழைச் சாறு தன்னில்
பார்த்துநீ பணவெடைதா னுரைத்துக் கொண்டால்
பாண்டுகா மாலைபோம் பத்யங்கண் டேரே.''

''நிச்சயமாந் துருசுபல மொன்று வாங்கி
நேசமுடன் கவசிக்க மருந்து கேளாய்
பச்சைக்கர்ப் பூரமொடு வீரங் கூட்டிப்
பாவனையாய் வராகனெலும் நீரா லாட்டி
மெச்சவே துருசுகட்டி தன்னிற் பூசி
வெயிலில் வைத்துலர்ந்தபின் பெடுத்துக்கொண்டு
வைச்சிடுநீ பூநீறு பலந்த னலு
வாங்கியே துருசுக்கட்டி கீழு மேலும்.''

''கீழ்மேலுங் கொட்டிநன்றாய்ச் சட்டி தன்னில்
கீழமரத் திமெதுவாக் கடிகை யிரண்டு
மீளவுமங் கெரியிட்டே எடுத்துப் பாராய்
வண்மையாய்ச் சுண்ணாம்பு வேக மெத்த
தூளாக்கி யெடுத்துநீ வைத்துக் கொண்டு
துலங்குபற்பம் பணவெடையா மாலின் வெண்ணெய்
தாளாமற் கொண்டிடநீர்ச் சுருக்கு வெள்ளை
சதையடைப்பு மேகமெலாந் தவறிப் போமே.''

## பச்சைக் கற்பூரம்.

## BORNEO CAMPHOR.

காரசாரம் இருபத்தைந்தனுள் ஒன்ருகிய இம்மணப் பொருள் இமவாலுகம், கதலியுப்பு, கௌித்திப் பச்சை, சசி, சந்திரன், சோமனுப்பு சிதளம், சித கற்பூரம், பச்சைப் பூரம், பலிகை, பார்மகன்சாரி, பூரம், மதி, மருவாளி, விந்தம், விரலிப்பச்சை, இரவிக்கஞ்சி, பச்சைக் கனசாரம் என்ற வேறு பெயர்களினுலும் வழங்கப்படுகின்றது. இது கருப்பூர வாழைக்குள்ளே பொல பொல எனப் பொருமி நிற்குமென்றும், பெருங்காற்றில் பறந்து போகுமென்றும், நிர்மலமாய் எரிந்துபோகுமென்றும், இதனை மிளகு இட்டுக் கீழும் மேலும் வாழை இலையை விட்டு, வளமாய்ப் பெட்டிக்குள் மருவி வைக்க வேண்டுமென்றும், குற்றமில்லாத கண்ணிலிட்டால் கரைந்து போகுமென்றும், உலோகங்கண் அரித்துப் போடுமென்றும், இஃது ஆவி பட்டால் மாயமாகுமென்றும், வாசனையும் குளிர்ச்சியுமுடையதென்றும் சொல்லப்படுகிறது. இதனுடைய பிறப்பு, இதனைச் சேமித்து வைக்கும் முறை, இதன் சோதனை முறை முதலியவற்றை மிக விளக்கமாய்ப் போகர் தம் 7,000-த்தில் கூறியிருத்தல் காண்க.

இதில் பல பேதங்களுண்டெனினும், முக்கியமாய்ச் சொல்லப் பட்ட சாதி மூன்று. அவை : (1) ஈசன், (2) வீமன், (3) பூதாச்சிறையன்.

**ஈசன் குணம் :**

''ஈசனென்னும் பூரவெண்மை யென்பரது காரமுமாம்
பேசரிய சீதமுஷ்ணம் பித்தமயல்—வீசுகின்ற
பீநசமுட் டாகமிவை போர்த்துவிடுங் காந்தியுண்
டான ததுவசிய மாம்.''

(பொ-ள்) ஈசன் என்னும் பச்சைக் கற்பூரம் வெளுப்பு, தள தளப்பு, காரம் உடையது; கபசுரம், பித்தம், மயக்கம், நாசி நோய், தாக ரோகம் ஆகியவைகளைப் போக்கும்; வசியத்துக் காகும்.

**வீமன் குணம் :**

''வீமனென்னுங் கர்ப்பூரம் மேக வழுக்குவெண்மை
சேம முறுங்குளிர்ச்சி தின்றக்கா—ளுமருவு
நோயகலுந் தாகமறும் நுண்பே தியுமாகுந்
தூய மதிமுகத்தாய் சொல்.''

(பொ-ள்) அழுக்கு வெண்மை கலந்த மேக நிறமுள்ள வீமனால் நாக்குமுள் தாகரோகம் நீங்கும். தேக நலமும், குளிர்ச்சியும், அற்ப விரேசனமும் உண்டாம்.

பூதாச்சிறையன் குணம் :

'பூதாச் சிறையனெனும் பூரமஞ்சள் கைப்பாகுங்
கோதையர்க்காங் காசங் கொடுமேகம்—வாதாதி
என்னுந் தனித்தோட மேறுமுத்தோ டஞ்சொறியுங்
குன்ன விரணமும்போக்கும்.''

(பொ-ள்) மஞ்சள் நிறமும் கைப்புச் சுவையுமுள்ள பூதாச்சிறை யனுல் இருமல், அரித்திரா மேகம், வாத பித்த கபதோடங்கள், திரிதோடம், நமை, நெருங்கிய புண்கள் ஆகியன நீங்கும். பெண் களுக்கு உபயோகிக்கின்ற மருந்துகளில் சேர்க்க நன்மையைத் தரும்.

பச்சைக் கற்பூரத்தின் பொதுக் குணம் :

''அட்டகுன்மஞ் சூலே யணுகாது வாதமொடு
துட்டமே கப்பிணியுந் தோற்ருதே—மட்டலருங்
கூந்தலுடை மாதே கொடியகபம் போகுஞ்
சார்பச்சைக் கர்ப்பூரத் தால்.''

(பொ-ள்) பச்சைக் கற்பூரத்தால் எண்வித குன்மங்கள், கீல்களில் குத்தல், வாதநோய், சீழ்ப்பிரமேகம், சிலேஷ்ம கோபம், நீங்கும். நிற்க,

''விரிந்துபார் பூரமுடன் வழலே தானும்
மேலான ஆகாசக் கூறு மாச்சு.''

என்ற போகர் காரசாரத் திரட்டு 60-ல் கூறப்பட்ட தொடரினுல் இஃது ஆகாச பூதச் சரக்கென்றும், ''பூரத்தால் லிங்கஞ் சாகும்'', ''சீனத்துக் கிணமே பூரம்'' என்ற தொடர் களினுல் இதன் சத்துருச் சரக்கு, மித்துருச் சரக்கு இன்னவை என்றும் அறியலாம்.

மற்றும் பச்சைக் கற்பூரம் கைப்பு, உப்புச் சுவைகளேயும், சீத வீரியத்தையும், விறுவிறுப்பையுமுடையது. இதற்குக் குளிர்ச்சி உண்டாக்கி, உடல் உரமுண்டாக்கி, கோழை அகற்றி ஆகிய செய்கைகள் உள. இதனே $\frac{1}{8}$ (8 மி. கிராம்) முதல் இரண்டரை ($2\frac{1}{2}$) அரிசி (162 மி. கிராம்) எடை வரை உப யோகிக்கலாம்.

இச்சரக்கை, செங்கழுநீர் புட்பச் சாற்றில் ஒரு நாழிகை பரியந்தம் ஊறவைத்தெடுத்து, வெய்யிலில் உலர்த்திக்கொள்ளச் சுத்தியாம். இதுவே கர்ப்பூரத்திற்கும் சுத்தி.

நிற்க, இதன் உபயோகத்தினே ஆராய்வோம் : இதை மற்றைய சரக்குகளுடன் கலந்து உபயோகிக்கின்றனர். பச்சைக் கர்ப்பூரம், குங்குமப் பூ, கிராம்பு, வெற்றிலேக் காம்பு

இவைகளை அரைத்துத் தாய்ப் பாலில் கலந்து துணியில் நனைத்துக் சுர நோயினருக்கு நெற்றியிலிடச் சுரம் தணியும்.

பச்சைக் கர்ப்பூரம் அரை அரிசி (32 மி. கிராம்) எடையை ஒரு பலம் (35 கிராம்) சந்தனக் குழம்பில் கலந்து மேலுக்கு உபயோகிக்க அஃது உடலுக்குக் குளிர்ச்சியைத் தந்து, சிரங்கு, கோடையில் உண்டாம் வியர்வை, உடல் எரிச்சல் முதலியவற்றையும் நீக்கும். இதனை உள்ளுக்குக் கொடுக்க வெள்ளை நோய் தணியும்.

பண்டைய நாளில் தாது விருத்திக்காகப் பச்சைக் கர்ப்பூரத்தை உட்கொண்டதாகவும் அறியக் கிடக்கின்றது, இதனை,

கடிமாலை சூடி, கருப்பூர முக்கி ......
தொடைமாலை மென்முலையார் தோடோய்ந்து
மைந்தர்.''

(சிந்தாமணி 1574)

என்னும் அடிகளால் அறிக.

பச்சைக் கற்பூரம், கஸ்தூரி இரண்டையும் கலந்து, வெப்பமுண்டாக்கிக் காகவும், கபதாவ சுரம், காசம், சுவாச காசம், முதலிய நுரையீரலைப் பற்றிய நோய்களுக்காகவும் உபயோகித்தல் உண்டு.

**பச்சைக் கற்பூர வடகம்:** பச்சைக் கற்பூரம் 1, சந்தனத் தூள் 2, ஏலம் 3, அரத்தை 4 இவைகளின் தூள்களை மேற்படி பங்குகளாய் நிறுத்தெடுத்து, துளசிச் சாறு விட்டரைத்துச் சுண்டையளவு வடகஞ் செய்து நிழலில் உலர்த்திக் கொள்ளவும். இதைச் சுரம், இருமல், சீல் வாதம் இவைகளுக்கு ஒரு குளிகை வீதம் கொடுக்கவும்.

**பச்சைக் கற்பூர அஞ்சனக் குளிகை:** பச்சைக் கற்பூரம் 1, சீரகம் 2, தேற்றான்கொட்டைச் சந்தனம் 3, இவைகளைத் திரிபலைக்குடிநீரால் மைபோல 2 அல்லது 3 நாள் அரைத்து நீண்ட குளிகையாய் செய்து நிழலில் உலர்த்திக் கொள்ளவும். இதனைக் கண்ணோய், கண்ணெரிச்சல், சுக்கிரன் இவைகளுக்கு முலைப்பாலிலாவது தேனிலாவது உரைத்துக் கண்ணிலிடவும். (பைஷஜ கல்பம்).

**பச்சைக் கற்பூர மாத்திரை:** பச்சைக் கற்பூரம், இலவங்கம், சாதிக்காய், இரச பற்பம், கந்தகம், வாளம் இவைகளைச் சரியளவெடுத்து, குமரிச் சாறு விட்டு சிக்கும்படி அரைத்து, உளுந்தளவு மாத்திரை செய்து தேன், இஞ்சிச் சாறு இவைகளில் ஒரு மாத்திரை வீதம் மூன்று நாள் கொடுக்க, உடல் வெப்பு, சுரம், தாப சுரம் முதலியனவும், வாதம் எண்பதும் (80), பித்தம் நாற்பதும் (40), கபம் தொண்ணூற்றாறும் (96) நீங்கும்.

**பச்சைக் கற்பூரப் பொடி :** திரிகடுகு, மோடி, கோஷ்டம், நெல்லிக்காய், சந்தனம், சடாமாஞ்சில், தாளிசபத்திரி, கிராம்பு, சீரகம், ஏலம், பச்சைக் கற்பூரம் இவைகளைச் சம வெடை எடுத்துச் சூரணித்துச் சீனி கூட்டி வெருகடியளவு அந்தி சந்தி உண்டிட, பித்தம், இரத்த பித்தம், அரோசகம், வாந்தி இவைகள் நீங்கும். பத்தியமில்லை. இருபது நாட்கள் கொள்ளவும்.

நிற்க, இதன் வைப்பு முறை **அகத்தியர் பரிபூரணம்** 400-ல் கீழ்க்காணுமாறு கூறப்பட்டுள்ளது.

சூடன் 1 பலம் (35 கிராம்), வெடியுப்பு 4½ பலம் (157.5 கிராம்), உவர் உப்பு ½ பலம் (17.5 கிராம்), புனுகு, ஏலம், கஸ்தூரி இவைகள் வகைக்கு அரைக்கழஞ்சு (2.5 கிராம்) இவற்றை எடுத்துக் கொண்டு, கல்வத்தில் போட்டரைத்து, சந்தனத் தைலம் விட்டுப் பிசறி ஒரு குப்பியில் அரைப் பங்கு இட்டு, மாக்கல்லால் வாயை மூடி, ஏழு சீலை செய்து, தாளியில் அரைவாசி மணலிட்டு, அதில் குப்பியை வைத்து, மேலும் மண்ணிட்டு ஓடு கொண்டு மூடி, சீலைமண் செய்து உலர்த்தி, அடுப்பேற்றி ஒரு சாமம் (3 மணி) தீபம் போலெரித்து ஆற வைத்துக் கொள்ளவும். இது சிறு பொடியாய்த் தகடு போலிருக்கும். இது தாமரைப் பூ, செங்கழு நீர்ப்பூப் போல வாசம் வீசும். இதனால் நீர்க்கடுப்பு, கல்லடைப்பு, பித்தம், ஆகியன நீங்கும்.

## பஞ்சலவணம்.

ஐந்து உப்புகளின் கூட்டிற்குப் பஞ்சலவணம் என்ற தொகைப் பெயர் உண்டு. இக்கூட்டில் சேரும் உப்புகள் எவை என்பது தாதுப் பொருள் பகுதியில் கூறப்பட்டிருக்கின்றது. இத் தொகைச் சரக்கு, ஐந்து உப்புகளின் குணங்களையும் ஒருங்கே பெற்றிருக்கின்றது. ஆகையினால், ஐந்து உப்புகளுக்கும் உள்ள குணங்களை, இக்கூட்டுப்பைக் கொண்டு செய்யப்பட்ட மருந்தைக் கையாளுவதினால் ஒருங்கே பெறலாம்.

### பஞ்ச உப்பின் குணம்.

''நீராமை அற்புதப்புண் நெஞ்சுவலி மாகுன்மம்
பேராக் கிரகணிபி லீக மந்தம்—தீராக்கால்
விஞ்சவுப்பைக் குக்கிநோய் மெய்ச்சூலை யும்பறக்கும்
பஞ்ச உப்பைத் தின்னுங்கால் பார்.''

**(பொ-ள்)** ஐந்து உப்பினால் நீராம்பல், அற்புதப் புண், நெஞ்சு வலி, குன்மம், நாட்பட்ட கிரகணி, இடப்பாட்டு ஈரல் பெருக்கம், மந்தம், வாயு, கப வயிற்று நோய், சூலை முதலியன தீரும்.

### பஞ்சலவண பற்பம்.

பஞ்சலவணம் வகைக்குப் பலம் $\frac{1}{4}$ (8.75 கிராம்) கல்வத்திலிட்டு, பிரண்டை, முருங்கைப்பட்டை, குப்பைமேனி, நொச்சி, குமரி இவைகளின் சாற்றால் வகைக்கு ஒரு சாம மரைத்து (3 மணி) வில்லைத் தட்டிக் காய வைத்து, ஓட்டிலிட்டுச் சீலை செய்து, பத்தெருவில் புடம் போடப் பற்பமாகும். அதற்கு நாலிலொன்று பெருங்காயஞ் சேர்த்துத் தேன் விட்டு மெழுகு போலரைத்துச் சிமிழில் வைத்துக்கொண்டு, வேளை ஒன்றுக்கொரு கழஞ்சு (5.1 கிரா.) வீதம் வியாதியின் பலத்துக்கு தகுந்தபடி கால் மண்டலம், அரைமண்டமலம் கொள்ள வாதம், வாயு குத்தல், குடைதல், வலி, கடுப்பு, குன்மம், அண்டவாயு, கிரகணி பவுத்திரம், உருத்திரவாயு குடல் புரட்டல், வயிற்றுப் பொருமல், செரியாமை, மந்தம், மகோதரம் நீங்கும்.

### பஞ்சலவணச் சுண்ணம்.

சவுக்காரம் 1, வளையலுப்பு $\frac{1}{4}$, இந்துப்பு $\frac{1}{4}$, வெண்காரம் $\frac{1}{4}$, கரியுப்பு $\frac{1}{4}$ இவைகளை அமுரி (சிறுநீர்) விட்டரைத்து, வில்லை செய்து, காயவைத்து, ஓட்டிலிட்டு, 5 வரட்டியில் புடம் போடவும்.

அளவு : 10 (650 மி. கிராம்) முதல் 20 (1.3 கிராம்) உளுந்து நிறை கொடுக்கலாம்.

உபயோகம் : இதை வயிற்றுவலி, குன்மம், காய்ச்சல் கட்டி, சூலைக்கட்டு முதலிய நோய்களுக்குக் கொடுக்கலாம்

(பைஷஜ கல்பம்).

மற்றும், இது பஞ்சலவணம், தயிர்ச் சுண்டிச் சூரணம், குன்ம குடோரி லேகியம் போன்ற கூட்டு மருந்துகளில் சேருகின்றது.

## பிடாலவணம்.

## BLACK SALT.

இவ்வைப்பு உப்பின் முறை கீழ்க்காணுமாறு கூறப்பட்டிருக்கின்றது :

நூறு பலம் (3,500 கிராம்) வெடியுப்பைச் சட்டியிலிட்டு, அடுப்பேற்றிக் காய்ச்சி, உருகுந் தருணத்தில், எருமை மாட்டுக் கொம்புச் சீவல் பலம் ஐம்பதைச் (1,750 கிராம்) சிறிது சிறிதாய்க் கிராசங் கொடுக்க, சீவலின் தைலத்தை உப்பு

வாங்கிக் கொண்டு நிலைத்து நிற்கும், இச்சமயத்தில் இதை எடுத்துப் பொடித்து, 4 பங்கு நீரில் கலக்கி, இத்துடன் சீனம் பலம் பதினைந்தைப் (525 கிராம்) பொடி செய்து இட்டுக் காய்ச்சி ஒன்று பட்டவுடன் வடிகட்டி, மறுபடியுஞ் காய்ச்சி உறையும் பதத்தில் பாய்மீது ஊற்றி வெய்யிலில் காய வைக்க, கம்பி போன்ற உப்பாம். இதனைப் பிடாலவணம் என்பர். இதில் நாகம் நீறும் என்ப.

தற்காலம் கடைகளில் கறுப்பு உப்பையே பிடாலவணம் என்று விற்கின்றனர். இதனைக் கீழ்காணுமாறு தயாரிக்கின்றனர்.

நாற்பத்தைந்து பலம் (1,575 கிராம்) கறியுப்பைப் பொடித்து $1\frac{1}{4}$ பலம் (43.75 கிராம்) நெல்லி வற்றல் தூளைச் சேர்த்துக் கலந்து, அதை 4 பங்காக்கி, ஒரு பங்கைச் சட்டியிலிட்டுடெரித்து, பிறகு அதன்மேல் மற்றொரு பங்கை இட்டு எரித்து, இவ்விதம் 4 பங்குகளையும் எரித்துப் பிறகு 6 நாழிகை வரை குளிர வைத்துப் பின் பார்வையிட்டால் உப்புக் கறுத்து நிற்கும். இதனை வடநூலார் கிருஷ்ண லவணமென்று கூறுகின்றனர்.

இவ்வுப்பிற்கு, உடல் தேற்றி, மலம் போக்கி, உடல் உரமுண்டாக்கி பசித்தீத் தூண்டி ஆகிய செய்கைகளுள. இதனால் அஜீரணம், கல்லீரல், மண்ணீரல் மலர்ச்சி, மலபந்தம், வயிற்றுப் பொருமல், வலி முதலியன நீங்குமென்ப.

அளவு : 1 வராகனெடை (4.2 கிராம்).

### பிடாலவண சுத்தி.

இதனைப் பசுவின் மோரிலாவது கோசலத்திலாவது, ஊறவிட்டு வெய்யிலில் வைத்து உலர்த்திக் கொள்ளச் சுத்தியாம்.

### பிடாலவணத்தின் குணம்.

''பிடாலவண மென்றொருக்காற் பேசி னுலகில்
விடாநீ ரிழிகவகலு மெய்யே—விடலரிய
மந்த மகலும் வரும் மதிகபசி
சுந்த மலர்க்குழலே காண் ''.

(பொ-ள்) பிடாலவணத்தால் அதிநீரும் மந்தமும் போம் ; பசி உண்டாம் என்க.

இதற்கு வெப்ப வீரியம் உண்டு. இது கப நோயைப் போக்குமென்று கூறப்பட்டிருக்கிறது.

### பஞ்சலவணச் சூரணம்.

பிடாலவணம், சோற்றுப்பு, இந்துப்பு, கல்லுப்பு, வளையலுப்பு இவைகளைச் சம எடையாய் நிறுத்தெடுத்துச் சூரணம் செய்து கொள்ளவும்.

அளவு : 10 (1.3 கிராம்) முதல் 20 குன்றி (2.6 கிராம்) வரை.

துணை மருந்து : வெந்நீர்.

தீரும் நோய்கள் : மூத்திரக் கிரிச்சரம், மலபந்தம் முதலியன.

### சோற்றுப்பாதிச் சூரணம்.

சோற்றுப்பு 8 பங்கு, கல்லுப்பு 5 பங்கு, பிடாலவணம், இந்துப்பு, தனியா, திப்பிலி, மோடி, கருஞ்சீரகம், பச்சிலை, சிறுநாகப்பூ, தாளிசபத்திரி, சரக்கொன்றைப் புளி வகைக்கு 2 பங்கு, மிளகு, சீரகம், சுக்கு, வகைக்கு ஒரு பங்கு, மாதுளைத் தோல் 4 பங்கு, இலவங்கப் பட்டை, ஏலரிசி வகைக்கு ¼ பங்கு எடுத்து இவைகளை முறைப்படி பொடி செய்து கொள்ளவும்.

அளவு : 10 (1.3 கிராம்) முதல் 20 குன்றி (2.6 கிராம்) வரை.

துணை மருந்துகள் : வெந்நீர், மோர் முதலியன.

தீரும் நோய்கள் : கிரகணி, குன்மம், மகோதரம், மண்ணீரல் வீக்கம், மூலம், மலபந்தம், சூலை முதலியன. இம் மருந்திற்கு, பசித்தீண்டிச் செய்கையும், அகட்டு வாயுவகற்றிச் செய்கையும் உள.

## பூநீறு.

வேறு பெயர் ; பூவழலை.

பூத்து வருகின்ற நீறு பூநீறு. இதனை, "பூவதுபோல் பூநீறு பூமி வேலி கட்டப் பூக்கும்" என்ற அடியால் உணர்க. இஃது உவர்மண் பூமியில் பங்குனி, சித்திரை, வைகாசித் திங்கள்களில் பொங்கி நீறும். இது, சிவகங்கை, காளாஸ்திரி, மோகூர், போன்ற இடங்களிலிருந்து எடுக்கப்படுகின்றது. பூப்போல் மேல் நிற்பதை வாரிக்கொள்ளவேண்டும் என்று கூறப் பட்டிருக்கின்றது.

இதனை,

" பார்த்திட்ட பூநீற்றின் பருவங்கேளு
பங்குனியுஞ் சித்திரைவை காசிக்குள்ளே
பூர்த்திட்ட ரவிசுருக்கிற் பொங்கிநீறும்
பூப்போன்மே னிற்குமதை வாரிக்கொள்ளு ".

என்னும் போகர் ஏழாயிரச் செய்யுளால் அறியலாம்.

பனி பெய்யும் காலத்தில் பூநீறு எடுக்க வேண்டும் என்று கூறப்பட்டிருக்கின்றதை,

" பனி பெய்யுங்காலம் பாருங்களர் மண்ணில் பூநீருய்
புனிதமாய்ப் பிறக்கும்."

என்ற அடியாலும், விடியற்காலம் சூரியன் தோன்றுமுன் எடுக்க வேண்டும் என்பதை,

" சரிவிடியற்காலம்
அந்தமுள்ள பானு அதுமுகம் படுமுன்
சொந்தமென்று பூவைத் தொட்டெடுப்பாய் நீயே "

என்ற அடிகளாலும் அறியலாம்.

பூநீறு சுத்தி: ஒரு படி (1.2 லிட்) பூநீற்றுக்கு நான்கு படி (5.2 லிட்.) பனி நீர் சேர்த்து பாண்டத்திலிட்டு தெளியவிட்டு காலையிலிருந்துக் கடைந்து ஆடைப் போக்கிப் பீங்கான் தட்டுகளிலிட்டு வெய்யிலில் வைக்க உறைந்து உப்பாகும். இதற்குத் தீட்சை செய்தல் என்று பெயர் சொல்லப்படும்.

இதனை,

"பூருவத்தின் சுத்தி பூவெடுக்கும் சித்தி
மாறுந்தேய் பிறையில் மண்ணுசிவன் கூறு
பாருமோர் படிக்குப் பனிச்சலந்தா னுலு
மாருயது பாண்டம் அவைதெளியு மட்டும்.

காலையி லிறுத்துக் கடைந்தாடை போக்கி
வாலையிலே விட்டு வற்றுமட்டும் வெய்யில்
சூலதுபோல் காய்ந்து சுண்டியநீ ரெல்லாம்
கோலமிது வாகுங் கொடியமுதல் தீட்சை"

என்ற செய்யுட்களால் உணரலாம்.

இம்முறையின்படி பத்து முறை தீட்சை செய்து, பளிங்குக் குப்பியில் அடைத்துக்கொள்ள வேண்டும் என்று கூறப்பட்டிருக்கிறது.

போகர், கீழ்க்காணுமாறு சுத்தி செய்து உப்பாக்கும் வகையைக் கூறுகின்றார் :—

பூநீற்றுக்கு எலுமிச்சம் பழச்சாறு விட்டுக் கரைத்துத் தெளிவை வாங்கி அடுப்பேற்றிக் காய்ச்சி உப்பாக்கிக் கொள்ள வேண்டும்.

இதனை,

''பூர்த்திட்டே ரவிசுருக்கிற் பொங்கி நீறும்
பூப்போன்மே னிற்குமதை வாரிக்கொள்ளு
ஏர்த்திட்ட எலுமிச்சைச் சாறு விட்டு
இழுத்துமே கரைத்து நன்றாய்த் தெளிவை வாங்கி
ஆர்த்திட்ட அடுப்புக்குள் வைத்துக் காய்ச்சில்
அடங்கியே யுப்பாகும் பருவம் வாங்கே''

என்ற செய்யுளால் தெளிக.

பயன்.

பூநீறும், கற்சுண்ணும்பும் சமவெடை சேர்த்துத் தெளிநீர் வாங்கி, அதில் ஆமை ஓடு, முட்டை ஓடு, முத்துச் சிப்பி, கல் நார், நண்டுக்கல், சங்கு, முதலிய பொருள்களை இட்டு எரித்துக் கழுவி எடுக்கச் சுத்தியாம். இது பாஷாணங்களைச் சுத்தி செய்யவும் பயன்படும்.

பூநீற்றை வெந்நீரில் கலந்து, அந்நீரில் வாதம் கண்ட குதி காலைச் சில நிமிடங்கள் அமிழ்த்தி வைத்தெடுக்க நீங்கும்.

ஐந்து உப்புக்களுள் இவ்வுப்பு, ஆகாசக் கூற்றுப்பாய்ச் சேர்க்கப்பட்டிருக்கிறது.

இவ்வுப்பு குன்மத்திற்கு வழங்கப்படும் குன்ம குடோரி மெழுகிலும், அசீரண பேதிக்காக வழங்கப்படும் தயிர்ச் சுண்டிச் சூரணத்திலும் சேர்க்கப்பட்டிருக்கின்றது.

இதனைக் கொண்டு செய்யப்படும் ஊசர பற்பத்தைத் தேரன் கரிசல் 300-ல் கண்டுகொள்க.

சிலர், இதிலிருக்கும் எண்ணெய் என்று சொல்லப்படும் வழுவழுப்புப் பண்பைப் போக்கிச் சுண்ணமாக்கி, மருந்துகளுக்குக் காரமுண்டாக்கும் பொருட்டு எல்லா மருந்துகளிலும் சேர்க்கின்றனர்.

மற்றும் இதனைக் கொண்டு செய்யப்படும் சுண்ணம், செய நீர், முப்பு மார்க்கம், இவைகளை, ஞான வெட்டியான் நவரத்தின வைத்திய சிந்தாமணி, பஞ்சரத்தினம் 500, போகர்

ஏழாயிரம் இரண்டாம் காண்டம், சட்ட முனிவாத காவியம், ஏணி ஏற்றம், போன்ற பல நூல்களில் காணலாம்.

நிற்க, தேரர், தாம் இயற்றிய சேகரப்பாவிலும் வெண்பாவிலும் இரசத்திற்குச் சுருக்குக் கொடுத்து மணி செய்ய, பூநீற்றைச் செயற்கையில் செய்கின்ற முறையைக் கூறியிருக்கின்றார்.

## அம்பரர்.

## AMBRA GRASEA.

இது திமிங்கிலத்தின் குடலில் உண்டாகின்ற ஒருவகைக் கழிவுப் பொருள். இஃது ஆப்பிரிக்கா. அரேபியா, பிலிப்பைன், மால் தீவு, ஜப்பான், மடகாஸ்கர் முதலிய இடங்களின் கடற்கரையில் நீரில் மிதந்து வந்து கரைகளில் ஒதுங்குகின்றது. கடலிலுள்ள் பாறைகளிலும் பற்றியிருப்பதுண்டு. இக்கட்டி, $\frac{1}{4}$ அவுன்ஸ் முதல் 100 அவுன்ஸ் வரை நிறையுள்ள தாயிருக்கும்; இக்கட்டி நெய்ப்புத் தன்மையுடன் சிக்கிரத்தில் நெருப்புப் பிடிக்கத் தக்கதாயும், மங்கலான வெண்மை அல்லது கருமை நிறமுடையதாயும், திமிங்கலத்திலிருந்து எடுத்தவுடன் ஒருவித துர்நாற்றம் வாய்ந்ததாயும், காற்றில் உலர உலர அழுத்தமான கட்டியாகி, கஸ்தூரிக்கொப்பான ஒரு வகை மணத்தைப் பெற்றதாயும், சுவையற்றதாயும் இருக்கும் ; இது வெந்நீரிலும் சாராயத்திலும் கரையும் ; குளிர்ந்த நீரில் கரைவதில்லே.

நிற்க, இதில் இருவகை உண்டு அவை ; 1. பொன்னம்பர், 2. மீனம்பர்.

பொன்னம்பர் : இதன் பிறப்பை,

'' மகத்தான பட்சியதின் மலக்க னந்தான்
கவனமாம் பட்சியது ஆகாசம் நின்று கபளித்த
மலக்கனம் பொன்னம்ப ராச்சு
புவனமாங் கடல் நின்று கரையிற் றங்கிப்
பேராகக் கட்டியா யொதுங்கிப் போகும் ''

என்றும்,

மீனம்பர் : இதன் பிறப்பை.

''தீயென்ற மீனம்பர் செயலேக் கேளு
சேர்ந்த பட்சி மலக்கனந்தான கடலில் வீழ்ந்து
பாயென்ற மீன்புசித்து மீனம்ப ராச்சு ''

என்றும் போகர் நூலிற் கூறியிருப்பதாலறிக,

பதார்த்த குண சிந்தாமணியில் அம்பர் வகையைக் கூறுது, அம்பருக்குப் பொதுக்குணம் கூறப்பட்டிருத்தலால், இரண்டிற்கும் குணமொன்றே என்று கருத வேண்டியிருக்கின்றது.

யூனனி வைத்தியர்கள் அம்பரின் பிறப்பைப்பற்றிப் பலவகையாய்க் குறிப்பிட்டிருக்கின்றனர். அவற்றுள் சிலவற்றை இங்குக் கூறலாம் :

(1) கடலில் விளைகின்ற ஒருவகைத் தாவரப் பொருள்களைக் கடல் வாழ் பிராணிகள் புசித்து, வயிறு நிரம்பியபின் கக்குகின்றன. இதுவே மருத்துவத்தில் உபயோகிக்கும் அம்பர்.

(2) கடலில் விளைகின்ற ஒருவகைத் தாவர பொருளை மீன் புசித்து இறக்கின்றது. இவ்விறந்த மீனில் இருந்து அம்பர் எடுக்கப்படுகின்றது.

(3) சாரா என்ற ஒருவகைக் கடற் பசுவின் கழிவுப் பொருள்தான் அம்பர்.

(4) கடல் நீர் நுரையே அம்பர்.

(5) கடலில் விளைகின்ற சிலமரங்களிலுண்டாகும் பிசின் அம்பர்.

(6) கடல் பாறைகளில் தேனீக்களால் கட்டப்படும் தேனடையானது அலையால் எற்றுண்டு ஒருவகை உருவத்தை அடைகின்றது.

(7) பூகம்பத்தில் கடல் அடியில் உற்பத்தியாகிக் கடல் ஓரத்தில் வந்து சேர்கின்றது.

(8) கடல் ஓரத்தில் பனி உறைந்து அம்பர் ஆயிற்று.

(9) கடலிலுள்ள கற்பாறையில் உண்டாம் மொம்மியாயியைப் போன்ற கசிவு.

நல்ல அம்பர், மென்மை, நெய்ப்பு, சீக்கிரம் உடைபடல், படல் படலாய் இருத்தலையும், மஞ்சள் நிறம் அல்லது வெண்மை கலந்த மஞ்சள் நிறம் அல்லது கோதுமைத் தவிடு நிறம் ஆகியவற்றையும் பெற்றிருக்க வேண்டும். பசுமை நிறங் கலந்த மஞ்சள் நிறத்தையுடைய அம்பரையும், கருநிறங் கலந்ததையும் முன்னதற்குத் தாழ்வாகக் கருதுதல் வேண்டும். அன்றியும், நாட்பட்ட வாசனை குறைந்த அம்பரும் மருந்திற்காகா. இறந்த மீனிலிருந்து எடுக்கும் அம்பரும் வாசனை குறைந்த அம்பரும் தாழ்ந்த குணத்தை உடையனவாம்

தேவையின் பொருட்டும், அதிக விலை கிடைப்பதை முன்னிட்டும் அம்பருடன் சுண்ணும்பு, மெழுகு, கொழுப்பு, கறு

திற அம்பர் முதலிய பொருள்களைக் கலக்கின்றனர். இதைச் சோதிக்க பல சோதனைகள் உள.

(1) உண்மைச் சரக்கை வாயிலிட்டு மெல்ல, மெதுவாகவும் பசையுடனுமிருக்கும்; போலிச் சரக்காயின் சப்தத்துடன் உடை படும்.

(2) உண்மைச் சரக்கை நெருப்பிலிடின், வாசனையோடுங் கூடிய புகை எழும்; போலிச் சரக்காயின் புகையும் வாசனையும் எழா.

(3) நெருப்பிலிட உண்மைச் சரக்காயின் வாசனையை உண்டுபண்ணிச் சிறு பகுதி நெருப்பில் எரியாதிருக்கும்; போலிச் சரக்காயின் நெருப்பில் தங்காது எரிந்துவிடும்.

(4) உண்மைச்சரக்கு சுவையற்றிருக்கும்; போலிச் சரக்கு கைப்பாயிருக்கும்.

(5) இடிக்கப் பிசுப்பிசுப்பாயிருந்தால் உண்மைச் சரக்கு; இரவைகளாய் உதிர்ந்தால் போலிச் சரக்கு.

(6) பிசுபிசுப்புள்ள பொருள்களைக் கலந்திருந்தால், அப்பொழுது நெருப்பிலிட்ட உண்மைச் சரக்கின் சாம்பல் மிருதுவாக இருக்கும்; போலிச் சரக்கின் சாம்பல் அழுத்தமாகவும் பிசுபிசுப்புடனும் இருக்கும்.

(7) நெருப்பிலிட்ட உண்மைச் சரக்கு குமிழ் விட்டுப் பொங்காதிருக்கும்; போலிச் சரக்கு பொங்கிக் கீழ்த் தங்கும். அதில் கலப்புற்ற அம்பர் பரிணமித்துவிடும்.

(8) உண்மைச் சரக்குக்கு மணமில்லை. ஆனால், நெருப்பிலிட அது நல்ல வாசனையைக் கொடுக்கும்.

(9) பழுக்கக் காய்ச்சிய ஊசியால் அம்பரைக் குத்த வாசனையுடன் கூடிய புகை எழும்பல் முதலியன உண்டாகும்.

### குணமும் செய்கையும்

அம்பருக்கு வெப்ப வீரியமும் வறட்சியும் குணங்களாகும். வெப்பமுண்டாக்கி, இசிவகற்றி, காமம் பெருக்கி, உடல் உரமாக்கி ஆகிய இவைகள் செய்கைகளாகும்.

### பொதுக் குணம்.

'' அளகமுள வாரமிர்தே யாண்மையுண் டாக்கும்
பளபளென மெய்யையுரப் பாக்கும்—குளகுளத்த
புண்ணுற்று மம்பர் பொரிகரப்பானைப் போக்கும்
விண்ணூர்க்கும் வாசனையாம் விள்.''

(பொ-ள்) பரிமளமுள்ள அம்பர், சுக்கில விருத்தியையும், உடல் ஒளியையும் பலத்தையும் தரும். அழிவிரணத்தையும் கரப்பானையும் நீக்கும்.

மற்றும், இஃது அரச கருவிகளாகிய இருதயத்திற்கும் மூளைக்கும் பலத்தைக் கொடுக்கும்; தாதுக்களுக்கு வன்மையை அளித்து, உயிரை வளர்த்து, ஐம்பொறிகளுக்குச் சுகத்தைக் கொடுக்கும். காக்கை வலி, நரம்புத் தளர்ச்சி, சுரம், சந்நி, சுவாசாயத்தைப் பற்றிய கபப்பிணிகள், ஊழிநோய், பேதி இவைகளில் உண்டாம் தளர்ச்சி, புணர்ச்சியில் உண்டாம் உடல் சோர்வு இவைகளை நீக்கும். இப்பொருள் வயது சென்றவர்களுக்கும் குளிர்ந்த உடம்பினருக்கும் பொருத்தமுள்ளதாகும். இதன் குணங்களெல்லாம் இதன் மணத்தினுலாயது என்று கூறுகின்றனர். அன்றியும் இதனுல் பாரிசவாயு, முகவாதம், தனுர்வாதம் தலைவலி, புணர்ச்சியின்மை, பிரமை, காதுவலி, நாகிநோய், இருதயபலக் குறைவு, இருதயத் துடிப்பு, ஆமாசயப் பலக் குறைவு, காமாலை, மகோதரம், முதலியனவும், மண்ணீரல், குண்டிக்காய் (பிருக்கம்), ஆமாசயம், தசை கீல்களில் உண்டாம் வலி முதலியனவும் நீங்கும். இது சாராயப் போதையை மாற்றிச் சந்நியை அகற்றும்.

அளவு: 2½ (325 மி. கிரா). முதல் 7½ (975 மி கிரா) குன்றி வரை.

உபயோகங்கள்.

இதனைச் சாராயத்தில் கலந்து மணத்திற்காக சென்ட், பரிமளக்குழுவு நீர்களில் கையாளுகின்றனர். வர்த்தியில் அம்பரைச் சேர்க்கின்றனர்.

அம்பரை வெற்றிலையுடன் உண்ணில் கபநோய்கள் நீங்கும். தங்கரேக்குடன் அம்பரைச் சேர்த்துத் தேனில் அருந்த, உடலுக்கு வன்மையைக் கொடுக்கும்.

அம்பரை இலவங்கம், சாதிக்காய்த் தூள் இவைகளுடன் அல்லது எண்ணெயில் அனுபானித்துக் கொடுக்க வாத நோய் நீங்கும்.

அம்பரை நெய்யில் அனுபானித்துக் கொடுக்க விடமகலும்; பிரமிச்சாறு, தேன் இவைகளில் அம்பரைக் கூட்டிக் கொடுக்க பிரமை நீங்கும்.

கஸ்தூரி, அம்பர், குங்குமப்பூ, சுத்தி செய்த இலிங்கம், வெற்றிலைச்சாறு இவைகள் கூட்டிச் செய்யப்பட்ட நெய்யை அருந்திவர, ஞாபகசக்தி உண்டாகும்.

அம்பர் மாத்திரையை வெற்றிலைச் சாற்றில் கலந்து மேல் பூசிவர, வியர்வையுடன் கூடிய துர்நாற்றம் நீங்கும்.

வெதுப்பிய எண்ணெயில் அம்பரைக் கலந்து நசியமிட, சிரசைப் பற்றிய நீர்க்கோவை நீங்கும்.

சீதளத்தினால் உண்டான ஒற்றைத் தலைவலி நீங்க, இதனைப் புகை போடவேண்டும்.

இதனை ஆண்குறியில் லேபமிட, தளர்ச்சி நீங்கும். மற்றைய மருந்துகளுடன் கூட்ட, அவைகளுக்கு வேகத்தையும், குணத்தையும் உண்டு பண்ணும்.

அம்பர் மாத்திரை.

அம்பர் தோலா 1 (12 கிராம்), மூங்கிலுப்பு தோலா 3 (36 கிராம்), கருவேலம் பிசின் தோலா 1 எடுத்து, மூங்கிலுப்பை கிலுப்பைக் கருவேலம் பிசினுடன் கலந்து நன்றாய் அரைத்துப் பன்னீர் விட்டு அம்பரைச் சிறிது சிறிதாய் சேர்த்து, நன்றாய் அரைத்து, மிளகளவு மாத்திரைகளாய்ச் செய்து, நிழலில் உலர்த்திக் கொள்ளவும்.

நாள் ஒன்றுக்கு இருவேளை அல்லது மூன்று வேளை வீதம் தக்க அனுபானத்தில் கொடுத்து வர, கபவாத நோய், சுவாசாசயத்தைப் பற்றிய நோய், சீதளப் பிணிகள் ஆகியன நீங்கும்.

அம்பரைக் குடற்பிணி உள்ளவர்கள் உபயோகிக்கக் கூடாது என்று கூறப்பட்டுள்ளது.

அம்பர் கிடைக்காவிடின், கஸ்தூரி மூன்றில் ஒரு பங்கும், குங்குமப்பூ ஆறில் ஒரு பங்கும் கூட்டி அம்பருக்குச் சமமாய் உபயோகிக்கலாம்.

முறிவு.

அம்பரை முகர்வதினால் காணும் குமட்டலும், சந்நியும் நீங்கக் கருப்பூரத்தை முகர்தல் வேண்டும்.

அம்பரின் தீக்குணத்தை, குளிர்ச்சி வீரியமுடைய மூங்கிலுப்பும் தனியாவும் நீக்கும்.

குறிப்பு—அம்பர் என்ற சொல்லும் இப்பொருளும் அராபியருடையது. பல நூற்றாண்டுகட்கு முன்னர் அராபியருடன் பண்டைத் தமிழர் வாணிபஞ் செய்த காலத்து, இப்பொருள் வந்து சேர்ந்ததாய்த் தெரிய வருகின்றது. இதனைச் சித்தர், உப்பில் அடக்கினர்.

வளையலுப்பு.

இதனைத் தேரர் '' மடவார்கரத் துப்பு '' என்று ஆண்டிருக்கிறார். வளையல் செய்யும் பொருட்டுக் காய்ச்சிய உழமண் உப்பினின்றும் இயற்கையில் எழுதலால், இவ்வுப்பு

இப்பெயர் பெற்றதோடு விளைவின் கீழும் குறிக்கப்பட்டதென்க. இதன் பிறப்பைக் கீழ்க்காணும் அடிகளால் போகர் விளக்குகின்றார் :

" குழைந்து நின்ற பூநீற்றைக் காய்ச்சும் போது
குறியகரு மேகம்போன் மேலெ ழும்பும்
உறைந்துநின்ற உப்பெல்லா மேலே ழும்பி
உருவாகத் தெல்லுப்போ லுப்பாய் நிற்கும்
வரைந்துநின்ற வளையலுப் பென்னும் பேரு
மகத்தான அக்கினியைச் செயித்த வுப்பே."

சுத்தி.

இதனை வேண்டிய அளவு எடுத்துப் புளித்த காடிநீரில் ஒரு மூகூர்த்த காலம் (90 நிமிடம்) ஊறவைத்தெடுத்து, சூரிய வெப்பத்தில் உலர்த்தி யெடுக்க இது சுத்தியாம்.

(வேறு)

இதனைக் காடியில் கரைத்துத தெளிவிறுத்து சூரிய வெப்பத்தில் வைத்து உலர்த்திக் கொள்ளவும்.

பொதுக் குணம்.

" துளையார் குவில்வாதத் தொந்தவா தத்தோ
டிளையாச் சுவாசமறு மின்தூம்—வளையலுப்பாற்—
குன்கமவலி சூலைவெப்பங் கூருப்பி லீகமிவை
சென்மம்விட் டோடுமெனத் தேர்."

(பொ-ள்) வயலுப்பினால், குடல் வாதம், வாத பித்தம், இரைப்பு, வயிற்றுவலி, கீல்பிடிப்பு, சுரம், பிலீகம் முதலியன நீங்கும்.

உபயோகம்

இது, குன்ம குடோரி லேகியம், நவ உப்பு மெழுகு முதலிய கூட்டு மருந்துகளில் சேர்க்கப்படுதல் தவிர தனியாய் பயன்படுத்தப் படுவதில்லை.

## வெங்காரம்.

## SOSDII BIBORAS, SODII BORAS, SODIUM BIBORATE. BORAX.

இச்சரக்குக்குப் பொரிகாரம், காரம், உருக்கினம், உருக்கு மித்திரன், டங்கணம், தூமத்தையடக்கி என்ற வேறு பெயர் களுண்டு. இஃது, அதிக அளவில் கலிபோர்னியாவிலுள்ளன,

திபெத், நேப்பாளம் முதலிய இடங்களிலுள்ள ஏரிகளிலும் (உப்பு நீர்வற்றினுல் அவைகளுள் உப்பு உறைந்து) கிடைக்கின்றது. மண்ணுடன் கலந்திருக்கும் இவ்வுப்புக் கற்களை, நீரில் கரைத்து பிறபொருள்களை நீக்கி மறுபடியும் காய்ச்சி உப்பாக்கிக் கொள்ளல் வழக்கம். கடைச்சரக்குச் சுத்தமானதன்று. ஆகையினுல், அதற்கு நான்கு பங்கு வெந்நீரும், சிறிது சுண்ணாம்பும் கூட்டி வடிகட்டி, சூரிய வெப்பத்தில் வைத்தாவது தீயிலிட்டெரித்தாவது அதிலுள்ள நீரைப் போக்கி உப்பை எடுத்துக் கொள்ளல் வேண்டும். இவ்வுப்பு வெள்ளையாய், தெளிவாய், சில கோணங்களோடு கூடியதாய் கொஞ்சம் மினுமினுப்பாய் இருக்கும். இது நீரில் கரையும்; சாராயத்தில் கரையாது. காற்றுப்படும்படி வைத்தால், உப்பின் மேல் வெண்ணிறத்தூள் படியும். வெங்காரத்தைப் பொரித்தால், அதிலிருக்கும் நீர் சுண்டிப் பொரிந்து, அதில் சிறிய துவாரங்கள் தோன்றும். நிற்க, இதன் வைப்புமுறைக் கீழ்க் காணுமாறு போகர் ஆயிரத்தில் கூறப்பட்டுள்ளது.

## வெங்கார வைப்பு.

ஒரு பெரிய பாண்டத்தில் பூநீறு 1 படி (1.3 லிட்.) தண்ணீர் படி 8 (10.4 லிட்.) சேர்த்துக் கரைத்துத் தெளிவெடுத்து, இதில் பருப்புப் போலவும், பலகை பலகையாகவும் உடைத்த சீனம் பலம் 100 (3,500 கிராம்), வெடியுப்பு பலம் $6\frac{1}{4}$ (219 கிராம்) சேர்த்து, 1 பட்சம் சூரிய வெப்பத்தில் காயவைக்கில் கறுக்கும். இதை அடுப்பேற்றி, கள்ளிசுட்ட சாம்பல் 1 படி (1.3 லிட்.) குன்றியிலைச்சாறு 1 படி (1.3 லிட்.) ஆமணக்கு நெய் $\frac{1}{2}$ படி (650 மி. லிட்.) கூட்டி, பொங்காதவாறு கமலம் போல் தீமூட்டி 4 நாழிகை எரித்து, வாயகன்ற பாத்திரத்திலூற்றி ஒரு பட்சம் வெய்யிலில் வைக்க வெங்காரமாகும். இந்தப் பொருள் 64 சரக்கையும் கட்டுமென்றும், உபரசம் 120-ஐயும் சத்தாக்குமென்றும், காரத்தைக் கட்டுமென்றும், களங்கு செந்தூரம் குரு இவைகட்கு ஆதியாகுமென்றும் இதன் மகிமை கூறப்பட்டுள்ளது.

இஃது இனிப்புடன் கூடிய துவர்ப்புச் சுவையை உடையது. இதற்கு வீரியம், வெப்பமென்று கூறப்பட்டுள்ளது. இதனை, "வெங்காரம் வெய்தெனினும் நோய் தீர்க்கும்" என்ற அடியால் உணரலாம். உள்ளுக்குக் கொடுக்க, இதற்குக் குளிர்ச்சி உண்டாக்கும் செய்கையும், சிறுநீர் பெருக்கிச் செய்கையும், ருது உண்டாக்கிச் செய்கையும், பிரசவகாரிச் செய்கையும், கற்கரைச்சிச் செய்கையும், வெளியாட்சியில் சமனகாரிச் செய்கையும், உடல் தேற்றிச் செய்கையும் அழுகலகற்றிச் செய்கையும் துவர்ப்பிச் செய்கையும் உள. இதன் பொதுக்குணத்தைக் கீழ்க்காணும் செய்யுளால் உணரலாம்.

" சொறிபுடையெண் குன்மநமை சோரி யரசம்
பறிகிரகணி கல்லூ னம் பல்னோய்— நெறியைத்
தடங்கணங்க பங்கிருமி சர்ப்பவிடஞ் சந்நி
யிடங்கணங்க லக்கிற்போ மெண்."

(பொ-ள்) வெங்காரத்தினால், தவளைச் சொறி, புடை, எண் வகைக் குன்மம், தினவு, இரத்தமூலம், ஒழுக்குக் கிரகணி, அஸ்மரி, பங்குவாதம், பல் நோய், நாளவழியைத் தடுக்கின்ற மூத்திரகிரிச்சரங்கள், கபாதிக்கம், புழு பாம்பு முதலியவைகளால் உண்டாகும் நஞ்சு, சந்நிபாதம் முவலிய நோய்கள் நீங்கும் என்க.

(வேறு)

" வெங்காரக் குணமிதென்று விதமுடனுரைக்கக் கேளாய்
சங்கார மாகுந்தோஷந் தன்னையே சங்கரிக்கு
முங்கன லுதவியில்லா வுதரத்தில் வாயுமாற்றும்
பொங்கிய இருமல்மாந்தம் போக்கிடு முண்மைதானே."

(பொ-ள்) வெங்காரம் தோஷித்த தோடம், உதரவாயு, இருமல், மாந்தம் முதலியவற்றைப் போக்கும்.

(வேறு)

" வெங்காரஞ் சேத்துமத்தை வேறுபண்ணு மேகடுகு
தங்குசில நீர்முறியத் தான்வாங்கும்."

(பொ-ள்) வெங்காரம் கபத்தையும் நீர்ப்பிணியையும் நீக்கும். மற்றும் இது மந்தப்பிரசவம், வாய் விரணம், முலைக் காம்பு விரணம், சூதகப்பாண்டு, சூதகக்கட்டு, சூதகச்சூலை, பொரும்பாடு நீர்க்கோவை காக்கைவலி பிரசவ அதிசாரம் முதலிய நோய்களையும் போக்கும். இதனை மந்தப்பிரசவ வேதனையில் கருப்பையைச் சுருங்கச் செய்யக் கொடுப்பதுண்டு.

சுத்தி.

இதனைக் கிழிகட்டி, எருமைச் சாணத்தை நீரில் கரைத்துக் கொதிக்க வைத்து, அதில் கிழியை அழுத்தி அழுத்தி எடுத்து, சுத்த நீரில் கழுவி சூரிய வெப்பத்தில் உலர்த்தச் சுத்தியாம்.

(வேறு)

வெங்காரத்தைச் சீலையில் முடிந்து எருமைச் சாணத்தில் பொதித்து வைத்து, 3 நாட்கள் சென்றபின் சுத்த நீரில் கழுவி உலர்த்தச் சுத்தியாம்.

(வேறு)

பசுவின் சாணப்பாலில் இதனைக் கழுவி உலர்த்தச் சுத்தியாம்.

(வேறு)

எருமை மூத்திரத்தில் இதை மூன்று நாழிகை ஊறவைத்து எடுக்கச் சுத்தியாம்.

(வேறு)

இதனைச் சட்டியிலிட்டுப் பொரித்துக் காடியிலாவது பழச் சாற்றிலாவது அரைத்து உலர்த்தி எடுக்கச் சுத்தியாம்.

இதனை நீர்வற்றும்படி பொரித்துக் கொண்டால் சுத்தி.

(வேறு)

பழச்சாற்றிலாவது அரிசிக் கழுநீரிலாவது அரைத்து உலர்த்திக் கொண்டால் சுத்தி.

(வேறு)

பழச்சாற்றிலாவது காடியிலாவது நொச்சியிலைச் சாற்றிலா து துவைத்துத் துவைத்து உலர்த்தினாலும் சுத்தியாம்.

உபயோகங்கள்.

ஒரு வராகனெடை (4.2 கிராம்) பொரித்த வெங்காரத்தை காய்ச்சி முரித்த தேன் 1 பலத்தில் (35 கிராம்) கலந்து, வாய்ப் புண். அக்கரம் இவைகட்குத் தடவ குணத்தைக் கொடுக்கும். இதற்கு வெங்கார மது என்பது பெயர்.

வெங்காரத்தைப் பொரித்து, நெய் அல்லது வெண்ணெயில் குழைத்துத் தடவ, உதடு வெடிப்பு, வாய் விரணம், நாப்புண் இவைகள் ஆறும். தேகம் குளிரும்.

வெங்காரம் பலம் ஒன்றுக்கு (35 கிராம்) எட்டுப்படி (10.4 லிட்.) நீர் விட்டுக் கலக்கிக் கொள்ளவும். இதற்கு வெங்கார நீர் என்பது பெயர். இதனை வாய்ப்புண், தொண்டைப்புண், இரசவேக்காளம், அக்கரம் முதலிய நோய்களில் வாய் கொப்பு ளிப்பதற்கும், புண், ஆசன வெடிப்பு இவைகளைக் கழுவுவதற்கும் உபயோகிக்கக் குணத்தைத் தரும்.

வெங்காரம் 1 வராகனெடையை (4.2 கிராம்), 1/8 ஆழாக்கு (21 மி. லிட்.) நீரில் கரைத்து, முலைக்காம்பு வெடிப்பு, புண் இவைகளுக்குத் துணியில் நனைத்து மேலுக்குப் போடக் குண மூண்டாகும் குழந்தைக்குப் பால் கொடுக்கும்பொழுது தனத்தை நன்றாகக் கழுவி கொள்ள வேண்டும்.

வெங்காரம் 1 வராகனெடையை (4.2 கிராம்) 1/8 ஆழாக்குப் 21 மி. லிட்.) பன்றி நெய்யில் கலந்து, வலியுடன் கூடிய மூலத் திற்குப் போடக் குணமுண்டாம்.

வெங்காரம் 2 வராகனெடையை (8.4 கிராம்), 1½ ஆழாக்கு (252 மி.லிட்.) நீரில் கலந்து பிரமேகம், பெண்களுக்குக் காணும் கருப்ப மேகம் இவைகளுக்குப் பீச்சக் குணமுண்டாம்.

நாலு வராகனெடை (16.8 கிராம்) வெங்காரத்தை, 1 ஆழாக்கு (168 மி. லிட்.) நீரில் கலந்து நீர்த் துவாரத்தில் உண்டாகும் எரிச்சலுக்குப் பீச்சவும். இரத்த சர்ம நோய், கொசுக்கடி, வேர்க்குரு ஆகிய நோய்களுக்கு இதை மேலுக்கு உபயோகிக்கலாம்.

மந்தப் பிரசவத்தில் காணும் நீர்க்கட்டு நீங்க, வெங்காரம் ½ வராகனெடையுடன் (2.1 கிராம்) கருவாப்பட்டை ஐந்து குன்றியளவு (650 மி. கிராம்) சேர்த்துக் கஞ்சியில் கலந்து, 1 அல்லது 2 மணிக்கொரு முறை 3 அல்லது 4 தரம் கொடுக்க நல்ல குணமுண்டாகும். மற்றும், பிரசவங்களில் காணும் வலி அல்லது இசிவுகளுக்கு வெங்காரத் தூள் ஐந்து குன்றியெடை (650 மி. கிராம்) கருவாப்பட்டைத் தூள் ஐந்து குன்றியெடை (650 மி. கிராம்) இரண்டையும் கலந்து 6 மணிக்கொருமுறை கொடுக்க நீங்கும்.

பொரித்த வெங்காரத்தை 5 (650 மி. கிராம்) முதல் 10 குன்றியெடை (1.3 கிராம்) வரை இளநீரில் போட்டுக் கொடுக்க நீர்க்கட்டு குணமாகும்.

சூதகக்கட்டு, சூதகச்சூலை, சூதகப் பாண்டு, பெரும்பாடு, மகோதரம், காக்கைவலி, பிரசவ அதிசாரம் ஆகிய இவைகளுக்கு வெங்காரம் 2½ (325 மி. கிராம்) முதல் 7½ குன்றி (975 மி.கிராம்) வரை, தினம் 2 அல்லது 3 முறை கொடுக்கலாம். இதை உணவுக்குப் பிறகு கொடுக்க வேண்டுமென்பர்.

வெங்காரம், கந்தகம், காய்ச்சுக்கட்டி இவைகளைச் சம வெடை எடுத்து வேண்டிய அளவு நெய்கூட்டிக் களிம்பாக்கிக் கொண்டு சொறி, சிரங்கு, புண்களுக்கு உபயோகிக்கலாம்.

படர்தாமரை, மேக ஊரல் இவைகளுக்கு 1 வராகனெடை (4.2 கிராம்) வெங்காரத்தை, ½ ஆழாக்கு (42 மி. லிட்.) காடியில் கலந்து மேலுக்கு உபயோகிக்கலாம்.

கண்ணோய்களில் கண் கழுவ, 4 உளுந்தெடை (260 மி. கிராம்) வெங்காரத்தை ஓர் அவுன்ஸ் நீரில் (28 மி. லிட்) கலந்து உபயோகிக்க வேண்டும்.

குளிர் சுரம் வராமல் தடுப்பதற்கு, இதனை 2 குன்றி (260மி. கிராம்) முதல் 4 குன்றி (520 மி. கிராம்) வரை வெற்றிலையுடன் கொடுத்தல் வேண்டும்.

வெங்காரம் ½ (65 மி. கிராம்) முதல் 2½ குன்றி (325 மி. கிராம்) வரை தாய்ப்பாலில் கொடுக்க குழந்தைகளுக்குக் காணும் வலி நீங்கும்.

வெங்காரம் 2½ குன்றியெடை (325 மி. கிராம்), மிளகுத் தூள் 1½ குன்றியெடை (195 மி. கிராம்) இரண்டையும் 1 தேக்கரண்டி (4 மி. லிட்.) தேனில் கலந்து தினம் மூன்றுவேளை அருந்த காசம், சுவாசகாசம் முதலியன நீங்கும்.

நிற்க, வெங்காரத்தைச் சிறிய அளவில் குழந்தைகளுக்குப் பேதியை உண்டுபண்ணுவதற்கும், மலத்தில் உண்டாகும் நாற்றத்தை அகற்றுவதற்கும், அசீரணம், பசியின்மை இவைகளை நீக்குவதற்கும் உபயோகித்தல் உண்டு.

வெங்கார பற்பம்.

வெங்காரத்தைக் கோழி முட்டை வெண் கருவினால் சுத்த வெண்மை நிறமடையுமட்டும் அரைத்துக் குக்கிட புடமிட்டுப் பதமாக எடுத்து தக்க அளவில் தக்க துணைமருந்தில் கொடுக்க வெப்பப் பிணிகள் தீரும்.

வெங்கார மாத்திரை.

" வெங்காரமுஞ் சிறுதிப்பிலி மிளகிந்தது சுக்கு
பணபாகிய நேர்வாளமும் படையுப்புடன் காந்தம்
நண்பாய்வரு பெருங்காயமு நன்றூங்கழல் விதையும்
தண்பாயின மொன்பானது சரியாயெடு வெடையே."

" எடையானது சரியாகவே யெடுத்திந்த மருந்தை
யடைவாகவே தண்ணீர்விட் டரைத்துண்டைகள் செய்து
தடைதானற வெருக்கம்பழுப் பதினாலதை மூடிக்
குடைவாகிய தொருபானையைக் கொண்டேயெருப் புடமே."

" எருகோழியி னுயரத்திடு வியல்பாகிடு மருந்தைக்
கருபோலு மருவாகிய கடுநீர்தனி லரைத்துச்
சிறுதேற்று விதையாம்படி திரட்டாய்குளி கையைநீ
ஒருவாமலே ஒன்றெண்ணெயி லூற்றேநனி யுண்ணே."

" உண்ணக்கழி யும்மாலஃ துற்றூலஃ தேகக்
கண்போன்மட நங்காய்நல தண்ணீரது கண்டே
பண்டாங்கரங் கால்வாய்முகங் கழுவாய்ப்பின் பலவாய்
விண்டேகுறு கொடிதாகிய வியாதிப்பெயர் கேளாய்."

" கேளாயட்ட குன்மஞ்சூலை கிளருங்குலை வாதம்
கேளாரண்ட வாதங்குலை முட்டுஞ்சல வாம்பல்
மாளாவிப் புருதிகன பாண்டுமகோ தரமும்
காளாங்கம்புள் காடைகவு தாரிபொரு ளுண்ணே."

வெங்காரக் கட்டு.

ஒரு பலம் (35 கிராம்) வெங்காரக் கட்டிக்கு, சிவப்புப் பிரண்டை அல்லது குன்ம குடோரி இலை 5 பலத்தை (175 கிராம்) அரைத்துக் கவசித்துச் சீலைசெய்து, பதினைந்து பலம்

(525 கிராம்) வரட்டியில் புடமிட்டெடுக்க அது கட்டும். இக்கட்டை, சிற்றண்டவெண் கருவால் ஆட்டிப் புடமிடப் பற்பமாம்.

**வேறு உபயோகங்கள்.**

வெங்காரத்தைப் பொடித்துப் பாய்ச்சை இருக்கும் இடத்தில் தூவிவந்தால் இதனைத் தின்று பாய்ச்சை இறந்துவிடும்.

ஈயினுல் சாணத்தில் உற்பத்தியாகும் புழுக்களைக் கொல்ல 42 கிராம் வெங்காரத்தை 11.3 லிட்டர் நீரில் கரைத்துத் தெளித்து வரவேண்டும்.

## வெடியுப்பு.

## POTASSII NITRAS; POTASSIUM NITRATE. SALT PETRE; NITRATE OF POTASH.

இப்பொருள், பொட்டிலுப்பு, இணங்கன், படைராசன், பூமி கூர்மை, நவச்சார மித்ரு என்ற வேறு பெயர்களினுலும் வழங்கப்படுகின்றது.

இவ்வுப்பை வைப்பினுள் அடக்கியுள்ளார்கள். வைப்பு முறை பின்காணுமாறு கூறப்பட்டுள்ளது.

ஓரடி கனத்த மட்பாண்டத்தில், உப்பு உதிர்ந்த மண்ணைக் கொட்டி, நீர்விட்டுக் கலக்கிப் பிறகு குருது கட்டி தமரிட்டு வைக்கோல் சொருகி மேற்படி நீரை விட்டுத் தெளிவெடுத்து, அதனைக் காய்ச்ச உப்பாகும்.

இவ்வுப்பு 1-க்கு நீர் நான்கு பங்கு விட்டுக் காய்ச்சும் போது, முப்பதிற்கு 1 பங்கு புளித்தமோர், பழச்சாறு இவற்றை விட்டுக் காய்ச்சி உப்பெடுக்கவும். இப்படி 4 அல்லது 5 முறை காய்ச்சி எடுக்க, உப்பு கம்பி கம்பியாய் நிற்கும். இது, வாதத்துக்கு வேர், காய், இலை, பூ என்பர்.

தற்காலம் பஞ்சாபிலிருந்து வெடியுப்புத் தயார் செய்து அனுப்பப்படுகின்றது. இப்பொழுது செய்கின்ற முறையும், மேலே குறிப்பிட்ட முறையை அநேகமாய் ஒத்து இருக்கின்றது.

இவ்வுப்பைத் துப்பாக்கி மருந்து செய்வதற்கும், நீர், சாராயம் இவைகளைக் குளிர்ச்சி செய்வதற்கும் படிகாரம், உப்பு இவைகளுடன் சேர்த்துப் பொன் நகைகளுக்கு மெருகு கொடுப்பதற்கும் உபயோகிக்கின்றூர்கள்.

## சுத்தி.

இந்த உப்பு ஒரு பங்கிற்கு, நான்கு பங்கு தண்ணீர்விட்டு அடுப்பேற்றிச் சிறு தீயால் எரித்துக் கொதிகிளம்பும்போது. 1 வீசை (1,400 கிராம்) உப்புக்கு நான்கு கோழி முட்டை வெண் கருவைச் சேர்க்க வேண்டும். மேலே அழுக்குத் திரளும். அதனை அகப்பையால் வழித்து நீக்கி, உறையும் பதத்தில் மறு சட்டியில் சீலைகட்டி அதில் வடித்துக் காற்றில்லா விடத்தில் வைத்து, மறுநாள் நீரை வடித்து விட்டு, சூரியவொளியில் உப்பை உலர்த்தவும். இவ்வாறு ஏழுமுறை செய்யச் சுத்தி யாம்.

**குறிப்பு.**—முட்டை வெண்கருவிற்குப் பதில் பாலுக்கு புரை இடுவது போல், எலுமிச்சம் பழச்சாற்றையாவது புளித்த மோரையாவது சேர்த்து அழுக்கை நீக்கலாம்.

(வேறு)

வெடியுப்பு 1 பங்கு, கடல் நீர் அல்லது நீர் 2 பங்கு எடுத்து, உப்பை நுண்மையாய்ப் பொடிசெய்து நீரில் கலந்துவைக்க நீரில் கலந்துபோம், தெளிவெடுத்து வெண்மையான இருப்புப் பாண்டத்தில் விட்டுக் காய்ச்சி, உறையும் பதந்தில் வேறு ஒரு செப்புப்பாண்டத்தில் கொட்டி குளிர்ந்த இடத்தில் ஆறவைக்க உப்பாகும். இதை எடுத்து, இதற்கு 2 பங்கு நீர் விட்டு மேற் படியாகவே காய்ச்சி உப்பாக்கவும். இப்படி மொத்தத்தில் 5 முதல் 7 முறை செய்ய சுத்தியாம்.

**குறிப்பு.**—கடல் நீர் அல்லது நீருக்குப் பதில் வாழைக் கட்டை நீர், பனிநீர், மழை நீர் இவைகளிலொன்றை உபயோகிக்க லாம்.

சுத்தி செய்த உப்பு, கம்பிகளாயும், வெண்மையாயும் நாக்கி விட்டால் குளிர்ச்சியாயும் இருக்கும். நெருப்பிலிடப் பொரியும்.

## செய்கையும் குணமும்.

இவ்வுப்பிற்குக் குளிர்ச்சி உண்டாக்கி, வியர்வை பெருக்கி, சிறுநீர் பெருக்கிச் செய்கைகள் உண்டு, அதிக நீரில் கரைத்துக் கொடுக்க வேண்டும். கட்டியாய் உட்கொண்டால் எரிச்சலை உண்டுபண்ணும். அதிக அளவில் கொடுத்தால் பிராண பயம் நேரிடும். மேல் பிரயோகத்தில் குளிர்ச்சியை உண்டு பண்ணும். இதன் குணத்தைக் கீழ்ச் செய்யுட்களால் உணரலாம்.

" மல்லாரு மட்டகுன்ம மாதருத ரக்கட்டி
கல்லா மதைப்புநீர்க் கட்டருக—லெல்லாமே
கம்பிகம்பி யென்றுங் கருவுண்டா மங்கிநின்ற
கம்பிகம்பி யென்றுரைக்குங் கால்."

## இதுவுமது.

" சூதக வாயுவொடு சோணிதத்தின் வாதமும்போம்
வாதவலி குன்மமிவை மாறுங்காண் மீதாங்
கொடிய வயிறிழியுங் கோழைகப மேகும்
வெடியுப்புத் தன்னை விளம்பு."

(பொ-ள்) பஞ்சபூத உப்பில் தேயுவின் கூறுகியல் கம்பி உப்பினால், எண்வித குன்மம். கருப்பாசயக் கட்டி, சோபை, மூத்திரக்கிரீச்சரம், நீர்ச்சுருக்கு, சூதிகாவாதம், வாதசோணிதம், சாமானிய வாத பித்த கப குன்மங்கள், பெருவயிறு, ஈளை, கபதோடம் இவை ஒழியும். பேரிளம் பெண் பருவங் கடந்த மாதர்கட்கும் கருப்பம் உண்டாகும்.

இதனால், சுரம், வீக்கம், கீல்வாதம், இரத்த பித்தம், பிர மேகம், கண்ணோய், தொண்டை விரணம், சுவாசகாசம் முதலிய யனவும் நீங்கும்.

அளவு : 5 (650 மி. கிராம்) முதல் 10 குன்றியெடை (1.3 கிராம்).

### உபயோகம்.

நினைவு தடுமாற்றம், தலைவலி, இவைகளுடன் கூடிய சுரத் திற்குப் பொட்டிலுப்பு 4 வராகனெடை (16.8 கிராம்), நவாச் சாரம் 4 வராகனெடை (16.8 கிராம்) இவற்றை முக்கால் ஆழாக்கு (126 மி.லிட்.) நீரில் கரைத்து சீலையில் நனைத்து உலர உலர நெற்றியிலிட்டுவரக் குணத்தைக் கொடுக்கும்.

சுரத்தில் காணும் நா வறட்சி, தாகம், நீர்க்கடுப்பு, தோல் வறட்சி இவைகளுக்கு, பொட்டிலுப்பு 2 வராகனெடையை (8.4 கிராம்). 1 சேர் (280 மி. கி. லிட்) கஞ்சியில் கலந்து, சுவைக்காகத் தேன் அல்லது கற்கண்டு கூட்டி அடிக்கடி அருந்த லாம். இதனை அம்மையால் காணும் சுரம், நீர்க்கோவையுடன் கூடிய சுரம் இவற்றிற்கும் வழங்கலாம். இதனை மேல் நோக்கு கீழ்நோக்கு ஆகிய இரத்த பித்த நோயிலும் வழங்கலாம். ஆரம்ப தொண்டைப் புண், நெஞ்சு விரணம் இவைகளுக்குச் சிறிது பொட்டிலுப்பை வாயிலிட்டுச் சுவைக்கக் குணத்தைத் தரும்.

ஊறுங் காகிதங்களைப் பொட்டிலுப்பு நீரில் ஊறவைத்து உலர்த்திச் சுருட்டிக் கொளுத்திப் புகை பிடிக்கச் சுவாசகாசம் இருமல் தணியும். இரண்டு குன்றியெடை பொட்டிலுப்பை ஒரு அவுன்ஸ் நீரில் கலந்து, கண்வலிக்குச் கிலேதமாகவும் உப யோகிக்கலாம்.

ஒரு பலம் (35 கிராம்) வெடியுப்பை 2 ஆழாக்கு (336மி.லிட்.) நீரிலிட்டுக் கலந்து, அதில் சீலையை நனைத்து, மூட்டு வீக்கம், மூட்டுவலி இவைகளுக்கு மேலே போட்டுவரக் குணமாகும். இதனை அடிப்பட்ட காயங்களுக்கும் உபயோகிக்கலாம்.

## பொட்டிலுப்புத் திராவகம்.

பொட்டிலுப்பு 20 பலம் (700 கிராம்), படிகாரம் 16 பலம் (560 கிராம்), கடலைப் புளிப்பு நீர் 18 பலம் (630 மி. லிட்) இவைகளை ஒன்றுபடக் கலந்து, திராவகம் இறக்கும் வாலையி விட்டு முறைப்படி எரித்துத் திராவகத்தைக் குப்பியில் வாங்கிக் கொள்ளவும். இதனை Acidum Nitricum என்று கூறுகின்றார்கள்.

இத்திராவகத்தைக் தக்க அளவு நீரில் கலந்து கொடுக்க, சிறுநீரை அதிகப்படுத்தும். இதனைப் பழஞ்சுரத்திற்குப்பின் காணும் பலக்குறைவை நீக்க உபயோகிப்பதுண்டு.

(வேறு)

பொட்டிலுப்பு பலம் 8 (280 கிராம்) இந்துப்பு பலம் 8 (280 கிராம்), வளையலுப்பு பலம் 8 (280 கிராம்), படிகாரம் பலம் 8 (280 கிராம்), சோற்றுப்பு பலம் 8 (280 கிராம்), எண்ணெய் வெங்காரம் பலம் 8 (280 கிராம்), துருசு பலம் 1 (35 கிராம்), நவாச்சாரம் பலம் 1 (35 கிராம்) இவைகளைப் பொடித்துத் திராவகம் இறக்கும் கருவியிலிட்டு, முறைப்படி எரித்துத் திராவகத்தைக் குப்பியில் வாங்கிக் கொள்ளவும்.

இத்திராவகத்தைத் துளிக்கணக்கில் நீரில் கலந்து குழந்தைகட்குக் கொடுத்துவரக் கல்லீரல், மண்ணீரல் வீக்கம் குணமாகும்.

## வெடியுப்புச் செயநீர்.

வெடியுப்புடன், கோதுநீக்கிய பழம்புளி சமவெடை சேர்த்து, பூணில்லா உலக்கையால் இடித்து, உறவானபின் வில்லை தட்டிக் காயவைத்து, ஓட்டிலிட்டு எரித்தால் பற்றி எரியும். பிறகு அச் சாம்பலை ஒரு பீங்கானில் போட்டுச் சாய்த்துப் பனியில் வைக்க, நீர் இறங்கும். இதனைக் குப்பியில் அடைத்துக் கொள்ள வேண்டும்.

இச்செயநீரால் தாளகம் முதலிய பாஷாணங்களும் உபரசங்களும் நீறும்.

## வெடியுப்புச் சுண்ணம்.

பத்து பலம் (350 கிராம்) ஆமை ஓட்டைத் தூள் செய்து இரண்டு பங்காக்கி, ஒரு பங்கை ஒரு குடுவையிலிட்டு, அதன்மேல 2 பலம் (70 கிராம்) எடையுள்ள ஒரு வெடியுப்புக் கட்டியை வைத்து, மேலே மற்றொரு பாதி ஆமை ஓட்டுத் தூள் கொண்டு மூடி, குடுவைக்கு மேல் ஓடிட்டுச் சீலைமண் செய்து, ஒரு லகு புடமிட்டெடுக்கச் சுண்ணமாம்.

அளவு : 1 குன்றியெடை (130 மி. கிராம்).

இச்சுண்ணத்தை முள்ளங்கிச்சாறு, இளநீர் அல்லது சிறு பீளைச் சாற்றில் கொடுக்க, நீர்கட்டு, நீரடைப்பு, நீர் எரிச்சல் முதலியன நீங்கும். நீர் அதிகம் இறங்கினால், இரச செந்தூரம் குன்றியெடையைத் தேனில் இழைத்துக் கொடுத்தால் நிற்கும் என்பர்.

### வெடியுப்பு நீறு.

நாயின் வெண்கட்டத்தைத் தூள் செய்து ஒரு குடுவையி லிட்டு, அதில் வெடியுப்பைப் போட்டு, மேலும் மேற்படித் தூள் கொண்டு மூடி, சில்லிட்டுச் சீலை செய்து, புடமிட்டெடுக்க வெடி யுப்பு நீறும்.

### அட்டுப்பு.

வெடியுப்பைக் காய்ச்சும்போது அடியில் தங்கும் மண்டியை எடுத்து மறுபடியும் காய்ச்சி, உறையும்படி செய்து எடுத்துக்கொள் ளல் பழக்கம். இதற்கு அட்டுப்பு என்பது பெயர்.

இதன் பொதுக் குணத்தைக் கீழ்ச் செய்யுளால் உணரலாம்.

"பித்தங் குடிவிலகும் பேராத சூலையறும்
சாத்தி யருசியிவை சாராவாம்— ஒத்தகச்சிற்
கட்டுப் படாக்கொங்கைக் காரிகையே சங்கையற
அட்டுப்பின் பேரை யறை."

(பொ-ள்) அட்டுப்பினால் பித்தம், சூலை, வாந்தி, சுவை யின்மை முதலிய நோய்கள் நீங்கும்.

அட்டுப்பு வெடியுப்பினது அடிவண்டலில் உண்டாகும் விளை வாயினும், வெடியுப்பின் தன்மை இதற்கில்லை என்றறிக.

### சுத்தி.

இவ்வுப்பு ஒரு பங்கிற்கு 4 பங்கு சுத்த நீர் விட்டுக் கரைத்து வடிகட்டி, சுண்டக்காய்ச்சி வெய்யிலில் உலர்த்திக் கொள்ள சுத்தியாம்.

## V. நவமணி.

## NINE GEM STONES.

வலன் என்னும் அவுணன், சிவபிரானிடம் வரம் பெறுதற் பொருட்டு, சிவனை நோக்கித் தவஞ்செய்தான். சிவபிரான், அவன்முன் தோன்றி, "உனக்கு யாது வரம் வேண்டும்?" என வினவினன். அவன், "யான் யுத்தத்தில் இறவாதிருக்குமாறும்,

ஒருக்கால் இறக்கில் என்னைக் கொன்ற சுத்த வீரனும் வியக்குமாறு என் உடல் நவமணித் தொகுதிகளாகுமாறும் வரமளிப்பீர்'' எனக் கேட்டான்.

அவ்வாறே சிவபிரான் அளிக்க, அந்த அவுணன் அதைப் பெற்று இந்திரனிடம் சென்று போர் புரிந்தான். இந்திரன் வலனிடம் தோல்வியுற்று ''இவனை வெல்லுதல் அரிது, வஞ்சனையினாலேயே இவனை அழித்தல் வேண்டும்'' என நினைத்து, ''நினது வீரத்தை வியந்தேன்! நின்னை வெல்ல எவராலும் இயலாது. உனக்கு, ஏதேனும் வரம் வேண்டில் யான் தருகின்றேன் என்றான். வலன் ''சிவபிரான் அருளைப் பெற்ற எனக்கு உம்மிடம் பெறவேண்டுவது யாதுமில்லை. உமக்கு வேண்டிய வரத்தைக் கேட்கில் யான் தருகிறேன்'' என்று விடை அளித்தான்''. இதுவே இவனை அழிப்பதற்குத் தக்க சமயம்'' என உறுதி கொண்ட இந்திரன், ''ஐயா! யான் திருக் கைலைக்குச் சென்று செய்யவிருக்கும் யாகத்தில் தேவர்கட்கு அவி ஊட்டுவதற்காக நீ யாகப்பசுவாய் அமையவேண்டுகின்றேன்'' என்றான். இதைக் கேட்ட வலன், உளம் பூரித்து ''நாம் புகழுடம்பு பெறுதற்கும், நம் உடலை நவமணிகளாய்ப் பிறருக்குதவி புரிந்து கீர்த்தியடைதற்கும் இதுவே தக்க சமய'' மெனக் கருதி, யாகப்பசு உருவெடுத்து யாகசாலையைக் கிட்டினான். அதை இந்திரன் பிடித்துத்தன் வச்சிராயுதத்தால் சேதித்து, அதனவயங்களைத் தேவர்கட்கவிசாய்க் கொடுக்க, சிதறிய சிறுதுண்டுகள் நவரத்தினங்கட்கு வித்தாய் கடல், மலை, தீவு முதலிய சிறப்புற்ற நாடுகளெங்கும் பரவின. அவ்வாறு பரவிய உறுப்புகளுள் (1) என்பு வயிரமணியாகவும், (2) பற்கள் முத்துமணியாகவும், (3) இரத்தம் குற்றமற்ற மாணிக்க மணியாகவும், (4) மயிர் வைடூரிய மணியாகவும், (5) தசை பவள மணியாகவும், (6) கண் நீலமணியாகவும், (7) பித்தம் மரகத மணியாகவும், (8) கபம் புட்பராக மணியாகவும், (9) நிணம் கோமேதக மணியாகவும் ஆயின. இக்கதையை,

'' பசுவென்பு வயிரம் பல்லு பனிமுத்தங் குருதி யோதில்
வசையறு திருமா ணிக்க மயிர்வயி டூரி யங்கள்
தசைபவ ளங்க ணீலந் தரும்பிச்சு பச்சை மெச்சு
நிசகபம் புட்ப ராக நிணங்கோமே தகமென் றுமே.''

என்பதாலும்,

'' அத்தகை யாவின் சோரி மாணிக்க மாம்பன் முத்தம்
பித்தைவை டூரிய மென்பு வச்சிரம் பித்தம் பச்சை
நெய்தவெண் ணிணங்கோ மேதந் தசைதுகிர் நெடுங்க
ணீல
மெய்த்தவை புருட ராக மிவைநவ மணியின் றேற்றம்.''

(ப. புராணம்.)

என்பதாலும் உணர்க.

இவ்வாறு கூறியதனுல், எந்தெந்த உறுப்பு எந்தெந்த மணியாய் மாறிற்று என்று கூறப்பட்டிருக்கின்றதோ, அவ்வாறே உடலின் அவ்வப் பகுதி பிணிவாய்ப்பட்டிருப்பினும், வன்மை குறைந்திருப்பினும் அதற்குக் கூறப்பட்ட மணியாலாய பற்பத்தையோ செந்தூரத்தையோ பிரயோகிக்க நன்மை பயக்குமென்பது பெற்ரும்.

## நவமணிகளின் மகிமை.

ஒருவனது பிறப்பில் அமைந்த சூரியாதிக்கோள்கள் ஒன்பதும், தம்முள் ஒன்ருேடொன்று விரோதமின்றிக்கூடி நட்புப் பெறுமாகில், அதனுல் அவனுக்கு ஆயுளுள்ளமட்டும் சுகவாழ்க்கை எய்துவதுபோல, இம்மணிகள் ஒன்பதும் பொருந்திய அணியில் உள்ள மணிகள் ஒன்றுக்கொன்று உருவத்திலும் அமைப்பிலும் குணத்திலும் ஒளியிலும் வேற்றுமையடையாமல் பொருத்தமுடையதாயின், அவ்வணியை அணிபவருக்கு நற்பயனும் சுகவாழ்க்கையும் எய்துமென்பது முன்னேருரை.

## மணிகளுக்கும் கோள்களுக்கும் ஒப்புமை.

கிரகாதிகள் மக்களின் சென்மாந்திர நல்வினை தீவினைக்கேற்ப அமையுமேயல்லாமல் வேறுவிதம் ஆகா. அவ்வினைப் பயனின் காரியமே பிணி. இதுவும் கருவில் அமைப்பு. இதைத் தணிக்கவோ அல்லது நீக்கவோ ஏற்பட்டதே மருந்து. இதுவும் நல்வினையோருக்கும் தீவினையோருக்கும் தக்கப்படியே உதவும். இவ்விரண்டும் (கோள், மணி) வினையின் ஈடா யுண்டான தேகத்தின் சுகாசுகத்திற் கேற்றவாறு நிற்கும் ஒற்றுமையாலும், எண்ணிக்கையில் இரண்டும் ஒன்பது ஒன்பதாகவே தொகுக்கப்பட்டிருப்பதாலும் இவ்விரண்டினத்திற்கும் ஒரு வகை ஒப்புமை கற்பிக்கப்பட்ட தென்பது கொள்ளக் கிடக்கின்றது.

இவ்விரண்டினத்திற்கும் ஒப்புமையை உண்டாக்குதற்கு, நிறமும் ஒளியுமே முதன்மையெனக் கீழ்க்காணும் விவரத்தால் நன்கு விளங்கும்.

## இவ்விரண்டின் ஒற்றுமை விளக்கம்.

| கோள் | நிறம் | | மணி. |
|---|---|---|---|
| 1 ஞாயிறு (சூரியன்) | அருணன் | .. | மாணிக்கம். |
| 2 திங்கள் (சந்திரன்) | பால் | .. | முத்து. |
| 3 செவ்வாய் (அங்காரகன்). | செந்நீர் | .. | பவழம். |
| 4 புதன் (புதன்) .. | கரும்பச்சை | .. | மரகதம். |
| 5 வியாழன் (பிரகஸ்பதி). | பசும்பொன் | .. | புட்பராகம். |

| | | | |
|---|---|---|---|
| 6 வெள்ளி (சுக்கிரன்) | சுத்தவெண்மை | .. | வைரம். |
| 7 சனி (சனி) .. | நீலம் .. | .. | நீலம். |
| 8 கருநாகம் (ராகு) | கறுப்பு | .. | கோமேதகம். |
| 9 செந்நாகம் (கேது) | கருஞ்செம்மை | .. | வைடூரியம். |

### நவமணி சித்திக்கு துணைக்கருவி.

அறுபத்து நான்கு சித்திகளையும் அளிக்க வல்லது சூதமொன்றேயாம். இது, தீயை வென்று நிற்கவும், கட்டுப்படவும், குளிகையாவதற்கும், பின் சாரணைபெற்றுக் கோரிய சித்தியையொருவன் பெறுவதற்கும் தாதுப்பொருள் தம்மில் நவமணிகள் துணைக்கருவியாம்.

### சூதகமணி பற்ப செந்தூரம், பூசை உடலிலணிதல், தானம் இவைகட்கு ஏற்றமுடைய மணிகளினிலக்கணம்.

அவ்வம்மணிக்கு உரிமையான உருவம், நிறம், ஒளி, எடை, குணம், கருமங்கள் ஆகியவற்றில் சிறிதேனும் பழுதுறின் அவை விலக்காம். அவற்றை அந்தந்த மணியின் விரிவில் காண்க.

### நவமணிகளை ஆராய்தற்குறிய நாட்கள்.

ஞாயிற்றில் மாணிக்கத்தையும், திங்களில் கோமேதகத்தையும், செவ்வாயில் முத்தையும் வைடூரியத்தையும், புதனில் பவழத்தையும், வியாழனில் மரகதத்தையும் புட்பராகத்தையும், வெள்ளியில் வைரத்தையும், சனியில் நீலத்தையும் சோதித்தல் நலமாம். இந்நாட்கள் அந்தந்த மணிகளின் ஏற்றத்தாழ்வை நன்கு விளக்கும். இதனைக் கீழ்க்காணும் செய்யுளாலறியலாம்.

"ஞாயிறு மாணிக்கங் கோமேதகந் திங்களாரம்
வாய்வயி டூரியஞ் செவ்வாய்வளப் பவளமாகு
மேயவன் புதனிற்பச்சை வியாழமாம் புட்பராகங்
காய்கதிர் வெள்ளிவச்சிரங் கடுஞ்சனி நீலங்காணே."

(பட்டி. புரா.)

இச்செய்யுளுக்கு மற்றொர் உரையுமுண்டு. அஃதாவது, ஞாயிற்றில் மாணிக்கத்தையும் கோமேதகத்தையும், திங்களில் முத்தையும் வைடூரியத்தையும், செவ்வாயில் பவழத்தையும், புதயில் வைரத்தையும், வியாழனில் புட்பராகத்தையும், வெள்ளியில் மரகதத்தையும், சனியில் நீலத்தையும் மதிக்க வேண்டும் என்பது. இவ்வுரை கீழ்க்காணும் திருவிளையாடல் புராணச் செய்யுளுக்குப் பொருந்தமாயிருக்கிறது.

" இனையவை யளந்து கண்டு மதிக்குநா ளெழுமான் பொற்றோர்
முனைவனுண் முதலா வேழின் முறையினுற் பதும ராகங்
கனைகதிர் முத்தந் துப்புத் காருடம் புருட ராகம்
புனையொளி வயிர நீல மென்மணர் புலமை சான்றோர்."

" வெய்யவன் கிழமை தானே மேதக மணிக்கு மாகும்
மையறு திங்க டானே வயிடுரிய மணிக்கு மாகும்
ஐயற விவையொன் பானு மாய்பவ ரகம்பு றம்பு
துய்யரா யறவோ ராய்முன் சொன்னநா ளடைவே யாய்வர்"

## நவமணிகளை பூசிப்பதற்கு தகுந்த மலர்கள்.

மாணிக்கத்திற்குத் தாமரையும், முத்தத்திற்குச் சிறு சண்பகமும், பவழத்திற்குச் செவ்வல்லியும், மரகதத்திற்குக் காந்தளும், புட்பராகத்திற்கு மல்லிகையும், வைரத்திற்கு நறிதழ்த் தாமரையும், நீலத்திற்குக் கருவிளம்பூவும், கோமேதகத்திற்குக் கருங்குவளையும், வைடூரியத்திற்கு வெண்மந்தாரையும் தகுந்த மலர்களாம்.

## நவமணிகளை நிறுத்திப் பூசிக்க வேண்டிய திசைகள்.

| | | |
|---|---|---|
| (வடமேற்கு) நீலம் சனி | (வடக்கு) கோமேதகம் இராகு | (வடகிழக்கு) வைடூரியம் கேது |
| (மேற்கு) வைரம் சுக்கிரன் | மாணிக்கம் சூரியன் | (கிழக்கு) முத்து சந்திரன் |
| புட்பராகம் குரு (தென்மேற்கு) | மரகதம் புதன் (தெற்கு) | பவளம் செவ்வாய் (தென்கிழக்கு) |

இவற்றை,

" தலத்தினைச் சுத்தி செய்து தவசினை யிட்டுத் தூய
நலத்துகில் விரித்துத் தெய்வ மாணிக்க நடுவே வைத்துக்
குலத்தமுத் தாதி யெட்டுங் குணதிசை முதலெண் டிக்கும்
வலப்பட முறையே பானு மண்டல மாக வைத்து."

"அன்புறு பதும ராக மாதியா மரத ணங்கள்
ஒன்பதுங் கதிரோ ளுதி யொன்பது கோளு மேற்றி
முன்புறை கமலப் போது முதலொன்பான் மலருஞ் சாத்தி
இன்புற நினைந்து பூசை யியன் முறை வழாது செய்தல்."

என்ற செய்யுட்களினு லறியலாம்.

**நவமணி சாதி விவரம்.**

ஒன்பது மணிகளும் நான்கு சாதிகளாய்ப் பிரிக்கப்பட்டுள்ளன:

1. பிரமசாதி : இதனுள் வைரமும் முத்துமடங்கும்.

2. அரசாதி : இதனுள் மாணிக்கமும் பவளமுமடங்கும்.

3. வைசியசாதி : இதனுள் புட்பராகமும் கோமேதகமும் வைடூரியமும் அடங்கும்.

4. வேளாளசாதி : இதனுள் நீலமும் மரகதமுமடங்கும்.

இவற்றை,

"முன்னவ ரென்ப கற்றோர் வச்சிர முந்நீர் முத்தம்
மன்னவ ரென்ப துப்பு மணிக்கம் வணிக ரென்ப
மின்னவிர் புருட ராகம் வயிடூரியம் வெயிற்கோ மேதகம்
பின்னவ ரென்ப நீல மரகதம் பெற்ற சாதி."

என்பதனல் அறியலாம்.

பஞ்சரத்தினம் : (1) பத்மராகம், (2) இந்திர நீலம், (3) மரகதம், (4) முத்து, (5) வைரம்—இவ்வைந்தும் மேம்பட்டவை யென்றும், இவைகளே பஞ்சரத்தினமென்றுங் கூறுவர்.

இவற்றை.

நிற்க, ஒரு முதலிற் (பளிங்கில்) றேன்றி வேறுபட்ட ஐந்து வனப்பினையுடைய ஒளிவிடு மணிகள் ஐந்து. அவை: (1) மாணிக்கம், (2) புருடராகம், (3) நீலம், (4) கோமேதகம், (5) வயிடூரியம் என்பனவாம், இதனைச் சிலப்பதிகாரத்தில்

"ஒருமைத் தோற்றத்தை வேறு வனப்பி
னிலங்கு கதிர்விடூஉ நலங்கெழு மணிகள்"

என்று கூறப்பட்டதாலுமறிக.

ஏகாதச மணிகள் : நவமணிகளுடன் (1) படிகம், (2) அஞ்சனக்கல் ஆகிய இவ்விரண்டையுங் கூட்டிய மணிகள் பதினென்றுக்கு ஏகாதச மணிகளென்பது பெயர்.

மூக்குண மணிகள் : இப்பதினெரு மணிகளில் பொருந்தியுள்ள குணத்திற்கேற்ப இவை மூவகைப்படும்.

அவை : (1) சாத்மீக குண மணிகள், (2) இராசதக்குண மணிகள், (3) தமோகுண மணிகள் ஆம்.

சாத்மீக குண மணிகள் : (1) முத்து, (2) பளிங்கு, (3) பச்சை என்பன.

இராசத குண மணிகள் : (1) துகிர், (2) மாணிக்கம், (3) கோமேதகம், (4) புருடராகம், (5) வைடூரியம், (6) வைரம் எனபன

தாமத குண மணி : நீலம் என்பது.

"பார்த்திபர் மதிக்க முத்தம் பளிங்கன்றிப் பச்சை* தானுஞ்
சாத்திகந் துகிர்மா ணிக்கங் கோமேதந் தாமே யன்றி
மாத்திகழ் புருட ராகம் வயிடுரியம் வயிரந் தாமும்
ஏத்திரா சதமா நீலந் தாமத மென்ப ராய்ந்தோர்."

(திருவிளையாடல்.)

# நவமணி.

## கோமேதகம்.

ZIRCON, SARDONYX, ONYX, BERLY, SARD, CINNAMON.

இம்மணி பசுவின் நிணத்தை ஒத்திருத்தலின் இப்பெயர் பெற்றது. (கோ—பசு, மேதகம் (மேதஸ்—நிணம்] இது, குற்றமற்ற ஞாயிற்றின் ஒளியினையுடைய தேன் நிறத்தை உடையது என்பதை, "தீதறு கதிரொளித் தெண்மட் டுருவவும்" என்று சிலப்பதிகாரத்திலும், "கோமேதகம்...... கோமூத்திர வர்ணமாயிருக்கும்" என்று போகர் ஏழாயிரத்திலும் கூறப்பட்டிருத்தலால் அறிக. மற்றும், இதன் நிறமும் குணமும் திருவிளையாடல் புராணத்தில், "............... வலனி ணங்கள் சிதறு மிடைப்படுவன கோமேதக மென்ப" என்றும், "உருக்கு நறுநெய்த்துளி தேன்துளி நல்லான் புண்ணிய நீரொத்துச் சேர்ந்து, செருக்கு பசும் பொன் நிறமும் பெற்று மெலிதாய்த் தூயதாய்த் திண்ணிதாய், இருக்குமதைத் தரிக்கின், இருட் பாவம் போம் பரிசுத்தி எய்தும்" என்றும் கூறப்பட்டுள்ளன.

---

*பச்சை, தாமதமிக்குச் சாத்துவிக ராசதங்கள் குறைந்த தென்பர் முதனூலார்.

வாழை, மா, பலா இம்மூன்று கனிகளையும் எவ்வாறு முப்பழமெனக் கூறுவரோ, அவ்வாறே கோமேதகம், புட்பராகம், வைடூரியம் ஆகிய இம்மூன்றினையும் மும்மணியெனக் கூறுவதொரு வழக்குண்டு.

பொற்றகட்டில் முலைப்பால் விட்டொழுகவிட்டால் காணும் நிறமே கோமேதக நிறமாகும் என்று வெண்காட்டடிகள் புராணம் கூறும். காந்தியில்லாமலும், கனமில்லாமலும், உட்புரைகளுடனும் இருக்கும் கோமேதகம் சிறந்த தன்று என்றும் கூறுவர்.

### கோமேதகத்தின் குணம்.

''வாதபித்த கோபத்தை மாற்றமலக் கட்டறுக்கும்
ஓதுமந் தாக்கினியை ஓட்டுங்காண்—மீதில்
அமறருவி காரம் அகற்றுமொளி செய்யும்
கமறுகின்ற கோமேதகம்.''

*(பொ-ள்.)* கோமேதகம் வாதபித்தம், மலக்கட்டு, அக்கினிமந்தம், சுரத்தால் பிறந்த துர்க்குணம் இவற்றை நீக்குவதன்றி சரீரத்திற்கு ஒளியையும் கொடுக்கும்.

நிற்க, உத்தமக் கோமேதக் மணியினை அணியிலமைத்து அணியின் கீழ்க்காணும் நன்மைகளைப் பயக்கும்.

''களிப்பான உத்தமத்தைத் தரித்தா னானல்
*கனபுத்தி மிகவுங்கோ சரமு மாகும்
விளிப்பான ஆயுள்தான் விருத்தியுண்டாம்
மிடுக்குண்டா மென்னளு மெலிவுமில்லை
தளிப்பான சலந்தன்னைச் சாடிப் போடும்
தசையிலுள தோஷமெலாந் தகர்ந்து போமே.''

குறிப்பு.—*முன்னே நவக்கிரகங்களையும் நவமணிகளையும் ஒப்புமைபடுத்திக் கூறிய இடத்தில், கோமேதகம் இராகுக்கு ஒப்பிடப்பட்டிருத்தலினுண்மை இதனால் விளங்கும்; இராகு ஞானகாரகனானமையின், இம்மணியாலாய அணியை ஒருவனணியப் புத்திகூர்மை உண்டாமென்பது புலனும்.

**சுத்தி :** (1) கோமேதகத்தைக் குதிரை நீரில் மூன்று நாட்கள் ஊற வைத்துப், பிறகு நிலக்குமிழ் இலைச்சாற்றில் ஒரு நாள் ஊறவைத்து எடுக்கச் சுத்தியாம், (2) கோமேதகம் அல்லது மாணிக்கத்தை அப்பிரகத் தகட்டின் மீது வைத்து, சாரரயம் கவுஸ்பான் தீநீர், பன்னீர், காடி இந் நான்கையும் சமபாகம் சேர்த்து, அந் நீரைக் கொண்டு நான்கு சாமம் சுருக்கிட சுத்தியாம் என்று அனுபோக வைத்திய நவநீதம் கூறுகிறது.

**பற்பம் :** சுத்தி செய்த கோமேதகத்தைக் கருஊமத்தைச் சாற்றில் ஒரு நாள் ஊறவைத்து, மறுநாள் குகையிலிட்டு மேலோடு கொண்டு மூடி சீலைமண் செய்து, கொல்லன் உலையில் வைத்து

மேலுங்கீழும் கரியிட்டு ஊதவும். இவ்விதம் மும்முறை ஊதப் பற்பமாகும். இதனை, அரைக்கடுகு முதல் முழுக் கடுகளவு வரைக் கொடுக்கலாம்.

**அனுபானம் :** பசுவின் வெண்ணெய், பசுவின் நெய், தேன் ஆகியவைகள் ஆம்.

**தீரும் பிணிகள் :** இதனால், வாத பித்த தொந்த நோய்கள், சுரத்தில் உண்டாகும் அழலை, பாண்டு, சோபை, ஈரல் வலி, குடல் வாதம் ஆகியன நீங்குவதல்லாமல், பசியும் உருசியும் உண்டாகும். மிகுந்த தண்ணீர்ப்போக்கை நீக்கும்.

**பற்பத்தின் சோதனை :** பற்பத்தை நீரிலிட்டால் அது மிதக்க வேண்டும்.

குறிப்பு.—மூசையிலிட்டு ஊதுவதற்குப் பதில், ஊமத்தைச் சாறுவிட்டு நன்றாயரைத்து, வில்லை தட்டி சில்லிட்டுச் சீலை செய்து, அரைப்பலத்திற்கு (17.5 கிராம்) ஐம்பது எருவில் புடமிடவும். இவ்விதம் பற்பமாகும்வரை செய்யவும்.

மக்கள் உடலுறுப்புகளிலுண்டாம் பிணிகட்கு, பல மிருகங்களின் அவ்வவ்வுறுப்புகளைக் கொண்டு செய்யப்பட்ட மருந்துகளைக் கொடுத்து இக்கால ஆங்கில மருத்துவத்தில், நோயை நீக்குகின்றனர். இவ்வழக்கு யூனானி மருத்துவத்தில் பல்லாண்டுகட்கு முன்னரே இருந்திருக்கின்றது.

நம் சித்த மருத்துவம், பெரும்பான்மையுக் சூதகந்தி தாதுப் பொருட்களைக் கொண்டு செய்வதாதலினால், இங்குக் கூறப்பட்ட கோமேதகத்தாலாய பற்பம், நிண சம்பந்தமான பிணிகட்கும் நிண வன்மைக் குறைவுக்கும் நற்பயனை அளிக்குமென்பதைச் சித்தர்கள் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னரே உணர்ந்திருந்தனர் என்பது தெற்றெனப் புலனாகும். தாதுப் பொருள்களிலும் அவ்(உடலுறுப்புச்) சத்திருப்பதனால் உயிர்க் கொலை இன்றியும், அதிக அளவில், நாள்பட நோய் நீங்குவதன்றி, சிறிய அளவில் விரைவில் நோய் நீங்குகிறது. ஆகவே, இம்முறை மேன்மையுடையதென்பது சொல்லாமலே விளங்கும்.

## நீலமணி

நவமணிகளுள் ஒன்றாகிய நீலமணியின் நிறம் இருளைத் தெளிய வைத்தாலனையது. இதனை "இருடெளித் தனையவும்" என்ற சிலப்பதிகார வடியால் அறியலாம். மற்றும் நீலமணி, நிறத்தினால் நால்வகைச் சாதியாக வழங்கும்.

இவை வெண்மை, செம்மை, பொன்மை, கருமை நிற முடையனவாம். இவை, முறையே அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்னும் நான்கு வகுப்பாய், அந்நான்கு வருணத்தவருக்கே உரியன எனவும் கூறப்படும். இதனை,

''நீலத் தியல்பு நிறுக்குங் காலை
நால்வகை வருணமும் நண்ணும்மா கரமுங்
குணம்பதி னொன்றுங் குறையிரு நான்கு
மணிவோர் செயலு மறிந்தி சினோரே.''

''வெள்ளை சிவப்புப் பச்சை கருமையென்
றெண்ணிய நாற்குலத் திலங்கிய நிறமே.''

என்று சிலப்பதிகாரத்தில் அடியார்க்கு நல்லார் எடுத்துக் காட்டிய உதாரணங்களினால் அறியலாம். ஈதன்றியும், நீலமணியை இந்திர நீலம், மாநிலம் எனவும் கூறுவர். இதனை, உந்தவாழ்வார் வலன்கண்'' எனவும், ''அலை சிதறும்'' எனவும் தொடங்கும் திருவிளையாடல் புராணச் செய்யுட்களாலும் தெரிந்து கொள்ளலாம்.

இது வட நூல்களில் நீர்நீல மென்றும், இந்திரநீலமென்றும் இரு வகையாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இவற்றுள் இந்திர நீலம் சிறந்தது.

நீலத்திற்குப் பதினொரு குணங்கள் உள்ளன என்பதற்கு அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார உரையில் ஒரு மேற்கோள் காட்டி இருக்கின்றார். அதனைக் கீழ்க் காண்க:—

''கோகுலக் கழுத்துக் குவளை சுரும்பர்
ஆகுலக் கண்க ளவிரிச் சாறு
காயா நெய்தல் கனத்தல் பத்தி
பாய்த லெனக்குணம் பதினொன் றாமே.''

நீலமணிக்குக் குற்றம் எட்டு இருப்பதாகவும் கூறப்பட்டுள்ளது. அதனை வந்த வழிக் காண்க.

### நீலத்தின் குணம்.

''குதிவலிமே கம்பித்தம் கூறரிய பாண்டு
மதிமயக்கம் எல்லாம் மருளும்—மதிநுதலே
புத்தியோடு மென்மேலும் போகசுகம் உண்டாகும்
சுத்தநறு நீலத்தாற் சொல்.''

(பொ-ள்). நீலமணி, குதிகால் வலி, மேகம், பித்தம், பாண்டு, புத்தி மயக்கம் முதலிய நோய்களைப் போக்குவதுடன், நுட்பமான அறிவை வளர்த்துப் போக சுகத்தையும் உண்டுபண்ணும்.

## நீலத்தின் சுத்தி.

1. கழுதை மூத்திரத்தில் போட்டு ஊறவைத்து, ஒரு நாள் வெய்யிலில் வைத்துப் பிறகு சுத்தநீரில் கழுவியெடுக்கச் சுத்தியாம்.

2. நெருப்பில் காய்ச்சி, எருக்கம் பாலில் தோய்த்து ஆறியபின், இவ்விதமே மேலும் மேலும் 5 அல்லது 6 முறை செய்யச் சுத்தியாம்.

3. குதிரை மூத்திரத்தில் ஒரு நாள் ஊறவைத்துக் கழுவி, வெய்யிலில் உலர்த்தச் சுத்தியாம்.

## நீல நீறு.

1. சுத்தி செய்த நீலத்தைப் பருத்தியிலைச் சாற்றில் 12 மணி நேரம் ஊறவைத்துப் பிறகு கருமான் உலையிலிட்டூத நீறும்.

2. சுத்தி செய்த நீலத்தைத் தேட்கொடுக்கிலைக் கற்கத்தில் 12 மணி நேரம் சூரியபுடமிட்டுப் பிறகு குகையிலிட்டு மூடி ஊதி, ஆறிய பின்பு எடுக்கப் பற்பமாகும்.

3. அகத்தியர் வைத்திய நவநீதத்தில், கீழ்க்காணும் பற்ப முறையும், அனுபானப் பிணி நீக்கமும் கூறப்பட்டிருக்கின்றன:—

நீலம் வராகனெடை ஒன்றுக்கு (4.2 கிராம்), எருக்கம்பால் பலம் மூன்று (105 கிராம்) கற்றாழைச்சாறு பலம் ஆறு (210 கிராம்) இவ்விரண்டையும் ஒன்றுகூட்டி ஒரு கலயத்திலிட்டு, அதில் நீலத்தைப் போட்டுச் சில்லிட்டு சீலை செய்து எழுபது வரட்டியில் புடமிட பற்பமாம். பற்பமாகாவிடின் மறுபடியும் முன்போலவே புடமிடவும்.

அளவு : $\frac{1}{4}$ (32 மி.கிரா.) முதல் 1 குன்றியெடை (130 மி. கிரா.)

தீரும் நோயும் அனுபானமும் : கீல்வாயு, முடக்குவாயு, பக்ஷவாதம் முதலிய நோய்களுக்கு, மைசாட்சிச் சூரணம் வராகனெடை $\frac{1}{4}$ (1 கிராம்), தேன் வராகனெடை $\frac{1}{4}$ (1 கிராம்) சேர்த்துக் கொடுக்கவும்.

இரண்டாம், மூன்றும், நான்காம் முறைச் சுரங்களுக்கு துளசிச் சாறு வராகனெடை 3 (12.6 கிராம்), மிளகுச் சூரணம் வராகனெடை 1/8 (0.5 கிராம்) சேர்த்துக் கொடுக்கவும்.

சுரக்கட்டிக்கும் (மண்ணீரல்), ஈரல் (கல்லீரல்) வீக்கத்திற்கும் மணித் தக்காளிச்சாறு வராகனெடை மூன்று (12.6 கிராம்) சேர்த்துக் கொடுக்கவும்.

கண்ணொளி விருத்தியாகக் கரிசாலைச்சாறு, தேன் ஒவ்வொன்றும் மும்மூன்று வராகனெடை (12.6 கிராம்) சேர்த்துக் கொடுக்கவும்.

சுரக்கிரகணி, அதிசார நோய் இவைகளுக்கு இலவங்கப்பட்டைச் சூரணம், ஏலக்காய்ச் சூரணம், தேன் இவை மூன்றும் முறையே 1[8, ¼, 1 வராகனெடை, (0.5, 1.0, 4.2 கிராம்) வீதம் சேர்த்துக் கொடுக்கவும்.

இரத்தபித்தம், பெரும்பாடு இவைகட்கு ஆடாதோடை, தேன் ஒவ்வொன்றும் மும்மூன்று வராகனெடை (12.6 கிராம்) வீதம் சேர்த்துக் கொடுக்கவும்.

4. குதிரை மூத்திரத்தில் சுத்தி செய்த நீலத்தை ஒரு கலயத்தில் போட்டு அதில் ஓரிலைத்தாமரைச் சாறுவிட்டு, மூன்றுமணி நேரம் ஊறவிட்டுப் பின் உலையிலிட்டு 1½ மணி நேரம் ஊதியெடுக்கப் பற்பமாம்.

## பவழம்.

## CORAL.

இது, வித்துருமம், துகிர், துப்பு, பிரவாளம், வாரிதி தண்டு, செந்தண்டு மாலை என்ற வேறு பெயர்களினாலும் வழங்கப்படும். கடல்படு திரவியங்கள் ஐந்தனுள் இஃது ஒன்றாம். இதனை, ''ஓர்க் கோலை சங்கமொளிர் பவழம்வெண் முத்த நீர்ப்படு முப்பினோடைந்து'' என்ற அடியால் அறியலாம்.

வலனுடைய சதை கடலில் வீழ்ந்து நற்பவழமாயிற்று என்பதும் தேவேந்திரனின் வஜ்ஜிராயுதத்தினால் மலையின் சிறகுகள் கொய்யப்பட்ட காலத்துக் குருதி கடலில் போய் வீழ்ந்து கொடிப்பவழமாயிற்று என்பதும் புராண வரலாறு.

சுண்ணாம்புப் பொருளும் கரிப் பொருளும் சேர்ந்து அமைந்தது பவளம் கடல் தரையில் படிந்து வாழும் உயிரினங்களில், பவளப் பூச்சிகளும் ஒரு வகை, இப் பூச்சிகளின் கழிவுப் பொருள்களே நாம் அணிந்து அழகு காணும் பவள மணிகளாம். இந்தியாவில் மேற்கே இருக்கும் லட்சத் தீவுகள், மாலத் தீவுகளிலும் இராமேஸ்வரம் முதலிய இடங்களில் கிடைக்கின்றது.

நிற்க, பவழ மணிக்குக் குணங்கள் ஆறு என்றும், குற்றங்கள் ஆறு என்றும் கூறப்பட்டுள்ளன. சிந்தூரம், செம்மணி, செங்காய் முசு முசுக்கைக்கனி, வீரைக்கனி, தூதுளைக்கனி ஆறும் குணங்கள் பிளவு, முடக்கு, துளை, கருப்பு, திருகல், வெளிரல் இவை ஆறும் குற்றங்கள். இதனை, திருவெண்காட்டடிகள் புராணத்தில் ''பவள நற்குணம்''என்னும் முதற் குறிப்பையுடைய விருத்தத்

திறல் அறியலாம். குணம் நான்கு, குற்றம் மூன்று என்று கூறுவதை ''அவ்வழியிற் படுபவன'' என்ற அடியையுடைய திருவிளையாடல் புராணத்தார் செய்யுளினுல் அறியலாம். முருக்கம்பூ, பசுங்கிளி மூக்கு, செவ்வரத்த மலர், கொவ்வைக்கனி என்னும் இந்நான்கும் குணங்கள். திருகிக் கோணுதல், புழு வரித்தல், முகமொடிதலாகிய இம்மூன்றும் குற்றங்கள், மற்றும், குணமாகிய நான்கையும் பெண் மக்களே அணிய வேண்டுமென்பது திருவிளையாடல் கருத்து. சிலப்பதிகாரத்தில், கொடிப்பவழ வருக்கம் கருப்பத்தே துளைக்கப்பட்டனவும் திருக்குமுறுக்குண்டு எழுந்தனவும் ஆகிய இக்குற்றங்கள் நீங்கியதாய் செம்மைமிக்குச் செழிப்புடன் வளர்ந்ததாய் இருக்க வேண்டுமென்று கூறப்பட்டுள்ளதைக் கீழ்க்காணும் அடிகளினுல் உணரலாம்.

''கருப்பத் துளையவுங் கல்லிடை முடங்கலுந்
திருக்கு நீங்கிய செங்கொடி வல்லியும்.''

நிற்க, பவழம் சத்தி பீசமாகிய கந்தகத்திற்கும், முத்து சிவ பீசமாகிய இரசத்திற்கும் நிகரென்றும், நவரத்தினத்தில் உயர்வு பெற்ற பவழமும் முத்தும் பார்வதியைப் போலும் பரமசிவனைப் போலும் பேர்பெற்று விளங்கும் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனை,

''தேவி யுரத்தைநேர் செப்பலாகுந் துப்பை
யாவி யிரதநே ராகு மவுத்திகந்
தேவி யரன் பீசஞ் செப்பு மிவைகளே
தேவர் முதலானேர் தேர்வ ரிவைகளே.''

(திருமூலர்)

''ஆசங்கை யேதுக்கடி—*அகப்பாய்
அம்பிகை கந்தி துப்பே
பேசுவ தேதுக்கடி—யகப்பாய்
பிஞ்ஞகன் சூத முத்தே
நேசமி தாகுமடி—யகப்பாய்
நீதிசொல் வாக டர்முன்
கூசுவ தேதுக்கடி—யகப்பாய்
கூறுவர் பேத மீதே.''

(அகப்பேய்ச் சித்தர்)

என்னும் இம் மேற் கோள்களால் உணர்க.

**பவழத்தின் குணம்:** சுரத்திலுண்டாம் தோடம், கபம், சன்னிபாதசுரம், இருமல், அரோசகம்; விட சந்துக்களினுல் உண்டாம் விடம், தாது நட்டம், தாகம், நாவிலுண்டாம் சுரசுரப்பு இவைகள்

---

*குறிப்பு.—அகத்தைப் பேயர்க உருவகப்படுத்திப் பாடியதால் அகப்பால் என்பதை அகப்பேய் என்றும் பாடியவரை ''அகப்பேய்ச்'' சித்தரென்றும் கூற வேண்டும்.

நீங்கும். சரீரத்திற்குக் காந்தி உண்டாகும். இவற்றை கீழ்க் காணும் செய்யுளால் அறிக:

"சுரதோடம் ஐயமுத் தோடசுரங் காசம்
அருசிகீ டத்தாலாம் ஆலம்—பெருவிந்து
நட்டம் அதிதாகம் நாவறட்சி போமொளியுங்
கிட்டும் பவழத்தாற் கேள்."

அன்றியும் பவழத்தைச் சேவித்தாலே க்ஷயம், பித்தம், இரத்த காசம் நேத்திரரோகம் நீங்குமென்று பெரியோர் கூறுவர்.

"நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு."

எனக் குறள் கூறுகிறது. அங்ஙனமே உற்ற நண்பனைப்போல, இது சேனாதிபதியாகிய சேந்துமம் அதிகப்பட்ட காலத்து, அதைக் குறைக்கும் என்பதை, "பிரவாள பற்பமது பிரதானி நட்பாம்" என்ற தேரன் வாக்காலறிக. மற்றும் பவழத்திற்கு நரம்புத் தளர்ச்சியை நீக்கும் வன்மையும், சிறுநீரைப் பெருக்கும் தன்மையும், மலமிளக்கி, துவர்ப்பி ஆகிய செய்கைகளும் உண்டென்று கூறுவர்.

"பவழமப்பா மலம்போனு னன்மை யுண்டாம்
பற்பமுத லாகுமதை நன்ரு யாடும்."

என்றும்,

"துகிரையே யழுக்கொ ழித்துத் துவிதமும் பண்ண லாமேல்
வகிர்வடுவனைய வுண்கண் வணிதையே யினிது கேண்மோ
உகிர்முனி யிரத்த காச முப்புசம் பல்லை சோபை
நகிர்தமா நெய்நீர் பின்னர் நவில்வன வென்று முன்னே."

என்றும் கூறுவதால், குணமுள்ள பவழங்களை எடுத்து, இனிக் கூறப்படும் முறைகள் யாதானும் ஒன்றின்படி சுத்தி செய்து, பிறகு மருந்துகளாகச் செய்ய வேண்டுமென உணரவும்.

பவழசுத்தி : ஒரு பலம் (35 கிராம்) பவழத்திற்கு ஆறு பலம் (210 கிராம்) பேரீச்சங்கள்ளை காலையில் விட்டு மாலைவரை வெய்யிலில் உலர்த்தி, மறுநாள் காலையிலும் புதிதாய் மேற்படி கள்ளை விட்டு வெய்யிலில் வைக்கவும். இவ்விதம் ஐந்துமுறை செய்து, நீர்விட்டுக் கழுவி எடுக்கச் சுத்தியாம். இதனைப் பற்பம் முதலிய மருந்தாகச் செய்து வழங்கலாம்.

குறிப்பு.—தேரன் யமக வெண்பா உரையாசிரியர் இங்ஙனம் கூறியிருப்பினும், இவ்வாறு செய்யின் பவழம் யாவும் கரைந்து விடும். ஆகையால் சம அளவு பேரீச்சங்கள் ஊற்றி ஊறவைத்து மறுநாள் கழுவி எடுக்கச் சுத்தியாம்.

ஒருநாள் முழுவதும் பழச்சாற்றில் ஊறவைத்து, மறுநாள் வெந்நீர் விட்டுக்கழுவி யெடுக்கச் சுத்தியாம்.

**பவழ பற்பம் செய்யும் முறையும் அளவும் :** ஒரு பலம் (35 கிராம்) சுத்தி செய்த பவழத்தை எடுத்துக் கீழுள்ள பட்டியில் குறித்த முறைப்படி அரைத்து உலர்த்திப் புடமிடவும். அரைக்கும் ஒவ்வொரு நாளும் குறித்த எடை புதிய சாற்றை உபயோகிக்கவும். பில்லையை உலர்த்த, வெய்யிலில் வைப்பது போலப் பனியிலும் வைப்பது நல்லது. முழு பற்பமான பிறகும் பில்லையைப் பனியில் வைக்கப் பூத்துவிடும். அதை அரைத்து உபயோகித்து கொள்ளவும். இது தேரன் யமக முறையாம்.

| சாற்றின் பெயர். | அளவு பலம். | அரைப்பு நாள். | வில்லை உலர்த்தும் நாள். | கவசம் உலர்த்தும் நாள். | புடம் வரட்டி. |
|---|---|---|---|---|---|
| திருவத்தியிலைச்சாறு | 6 | 6 | 5 | 1 | 30 |
| கொன்றைச் சமூலச் சாறு | 5 | 5 | 4 | 1 | 25 |
| வேங்கைச் சாமூலச் சாறு | 6 | 6 | 5 | 1 | 30 |
| வெள்ளருக்கன்சமூலச்சாறு | 5 | 5 | 4 | 1 | 25 |

**அளவு :** மிளகில் ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து கூறுகளாம். இவை முறையே உத்தமம், மத்திமம், அதமம், துணிபு, அனுமத்தாகும்.

**வேறு முறைகள் :** (1) பவழத்தை எருக்கம் பாலில் மூன்று நாள் ஊறவைத்து, அதை அகலுக்குள் வைத்துக் கவசமிட்டு, வெய்யிலில் உலர்த்திப் புடமிடவும்.

(2) பவழத்தை, இலந்தை இலைக் கற்கத்துள் வைத்து, சீலை முதலியன செய்து புடமிடப் பற்பமாம். பசும்பால் தெளித்து வெய்யிலில் உலர்த்திக் கொள்ளவும்.

(3) இலந்தையை நீக்கித் தைவேளையை மேற்கூறியபடி உபயோகிக்கவும்.

(4) மேற்படி கீழாநெல்லியினால் பற்பஞ் செய்யவும்.

(5) பவழத்தை, முயல் இரத்தம் விட்டாட்டி, வில்லை தட்டி உலர்த்திக் கவசமிட்டுக் குக்கிட புடமிடப் பற்பமாம்.

(6) பவழத்தையும் கருப்பூரச் சிலாசத்தையும் சரியெடை கூட்டி, வஜ்ஜிரவல்லிச் சாற்றால் நான்கு சாமங்களாட்டி, மேற்படி கஜபுடமிட்டு, மறுபடியும் அங்ஙனமே புளியாரைச் சாற்றாலும் செய்யின் பற்பமாம்.

(7) பவழம் 24 கிராம், தேன் 120 கிராம் இவ்விரண்டையும் ஓர் புதிய கலயத்திலிட்டு வாயை ஓட்டால் மூடி சந்து இல்லாமல்

பொருத்தி சீலமண் செய்து ஒரு முழம் நீளம் ஒரு முழம் அகலம் ஒரு முழம் உயரத்தில் புடம் போட்டு எரிக்க பற்ப மாகும்.

குறிப்பு.—சுத்தி செய்த பொருள்களையே கையாளுக. மேற் சொல்லியவாறு வில்லையை இரவிலும் பனியிலும் வைத்தல் நல்லது. பற்பத்தின் அளவும் மேற்கூறியபடியே கொள்க.

பவழச்செந்தூரம் செய்முறையும் அளவும் : பவழத்தைத் தனியே செந்தூரிப்பது கடினமாம். ஆயினும், தேரன் யமகத்தில் கூறியிருப்பதை ஈங்குச் சொல்வாம். ஒரு பலம் (35 கிராம்) பவழத்தைப் பனஞ்சாறு, பருத்திச்சாறு, ஓரிதழ்த் தாமரைச் சாறு, உந்தாமணிச்சாறு, கமுகஞ்சாறு, கடம்பின்சாறு இவைகள் ஒவ்வொன்றிலும் தனித்தனியே அரைத்துப் புடமிடவும். பற்பத் திற்குச் சொன்ன விதிகளை இதற்கு அனுசரிக்கவும். அளவும் அங்ஙனமே.

பவழ பற்பத்தின் அனுபானமும் பிணி நீக்கமும் : யமகப்படி செய்த பற்பத்தை, அளவாகக் கீழ்க்காணும் அனுபானங்களில் கொடுத்துவர, அவைகளின் நேரே குறித்துள்ள நோய்கள் தீரும்.

மாதுளை விதையை, வேளைக்குக் கால் பலமாக (8.75 கிராம்) மூன்று பலம் (105 கிராம்) நீரில் ஊறவைத்தரைத்து, அரைக்கால் பலம் (4.4 கிராம்) பழைய வெல்லமிட்டுக் குழைத்து, அதில் பசும் பால் மூன்று பலம் (105 மி.லி.) விட்டுக் கலந்து, தினம் இருவேளை வீதம், ஒரு மண்டலம் அருந்த, வாதமேக உஷ்ணத்தினாலுண்டா கும் விந்து நட்டம் நீங்கி வீரிய விருத்தி உண்டாம்.

எண்ணெய், கடுகு, புளி, பெண்போகம் நீக்கிப் பத்தியம் காக்க வும். பால் பானம் செய்து, அத்திப் பழத்தையும், மாம்பழத்தை யும் ஆகாரமாகக் கொள்ளப் பிணி நீங்கிப் பலம் வரும்.

முருங்கை வித்தை ஊறவைத்தரைத்து, அரைக்கால் பலம் (4.4 கிராம்) சர்க்கரை இட்டுக் குழைத்து, அதில் பசுவின் நெய்விட்டுக் கலந்து, மேற்படி பத்தியத்துடன் அருந்த, பித்தமேக உஷ்ணத் தினாலுண்டாகும் விந்து நட்டம் நீங்கிய வீரிய விருத்தி உண்டாம்.

வெந்நீர் பானம் செய்து, பலாப் பழத்தையும் பனம்பழத்தை யும் உட்கொண்டுவர, பிணிநீங்கிப் பலமுண்டாகும்.

புல்லாஞ்சி வித்தை ஊறவைத்து அரைத்து, கற்கண்டிட்டுக் குழைத்து, அதில் பசுவின் வெண்ணெய் இட்டுக் கலந்து மேற்படி முறையில் அருந்த, கபமேக உஷ்ணத்தினாலுண்டாம் விந்து நட் டம் நீங்கி வீரிய விருத்தி உண்டாம். மற்றும் கிச்சிலிப் பழத் தையும் வாழைப்பழத்தையும் நினைத்தபோதெல்லாம் அருந்தி வர சவுக்கியமாம். இதனைக் கீழ்க்காணும் செய்யுட்களினால் அறிக.

விரைமா தளைதவைபூல் வெல்லமயிர் கண்டு
விரைமா தளைசுதைநெய் வெண்ணெய்—விரைமா
வருக்கை பனைநரந்தை வாழையுணு வுண்ட
வருக்கை பனைநரந்தை யால்.''

(தேரன் யமகவெண்பா)

''வாத முதலனல் வந்திடுமே கத்தாலச்
சேத மிகுவிந்து சீர்பெற வேண்டினோர்
மாதரை யாதி வரிசை வித் துண்பவர்
தாது மிகுந்து தழைப்பர்முன் போலவே.''

(திருமூலர் திருமந்திரம்.)

| அனுபானம். | தீரும் நோய்கள். |
|---|---|
| நெய் .. .. .. | கயரோகத்தைச் சேர்ந்த உப்புச வாந்தி. |
| அனங்கள் .. .. .. | மேகச்கூட்டினல் வரும் சீழ். |
| வெண்ணெய் .. .. | வாதபித்த சுரங்கள் |
| பசும்பால் .. .. | கபசுரம். |
| பசுந்தயிர் .. .. | கடுப்பு வாதம். |
| பசுமோர் .. .. .. | நடுக்குவாதம். |
| நீர் .. .. .. | பிடிப்பு வாதம். |
| **துளசிச்சாறு** .. .. | கல்லீரல் வீக்கம் |
| இளநீர் .. .. .. | பித்தகாசம். |
| பனை நுங்கு .. .. | கபகாசம். |
| நெல்லிக்காய்ச்சாறு .. .. | பித்தமேகத்தினவு வெட்டையூறல். |
| கொத்தமல்லிச்சாறு .. | கபமேகப்பிணி, பருக்கட்டி, இராசச் சிலந்தி. |
| சந்தனக்குழம்பு .. .. | பித்தத்தைச் சேர்ந்த சரீரத்தைக் கடுக்கச் செய்யும் வாத ரோகம், பெரு வயிற்று வலி. |
| வெல்லம் .. .. .. | கபத்தைச் சேர்ந்துவரு வாதப்பிணி. |

| | |
|---|---|
| தேன் .. .. .. | பித்தத்தைச் சேர்ந்த நடுக்கு வாதம், பெரும்பாடு, யோனிப் புற்று. |
| வில்வ இலைச்சாறு .. .. | கபத்தைப்பற்றிய நடுக்கு வாதம். |
| மகிழம்பூச்சாறு .. .. | பித்தவாத பந்தம், மாரடைப்பு. |
| மூங்கில் சமூலச்சாறு .. | கபப்பிணி சிரோபாரம். |
| குளநெல்லரிசிமா .. .. | பித்தவல்லை, வாதானலம். |
| புன்னைச் சமூலச்சாறு .. | கபத்தைச் சேர்ந்த மாவயிறு வலி, பல்லடிநோய். |
| சுரபுன்னைச்சாறு .. .. | மேகானலப்பிணி. |
| வெந்நீர் .. .. .. | மாரகசன்னி, பட்சவாயு, பிரமை. |

இதனையே திருமூலநாயனர் பின்வருமாறு கூறினர்:

''பிரவாளச் சுன்னத்திற் பேசுமனு பானந்
திரமான நெய்முதல்தீ நீர்க்கடை யாகத்
தரமாகக் கொள்ளவே சாராக் கயமுத
லரமாகக் கொண்டதோர் வாளென லாகுமே.''

எருக்கம் பாலால் செய்த பவழபற்பத்தை, அரிசியளவு (65 மி. கி.ரா.) நெய்யில் தினம் இருவேளையாய் உண்டுவந்தால், மேகச்சூடு, சுரங்கை இருமல் முதலியன நீங்கும்.

கீழா நெல்லியால் செய்ததை, மேற்கூறியபடி உண்ண, இருமல் வயிற்றுளைச்சலும், நிசிநீரிலுண்ண நீர்க்கடுப்பு முதலியனவும் தீரும்.

முயல் இரத்தத்தால் செய்ததை, நெய் அல்லது பாலில் மேற் கூறியபடி உண்ண இருமல் நீங்கும். தூதுளைச் சாற்றில் உண்ண க்ஷயம் நீங்கும்.

கருப்பூரச் சிலாசத்து சேர்த்துச் செய்ததை, முன்போல வெண் ணெயில் உண்ண எலும்புருக்கி, மதுமேகம், அஸ்திமேகம், நீர்க் கடுப்பு நீங்கும். தேனில் கொள்ள மேகவூறல் போம்.

இலந்தையில் போட்ட பற்பத்தை, சுட்ட எலுமிச்சம் பழச் சாற்றில் மேற்கூறியபடி உண்ண சீதபேதி நிற்கும். நெய்யில் உண்ண வறட்டிருமல் நீங்கும்.

பவழபற்பத்தை சிறுபுள்ளடிச்சாறு, சிறுசெருப்படைசாறு, கன் இம் மூன்றிலேயும் அனுபானித்துக் கொடுக்க மேகப் பிணிக் கூட் டங்கள் நீங்கும். இதைக் கீழ்க்காணும் செய்யுளால் உணர்க:

''சொறிமிகுந்த மேகநோய் தொகையனைத்து மேகவே
சிறியபட்சி பாதமே சிறுசெருப்பு பாதமே
வெறிகொடுக்கும் நீரினல் வெகுசிதப்ர வாளமே
திறமளிக்க வேயவை செகமிசைக்க மேவுமே.''

பற்பத்தை உண்ணும் காலம் : இப்பற்பத்தினைக் கொள்ளும் காலம், கார்த்திகை, மார்கழி, பங்குனி நீங்கிய மற்றைய ஒன்பது மாதங்களுமாகும். தேரன் யமக வெண்பாவில் பவழபற்பத் தைக் கூறும் செய்யுளில் ''கணியருக்கையா யிருக்கக் கல்'', என்னும் கடையடி தேவேந்திர போகத்தில் இருக்க விரும்பு என்று தொனிப்பதால், இப்பற்பத்தினைப் புசிக்குங்கால் தங்குமிடம், யாவரும் விரும்பத்தக்க ஆரோக்கிய நிலையைப் பெறுவதற்கு ஏற்ற நிலமான மருதமேயன்றி வேறன்று என்பது பெற்ரும். இதனை,

''வித்துருமத் திருநீற்றை யுரைக்குங் காலை
மேலான பண்டிதரே யறிவா ராரோ
பத்தரைமாற் றுச்சுவணம் வேறென் றல்ல
பகரளவை மிளகிலேந்து பால தாகும்.
வித்தமெனு வாயுணத்தேள் வில்மீ ஞகா
மேலிருக்கு மிடப்பணேயே விலக்கா மற்றை

யத்தருரைத் தநுநந்திக் காயுள் வேத
மாகமமிப் படியாமெய் யமைவு தானே''.

என்ற மாபுராணத்திஞலும்,

''பவளத் தடலேக்குப் பாரினி கரில்லே
கவளக் களிற்றின கறியஞ் சளவை
தவளத்தை யுண்ணத் தனுதெண் மீஞகா
சுவளப் பணேயே சுகமாம் வசிக்கவே''.

என்ற திருமூலர் திருமந்திரத் திரட்டிஞலு மறிக.

பற்பத்தின் மகிமை: இது விகற்பத்துடன் பாடக்கூடிய தொனியை நீக்கிச் சுத்த சுரங்களேயும், நரை, திரை, மூப்புச் சாக்காடாகிய குற்றங்களே நீக்கிக காயசித்தியையும் தேக வன் மையையும் கொடுக்குமென்பதை,

''சிந்தூரத்துப் பாடலே சேர்காய வண்மையுண்டாம்
சிந்தூரத்துப் பாடலே செய்யுமுன்னே.''

என்பதால் அறிக.

இதன் பத்தியம் : இதனை உண்ணுங்காலத்துப் புகையிலையையும் பெண் போகத்தையும் தவிர்க்க வேண்டுவதே பத்தியத்தின் இயல்பு. இதை, ''பிரமபத்திரமும் இளம்பிடியும் வர்சிதமே'' என்னும் தேரன் வாக்கால் அறிக.

**பவழச் செந்தூரத்தின் துணைமருந்தும் தீரும் நோய்களும்.**

| அனுபானம். | தீரும் நோய்கள். |
|---|---|
| வெந்நீர் .. .. .. | இரத்த மூலச்சூடு. |
| சர்க்கரை .. .. .. | பவுத்திரம். |
| நெய் .. .. .. | தலையிலும் கையிலுமுண்டாகும் எரிச்சல். |
| வெங்காயச்சாறு .. | சத்தி குன்மம். |
| பானகம் .. .. .. | நடுக்கல். |
| தண்ணீர் .. .. .. | வாயிலைப்பு. |
| அதிமதுரம் .. .. | சூதக சந்தி. |
| துவரையிலைச்சாறு .. .. | வயிற்று வலி. |
| மாவிலங்கப்பட்டைச்சாறு .. | கிராணி. |

---

## புட்பராகம்.

## TOPAZ, YELLOW TOPAZ.

பூனைக்கண் போன்ற—பொன்னை மாசறத் தேய்த்தாலொத்த—தோற்றத்தையுடைய மணி புருடராகம் என்று கூறப்பட்டுள்ளது. இதனை, ''பூசை யுருவிற் பொலந்தெளித் தனையவும்'' என்ற சிலப்பதிகார அடியால் உணரலாம். இஃது இருவகைப் படுமென்றும், இவற்றுள் பொன்னிறத்தை உடையது உத்தம மென்றும், பளிங்கு நிறத்தை உடையது மத்திமம் என்றும் போகர் நூலில் கூறப்பட்டுள்ளது.

பிரேசில் நாட்டில் கிடைக்கும் புட்பராகம் சிறந்ததாக சொல்லப்படுகின்றது.

## பொதுக் குணம்.

''வீரிய விர்த்தியது மேன்மேலு முண்டாகுங்
கூறியநற் புத்தியுண்டாங் கூறுங்கால்—பாரில்
பிணிவருக்கம் ஏகும் பெரும்புட்ப ராக
மணியாற் புகழுமுண்டாம் வாழ்த்து.''

(பொ-ள்). புட்பராகத்தினுல் சுக்கில விருத்தியும், நுட்பமான அறிவும் கீர்த்தியும் உண்டாகும், மேக முதலிய நோய்க் கூட்டங் களும் நீங்கும் என்க.

உத்தம புட்பராக மணியினை அணியிலமைத்து அணியின், அறிவும் வியாழன் கிருபையும் உண்டாகு மென்ப.

புட்பராகத்தை அணிந்துகொண்டிருப்பவர்களுக்கு உடலில் நோய் வருவதற்குமுன், இந்த மணி சற்று நிறம் மாறும் தன்மை யுடையது என்றும், அதனுல், நோய் வருவதை முன்னரே தெரிந்து தடுத்துக் கொள்ள இது ஒரு வாய்ப்பாக இருக்கும்.

### சுத்தி.

புட்பராகத்தை வெள்ளாட்டு மூத்திரத்திலிட்டு, இரண்டு சாமம் வெய்யிலில் வைத்து எடுத்து, வெந்நீரில் கழுவி எடுக்கச் சுத்தியாம்.

### பற்பம்.

சுத்தி செய்த புட்பராகத்திற்கு, வழுதலங்காய்ச்சாறு விட்டு, இரு சாமம் வெய்யிலில் வைத்துக் குகையிலிட்டுச் சீலை மண் செய்து உலர்த்தி, கொல்லன் உலையில் இட்டு மூசையழுக ஊதி, ஆறவிட்டுப் பிரித்துப் பார்க்கப் பற்பமாம்.

இதனைத் தக்க அளவில் தகுந்த அனுபானத்தில் கொள்ள, சுரம், விக்கல், வாதம், கபம், தினவு, வாந்தி, குட்டம், பசியின்மை நீங்கும். உடல் வண்டின் நிறத்தை அடையும்.

### (வேறு)

புடபராகத்தைச் சிறுபீளைச்சாற்றிலிட்டு இரு சாமம் வெய்யி லில் வைத்து எடுத்து, மூசையிலிட்டு ஊத நீறும்.

### (வேறு)

எருக்கம்பால், குமரிச்சாறு இரண்டையும் தனித்தனி இரண்டு பலம் (70 கிராம்) எடுத்துக் குழைத்து, அதில் புட்பராகம் எட்டுக குன்றிமணி (1 கிராம்) எடையைப் புதைத்துக் காயவைத்துக் காவி மண்ணினுல் சீலை மூன்று செய்துலர்த்தி, எழுபது வரட்டியில் ஒன்று அல்லது இரண்டு புடமிட்டெடுக்கப் பற்பமாம்.

அளவு : 1 அரிசியெடை (65 மி. கிராம்.)

துணைமருந்தும் தீரும் நோயும்.—கவுஸ்பான் ஒரு வராக னெடையை (4.2 கிராம்) மூன்று பலம் (105 கிராம்) நீரிலிட்டு நான்கிலொன்றாகக் காய்ச்சி வடிகட்டிய குடிநீர் ஆறு வராக னெடை (25.2 கிராம்) எடுத்து மூன்று வராகனெடை (12.6 கிராம்) தேன் கலந்து, அதில் பற்பத்தை வைத்துக் கொடுக்க சுரம், பிரமேகம், இருமல், புண் முதலியன நீங்கும். இஃது இருதயத்தைப் (தமரகம்) பலப்படுத்தும்.

முள்ளங்கிக் கிழங்குச்சாறு, தேன் இவை இரண்டும் தனித் தனி ஆறு வராகனெடை (25.2 கிராம்) சேர்த்த கலவையில் பற் பத்தைக் கொடுக்க நீரருகல் நீங்கும்.

அரசங்கொழுந்துச் சாறு, தேன் இவை இரண்டையும் முன் போலவே கலந்து, பற்பத்தை இட்டுக் கொடுக்க, இருமல், கண் நோய், சங்கிரக கிரகணி, உடல் எரிச்சல் நீங்கும். வீரிய விருத் தியும் பசியும் உண்டாகும்.

துத்தியிலைச்சாறு, தேன் இவற்றை மூன்று மூன்று வராக னெடை (12.6 கிராம்) வீதம் சேர்த்துப் பற்பத்தை வைத்துக் கொடுக்க, ஐய மூலமும், பாண்டு நோயும் தீரும்.

நான்கு குன்றியளவு (520 மி. கிராம்). கருஞ்சீரகச் சூர ணத்தை மூன்று வரகனெடைத் (12.6 கிராம்) தேனில் கலந்து, அதில் பற்பத்தை வைத்து ஆள, பித்த நோய்களும் கபநோய் களும் நீங்கும்.

வெண்டாமரைப் பூச்சாறு, தேன் இவற்றைத் தனித்தனி மூன்று வராகனெடை (12.6 கிராம்) எடுத்துப் பற்பத்தைக் கொடுக்க உதரம், மூலம், பௌத்திரம், வீக்கம், வாயு முதலியன தீரும் என்ப.

## மரகதம்.

## EMERALD

இம்மணி, பச்சை, கருடப்பச்சை, மரகதப் பச்சை, கௌஸ் துவம் என்ற வேறு பெயர்களினாலும் வழங்கப்படும். மரகதத் தைப் பற்றிக் கூறப்படுகின்ற பலவகைத் தோற்றங்களு ளொன்றை, ''வலன் வயிற்றிற் பித்தத்தை க்கொத்தி விழுங்கிய கருடன், நகைத்தலா னுமிழ, அஃது இமவான் முதலிய பன்மலை களிலும் ஊறிப் பிறத்தலிற் கருடோற்காரமென்று பெயர் பெற்ற மரகதச் சாதி'' என்று அடியார்க்கு நல்லார் குறிப்பிடு கின்றார். இதனைக் கீழ்க்காணும் திருவிளையாடற் புராணச் செய்யுளும் வலியுறுத்துகிறது.

"மரகதத் தோற்றங் கேண்மின் வலாசுரன் பித்தந் தன்னை
இரைதமக் காகங் கௌவிப் பறந்தபுள் ளீர்ந்தண் டில்லித்
தரைதனிற் சிதற வீழ்ந்து தங்கிய தோற்ற மாகும்.
உரைதரு தோற்ற மின்னும் வேறுவே றுள்ள கேண்மின்."

இதற்குக் குணங்கள் எட்டும் குற்றங்கள் ஏழுமாம்.

குணங்கள்.—நெய்தல், கிளி, மயில் இவற்றின் கழுத்து நிறம், இளம் பயிரின் நிறம் முதலியனவும், பொன்வண்டின் வயிறு, மின்னல், பொன்மை, பசுத்தல், பத்திபாய்தல் என்னும் நிறங் களும் உள என்பர்.

நெய்ப்பு, வெண்மை, கல்லேறு, மண்ணேறு, தராசம் காற்றேறு கருகல், இவை குற்றங்களாம். இதை வெண்காட்டடி கள் புராணத்தில் "பச்சையின் குணம்" என்னும் விருத்தத்தா லறிக.

இன்னும், குணம் எட்டு, குற்றம் ஏழு என்பதைச் சிலப்பதி காரத்தில் அடியார்க்கு நல்லார் எடுத்துக் காட்டிய,

"நெய்தல் கிளிமயிற்கழுத் தொத்தல்பைம் பயிரிற்
பசுத்தல் பொன்மை தன்னுடன் பசுத்தல்
பத்தி பாய்தல் பொன்வண் டின்வாயி
றொத்துத் தெளிதலொ டெட்டுங் குணமே."

என்னும் சூத்திரத்தானும்,

"கருகுதல் வெள்ளை கன்மணல் கீற்றுப்
பொரிவு தராச மிறுகுதன் மரகதத்
தெண்ணிய குற்ற மிவையென மொழிப."

என்னுஞ் சூத்திரத்தானு மறிக.

இவற்றுள் கீற்று, தார், கருகுதல் இம்மூன்றும் மிக்க குற்ற மாம். இதனை,

"ஏகையு மாலையு மிருளொடு துறந்த
பாசார் மேனிப் பசுங்கதி ரொளியவும்."

என்னும் சிலப்பதிகார அடியால் உணர்க.

இவைகளன்றியும், மரகத மணிகட்குக் காடம், சுப்பிரம், காளம் என்று மூன்று குணங்கள் உளவெனவும், அவற்றுள் முதலாவதாகிய அறுகினிதழ் போன்ற காடம் என்பது சகுணம் சதோடம் என இருவகைப்படும் எனவும் கூறுவர்.

சகுனம் ஆறு.

காடம்—புல்லைப்போன்ற பசிய நிறம்
உல்லசிதம்—மென்மைத் தன்மை
பேசலம்—செந்நெற் பயிரிற்றோன்றியமுத்தை யொத்த பசிய நிறம்.
பித்தகம்—பச்சைக்கிளியின் சிறகை யொத்த பசிய நிறம்
முத்தம்—துளசிப்பூ நிறம்
பிதுகம்—தாமரையிலையின் நிறம்

ஆகிய இவ்வாறும் குணங்கள்.

சதோடம் ஐந்து.

தோடலே சாஞ்சிதம்—எலுமிச்சை இலை நிறம்
துட்டம்—அலரி இலையின் நிறமும் கருங்குவளை இதழின் நிறமுமாகும்.

தோடமூர்ச்சிதம்—புல்லின் நிறம்
தோடலேசம்—தாமரையிலையின் நிறம்
மந்த தோடம்—மயிலிறகின் நிறம்.

இவ்வைந்தும் குற்றங்கள்.

இவ்வைந்தையும் நீக்கி, மேற்சொல்லிய ஆறையுங் கொள்ள வேண்டும். "காடமே சுப்பிரமே" என்றும், "புல்லரிய பிதுக மென" என்றும், "தோடலே சாஞ்சிதமே" என்றும், "மந்த தோடங் கலபம்" என்றும் வரும் விடயங்களைத் திருவிளையாடல் திருவிருத்தங்களா லறிக.

பண்டை நாள்தொட்டு வட இந்தியாவில் உள்ள ஜெய்ப்பூர் சமஸ்தானம், சிறந்த பச்சைக் கற்களுக்கு பெயர் பெற்றதாகக் கூறப்படுகின்றது. இக்காலத்திலும் இரத்தின வியாபாரிகள் ஜெய்ப்பூர் பச்சைக்கு அதிக விலை கூறுவதாகவும் தெரிகின்றது. பச்சையின் உண்மையான குணத்தை சோதனை செய்வதற்கு, அதைப் பாலுள்ள பாத்திரத்தில் இட்டுச் சூரிய வெளிச்சத்தில் வைக்க, அப் பாத்திரத்திலுள்ள பால் முழுதும் பச்சை நிறமாய்த் தோன்றும் என்கின்றனர். மற்றும் நீலத்திற்கும் இச் சோதனையே பொருந்தும்.

இதனை,

"கறந்த பாலினுட் காசி றிருமணி
நிறங்கிளர்ந்து தன் னீர்மை கெட்டாங்கு".

என்ற சிந்தாமணியிற் கூறப்பட்ட அடிகளால் தெளிக.

மற்றும் பர்மாவிலும் சிலோனிலும் இந்த மணிகள் அகப்படு கின்றன.

## மரகதத்தின் குணம்.

"தாதுதரும் பூதபை சாசந் தமையோட்டும்
மீது வரு புண்ணை விலக்குங்காண்—தீதுபுரி
நச்சை யகற்றும் நலிமதுமே கம்போக்கும்
பச்சை யதுமதுரம் பார்"

(பொ-ள்). இனிப்புச் சுவையுடைய பச்சை, தாதுக்களை விருத்தி செய்யும்; பூத பைசாசங்களை ஓட்டும்; உடல்மீது உண்டாம் புண்களை நீக்கும்; கெடுதலைச் செய்கின்ற விடங்களை அகற்றும்; வருந்தும்படிச் செய்கின்ற மதுமேகத்தைப் போக்கும்.

## மரகதத்தின் சுத்தி.

நிலக்குமிழ் வேரை யரைத்து அதற்குள் மரகதத்தை வைத்து உருட்டி, மேல் சீலைமண் செய்து, குக்குட புடமிட்டெடுக்கச் சுத்தியாம்.

(வேறு)

மரகதத்தை வச்சிர மூசையிலிட்டு, உலையில் வைத்துச் சூடேறின பின், குதிரை மூத்திரத்தில் ஏழுமுறை தோய்த்து எடுக்கவும்.

## மரகத நீறு.

இதைக் கண்டங்கத்தரிச் சாற்றால் ஒரு நாளும், சிறு பீளைச் சாற்றிலொரு நாளு மரைத்துப் பில்லை செய்து, காய்ந்தபின் ஓட்டி விட்டுச் சீலைமண்ணெய்துலர்த்திப் பன்றிப் புடமிட்டு ஆறவிட்டெடுக்கப் பற்பமாகும்.

(வேறு)

கல்லுருவி இலைச்சாற்றால், மரகதம் நான்கு அல்லது ஐந்து புடத்தில் நீறுகுமென்பர். புடமொன்றிற்கு அரைப்பு சாமம் நான்கேயாம். வரட்டி அளவு ஐம்பதாகும்.

நிற்க, பற்பத்தின் அளவு பணவெடை (488 மி. கிராம்) என்று கூறப்பட்டிருப்பினும், குறைந்த அளவிலேயே தக்க அனுபானத்தில் கொடுத்தல் வேண்டும். பாம்புக்கடி மூர்ச்சையில் மரகத மணியைத் தூள் செய்து, உச்சியைக் கீறித் தூளை வைத்து அழுத்த, விடமிறங்கி மூர்ச்சை தெளியும் என்றும், பற்பத்தை கண்களில் திட்டக் கண் நோய்கள் நீங்குமென்றும், மோதிரத்தில் பதியவைத்து அணிந்து கொள்ளக் காக்கைவலி வராது என்றும் கூறப்பட்டுள்ளன.

மற்றும் இதைத் தரிப்பதினால் வயிற்றுக் கடுப்பைக் குணப்படுத்தி சுகப்பிரசவத்திற்கு உதவி செய்யும் என்றும் கருதினார்கள்.

இரசாயன நூல்களின்படி மரகதக்கல் அலுமினியம், குளிசினம் (Glucinum) என்ற இரண்டினாலும் செய்யப்பட்ட ஒரு செயற்கைக்கல்.

மரகதம் இயற்கையானதா? செயற்கையானதா? என்பதைக் கண்டறிந்து கொள்ள ஒரு வழி உண்டு. கல்லில் தேய்த்துப் பார்க்கும்போது செயற்கையாயின் கண்ணாடி போல வெளுத்து விடும். மற்றும் கூரான கம்பியால் தேய்த்தால் செயற்கையானால் ஒளி குன்றும், இயற்கையானால் ஒளி மிகும்.

## மாணிக்கம்.

## RUBY, CARBUNCLE

இலங்கைத் தீவில் சமனொளி பரப்பிய இடத்தில் அலகையாறு, மாவலியாறு, கம்பலையாறு, கல்லணையாறு ஆகிய இந்நான்கு ஆறுகளும் கலக்கும் இடத்தில் மாணிக்க மணிகள் உற்பத்தியாம். குருவிந்தம், சாதாங்கம், கோவாங்கம், சௌகந்தி என மாணிக்கம் நான்கு வகைப்படும். அந்நான்கின் குணங்கள் 12; குற்றங்கள் 13; ஒளியின் குணங்கள் 28; இவற்றை,

"மாணிக் கத்தியல் வகுக்குங் காலைச்
சமனொளி சூழ்ந்த வொருநான் கிடமு
நால்வகை வருணமும் நவின்ற பெயரும்
பன்னிரு குணமு பதினறு குற்றமு
மிருபத் தெண்வகை யிலங்கிய நிறமு
மருவிய விலையும் பத்தி பாய்தலு
மிவையென மொழிப வியல்புணர்ந்த தோரே."

என்னும் சிலப்பதிகார உரை மேற்கோள் செய்யுளால் உணர்க.

### இடம்.

இம் மாணிக்கம், மகம், காளபுரம், தும்புரம், சிங்களம் என்ற நான்கு இடங்களிலும் கிடைக்கும் என்பதனை.

"வாளவிரு மாணிக்கங் கிரேதமுத லுகநான்கும் வழியே மக்கங்
காளபுரந் தும்புரஞ்சிங் களம்நான் கிடைப்படும்."

என்ற வடிவுகளால் அறிக.

### வருணமும் பெயரும்.

"பதுமமு நீலமும் விந்தமும் படிதமும்
விதிமுறை பிழையா விளங்கிய சாதியும்"

என்றும்,

''வன்னியிற் கிடக்கும் வருணநாற் பெயரு
முன்னிய சாதுரங்க மொளிர்குரு விந்தஞ்
சௌகந்தி கோவாங்கு தாஞ கும்மே''

என்றும்,

''இந்நிறத்த பொதுவாய மாணிக்க மறையவர்முன் னியனுற்சாதி

தன்னியல்பாற் சாதரங்கங் குருவிந்தஞ் சௌகந்தி கங்கோவாங்கம்

என்னுமிவற் ருற்சிறந்து நான்காகும்''

என்றும் கூறப்பட்டுள்ள செய்யுட்களால், மாணிக்கத்தின் நான்கு வருணங்களையும் நாற்பெயர்களையும் நன்கு உணரலாம்.

குணம் 12.

பன்னிரண்டு குணங்களாவன: கையிலெடுத்தாலும், தேய்த்தாலும், நெருப்பிலிட்டாலும், தூக்கினுலும், தகட்டில் வைத்தாலும், குச்சில் புதைத்தாலும், வெய்யிலில் வைத்தாலும் நடுவிலும் ஓரத்திலும் மத்தகக் குறியிலும் நெருப்புள்ளதாயிருத்தலும், பார்வையில் செந்நிறமாயிருத்தலும் குணங்களாம். இதனை,

''தேக்கி னெருப்பிற் சேர்க்கினங் கையிற்
றூக்கினற் றகட்டிற் சுடர்வாய் வெயிலிற்
குச்சையின் மத்தகக் குறியினே ரத்தி
னெய்த்துப் பார்வையி னேர்ந்து சிவந்தாங்
கொத்த நற்குண முடையபன் னிரண்டும்''

என்ற கல்லாடச் செய்யுளால் உணர்க.

குற்றம் 16.

பதினறு குற்றங்களாவன : கருகல், நொய்தாதல், செம்மண், கரிய புகை, இறுகல், கோபம், திருகல், முரணல், தராசம், மந்தக் குழிவு, புடாயம், நெய்ப்பிலி, காற்று, இலைச்சுமி, வெச்சம், இரண்டற்ற சந்தை, பொரிவு என்பன. இதனை,

''கருகி நொய் தாதல் காற்று வெகுளி
திருகன் முரணை செம்ம ணிறுகன்
மந்தகக் குழிவு தராசமி லைச்சுமி
வெச்சம் பொரிவு புகைதல் புடாயஞ்
சந்தை நெய்ப்பிலி யெனத்தகு பதினறு
முந்திய நூலின் மொழிந்தன குற்றமும்''

என்ற கல்லாடச் செய்யுளால் உணர்க.

## நிறம் (ஒளி).

### சாதுரங்கம்—ஒளி 10.

இதுவே கமலராகம், பதுமம், பதுமராகம் எனப்படும். சாதங்க மணியின் ஒளிக்குணம் பத்து. சாதகப் புளளினகண், செந்தாமரை, செங்கழு நீர்ப்பூ, இந்திர கோபம், மின்மினி, சூரியன், அக்கினி, தீபம், மாதுளங் கனி, மாதுளம் பூ இவைகளின் நிறத்தையொத்திருக்கும் என்க.
இதனை,

''சாதகப் புட்கண் டாமரை கழுநீர்
கோப மின்மினி கொடுங்கதிர் விளக்கு
வன்னி மாதுளம் பூவிதை யென்னப்
பன்னுசா துரங்க வொளிக்குணம் பத்தும்''

எனவும்,

''தாமரை கழுநீர் சாதகப் புட்கண்
கோப மின்மினி கொடுங்கதிர் விளக்கு
மாதுளைப் பூவிதை வன்னியீ ரைந்து
மோதுசா துரங்க வொளியா கும்மே''

எனவும்,

''சாதுரங்க நிறங்கமலங் கருநெய்த லிரவியொளி கழல்கச் சோதம்
மாதுளம்போ ததன்வித்துக் கார்விளக்குக் கோபமென வகுத்தபத்தும்''

எனவும் கூறப்பட்ட செய்யுட்களால் அறிக.

### குருவிந்தம்—ஒளி 8.

இதுவே விந்தம், இரத்த விந்து எனப்படும். குருவிந்தத்தின் ஒளிக் குணம் எட்டு. அவை செம்பஞ்சு, செவ்வரத்தம் பூ, மஞ்சாடிப் பூ, வெள்ளி லோத்திரம் பூ, முயலிரத்தம், செந்தூரம் குன்றிமணி, முருக்கம் பூ ஆகியவற்றின் நிறத்தை ஒக்கும். இதனை,

''செம்பஞ் சரத்தந் திலகமு லோத்திர
முயலின் சோரி சிந்துரங் குன்றி
கவிரல ரென்னக் கவர்நிற மெட்டுங்
குருவிந் தத்திற் குறித்தன நிறமும்''

என்றும்,

"திலகமு லோத்திரஞ் செம்பருத் திப்பூக்
கவிர்மலர் குன்றி முயலுதி ரம்மே
சிந்துரங் குக்கிற் கண்ணென வெட்டு
மெண்ணிய குருவிந்த மன்னிய நிறமே"

என்றும்.

"மேதகைய குருவிந்த நிறங்குன்றி முயற்குருதி வெள்ளி லோத்தம்
போதுபலா சலர்திலகஞ் செவ்வரத்தம் விதாரமெரி பொன்போ லெட்டு"

என்றும் புகன்றிருப்பதால் உணர்க.

சௌகந்தி— ஒளி 6.

இதுவே நீலம், நீலகெந்தி எனப்படும். சௌகந்தியின் ஒளிக் குணம் ஆறு. அவை அசோகத் தளிர், செம்பஞ்சு, செவ்வலரி, செம்பு, இலவம்பூ, குயிலின் கண் இவைகளைப் போன்றன வாம்.

இவற்றை,

"அசோகப் பல்லவ மலரி செம்பஞ்சு
கோகிலக் கண்ணீ ளிலவலர் செம்பெனத்
தருசௌ கந்தி தன்னிற மாறும்."

என்றும்,

"கோகிலக்கண் செம்பஞ்சு கொய்ம்மலர்ப் பலாச
மசோக பல்லவ மணிமலர்க் குவளை
யிலவத் தலர்க ளென்றூறு குணமுஞ்
சௌகந் திக்குச் சாற்றிய நிறனே."

என்றும்,

"களிதருசௌ கந்திகத்தி னிறமிலவம் போதுகுயிற் கண்ணசோகத்
தளிரலர்பொன் செம்பஞ்சி யையவண்ண மெனவாறு."

என்றும் கூறப்பட்டிருக்கும் செய்யுட்களால் அறிக.

கோவங்கம்—ஒளி 4.

இதுவே படிதம் எனப்படும். *கவாங்கத்தின் ஒளிக்குணங்கள் குராமலர், வெண்கோவை, செங்கல், மஞ்சள், குங்குமம் முதலி யனவாம்.

* கோவரங்கமென்னும் வடசொல் கவாங்கமெனத் திரிந்தது எனப் பேராசிரியர் கூறுவர்.

இவற்றை,

''செங்கல் குராமலர் மஞ்சள் கோவை
குங்கும மஞ்சிற் கோவாங்கு நிறமும்''

என்ற கல்லாடச் செய்யுளாலும்,

''கோவைநற் செங்கல் குராமலர் மஞ்சளென
கூறிய நான்குங் கோவாங்கு நிறனே''

என்ற சிலப்பதிகார மேற்கோள் சூத்திரத்தாலும்,

''தகுகோவாங்க, ஒளிகுரவு குசும்பைமலர்
செங்கல்கொவ் வைக்கனியென் றுருநான்கு''

என்ற திருவிளையாடற் புராணச் செய்யுளாலும் உணர்க.

அணிபவர்.

சாதுரங்கம்: பல தானம் செய்த பலனையும், பரிவேள்விப் பலனையுமடைவர்.

குருவிந்தம்: ஒரு குடைக்கீ ழுலகாண்டு திருமகள், வீர மகளோடிருப்பர்.

சௌகந்திகம் : செல்வம், கீர்த்தியடைவர்.

கோவாங்கம் : பால், தானியம், செல்வம், உண்டாம்.

நேர்த்தியான சிவப்புக் கற்கள் பர்மாவிலும், மாண்டலேக்கு வடக்கே நூறு மைலுக்கப்பாலுள்ள மோகாக் என்னுமிடத்திலும், காத்தே என்னும் ஜில்லாவிலும் கிடைக்கின்றன. உலகத்திலேயே பெரிய சுரங்கமாகிய மோகாக் சுமார் 1916 சதுர மைல் கொண்டது.

சோதனை.

ஒரு மண்பாண்டத்தில் பழுத்த நெருப்பிட்டு, அதன்மேல் மாணிக்கத்தையிட்டு, வெளியில் வைத்துப் பார்க்க, சாமத்திற்குச் சாமம் நிறம் வேறுபட்டுக் கொண்டிருக்கும் என்ப.

குறிப்பு.—ஒளிக்குணங்களைக் கூறும் செய்யுட்கள் சிற்சில இடங்களில் மாறுபடுவதை உய்த்துணர்க.

பொதுக் குணம்.

சுரரோகஞ் சந்நிகளின் தோடமதி தாக
முரமான மேக மொழியுந்—திறமாக
வூணிக்கோ ணேந்திரநோ யோடுமர வின்றவொளி
மாணிக்கத் தால்வசிய மாம்.

(பொ-ள்) சர்ப்பம் கக்கிய மாணிக்கத்தினுல் சுரநோய், சந்நி பாததோடம், அதிதாகம், வன்மேகம், நாட்பட்ட கண்ணேய் முதலியன நீங்கும்; வசியம் உண்டாம் என்க. நிற்க, மாணி கத்தால் இரத்தபித்த நோய், கபவாதம், க்ஷயம் பூதவேதாள் தோடம், விடம் கர்மநோய்முதலியன தீருமென்றும், விந்துவும் ஜீவ சக்தியும் அதிகரிக்குமென்றும் கூறுவர்.

சுத்தி.

குதிரை மூத்திரத்தில் மாணிக்கத்தை மூன்று நாள் ஊற வைத்து, மூன்றுநாள் வெய்யிலில் காயவைத்துப் பிறகு வெந்நீரில் கழுவி எடுக்கச் சுத்தியாம்.

(வேறு)

மாணிக்கத்தை உலையிலிட்டு ஊதிச் சூடேற்றி, வெள்ளாட்டுப் பாலில் ஆறுமுறை தோய்த்தெடுக்கச் சுத்தியாம்.

பற்பம்.

சுத்திசெய்த மாணிக்கத்தில் வெள்ளெருக்கன் பால்விட்டு மூன்றுநாள் பாவனை பண்ணி உலர்த்தி, மடக்கிலடக்கிச்சீலை செய்து, காட்டு வரட்டியில் மூன்று கஜபுடமிடப் பற்பமாம்.

(வேறு)

சுத்தி செய்த மாணிக்கம் வராகனெடைமூன்றை (12.6 கிராம்) பத்துப் பலம் (350 கிராம்) நீர்பிடிக்கும் குடுவையிற் போட்டு, நெருப்பின்மீது வைத்து, சாராயத்திலுலும் திராட்டைக் காடியினுலும் தனித்தனி நான்கு சாமம் (12 மணி) சுருக்குக் கொடுத்து, அக்குடுவையிலேயே 10 பலம் (350 கிராம்) கற்ருழை சாற்றை விட்டு, சில்லிட்டுச் சீலை செய்து 40 அல்லது 50 வரட்டியில் புடமிட்டு எடுத்துப் பன்னீர் விட்டுத் தினம்ஒன்றுக்கு இரண்டு, சாமமாக (6 மணி) ஏழு நாள் அரைத்து வெயிலிலுலர்த்திப் பொடித்துக் கொள்ளவும்.

(வேறு)

மூன்று வராகனெடை (12.6 கிராம்) மாணிக்கத்தை ஆறு பலம் (210 கிராம்) ஆடாதோடை விழுதில் புதைத்து, பாதியளவு உலர்ந்தபின், 10 பலம் (350 கிராம்) ஆடாதோடை விழுதிற் பாதியை ஒரு சட்டியிலிட்டு உலர்த்தி, அதை அதன்மீது வைத்து மற்றப் பாதி விழுதை மேல்வைத்துப் பரப்பி, மேற் சட்டி கொண்டு மூடி ஏழு சீலை செய்து, 40 அல்லது 50 வரட்டியிற் புடமிட்டெடுக்கப் பற்பமாகும்.

**அளவு :** 1/4 குன்றி (32 மி. கிராம்) முதல் 1/2 குன்றி (65மி. கிராம்) வரை.

**துணைமருந்து :** பால், வெண்ணெய், நெய், தேன், மாதுளை அத்தி முதலிய பழங்களினால் செய்த மணாணப்பாகு முதலியன, வாம்.

**தீரும் நோய்கள் :** மூளை, தமரகம், ஈரல், இரைப்பை முதலிய அங்கங்களைப் பற்றிய துர்பலத்தை நீக்கி, அவைகளைப் பலப்படுத்தித் தேகபலம், மனோபலம், உற்சாகம் ஆகியவைகளை உண்டாக்கும். மற்றும் குணத்தின்கீழ் கூறப்பட்ட பிணிகளும் நீங்கும் எனக் கொள்க.

நிற்க, இதன் நஞ்சுக்குறி குணங்களும் தீர்வும், வைரநஞ்சுக் குறி குணங்களையும் தீர்வையும் ஒக்கும்.

## முத்து.

## PEARL.

நவமணிகளுள் ஒன்றும் கடல்படு திரவியங்கள் ஐந்துனுள் ஒன்றுமாகிய முத்து, முரிவஞ்சி, துாலகம், சுக்கிரன், நித்திலம், தரளம், சங்கீன்றபிள்ளை, ஆதித்தன்சோதி, ஆழிவித்து, கத்தலம், மௌத்திகம் என்னும் வேறு பெயர்களினாலும் வழங்கப்படும் எனக் கொள்க.

''தக்கமுத் திரண்டு வேறு தலசமே சலசமென்ன'' என்பதனால், தரையில் கிடைக்கும் முத்து ''தலசம்'' என்றும், சலத்திற் கிடைக்கும் முத்து ''சலசம்'' என்றும் வழங்கப்படும் என கொள்க.

### முத்தின் பிறப்பு.

ஐப்பசித் திங்கள், சுவாதி நட்சத்திரங்கூடிய சமயத்தில் கடலுள்ளிருக்கும் சிப்பிகள் வெளியில் வந்து தம் வாயைத் திறந்திருக்குங் காலத்தில், மின்னலுடன் பெய்யும் மழைத்துளி அச்சிப்பிகளில் வீழ வாய்மூடி உள்ளிறங்கிச் சூல்கொண்ட முத்து மணிகளே உயர்வானவை என்று விளம்புவர். சிப்பி ஓர் ஆண்டில் முத்தீனும். இவ்வரலாற்றை ''இருபதுமுத்தீன்றுலும்'' என்னும் வெண்காடர் புராணச் செய்யுளாலறிக.

### முத்தின் பிறப்பிடம்.

முத்தின் பிறப்பிடம் இருபதென்று சிலரும் பதின்மூன்றென்று சிலரும் கூறுவர்.

''பனிமதி கதலி மேகம் பைந்தொடி கழுத்தா வின்பல்
தனியானை யேனக் கொம்பு தடங்கரா வுடும்பு கொக்கு
வினையராச் சலஞ்ச லந்நத் திப்பிமீன் மூங்கில் பூகம்
நினைசெந்நெல் கரும்பு கஞ்ச நிகழிரு பதின்முத் தாகும்.''

(திரு வெண்காடர் புரா.)

''தந்தி வராக மருப்பிப்பி பூகந் தழைகதலி
நந்து சலஞ்சல மீன்தலை கொக்கு நளினமின்னுர்
கந்தரஞ் சாலி கழைகன்ன லாவின்பல் கட்செவிகா
ரிந்து வுடும்புக ராமுத்த மீனு மிருபதுமே.'

(அரதனச் சுருக்கம்.)

இருபது பிறப்பிடம்: 1. மதி, 2. மேகம், 3. சங்கு, 4. சிப்பி, 5. மீன் தலை, 6. நந்து, 7. முதலை, 8. உடும்பு, 9 தாமரை, 10. வாழை, 11. கமுகு, 12, கரும்பு, 13. செந்நெல், 14, மூங்கில், 15. யானைக்கொம்பு, 16. பன்றிக்கொம்பு, 17. பசுவின் பல், 18. நாகம். 19. கொக்கு, 20. நங்கையர் கழுத்து.

பதின்மூன்றிடம்:

''இக்கதிர் முத்தந் தோன்று மிடன்பதின் மூன்று சங்கம்
மைக்கரு முகில்வேய் பாம்பின் மத்தகம் பன்றிக் கோரு
மிக்கவெண் சாலி யிப்பி மீன்றலை வேழக் கன்னல்.''

(திருவிளை. புரா.

''கரிமருப் பைவாய் மான்கை கற்புறு மடவார் கண்டம்
இருசிறைக் கொக்கின் கண்ட மெனக்கடை கிடந்த
மூன்றும்
அரியன............................''

மேற்கூறிய இருபதில் இல்லாத சிங்கத்தின் கை இதில் அதிகமாய்க் கூறப்பட்டுள்ளது.

முத்தின் குணங்களும் குற்றங்களும்.

முத்திற்குக் குணங்கள் ஆறு என்றும், குற்றங்கள் நான்கு என்றும் கூறப்பட்டுள்ளன.

குணங்கள்: 1. உருட்சி, 2. நட்சத்திரவொளி, 3. திண்மை, 4. மாசின்மை, 5. பார்வைக் கின்பந்தரல் 6. படிகம் போன்றிருத்தல்:

''உடுத்திர ளனைய காட்சி யுருட்சிமா சின்மை கையால்
எடுத்திடிற் றிண்மை பார்வைக் கின்புறல் படிக மென்ன
அடுத்திடு குணமாறு.'

குற்றங்கள்: 1. காற்றேறு, 2. மணலேறு, 3. கல்லேறு, 4. நீர் நிலை என்பன குற்றங்கள். பிறவும் குற்றங்கள் பலவுள.

''காற்றினு மண்ணினுங் கல்லினு நீரினுந்
தோற்றிய குற்றந் துகளறத் துணிந்தவுஞ்
சந்திர குருவே யங்கா ரகனென
வந்த நீர்மைய வட்டத் தொகுதியும்.''

(சிலப். ஊர்காண்.)

(சந்திரகுரு—வெண்முத்து, அங்காரகன்—செந்நீர் முத்து, வட்டத் தொகுதி—ஆணிமுத்து.)

முத்தின் நிறம்.

சலத்தில் கிடைக்கும் சங்கின் முத்தமும் இப்பியின் முத்தமும் வெண்ணிற மெனவும், மேகத்தின் முத்தம் செந்நிற மெனவும், மூங்கிலின் முத்தம் கல்மழையின் நிறமெனவும், பாம்பின் முத்தம் நீலமணி நிறமெனவும், பன்றிக் கொம்பின் முத்தம் உதிர நிற மெனவும், வெண்ணெல்லின் முத்தம் பசுமை நிறமெனவும், மீனின் முத்தம் பாதிரி மலரின் நிறமெனவும் யானைக்கொம்பு, கரும்பு இவைகளின் முத்தங்கள் பொன்னிற மெனவும் கூறுவர். இதனை கீழ்ச் செய்யுட்களிற் காண்க :

''மாடவெண் புறவின் முட்டை வடிவெனத் திரண்ட பேழ்வாய்
கோடுகான் முத்தம் வெள்ளை நிறத்தின கொண்மூ முத்தம்
நீடுசெம் பரிதியன்ன நிறத்தது கிளைமுத் தாலிப்
பீடுசா னிறந்த ராவின் பெருமுத்த நீலத் தாமால்.''

''ஏனமா வாரஞ் சோரி யீர்ஞ்சுவை சாலி முத்தம்
ஆனது பசுமைத் தாகும் பாதிரி யனைய தாகும்
மீனது தரம் வேழ மிரண்டினும் விளையு முத்தந்
தானது பொன்னின் சோதி தெய்வதஞ் சாற்றக் கேண்மின்''

(திருவிளை. புரா.)

முத்து கிடைக்குமிடங்கள்.

தற்காலம் சிங்களம், பாரசீகம், தலைமன்னார், தூத்துக்குடி, அமெரிக்காவில் உள்ள சில உஷ்ணக் கடற்கரைப் பிரதேசங்கள் ஆகியவற்றில் சிறந்த முத்தெடுக்கின்றனர். பண்டை நாட்களிலும் மேற்குறித்த இடங்களில் முத்தெடுத்ததாகத் தெரி கின்றது. இதற்கு,

''உற்பவிக்கும் தேசங்கள் சொல்லக் கேளாய்
தெரிசலாய் சிங்கள தேசத்திற் றனும்
செப்பரிய பாரசிக தேசந் தானே.''

''தேசமா தாம்பிர பரணிமுகத் வாரம்
செப்பரிய கடலில்சவு ராஷ்டிர தேசம்
ஏசயிமோ ரபர்வதத்திற் கருவான வாவி
யிசைந்திட நதியள கவுபர தேசங்கள்
பாசபாண் டியநாடிவ் விடத்தில்
பாங்கான முத்ததுவு முற்பவிக்குந் தானே.

என்ற இச் செய்யுட்கள் உதாரணங்களாகும்.

(போகர். 7000)

தலைமன்னாரில், தற்காலம், முத்தெடுக்கத் தோணிகளைச் சேகரித்து, 60 முதல் 90 அடி ஆழமுள்ள சமுத்திரக் கரை இடங்களில் நிறுத்தி, ஒரு கயிற்றில் பாரத்திற்காகக் கல்லைக் கட்டி, அதனுடன் முத்துச் சேகரிப்பதன் பொருட்டு ஏற்படுத்தப்பட்டுள்ள முத்துக் குளிப்போனைத் தரை மட்டத்திற்கு அனுப்ப அவன் முத்துச் சிப்பிகளைச் சேகரித்த பிறகு, தோணியிலிருப்பவனுக்குக் குறிப்பறிவிக்க, மேலுள்ளவன் கயிற்றை மேலேயிழுக்க, மூழ்கினவன் சிப்பிகளுடன் நீர்மட்டத்திற்கு வந்து அவற்றைத் தோணியில் சேர்க்கின்றான். பிறகு சிப்பிகளை கரை சேர்த்து அழுக வைத்துப் பிளந்து கடல் நீர் உள்ள பாண்டங்களிலிட்டு, மிக்க கவனமாகச் சிப்பிகளில் உள்ள முத்துக்களைப் பொறுக்கி எடுத்த பின்பு ஓடுகளையும் சுத்தி செய்து சேர்க்கின்றனர்.

நீரில் மூழ்குகின்றவர்கள் மேல்வரும் காலத்துச் சிலர் இரத்தம் கக்குதலும் சிலர் மூர்ச்சையாதலும், சிலர் இரண்டையும் அடைதலும் உண்டு. அவர்கட்கு, உடனே சாராயம் முதலிய போதை உண்டுபண்ணக்கூடிய பொருள்களைக் கொடுத்தல் பழக்கத்தில் இருக்கின்றது.

நிற்க, கிடைக்கும் முத்துக்கள் கடுகளவிலிருந்து, நாவல் கொட்டைப் பருமன் வரையும் இருக்கும். முத்தின் பருமன் அதிகமாக ஆக விலையும் அதிகரிக்கின்றது. மனிதர் பண்டை நாள் முதல் முத்தை நகையாய் அணிந்து வருகின்றனர். முத்தை அணிந்தால் தீங்குகள் அணுகாதிருக்கும் என்னும் மூட நம்பிக்கையினால், பண்டை நாளில் மக்கள் அதை ஆபரணமாக்கி அணிந்ததாயும் கூறுவர் ஒரு சாரார். மற்றைய மணிகளைக் காட்டிலும் முத்துக்கு விலை மதிப்பு அதிகம் என்பதனைக் கீழ்வரும் வரலாறுகளால் உணரலாம்.

ஜூலியஸ் ஸீசர், மார்க்ஸ் புருட்டஸின் தாய் சர்வில்லாவுக்கு 4,800 பவுண்ட் விலையுள்ள முத்தை இனமளித்ததாகவும், கிளியோபாட்ரா 80,000 பவுண்ட் மதிப்புள்ள முத்தை விழுங்கியதாகவும், பர்ஷியா தேசத்து ஷாவுக்கு தேசாந்திரி டேவர்னீர் 180,000 பவுண்டுக்கு ஒரு முத்தை விற்றதாகவும், மாஸ்கோவிலுள்ள (பில்கிரின்) முத்து 24 காரட் இருந்ததாகவும் கூறப்பட்டிருக்கின்றன.

மற்றும் ஜப்பானியர், நீர்நிலைகளை ஏற்படுத்தி, அதில் சிப்பிகள் வாயைச் சாக்கிரதையாய்ப் பிளந்து, உள்ளிருக்கும் சதையின் மேல் மூடியிருக்கும் ஜவ்வை கால் சதுர அங்குலத்திற்கு மூன்று பக்கம் கத்தரித்துப் புரட்டி, அவ்விடத்தில் சிறிய கண்ணாடி மணி அல்லது மணல் பருக்கை ஒன்றை வைத்து, புரட்டி வைத்த ஜவ்வை மூடித் தையலிட்டு, வாயை மூடி நீரில் விட்டுவிடுகின்றனர். மணலைச் சுற்றிலும் சிப்பிச் சதையிலிருந்து வடியும் பசைபோன்ற திரவம் மூடி ஓர் ஆண்டில் சிறந்த முத்தாகின்றது. இம்மாதிரி செயற்கையில் முத்து உண்டுபண்ணுவதில் நிபுணர்களென ஜப்பானியர் கருதப்படுகின்றனர்.

முத்தை நம் முன்னோர்கள் செயற்கையாகவும் செய்து வந்ததாய் அறியக்கிடக்கின்றது. அம் முறைகள் பழக்கத்தில் இன்மையால் சுருங்கக் கூறுதும்.

தள்ளப்பட்ட முத்துக்களையும், சிப்பிகளையும் பூநீறு கற்சுண்ணாம்புக் கலப்பிலிட்டு கொதிக்க வைத்து, நீர் சுண்டிய பிறகுக் கழுவி உலர்த்தித் தூளாக்கி, முத்திருக்குஞ் செவி (நிலக் கடம்புச்) சாற்றினால் நான்கு நாள் நன்கு யரைத்துப் பிறகு சூரியகாந்தி இலையினால் செய்த மூசையிலிட்டு, உளுத்தமாவால் சுவசம் செய்து ஏழு நாள் வெய்யிலில் உலர்த்தி, எட்டாம் நாள் பிரித்தெடுக்க இயற்கை முத்துப் போன்ற ஒளியுடன் கூடிய சிறு முத்துக்களைக் காணலாம். இதனைப் போகர் நூலில் விரிவாய்க் காண்க.

## முத்தின் சோதனை.

முத்துத் தொகுதியிலிருந்து எடுத்த ஒரு முத்தை சாராயத்திடைக் கரைந்து விட்டால் நன் முத்தாகும் என்று கூறுவர்.

கல்லுப்பும் நவாச்சாரமும் சமவெடை கலந்தரைத்துப் பசு மூத்திரத்தில் கலந்து பாத்திரத்திலிட்டு, அதில் முத்தை ஒரு நாழிகை ஊறவைத்தெடுத்துச் சம்பா நெல் உமியிலிட்டுத் தேய்த்துப் பார்க்கும் பொழுது, போட்டவாறே இருந்தால் பிறந்த முத்தென்றும், வேறு நிறத்தைக் காட்டுமாயின் வைப்பு முத்தென்றும் கண்டுகொள்க. இதுவே வட நூலாரின் கொள்கையுமாம்.

## முத்தின் சுவையாதிதன்மைகள்.

இது, கைப்பு, சிறிது இனிப்புச் சுவைகளையும், சீதவீரியத்தையும், இனிப்புப் பிரிவையும் உடையது. இதற்குக் காமம் பெருக்கிச் செய்கையும், கோழையகற்றிச் செய்கையும், நச்சரிச் செய்கையும், இசிவகற்றிச் செய்கையும், உடல் உரமாக்கிச் செய்கையும், குருதிப் பெருக்கை அடக்கும் செய்கையும் உளவென்பர்.

## முத்தின் குணம் (பொது).

அத்திசுரம் சோபை யருசிதுர்ப்ப லம்கண்ணேய்
பித்துவிடஞ் சீதளநோய் பேசுகபம்—சுத்தத்
தயிரியநட் டத்தோடு தாதுநட்ட மும்போம்
உயிருறுநன் முத்திருந்தா லோது.

(பொ-ள்.) எலும்பைப் பற்றிய சுரம், சோபை, சுவையின்மை, உடல் வன்மைக் குறைவு, கண்ணைப் பற்றிய நோய்கள், பித்த விருத்தி, விடங்கள், சீதள நோய்கள், கபவிருத்தி, மனவலிமை யின்மை, இந்திரிய நட்டம் இவைகள் நல்ல முத்தினால் நீங்கு மென்ப.

## முத்தின் சுத்தி முறைகள்.

ஒரு பலம் (35 கிராம்) முத்திற்கு, புளித்த பசுவின் தயிர் மூன்று பலம் (105 கிராம்) விட்டுச் சூரிய புடம் வைக்க வேண்டும். இவ்விதம் மூன்று நாட்கள், பிரதிதினமும் பசுவின் தயிர் மும் மூன்று பலம் (105 கிராம்) வீதம் விட்டுச் சூரிய புடம் வைத்து, அதன் பின்பு மேற்படி முத்திற்குத் தயிர் விடாமல் இரண்டுநாள் காய வைத்து உலர்த்த வேண்டும். இவ்விதம் மீண்டும் இரு முறை செய்து முடிவாய் உலர்ந்த பின் நன்றாய் உலர்த்திக் கழுவி யெடுத்துக் கொள்வதே முத்திற்குச் சுத்தியாம்.

(தே. ய. வெ.)

(வேறு.)

முத்தை ஊமத்தங்காய் இரசத்தில் ஒரு நாள் ஊறவைத்து, மறுநாள் சுத்த நீரில் கழுவி, பின்பு புளியிலைச் சாற்றில் ஒரு நாள் ஊறவைத்து, மறு நாள் அதைச் சுத்த நீரில் கழுவி, வெய்யிலில் உலர்த்தி எடுத்துக் கொள்ளவும்.

(வை. ரா.சி.)

(வேறு.)

முத்தை எலுமிச்சம் பழச் சாற்றிலும் காடியிலும் ஒரு நாள் ஊறவைத்தெடுத்து நீர் விட்டுக் கழுவி எடுக்கச் சுத்தியாம்.

(வேறு.)

சங்கம் பழச்சாறு அல்லது பொன்னும் பழச்சாறு அல்லது புளிக் குழம்பு இவைகளில் யாதானும் மொன்றில் இரண்டு நாள் ஊறவைத்தெடுக்கச் சுத்தியாம்.

பற்பம் செய்முறையும் அளவும்.— ஒரு பலம் சுத்தி செய்த முத்துப் பொடிக்குப் பட்டியில் குறிப்பிடும் சாறுகண் முறைப் படி விட்டரைத்து உலர்த்திப் புடமிடவும், ஒவ்வொரு நாளும் புதிய சாற்றையே உபயோகிக்க வேண்டும். பில்லைகளை பனி யிலும் வெய்யிலிலும் வைத்து உலர்த்த வேண்டும்.

| சாறறின் பெயர். | அளவு பலம. | அரைப்பு நாள். | வில்லை உலர்ததும நாள். | கவசம் உலர்ததும் | புடம் வரட்டி. |
|---|---|---|---|---|---|
| வெள்ளைச் சாறுவேளைச் சமூலச்சாறு | 5 | 5 | 4 | 1 | 9 |
| எருகருச் சமூலச் சாறு .. | 5 | 5 | 4 | 1 | 8 |
| அதிதியிலைச் சாறு .. | 5 | 5 | 4 | 1 | 7 |
| மருதம பட்டைச் சாறு .. | 5 | 5 | 4 | 1 | 6 |

பற்பத்தின் அளவு.—அவரைக் கொட்டையை ஆறு கூருக்கி, முதற் கூறு உத்தமமென்றும், இரண்டாவது மத்திமமென்றும், மூன்ருவது அதமமென்றும், நான்காவது அதமாதமமென்றும், ஐந்தாவது ஒரு புடைத் துணிபென்றும், ஆருவது முழுத் துணி பென்றும் பிரித்துக்கொள்க.

இந்த மவுத்திக பற்பத்தின் பெருமையை ஆராய்ந்து பார்க்குங்கால், மாதேவ பலம் என்று சொல்லப்படுகின்ற சூதபற்பத்திற்குச் சமானமாய்ச் சொல்லப்படுவதிஞல், இஃது அதிக பலம் வாய்ந்ததெனக் கொள்க.

''மவுத்திக மிரத மிவண்டுமொன் றஃதென மவுத்திக மீசனை நிகர்க்கும்
நவிற்றிய பற்ப மகிமையை மகிமை நாடுமெப் பிணியையு நலிக்கு
மிவற்றினை யாயுள் வேதிய ரறிவ தென்னினி யமுதமே யாகும்
நிவப்புட னவிழ்த மத்திரத் தலைமை நேருமிப் படியினின் மாதோ.''

(மாபுராணம்.)

''தரள மிரதந் தனக்கிணை யாகுங்
கரள வுணவினர் கண்ணிணை யொத்திடும்
பொருளி தறிந்தோர் புலவர்நற் பண்டித
வரன்முறை கண்டே வழுத்திடு முலகமே.''

## முத்துப் பற்பத்தின் துணைமருந்துகளும் தீரும் நோய்களும்.

**கள்ளிச் சுழலச்சாற்றில்.**—வாத நோய்களும், அதைப் பற்றி வரும் பிடிப்பு, உளைப்பு, நீர்க்கோவை, வயிற்றில் நீர் கட்டிக் கொண்டு வலித்தல் ஆகியனவும் நீங்கும்.

**குளிர்ந்த நீரில்.**—பித்தம், அதைப் பற்றி வரும் குன்மம், சத்தி, விக்கல், பெரும்பாடு, வல்லை, மகோதரம், பாரிசவாத தொடர்ச்சி, வெப்ப வாயு, மேகக் குட்டம், முதலியன தீரும்.

**பசுவின் தயிரில்.**—கபமும், அதுமுதலாக வரப்பட்ட மந்தத்தை அனுசரித்து வரும் நீர்க்கோவை, பாரிச சன்னி பதினெண் குட்டத்தின் பேதமான இராசப் பரு, பருக்கட்டி இவை நீங்கும்.

**பசுவின் பாலில்.**—அம்மை, இரத்த நீரழிவு, உற்பாத அதிசாரம், உற்பாத சத்தி, வெப்பானிலம் முதலியன அகலும்.

**பசுவின் நெய்யில்.**—உன்மத்தானிலம், பித்தவாதப் பெரு வயிறு, பித்த மூலப் பிணி, மயக்கப் பாண்டு, நீரிழிவு, சேத்ம சுரம், பிரமியம் இவை ஒழியும்.

**பனங்கள்ளில்.**—சொறி, சிரங்கு, பொருமல், தேமல், பசப்பு, விடப்பாண்டு போன்றன போகும்.

**வெந்நீரில்.**—எலும்பை பற்றி எரித்து ஒடுக்குவதான அத்தி வெம்மை, மேற்படி வியாதியைப் பற்றி வரப்பட்ட அத்தி பயோதரச் சிலந்தி, எலும்புருக்கிப் பரு, பெரும்பாடு, முகப்பருக் கட்டி, வாய்ப்பூண்டுச் சன்னிப் பரு, விழியிமைப் பிணி, மேக வெட்டை, அதிசாரம் ஆகியவை நீங்கும்.

**தேனில்.**—நீரருகல், மாரகச் சோணிதானல வாதம் ஊர்த்த சுவர் பந்தம், விக்கல், வயிற்றுச் சொருகல், நீர்க்கட்டுப் பொருமல், நீரொழுகுச் சோபை, நீர் எரிச்சல், நீர்ப்பீனசம் ஆசனருடி, மதுமேகப் பல்லைப்பிணி, யோனிப்புற்று, இலிங்கப் புண், உரோமக் கிரந்திப்புண் இவைகள் அகலும்.

**திராட்சைப் பழரசத்தில்.**—சாத்திய அசாத்திய அண்டவாதம், வீக்கம், பாரிச வலி ஆகியவை போகும்.

**கம்மாறு வெற்றிலை ரசத்தில்.**—இருமல், தாகம் ஒழியும்.

**பசுவின் வெண்ணெயில்.**—மகாவாதப் பிணிப்பொருமல் அகலும்.

**சர்க்கரையில்.**—வாத பித்த கப அரந்தையினால வரும் சொறி, சிரங்கு, கரப்பான், செவ்வாப்பு, சிலந்தி இவைகள் விலகும்.

**பன்னீரில்.**— பித்த சன்னிபாத நோய், அதைச் சேர்ந்து வரும் நேத்திரப் படலிகை, நேத்திர வாயு, பாரிசாந்தகாரப் பிணி, மாலைக்கண், மறைவுப் பிணி, பித்த குன்மம், வாத குன்மம் முதலியன அகலும்.

(வேறு)

வாதவிட சுரத்திற்கு இளநீரிலும், பித்தவிட சுரத்திற்கு ஈர வெங்காயச் சாற்றிலும், கபவிட சுரத்திற்கு அறுகங் கட்டைச் சாற்றிலும், திரிதோட மோசச் சன்னிக்கு ஆதொண்டைச் சமூல ரசத்திலும், மற்றும் மேற்படி நோய்கள் நான்கும் சுரமில்லாமல் வந்தால் குளிர்ந்த நீரிலும் அனுபானத்தைச் செய்து கொடுக்க வேண்டுமென்பதாம். இதனைக் கீழ்க்காணும் செய்யுளால் அறிக.

''முப்பிணி வருக்க முதன் முப்பிணி முயக்க
முப்புடை யறப்பொதுவு முப்பிணி யொழித்த
வெப்பது முனிட்டசனி விப்பது புனற்கே
யிப்புவி யிட்டதவ ரெவர்க்கு மிதுதுப்பே.''

(மாபுராணம்.)

நிற்க, முத்துப் பற்பத்தைக் களவு, மோகை, நகை, தாகை எனும் விரணங்களுக்கு உபயோகிக்கின்ற முறையினைக் கீழ்க் கூறுவாம்.—

**வாதக்களவு.**— பாதத்தில் விரணங்கண்டு, திமிருண்டாங் அக்கினி மந்தப்படும். இதற்கனுபானம் குளிர்ந்த நீர்.

**பித்தக்களவு.**— பல்லடியில் அதிக விரணங்கண்டு, வாந்தி, அருசி, தாகமுண்டாம், இதற்கனுபானம் களாச்சமூலச்சாறு.

**கபக்களவு.**— மூக்குத் தண்டில் விரணங்கண்டு, வெகு உபத்திரவத்தைக் கொடுத்துப் பசியும் அக்கினி மந்தமும் மாறி மாறி வருகின்றதற்கு, மூங்கில் கிழங்குச் சாறு.

**வாத மோகை.**— கண்டத்தில் விரணங்கண்டு, இது வாயில் அரோசகமான உமிழ்நீரைப் பெருக்கும். இதற்கு விளாமரச் சமூலச்சாறு.

**பித்த மோகை.**— நெற்றியில் விரணங்கண்டு, இது சதா எரிச்சலையும் பசி தாகத்தையுமுண்டு பண்ணும், இதற்கு முந்திரிக்கைப் பழச்சாறு.

**கப மோகை.**— முழங்காலில் விவரங்கண்டு அவ்வமயம் வலியுடன் பசிதாகமில்லாதிருக்கும். இதற்கு நாணற் கற்கண்டுப் பொடி.

வாத நகை.—இடுப்பைச் சுற்றிலும் உண்டாகும் வட்டமான விரணம் திமிருடன் பசியில்லாமலிருக்கச் செய்யும். இதற்கு வாழைச் சமூலச் சாறு.

பித்த நகை.—கையிலே விரலடிக்கு விரலடி விரணங் பூண்டு, தோலுரிந்து எரிச்சலும் நமைச்சலுமிருந்து அதிக பசியும் மயக்கமும் இருக்கும். இதற்குச் சம்பு நாவற் பழச்சாறு

கப நகை.—அடிவயிற்றில் விரணங் கண்டு அதிக நீரேற்றத்துடன் பசி தாகமில்லாமல், வெள்ளைப்பூண்டு வாசனையுடன் ஏப்பமுண்டாகும். இதற்குப் பசுவின் தயிர்.

வாத தாகை.—முதுகில் விரணங்காணின், இஃது அதிக நோவின்றி, மார்பின் பள்ளத்தில் நெறிக்கட்டிப் பசிதாகமில்லாமல் அக்குளில் நோயை உண்டாக்கும். இதற்குப் புளித்த காடி.

பித்த தாகை.—அரையில் விரணமுண்டாயின் இது வெடித்துச் சிலை நீரும் இரத்தமும் சதாவடிந்து, பசியை அடக்கிவிடும். இதற்குக் கள் அல்லது சாராயம்.

கப தாகை.—பீஜத்தில் விரணங் கண்டு, சீயும், சீலை நீரும் வடிந்து, பக்குக் கட்டிச் சதா நோய் உண்டாகி, வயிறு வீங்கிப் பசி, தாகம், நித்திரை இவை இல்லாதிருக்கும். இதற்கனுபானம் வெந்நீர்.

குறிப்பு.—எவ்வனுபானத்தில் நோய்க்கு உள்ளுக்குக் கொடுக்கப்படுகின்றதோ, அதையே அவ்விரணத்தின் மேலும் பூச வேண்டும்.

"முன்னிசைத்த வளியாதி மூவினைமுகப்பி
லான பனிரண்டு நோய்
பன்னிரு பொருண்மையானு பான
விதிபண்ணவே யஃதண்ணுமே
யன்னு நற்பெயரை யண்ணலானநலி
யேதமோதுநலி யாதலோ
யன்னவற்க முறையுன்னு நற்குறியை
யாயுள் வேதியர்களாய் வரே."

(மாபுராணம்.)

"ஆறிரு நோய்முத லாதி வளிக்கணே
வேறிலை மந்திர மேதரு பற்பமே
நூறுறு வயதுக்கு நோக்கிய மேற்பொருள்
கூறிய நிலத்திலக் கோமுதலானதே"

(திருமூவர்.)

## முத்துப் பற்பம் (வேறு).

ஆணிமுத்து பலம் (35 கிராம்) ஒன்றிற்கு இரண்டு பலம் (70 கிராம்) நொச்சியிலைச் சாறுவிட்டு, இரண்டுநாள் ஊற வைத்துப் பிறகு இருநாளரைத்து, மெல்லிய வில்லைகளாக்கி, இருநாளுலர்த்தி, நாற்பது வரட்டியில் புடமிட்டெடுத்து, நிலப் பனைக் கிழங்குச் சாற்றில் முன்போலவே இன்னொரு புடமிட் டெடுக்கப் பற்பமாம்.

## முத்து.

துணைமருந்தும் தீரும் நோய்களும்.—நீரில் கொள்ள மாலைக் கண் ரோகமும், பசுவின் பாலில் பித்த தோடத்தினால் உண்டாம் வெப்பமும், நிலத் துளசிச் சாற்றில் (கஞ்சாங்கோரை) வலியும், நிர்விடத்தில் நித்திரையில் உண்டாம் மருட்சியும், நிலவிளாச் சாற்றில் பித்த வேட்கையும், நொச்சிச் சாற்றில் வாயுவும் தேவதாருக் குடிநீரில் வாதரோகமும் வில்வயிலைச் சாற்றில் அதிசாரமும், ஆட்டுத் தயிரில் மேல்நோக்கிய வாயுவும், கரும்புச் சாற்றில் பிடிப்பு வாதமும், சர்க்கரையில் வாந்தியும், நெய்யில் சேவேறி இருக்கின்ற வெட்டையும், வெண்ணெயில் மூலமும் நீங்கும் என்ப.

## (வேறு.)

சுத்தி செய்த முத்திற்கு, வெண்கடுகிலை ரசம் விட்டு, முறைப் படி மூன்று நாளரைத்துப் புடமிட்டெடுக்கப் பற்பமாம். இப் பற்பத்தினால் தேமல், சலபந்தம், மேகப் பிணிகள் நீங்கும்.

## (வேறு.)

ஆயுர்வேத வைத்தியர்கள், முத்திற்குப் பசுவின்பால் விட் டரைத்துச் சிறு பில்லைகள் செய்துலர்த்தி, அகலிலிட்டு மண் சீலை செய்து, லகுபுடம் மூன்றிட்டு, பலம், காலம், தோடத்திற்குத் தகுந்தவாறு உபயோகிக்கின்றனர்.

அளவு : கால் (32 மி. கிராம்) முதல் ஒரு குன்றி (130 மி. கிராம்) வரை.

## (வேறு.)

முத்தைக் கல்வத்திலிட்டுப் பன்னீர்விட்டு எட்டு நாளரைத்து, உலர்த்தி எடுத்துக்கொள்வதே யூனானி முறை.

## முத்துச்சுண்ணம்.

சுத்தி செய்த முத்தை, சாரணைவேரினால் செய்த குப்பியில் வைத்துப் புடமிட்டெடுக்க சுண்ணமாம்.

துணைமருந்தும், தீரும் நோய்களும்.—நீரில் கொடுக்க வாத ரோகமும், நெய்யில் வெப்பமும், மோரில் பித்த ரோகமும் நீங்குமென்ப.

(வேறு.)

சுத்தி செய்த முத்திற்கு மூன்று பங்கு நிலக்கடம்புச் சாறு விட்டு மூன்று நாளரைத்து, வில்லை செய்துலர்த்திச் சில்லிட்டுச் சீலை செய்து புடமிட்டெடுக்கச் சுண்ணமாம்.

துணைமருந்தும், தீரும் நோய்களும்.—இச்சுண்ணத்தை வெற்றிலையில சுண்ணும்புக்குப் பதிலாய்த் தடவித் தாம்பூலம் தரித்து வந்தால், பல்லிறுகிப் பித்த கப தோடம் நீங்கிக் காச சுவாச க்ஷயம், அக்கினி மந்தம், விக்கல், அருசி முதலிய நோய்கள் நீங்கி, உடல் உரமாகிக் காயசித்தி உண்டாம்.

மேற்படி முத்துச் சுண்ணத்தின் பெருமையைக் கீழ்க்காணும் செய்யுளால் உணர்க.

''சுண்ணமா முத்து நீற்றை வெற்றிலை தன்னிற் பூசி
அன்னமே தாம்பூ லத்தை அருந்திட வதிக மாகும்
முன்னமே பல்லி றுக்குஞ் சிலேத்துமம் முழுதுந் தீரும்
வன்னமாந் தேகத்துக்கு வாய்த்திடுஞ் சுண்ண மாமே.''

(அக. பூ. சூத். 205.)

முத்துச் செந்தூரம்.

ஒரு பலம் (35 கிராம்) சுத்தி செய்த முத்திற்கு முல்லைச்சாறு, மருக்கொழுந்துச்சாறு, கோவைச்சாறு இவைகளைப் பற்பத்திற்குக் கூறிய அளவின் படி விட்டரைத்துலர்த்திப் புடமிட்டெடுக்கச் செந்தூரமாம்.

| துணை மருந்து. | தீரும் நோய். |
|---|---|
| நீர் .. .. .. .. | க்ஷயம். |
| சர்க்கரை .. .. .. | சூலை. |
| நெய் .. .. .. .. | மேகம். |
| வேலம்பட்டைச்சாறு .. .. | அரோசகம் |
| பனைவெல்லம் .. .. .. | சர்வசன்னி. |
| முலைப்பால் .. .. .. | பித்தசுரம். |
| வெண்ணெய் .. .. .. | மந்தசுரம். |
| தாமரைக்கிழங்கின் சாறு .. | வெள்ளோக்காள விக்கல். |
| மலைப்பச்சைச்சாறு .. .. | உட்டண விகாரம். |
| மோர் .. .. .. .. | மகோதரம். |
| பால் .. .. .. .. | பிரமை. |

## வைடூரியம்.

## CATS EYE, AGATE, LAHS-LAZULI, CHRYSO PRASE

வைடூரியம் வெண்மையான ஒளியும் பழுப்பு நிற ஒளியும் கொண்டு விளங்குவது. இதனைச் சிலப்பதிகாரம்,

''தீதறு கதிரொளித் தெண்மட் டுருவவும்''

என கூறுகிறது.

வயிடூரியமணி மூங்கில் இலை நிறம், மேக நிறம், மயிலின் பிடரி நிறம், பூனைக்கண் நிறம் இவைகளை ஒத்து விளங்குமெனவும், கனமும், தெளிவும், பலமும் மென்மையும் பொருந்திக் கையில் தாங்கிய காலத்தில் வலம், இடம், மேல், கீழ் ஒளிவீசுவனவாய் நான்கு வகுப்புகளையுடையதெனவும், தினந்தோறும் இதைப் பூசித்தே அணியவேண்டுமெனவும் ''கழையிலை கார்மயி லெருத் தம்'' என்னும் திருவிளையாடற் புராணத் திருவிருத்தத்தால் தெரி கின்றேம். இதனை உரைக்கல்லில் உரைத்துச் சோதனை செய்ய வேண்டுமென்று போகர் நூலில் கூறப்பட்டுள்ளது. மற்றும் அணியிலமைத்து இதனை அணிய, கடவுள் அருளும் வசியமும் உண்டாம் என்றும் சொல்லப்பட்டுள்ளது.

வைடூரியத்தில் சுழலும் வெண்மையான நூலிழை போன்ற உருவம் காணப்படும். எந்தப் பக்கம் திருப்பினாலும் அந்தப் பக்கம் இது தோன்றி ஒளி வீசும். இதை நூலிழை, நூலோட் டம் என்று கூறுவார்கள்.

பிஞ்ஜன் மாகாணத்தில், ரைன் நதியின் கிளையான நாகி நதிக்கரையில் இருக்கும் இடார் ஆபர் ஸ்டீன் ஜில்லாவில் வைடூரியங்கள் முக்கியமாக வெட்டப்பட்டு மெருகிடப்படு கின்றன. இப்போது வைடூரியக் கற்கள் பிரேசில் நாட்டி லுள்ள ரியோ கிராண்டி டோசல் என்ற இடத்திலிருந்தும் உருகுவேயிலிருந்தும் இறக்குமதி செய்யப்படுகின்றது.

### பொதுக்குணம்.

சீதவா தத்தொடுசி லேஷ்மம் புளியேப்பம்
காதுசூ லைநோய் கனத்தகுன்மம்—ஓதுபித்தம்
என்றுரைக்கும் நோய்களறும் எப்போதும் தோஷமிலை
நன்றுவை டூரியத்தினல்.

(பொ-ள்.) வயிடூரியத்தினல் கபவாதம், ஐயம், புளிஏப்பம், வருத்துகின்ற சூலை நோய், வாதகுன்மம், பித்தம், அபத்திய தோடம் முதலிய ஏழுவகைத் தோடங்களும் நீங்குமென்க.

### சுத்தி.

குதிரை, பசு, தேசி (கழுதை) இவைகளின் நீர்களொன்றில் வயிடூரியத்தை ஒரு நாள் ஊறவைத்து எடுத்து, சாம்பல் பூசணைக் காய் சாற்றில் ஒரு நாள் ஊறவைத்து, வெந்நீர் விட்டுக் கழுவி யெடுக்கச் சுத்தியாம்.

### பற்பம்.

சுத்தி செய்த வயிடூரியத்தைச் சிறுபீளை வேர்ச்சாற்றில் மூன்று நாள் ஊறவைத்துப் பிறகு வச்சிரக் குகையிலிட்டுச் சில்லிட்டுச் சீலை செய்து, மும்முறை கஜபுடமிடப் பற்பமாகும். இதனைப் பற்பமாகக் கொல்லன் உலையில் கரியின்மீது வைத்து மூசையமுக ஊதி ஆறவிட்டெடுப்பதும் உண்டு.

அளவு.—அரைக்கடுகு முதல் ஒரு கடுகு வரையாம்.

இதனைத் தேனில் கொடுக்கப் பித்தம் நீங்குமென்றும், பசியும், அறிவும், பலமும் ஆயுள் விருத்தியும் உண்டாம் என்றும் போகர் நூலில் குறிப்பிடப்பட்டுள்ளன. அன்றியும் பசுவின் நெய், வெண்ணெய் போன்ற தக்க துணைமருந்துகளில் கையாள, செய்யுளில் புகன்றுள்ள நோய்கள் நீங்குமென்று கொள்க.

## வைரம் (வசகிரம்.)

## DIAMOND.

இதனை "வலன் என்பு" என்பதும், "ததீசிமுனியின் முதுகந்தண்டெலும்பு" என்பதும், "தேவர்களுக்கு அமிர்தம் வழங்குகையில் சிந்திய துளி உலர்ந்து வைரமாயிற்று" என்பதும் புராண வரலாறுகளாகும். உடலில் வைரம்போல் கடினப்பட்டு நிற்கும் பொருள் வைரம் என்பதால் வலன் என்பு, ததீசி முனியின் என்பு என்னும் புராண வரலாறுகளும் கவனிக்க வேண்டுவனவாகும். நிற்க, மூவுலகிலுள்ள உலோக வகைகள், மணிவகைகள் அனைத்தையும் அறுத்துத் தொளை செய்கின்ற வன்மையும், எவ்வகையாயுதங்களாலும் எக்காலத்திலும் தொளைக்கப்பட முடியாத மேன்மையும் பெற்றமையால் இஃது இப்பெயர் வாய்க்கப் பெற்றதாமென்க. இதனை,

"வைரஊசியும் மயன்வினை இரும்பும்
செயிரறு பொன்னைச் செம்மைசெய் ஆணியும்
தமக்கமை கருவியும் தாமாம்."

என்றபேரகத்தியச் சூத்திரத்தால் உணர்க.

பிறக்குமிடங்கள் : தற்காலம் கோல்கொண்டா, டெக்கான், தென்ஆப்பிரிக்காவிலுள்ள ஜோன்பர்க் முதலிய இடங்களிலுள்ள சுரங்கங்களில் அதிகக் கடினமானவைகளும் ஒளியுள்ளவைகளும் விலைமதிக்கக்கூடாதவைகளுமான வைரங்கள் கிடைக்கின்றன. நம் நூல்களில் குறிப்பிடப்பட்ட வைரம் தோன்றும் எட்டு நாடுகளும் அவைகட்குள்ள நிறங்களும் கீழ்வருமாறு:—

| | நாடு. | நிறம். |
|---|---|---|
| 1 | கோசல நாடு .. .. | வாகைப்பூ நிறம். |
| 2 | கலிங்க நாடு .. .. .. | பொன் நிறம். |
| 3 | மதங்கம் .. .. .. | மல்லிகை நிறம். |
| 4 | இமயம் .. .. .. | வெண்மை நிறம். |
| 5 | மகாராஷ்டிரம் .. .. .. | செம்மை நிறம். |
| 6 | சவ்விரம் .. .. .. | கருநிறம். |
| 7 | புண்டரம் .. .. .. | குவளைநிறம். |
| 8 | மகதம் .. .. .. | பொன் நிறம். |

மற்றும் வயிரங்களுக்கு அதிதேவதைகளின் விவரங்களும் கூறப்பட்டுள்ளன.

1. வாகைப்பூ, வாழைப்பூ, மூங்கிற்பூ இவைகட்கு அதிதேவதை திருமால்.

2. ஆறு மூலைகளையுடைத்தாய் வெண்ணிறமமைந்த வைரத்திற்கு அதி தேவதை இந்திரன்.

3. பசுவின் கொம்பினுடைய பலநிறமுள்ள வைரங்களுக்கு அதிதேவதை இயமன்.

4. முள்ளிலவமலர், முன்முருக்கின் மலர் என்னும் இவைகளின் நிறமுடைய சிறந்த வைரமணிகட்கு அதிதேவதை வாயு.

5. கோங்கமலர் போலும் நிறமுள்ள வைரமணிகட்கு அதிதேவதை வருணன்.

6. தண்ணீரின் நிறம் வாய்ந்த வைரமணிகட்கு அதிதேவதை சந்திரன்.

7. இந்திரகோபப் பூச்சி நிறமுள்ள வைரங்கட்கு அதி தேவதை சூரியன்.

8. நெருப்பைப் போன்ற செந்நிறமுற்ற வைரங்கட்கு அதி தேவதை அக்கினி.

இவ்வெட்டனுள் சூரியனை அதிதேவதையாக உடைய வயிர மணியை, மாலையாகத் தரித்தல், பூசனை செய்தல் தவிர மற்றைய எவ்வித அணிகலனாகவும் கொள்ளப்படாதாம்.

**பிரிவுகள் :** இவ் வைரமணிகள் நான்கு வகுப்புகளுள்ளும், நான்கு நிறங்களுள்ளும் அடங்கும்.

''அந்தணன் வெள்ளை யரசன் சிவப்பு
வந்த வைசியன் பச்சை சூத்திர
னந்தமில் கருமையென் றறைந்தனர் புலவர்.''

அந்தண சாதி—வெள்ளை, அரச சாதி—சிவப்பு, வணிக சாதி —பச்சை, சூத்திர சாதி—கருமை.

மேற்கண்ட வகுப்புகளுக்கு, முறையே படிகம், முயல்கண் நிறம், வாழைக்குருத்து, ஆகாச நிறம் என்று திருவெண்காடர் புராணம் கூறும். நிற்க, வைசிய சாதிக்குப் பொன்னிறமென்பது போகர் கருத்தாம்.

**வருணம் நான்கின் பயன்** :—அந்தணர் அந்தண சாதியை அணிய எழு பிறப்பும் மறையவராகப் பிறந்து வாழ்வர் என்பதும், அரசர் அரச சாதியை அணியப் பூபாலராய்ப்பூமி யைப் புரப்பர் என்பதும், வணிகர் வணிகச் சாதியை யணிய மணியும் பொன்னும் தணிவற மலிந்து தரணியில் வாழ்வர் என்பதும், சூத்திரர் சூத்திர சாதியை அணியத் தொகை யில்லாத கனகமும் நெல்லும் மலிய மன்னிவாழ்வர் என்பது மாம்.

இதனை,

''மறையோ ரணியின் மறையோ ராகி
பிறவி யெழும் பிறந்து வாழ்வார்;
மன்னவ ரணியின் மன்னவர் சூழ
விந்நில வேந்த ராவரெழு பிறப்பும்;
வணிக ரணியின் மணிபொன் மலிந்து
தணிவற வடைந்து தரணியில் வாழ்வர்;
சூத்திர ரணியிற் றொகையில் கனகநெல்
வாய்ப்ப மன்னி மகிழ்ந்து வாழ்குவரே''

என்ற சூத்திரத்தால் உணர்க.

நிற்க, வைரத்தில் மூவகைப் பேதங்கள் உள : (1) ஆண் வைரம், (2) பெண் வைரம், (3) அண்ணர் வைரம்.

(1) ஆண் வைரம் : விருத்தம், பூரண களை, பிரகாசம், கனம், சம நீரோட்டம், தளுக்கு இவற்றை அடைந்து, கீற்றும் புள்ளியுமில்லாமல் இருக்கும். சூதத்தைக் கட்டும். புருடருக்கு ஆகும்.

(2) பெண் வைரம் : அறுகோணம், ரேகை, புள்ளிகளையுடையது. இதில் சூதம் சேர்ந்தால் சவுபாக்கியம், சம்பத்து, போகபாக்கியம், தேஜசு முதலியன உண்டாம். தரித்தால் சௌகரியமுண்டாகும். பெண்களுக்காகும்.

(3) அண்ணர் (அலி) வைரம் : முக்கோணமுடையதாய், உருட்சி பொருந்தி பிரகாசமில்லாதிருக்கும். கனமில்லாததால் அற்ப சத்துடையது. அற்ப பலனைக் கொடுக்கும். அண்ணர் காகும்.

இம்மூவகையுள் கடையிற் குறிப்பிட்டதைவிட, மற்றைய இரண்டும் ஒன்றற்கொன்று ஏற்றமுள்ளவையாம்.

### வச்சிரச் சோதனை.

புருட வைரமொன்றை பொன்னுரைக்கும் உரைகல் மீது பொருந்த வைத்து, இரும்புச் சம்மட்டியால் அடித்திட்டால், மயிரளவேனும் அசையாமலும், வெடியாமலும்,சிதையாமலும், அமிழ்ந்திடாமலும், சிதறாமலும் நிற்கும். மறு வச்சிரத்தால் கீற உடைந்தால், விலைமதியா வச்சிரமாகும். இதற்கே ''குலிசம்'' என்பது பெயர்,

### வச்சிரத்தின் குணம்.

தாரை, சுத்தி, நொய்மை, பலகை, எண்கோணம், அறுகோணம், ஐங்கோணம் இவ்வேழும் மேம்பாடுடைய குணங்களாம்.

இவற்றுள் நொய்மை, எண்கோணம், ஐங்கோணம் ஆகிய மூன்றை நீக்கி, மற்றைய நான்குடன் ''தராசம்'' என்பதைக் கூட்டி, குணம் ஐந்தெனவும் கூறப்படும்.

இதனை

" பலகை யெட்டுவ் சோறை மாறும்
இலகிய தறையுஞ் சுத்தியுந் தராசமு
மைந்துங் குணமென்ற ன்றைநதனர் புலவ
ரிந்திர சாபத் திகலொளி பெறினே "

என்று புகன்றிருப்பதால் உணர்க,

### வச்சிரத்தின் குற்றம்.

சரை, மலம், கீற்று, சப்படி பிளத்தல், தொளை, கரி, விந்து, காகபாதம் இருத்து, கோடி இல்லன, கோடி முரிந்தன, தாரை மழுங்கல் எனக் குற்றம் பன்னிரண்டாகுமென்ப. இதனை,

''சரைமலங் கீற்றுச் சப்படி பிளத்தூ
றுளைகரி விந்து காக பாத
மிருத்துக் கோடிக ளிலாதான முரித
ருரை மழுங்க றன்றோடு
ஈராறும் வயிரத் திழிபென மொழிப.''

என்ற சூத்திரத்தால் உணர்க.

இவற்றுள் காகபாதம் களங்கம், விந்து, ஏகை (கீற்று) என்னும் நான்கும் பெருங்குற்றங்களாம். இதனை,

''காக பாதமுங் களங்கமும் விந்துவு
மேகையு நீங்கி யியல்பிற் குன்ரு
நூலவர் நொடிந்த நுழைநுண் கோடி
நால்வகை வருணத்து நலங்கே ழொளியவும்.''

என்ற சிலப்பதிகார அடிகளால் உணர்க.

மிக்க குற்றங்களில் காகபாதம் கொல்லுமென்றும், மலம் (களங்கம்) கிளை கெடுக்குமென்றும், விந்து மனத்தில் சந்தர்ப்பத்தை விளைவிக்குமென்றும், கீற்று வரவினையேற்றவரை மாய்க்குமென்றும் பலன் கூறப்பட்டுள்ளன. இதனை,

''காக பாத நாகங் கொல்லும்
மலம்பிரி யாதது நிலந்தரு கிளைகெடும்
விந்து சிந்தையிற் சந்தா பந்தரும்
கீற்று வரவினை யேற்றவர் மாய்வர்.''

என்ற அடிகளால் அறிக.

### வைரத்தின் பொதுக்குணமும் செய்கையும்.

''ஆறுவித மாம்வயிரம் அவ்வவற்று மாரசங்கள்
வீறி நிலைத்திருக்கும் மேன்மையினல்—கூறுமவைக்
கெப்பிணியும் நீங்கும் இணையில் வனப்புண்டாம்
செப்பணியு மாமுலையாய் செப்பு.''

(பொ-ள்.) தேவ, பிரம க்ஷத்திரிய வைசிய, சூத்திர, சங்கர என்கிற ஆறுவகை வயிரங்களிலும் மகாரசங்கள் தங்கியிருப்பதால், அவைகளினல் கண் நோய் முதலிய பற்பல நோய்கள் விலகும். சரீர அழகுண்டாம் என்க.

வைரத்திற்கு உடல்தேற்றி, உடல் உரமாக்கி, வெப்பமுண்டாக்கி முதலிய செய்கைகள் உண்டென்றும், உடற் சத்துக்களையும் வன்மையையும் விந்துவையும் பெருகச் செய்யுமென்றும், பலவிதமான நோய்களையும் நீக்குமென்றும் கூறப்பட்டுள்ளன.

### சுத்தி.

வைரத்தைப் பெண்குதிரை நீரில் மூன்று நாள் ஊறவைத்து, வெய்யிலில் உலர்த்தி எடுக்கச் சுத்தியாம்.

### (வேறு.)

வைரத்தை எலுமிச்சம் பழத்தினுள் வைத்து, அகத்தியிலைச் சாற்றில் வேகவைத்து எடுக்கச் சுத்தியாம்.

### (வேறு.)

கண்டங்கத்திரி வேரை இடித்துச் சாறு பிழிந்து அதில் வைரத்தை நன்ருக ஊறவைத்து, கொள்ளு, தினை, அரிசி இவைகளைத் தூள் செய்து காய்ச்சிய கஞ்சியில் மூன்றுநாள் தோலாந்திரமாக பாகம் செய்ய வைரம் சுத்தியாம்.

### பற்பம்.

சுத்தி செய்த வைரத்தைப் பிரண்டைச்சாற்றில் மூன்று நாள் ஊறவைத்து, நான்காம் நாள் காய்ந்தபின் குகையிலிட்டுச் சீலை செய்து, கஜபுடமிட்டு ஆறவிட்டெடுக்கப் பற்பமாகும்.

### (வேறு.)

மூன்று வருடத்திய பருத்திச் செடியின் வேரை, முற்றிய வெற்றிலைச் சாற்ருலரைத்தெடுத்த கல்கத்தில், சுத்திசெய்த வயிரக் கற்களைப் புதைத்துக் கலயத்திட்டு மூடிச் சீலைமண் செய்து கஜபுடமிடவும். இங்ஙனம் ஏழு முறை செய்யப் பற்பமாம். பற்பம் வெண்மையையும் நீரில் மிதக்கும் தன்மையையும் பெற்றிருத்தல் வேண்டும்.

### அளவு, துணை மருந்து, தீரும் நோய்.

அளவு.—1/8 அரிசி (8 மி. கிரா.) எடையிலிருந்து 1/4 அரிசியெடை (16 மி. கிரா.) வரை தேனில் கொள்ள, நோய்கள் நீங்கி உடல் நன்மை அடையும். இதனை,

''நீறிய நீறு தன்னை நினைவதாய்த் தேனிற் கொள்ள
ஊறிடுந் தேக மெல்லாம் உற்றதோர் வைரம் போலாம்
மாறிடு மேனி யெங்கும் வச்சிர காய மாகும்.''

என்ற அகத்தியர் பூரண சூத்திர அடிகளால் உணர்க.

நிற்க, நீற்ருத வயிரத்தைக் குலிசமாய்க் கட்ட, அஃது அச்சம், துயரம் முதலியவற்றை நீக்கி இருதயத்தைப் பலப்படுத்தும் என்றும், பிரசவ வேதனைப்படுகிறவர்களுக்குக் கட்ட விரைவில் பிரசவம் ஆகுமென்றும், ஆறு கோணமுள்ளதை மோதிரத்தில் பதித்து அணிய காக்கைவலி போம் என்றும் கூறப்பட்டுள்ளன.

## வைரநஞ்சுக் குறிகுணங்களும் தீர்வும்.

நம் நாட்டிலும் மேலை நாடுகளிலும் வைரம் கொடிய நஞ்சென்று கருதப்படுகிறது. தற்கொலை செய்துகொள்ளும் பொருட்டு வைரத்தைப் பொடித்து உட்கொள்ளுவதுண்டு. இப்பொடி குடலில் புரளுங்காலத்து அதை அறுத்து, அதனுல், வயிறு நோதல், மலத்தில் இரத்தம் கலந்து விழல் முதலிய குணங்களைப் பிறப்பிக்கும்.

இதற்கு முரிவாய், வாழைப்பழம் முதலிய பசையும் வழுவழுப்பும் உள்ள பொருள்களையும் ஆமணக்கெண்ணெயையும் கொடுத்து வயிறு கழியுமாறு செய்யவேண்டும்.

இன்னும், தாமதியாமல் பசுவின்பாலில் நெய் சேர்த்துக் குடல் கொள்ளும் வரையில் குடித்துத் தொண்டை வரையில் கைவிரலை விட்டு வாந்தி எடுக்கும்படி செய்ய வேண்டுமென்றும் கூறப்பட்டிருக்கின்றது.

## வேறுவித மணிகள்.

மேரு மலையில் விளையும் கோரவல்லி, கனக கோரவல்லி என்றிரண்டுடன் வேறுவித மணிகளும் உண்டு. ஆயினும், மேற்சொல்லிப் போந்த இரண்டு மணிகளுள் ஏதேனும் ஒன்று கிடைக்குமாயின், அதனுல் எத்தகைய விடங்களும் நீங்குமென்பதும், அது நமக்குக் கிட்டினுல், ஏனைய மணிகள் தேடாமலே கிடைக்குமென்பதும் ''நல்வியற் கோரவல்லி'' என்னும் வெண்காட்டடிகள் புராணத் திருவிருத்தத்தாலறியலாம். இயற்கை மணிகளேயல்லாமல், செயற்கை மணிகளும் உள. அவற்றை வைத்திய நூலாராய்ச்சியுடையோர் வைப்பு எனக் கூறுவர். பச்சை வைப்பு, முத்து வைப்பு, பவழ வைப்பு எனக் கூறும் நவமணி வைப்புகளும், சுயமணியையொத்தே விளக்கமுறும் என்பதனை ''அத்தனை மிந்தியத்தால்'' என்னும் வெண்காட்டடிகள் புராண விருத்தத்

தாலறிக. மானிடர்களுக்குக் கிடைத்தற்கருமையான மணிகள் நான்கு உள. அவை நாகரத்தினம், கவுத்துவ மணி, சிந்தாமணி, கிரீட மணியாகும். இவற்றை ''மாநாக மீன்ற'' என்னும் வெண்காட்டடிகள் புராண விருத்தத்தால் தெளிக.

நவமணி பற்பம், நவமணி சேர்ந்த பூரணச் சந்திரோதயம், நவரத்தின கண்ணேய் மாத்திரை, இரத்த பூபதி முதலியவை நவமணிகள் சேரும் பெருமருந்துகளாம்.

## நவரத்தின பற்பம்.

''சொற்கனக ரத்தின நவத்திலொரு காசெடை
அர்க்கவடிப் பாலதனை விட்டரை யுலர்த்திடு
மிக்கபுட மிட்டிட வெழும்துரிய நீறதாய்
விட்டதனில் வைத்தரச பற்பமதி லோரெடை
வர்க்கநறு நெய்துளி மதுத்துளி தனித்திட
மருட்பிரமை விக்கல்பொரு மல்லிருமலோடிடும்
துக்கவிஷ மற்றிடு சுரத்தோடு கனத்தநோய்
அற்றுவிடு மித்தனையும் பற்பநவ ரத்நமே.''

(பொ-ள்) நவரத்நம் 1 காசெடை எடுத்துக் கல்வத்திட்டு எருக்கம் பால் விட்டு நன்றாய் அரைத்து, வில்லை செய்து உலர்த்திக் கனபுடமிட்டெடுத்துப் பார்க்கப் பற்பமாம். இப்பற்பத்துடன் இரச பற்பம் சமவெடை சேர்த்துப் பசுவின் நெய் அல்லது தேன் கலந்து கொடுக்க, மயக்கத்தைத் உண்டு பண்ணுகிற பிரமை, விக்கல் பொருமல், இருமல், வருத்தத்தை உண்டுபண்ணுகின்ற விடம், சுரம், பெரும்பிணிகள் முதலியன நீங்கும் என்ப.

## நவரத்தின பூபதி.

நவரத்தின பற்பம், தங்க பற்பம், அரிதார பற்பம், வெள்ளி பற்பம், தாம்பிர பற்பம், அய பற்பம், வங்க பற்பம், அப்பிரக பற்பம், இரச பற்பம், கெந்தக பற்பம், காந்தபற்பம் சமவெடை நாபி மொத்த எடைக்கு 8-ல் 1, நேர்வாளம் மொத்த எடைக்கு 8-ல் 2 கூட்டி, பாகலிலைச் சாற்றில் 1 நாள், இஞ்சிச்சாற்றில் 1 நாள் அரைத்து உலர்த்திக் குப்பியிலடைத்து வாலுகாயந்திரத்தில் 4 சாமம் கமலாக்கினியாக எரித்து எடுத்து, மீன் பித்து விட்டரைத்து உருண்டை செய்து உலர்த்தி எடுத்துக்கொள்ளவும்.

அளவு.—நோயின் பலம், நோயினன் பலம் இவற்றை அறிந்து, குன்றி வரையில் கொடுக்கவும்.

தீரும் நோய்.—தக்க அனுபானத்தில் கொடுக்க, பெரும்பிணிகள் பலவும் நீங்கும்.

# VI. உபரசம்

## அப்பிரகம்

## * MICA

உபரசம் நூற்றிருப (120) துள் ஒன்றாகிய அப்பிரகம் பூவிந்து நாதம், மனோன்மணி நாதம், பிரகாச சக்தி, கேசரம், கௌவம், மாவிந்து, அம்பரம், காக்கைப்பொன், துல்லியம் என்ற வேறு பெயர்களினாலும் வழங்கப்படுகின்றது. இது, மலைகளில் முக்கியமாய்க் கிடைக்கின்றது. அன்றியும் இந்தியாவில் நெல்லூர், அஜாரிபாக், மத்தியமாகாணம், இராஜபுதனம், தரங்கம்பாடி போன்ற இடங்களிலும் அப்பிரகம் கிடைக்கின்றது. இது, படல் படலாகவும், ஒளியுடனும் வளையத்தக்கதாயும், மிருதுவாகவும் இருக்கும். இது மருந்துசெய் பாகங்களுக்கும் பல்லக்கு, விசிறி, மணவறை முதலியவற்றை அலங்கரிப்பதற்கும் உபயோகமாகின்றது. இதனை, சிங்களவர் "மிர்னன்" என்று கூறிக் குடைகளுக்கு அலங்காரம் பண்ணுவதற்குப் பயன்படுத்துகின்றனர்.

போகர் ஏழாயிரம் (7,000) மூன்றும் காண்டத்தில், பார்வதியின் ருது பூமியிலும் மலைகளிலும் படிந்து அப்பிரகம் உற்பத்தியான தென்றும், இது நால்வகைச் சாதியையும் நான்கு வகை நிறத்தையும் பெற்றிருக்கிறதென்றும் கூறப்பட்டிருக்கிறது. அவை, பினாக அப்பிரகம், நாகாப்பிரகம், மண்டூகா அப்பிரகம், வச்சிர அப்பிரகம் ஆகும்.

பினாக அப்பிரகம், ஏம நிறமுடையதென்றும், கட்டியை உலையில் வைத்துத் துருத்திகொண்டு ஊத, மடல் மடலாய் விண்டு போய் வாயுவைக் கண்டிக்குமென்றும், ரசத்தைக் கட்டுமென்றும்; நாகாப்பிரகம், வெள்ளை நிறங்கொண்டதென்றும், உலையில் வைத்தூத நல்லபாம்பு போலச்சீறுமென்றும், இதுவும் மண்டூகாப்பிரகமும் ஒன்றுக்கும் ஆகாதென்றும்; வெண்மை நிறத்தையுடைய மண்டூகாப்பிரகத்தைக் கொல்லனுலையிலிட்டூத, தவளையைப்போலக் குதித்து விழுமென்றும், அதில் சிவந்த தேன் வர்ணங் காணுமென்றும்; வச்சிர அப்பிரகம், கருநிறத்தையுடையதென்றும், இரட்டைத் துருத்தி வைத்தூதினாலும் அசையாமல் கிடக்குமென்றும், உத்தமமென்றும், காயசித்தி யோக சித்திகளை உண்டாக்குமென்றும் கூறப் பட்டிருக்கின்றன.

நாக அப்பிரகம் கபத்தையும், மண்டூக அப்பிரகம் நோயையும் உண்டு பண்ணும் என்றும், வச்சிர அப்பிரகம் சகல வியாதியையும் தீர்க்கும் என்றும் கூறி இருத்தலைக்காண்க. நிற்க, நாம் இதனை மருந்தாக உபயோகிக்கில், பற்பமாகவாவது, செந்தூரமாகவாவது, சுண்ணமாகவாவது, களங்கு சத்தாகவாவதுதான் உபயோகிக்க வேண்டும்; இதனை மருந்தாக்குமுன் சுத்தி செய்து

* Mica is a rack farming mineral: It is a silicate of aluminium together alkalies and basic hydrogen.

கொள்ளவேண்டும். சுத்தி செய்யாவிடினும் சரியாய்ப் பற்ப மாக்காவிடினும் விடமித்து, இடுமருந்தால் நேரிடும் துன்பத்தைப் போல இதுவும் தீங்கை விளைவிக்கும். இதைக் கீழ்க்காணும் பிரமாணங்களினு லறியலாம்:

''சுத்தி செய்யா வப்பிரகந் துய்த்தார்க்குச் சோபையுடன்
சத்திரத்த காசந் தாழையுமே—மெத்த
விடுமருந்துக் கேய்ந்த குணமெல்லா யமைந்து
கெடுமருமைத் தேகமிதைக் கேள்.''

''தப்பித மிலச் சிறிது தப்பிலது தப்புமிகு
தத்துவரு முப்பிச மதே.''

''இந்தவப் ரகபற் பத்தா லெவர்க்குமின் பங்க ளுண்டா
முந்துமிச் சரக்கின் சுத்தி முறையெனி லின்றேற் றுன்பம்
வந்திடு மிதனுன் மெத்த மருந்திடு கெடுதி போல
அந்தநோ யகற்று மாறே தறிந்திடின் றேன்றி சுக்கே.''

(தே. சேகரப்போ.)

நிற்க, ''வன்மையா மப்பிரகத்தை உள்ளது சொன்னேங் காடி தன்னிலே ஊறப்போடே'' என்னும் தொடரினுல் காடியில் ஊற வைத்தெடுக்கச் சுத்தியாமென்றும் அறியலாம்.

சேகரப்பாவிலே கூறப்பட்டுள்ள முறை பின்வருமாறு:—

அப்பிரகம் ஒரு பங்குக்கு, எட்டுப் பங்கு அகத்திமலர்ச் சாறெடுத்துக் கடத்திலிட்டு, அப்பிரகத்தை அச்சாற்றில் மூன்று நாட்கள் ஊறவைத்தெடுத்துப் பின்பு முன்போலவே புளித்த கழுநீரிலும், எருக்கின் பூச்சாற்றிலும் மும்மூன்று நாட்கள் ஊற வைத்துக் கழுவி எடுக்கச் சுத்தியாம்.

அப்பிரக நவநீதம் (தான்யாப்பிரகம்) செய்து கொள்வதும் ஒருவகைச் சுத்தியாம். இம் முறையினைக் கீழ்க்காணும் செய்யுளினுல் அறியலாம்:

''போக்காக வப்பிரக சுத்தி தன்னைப்
பூட்டுகிறேனப்பிரகம் படிதா னென்று
வாக்காகக் கோமயத்தின் படிதான் மூன்று
வகைகண்டு சமனுக விரவி வைத்து
வீக்குவா யிரண்டுபடி நீர்தான் வற்ற
வெந்தபின் சுணையுள்ள நெல்லிற் சேர்த்துத்
தாக்கியே கிழிகட்டிப் புளித்த காடி
தனில்விட்டுக் கசக்கிடவே கரையும் பாரே.''

மற்றும், கிருஷ்ண அப்பிரகத்தை மூன்று நாள் புளிப்புமோரில் ஊறவைத்து, நான்காவது நாள் உரலில் இட்டு மெல்லிய பொடியாய் இடித்து, மறுபடியும் மூன்று நாள் புளித்ததண்ணீரில் ஊற

வைத்து, ஒரு சட்டியின் வாய்க்குச் சவுக்கத்துணி கட்டி, அதன் மீது பொடியைப் போட்டு, அதற்கு அரைப்பங்கு நெல்லையும் அதில் போட்டு, நீராகாரம் விட்டுக் கொஞ்சம் கொஞ்சமாய்ப்பிசைந்து வடிக்கட்டினால், அப்பிரகப் பொடி நீரோடு சேர்ந்து சட்டியி லிறங்கும். பிறகு அதைத் தெளிய வைத்து மேலே இருக்கிற நீரை ஊற்றிவிட, அடியில் வெண்ணெயைப் போலிருக்கும். இதுவே அப்பிரக நவநீதம்.

தேரன் யமக வெண்பாவில் கூறப்பட்ட சுத்தி முறை கீழ் வருமாறு :—

ஒரு பலம் (35 கிராம்) அப்பிரகப் பொடிக்கு, எருக்கு சமூலச் சாறு ஐந்து பலமும் (175 கிராம்) பொடித்து வஸ்திரகாயம் செய்த செங்கல் சிட்டப்பொடி ஒரு பலமும் (35 கிராம்) சேர்ந்த ஆறு பலத்தை (210 கிராம்) விட்டுக் காலைமுதல் மாலைவரை வெய்யி லில் வைக்கவேண்டும். இவ்விதம் 10 நாட்கள் வரை ஒவ்வொரு நாளும் செய்ய வேண்டும். பிறகு இரண்டு நாட்கள் சாறுவிடா மல் உலர்த்தி, மீண்டும் முன்போலவே ஒரு முறை செய்து, எருக்கின் சாறு 67 பலம் (2,345 கிராம்) சிட்டப் பொடி 13 பலம் (455 கிராம்) சேர்ந்த 80 பலத்தை (2,800 கிராம்), அப்பிரகத் துக்குச் சேர்த்து சட்டி கொண்டு மூடி சீலை செய்து, ஒரு கஜ சதுரக்குழி தோண்டி, அதில் அரை கஜ அளவு சாம்பலைக் கொட்டி அதன் மேல் சட்டியை வைத்து, அக்குழி நிறையச் சாம்பலைக் கொட்டி மூடிவிடவும். இருபது நாள் சென்றபின் எடுக்க, அதன் ஆவியால் வெப்பம் மேலேறி, அதிக வேகமுள்ளதாயிருக்கும். பிறகு கழுவி எடுத்துக் கொள்ளச் சுத்தியாம்.

பொதுவாக அப்பிரகத்தினால் செய்யப்பட்ட மருந்துகள் துவர்ப் புச் செய்கையும், உடல் உரமாக்கிச் செய்கையும், காமம் பெருக் கிச் செய்கையும், உடல் தேற்றிச் செய்கையும் உடையன. இதன் குணத்தைக் கீழ்க்காணும் செய்யுளினாலறியலாம்:

''அப்பிரகமென் றறைந்தால் அண்டம் கோதாரமும்
எப்பிரமி யங்களுமுன் னீரிழிவும்—வெப்பூரற்
பேதமும்போ மேகப் பித்தமுங்கண் ணோய்களும்பால்
வாதமும்போந் தாதுவுமா மால்.''

(ப.கு.)

(பொ-ரை)—அப்பிரகத்தினால் பீஜவாயு, பெருவயிறு, பிரமேகம், அதி மூத்திரம், சுரம், நமைச்சல், மேகபைத்தியம், கண்ணோய், வாதரோகங்கள் தீரும்; வீர்ய விர்த்தி உண்டாகும்.

நிற்க, ''அப்பிரக பற்பத் தருமையாரறிவார், செப்புமுன்னே நீர்க்கட்டு தீருமே'' என்ற தொடரினால் இது நீர்க்கட்டுக்கு சிறந்த தென்பதையும் அறியலாம். மற்றும், இதன் உபயோகத் தினைப் பற்ப செந்தூர அனுபானப் பிணிநீக்கத்தின் கீழ் விளக்கு வோம்.

கீழ்க்காணும் பட்டியில் கர்ணுமாறு அப்பிரகத்தைப் பற்பித்துக் கொள்ளலாம்.

ஒரு பலம் (35 கிராம்) சுத்தி செய்த அப்பிரகப் பொடிக்கு:

| சாற்றின் பெயர். | சாற்றின் அளவு | அரைக்கும் நாள். | வில்லை உலர்த்தும் நாள். | கவசித்து உலர்த்தும் நாள். | புடத்துக்கு வரட்டி. |
|---|---|---|---|---|---|
| 1. கொத்தவரைச்சாறு | 6 | 6 | 5 | 1 | 40 |
| 2. நீலோற்பலச்சாறு | 5 | 5 | 4 | 1 | 36 |
| 3. கட்டுக்கொடியிலைச்சாறு | 4 | 4 | 3 | 1 | 30 |
| 4. பசுமூங்கிற்கிழங்குச்சாறு | 3 | 3 | 2 | 1 | 27 |

மேற்கண்டவாறு முடித்த பற்பத்தின் அளவு யாதெனில் கடலையின் கால் கூறு உத்தமம்; அரை, முக்கால், முழுக்கூறுகள் முறையே மத்திமம், அதமம், அதமாதமமாகும். மேற்படி பற்பம், பிரமாத்திரப் பிரயோக மென்றும், காருடப்பிரயோக மென்றும் சிறப்பாகக் கூறப்பட்டிருத்தலைக் கீழ்க் வரும் பாவா லறிக:

''அப்பிரகப்பொடி யாலே பலனுண்டா
மப்பிரகப்பொடி யாகு மயன்படை
யப்பிரகப்பொடி யாங்கரு டப்படை
யப்பிரகப்பொடி யாமது சர்வமே.''
(திருமூலர் திருமந்திரத் திரட்டு.)

அப்பிரக பற்பத்திற்கு அனுபானமும் பிணிநீக்கமும்:

''மண்ணைப்பூ சம்பீர மாலலங்கல் பானெய்தயிர்
மண்ணைப்பூ சம்பீர மாதறல்கள்—மண்ணைப்பூ
கோவுழையன் பற்றல்விடல் கோலமிகு லல்கல்பந்தம்
கோவுழையன் பற்றளர்வு கொள்.''

(ப-ரை.) மண்ணைப்பூசம்—பேய்ப்புடலஞ்சாறு, பீரம்—பேய்ப் பீர்க்கின் சாறு, மாலலங்கல்—துளசிச்சாறு, பால்—பசுவின் பால், நெய்—பசுவின் நெய், தயிர்—பசுவின் தயிர், மண்ணைப்பூ—வெங்காயப்பூச்சாறு, சம்பீரம்—எலுமிச்சம் பழச்சாறு, மாது—தாய்ப் பால், அறல்—குளிர்ந்த நீர், கள்—தென்னங்கள், பனங்கள், ஈச்சங்கள் (கீழ்க்காணும் நோய்களுக்கு அப்பிரக பற்பத்தை முறையே மேற்கண்ட அனுபானங்களில் கொடுக்கவும்.): மண்ணைப்பூ—கபசந்நி, கோ—வாத சந்நி, உழையன்—பித்த சந்நி, பற்றல்—கபத்தையும் வாதத்தையும் பித்தத்தையும் பற்றி வரும் பிணிகள், விடல்—கபத்தையும் வாதத்தையும் பித்தத்தையும் விட்டுப் பிரிதலினால் உண்டாம் பிணிகள், கோலமிகல்—

நீரிழிவு, அல்கள்—நீர் அருகல், பந்தம்—நீர்கட்டு, கோவுழை—கண்வலிப்பு, கண்ணீர் வடிதல், கண்ணெரிச்சல், பீளைசாறல், இவைகளுக்குக் கடைசியாகச் சொன்ன ஈச்சங்கள்ளிலும், அன்—கண்கட்டி, பரு. வீக்கம், புருவ வலிப்பு, அருகல் முதலிய பிணிகளுக்கு மேற்படி ஈச்சங்கள்ளுடன், பற்று—நேத்திர வாயுப் பல்லைக்கு மேற்படி ஈச்சங்கள்ளுடன் குப்பைமேனிச்சாறு கலந்து அனுபானித்தும் அளவு—நேத்திர வாயு சூலைக்கு மேற்படி கள்ளுடன் நொச்சியிலைச் சாறு கலந்ததிலும், கொள்—நீரொழிகிப் பீளை வடிதலுக்கு மேற்படி கள்ளுடன் கற்றாழைச்சாறு கலந்ததிலும் கொடுக்கத் திருமென்றவாறு

மற்றும் மேற்படி அப்பிரக பற்பத்தை விடங்களுக்கு உபயோகிக்கும் வகை :

"ஆயிலியங் கார்த்திகை தூயளூர்தி வண்டெலிநாய்
ஆயிலியங் கார்த்திகையீ யானளுவீ—யாயிலியம்
வெள்ளைக்குஞ் சற்கிமணி வெட்டாலை கள்ளிவன்னி
வெள்ளைக்குஞ் சற்கிகைமை மெய்".

(பெ-ரை.) ஆயிலியம்—நல்ல பாம்புக் கடிவிடம், கார்த்திகை—தேள்கடி, தூயள்ஊர்த்தி—பூரான் கடி, வண்டு—வண்டுக்கடி, எலி—எலிக்கடி, நாய்—நாய்க்கடி, ஆயிலியங்கு—மூஞ்சூறு கடி, ஆர்த்தி—நட்டுவக்காலிக்கடி, கை—மரவட்டைக்கடி, யீ—நரிக்கடி யான்-செய்யான்கடி, நளு—அட்டைக்கடி, ஈ—காரிக்கடி; ஆயிலியம்—மேற்கூறிய கடிகளுக்கு) முறையே அனுபானமாவன வெள்ளைக்குஞ்சு—வெண்குன்றிச் சர்வாங்கச்சாறு, 'அற்கி—வெள்ளெருக்கின் சாறு, மணி—உத்தாமணிச்ச மூலச்சாறு, வெட்பாலை—வெட்பாலைப் பட்டைச்சாறு, கள்ளி—இலைக்கள்ளிச்சாறு, வன்—வன்னிசமூலச்சாறு, நி—மலைவேம்பு இலைச்சாறு, வெள்—வெள்ளறுகின்சாறு, ஐக் குஞ்சு—தண்ணீர் விட்டான் கிழங்குச்சாறு, அற்கி—ஓரிலைத் தாமரைச்சாறு, கை—கரிசாலைச் சாறு. மை—ஆடு தின்னாப் பாளையைச் மெய்—குப்பைமேனியிலைச் சாறு இவற்றுடன் கொடுக்க விடந்திரும்.

திற்க, எவ்வகைப் பிணிக்கும் முக்கியமான அனுபானம் துளசிச் சாறுகு மென்றுணர்க.

மருந்திட்டைத் தீர்க்க அப்பிரகத்தின் ஆட்சி

"என்றூழி லேகிருமி யென்னமருந் தீடசத்தி
என்றூழி லேகிருமி யெய்க்குமுனே—யென்றூழி
பூரவள்ளி யப்பிரகைப் பொய்த்தாலி தேமுளகற்
பூரவள்ளி யீயஃதும் போம்."

(பொ-ரை.) : கோடை வெய்யிலிலகப்பட்டுத் துடிக்கின்ற புழுப் போலத்தேகம் வெதும்பி நைந்து குடல், ஈரல், தாதுக்கள் முதலியன உண்மை அற்றுப்போகத்தக்கதாய்த் தம்கைவசப்பட்ட ஆடவர் தம்மைவிட்டு நீங்காதிருக்கும்படி பரத்தையர் செய்கின்ற மருந்திடுதல் இரு வகைப்படும்.

ஊனினுல் செய்யப்படும் மருந்தில் பேய்நாய், பேய்நரி, பச்சைப பாம்பு இவைகளின் நெய், நிலம்புரண்டி, அழுகண்ணி, தொழு கண்ணி, தம், குறிகளிலும் அங்கங்களிலும் உண்டாம் மலின நீர் இவை போன்றவைகளையும்; விடச்சரக்கினுல் செய்யப்படும் மருந் தில், வெள்ளைப் பாடாணம், மயில் துத்தம், மெழுகு, பாவிரிவேர் குறிகளில் உண்டாம் மலின நீர் இவை போன்றவைகளையும் சேர்க் கின்றனர். இம்மருந்தைப் பழகவைத்து ஆடவர்களுக்கு உண வாதிகளிலும் தாம்பூலத்திலும் அவர்களுக்குத் தெரியாது பரத் தையர் கலந்து கொடுத்து விடுகின்றனர். கின்னுட்கள் கழிந்த வுடன் அம்மருந்து உடலைப் பற்றி, குடலையும் ஈரலையும் சேர்ந்து விடுகின்றது. அஃது உள்ளே ஊற ஊற வயிறும் குடலும் விம்மிப் பருமனுகப் உப்பி, மேல் சுவாசத்துடன் வலியையும் அதிகப் படுத்துகின்றது. நாட்செல்லச் செல்ல, கபம் அதிகரித்துக் கண் டத்தில் எப்பொழுதும் கோழிக் குஞ்சு, கின்னரம், கிழநரி முதலிய வற்றின் ஒலியை ஒப்ப ஒருவித சப்தமும், விக்கலும், இருமலும், வாய்நீர்ப் பெருக்கமும், அரோசகம், ஒக்காளம், உணவு வேண் டாமை, பலக்குறைவு, இளைத்தல் முதலிய துன்பங்களும் உண்டாகி உயிருக்கும் ஆபத்தை உண்டுபண்ணுகிறது.

இத்தகைய மருந்திடுதலினுல் உண்டாம் தீங்கை நீக்குமுபாயம் யாதெனில், நன்ருய் முடிந்த அப்பிரக பற்பத்தைக் கற்பூரவள்ளி இலைச்சாற்றிலே அனுபானித்துக் கொடுத்தலாகும். மற்றும் சுத்தி யின் கீழ்க்கூறியவாறு அப்பிரகம் சுத்தியாகாவிடினும், நன்ருக முடியாவிடினும் மருந்தீட்டின் குறி குணங்களைக்காட்டும். அத் தீங்கை நீக்க, வயிரத்தை அறுக்க வயிரத்தையே ஆயுதமாய் உபயோகிப்பதுபோலச் செம்மையாய்ச் சுத்தி செய்து நன்ருக முடிந்த அப்பிரகத்தை கர்ப்பூரவள்ளிச் சாற்றில் கொடுக்கத் தீரும்.

அப்பிரக பற்பத்தை, ஒரு மண்டலம் வரைக்கும், புளி, புகை யிலை, பெண் போகம், கடுகு, மதுபானம், அகத்திக்கீரை இவை களை நீக்கிச் சாப்பிடவேண்டும். பத்தியத்திற்கு எது கூட்டினு லுங் கூட்டலாம். பெண்போகம் ஏற்பட்டால் மரணத்தை உண்டாக்குமென்றும் கூறப்பட்டுள்ளது.

### அப்பிரகச் செந்தூரம்.

ஒரு பலம் (35 கிராம்) சுத்தி செய்த அப்பிரகப் பொடிக்கு :

| சாற்றின் பெயர். | சாற்றின் அளவு. | அரைக்கும் நாள். | வில்லை உலத்தும் நாள். | கவசம் உலர்ததும நாள். | புடததுக்கு வரட்டி. |
|---|---|---|---|---|---|
| 1. கொமபுப் பாகலின் இலைச்சாறு .. | 4 | 4 | 3 | 1 | 30 |
| இவ்வாறே மீண்டும மூமமுறை செய்யவும. | | | | | |
| 2. பழச் சாறு .. .. | 7 | 7 | 6 | 1 | 30 |
| இவ்வாறே மீண்டும அறுமுறை செய்யவும. | | | | | |

அளவு, நாளளவு இவற்றைப் பற்பத்தின் கீழ்க்காண்க. அப்பிரகச் செந்தூரத்தின் அனுபானமும் பிணிநீக்கமும் கீழ்ச்செய்யுளாலறியலாம்.

''வீசவளிக் காமலகை வெப்புக் கறலனற்கால்
வீசவளிக் காமலைக்கு வெம்புனலே—வீசவளி
யைக்கிழுது வெப்பிற் கமுதுசனிக் காவாரை
யைக்கிழுது மெய்க்கயினி யாம்.''

(ப-ரை.) வீசவளிக்கு ஆமலகை—அண்டவாயுவிற்கு நெல்லிச் சாற்றிலும், வெப்புக்கறல்—சுரத்திற்குத் தண்ணீரிலும், அனற்கு ஆம்—காரகத்திற்குக் கையாந்தகரைச் சாற்றிலும், வீசவளிக்கு ஆம்—மரணத்திற்கு ஏதுவான வாயுவுகளுக்கு. வெந்நீரிலும், மலைக்கு வெம்புனல்—பிடிப்புகளுக்கு உத்தாமணிச் சாற்றிலும், வீசவளி—காக்கைவலிக்குப் பருத்தியிலைச் சாற்றிலும், ஐக்கு இழுது—இருமலுக்கு பசுவின் நெய்யிலும், வெப்பிற்கு அமுது—தாபசுரத்திற்குத் தாய்ப்பாலிலும், சனிக்கு ஆவாரை— சன்னி தோடத்திற்கு ஆவாரைச் சாற்றிலும், ஐக்கு இழுது—சேத்தும சன்னிக்குக் கள்ளிலும், மெய்க்கு அயினி—மேனிக் குட்டத்திற்கு நீராகாரத்திலும், ஆம்—கொடுக்க நீங்குமாம்.

இச்செந்தூரம் மேக நீரையழித்துச் சரீரத்தை அழிவின்றிச் செய்யும் என்றும் கூறப்பட்டுள்ளது.

## வேறு முறைகள்.

சுத்திசெய்த அப்பிரக நவநீதம் 1 பலம் (35 கிராம்) எடுத்து ஒரு பீங்கான் கோப்பையில் சேர்த்து, நவநீதம் நன்றாய் ஊறும்படி மூன்று நாள் வரைக்கும் காட்டுச் சாமந்திச் சாறு விட்டு வந்து, நான்காம் நாள் தொடங்கி இச்சாறு விட்டே மெழுகு போலாகுமட்டு மரைத்து, இலேசாகச் சிறு பில்லைகள் செய்து, நிழலில் மூன்று நாள் உலர்த்திப் பிறகு வெய்யிலில் நன்றாய்க் காயவைத்து, சில்லிட்டுச் சீலை செய்துலர்த்தி, 50 எருவில் புடமிடவும். இவ்வாறே ஏழு புடமிட்டெடுக்கச் செந்தூரமாகும். இச்செந்தூரம் மகநீருக்கும் அதி மூத்திரத்திற்கும் நல்ல பலன் தரும்.

## (வேறு)

சுத்தி செய்த அப்பிரக நவநீதம் பத்துப் பங்குக்கு, சுத்தி செய்த கந்தகம் ஒரு பங்கு சேர்த்து (1) எலுமிச்சம் பழச்சாறு விட்டு மைபோலரைத்து, மிக்க இலேசான காசளவில் சிறு பில்லைகள் செய்து, வெய்யிலில் நன்றாய் உலர்த்திப் பிறகு புடமிட்டு எடுத்து, தேறிய எடைக்குப் பத்தில் ஒரு பங்கு சுத்தி செய்த கந்தகம் கூட்டி, (2) கரிசாலைச் சாற்றில் முன்கூறியது போன்றே அரைத்துப் புடமிட்டு எடுத்து, (3) முன்போலவே தேறிய எடைக்குப் பத்தில் ஒரு பங்கு கந்தி சேர்த்து, சிறு செருப்படைச் சாற்றில் ஒரு புடமும், (4) முருங்கைப்பூ ரசத்தில் ஒரு புடமும் (5) பொடு

தலைச்சாற்றில் ஒரு புடமும் வைக்கச் செந்தூரமாகும். உட்கொள்ளும் அளவு கால் (122 மி. கிராம்) முதல் ஒரு பணவெடை (488 மி. கிராம்) வரை.

## சொர்ணப்பிரகச் செந்தூரம்.

அப்பிரகச் செந்தூரம் அரைப்பலம் (17.5 கிராம்), பவழ பற்பம் அரைப்பலம் (17.5 கிராம்), குந்தனத் தங்கத்தகடு கால்பலம் (8.75 கிராம்), இரசப்பதங்கம் அரைப்பலம் (17.5 கிராம்), அயக்காந்தச் செந்தூரம் அரைப்பலம் (17.5 கிராம்) கருவங்கச் செந்தூரம் அரைக்கால் பலம் (4.4 கிராம்) இச் சரக்குகளைக் கல்வத்திலிட்டு கற்றாழைச்சாறு விட்டு தங்கத்தின் மின்னல் மறைகிற வரைக்கும் அரைத்து, வில்லை செய் துலர்த்தி, சில்லிட்டு மூன்று மண்சீலை செய்துலர்த்தி, 20 வரட்டியில் புடமிட்டு ஆறியபின் எடுக்கவும். பிறகு வில்லை எடைக்கு அரை எடை சுத்தி செய்த கந்தியும், கந்தி யெடைக்குப் பாதி இலிங்கமும் சேர்த்துக் கல்வத்திலிட்டுக் கற்றாழைச்சாற்றால் நன்றாக அரைத்து, வில்லை செய்து உலர்த்தி, முன்போல 20 வரட்டியில் புடமிடவும். இவ்வாறு மேலும் ஏழு புடமிடின் செந்தூரமாகும்.

அனுபானம் : சீந்திலாதி லேகியம். இம்மருந்து மேகநீரிழிவு இருபத்தொன்றுக்கும் சிறந்தது.

குறிப்பு.—பற்பத்திலேனும் செந்தூரத்திலேனும் தளுக்கு (சந்திரிகை) இருக்கக் கூடாது. நீரின்மீது மிதக்கத் தகுந்த லேசத்துவம் அடைய வேண்டும். இக்குணங்களைப் பெறாப் பற்பச் செந்தூரங்கள் இடுமருந்தாலுண்டாகும் நோய்களை விளைவிக்கும்; மேற்கூறிய நன்மைகளைப் பயக்கா. இதில் சேர்க்க வேண்டிய பற்பச் செந்தூரங்களின் முறைகளை அகத்தியர் பின்னெண்பதில் காண்க.

அவ்வாறு உண்டாய தீங்கிற்குக் காந்தட் கிழங்கை முறைப்படி குடிநீர் செய்து அருந்தில் நீங்கும். ஈதன்றி வெற்றிலைச் சாறும் இஞ்சிச் சாறும் சமவளவாகக் கலந்து, அத்தீங்கு நீங்கு மட்டும் அரை ஆழாக்கு (84. மி. லிட்) வீதம் இருவேளை அருந்தருவும்.

## அன்ன பேதி.

## FERRI SULPHAS GREENVITRIOL IRON SULPHATF

இப்பொருள் சுதேச மருந்துக் கடைகளில் மிக மலிவான விலைக்குக் கிடைக்கின்றது. இருப்புக் கம்பியுடன் கந்தகத்திராவகம் சேர்த்துச் செய்கின்ற இச்சரக்கு, கட்டிகளாயும் பச்சை நிறமாயும் இருக்கும் அன்னபேதி என்ற காசிசம்மலையில் உற்பத்தியாகிறதென

றும், கறுப்பு, மஞ்சள், வெள்ளை ஆகிய மூன்று விதமாகும் என்றும் போகர் நூல் கூறும். இது, நீரில் கரையும்; சாரயத்தில் கரையாது. இதன்மேல் காற்றுப்பட்டால் வெண்மையான தூளாய் விடும். கடைச்சரக்கில் குற்றமிருப்பதினால், இதனைச் சுத்தி செய்து பயன்படுத்த வேண்டும்.

சுத்தி.

தேவையான அன்ன பேதியை நீரில்கரைத்துச் சிறிதளவு கந்தகத் திராவகம் விட்டு வடிக்கட்டி, உப்பு உறையும் பக்குவத்தில் காய்ச்சிக் கொள்வதே சுத்தியாம்.

இதற்கு, துவர்ப்புச் சுவையும் வெப்ப வீரியமும் உள. அன்ன பேதிக்கு உடல் உர முண்டாக்கி, துவர்ப்பி, ருது உண்டாக்கி, நாற்றமகற்றி, புழுக்கொல்லி, முறை வெப்பகற்றி முதலிய செய்கைகள் உண்டு. இதனை வெளியில் ஆட்சிபுரிந்தால், துவர்ப்பி செய்கையும் வெப்பமுண்டாக்கிச் செய்கையுமாம்.

அளவு: ஒன்று (65 மி. கிராம்) முதல் மூன்று அரிசி (195 மி. கிராம்) யெடை. அதிக அளவில் கொடுத்தால் கெடுதலை விளைவிக்கும்.

அன்னபேதியை உபயோகிக்கும்பொழுது கவனிக்க வேண்டுவன:—

1. அன்னபேதியை அருந்தி வருங்காலத்து மலம் கறுத்துக் கெட்ட நாற்றத்தோடிருக்கும்.

2. அன்னபேதியைச் சாப்பிடும் பொழுது, விடாமுயற்சியாய் வாரத்திற்கொருமுறை விட்டு விட்டுச் சாப்பிட வேண்டும்.

3. அன்ன பேதியைஆரம்பத்தில் அதிக அளவில் கொடுக்கக் கூடாது. அதிகம் கொடுத்தால், மலம் மிகவும் கறுத்து மல பந்தம் உண்டாகும்.

4. அன்னபேதியை அருந்திக்கொண்டு வரும்பொழுது பத்து நாளைக்கொருமுறை பேதிக்குக் கொடுத்தால் நல்ல குணமுண்டாகும்.

5. அன்னபேதியைச் சாப்பிடும் பொழுது புளிப்பையும் புளிப்புள்ள பழங்களையும் முற்றிலும் நீக்கி, அயத்திற்குக் கூறிய பத்தியம் காத்தல் வேண்டும்.

6. குழந்தைகளுக்கு அன்னபேதியைக் கொடுக்க வேண்டிய அவசியமிருந்தால் குறைந்த அளவில் கொடுக்கவும்.

7. அன்னபேதியை உணவிற்குப் பிறகே அருந்த வேண்டும்

## பொதுக் குணம்.

''மூலவிரணஞ் சூலைமந்த முட்டாமைக் கட்டி
விலையறன்ம கோதரநோய் விட்டும்—வலைமலைபோற்
காட்டுமன்னந் தன்னைக் கணத்திற் சலமாக்கிக்
காட்டுமன்ன பேதியது காண்''.

(பொ-ள்) :—அன்னத்தை நீராய்கரைக்கின்ற அன்ன பேதிமூலக் கட்டி, சூலை, அஜீரணம், பாய்கின்ற ஆமைக்கட்டி, விறியச லோதரம் இவைகளை நீக்கும் என்ப.

மற்றும், இதனைப் பாண்டு, சூதகப்பாண்டு, சூதக்கட்டு, கருப் பப்பிரமேகம், காய்ச்சல் கட்டி, முறைச்சுரம், எழுஞாயிறு, நாட் பட்ட கக்கிருமல் தட்டைக் கிருமி ரோகம் முதலிய பிணிகளுக்கு உள்ளுக்கும்; அக்கி, மேக விரணம், சீமூலம், ஆசனவாய் வெளிப் படல், கருப்பவிரணம் முதலிய பிணிகளுக்கு மேலுக்கும் உப யோகிக்கலாம். இதில் அயம் இருப்பதனுல், இரும்பினுல் தீரும் பிணிகள் நீங்குமென்று கண்டுகொள்ளல் வேண்டும்.

## உபயோகம்.

அன்னபேதியைக் கல்வத்திலிட்டு, வேண்டிய அளவு நீர் விட்டுக் குழம்புப் பதத்தில் அரைத்து, ஆசனம் வெளித்தள்ளல், கருப்ப விரணம், பெண்களின் உறுப்புத்தள்ளல் முதலியவற்றிற்கு மேலுக் குப் போடச் சுருக்கமடைந்து உள்ளுக்கு இழுத்துக்கொள்ளும்.

மூலரோகத்தில் காணும் இரத்த ஒழுக்கிற்கு, அன்னபேதித் தூள் ஒரு வராகனெடையைச் (4.2 கிராம்) சுமார் இரண்டு சேர் (280 மி. லிட்.) நீரில் கரைத்து, ஒவ்வொரு நாளும் வஸ்தி செய்து வந்தால், இரத்தம் நிற்கும், இந்த நீரை, அக்கி, மேக விரணம், கருப்பப்புற்று, சீமூலம் முதலியவைகளுக்கு மேலுக்கு உபயோகிக் கலாம்.

சித்த வைத்தியர்கள் அன்னபேதியைத் தனியாக உள்ளுக்குக் கொடுப்பதில்லை. இதனைத் தனியாகவாவது அல்லது மற்றச் சரக்குகளுடன் கூட்டியாவது செந்தூரமாக்கிக் கையாளுகின்றனர் கள்.

மற்றைய வைத்தியர்கள் கீழ்க்காணுமாறு தனி அன்னபேதி யைக் கையாளுகின்றனர்கள் :—

அன்னபேதி இரண்டு உளுந்தெடையை (130 மி. கிராம்) ஓர் அவுன்ஸ் (28 மி. லிட்) நிலவேம்புக் குடிநீரில் அல்லது ஓமத்தீ நீரில் கலந்து, நாள் ஒன்றுக்கு மூன்று வேளை வீதம், பலக் குறைவு பாண்டு முதலிய நோய்களுக்குக் கொடுப்பதுண்டு.

கரிய போளத்தூள் 12 உளுந்தெடை (780 மி.கிராம்), அன்ன பேதித்தூள் 30 உளுந்தெடை (2 கிராம்) சேர்த்துப் போதுமான

அளவு தேன் கூட்டி அரைத்து. 24 மாத்திரைகள் செய்து, வேளைக்கு இரண்டு மாத்திரை வீதம் மும்முறை கொடுத்துவர, பாண்டுவுடன்கூடிய வெள்ளை, சூதக்கக் கட்டு, சூதக ஒழுக்கு இவைகள் நீங்கும்.

அன்னபேதி 12 உளுந்தெடை (780 மி. கிராம்) மிளகுத்தூள் 15 உளுந்தெடை (975 மி. கிராம்) சேர்த்து போதுமான அளவு தேன் கூட்டி அரைத்து, 12 மாத்திரைகள் செய்து கொண்டு தினம் வேளைக்கு இரண்டு மாத்திரை வீதம், நிலவேம்புக் குடிநீர் அல்லது சீந்தில் குடிநீரில் இரு வேளை கொடுத்துவர முறைச் சுரம் விலகும்.

மகோதரம், சோபை, பலக்குறைவு முதலிய நோய்களில், அன்ன பேதி 1 உளுந்தெடையை (65 மி.கிரா.) இரண்டு சேர் (560 மி. லிட்.) நீரில் கலந்து இதர மருந்துகள் சாப்பிட்டுக்கொண்டு வரும்பொழுதும் தாகம் உண்டாகும்பொழுதும் அருந்தி வந்தால் நற்பலனை அளிக்கும்.

### அன்னபேதிச் செந்தூரம்.

வேண்டிய அளவு முற்கூறியவாறு சுத்திசெய்த அன்னபேதி காடி நீரிலரைத்து வில்லை செய்து, இரண்டல்லது மூன்று புடமிடச் செந்தூரமாம். இதில் அரை (65 மி. கிராம்.) முதல் ஒரு குன்றி யளவு (130 மி. கிராம்.) வரை தக்க துணைமருந்துடன் கொடுத்து வர, சுரம், சீதபேதி, பாண்டு முதலியன தீரும்.

### (வேறு)

சுத்தி செய்த அன்னபேதியைக் கல்வத்திலிட்டுக் கொஞ்சம் பழச்சாறு விட்டுப் புரட்டி ஒரு குடுவையிலிட்டு, சில்லிட்டுச் சீலை செய்து புடமிட்டெடுக்கச் செந்தூரமாம், இதனை மேற்கண்ட வாறு கையாளலாம்.

### வெடி அன்னபேதிச் செந்தூரம்.

சுத்தி செய்த அன்னபேதி ஒரு பங்கு, சுத்தி செய்த வெடியுப்பு கால் பங்கு இவ்விரண்டையும் எலுமிச்சம் பழச்சாறு விட்டுப் புரட்டி, இரண்டல்லது மூன்று புடமிடச் செந்தூரமாம். இதனை மேலேகண்ட அளவாகத் தக்க துணைமருந்துடன் கொடுக்க சோகை, பாண்டு, பெருவயிறு, காமாலை முதலிய நோய்கள் நீங்கும்.

### (வேறு)

ஒருபலம் (35 கிராம்) அன்னபேதியைச் சிறு செருப்படைச் சாற்றால் அரைத்து, ஐந்து வரட்டியில் மூன்று புடமிட்டெடுக்கக் கருஞ் சிவப்பாகும். இரத்தங் குறைந்த நோய்கள், சீதபேதி வன்மைக் குறைவு இவை கட்கெல்லாம் மேற்கூறிய அளவுப்படி கையாளலாம்.

### கருங்கல்.

கறுப்புக் கருங்கல் பாறை மீது வரகு வைக்கோலை வைத்துக் கொளுத்தி, கல் சூடானவுடன் வைக்கோலை அப்புறப்படுத்திக் கோழிமுட்டை வெண்கருவை அதன் மீது ஊற்றி, மற்றொரு கருங் கல்லால் தேய்க்க உண்டாம் கலவையை, அடிபட்ட வீக்கங்களின் மீதும், மூட்டு வீக்கங்களின்மீதும் பற்றிடக் குணமாம். இது நாட்டு வழக்கம்.

## கருப்பூரச் சிலாசத்து

இப்பொருளை நேப்பாளத்தில் துவர்ப் பூமியிலிருந்து *பலகை பலகையாக வெட்டியெடுக்கின்றனர். இது படிகாரமும் அயமும் சேர்ந்த ஒருவித சரக்கென்று பைஷஜகல்பம் கூறும்.

### சுத்தி.

கருப்பூரச் சிலாசத்தைப் பாலிலிட்டுக் காய்ச்சிக் கழுவி எடுக்கச் சுத்தியாம்.

(வேறு)

சிலாசத்தைப் பழச்சாற்றிலிட்டுக் காய்ச்சி உலர்த்தி, பின்பு எருக்கம் பாலில் இரண்டு நாட்கள் ஊறவைத்தெடுத்துக் கழுவிக் கொள்ளச் சுத்தியாம்.

(வேறு)

சிலாசத்தை இளநீரிலிட்டு நீர் சுண்டும்வரைக் காய்ச்சிக் கழுவி எடுத்துக் கொள்ளச் சுத்தியாம்.

### செய்கை.

இதற்குச் சிறுநீர் பெருக்கி, கற்கரைச்சி, துவர்ப்பி, குரு திப் பெருக்கடக்கி, உடல் உரமாக்கி முதலிய செய்கைகள் உள.

### பொதுக் குணம்.

''கல்லடைப்பு மேகங் கனதூலம் வித்திரதி
சொல்லடைக்கு நீரருகற் சோணிதக்கான்—மெல்லிடையாச்
கில்லகச்சத் தில்லையெனு மிந்திரிய நட்டமுமாங்
கல்லகச்சத் தில்லையெனுங் கால்''.

(பொ-ரை) :—சிலாசத்தினால் கல்லடைப்பு, சிமேகம், அதி தூலம் வித்திரதி, மூத்திரக் கிரிச்சரம், சோணிதவாதம், சந்ததிக்கு ஏது வான விந்துநஷ்டம் இவை போம். இது மலைக்குள்ளிருந்து வருவ தால் கல்லகச் சத்தென்றார்.

* The other variety found in the bazaars is called Karpoora Silajat which occurs in white plates, on igning it leaves a large quantity of ash consisting of lime Magnasia, silica and orders of iron.

மற்றும் இதனைப்பிரமேகம், உள்விரணம், இரத்தக் கொதிப்பு இரத்த பித்தநோய், கபநோய், சக்கிருமல், அதிசாரம் முதலிய நோய்களிலும் வழங்கலாம்.

இதனைப் பற்பம் செய்து 10 (650 மி. கிரா.)முதல் 20 உளுந் தெடை (1.3 கிராம்) வரை தக்க அனுபானத்தில் உள்ளுக்கு வழங்க வேண்டும்.

### கருப்பூரச்சிலாசத்து பற்பம்

சுத்தி செய்த சிலாசத்தைக் கல்வத்திலிட்டு, சிறுசெருப்படை யின் சாற்றாலரைத்து, இலேசாக வில்லை செய்து காயவைத்து, ஓட்டிலிட்டுச் சீலை மண் பலமாய்ச் செய்து காயவைத்து, 50 எருவில் புடமிட்டு ஆறவிட்டு எடுத்தப்பிறகு முன்போல மூன்று புடமிட்டெடுக்க வெண்மையான பற்பமாகும்.

இதனைப் பசுவெண்ணெயில் கொடுக்க, மேல் எரிவு, பித்த வெட்டை, நீர்க்கடுப்பு நீங்கும். பத்தியம் இல்லை.

### பற்பம் (வேறு).

மேற்படி பற்பம் இரண்டு கழஞ்சை (10.2கிராம்) அகலிலிட்டு, அதன் மேல் சுத்தி செய்த வெங்காரம் இரண்டு கழஞ்சிட்டு (20.4 கிராம்) மேலே பற்பத்தையிட்டு, அகல்மூடிச் சீலை செய்து மூன்று கனவரட்டி கொண்டு புடமிட்டு ஆறிய பின் எடுக்கவும்.

இதனை வெண்ணெயில் கொடுக்க நீர்க்கட்டு, நீர்க்கடுப்பு நீங்கும்.

கல்லடைப்பு நீங்க, விரால் மீனின் தலைக்கல் பொடியை வெள்ளரி விதைச் சாற்றில் (பாலில்) கூட்டி, பற்பத்தைச் சேர்த்துக் கொள்ள வேண்டும். குணமாகாமல் அடைத்துக் கொண்டால், முள்ளங்கிச்சாறு கால்படியில் கால்பணவெடை (122 மி. கிரா.) பற்பம் கூட்டிக் கொடுக்க கல் வீழும்.

### பற்பம் (வேறு).

கற்சுண்ணாம்பைச் சிலாசத்தின்மீது தடவிக் காயவைத்து, ஓட்டிலிட்டுக் கஜபுடமிட்டெடுக்க வெளுப்பாய் இருக்கும். அதன் மீதுள்ள சுண்ணாம்பைக் கீறி நீக்கிக் கல்வத்திலிட்டு, குமரிச்சாறு விட்டு நன்றாயரைத்து, வில்லை செய்து உலர்த்திச் சில்லிட்டு சீலை செய்து, கனபுடமிட்டு ஆற விட்டெடுக்கப்பற்பமாம்.

அளவு: புளியம் வித்தளவு.

துணை : நோயும்: நெய், பால், இளநீர் இவைகளொன்றில் கொடுக்க வெட்டை நோயில் காணும் நீரெரிச்சல்

நீர்க்கட்டு முதலியன நீங்கும் நெய்யில் அனுபானித்துக் கொடுத்தால் உஷ்ணத்தினுல் உண்டாம் வயிற்றுவலி தணியும்.

(வேறு)

சுண்ணும்புக் கவசம் செய்து புடமிட்ட சிலாசத்திற்கு, செவ்வல்லிப் பூச்சாறு அல்லது கிழங்கின்சாறு விட்டு அரைத்து வில்லை செய்து உலர்த்தி, சில்லிட்டுச் சீலை செய்து கனபுடமிட்டு, ஆறிய பின் எடுக்கவும். முன்போலவே மூன்று அல்லது நான்கு புடமிட்டு எடுக்கப் பற்பமாம். இப்பற்பம் சிறிது செந்நிறம் கலந்த வெண்மையாய் இருக்கும்.

இதனைக் கோவையிலைச் சாற்றில் அரைத்தும் புடமிடலாம்.

இதனை இரண்டு (130 மி. கிரா.) முதல் நான்கு அரிசியெடை (260 மி. கிரா.) தக்க அனுபானத்தில் கொடுக்க இரத்த பித்த நோய் நீங்கும்.

திரிகடுகு மாத்திரை.

கோவை இலைச்சாற்றில் அரைத்துப் புடமிட்ட சிலாசத்து பற்பம் பலம் 8 (280 கிராம்), சுக்குச் சூரணம் பலம் 1 (35 கிராம்), மிளகுத்தூள் பலம் 1 (35 கிராம்), திப்பிலிப்பொடி பலம் 1(35 கிராம்) இவைகளை ஒன்ருக சேர்த்துக் கலவத்திலிட்டுக் கோவை இலைச்சாறு விட்டு, இரண்டு அல்லது மூன்று நாள் நன்ருக அரைத்து மிளகளவு மாத்திரைகள் செய்து, நிழலில் உலர்த்திப் பத்திரப் படுத்தவும்.

1-2 மாத்திரையைக் காய்ந்து ஆறினநீர் அல்லது பாலில் கொடுக்கச் சுரம் நீங்கும். முக்கியமாய் அதிசார சந்நிபாத சுரம் நீங்கும் என்பர்.

பற்பம் (வேறு)

ஒரு பெரிய கற்ருழை (குமரி) மடலை இரண்டாகப் பிளந்து, அதனுள் வெந்தயத்தைப் பரப்பி, இளநீரில் சுத்தி செய்த சிலாசத்தை, வெந்தயம் பரப்பிய இரண்டு மடலிற்குள் வைத்து, நூலால் வரிந்துகட்டி மூன்று நாள் அப்படியே நிழலில் வைத்திருக்க வெந்தயத்திலிருந்து முளை கிளம்பும். அச்சமயம் அதற்குச் சீலைமண் செய்து உலர்த்தி, 25 வரட்டியில் புடமிட்டெடுக்க பற்பமாம்.

இப்பற்பத்தை அளவுடன் உஷ்ணத்தினுல் உண்டாம் பேதி, ஆசனக் கடுப்பு, நீரைப்பற்றிய பிணிகள் முதலியவற்றிற்குத் தக்க அனுபானத்தில் கொடுக்க பலன் அளிக்கும்.

---

## கல்நார்.

## ASBESTOS

இப்பொருள், மைசூர் சமஸ்தானத்திலும், ஐப்பான் போன்ற சில நாடுகளிலும் கிடைக்கின்றது. இதனைப் பூமியிலிருந்து வெட்டி எடுக்கின்றார்கள். இதற்கு ஷிகிமா (Sekima) என்பது ஐப்பானியர் மொழியில் பெயர். இது பார்ப்பதற்குக் கல்லைப்போலவும் நசுக்க நார் நாராகவும் இருப்பதனால் இப்பெயர் பெற்றது. இதன் நாரைக் கொண்டு உடை தயாரிப்பதாகவும் தெரியவருகின்றது. இடைவிடாமல் எரிவதற்காக இதனைத் திரியாக உபயோகிப்பதும் உண்டு. தற்காலம் கடைகளில், நாட்டுக் கல்நார், சீமைக்கல்நார் எருமைக் கொம்புக் கல்நார் என்று மூவகைக் கல்நார் கிடைக்கின்றன. தேச வேறுபாட்டாலும், உருவ நிற வேறுபாடுகளினாலும் இப்பெயர் பெற்றனவென்றும், குணம் அநேகமாக ஒன்றே என்றும் கொள்ளவேண்டும். நிற்க, இது பச்சைக்கல்நார், வெள்ளைக்கல்நார் என இருவகைப்படும் என்று போகர்நூல் கூறும். இவை இரண்டில் வெள்ளை உத்தமம்.

இதற்கு சிறுநீர் பெருக்கி, துவர்ப்பி, சமனகாரிச் செய்கைகள் உள.

### பொதுக்குணம்.

''காசபித்தம் வாதங் கடுப்பீறு நோயெரிவு
வீசுசர்த்தி நீரடைப்பு விந்து நட்டம்—பேசுமசை
தின்னுரைக் கூவுமந்தந் தீக்குடர்க்கால் தாகமிவை
கன்னுரைக் கூவவிடுங் காண்.''

(பொ-ரை) கல்நாரினால் பித்தகாசம், வாதரோகம், பல்நோய், பல்லரணை, நீர்க்குறி எரிச்சல், பித்தவாந்தி, நீரடைப்பு, விந்துநட்டம், அஜீரணம், பித்தகுடல்வாதம், பித்ததாகம் முதலியன நீங்கும்.

### சுத்தி.

கழுதை நீரில் மூன்று நாழிகை வாட்டிக் கழுவி எடுத்துப்பிறகு வெய்யிலில் காயவைத்தெடுக்கச் சுத்தியாம்.

### (வேறு).

பசுவின் நீரில் கல்நாரைப் பத்துநாள் ஊறவைத்துக் கழுவி எடுக்கச் சுத்தியாகும்.

---

* Asbestos is a curious natural white rock consisting on calcium silicate found n large quantities near the town of Asbestos in quebec Canada. Deposits also exist n the Alpes and in various other places.

### கல்நார் சுண்ணம்.

கல்நாருக்குப் பழச்சாறு விட்டு அரைத்து, வில்லை தட்டிக்காய வைத்துக் குகையிலிட்டுத் துருத்தி கொண்டு ஊத, சுண்ணம்பு நிறத்துடன் கூடிய வெளுப்பாகும்; காரமுடையதாய் இருக்கும். காயசித்திக்கு இதனைத் தாம்பூலத்துடன் தின்னவேண்டும் மென்பர் போகர்.

### கல்நார் பற்பம்.

பசுவின் நீரில் சுத்திசெய்த கல்நாருக்குச் ஆடுதின்னாப்பாளைச் சாறுவிட்டு அரைத்து, வில்லை செய்து உலர்த்திச் சில்லிட்டுச் சீலை செய்து கெசபுட மிட்டெடுக்கப் பற்பமாம்.

இதனை 2 (260 மி. கிரா.) முதல் 4 குன்றி (520 மி. கிரா.) யெடைவரை நெய் அல்லது வெண்ணெயில் அனுபானித்துக் கொடுக்க, நீர்க்குறி எரிச்சல், நீரடைப்பு, விந்து நட்டம் முதலியன நீங்கும்.

### (வேறு).

கல்நாரைச் சிறு துண்டாகப் பிளந்து ஓட்டிலிட்டு, அதற்குக் கீழும் மேலும் கோங்கிலவம் பட்டையை இடித்துப் போட்டுப் புடமிட்டுப் பிறகு மேற்படி குடிநீர் விட்டரைத்து. மூன்று புடம் போடப் பற்பமாம். இதனைத் தேன் அல்லது தூதுவேளை லேகியத்தில் கொள்ள, கபநோயும் 96- வகைப்பட்ட மேக காங்கையும் தீரும். பற்பத்தால் பல் துலக்கத் தந்தம் இறுகும்.

### (வேறு).

இளநீரில் துவாரம் செய்து அதற்குள் வேண்டிய கால்நாரைப் போட்டு, 3 நாள் ஊறவிட்டு எடுத்து, எலுமிச்சம் பழச்சாற்றால் அரைத்து, வில்லை தட்டிக் காயவைத்து, ஒரு ஓட்டில் பூவரசம் பட்டையை இடித்துவைத்து, அதன்மேல் வில்லையை வைத்து, அதன்மேல் மேற்படி பட்டைத் தூளைப்போட்டு, மேலோடு மூடிச் சீலை மண் செய்து, 25 வரட்டியில் புடம் போடப் பற்பமாம்.

### (வேறு).

கல்நாரைச் சிறு துண்டுகளாக வெட்டி அகலில் வைத்து, அதற்குக் கீழும் மேலும் எருக்கம் வேர் இடித்து தூளைப் போட்டு மூடி, சீலைமண் செய்து கசபுடம் போட்டெடுத்து, எருக்கம் பாலாலரைத்து மூன்று புடம் போடப் பற்பமாம். இதில் வேளைக்கு 5 குன்றி (650 மி. கிராம்) யெடை வீதம் தேனிலாவது, தூதுவேளை லேகியத்திலாவது சேர்த்துக் கொடுக்க மேற்கண்ட பிணிகள் நீங்கும்.

---

## கற்சுண்ணம்

## LIMESTONE

இஃது இயற்கையில் தாராளமாகக் கிடைக்கின்றது. இதனைக் காள வாயிலிட்டு நீற்றி எடுத்து, நீர் விட்டுத் தாளித்துக் கொள்ள வேண்டும் கற்சுண்ணத்திற்குப் புண்ணாக்கி, உடல்தேற்றி, தாது வெப்பகற்றி, துவர்ப்பி, நச்சரி, வயிற்றுப் புளிப்டகற்றி ஆகிய செய்கைகள் உள.

### பொதுக் குணம்.

''உண்டவனஞ் சீரணமா நெய்ச்சிக் கேகு
மூறில்விந்து விற்கூக்க முறுங்காண் வாயில்,
விண்டவெயி றிறுகுமறற் பேதி வற்றும்
வெந்தளித்த நீர்ச்சுருக்கும் விலகு மெய்யை
யண்டுபல விடமொழியுங் கறையோ நிற்கு
மழலுறுபுண் சிரங்குநமை யழுபுண்ணறுங்
கண்டவுரு வன்மீகஞ் சிரநோய் சந்நி
களுங்கரக்குங் கற்சுண்ணங் காணுங் காலே.''

(பொ-ரை) கற்சுண்ணம் அருந்திய உணவைச் செரிக்கவைத்து, குடலில் பற்றிய நெய்ச்சிக்கை நீக்கி, விந்துவிற்கு ஊக்கமும் பல்லுக்கு வலிவும் கொடுத்து, நீர்ப்பேதி, வாத நீர்ச்சுருக்கு, விடங்கள், இரத்தப் பெருக்கு, தீச்சுட்டபுண், சிரங்கு, நமைச்சல், அழுகிய புண், களநோய் யானைக்கால், தலைநோய், சந்நி முதலிய நோய்களையும் நீக்கும் என்ப.

### உபயோகங்கள்.

பழஞ் சுண்ணும்பு காரையைப் பொடித்து ஓட்டிலிட்டு வறுத்துத் துணித்துண்டில் வைத்துச் சுருட்டி, நோயுள்ள விடத்தில் ஒற்றட மிட உடனே அங்குள்ள வேதனை நீங்கும்.

கற்சுண்ணத்தை உத்தாமணிச் சாற்றால் தாளித்து எடுத்துத் தினம் வெற்றிலையில் தடவி, தாம்பூலமாகத் தரிக்க கபசந்நி வாயு நீங்கும். இதனை,

''தாளியாத கற்சுண்ணத்தின் மீதிலுத்
தாமணிச்சுதை தன்னைய முத்திஞல்
ஆவிபோல வெதிர்த்துப் புகைந்துநீ
ருனசேதி யறியுமுன் சன்னியா

மிளியோசனை தூரமகலும்பொன்
வேந்தனுக்கும் பயஞ்சிறி தாமையா
மிளிதைத்தின முண்ணடை காயொடு
கேதம் போய்விடு மோதுமளவிலே.''

என்ற செய்யுளால் உணரலாம்.

### சுண்ணாம்புத் தண்ணீர்.

2 பலம் (70 கிராம்) தாளித்த சுண்ணாம்பைக் கல்லடைப்பா னுள்ள ஒரு குப்பியிலிட்டு, 6½ புட்டி (4.2 லிட்.) தண்ணீர் விட்டு, இரண்டு அல்லது மூன்று நிமிடம் குலுக்கி, அசையாமல் வைத்துத் தெளிந்தபின், தெளிவை வடிகட்டிப் பச்சைநிறப் புட்டியிலிட்டுக் காற்றுப் புகாமல் அடைத்துக் கொள்ளவும்.

### கற்சுண்ணாம்பு.

அளவு : ½ (21 மி. லிட்.) முதல் ஆழாக்கு ½ (84 மி. லிட்.) வரை கொடுக்கலாம். இதனைப் பசுவின் பாலில் கூட்டிக் கொடுக்க, வயிற்றிலுண்டாம் புளிப்பை நீக்கிவிடும். குழந்தை களுக்கு இந்நீரைக் கொடுக்க, பால் முரிந்து தயிர்போல் வாந்தி யெடுத்தல் நிற்கும். சிசுக்களுக்குத் தேக்கரண்டி (4 மி.லிட்.) அளவு எடுத்து, சம அளவு பசுவின் பாலில் கலந்து, மூன்று மணி நேரத்திற்கொருமுறை உண்ணுமுன் கொடுக்கவும்.

சுண்ணாம்பு நீர், தேங்காய் எண்ணெய் சமவளவு சேர்த்துக் குலுக்கி, நெருப்பு, வெந்நீர் இவைகளால் உண்டான புண்களுக் குப் போட குணமாம்.

விடகுணமுள்ள திராவகங்களை விடமிக்கும்படி சாப்பிட்ட வர்களுக்கு, தேவையான, சுண்ணாம்பு நீரைப் பாலில் கூட்டிக் கொடுப்பதினால் விடம் முரிந்து விடும்.

இதைத் தேன்விட்டுக் குழைத்துத் தொண்டைக் குழியில் தடவி வர புகைந்துவரும் இருமல் சாந்தப்படும். இக்கலவை யைக் கட்டிகளின் மீது தடவிவர, அவை பழுத்து உடையும்.

கற்சுண்ணத்தைக் குழைத்துப் புறவளையமாக உந்தியைச் சுற்றிப்போட வற்றுவலி, நீர்ச்சுருக்கு, நீர் அடைப்பு நீங்கும்.

சுண்ணாம்புடன் குப்பைமேனி இலைச்சாறுவிட்டு மத்தித்துப் பூரான், வண்டு, குளவி முதலியவைகளின் கொட்டு அல்லது கடிவிடங்களுக்கு, மேலே தடவிவர விரைவில் குணமாம்.

தேள் கொட்டிய இடத்தில், சிறிது சுண்ணாம்பை வைத்து அரிந்த வெங்காயத்தைக் கொண்டு தேய்க்க நற்பலனை அளிக்கும்.

கற்சுண்ணத்துடன் சிறிது வெல்லம் கூட்டி மத்தித்து, அடி பட்ட இடத்தில் வைத்துக்கட்ட இரத்தம் பெருகாமல் ஆறும்.

மூத்திரக் கிரிச்சரம், மூத்திர எரிச்சல் இவைகளுக்குச் சுண் ணும்புத் தெளிநீரைப் பசுவின்பாலில் கூட்டிக் கொடுக்கக் குண முண்டாம்.

ஓர் அவுன்ஸ் (28 மி.லிட்.) சுண்ணும்பு நீருடன் இரண்டு அவுன்ஸ் (56 மி.லிட்) முள் இலவம் பட்டைச் சாறு கூட்டிச் சாப்பிட, வெள்ளை, இரத்த வெள்ளை, பெரும்பாடு முதலியவை குணமாம்.

கற்சுண்ணத்தையும் முத்துச் சுண்ணத்தையும் சம அளவு கூட்டி மருவிற்குப் போட்டுவர நற் பலனை அளிக்கும்.

கற்சுண்ணம் எரிப்பிற்கும், தாளகம், சேராங்கொட்டை, ஆமை ஓடு இவைகளைச் சுத்தி செய்வதற்கும், வங்கச் சுண்ணம், சிலாசத்து இவைகளைப் பற்பமாக்குவதற்கும் பயன்படும்.

## காடிக்காரம்.

## NITRATE OF SILVER

### செய்முறை.

சொக்க வெள்ளி 1½ அவுன்ஸ் (42 கிராம்) பொட்டுலுப்புத் திராவகம் 1 அவுன்ஸ் (28 மி.லிட்), தீநீர் 2 அவுன்ஸ் (56 மி.லிட்.) திராவகத்தைத் தீநீரில் சேர்த்துக் கலக்கி, வெள்ளியைச் சேர்த்துச் சிறு தீயிட்டு எரித்து உருக்கிப் பிறகு நீர்சுண்டி ஈரமில்லாத உப்பு அடியல் நிற்கிற வரையில் தீயை அதிகரிந்து. இந்த உப்பை ஒரு குகையில் உருக்கி, உருகினதை சூடாயும் கொழுப்புத் தடவியும் இருக்கிற அச்சுக்களில் வார்த்து விடவும். இதை நீல நிறப் புட்டியில் போட்டு வைத்துக்கொள்ளவும்.

**செய்கை :** இதற்குத் துவர்ப்பி, புண்ணுக்கி, அழுகல் அகற்றி ஆகிய செய்கைகள் உள.

**குணம் :** காடிக்காரத்தினல் பேதி, கண்ணேய், பிரமேகம், படர் தாமரை, அக்கி, கரப்பான், புண், விஷக்கடி, தொண்டை நோய் முதலிய நோய்கள் தீரும். அதிக அளவில் கொடுத்தால் விடமிக்கும்.

### காடிக்காரச் செந்தூரம்.

இலிங்கம் பலம் ஒன்று (35 கிராம்), இரசச் செந்தூரம் பலம் ஒன்று (35 கிராம்) இவ்விரண்டையும் தனித்தனியாகப் பொடிக்க, காடிக்காரம் பலம் ஒன்று (35 கிராம்), இதையும் தனியாகப் பொடிக்க. ஒரு கல்கார்க்குப் புட்டியில், முதலில் இரசச் செந்தூரம் தூளில் பாதிபாகம் போட்டு, அதன்மீது இலிங்கத் தூளில் பாதி போட்டு, அதன்மீது காடிக்காரத்தூள் முற்றுங்கொட்டி, பிறகு மிகுதியாயுள்ள இலிங்கத்தூளையும் அதன்மீது இரசச் செந்தூரத்தையும் கொட்டி, காற்று நுழையா வண்ணம் மூடி இட்டு, தோல்பட்டையினுல் புட்டி தெரியாமல் சுற்றி வரிந்துகட்டி, வேகவைத்துக் கொட்டின நெற்குவியல் மத்தியடல் புதைக்க, சூடாறியபின் கல்வத்திலிட்டு அரைத்தெடுக்க

**அளவு :** ½ (32 மி. கிராம்) முதல் 1 அரிசி (65 மி. கிராம்) எடை.

**அனுபானம் :** தேன், இஞ்சிச்சாறு, துளசிச்சாறு.

**தீரும் நோய்கள் :** பாரிசவாதம் முதலிய வாதரோகங்களும், ஊழிபோன்ற பேதிகளும் நீங்கும்.

### வேறு உபயோகங்கள்.

காடிக்காரத்தைத் துர்மாமிசம் உள்ள புண்கள், நாட்பட்ட புண்கள், பவுத்திரம், கொறுக்கு இவைகளின்மீது தேய்த்துவர குணமாகும். பாம்பு விடக்கடிக்கும், பேய் நாய்க் கடிக்கும் கடியுண்ட இடத்தில் தேய்க்க விடம் முரியும். அட்டைக் கடியினின்றும் பெருகும் உதிரத்தை நிறுத்த இதைப் பயன் படுத்தலாம்.

2½ (325 மி.கிராம்) அல்லது 5 குன்றி (650 மி.கிராம்) எடை காடிகாரத்தை 1 அவுன்ஸ் (28 மி.லிட்) தீநீரில் கலந்து, பிறந்த குழந்தைக் குண்டாம் அமர நோய்க்கும், மற்றையோர்க் குண்டாம் கண்ணோய், பில்லம், செவ்வரி, இவைகட்கும் துளிக் கணக்கில் விட குணமாம்.

மேற்படி நீரைத் தொண்டை நோய்க்கும், பீநச நோய்க்கும், வாயில் காணும் துத்தி நோய்க்கும் தடவுவதுண்டு.

நாட்பட்ட சீதபேதியில் காணுகின்ற குடல் விரணத்திற்கு, ஒரு படி 2 லிட். நீரில் 10 குன்றி (1.3 கிராம்) எடை காடிக் காரத்தைக் கரைத்துப் பீச்சு செய்யலாம். வெள்ளையில் ½ (65 மி. கிராம்) முதல் 1 குன்றி (130 மி.கிராம்) காடிக்காரத்தை 20 அவுன்ஸ் (560 மி. லிட்) நீரில் கலந்து பீச்சாகப் பயன் படுத்தலாம்.

### நஞ்சுக் குறி குணமும் முறிவும்.

காடிக்காரத்தை அளவுக்கு மீறி உபயோகித்தால், இரைப்பை, குடல் இவைகளில் தாபிதம், வாந்தி பேதி, சோர்வு, மூர்ச்சை உண்டாம். மரணத்தையும் விளைவிக்கும்.

காடிக்காரத்தை விடமிக்கும்படி தின்றவர்கட்கு, வமனம் செய்வித்து, கறியுப்பு, பால், முட்டைவெண்கரு முதலிய உள் அழலாற்றிச் செய்கையுள்ள பொருள்களைக் கொடுத்து விடத்தை நீக்க வேண்டும்.

## காவிக்கல்.

## RED OCHRE

இது பூங்காவி என்றும் வழங்கப்படும். காவிக்கல் துவர்ப்புச் சுவையையும் சீதவீரியத்தையும் உடையது. இதற்குத் துவர்ப்புச் செய்கையும் குருதிப் பெருக்கை அடக்கும் செய்கையும் உள. இதனால், கண்ணோய், மேகநோய், கிளைக்கின்ற அக்கி, வாந்தி, பித்தப் பிரகோபம் முதலியன நீங்கும் இதனை,

''அடலறு நற்காவிக்க லட்சிநோய் மேகம்
வெடியக்கி வாந்தி பித்தம் விட்டும்.''

என்ற அடிகளால் அறியலாம்.

பூங்காவியை நீரில் குழைத்துப் பொன் தகட்டிற்குப் பூசி, நெருப்பில் வாட்டி எடுக்கப் பொன் சுத்தியாம்.

இதைக்கொண்டு பல் துலக்கிவர, பல்வலி, பல்கூச்சம், பல் ஈற்றில் இரத்தம் வருதல் முதலியன நீங்கும்.

பூங்காவி மூன்றில் ஒரு பங்கு, பொரித்த படிகாரம் ஐந்தில் ஒரு பங்கு இரண்டையும் தூள் செய்து கலந்து, நெருப்பில் வெதுப்பி எடுத்து, மூன்று குன்றி (390 மி. கிராம்) யெடை வீதம் கரும்பு வெல்லத்தில் வைத்து அருந்திவர பெரும்பாடு நீங்கும்.

இதனை,

''பொன்னைமிகச் செலவழித்தல் மும்மதத்தி லொன்று
பொருந்திடு வல்லமதில் ஐந்து தனிலொன்று
தன்னையினி யறிந்தெடுத்துத் தணல்தன்னில் வெதுப்பித்
தண்கருப்பங் கட்டிதனில் தாலருந்து வீரேல்
பெண்ணேயினி பெரும்பாடு வந்ததென்று சொன்னால்
பிசகாமல் குட்டுபதி னாயிரமும் பெறுவேனே.''

என்ற தனிப்பாடலால் உணர்க.

---

• Red bolu vo hchre Is a Sulicate of Alumina internal and oxide of Iron: This relieves bleeding from internal organs.

அக்கிநோயில் காவிக்கல்லை நீரில் குழைத்து, அக்கி உள்ள இடத்திலும், சுற்றிலும் எழுதிவர நீங்கும்.

பூச்சி சேராதிருப்பதற்கும், வழுவழுப்பிற்கும், குளிர்ச்சிக்கும், அழகிற்கும் காவியை மண்பாண்டங்களுக்கும், சுவர்களுக்கு பூசும் பழக்கம் நம் நாட்டிலிருக்கின்றது.

மற்றும், பூங்காவியை நீரில் கரைத்து வடிகட்டிவைத்துத் தெளிந்தவுடன், நீரை இறுத்துக் காவியை உலர்த்திப் பொடித்து வைத்துக் கொள்வதே பூங்காவிச் செந்தூரமாகும். இதனைப் பேதி, இரத்த சீதபேதி, இரத்த பித்தம், வாந்தி முதலிய நோய்களுக்குத் தனியாகவாவது மற்றைய சரக்குகளுடன் கூட்டியாவது தக்க துணைமருந்துகளுடன் கொடுக்க நீங்கும். இதனை ஐந்து குன்றி (650 மி. கிராம்) வரை உபயோகிக்கலாம்.

## கோமூத்திர சிலாசத்து.

## ASPHALTUM

## ASPHALT MINERALPITEH

சிலாசத்து என்பது, சிலை†சத்து எனப் பிரிந்து மலையினுடைய சத்தைக் குறிக்கும்.

''தியானித்த சிலாசத்தி ரண்ட தாகும்
செப்பவே கர்ப்பூரச் சிலாசத் தென்றும்
கியானித்த கோமூத்திரச்சிலாசத் தென்றும்
கெடியாக ரெண்டுவித பேதமாகும்!.''

என்ற அடிகளால், இதன் வகையும் பெயருமறியலாம். சிலர் சிலாரசமும் சிலாசத்தும் ஒன்றென்று கூறுகின்றனர்.

''குங்கிலிய மகருவகி லீக முபயத்தாறு
குறும்பொறை யிரத மணப்பால்.''

என்ற அடி, அட்டாங்க தூப பில்லையில் சேர்க்கப்படும் சரக்குகளைக் குறிக்கிறது. இதில் குறும்பொறை இரதம் என்பது சிலாரசத்தைக் குறிக்கிறது. இது சிலாசத்தானால், தூப பில்லையில் இதைச் சேர்க்கின்ற பழக்கம் இல்லாமையினால், இரண்டும் ஒன்று என்று கூறுவாரின் கூற்றில் ஆசங்கை ஏற்படுகிறது.

கர்ப்பூர மணத்தையும் படிக ஒளியையும் பெற்றிருக்கும் சிலாசத்துக்குக் கர்ப்பூரச் சிலாசத்தென்றும், பசு முத்திரத்தின் மணத்தையும் நிறத்தையும் பெற்றிருக்கும் சிலாசத்துக்குக் கோமூத்திர சிலாசத்தென்றும் பெயர் வந்தன. கோமூத்திர சிலாசத்துக்கு

உரைஞ்சியம் என்று மற்றொரு பெயருமுண்டு. இதனை யூனினு வைத்தியர்கள் மொம்மியாயி என்று கூறுகின்றார்கள். இப்பொருள் ஹரித்வாரம், சிம்லா, நேப்பாளம், ஹிரேனியா, இஸ்தபானு முதலிய இடங்களிலுள்ள மலைவெடிப்புகளில், கொடைடையில் வெளிப்பட்டுக் கோமூத்திர நிறத்துடனும், ஒளியுடனும், மெழுகைப் போல மிருதுவாகவும் உறைந்திருக்கும், தங்கம் உள்ள மலையில் பிறந்த சிலாசத்து கனக சிலாசத்தென்றும், வெள்ளியை உடைய மலையில் பிறந்தது வெள்ளி சிலாசத்தென்றும், செம்புள்ள மலையில் பிறந்தது தாம்பிர சிலாசத்தென்றும், அயமலையில் பிறந்தது அய சிலாசத்தென்றும் ஆக நால்வகைப்படும். மற்றும், தகரம் வங்கம் உள்ள மலைகளிலும் சிலாசத்து உற்பத்தியாகின்றது. ஏம சிலாசத்து சிவப்பு நிறமாயும், வெள்ளி சிலாசத்து வெண்மை நிறமாயும், தாம்பிர சிலாசத்து நீல நிறமாயும், அய சிலாசத்து மங்கிய கறுப்பு நிறமாயுமிருக்கும். இவைகளில் ஏம சிலாசத்தும் தாம்பிர சிலாசத்தும் கிடைப்பதரிது. ஏம சிலாசத்தை வாதபித்த நோய்களிலும், வெள்ளி சிலாசத்தைக் கபபித்த நோய்களிலும், தாம்பிர சிலாசத்தைக் கபநோய்களிலும், அய சிலாசத்தை முக்குற்றப் பிணிகளிலும் பிரயோகிக்கப் பலனுண்டாம். அய சிலாசத்து, காயகல்ப சிகிச்சைக்கும் மூப்பு நீக்கவும் சிறப்பாக உபயோகப்படும்.

நிற்க, சூதத்தை மடியவைப்பதும், காணியளவிட, ஆட்டு மாமிசத்தைக் கரைக்கும் தன்மையுடையதுமான ஒன்றை, மாங்கிஷத்திராவி என்றும்; லோகத்தை நீற்றவும், எலும்பைக் கரைக்கவும் வல்லமையுடையதை அஸ்திதிராவி என்றும்; பாஷாணத்தை நீற்றவும், அன்னத்தைக் கரைக்கவும் வல்லமையுடையதை அன்னத்திராவி என்றும்; நாகத்தை வேதைக்கு உபயோகமாகும்படி கட்டும் தன்மையும், சங்கைக் கரைக்குந் தன்மையையும் உடையதைச் சங்கத்திராவி என்றும் நால்வகைத் திராவி கோமூத்திர சிலாசத்தின் கீழ் மதாந்தரமாகக் கூறப்பட்டுள்ளன.

கோமூத்திரம் சிலாசத்து நாற்பது வருட காலம் கெடாமல் வன்மையுடன் இருப்பதன்றி, அருந்தியவுடன் தேக முழுதும் பரவி, அதன் பலத்தையும் குணத்தையும் உடனே காட்டும்.

> ''தீருமே கோமூத்திர சிலாசத் துத்தான்
> செயமான வாதத்துக் குறுதி யாகும்.''

என்றவடியால் இது வேதைக்குமாம் என்பது புலப்படுகின்றது.

**சோதனை :** (1) அசல் கோமூத்திர சிலாசத்தாய் இருந்தால் கொஞ்சம் நீரிலிட சிவப்புநிறக் சால்விட்டிறங்கும். (2) நெய்யைச் சூடு செய்து அதில் கசகசா பிரமாணம் கோமூத்திர சிலாசத்தைக் கலந்து ஒரு கோழியின் காலை ஒடித்து, அக்கோழிக்கு அந்நெய்யைக் கொடுத்து, ஒடித்த இடத்திலும் பூசினால் உண்மைச் சரக்காயின் இரண்டு மணி நேரத்தில் கோழி நடக்கும். போலிச்

சரக்காயின் மறு நாள் நடக்கும். (3) இதனை நெருப்பிலிட்டுக் கொளுத்தப் புகையாமல் எரியின் உண்மைச் சரக்காம். எரிந்த பிற அயச்செந்தூரம் போலிருக்க வேண்டும். உண்மைச் சரக்கு பெர்ஷியா தேசத்தரசரிடம் தவிர மற்றையோரிடம் கிடைக் காதென்றும் கூறுகின்றனர்.

இப்பொருளுக்குப் புளிப்புச் சுவையேனும் துவர்ப்புச் சுவை யேனும்மில்லை என்றும், சிறிது புளிப்புச் சுவைதான் உண்டென் றும் கூறுவர்.

இது தேகத்தைச் சூடு செய்து குளிர்ச்சியாக்குவதன்றி, அதிகச் சூட்டையும் உண்டுபண்ணும்; இது கார்ப்புப் பிரிவை யடைகின்றது.

கோமூத்திர சிலாசத்தைச் சூட்டுடம்பினருக்குக் கொடுத்தல் கூடாது. இதற்கு முரிவு சூடனையாவது தேனையாவது கொடுக்க வேண்டும். இதனை நெல் (65 மி.கிரா.) முதல் குன்றியளவு (130 மி. கிரா.) வரை கொடுக்கலாம்.

கோமூத்திர சிலாசத்துடன் எப்பொருளைச் சேர்த்துக் கொடுக்கின்றேமோ, அப்பொருளின் வீரியத்தையும் குணத்தை யும் அதிகப்படுத்தும் தன்மை இதற்கு உண்டு.

வெளிப் பிரயோகத்தினல் இதற்கு அழுகலகற்றி, வேதனு சாந்தினி, வீக்கமகற்றி, புழுக்கொல்லிச் செய்கைகளும், உட் பிரயோகத்தினல் உடல் தேற்றி, உடல் உரமாக்கி, மலமிளக்கி, பித்தகாரி, கோழையகற்றி, நாற்றமகற்றி, சிறுநீர் பெருக்கி, கற்கரைச்சிச் செய்கைகளும் உண்டாம். இதன் குணத்தைக் கீழே காண்க.

''கோமூத் திரசிலா சத்தாற் குறுகியே
போமூத் திரமெரிவுட் புண்மேகம்—நாமேவு
வெப்புதிர வெப்புமறும் வீழிமுனி விம்பந்
துப்புமஞ்சு மெல்லிதழாய் சொல்.''

(வபா-ள்) மூத்திரக் கிரிச்சரம், மூத்திரநாள எரிவு, மூத்திர நாளப் புண், பிரமேகம், நாக்கில் சூடு, இரத்தக் கொதிப்பு இவைகளைக் கோமூத்திர சிலாசத்து நீக்கும்.

''குறுகிப்போம் மூத்திரம்,'' என்பதற்கு அதிமூத்திரம் குறுகித் தன்னிலை அடையும் என்று பொருள் தோன்றும் நயம் காண்க.

அன்றியும் கோமூத்திர சிலாசத்து, உயிருக்கும் இருதயத் திற்கும் பலத்தைக் கொடுத்து, நரம்புகளை வன்மைப்படுத்து

வீரிய விர்த்தியையும் ஆண்மைத் தன்மையையும் அதிகப்படுத்தும். இதனால், காசம் சுவாச காசம், க்ஷயம், குடலைப்பற்றிய பிணிகள், கருப்பாசயத்தைப் பற்றிய நோய்கள், மலடு, வாத நோய்கள், தாவர சங்கம விடங்கள், அடிப்பட்ட வீக்கம் அதனால் ஏற்பட்ட விரணங்கள் தீரும். இஃது ஒடிந்த என்பைச் சேர்த்து வைக்கும்; நீரைப்பற்றிய வியாதிகள், சூதக வலி, நீலைப்பற்றிய நோய்கள் பித்தப் பையிலும் வஸ்தி (சலப்பை)யிலும் உண்டாம். கற்கள் ஆகிய நீக்கும்.

மற்றும், கோமூத்திர சிலாசத்தை சர்ம நோய்க்கும் கொடுத்தல் உண்டு.

இதனை உபயோகிக்குமுன் சுத்தி செய்துகொள்ள வேண்டும். சில சுத்தி முறைகளைக் கீழ்க் கூறுவாம்—

1. இதனை வெந்நீரில் கலந்து, அழுத்தமான துணி அல்லது கம்பளியிலிட்டு வடிகட்டி வெய்யிலில் வைக்கவும். இதன் மேல் ஆடை கட்டும். இதனை வழித்து உலர்த்திக்கொள்ளவும். ஆடை கட்டாதிருக்கும்வரை அதைச் செய்ய வேண்டும்.

2. முன்போலவே பசுமூத்திரத்தில் செய்ய சுத்தியாம்.

3. பசும்பால், திரிபலைக் குடிநீர், கரிசாலைச்சாறு இவைகளில் ஏதாவதொன்றைக் கோமூத்திர சிலாசத்துக்கு விட்டு, ஒரு நாள் முழுதுமரைத்து உலர்த்தி எடுத்துக் கொள்ளச் சுத்தியாம்.

### கோமூத்திர சிலாசத்திற்கு அனுபானமும் பிணிநீக்கமும்.

கன்னம்; நா இவ்விடங்களில் உண்டாம் பிணிகளுக்குக் கோமூத்திர சிலாசத்தை நெல்லளவு (65 மி. கிரா.) வெந்நீரில் கலந்து, மேற்படி இடங்களிலும் முகத்திலும் பூசக் குணமாகும்.

நாசிப் பிணிக்கும் காது வலிக்கும் இதனை வெந்நீர் அல்லது பன்னீரில் கலந்து, நாசியிலும் காதிலும் துளிக் கணக்கில் விட அவை தீரும்.

நெடுநாட்பட்ட தலைவலிக்கு, இதனுடன் கஸ்தூரி, பச்சைக் கர்ப்பூரம் சமவெடை கூட்டி வெற்றிலை இரசத்தில் கலந்து பூச நீங்கும்.

காதிரைச்சலுக்கும், காதுப் புண்ணுக்கும் இம் மருந்தைச் சிறு துணியில் முடிகட்டிக் காதிற்குள் வைக்க நீங்கும்.

நாக்குத் தெத்தல், நாக்குத் தடிப்பு இவைகட்குத் தேனில் இதனைக் கலந்து நாக்கில் தேய்க்கக் குணமாம்.

கொஞ்சம் மருந்தைத் தாடையில் அடக்கிக்கொள்ள. பேசும் பொழுது உண்டாகும் பெருமூச்சு நிற்கும்.

நெல்லெடை (65 மி.கிரா.) மருந்தைக் கழுதைப்பாலில் கொடுத்துவர, ஆரம்ப பைத்திய ரோகமும் வாயினின்று வெளிப்படும் இரத்தமும் நீங்கும்.

பொடியிருமலுக்கு, காட்டிலந்தைப் பழரசத்திலாவது தண்ணீர், தேன் கலப்பிலாவது, தேன் பால் கலப்பிலாவது கோமூத்திர சிலாசத்தை இரு நெல்லெடை,(130 மி.கிரா.) வீதம் இருவேளை மூன்று நாள் கொடுக்க நீங்கும்.

சீதளம் பித்தம் சுரங்களினால் வயிற்றில் உண்டாகும் கட்டிகள். இவைகளுக்கு பருத்தி விதைக் குடிநீரிலாவது கொத்தமல்லி குடிநீரிலாவது இதனை அனுபானித்து நான்கு அல்லது ஐந்துநாள் கொடுக்க இவை நீங்கும். மேக ஊதலுக்கும் இதனைக் கொடுக்கலாம்.

வாதசம்பந்தமான மூல வியாதிக்கு இதனைப் பசுநெய்யில் கலந்து கொடுக்கவும். ஆசன வழியாய் வருகின்ற சீதரத்தமும் நிற்கும்.

கர்ப்பப்பையில் வாயுவால் உண்டாகின்ற நோய்களுக்கும், ஸ்மரணை தப்பலுக்கும் இம் மருந்தை வெற்றிலைக் குடிநீரில் அனுபானித்துக் கொடுக்கத் தீரும்.

எரிச்சலோடுங் கூடிய நீர்ச்சுருக்குக்கு, நெல்லெடை (65 மி. கிரா.) மருந்தைக் கோதுமை மாவுடன் கலந்து வர்த்தி செய்து மூத்திரத் துவாரத்தில் சொருக குணமாம்.

குதம் வெளிப்பட்டால், இதனைத் தேங்காய் எண்ணெயில் கலந்து இரண்டு அல்லது மூன்று நாள் தடவக் குணமாகும்.

நபுஞ்சத்துவம்.—பாதி வெந்த கோழி முட்டையிலுள்ள மஞ்சள் கருவில் குன்றியெடை (130 மி. கிரா.) மருந்தைக் கலந்து தினம் ஒருவேளை வீதம் மூன்று நாள், கறி ரொட்டி பத்தியத்துடனருந்தினால், ஆண்தன்மை அதிசீக்கிரத்தில் பிறக்கும், தேங்காய் எண்ணெயில் இரண்டு குன்றி (260 மி. கிரா.) எடை மருந்தைக் கலந்து ஆண்குறியின் மீதும் விரையின் மீதும் பூசி, கொஞ்சம் மர்த்தனம் செய்தால் ஆண்தன்மை விருத்தியாகும். இரவில் முழுக் கடலையை ஊறவைத்து, காலையில் நீரை வடிகட்டி அதிலாவது கொதிக்கிற நெய்யில் கோழிமுட்டையை உடைத்து விட்டு மஞ்சட்கரு கெட்டியாகுமுன் எடுத்து அதிலாவது குன்றியெடை (130 மி.கிரா.) மருந்தைக் கலந்து சாப்பிட ஆண்தன்மை விருத்தியாகும். அதிகக் கலப்பினால் வீரியம் கெட்டவருக்கு, இரு நெல்லெடை (130 மி.கிரா.) மருந்தை, ஐந்து தம்படி எடை தேனில் கலந்து சாப்பிடச் சீக்கிரத்தில் வீரியம் உண்டாம்.

வீரிய விருத்திக்கும் போக இச்சைக்கும் வாத உடம்பினர், மருந்தை வெண்ணெய் அல்லது தேனில், சூட்டுடம்பினர் தித்திப்பு மாதுளம்பழப் பானகத்திலும் சாப்பிட வேண்டும்.

கீல் பிடிப்பு, முதுகெலும்பு, கை நோய்களுக்குக் கோழிமுட்டையின் மஞ்சட் கருவில் இதனைக் கலந்து பற்றுப்போட்டு பன்னீரிலாவது ஏலக்காய்க் குடிநீரிலாவது நல்லெண்ணெயிலாவது உள்ளுக்குக் கொடுக்க நீங்கும்.

பேய் நாய்க்கடிக்கும், தேள் கடிக்கும் வேலம்பட்டைச் சாராயத்தில் இதனைக் கலந்து கடித்தவிடத்திலிடக் குணமாகும்.

நீர்க்கோவை, தலைவலி, மயக்கம், மூர்ச்சை இவைகளுக்குக் கோமூத்திர சிலாசத்தைத் தவன இலை இரசத்தில் கொடுக்கத் தீரும்.

என்பு முறிவுக்கு இதனைக் குன்றியளவு (130 மி.கிரா.) நெய்யிலிட்டுக் காய்ச்சிக் கொடுக்கத் தீரும்.

நாட்பட்ட தலைநோய் நீங்கக் குன்றியளவு (130 மி. கிரா.) சீம்பால் குன்றி எடை (130 மி. கிரா.) கோமூத்திர சிலாசத்து சேர்த்து நசியமிடக் குணமாம்.

தலைபாரம், காதில் பிறக்கும் இரைச்சல் நீங்க மேற்படி நசிய மருந்துடன் தேனைக் கலந்து மூக்கிலும் காதிலும் விடக் குணமாம்.

வயிற்றைப் பற்றிய பிணிகளுக்குச் சீரகம், சோம்பு சேர்த்துக் குடிநீரிட்டு, அதில் குன்றியளவு (130 மி.கிரா.) மருந்திட்டு கொடுக்க நீங்கும்.

சுக சன்னிக்கும் மூத்திர நாளப் புண்களுக்கும் பசுவின் காய்ச்சாத பாலில், நெல்லெடை (65 மி. கிரா.) மருந்தை அனுபானித்துக் கொடுக்கத் தீரும்.

பாளக் காயங்களுக்கு, ஒரு நெல்லெடை (65 மி. கிரா.) மருந்தை நெய்யிலிட்டுக் காய்ச்சி உள்ளுக்கும் கொடுத்து மேலுக்கும் பூசக் குணமாம்.

கோமூத்திர சிலாசத்துடன் அப்பிரகபற்பம் சேர்த்து மதுமேகத்திற்குக் கொடுக்கலாம், மதுமேக நோயில் காணும் அதிமூத்திரம், தாகம், கரபாத சன்னி நீங்கும்.

நிற்க, கோமூத்திர சிலாசத்தைச் சுண்ணமாக்க, வெடியுப்புநீர் விட்டரைத்து, வில்லை செய்து உலர்த்திச் சில்லிட்டுச் சீலைசெய்து புடமிட்டு எடுக்கவும்.

## செங்கல்.

## BRICK

இதனைக் கற்சிட்டத்தைப் போலப் பெரும்பாட்டிற்கு வழங்கல் நாட்டு வழக்கம்.

செங்கல் பொடியை வறுத்துச் சூட்டுடன் துணியில் முடி, அதைக்கொண்டு விதிப்படி ஒற்றடமிட, உடற்பிடிப்பு, கப நோய்கள் நீங்கும். இதனை,

''செங்கலின் பொடியது குணங்கேட்டி புயங்கமார்மெனைத்
தெறுமுடற் பந்தனை பூட்சியிற் பொலியை நோய் மாறும்

என்ற வடியால் உணரலாம், சுட்ட செங்கல்லை நீரிலிட்டு எழும் ஆவியை வேது பிடிக்கப் பல நீர்ப்பிணிகள் விலகும்.

### செங்கல் வேது.

''தெள்ளூறு செங்கல் காய்ச்சிச் செம்புவெண் கலத்தி லிட்டு
ஒள்ளிய முலைப்பால் தூவி யுகந்ததோர் புகையுங் காட்ட
நள்ளிய நயன ரோகம் நற்றலை வலியும் போகும்.
வள்ளலும் வாக டத்தில் மகிழ்ந்துட னுரைத்த வாறே.''

(பொ-ரை) புதிய செங்கல்லைச் சிறுதுண்டுகளாக உடைத்து நெருப்பிலிட்டுப் பழுத்தவுடன் ஒரு தாம்பிரப் பாத்திரத்திலாகிலும் அல்லது வெண்கலப் பாத்திரத்திலாகிலும் போட்டு கல்லின்மேல் படும்படி, கொஞ்சம் முலைப்பாலைத் துளிக்கப் புகையுண்டாகும். அந்தப் புகை கண்ணுக்குள் படும்படி கண்ணைத் திறந்துகொண்டு சற்று நேரமிருந்தால், முகத்தில் வியர்வை உண்டாகும். அப்போது முக்காடிட்டுக்கொண்டு வேதுபிடிப்பது நலம். இவ்வாறு செய்து வந்தால், கண் வியாதிகளும் தலைவலியும் தீரும்.

### செங்கல் கிட்டம்.

இதனைப் பொடித்து வஸ்திரகாயம் செய்து, அதனை வெல்லத்துடன் ½ வராகனெடை (2.1 கிராம்) வீதம் அருந்திவரப் பெரும்பாடு குணமாம்.

—

## துரிசு.

# CUPRI SULPHAS OR CUPRUM SULPHAS OR CUPRIC SULPHATE.

## CRUDE COPPER SULPHATE OR COPPER ACETATE.

இது, மயில்துத்தம், கண்டர், நற்பச்சை என்ற பெயர் களினாலும் வழங்கப்படுகின்றது. இஃது இயற்கையினாலும் கிடைக்கின்றது. சாதாரணமாக இதைச் செம்புடன் கந்தகத் திராவகம் கூட்டிக் காய்ச்சி எடுத்து உப்பாக்கிக் கடைகளில் விற்கின்றனர். இது நீல நிறமாக இருக்கும். இதனைப் பொடிக்கப் பச்சையாய் இருக்கும். நீரில் கரையும். இதற்கு ஒருவித துவர்ப்பும் வெகுட்டலும் உண்டு. துரிசு கரைத்த நீர் நீல நிறமாயிருக்கும். துரிசைத் தீயிலிட்டால், துரிசிலுள்ள நீர் நீங்கி, பச்சையும் வெண்மையும் கலந்த சாயலாகும். தீ அதிகமானால், அதிலிருக்கும் திராவகம் நீங்கித் தாம்பிர வர்ண மான தூள்களாம். இதற்குச் சவுட்டுப்பு, தொட்டிப் பாஷாணம், அஞ்சனக்கல், வெடியுப்பு, சூடன், அப்பிரகம், சீனம், வெள்ளைப் பாஷாணம் கல்லுப்பு, மிருதார்சிங்கி, காதம், இந்துப்பு, நாகம், வங்கம், சவுக்காரம் முதலியன பகைச்சரக்குகளென்றும், அரிதாரம், நவச்சாரம், வெங்காரம், வீரம், கெந்தி, சூதம், பூரம், சிலை, கௌரி, நிமிளை, இலிங்கம் முதலியன நட்புச் சரக்கு கள் என்றும் அறிக. கடைத்துரிசு சுத்தமானதன்று. ஆதலின் அதைச் சுத்திசெய்ய வேண்டும்.

### சுத்தி.

தேவையான துரிசை வெந்நீரில் கரைத்து வடிகட்டி சுண்டக் காய்ச்சி உப்புக் கட்டினவுடன் எடுத்துக்கொள்ளவும்.

### (வேறு)

துரிசிற்குத் தேனும் நெய்யும் விட்டரைத்து மூசையிலிட்டுக் காய்ச்சி, பிறகு பால் முரித்து வடிகட்டிய நீரில் மூன்று நாள் ஊறவைத்து, உலர்த்தி எடுத்துக் கொள்ள வேண்டும். இங்ஙனம் சுத்தி செய்யப்பட்ட துரிசு விடக்குணமின்றி இருக்கும். வாந்தியை உண்டு பண்ணாது.

### (வேறு)

பசுவின் நீரில் வைத்தெரித்துக் கழுவியெடுத்து, வெய்யிலில் உலர்த்திக் கொள்ளச் சுத்தியாம்.

### (வேறு)

வெண்மையாம்படிப் பொரித்து எடுத்தாலும் சுத்தி என்பர்.

### செய்கையும் குணமும்.

இதற்கு உடல் உரமாக்கி, துவர்ப்பி, வாந்தி உண்டாக்கி, அழுகலகற்றி, புண்ணுண்டாக்கிச் செய்கைகள் உள. இது கால் (16 மி.கிரா.) முதல் இரண்டு உளுந்தெடை (130 மி.கிரா.) வரை உடல் உரமாக்கியாகவும், ஐந்து (325 மி.கிரா.) முதல் 10 உளுந்தெடை (650 மி.கிரா.) வரை வாந்தி உண்டாக்கியாக வும் இருக்கும்.

### பொதுக் குணம்.

''புண்ணூற்றுங் காமியத்தின் புண்ணூற்றுங் கண்ணோயை/
விண்ணோற்று முத்தோட வீறடக்குஞ்—சண்ணுகின்ற
வாந்தியொடு பேதிதரும் வாய்நோய் சுரந்தணிக்குங்
காந்தி தருந்துரிசு காண்.''

(பொ-ள்) துரிசு, விரணம், காமிய விரணம், கண்ணோய், திரிதோடம், சுரம், வாய்ப்பிணி முதலியவற்றை நீக்கி வாந்தி யையும் பேதியையும் காந்தியையும் உண்டுபண்ணும் என்க.

### உபயோகங்கள்.

நாட்பட்ட பேதி, சீத பேதி, க்ஷயத்தில் காணும் பேதி இவை களுக்கு ½ உளுந்தெடை (32 மி. கிரா.) துரிசு, ½ உளுந் தெடை (32 மி. கிரா.) அபின் இரண்டையும் கலந்து மாத்திரை யாக்கித் தேனுடன் மூன்று வேளை வீதம் கொடுக்க, குணத்தைக் கொடுக்கும்.

குழந்தைகளுக்குக் காணும் பேதிக்கு, இரண்டு உளுந்தெடை (130 மி.கிரா.) துரிசை 2 அவுன்ஸ் (56 மி. லிட்) ஓமத் தீநீரில் கலந்து வேளைக்கு ஒரு தேக்கரண்டி (4 மி. லிட்) அளவு மூன்று வேளை வீதம் கொடுத்து வரலாம்.

குரல்வளையில் காணும் துத்தி நோய்க்கு, ஒரவுன்ஸ் (28 மி.லிட்) நீரில் துரிசுத்தூள் 5 உளுந்தெடை (325 மி. கிரா.) கூட்டி குழந்தைகளுக்குத் தேக்கரண்டி வீதம் ¼ மணிக்கொரு முறை கொடுக்க வாந்தியாகும். கக்குவான் நோயிலும் இதை உபயோகிக்கலாம்.

வாய்ப்புண்களுக்கு 5 உளுந்தெடை (325 மி.கிரா.) துரிசோடு, தேன் ½ அவுன்ஸ் (14 மி. லிட்) சேர்த்துக் குழைத்துப் போட நல்ல குணத்தைக் கொடுக்கும்.

கண்ணோய், பில்லம், செவ்வரி இவைகளுக்குத் துரிசுத் தூள் 1 உளுந்தெடையில் (65 மி. கிரா.) நீர் 1 அவுன்ஸ் (28 மி. லிட்.) கூட்டித் தினம் இருமுறை வீதம் துளிக்கணக்கில் விட்டுவர நற் பலனை அளிக்கும்.

படர்தாமரை முதலிய தோலைப்பற்றிய நோய்களுக்குத் துரிசுத் தூள் 1 வராகனெடையும் (4.2 கிராம்) பன்றி நெய் 1 ¼ பலமும் (44 கிராம்) கூட்டி மேலுக்கு உபயோகிக்கலாம்.

அட்டைப் பிரயோகம் செய்தவுடன், இரத்தம் நிற்க, படிகாரத்தை உபயோகித்துக் குணம் காணாவிட்டால், கொஞ்சம் துரிசுத் தூளை மேலே தேய்க்க இரத்தம் நிற்கும். நாசித் துவாரத்தின் இரத்த ஒழுக்கிற்கு, துரிசுத் தூள் 4 உளுந்தெடையில் (260 மி கிரா.) சுத்த நீர் 1 அவுன்ஸ் (28 மி. லிட்.) கூட்டி நாசியில் இழுக்கச் செய்தால் நல்ல குணமுண்டாகும்.

அபின், ஊமத்தை, எட்டிக்கொட்டை, காக்காய்க்கொல்லி விதை, நாபி, வெள்ளைப்பாடாணம் இவற்றை விடமிக்கும்படி உண்டவர்களுக்கு, துரிசுத் தூள் 5 உளுந்தெடையில் (325 மி.கிரா.) இளஞ்சூடான வெந்நீர் 20 அவுன்ஸ் (560 மி. லிட்.) சேர்த்து ½ மணிக்கொருமுறை கொடுக்க, நல்ல வாந்தி உண்டாகி விடப்பொருள் வெளிப்படும்.

துரிசைப் பொடித்து நீரில் கலந்து, அதில் மெல்லிய சீலையை நனைத்து உலர்த்திக் கொள்ளவும். இதைத் துர்மாமிசம் வளர்ந்த விரணங்களுக்கு உபயோகிக்கலாம்.

## துரிசுச் செந்தூரம்.

ஒரு பலம் (35 கிராம்) சுத்தி செய்த துரிசிற்கு, தும்பிப் பழச்சாறு குடைவேலின் பட்டைச்சாறு, கற்றாழைச்சாறு இவைகளை விட்டு முறைப்படி அரைத்து, வில்லை தட்டி உலர்த்திப் புடமிட்டெடுக்கச் செந்தூரமாகும்.

| துணைமருந்துகள். | தீரும் நோய்கள். |
|---|---|
| கீழாநெல்லிச் சாறு | பித்தகாரகம். |
| ஆலம்பால் | பித்தவாயு. |
| கொன்றைச் சாறு | அரட்டல்புரட்டல் சந்நி தோஷம். |
| கமுகு மரச் சாறு | தனுர் வாயு. |
| சர்க்கரை | மகோதரச் சந்நி. |
| முலைப்பால் | விடாச்சுரம் |
| வெண்ணெய் | காக்கைவலி. |
| தண்ணீர் | தாருணவாதம் |
| வெங்காயச் சாறு | பயித்திய சந்நி |
| சுரைச்சாறு | சேட்ப சந்நி. |

(வேறு)

துரிசு 1 பலம் (35 கிராம்) வேப்பிலை இரண்டு பலம் (70 கிராம்) இவற்றை நீர் விடாமல் கல்வத்திலிட்டரைத்து வில்லை செய்து, பிறகு பிரண்டையை அரைத்து அதற்குள் இவ்வில்லையைப் பொதிந்து, முற்றும் காய்வதற்குள் 10 வரட்டியில் புடமிடவும். இவ்வாறே செந்தூரமாகு மட்டும் புடமிடவும்.

இதனைக் கால் (32 மி. கிரா.) முதல் அரைக் குன்றி (65 மி. கிரா.) யளவு தக்க துணைமருந்தி லீய குன்மம், சூலை, மகோதரம், வாதபித்த கப நோய்கள் நீங்கும்.

(வேறு)

துரிசு 1 பலம் (35 கிராம்) கட்டி ஒன்றை எடுத்துக் கடுகைத் தேன்விட்டரைத்து அதற்குக் கவசம் செய்து, சுண்ணும்புச் சீலை ஒன்று செய்துலர்த்தி, மூன்று வரட்டியில் புடமிட்டெடுக்கச் செந்தூரமாம்.

அளவு : 1 அரிசியெடை (65 மி. கிராம்.)

துணை மருந்து : இஞ்சிச் சாறு.

தீரும் நோய் : குன்மம்.

பச்சை எண்ணெய்.

ஊமத்தைச் சாறு $2\frac{1}{2}$ படியில் (5 லிட்டர்) துரிசுத்தூள் 10 பலமிட்டுக் (350 கிராம்) கரைத்து, தேங்காய் நெய் 1 படி (2 லிட்டர்) கூட்டி அடுப்பேற்றி எரித்துக் கடுகு திரளும் பக்குவத்தில் இறக்கிக் கொள்ளவும்.

இத்தைலத்தைச் சீலையிலூட்டிப் பலவகைப்பட்ட விரணங்களுக்கு வைத்துக் கட்டவும். இராஜ பிளவைக்கு உபயோகிக்க நற்பலனை அளிக்கும்.

காதில் உண்டாம் விரணங்களுக்கும் சீவடிதலுக்கும் மேலே தடவி வரக் குணத்தைக் கொடுக்கும்.

துரிசு முடமயிர்க்களிம்பு, இளநீர்க் குழம்பு, சங்காதி மாத்திரை போன்ற பலவகைக் கண்நோய் மருந்துகளிலும் சேர்க்கப்படுகின்றது.

செம்புபற்பம் செய்வதற்கு, துரிசினின்று எடுக்கப்பட்ட செம்பே சிறந்த தாகக் கருதப்படுகின்றன.

## துரிசு நஞ்சுக்குறி குணம்.

இதற்கு நீரில் கரையும் தன்மையும், சீக்கிரத்தில் இரத்தத்துடன் கலக்கும் தன்மையும் உள்ளபடியால் விரைவில் விடக் குணங்களை உண்டு பண்ணும்.

இதை உட்கொண்டவுடன், வாயில் ஒருவித களிம்புச் சுவை, வாந்தி, வாய்க் குமட்டல், வாய் நீரூறல், வாந்தியில் இரத்தம் கலந்திருத்தல், கவிச்சு நாற்றம் வீசல், நீலமாக வாந்தியாதல், வயிற்றுக்கடுப்பு, வயிற்றெரிச்சல், வயிற்றுப்பொருமல், தொண்டை உலர்தல், அதிதாகம், நீரடைப்பு, காமாலை, பாரிசவாயு, கண் செருகல், பசிமந்தம், கண்களில் நீர் வடிதல் முதலிய குணங்களை உண்டுபண்ணி மரணத்தை விளைவிக்கும்.

## முறிவு.

(1) எலுமிச்சம் பழச்சாற்றை, வேளைக்குக் காலாழாக்காக (42 மி. லிட்.) 3 வேளை கொடுத்தாலும், (2) இஞ்சிச்சாறு, தேன், சர்க்கரை இம் மூன்றையுங் கூட்டி அருந்தினாலும் மயில்துத்த நஞ்சு முறியும்.

தயிர் நீர் அல்லது புளித்தகாடி நீரை அருந்தினாலும் பழச் சாற்றுடன் கரும்புச் சாற்றைக் கூட்டி உண்டாலும் நீங்கும்.

துரிசை அருந்தியவுடன், வயிற்றைக் கழுவி முட்டை வெண் கரு அல்லது பாலைக் கொடுக்க வேண்டும்.

## நண்டுக்கல்.

## FOSSIL STONE CRAB.

இச்சரக்கு சமுத்திரக் கரையோரங்களில் கிடைக்கின்றது. இது, பார்வைக்கு, உலர்ந்த களிமண்கட்டிமீது நண்டின் ஓடு ஒட்டிக்கொண்டிருப்பதைப்போல் இருக்கும். இது கடலில் பிறப்பதாகவே கூறப்பட்டுள்ளது.

இதனை,

''உற்றதொரு சமுத்தி ரத்திலே பிறந்து
உசித மென்ற கல்நண்டாம்.''

என்னும் அடியால் உணரலாம்.

செய்கையும் குணமும்.

இதற்குச் சிறுநீர்ப்பெருக்கிச் செய்கை உண்டு. இதன் குணத்தைக் கீழ்க்கண்ட பதார்த்த குண சிந்தாமணிச் செய்யுளால் உணரலாம்.

''நீரருக வீரடைப்பு நீங்காப் பெருவயிறு
நீரொழுகு மேகவெட்டை நீங்குங்கா—ணுரமிர்தே
யைய மறுக்கு மரியதொரு நண்டுக்கல்
செய்யுங் குணமிவையாந் தேர்.''

(பொ-ரை) நீரருகல், நீர் அடைப்பு (கல், தசை முதலிய வற்றால்), நாட்பட்ட பெருவயிறு, சலப்பிரமேகம், வெள்ளை, கபம் முதலிய நோய்களை நண்டுக்கல் நீக்கும் என்க.

சுத்தி.

கற்சுண்ணும்பும் பூநீறும் சேர்த்துத் தெளிவெடுத்த நீரில், நண்டுக்கல்லை இட்டு ஒரு சாமம் (3 மணி) எரித்து, நீர் சுண்டிய பின் எடுத்து நீரில் கழுவி எடுக்கச் சுத்தியாம்.

பற்பம்.

சுத்தி செய்த கல்நண்டை, முள்ளங்கிச் சாற்றால் மையபோ லரைத்து உலர்த்திப் பிறகு சிறுபீளைச்சாற்றாலரைத்து, உலர்த்தி வைத்துக் கொள்ளவும்.

அளவு : ½ (65 மி. கிராம்), முதல் 2 குன்றி (260 மி. கிராம்) வரை.

துணை மருந்து : நீரைத் தள்ளும் மூலிகைச்சாறு அல்லது குடிநீர்.

தீரும் நோய்கள் : நீர்க்கட்டு, நீரடைப்பு, கல்லடைப்பு முதலியன.

வேறு உபயோகங்கள்.

இரண்டு வராகன் (8.4 கிராம்) பொரிகாரத்தை 1 படி (1.3 லிட்டர்) நீரிலிட்டு, எட்டிலொன்றாய்க் காய்ச்சி, அதில் நண்டுக்கல் குன்றி (130 மி. கிராம்) அளவு கரைத்துக் கொடுக்க நீரடைப்பு, கல்லடைப்பு, நீர்கருக்கு, நீர்க்குத்து, துன்மாங்கிச அடைப்பு, கிரிச்சரம் முதலிய பிணிகள் நீங்கும்.

தேனில் கல்நண்டை உரைத்துக் காலையிலும் மாலையிலுமாக மூன்று வேளை உண்ண, பதின்மூன்று சந்நியும் நீங்கும்.

மூக்கரட்டை, சாரணை இவ்விரண்டின் வேர்களுடன் மாவிலிங்கப்பட்டை சேர்த்துக் குடிநீரிட்டு, நண்டுக்கல்லை உரைத்து, அந்தி சந்தி மூன்று நாள் கொள்ள வாதம் எண்பதும் நீங்கும்.

அவ்வெண்பதில் கீழ்க்காணும் வாதநோய்கள் குறிக்கப்பெற்றுள்ளன; குதிரைவாதம், யானை வாதம், உரவாதம், முகத்திசிவு, சந்நிவாதம், பிடரி வாதம், நரம்பிசிவு, உடல் வருத்தம் வாயு முதலியன.

சீரகக் குடிநீரில் காலை மாலை மூன்று நாள் கல்நண்டைக் கொடுக்க 64 சுரங்களும் நீங்கும்.

எலிச்செவி யிலைக்கற்கம் கொட்டைப்பாக்களவில், கல் நண்டை உரைத்துக் கொடுக்க, வாத பித்த கப நீரிழிவுகள் நீங்கும். பெண்களுக்கு மூன்று நாள் கொடுக்க கர்ப்ப வாயு நீங்கும்.

சிவனார்வேம்புத் தைலம் காசளவில், குன்றியளவு (130மி. கிரா.) கல்நண்டைச் சேர்த்துக் கால் மண்டலம் அருந்த 18 குட்டமும் தீரும்.

குன்றியளவு (130 மி. கிரா.) நண்டுக்கல்லைப் பாடவரை (தம்பட்டங்காய்ச்) சாற்றில் மூன்று நாள் கொடுக்கப் படைகள், துர்நீர், பெருவயிறு தீரும்.

கிரிப் பூண்டுச் சாற்றில் கொடுக்க சகல விடமும் அகலும்.

உத்தமதாளியிலைச்சாற்றில் கொடுக்கப் பேய் நரி, நாய் இவற்றின் விடம் நீங்கும்.

தேசி (எலுமிச்சம்பழச்) சாற்றில் 12 நாள் கொடுக்க, பைத்தியம் நீங்கும்.

உத்தமதாளிச் சாற்றில் கல் நண்டைச் சேர்த்து உளுந்தளவு (65 மி. கிரா.) கண்களில் கலிக்கமிட, பைத்தியம், குமரகண்ட வலி, பிரமகண்ட வலி முதலியன நீங்கும்.

நந்தியாவர்த்தத்தின் சாற்றில் உரைத்து எள்ளளவு எட்டு நாள் கண்ணிலிடக் கண்ணோய் 96-ம் நீங்கும்.

மாலைக் கண்ணுக்கு, முருங்கவிரைத் தைலத்தில் கல்நண்டை அரைத்து மையாக்கிக் கண்ணிலிடவும்.

கல்நண்டைப் பசும்பாலில் உரைத்து 20 நாள் கொடுக்க மலடு நீங்கும்.

கல்நண்டைச் சாதிக்காய் பொடியுடன் சேர்த்து மூன்று நாள் உண்ண, போகம் தம்பிக்கும், தேசிச்சாற்றில் கொள்ள, சீக்கிரம் கலிதமாகும்.

கல்நண்டு சகல மேகங்களையும் நீக்கக்கூடிய நந்திமையிலும் ஒன்றாகச் சேர்க்கப்படுகின்றது.

## நிமிளை.

இது நான்கு வகை படுமென்று கூறப்பட்டுள்ளது. அவை (1) பொன் நிமிளை, (2) வெள்ளி நிமிளை, (3) செம்பு நிமிளை, (4) ஈய நிமிளையாகும். ஈயத்திற்குப் பதில் வெண்கலம் கூட்டி உரைப்பதும் உண்டு.

இவைகள் பொன், வெள்ளி, செம்பு, ஈயம், இவற்றை உருக்கும் போது, மேலே அல்லது அடியில் கட்டும் களிம்புகள் என்றும், அல்லது மேற்படி பொன் முதலிய உலோகங்களுண்டாகும் கனிகளில் கட்டும் களிம்புகளென்றும் சொல்லப்படுகின்றன. இவைகளின் குணங்கள் இவைகளின் மூலப்பொருள்களாகிய பொன் முதலிய நான்கின் குணங்களேயே விசேடமாக ஒத்திருக்கும்.

## சுத்தி.

வாழைக்கிழங்குநீரில் நிமிளையை இட்டு எரித்துக் கழுவி எடுக்கச் சுத்தியாம்.

(வேறு)

இதனைப் பசுவின்பால் அல்லது முலைப்பாலில் ஊறவைத்து எடுக்கச் சுத்தியாம்.

இதற்கு, துவர்ப்பி, உடல் உரமாக்கி, தாது வெப்பகற்றி, உடல் தேற்றி ஆகிய செய்கைகள் உள. இதைக் குன்மம், குலை எரிவு, பேதி, கிரகணி. இவைகளுக்கு உள்ளுக்கும், சருமநோய், முலைக்காம்பு, உதடு ஆகியவைகளின் வெடிப்பு இவைகளுக்கு மேலுக்கும் உபயோகிக்கலாம்.

## பொதுக் குணம்.

''தாதுவை வளர்க்குந் தனிப்பித்தத் தைப்போக்கு
மோதுசந்நி பாதத்தை யோட்டுங்கா—ணோத
வொருநா வுருதே யுயர் பொன் முதலா
மொருநால் வகை நிமிளையும்.''

(பொ-ரை) பொன், வெள்ளி, வெண்கலம், செம்பு என்கிற நான்குவித நிமிளைகளும் விந்துவை வளர்க்கும், அதிபித்தத்தையும் சந்நியையும் நீக்கும்.

இதற்கு அதிக வறட்சியுண்டென்று கூறப்பட்டுள்ளது. இது புண்களில் வளருந்துன்மாமிசத்தைக் கரைப்பதோடு, அவைகளிலுண்டாகும் குழிகளில் நன்மாமிசத்தை வளர்த்துச் சீக்கிரத்திலாற்றும். நேத்திர ரோகங்கள் அனைத்தையும் போக்கும்.

## உபயோகம்.

இதை உரைத்துப் பூச, உடையாத கட்டிகள் உடையும்; தேமல், படை முதலியனவும் நீங்கும்.

இதனுடன் குங்குமபூவையும் அபினையும் சேர்த்தரைத்துப் பூசக்கீல்வாதம் குணமாம்.

### நிமிளை பற்பம்.

ஒரு பலம் நிமிளையை எலுமிச்சம் பழரசத்தில் ஐந்து நாள் ஊறவைத்துப் பிறகு செருப்படை இரசத்தில் இரண்டு தடவை அரைத்துப் புடம் போட்டுப் பிறகு பிரண்டை இரசத்தில் இரண்டு தடவை அரைத்துப் புடம் போட இது வெளுத்துவிடும்.

அளவு : 5 (325 மி. கிராம்) முதல் 10 உளுந்தெடை (650 மி. கிராம்) வரை கொடுக்கலாம்.

### நிமிளைச் செந்தூரம்.

வெண்கல நிமிளை சேர் 1ஐ (280 கிராம்) கல்வத்திற் போட்டுக் குப்பைமேனி இரசத்தை விட்டு 40 சாமம் (120 மணி) அரைத்து, சுண்டுகிற தருணத்தில் அதை 50 பில்லைகளாகச் செய்துலர்ந்த பிறகு ஓர் ஓட்டில் வைத்து, மேல் ஓடு மூடி மண் சீலை செய்து, ஒன்றரைச்சாண் உயரம் ஒரு சுஜம் அகலம் பள்ளந்தோண்டி, பாதிவரைக்கும் காட்டு எருமுட்டையால் நிரப்பி, அதன் மேல் ஓட்டினை வைத்துக் குழி மூடுகிற வரையில் காட்டு எரு முட்டையால் நிரப்பிப் புடம்போட்டுத் தீ நன்ருய்ப் பற்றினபோது, ஒரு கூடை உமியை மேல் கொட்டி, புடம் எரிந்து தானே யாறின பிறகு மருந்தையெடுத்து, மேற்சொன்னபடி குப்பைமேனி இரசத்தால் அரைத்து, மற்றும் இருமுறை புடமிட்டெடுக்கச் செந்தூரமாம்.

இச்செந்தூரத்தை ½ பணவெடை (244 மி. கிராம்)ஐ வெண்ணெயில் கலந்து, இருவேளை ஒரு மண்டலம் உட்கொண்டால், மூலமுளை வராமல் உள்ளேயடங்கி நிற்கும். அசுவகந்தி இரசாயனத்தோடு செந்தூரம் ½ பணவெடை (244 மி. கிராம்) கலந்து இரண்டுவேளை ½ மண்டலம் உட்கொண்டால் சயரோகம் நீங்கும்.

---

## பால் துத்தம்.

## ZINC SULPHAS, SULPHATE OF ZINC

இது வெள்ளைத்துத்தம், மடல் துத்தம், நாக உப்பு, வெள்ளீய உப்பு என்ற வேறு பெயர்களாலும் வழங்கப்படும்.

### செய்முறை.

துத்தநாகப்பொடி மூன்று பலம் (105 கிராம்), கந்தகத் திராவகம் ஐந்து பலம் (175 கிராம்), நீர் இருபது பலம் (1 லிட்டர்) எடுத்துக்கொண்டு, முதலில் திராவகத்தையும் நீரையும் கலந்து, அதில் நாகப்பொடியைப் போட்டால், அது பொங்கும். அக் கொதிப்படங்கிய பிறகு திராவகத்தை வடிகட்டிப் பிறகு சுடவைத்தால், நீரின்மீது ஏடு படியும். உடனே தீயை விட்டு இறக்கு

வைத்தால் உப்புக்கட்டும்; இதுவே துத்தநாக உப்பு. இது வெண்மையாயும் வாசனையற்றதாயுமிருக்கும்; காற்றுப்பட்டால் தூளாகி விடும்; நீரில் கரையும்; சாராயத்தில் கரையாது.

இதற்கு உடல் உரமாக்கிச் செய்கையும், துவர்ப்பிச் செய்கையும், இசிவகற்றிச் செய்கையும், வாந்தியுண்டாக்கிச் செய்கையும் உள. இதன் பொதுக் குணத்தைக் கீழ்ச் செய்யுளால் உணரலாம்.

''மூற்றிய குறிப்புண் மூலைவிரணஞ் சென்னிதனைப்
பற்றிநின்ற வாதம் படர்கரப்பான்—சுத்தவிழிக்
காசங் கணம்பில்லங் கண்ணோய்குந் தந்தொல்லையும்
வாசமிகு துத்தத்தால் வாழ்த்து.''

(பொ-ரை.) குறிகளிலுண்டாம் புண், மூல மூலைகளிலுள்ள புண்கள், தலையைப் பற்றிய வாதநோய், படர்கின்ற கரப்பான், கண் காசம், குழந்தைகளுக்குக்காணும் கணம், இமையிலுண்டாம் பில்லம், கண்ணோய், குந்தம் முதலிய பிணிகள் துத்தத்தினால் நீங்கும் என்ப.

மற்றும் துத்தத்தினால் உன்மத்தம், காக்கை வலி, கூத்தாடும் சந்தி, சூதக சந்தி, கக்கிருமல், கயநோயில் காணும் வியர்வை, சுவாசகாசம், வலிகுன்மம், நாட்பட்ட பேதி, சீதபேதி, பெரும் பாடு, முறைக்காய்ச்சல், தூர்ப்பலம் முதலிய நோய்களும் நீங்கும்.

### உபயோகிக்கும் முறை

அரை வராகனெடை (2.1 கிராம்) உப்பை எட்டுப்பலம் (280 மி. லிட்.) நீரில் கலந்து, வெள்ளை நோயில் பீச்ச உபயோகிக்கலாம்.

ஐந்து குன்றி (650 மி. கிரா.) துத்தநாக உப்பை ஓர் அவுன்ஸ் (28 மி. லிட்.) நீரில் கலந்து, இழிகண்ணுக்குத் துளிக்கணக்கில் விட்டு வரவும். ஒரு குன்றியை (130 மி. கிராம்.) ஓர் அவுன்ஸ் (28 மி. லிட்.) நீரில் கலந்து கண் காசம், கண்ணோய் முதலியவைகளுக்கும் புண் கழுவுவதற்கும் உபயோகிக்க, அது பலனை அளிக்கும்.

ஆசனத்தில் காணும் மருளுக்கு, இதைத் தூள்செய்து போட்டு வர விரணமாகும்.

இசிவைப் போக்குவதற்கும், உடலுக்கு வன்மையை அளிப்பதற்கும் ½ குன்றி 65 மி. கிரா.) வீதம், நெய் அல்லது வெண்ணெயில் கலந்து கொடுக்கவேண்டும்.

நஞ்சுண்டவர்களுக்கு ஐந்து குன்றி (650 மி. கிரா.) முதல் அரை வராகனெடை (2.1 கிராம்) வரை கொடுக்க ஆயாசமில்லாமல் அதிவிரைவில் வாந்தியாகும்.

மற்றும் இது, துத்தமாத்திரை, அமர மாத்திரை போன்ற பல கண்ணோய் மாத்திரைகளிலும் உள்மருந்துகளிலும் சேர்க்கப் படுவதைக் காணலாம்.

குறிப்பு —கருவிழியில் புண் இருந்தால், இதனைக் கண் நோய்களில் பயன்படுத்தக்கூடாது.

# VII. உபரசம்.

## அட்டை.

## HIRUDO MEDICINALIS.
## SPECKLED LEECH.

இஃது, ஆழமில்லாததும் ஆழமுடையதுமான தெளிந்த நல்ல நீரில் அல்லி, நெய்தல், கொட்டி போன்ற மணமுள்ள செடிகள் இருக்குமிடங்களில் கிடைக்கும். மற்றும் இது, மணலின் கீழ், மறைவாக ஒதுங்கிக் கிடப்பதும் உண்டு. இவ்வட்டையைப் பிடித்து முக்கால் பாகம் நீருள்ள வாயகன்ற கண்ணாடிப் புட்டியில் விட்டு, அந்நீரில் உணவுக்காகச் செவ்வல்லி, கொட்டி, பசு மஞ்சள் இவற்றின் கிழங்குகளிலொன்றை அரைத்துச் சேர்த்து, இவ்வட்டை பற்றிக்கொண்டு உறங்க இலைகள் இட்டு, புட்டியின் வாயை ஒரு மெல்லிய துணியால் மூடி, அடிக்கடி நீரை மாற்றிக் கொண்டு வந்தால், இது பல திங்கள் உயிருடன் வாழும். சிறிய உருவுள்ள அட்டையே மருத்துவத்திற்கு நன்றாய்ப் பயன்படும்.

1. நல்ல அட்டை, 2. தீய அட்டை, 3. சாதாரண அட்டை என இவ்வட்டையை மூவகையாகப் பிரிப்பர், இவற்றுள்—

1. நல்ல அட்டை நால்வகைப்படும்.

முதல் வகுப்பு: வெண்மையும் சிறிது பொன்நிறமும் பொருந்தியிருக்கும்.

இரண்டாம் வகுப்பு: செங்கழுநீர் நிறமாயிருக்கும்.

மூன்றும் வகுப்பு: பவழ நிறத்தையும் அரிசியின் உருவத்தையும் பெற்றிருக்கும்.

நான்காம் வகுப்பு: பச்சை அல்லது எலுமிச்சம்பழ நிற மாகும்.

2. தீய அட்டை—கருநிறம், கருஞ்செம்மை நிறம் அல்லது வானவில் போன்ற நிறம் ஆகிய பல நிறங்களைப் பெற்றிருக்கும்.

3, சாதாரண அட்டை—பொன்நிறத்தில் கருநிறம் பொருந்தியிருக்கும்.

நிறக, அட்டைகளுக்கு, தனி வெள்ளை, மிகுநீலம், பொன்மை, கருப்பு முதலிய நிறங்கள் பொருந்துவன தேசகுணம் என்பர். சாதாரண அட்டை, 2 (5 செ. மீட்டர்) முதல், 4 அங்குல (10 செ. மீட்டர்) நீளமுள்ளதாய், சிறிது கூர்மையான முனைகளுடன் புறத்தோலில் 6 நீளக் கோடுகளுடையதாய், குறுக்குச் சுருக்கங்களையும் பெற்றிருக்கும். அட்டைக்குப் பல் மூன்று, தோலடிக்கு ஐந்து, முகம் பச்சை அல்லது சிவப்பு பக்கமிரண்டிலும் பருத்த நரம்பு இருக்கும் என்று கூறப் பட்டுள்ளது.

ஆங்கில சில நூல்கள், அட்டையில் ஆண் பெண் தனியா யில்லை என்று கூறினும், நம் நூல்கள் ஆண் பெண் தனித்தனி உண்டென்றே கூறுகின்றன.

இதனை,

"ஆண்மிகில் ஆணும் பெண்மிகில் பெண்ணும்"

என்ற அடியால் உணர்க. இவற்றுள் ஆண் பெண் அறிய, தாமரையையும் கொட்டியையும் நீரிலிட்டு அட்டையை விடின் ஆண் தாமரையைச் சேரும்; பேடு கொட்டியைப் பற்றும். இச்செயலினால் கண்டு கொள்ளலாம். இதனை,

"அட்டையில் பெண்ணும் ஆணும் அறிந்திட வேணுமாகில்
கொட்டியும் பதுமந் தானுங் கூடவே நீரில் போட்டால்
அட்டையை விட்ட வாறே ஆண்பது மத்திற் சேரும்
கொட்டியிற் பேடு சேரும் குறிதனை யறிந்து கொள்ளே."

என்ற செய்யுளால் உணர்க.

நிறக, நண்டு, தவளை, நீர்ப்பாம்புகளையுடைய நீர் ஓட்ட மில்லா நீர்நிலை, சருகூறிய நீர் இவைகளிற் பிறந்த அட்டை மருந்துவத்திற்காகாவாம்.

இதனை,

"ஆகா வட்டை யதுகேளாய் அலவன் தவளை நீர்ப்பாம்பு
மேகா சலத்தில் பிறந்தனவும் வேண்டா சருகிற் பிறந்தனவும்
போகச் சுனையிற் பிறந்தனவும் பொல்லா வட்டை யிவை
யென்றே
பாகார் மொழிகொள் பைந்தொடியே பாரா யட்டை
வகுப்பினையே."

என்று புகன்றிருப்பதனால் அறிக.

செய்கையும் ஆட்சியும்.

வீக்கம் நீக்குஞ் செய்கைக்காக கார் இரத்தக் குழலைக்கீறி, இரத்தத்தை வெளிப்படுத்தல் போல இதைச் சிறப்பாக இரத்தத்தை வெளிப்படுத்த உபயோகித்தல் வழக்கமாயினும்,

முதியவர்களும், பெண்களுக்கும், சிறுவருக்கும், மென்மை உடலைப் பெற்றோர்க்கும், ஆயுத சிகிச்சைக்குப் பயந்தவர்க்கும் பித்த உடம்பினர்க்கும் சிறப்பாய் உபயோகிக்கலாம். அட்டை நீரில் பிறந்து வசிப்பதினால், இனிப்பையும் குளிர்ச்சியையும் உடைத்தாயிருத்தலின் பித்தநோய்கள் நீங்கும் என்று கண்டு கொள்க. ஓர் அட்டை சுமார் 120 துளி இரத்தம் வரை இழுக்கும் வன்மை உடையது. அட்டை உறிஞ்சுவதனால், 12 அங்குலம் வரை உள்ள இரத்தம் வெளிப்படும் என்பதை, '' அட்டைவிடி லுதிரம் ஆறிரண்டங்குலம் போம் என்ற தொடரால் அறிக.

அன்னம் நீரைப் பிரித்துப் பாலைப் பருகுவது போல, அட்டையானது விடநீரைப் பருகி இரத்தத்தைச் சுத்தி செய்யும் என்பதை,

'' முன்னே கேளா யட்டையதன் குணத்தைச் சொல்வன்
மொய்குழலே
அந்நாளன்னம் பால்பருகும் அதுபோல் வாங்கும் விஷநீரை
நன்னாள் பார்த்து நோயறிந்து நயனந் தன்னில் விடுவாயால்''

என்ற அடிகளால் உணர்க.

ஒரே சமயத்தில் 4 அல்லது 6 அட்டைகளுக்குமேல் விடக் கூடாது. நிற்க, இதனைப் பலவகைப் பிணிகளில் உபயோகிக்கும் விதத்தினைக் கீழ்க் கூறுவாம்.

அடிபட்ட வீக்கங்கள், கட்டிகள், கிரந்தி வீக்கங்கள், சுளுக்கு, தோல் என்பு போன்ற உறுப்புகளைப் பற்றிய வீக்கங்கள் ஆகியவைகளுக்கு அவ்வவ்விடங்களில் அட்டையை விட்டு இரத்தத்தை வெளிப்படுத்த அந்நோய்கள் தீரும்.

மருத்துவத்திற்கடங்காத வாந்தியில், நெஞ்சுக்குழியில் விட நீங்கும்.

தாங்காத் தலைநோய்க்குப் பொட்டில் விட அது தணியும். தணியாவிடின் பிடரியில் விடவும்.

சுரத்திலுண்டாம் மார்புநோய், வயிற்றுநோய் ஆகியவற்றிற்கு நோய் கண்ட இடத்தில் விடவேண்டும்.

இரத்த மூலத்தில் இரத்தம் தடைப்படுவதனால் உண்டாம் தலைநோய்க்கு, அட்டையை குதத்தைச் சுற்றி விட நீங்கும். ஆனால், இது குதத்திற்கு புகாவண்ணம் காத்துக் கொள்ளவும்.

சூதகத் தடையினால் உண்டாம் தலைநோய் நீங்கத் தொடைகளின் உட்பக்கம் கடிக்க விடவும்.

இரத்த சீதபேதியில் உண்டாம் வயிற்றுக் கடுப்புத் திரிகத்தைச் சுற்றி விடவும்.

கல்லீரல் வீக்கத்திற்கு அவ்விடத்தில் விடப் பலன் தரும்.

சிறுருக்குண்டாம் கக்குவான் நோய் தீர நடுமுதுகின்மேல் விடவும்,

நாட்பட்டதும் பலவகைப்பட்டதுமான கீல்வீக்கங்களுக்கு அட்டை விட்டு நற்குணம் கண்டிருக்கின்றோம்.

மற்றும் கண்ணில் கனம் தோன்றி வலித்து, நீரொழுகிக் கொண்டு புருவத்தில் வலியுண்டானால் அட்டைவிடின் அது நன்றாகும். இதனை,

"கண்ணது கனத்து நொந்து கண்ணில்நீ ரொழுகு மாயின்
விண்ணுடன் புருவத் தோடு மேலுற வலித்த போது
நிண்ணிய அட்டை விட்டு நிமைபெறு நீளந் தன்னில்
திண்ணிய கிரமத் தாலே செய்வதோர் கருமம் நன்றாம்"

என்று புகன்றிருப்பதனால் உணர்க.

மேலே குறிப்பிடப்பட்ட குறிகுணங்கள் எல்லாக் கண்ணோய்களுக்கும் பொதுவாயினும், சிறப்பாய் நேத்திரச் சூலை, வாத காசம், கருவிழியில் உண்டாம் படர்விரணம், காசநோயில் சரிவரச் சஸ்திர சிகிச்சை செய்யப்படாததினால் உண்டாம் அழற்சி இவைகளுக்கு அட்டை விட்டுப் பலன் கண்டனம். மற்றும் நிமையில் அட்டையை விடவேண்டுமென்று கூறப்பட்டிருக்கிறது. அதற்கு, கடைக் கண்ணிலிருந்து ½ அங்குலம் (1.25 செ. மீ.) தூரத்தில் புருவ முனைக்குக் கீழ் விடுவதை நலமெனக் கண்டு கொள்க.

### அட்டை விடக்கூடாத இடங்களும் திதிகளும்.

அட்டைகளைக் கார் இரத்தக் குழல்கள் தோன்றுமிடங்களிலும், நாடி பரிசிக்கப்படும் வீக்கங்களிலும், கண்ணிமைகளிலும், ஆண்குறி, அண்டம், குய்யம், ஸ்தனம் இவைகளின் மீதும் விடுதலாகா. விடின் வீக்கத்தை உண்டுபண்ணும். சிறுவர்களுக்கு இரத்தம் விரைவில் வெளிப்படுமாகையால், கண் காணிப்பாக என்றிருக்குமிடங்களில் விடலே நன்று. அட்டை விட நடுப்பத்து நாழிகை சிறந்ததாயினும், குழந்தைகளுக்குக் காலையில் விடலே நன்று. ஏனெனில் மாலையில் விட்டால், ஒருகால் இரவில் கடிவாயினின்றும் இரத்தம் பெருகின் கவனிக்க இயலாது. அதனால், ஆபத்து நேரும். மற்றும், பிரதமையில் பெருவிரலிலும், துதியையில் உள்ளங்காலிலும், திரிதிகையில் முழங்காலிலும், சதுர்த்தியில் தொடையிலும், பஞ்சமியில் குய்யத்திலும், சஷ்டியில் நாபியிலும், சப்தமியில் ஸ்தனத்திலும், அஷ்டமியில் கரத்திலும், நவமியில் கழுத்திலும், தசமியில் அதரத்திலும், ஏகாதசியில் நாக்கிலும், துவாதசியில் நெற்றியிலும், திரயோதசியில் புருவத்திலும், சதுர்த்தசியில் பிடரியிலும், பூரணத்தன்று உச்சியிலும் அமிர்தம் நிற்கின்றபடியினால், அத்திதிகளில் அவ்விடங்களில் அட்டை விடக்கூடாது. விடின் மரணம் நேரிடுமென்று கூறப்பட்டுள்ளது.

### சுத்தியும் ஆராய்ச்சியும்.

அட்டையைக் கடிக்கவிடுமுன், அதைச் சுத்திசெய்ய, ஒரு வாயகன்ற பீங்கான் பாத்திரத்தில் மஞ்சள் கரைத்த நீரிட்டு, அதில் அட்டையை விட அதன் உடம்பினின்றும் கோழையொத்த கழிப்பொருள் வெளியாகும். பின்பே அந்த அட்டையை உபயோகித்தல் வேண்டும். இக்கழிப்பொருள் அதிகமாயிருப்பினும் அது நீரில் சுறு சுறுப்பாய் ஓடாவிடினும் அவ்வட்டை பற்ருதென்றுணர்க.

### நோயாளியைத் தயாரிக்கும் வகை.

நோயினனுக்கு, முன்னுள் பேதிக்கு அல்லது வியர்வை பெருகுதற்கு அல்லது வாந்திக்குக் கொடுத்து, மறுநாள் அட்டையை விடவேண்டுமென்பர். மற்றும் அட்டை விடும் போது, நோயாளிக்குப் பட்டினியோ தூக்கமின்மையோ கூடாது. அன்றியும், அது விடவேண்டிய இடத்தை உவர் மண்ணும் மணலும் கொண்டு கழுவிச் செம்மண்ணுல் பூச வேண்டுமென்றும் கூறப்பட்டுள்ளது.

இதனை,

> " சத்தியில் மாந்த ருக்குந் தையல்பிள் ளையர்த மக்கும்
> ஒத்துநின் றூட்டு வித்து உறக்கமுந் தவிர்ந்தி டாமல்
> மத்தியா னத்து மேலாய் மண்கொண்டு சுத்தி பண்ணிப்
> பற்றிய நோய்கள் தன்னைப் பார்த்துநீ அட்டை கட்டே."

என்று கூறியிருப்பதாலறிக.

நிற்க, தற்காலம், ஆங்கில வைத்தியர்கள், பெரிய ஆதுரசாலைகளில் அட்டை விடுவதற்குமுன் அட்டையைச் சுத்தி செய்யாமல், கடிக்க விடுமிடத்தை மட்டும் சுத்தி செய்ய டிஞ்சர் அயோடைன், டர்பன்டைன் போன்ற இயற்கைக்கு மாருனதும் அட்டைக்கு ஒவ்வாததுமான மருந்துகளைத் தடவுகின்ருர்கள். இதனுல் அட்டை உடனே பற்ருதென்றும், தூய நீரிட்டு நன்ருய்க் கழுவுதலே போதியதென்றும் உணர்தல் வேண்டும்.

### கடிக்கும்படி செய்யும் வகைகள்.

வாய் குறுகலான நீர் நிறைந்த பாத்திரத்தில் அட்டையை விட்டு, அப்பாத்திரத்தின் வாயைக் கடிக்கவிட வேண்டிய இடத்தில் கவிழ்த்து, நீர் வெளிப்படா வண்ணம் பிடித்தால் பற்றும். பற்ருவிடின் இடத்தை துடைத்து, ஒரு துளி பாலைத் தடவி, நீரில் நனைத்துப் பிழிந்த பஞ்சால் அட்டையை மெல்லெனப் பிடித்துவிடப் பற்றும். இதற்கும் பிடிக்காவிடின், இடத்தைச் சுத்தமான குண்டூசி கொண்டு இரத்தம் சற்றே கசியும் வண்ணம் கீறி, அதன்மீது அட்டையை விட அஃது உடனே பற்றிக் கொள்ளும். அட்டையின் முகம் பெரிதான

முனை குதிரைக் கொளம்பு போன்ற உருவத்துடன் மிக நுண்ணிய வியர்வைத் துளியுடன் தோன்றினால், நன்றாய்க் கௌவிக் கொண்டதென்று உணர்ந்து, அதன்மீது ஈ மொய்த்து இரத்தம் இழுப்பதைத் தடுக்காமலிருக்க ஈரத்துணியிட்டு மறைக்கவும். நிற்க, கையால் அட்டையைத் தொட அஞ்சி, சில வைத்தியர்கள் ஆயுதங்களால் எடுத்து விடுகின்றனர். இதனால், அட்டைக்கு துன்பமும், உடலுறுப்புச் சேதமும் நேரிடும் என்பதனை அறிதல் வேண்டும்.

### கடித்த அட்டை கீழே விழ.

அட்டை அரைமணியிலிருந்து நான்கு மணி நேரத்திற்குள் இரத்தத்தைக் குடித்துத் தானே கீழே விழுந்து விடும். கீழே விழச் செய்ய வேண்டுமாயின் உப்புநீர் அல்லது காடிநீரைக் கடிவாயில் தெளிக்கவும். அட்டை மூக்கின் தொளை, குதம், குய்யம், இவ்விடங்களில் புகுந்துவிடின், அதனை வெளிப்படுத்த மேற்படி சிகிச்சையே பொருந்தும்.

### கடிவாயில் இரத்தத்தை நிறுத்தவும் பெருக்கவும்.

அட்டை விழுந்தபின் கடிவாயினின்றும் இரத்தம் அதிகமாக வெளிப்படின், பொரித்த படிகத்தூள், துருசின்தூள், மஞ்சட் தூள், பஞ்சு சுட்ட கரி, சீலைக்கரி, சிலந்திக்கூடு, மாசிக்காய்த் தூள் இவைகளுள் ஏதாவதொன்றைக் கடிவாயிலிட இரத்தம் நிற்கும். நிற்காவிடின், கடிவாயை விரலால் சிறிது நேரம் அழுத்தினாலும், காடிக்காரமுனையால் தொட்டாலும், துண்டுச் சீலை வைத்து அழுத்தமாகக் கட்டினாலும் நின்றுவிடும். இதற்குப் பயன் இல்லையேல், பழுக்கக் காய்ச்சிய ஊசியால் கடிவாயைச் சுட நிற்கும். நிற்க, ஆங்கில வைத்தியர் டிஞ்சர் பென்சாயின் கோவினைப் பஞ்சு வைத்து ஒட்டுகின்றனர். இதுவும் நன்றாகும். இதற்குப் பதிலாக மெழுகுத் தைலத்தையும் கையாளலாம்.

கடிவாயினின்றும் இரத்தம் வெளிப்படும்படி செய்ய, வெந்நீர், தவிடு, நொச்சியிலை, வேப்பிலை இவைகளுள் ஒன்றைக் கொண்டு ஒற்றிடமிடவும்.

அட்டை விடுதல் நன்கு நிறைவேறிற்றென்பதற்கறிகுறி, கெட்ட இரத்தம் நீங்கியவுடன், நோயினால் உண்டான சோகமும் வேதனையும் நீங்கும்.

இதனை,

" துட்டரத்தம் போனக்கால் சோக முடன்கூடிய
திட்டமுடன் வேதனையும் தீருமே—வட்டதன
மானே, உருவினுக்கு மற்றொன்றும் வாராது
தானே தனக்குநிகர் தான்."

என்று புகன்றிருப்பதினால் உணர்க.

**இரத்தத்தை அதிகமாக அட்டை உறிஞ்சுவதனாலுண்டாகும் கெடுதிகள்.**

அட்டை மிஞ்சினாலும், இரத்தம் அதிகமாய் வெளிப்பட்டாலும் கடிவாயில் தினவு உண்டாய்க் கடுத்து வீங்குமென்றறிக. இதனைக் கீழ்ச் செய்யுள் வலியுறுத்தும்.

"அஞ்சுவிரல் நீளத்தில் அட்டை விடலாகும்
மிஞ்சவே அட்டைவிட வேண்டாம்—மிஞ்சின்
கடிவாய் தினவாய் கடுத்துவலி வீங்குந்
துடியாரு நல்லிடையாய் சொல்"

**அட்டைக் கடியினால் உண்டான புண்ணுக்குச் சிகிச்சை.**

காடி, காரெள், கற்றாழை இம்மூன்றையும் அரைத்து மேல் பூசிவந்தாலும், கற்றாழைமடலைச் சுட்டு இரண்டாய்ப் பிளந்து மஞ்சள் தூளைத் தூவிப் புண்ணின் மீது வைத்துக் கட்டினாலும் நீங்கும்.

**ஒரு முறை உபயோகித்த அட்டையை மறுமுறை பாவிக்க.**

கடித்து விழுந்த அட்டையைத் தவிட்டில் விட்டுப் புரட்டியோ புரட்டாமலோ, அதன் வாயில் எள்ளின் பொடி அல்லது மஞ்சள் பொடியைத் தூவின் இரத்தத்தைக் கக்கும். அது சரியாக வெளிப்படாவிடின், இரு விரல்களாலும் மெதுவாய்ப் பின்னிருந்து முன் அட்டையைப் பிடித்துவிட, இரத்தம் நன்றாய் வெளிப்படும். பிறகு, புற்றுமண் கரைத்த தெளி நீரில் விட்டு வைத்திருந்து, அதன்பின் முற்கூறிய நீரில் பத்திரப்படுத்த வேண்டுமென்பர். இதனை,

"கடித்துவீ ழட்டையை கொண்டுதவிட் டில்விட்டே
பிடித்ததின்வாய் எள்ளதனைப் பெய்து—பிடித்துவிட
விட்டரத்தம் போனால் துலைநீரில் நீந்தவிட்டுக்
கட்டுவது மண்குடுவைக் கண்."

என்று புகன்றிருப்பதால் உணர்க.

நிற்க, பாவித்த அட்டைகளையும், பாவியாத அட்டைகளையும் வெவ்வேறாக வைத்தல் வேண்டும். ஒருமுறை உபயோகித்த அட்டையை ஏழு நாட்கள் சென்ற பின்பே மறுமுறை பாவிக்கலாம். இவ்வாறு அட்டைக்கு ஓய்வளிக்காமல் திரும்பத் திரும்பவிடின், அது நச்சுத்தன்மையை அடையும். அதனால், கடிவாயில் வீக்கம், வேதனை, சுரம், தினவு, புண் கலக்கம் முதலியன உண்டாம் என்று உணர்க, இதனை,

" விட்டவுரு வேறே விடாதவுரு தான் வேறே
கட்டும் குடுவைதனில்."

என்றும்.

"பட்ட உருவைப் பலகாலும்—விட்டுவிடு
மத்தா லுருவடைய மான விஷமாகும்."

என்றும்,

"விட்டவுருத் தானும் விஷவுருவே யானக்கால்
வெட்டுருவாய் வீங்குமது வேதனையாந்—திட்டஞ்
சுரமாங் கலக்கமாஞ் சூழ்தினவுங் காணும்
உரமாகும் புண்ணு முதிர்ந்து."

என்றும் அகத்தியர் நயனவிதியில் புகன்றுள்ளமையைக் கண்டு கொள்க.

## ஆமை.

## CHELONIA TURTLE, TORTOISE.

இது கூர்மம், கூனன், கச்சபம், கமடம், கமடாதரி என்ற வேறு பெயர்களினாலும் வழங்கப்படுகின்றது. ஆமை இரு வகைப்படும். அவை நீர் ஆமை, நில ஆமை என்பன. இவற்றில் முன் கூறப்பட்டதே மருந்திற்கு உபயோகப்படுகின்றது. இஃது அதிகமாக தென் இந்தியாவின் கடற்கரைகளிலும், மன்னார் குடாவிலும் கிடைக்கின்றது. நில ஆமை, கருமை நிறத்தை உடையது.

நிற்க, கடலாமை, திருஷ்டியினால் குஞ்சி பொரிக்கும் (திரீட்சணம்) ஜீவப் பொருள்களில் ஒன்றாகக் கருதப்படுகின்றது. இதனை,

"கடலிலே திரியு மாமை கரையேறி முட்டை யிட்டுக்
கடலிலே திரிந்த போது குஞ்சான வாறு போல."

என்ற சிவவாக்கியார் பாடலால் உணரலாம். இதன் ஓடு, கறி, கொழுப்பு, தோல், முட்டை முதலியன மருத்துவத் திற்குப் பயன்படுகின்றன.

### ஓடு.

இது, சிறப்பாகக் குழந்தைகள் நோய்க்குப் போடும் குடி நீராகவும் சுருக்காகவும் பற்பமாகவும் மாத்திரையாகவும் கையாளப்படுகின்றது.

### ஆமையோட்டுக் கருக்கு குடிநீர்

''கூனன் முதுகு வசம்புள்ளிக் கூறும் ஓம நுணாவேலி
மானே பொடுதலை வாரடையும் வளரும் வெற்றிலையின்
காம்பும்
கானே கிராம்பு கருக்கியிட்டுக் காய்ச்சிச் சவலைப்
பிள்ளைக்குக்
தானே கொடுக்கப் போர்மாந்தம் தங்கா தோடிப் போய்
விடுமே.''

(பொ-ள்) ஆமை ஓட்டைச் சுட்டதூள், சுட்ட வசம்பு, வெள்ளுள்ளி, ஓமம், நுணா இலை, வேலிப்பருத்தி, பொடுதலையிலை, வெற்றிலைக் காம்பு, கிராம்பு இவைகள் வகைக்கு வராகனெடை ஒன்று (4.2 கிராம்) எடுத்துச் சட்டியிளிட்டுக் கருக்கி, விதிப்படி குடிநீர் செய்து, காலை மாலை இரு வேளையும் மூன்று அல்லது ஐந்து நாள் கொடுக்கப் போர்மாந்தம் முதலிய பார்த்த நோய்கள் தீங்கும்.

### ஆமையோட்டுக் கருக்கு.

ஆமை ஓடு, மிளகு, உத்தாமணிச் சாறு, அரிசி இவைகளை உலர்த்திக் கருக்கி, புட்டியிலடைக்கவும்.

அளவு : 4 குன்றி (520 மி. கிரா.) வரை கொடுக்கலாம்.

துணை மருந்துகளும் தீரும் நோய்களும்: தேனிலாவது, தாய்ப்பாலிலாவது கொடுக்க மாந்தம், கணம், கணமாந்தம் அஜீரணபேதி, மந்த வாந்தி, முதலியன நீங்கும், இக் கருக்கை, பால் குடிக்கும் குழந்தைக்கும், பாலும் சோறும் அருந்தும் குழந்தைக்கும், சோறு மாத்திரம் தின்னும் பாலர்க்கும் கொடுக்கலாம்.

### ஓட்டுச் சுத்தி.

பூநீறு, கற்சுண்ணம்பு சமனெடை சேர்த்து அதற்கு எண் மடங்கு நீர் விட்டுக் கலக்கி தெளிவெடுத்து, அதில் ஆமை ஓட்டைச் சிறு சிறு துண்டுகளாய் நறுக்கி இட்டு, எண்ணெய்க் கசிவு நீங்கும் வரை எரித்தெடுத்து, சுத்த நீரில் கழுவி எடுக்கச் சுத்தியாம்.

### பற்பம்.

பூநாகத்தைக் கொம்புக் கள்ளிப்பால் விட்டரைத்து, ஆமை ஓட்டிற்குக் கவசம் செய்து உலர்த்தி, சில்லிட்டுச் சீலை செய்து கனபுட மிட்டெடுக்கச் பற்பமாம். இப்பற்பத்தை அப்படியே உபயோகிக்கலாம். அன்றியும், ஆடாதோடைச் சாறு விட்டரைத்து, மறுபடியும் புடமிட்டும் உபயோகிக்கலாம்.

அளவு : ½ குன்றி (65 மி. கிரா.) முதல் 1 குன்றி (130 மி. கிரா) வரை.

துணை மருந்து : தாய்ப்பால், பசுவின்பால் முதலியன.

தீரும் நோய் : குழந்தைகட்குண்டாம் மாந்தம், கணை, மாந்த பேதி முதலியன.

வேறு.

சுத்தி செய்த ஆமை ஓட்டை, ஆடாதோடை விழுதில் புதைத்துச் சீலை செய்துலர்த்தி, கஜபுடமிட்டெடுத்து, பிறகு கற்றாழைச் சாறு, துத்தியிலைச் சாறு, இவற்றால் தனித் தனியாக அரைத்து, வில்லை செய்து உலர்த்தி, சில்லிட்டுச் சீலைசெய்து புடமிட்டெடுக்கப் பற்பமாம். இதனை மேற்கூறியவாறே உபயோகிப்பதுடன் மூலத்திற்கும் கையாளுவதுண்டு.

மாத்திரை.

ஆமை ஓட்டின் மீது சுண்ணாம்பு தடவி, துணியில் சுற்றி ஒரு புடமிட்டெடுக்கச் வெளுக்கும். இதற்கு கற்சுண்ணாம்புத் தெளிவு நீர் விட்டரைத்து, வில்லை செய்து உலர்த்தி புடமிடப் பற்பமாம். இப்பற்பத்துடன் ¼ பங்கு கற்பூரம் சேர்த்து முன்போல அரைத்து உளுந்தளவு மாத்திரை செய்யவும்.

துணை மருந்துகள் : முலைப்பால், பால், வெந்நீர், மாந்தக்குடி நீர், முதலியன.

தீரும் நோய்கள் : உப்புமாந்தம், கணமாந்த சுரம், பசியின்மை அஜீரணபேதி முதலியன.

கறிக்குணம்.

''ஆமைக் கறியருசி யைம்பித் துண்டுமூலஞ்
சேமக் கனல்சூதி காமேக—நாமரத்தப்
பேதி கிராணிமலப் பேதியகற் றும்பசியுந்
தாதுமே ருங்கொடுக்குந் தான்.''

(பொ-ள்) ஆமைக்கறி அரோசகம், கபம், பித்தம், உள்மூலம், உட்சூடு, கருப்பமேகம், இரத்தாதிசாரம், சீதக்கிரகணி, மலபேதி இவைகளை நீக்கும். பசி, வீரியம், அழகு இவற்றை தரும்.

கறியைப் பாகப்படி சமைத்துண்ண மேலே கூறப்பட்ட பிணிகள் நீங்கும். மற்றும் கறியுடன், சீந்தில் உப்பு கூட்டிச் சமைத்து அருந்த உடலில் உண்டாகின்ற காயங்கள் நீங்கும்.

இதனை,

''காயத்தி லேபிறந்த காயத்தைப் போக்கிமிக
மாயத்தைப் போலே மயக்குதலா—லோயா
அமுதவல்லி யுப்புடனே யாக்கியமை யான
கமடமெனு மாமையதி கம்.''

என்ற தேரன் பொருட்பண்பு நூலில் கூறப்பட்ட வெண்பாவால் உணர்க.

கொழுப்பு.

இதனை உருக்கி நெய்யாக்கி, ஒன்று (4 மி. லிட்.) முதல் இரண்டு தேக்கரண்டி (8 மி. லிட்.) வரை அருந்திவரக் கண்டமாலை, பாண்டு நுரையீரலைப்பற்றிய பிணிகள் நீங்கும்.

இதற்கு உடல்தேற்றி, காமம் பெருக்கி, தாதுவெப்பகற்றி, முதலிய செய்கைகள் உள. மற்றும், இதனால் இரத்தமூலம் நீங்கும் என்பதை, ''ஊனாமை நெய் மூலமோட்டும்'' என்ற அடியால் தெளிக.

தோல்.

பெண்ணாமைத் தோலினால் பெருஞ்சிரங்கு, குழி விரணங்கள் நீங்கும் என்று கூறப்பட்டுள்ளது. இதனை,

''ஆனைச் சிரங்குமுத லான ரணநோயை
யூனிற் படாம லொதுக்குமே—மானப்
பிளிறின் குரல்காட்டும் பெண்ணாமை யான
துனியின் புறவோட்டுத் தோல்.''

என்ற வெண்பாவால் உணரலாம்.

வழக்கின்மையின் இதனை உபயோகிக்கும் வகை தெரியவில்லை.

உலர்ந்த தோலைப் பொடித்து நெருப்பிலிட்டுப் புகைபிடிக்க, மூலம் நீங்குமென்பர்.

முட்டை.

முட்டையைப் பொரித்து குழந்தைகளுக்குக் காணும் கக்குவான், வலி முதலிய நோய்களுக்குக் கொத்தல் பழக்கம்.

பித்த நீர்.

இதனை நசியமிட, வலிநீங்குமென்றும், கடிவாயிற் பூச, விடமிறங்குமென்றும், மேலே பூச,தொண்டை வலி நீங்குமென்றும் கூறப்பட்டுள்ளன.

இரத்தம்.

ஆமையின் குருதியை அருந்துவதனால் புப்புச சம்மந்தப் பட்ட பிணிகள் நீங்கும். இது தூத்துகுடியில் வழக்கிலிருப்பதை காணலாம்.

## ஆமை லேகியம்

வெந்நீரில் அவித்தெடுத்த காராமை மாமிசம், வெங்காயம் பலம் 5 (175 கிராம்) உரித்த பூண்டு கிராம்பு, பட்டை, சோம்பு, மல்லி, சாதிக்காய், சாதிப்பத்திரி, கறிமஞ்சள் ஆகிய எட்டுச் சரக்குகளும் வகைக்கு $\frac{1}{4}$ பலம் (8.75 கிராம்) எடுத்து நெய் கொள்ளுமட்டும் சேர்த்து, முறைப்படி இலேகியம் கிளறிக் கொள்ள வேண்டும்.

அளவு : கொட்டைப்பாக்களவு, காலை மாலை கொள்ள வேண்டும்.

இந்த இலேகியத்தில் மிருதார்சிங்கிச் செந்தூரம் அல்லது நாகபற்பம் வைத்துச் சாப்பிடவும்.

தீரும் நோய் : மூலம். தாதுவும் விர்த்தியாம்.

பத்தியம் : இச்சாபத்தியம். இச்சாபத்தியம் என்பது பெண் போகம் நீக்கல்.

## ஆள் காட்டிப் பட்சி.

"ஆட்காட்டிப் பட்சி கடல்மேகம் போயளிக்குந்
தோட்காட்டு வாதந் தொடராவே—வாட்கண்
அரிவையே பத்தியத்திற் காகும் புவியில்
தெரியமறைப்பில்லாமற் செப்பு."

(பொ-ரை) ஆட்காட்டிப் பட்சிக்கறியினால் மேகம், தோளைப் பற்றிய வாதம் நீங்கும். இது பத்தியத்திற்காகும்.

## அம்மைகளுக்கு ஆள்காட்டிக் குருவி முட்டை அவிழ்தம்

"கேளடா ஆள்காட்டிக் குருவி முட்டைக்
கிருபையுடன் பார்த்தெடுத்துக் கொண்டு வந்து
ஆளடா சட்டியிலே வுடைத்துஊற்றி
யழகான புழுங்கலரிசி சம்பா வப்பா
வாளடா முட்டைக்கரு நனையுமட்டு
வளமான அரிசியதை மிதமாய் போட்டு
"ஏளடா வடுப்பேற்றிப் பதமே பார்த்துத்
தவறாமல் கருகாமல் பொரிமது வாங்கே

வாங்கியே செப்பதனி லடைத்துக் கொண்டு
வரிசையாய்க் காய்ச்சல்வந் ததுமே நீதான்
தாங்கியே இடக்கையி லரிசி கொட்டி
தயவாக வலக்கையால் பிடியே யள்ளி
ஏங்கியே திரியாம லுள்ளே கொள்ளே
இதமாக வரிசிதொகை யான மட்டும்
பாங்கியே வைசூரி அதிகம் வாராப்
பரிவான தேகத்துக் கழிவே யில்லை.''

(பொ-ரை) ஆள்காட்டிக் குருவி முட்டையை உடைத்து சட்டியில் ஊற்றி, கரு நீனயும் மட்டும் சம்பாப்புழுங்கலரிசியை மிதமாய்ப் போட்டு, அடுப்பேற்றிப் பதத்தில் கருகாமல் பொரித்தெடுத்து, செப்பில் அடைத்து வைத்துக்கொள்ளவும். காய்ச்சல் கண்டவுடன், இடக்கையில் அரிசியை கொட்டி, வலக்கையால் ஒரு பிடி அள்ளி உட்கொள்ள, வைசூரி அதிகம் வராது. வைசூரித் தற்காப்பிற்கும் இதனை வழங்கலாம்.

## இந்திர கோப்ப பூச்சி.

## MUTILLA OCCIDENTALIS

இப்பூச்சி, தம்பலப்பூச்சி, ஈயல், சந்திரபீசம், தனுபீசம், இந்திரபீசம் இடிபீசம், இரம்பை, அமிர்தசுரோணிதம், சஞ்சீவி நாகபேதி, மேகத்தின் விந்து, மன்னன்நாதம், இடியின் துளி, அயிராணி ருது, மழைத்துளி, மின்னல்நாதம், கோபம் என்னும் வேறு பெயர்களினலும் வழங்கப்படுகின்றது.

இப்பூச்சிகள், மழைக்கால ஆரம்பத்தில் நல்ல மழையுடன் அதிக இடியும் மின்னலும் இருக்கும்பொழுது, நல்லசெம்மை நிறத்துடனும் வழ வழப்புடனும் புல் தரைகளிலும், தோட்டங்களிலும். செம்மண் நிலங்களிலும் காணப்படுகின்றன. இவைகளைச் சேகரித்துக் காயவைத்துக் கடைகளில் விற்கின்றனர். கடைகளில் கிடைப்பவை குங்குமப்பூ நிறத்துடனும், அரை அங்குல நீளத்துடனும். நீண்ட அரை வட்டவடிவமாகவும் இருக்கும். இப்பூச்சி வியர்வையில் (ஸ்வேதஜ) பிறப்பதாகும். ஆகையால், இதனை நாமும் உண்டாக்கலாம். எங்ஙனமெனில் காய்ந்த பூச்சிகளின் துகளைச் செம்மண் நிலத்தில் தூவி, வரகு வைக்கோலிட்டு மூடி, நீர் தெளித்துவர, அதனின்றெழும்பும் ஆவியாலுண்டாம் வேர்வையினல் இப்பூச்சி உற்பத்தியாகும். இதில் வெளுப்பு, கறுப்பு, செம்மை ஆகிய மூவகை உண்டு. இவற்றுள் முன்னிரண்டும் கிடைத்தற்கரியன.

இதன் சுவை தெரியவில்லை. இது வெப்ப வீரியத்தையும், வறட்சியையும் உடையது. ஆதலின், இதனைச் சூட்டுடம்பினருக்குக் கொடுத்தால் கெடுதியை விளைவிக்கும். இத் தீங்கைத்

தேனுலும் எண்ணெயாலும் விலக்கலாம். இப்பூச்சியின் வீரியம் விபாகம், செய்கை முதலியன வாலுழு வைக்கும் இருக்கிறது ஆகையால், யூனனி வைத்தியர்கள், இப்பூச்சியை உபயோகிக்கு மிடத்தில் இது கிடைக்காவிடின், வாலுழுவையை உபயோகிக் கின்றனர். இசிவகற்றும் செய்கையும், நரம்பிற்கு முறுக்கேற்றும் செய்கையும், மாமிசத்திற்கு வலிவைக் கொடுக்கும் செய்கையும், தாதுவை விர்த்திசெய்யும் செய்கையும் இதற்கு உண்டென்று கூறுவர்.

இதன் குணத்தைக் கீழ்காணும் செய்யுளால் அறியலாம்.

''கருமேகந் தாதுநட்டங் கக்கும் கபமபோக்குந்
தருமேநற் காயச்சித்தி தன்னே—வருமேக
சாலமுறை வாரளக தையலே நன்மாரிக்
காலமுறை யியுலது காண்.''

(ப.கு.)

(பொ-ள்) மழைக்காலத்தில் தோன்கின்ற ஈயல் என்று கூறப் படுகின்ற இந்திரகோபப் பூச்சி, கருமேகத்தையும் சுக்கில நட் டத்தையும், கபரோகத்தையும் நீக்கும். காயச்சித்தியை உண் டாக்கும். நரைதிரைகளே மாற்றும்.

இப்பூச்சியில் செம்பின் சத்து இருக்கின்றதென்பதனேயும், அச் த்தெடுக்கும் விபரத்தினேயும் உரோமரிஷி வைத்தியம் ஐந்நூற்றி லும், இச்சத்தினின்று செய்யும் செந்தூரத்தின் முறையைச் சட்டை மூனி நிகண்டிலும் காணலாம்.

இதன் உபயோகமாவன : இப்பூச்சியின் சாம்பலேச் சிட்டிகை அளவு நீரில் கலந்து, காலே மாலேகளில் கக்குவான் நோயின் தற் காப்பிற்கும், நீக்கத்திற்கும் கொடுத்தல் மரபு.

இது நரம்பிற்கும் மாமிசத்திற்கும் வலிவைக் கொடுப்பதினுல், இதன் சாம்பலேத் தேனில் கலந்து முகவாதத்திற்கும் பாரிசவாதத் திற்கும் கொடுக்கலாம். இதனே எண்ணெயிலிட்டுக் காய்ச்சி உபயோகிப்பது முண்டு.

இதனேச் சூலேநோய்க்குச் சாதிக்காயுடன் கலந்து பயன்படுத் தலாம்.

இதனேத் தேன்மெழுகுடன் கலந்தரைத்துக் களிம்பாக்கிக் கீல் களின் வீக்கத்திற்கு உபயோகிக்கலாம்.

இதன் தூளேத் தாய்ப்பாலில் கலந்து ஆண்குறியில் தடவிவர ஆண் தன்மை உண்டாம்.

இதன் சாம்பலே வெல்லத்தில் வைத்துப் புசிக்க தாதுவை (விந்துவை) விர்த்தி செய்யும்.

# இறகுகள்.

# FEATHERS

பெருங்கூளி, சிறுகூளி, காட்டுக்கூளி, நாட்டுக்கூளி, பெரும் பருந்து, சிறுபருந்து, காட்டுப்பருந்து, நாட்டுப்பருந்து, பெருங்கிளி சிறுகிளி, காட்டுக்கிளி, நாட்டுக்கிளி, பெருமயில், சிறுமயில், காட்டு மயில், நாட்டுமயில், பெருங்காக்கை, சிறுகாக்கை, காட்டுக்காக் கை, நாட்டுக்காக்கை, பெருங்கோழி, சிறுகோழி, காட்டுக்கோழி, நாட்டுக்கோழி, பெரும்புறு, சிறுபுறு, காட்டுப்புறு, நாட்டுப்புறு, பெருங்காடை, சிறுகாடை, காட்டுக்காடை, நாட்டுக்காடை, பெருங்கோட்டான், சிறு கோட்டான், காட்டுக்கோட்டான், நாட்டுக் கோட்டான், பெருங்கவுதாரி, சிறுகவுதாரி, காட்டுக்கவு தாரி, நாட்டுக் கவுதாரி என்னும் இந்நாற்பது பட்சிகளின் இறகு களையும் கீழ்க்காணுமாறு சுத்தி செய்து பற்பம் பண்ணிப் பின் காணும் விதமாக உபயோகிக்க வேண்டும்.

### சுத்தி.

இறகுகளைச் சிறு துண்டுகளாகக் கத்தரித்து, ஓட்டிலெரித்து அல்லது புடம் போட்டுக் கருக்கிக் கொள்வதே சுத்தியாம்.

### பற்பம்.

ஒரு பலம் (35 கிராம்) சுத்திசெய்த இறகின் பொடிக்கு, நாலு பலம் (140 கிராம்) கையாந்தகரைச் சாறு விட்டு மத்தித்து வில்லை தட்டி, வெய்யிலில் உலர்த்திச் சில்லிட்டு ஒன்பது வரட்டிக் கொண்டு புடத்தைப்போட்டு ஆறவிட்டெடுக்கப் பற்பமாம்.

**அளவு :** முழுக்கடலைக் கூறு உத்தமம். முக்காற்கடலை மத்திமம். அரைக்கடலை அதமம். காற்கடலை அதமாதமமாம்.

**துணை மருந்து :** வெண்ணெய்.

**இறகின் பற்பவகைகளும் அவற்றால் தீரும் நோய்களும்.**

''கழுகிறகை வன்னிமயில் காரிதின்று சூரங்
கழுகிறகை வன்னிமழை காற்றி—கழுகிறகை
யச்சை நடுக்கை யலிபிரமை வேர்வையடை
யச்சை நடுக்கைவெண்ணெ யாம்.''

(ப-ரை) கழுகு இறகு—பெருங்கூளி இறகு (சிறு கூளி இறகு, காட்டுக் கூளி இறகு, நாட்டுக்கூளி இறகு) ஐ—பெரும்பருந்திறகு (சிறு பருந்திறகு, காட்டுப்பருந்திறகு, நாட்டுப்பருந்திறகு), வன்னி —பெருங்கிளியிறகு (சிறு கிளியிறகு, காட்டுக்கிளியிறகு நாட்டுக்கிளி இறகு) மயில் — பெருமயிலிறகு. (சிறு மயிலிறகு, காட்டுமயிலிறகு, நாட்டுமயிலிறகு), காரி—பெருங்

காக்கை இறகு (சிறு காக்கை இறகு, காட்டுக்காக்கை இறகு, நாட்டுக் காக்கை இறகு) ஆகிய இருபது வகைகளையும் முறையே பற்பமாக்கி, சூரம் தின்று—கடலையின் அளவு தின்றுவரின், கழு கிற கை—கடலையைத் தின்று கை கழுவினுல் எப்படி அக்கையில் சிறிதும் ஒட்டாமல் தூய்மையாய்விடுமோ, அதைப்போன்றே, மேற்குறித்த பற்பங்களைப் பிணியாளர் உண்ணில் நோய்களுள் ஒன்றும் ஒட்டாமல் நீங்கும். அங்ஙனம் நீங்கும் நோய்கள், வன்னி—பித்தமிகு பிணி, பித்தகுறைப்பிணி மழை—சேத்துமமிகு பிணி, சேத்துமக்குறைப்பிணி, காற்றி—வாதமிகுப்பிணி, வாதக் குறைப் பிணி, கழு—காசம், கிற—குட்டம், கை—பெருவியாதி அச்சை—பீதி நோய், நடுக்கை—நடுக்கல், அலி—நபுஞ்சகம், பிரமை—பிரமிப்பு, வேர்—வேர்வை, வை—அகாத நோய், அடை—அடைப்பு நோய், அச்சை—பைத்தியம், நடுக்கை—குன்மம், வெண்நெய்—பாண்டுநோய், ஆம்—சன்னி ஆகிய இவைகள் குண மாகும்.

பித்தம் அதிகரித்துண்டான பிணிகளுக்குப் பெருங்கூளிஇறகு பற்பத்தையும், பித்தம் குறைந்துண்டான பிணிகளுக்குச் சிறு கூளி இறகு பற்பத்தையும், சேத்துமமதிகரித்துண்டான பிணி களுக்குக் காட்டுக்கூளி இறகு பற்பத்தையும், சேத் துமங்குறைந்துண்டான பிணிகளுக்கு நாட்டுக்கூளியிறகு பற்பத் தையும், வாதமிகுதிப் பிணிக்குப் பெரும் பருந்திறகு பற்பத்தை யும் வாதங்குறை பிணிக்குச் சிறுபருந்திறகு பற்பத்தையும், காசத் திற்குக் காட்டுபருந்திறகு பற்பத்தையும், குட்டத்திற்கு நாட்டுப் பருந்திறகு பற்பத்தையும், பெருவியாதிக்குப் பெருங்கிளியிறகு பற்பத்தையும், பீதி நோய்க்குச் சிறுகிளியிறகு பற்பத்தையும், நடுக்கல் நோய்க்குக் காட்டுக் கிளியிறகு பற்பத்தையும், நபுஞ்சக நோய்க்கு நாட்டுக்கிளியிறகு பற்பத்தையும், பிரமிப்பு நோய்க் குப் பெருமயிலிறகு பற்பத்தையும், வேர்வை நோய்க்குச் சிறு மயிலிறகு பற்பத்தையும், அகாத நோய்க்குக் காட்டுமயிலிறகு பற்பத்தையும், அடைப்பு நோய்க்கு நாட்டுமயிலிறகு ப்ற்பத்தை யும், பைத்திய நோய்க்குப் பெருங்காக்கை இறகு பற்பத்தையும் குன்மத்திற்குச் சிறு காக்கை இறகு பற்பத்தையும், பாண்டுவிற்கு காட்டுக்காக்கை இறகு பற்பத்தையும், சன்னிக்கு நாட்டுக் காக்கை இறகு பற்பத்தையும், நீரிழிவிற்குப் பெருங்கோழி இறகு பற்பத் தையும், நீர்கட்டிக்குச் சிறு கோழி இறகு பற்பத்தையும், நீர் ஏற்றத்துக்குக் காட்டுக்கோழி இறகு பற்பத்தையும், நீர்க் கோவைக்கு நாட்டுக்கோழி இறகு பற்பத்தையும், மல பந்தத் திற்குப் பெரும்புறா இறகு பற்பத்தையும், மலக்கழிச்சலுக்கு சிறு புறா இறகு பற்பத்தையும், இரத்த மூலத்திற்குக் காட்டுப்புறாயிறகு பற்பத்தையும், சீழ்மூலத்திற்கு நாட்டுப்புறா இறகு பற்பத்தையும், உப்புசத்திற்குப் பெருங்காடை இறகு பற்பத்தையும் மார் எரிவுக் குச் சிறு காடையிறகு பற்பத்தையும், பெருவயிற்றுக்குக் காட்டுக் காடை இறகு பற்பத்தையும், வாதிப்பு ரோகத்திற்கு நாட்டுக் காடை இறகு பற்பத்தையும் பித்த சுரத்திற்குப் பெருங்கோட் டான் இறகு பற்பத்தையும், வாத சுரத்திற்குச் சிறு கோட்டான் இறகு பற்பத்தையும், கபசுரத்திற்குக் காட்டுகோட்டானிறகு பற்பத்தையும், அதிசாரத்திற்கு நாட்டுக்கோட்டானிறகு பற்பத்

தையும் இரத்தக் கழிச்சலுக்குப் பெருங்கவுதாரி இறகு பற்பத்தையும், சீதக் கழிச்சலுக்குச் சிறு கவுதாரி இறகு பற்பத்தையும், இரத்த பீனசத்திற்கு காட்டுக் கவுதாரி இறகு பற்பத்தையும், சல பீனசத்திற்கு நாட்டுக்கவுதாரி இறகு பற்பத்தையும் முன் அளவுப்படி வெண்ணெயில் அனுபானித்துக் கொள்ள, முறையே முன் கண்ட பிணிகள் தீரும் என்ப.

இதனை,

''பெருங்கூளி யிறகுமுதல் கவுதா ரிப்பேர்
பிறழ்ச்சிகடை யாகவரு மடலை வெண்ணெய்
வரும்கலவை யனுபானத் துடனே கொண்டு
வாதைதரு பித்தமுதல் பீன சங்கள்
பெரும்பிணிகள் கலவிப்பான் வேண்டி ஞோர்கள்
பூதலத்தி லறிவான புருட ரப்பா
வருமபான்மை யறிந்துபுரி முறைதப் பாதே
மகத்தான தத்துவமே வரிசை யாமே.''

என்ற கொங்கணர் மூவாயிரத்திரட்டுச் செய்யுளாலும்,

''பேரான கூளியும் பின்கவு தாரியுஞ்
சோராது வருசிறைச் சுன்னமு முன்னமே
நவநீத மாமொரு நல்லனு பானமு
மும்மான மாகவே யுண்ணிச் செய்திடின்
பேர்பெறு மந்திரி பிரதானி யேந்தலென்
ரூர்வமா விளைக்கண மனைத்தையுங் கொன்று
மேலுண்டா வாகாயத் தையோங்
கலிதெனச்செயு மண்டல மறியவே மண்டல மறியவே
உத்தம மத்திம முறைபெறு மதம
மீதெத்திற மாயினு மெண்ணெறி பிறழா
தாதலிற் செய்பவை யனைத்தினை யாயுள்
வேதியர் புரிபவை வீதமா முறையே
யுலகவர் நெறிமையை யுண்டுகொ லெனவே
நிலவுவ மானத் தினிலவர் மேதைய
ராதலி னிம்முறை யையமில் லாமற்
பாதவ மாமெனப் பற்றுத லவரே.''

என்ற செய்யுளாலும்,

''கூளிச் சிறைமுதற் கூறிய பற்பத்தை
நீளிப்புவி நவநீ தானு பானத்துண்
வாளிக் கிணையாகி மந்திரி யாதியை
யாளிக் கிணையா யனுக்கு மறுக்குமே.''

என்ற திருமூலர் திருமந்திரச் செய்யுளாலும் உணர்க.

### இறகு பற்பப் புறநடை சர்வ விடாரிக்குளிகை.

சிறுதேக்கு 1 பலம் (35 கிராம்), மிளகு ¼ பலம் (8.75 கிராம்), கற்கண்டு ¼ பலம் (8.75 கிராம்), பறங்கிச்சக்கை ¼ பலம் (8.75 கிராம்), சித்திரமூல வேர்ப்பட்டை ¼ பலம் (8.75 கிராம்), ஆமை யோட்டுப் பற்பம் ¼ பலம் (8.75 கிராம்), ஆகக்கூடிய 2¼ பலத்துடன் (78.75 கிராம்), இறகின் பற்பம் 2¼ பலம் (78.75 கிராம்) சேர்த்து மொத்தமான 4½ பலத்தையும் (137.5 கிராம்) தேன் ஒரு நாளைக்கு 9 பலம் (315 கிராம்), வீதம் விட்டு, மூன்று நாட்கள் அரைத்தும், அதன்பின் 9 பலம் (315 கிராம்) தென்னங் கள் ஒரு நாளைக்கும், 9 பலம் (315 கிராம்) பனங்கள் ஒரு நாளைக்குமாக விட்டுத் தனித்தனி இரண்டு நாட்களரைத்தும், மறுபடியும் ஈச்சங்கள் 9 பலமும் (315 கிராம்) சரக்குச் சாராயம் 9 பலமும் (315 கிராம்) பட்டைச்சாராயம் 9 பலமும் (315 கிராம்) பழச்சாராயம் 9 பலமும் (315 கிராம்) தனித்தனியே ஒவ்வொரு நாளைக்கும் விட்டரைத்துக் குளிகை செய்து பத்திரமாய்ப்பரணியில் அடைத்து வைத்துக் கொள்ளவும்.

இதற்குப் பட்சிராசக் குளிகை என்றும் காருடக் குளிகை என்றும் பெயர் உண்டு.

நாகம், நீர்நாகம், கருநாகம், செந்நாகம் இவற்றால் ஏற்படும் நஞ்சிற்கு, மேற்கூறிய சர்வவிடதாரிக் குளிகையை முறையே துளசிச் சாற்றிலும், பேய்த்தும்பைச் சாற்றிலும், பிரமியிலைச் சாற்றிலும் கள்ளியிலைச்சாற்றிலும் குழைத்து நாவில் தடவியும், கலிக்கஞ் செய்தும், உச்சியில் சிறிது கீறித் தேய்த்தும் முறையே சிறுபயிற்றின் கஞ்சி, கொள்ளுக் கஞ்சி, தினையரிசிக் கஞ்சி, சாமையரிசிக் கஞ்சி இவற்றைக் கொடுக்க அவற்றின் நஞ்சு நீங்கும்.

இன்னும், விரியன், பனையன், சுருட்டை, இரத்தக்கத்தரி, விரியன் கத்தரி, புலிக்கத்தரி, இவற்றால் உண்டாகும் நஞ்சிற்கும், தேள், நண்டுத் தெருக்கால், செய்யான் இவற்றால் ஏற்படும் நஞ்சிற்கும் முற்கூறிய குளிகையை முறையே வெள்ளெருக்குச் சமூலச் சாற்றிலும் வெற்றிலைச்சாற்றிலும் குழைத்து முன்போலவே மூன்றிடங்களிலும் பயன்படுத்தி, முறையே கம்பரிசிக் கஞ்சி, கேழ்வரகுக் கஞ்சி கொடுக்க நீங்கும்.

## உடும்பு.

## VARANUS SPS MONITOR

இதற்குத் துவர்ப்பி, உடல் உரமாக்கி, காமம் பெருக்கிச் செய்கைகள் உள. இதன் பொதுக்குணத்தைக் கீழ்க்காணும் செய்யுட்களால் உணரலாம்.

"இட்டும் உடும்பிறைச்சி கேள்விநோய் மூலமுளை
வெட்டிடசிர நோய்சோபை மேகம்புண்—குஷ்டுகபஞ்
சீதமிரத் தக்கடுப்பு திராக் குடல் வாதம்
பேதியிவை போக்குமெனப் பேசு".

"சொல்வாத பித்தமொடு தோல்வறட்சி யும்போம்
பலமிலாத் துர்ப்பலர்க்கும் பாரில்—பலம் வந்
திடுந்துவர்ப்பி னிப்பும் இயற்கையிலே உள்ள
உடும்பின் இறைச்சிதனை உண்."

(பொ—ரை) துவர்ப்பு இனிப்புச் சுவைகளையுடைய உடும்பிறைச்சியால், காதுநோய், மூலம், வெட்டை, தலைநோய், வீக்கம், மேகம், புண், குட்டம், கபம், சீத இரத்தக் கடுப்பு, குடல்வாதம், பேதி, வாதபித்தம், தோல் வறட்சி நீங்கும். உடல் பலம் உண்டாம்.

உபயோகம்.

உடும்புச் சூரணம் :—வயது சென்ற உடும்பின் தலை, நகம், வயிற்றிலுள்ள குடல் முதலியவற்றை நீக்கி, காயம் பலம் ¼ (8.75 கிராம்), இந்துப்பு பலம் ½ (17.5 கிராம்), வளையலுப்பு பலம் (8.75 கிராம்), "பூண்டு பலம் 1 (35 கிராம்), சுக்கு பலம் 1 (35 கிராம்), திப்பிலி பலம் ½ (17.5 கிராம்), மிளகு பலம் 1 (35 கிராம்), சவுட்டுப்பு பலம் 1 (35 கிராம்), ஓமம் பலம் 2 (70 கிராம்), இவைகளைச் சூரணமாக்கி, உடும்பின் வயிற்றில் நிரப்பி, கயிற்றால் கட்டி, பிரமியிலைச்சாறு 4 படியை (8 லிட்டர்) ஒரு பானையில் ஊற்றி, அதில் முற்கூறிய உடும்பை இட்டு வேக வைத்துச் சாறு வற்றியவுடன் உடும்பை எடுத்து இடித்துக் காயவைத்து, மறுபடியும் இடித்துத் துணியில் வடிக்கட்டிச் சேகரிக்கவும்.

அளவு : இரண்டு விரல்கொண்ட அளவு, இருவேளை அரை மண்டலம்.

துணைமருந்து : தேன்.

தீரும் நோய்கள் : கிரகணி வகைகள், மூலவாயு, சூதகவாயு.

பத்தியம் : இச்சாபத்தியம்.

உடும்பு இலேகியம்.

1. பெண் உடும்பின் கழுத்தை நறுக்கிக் குங்குமப்பூ, கோரோசனம் வகைக்கு வராகனெடை 2½ (10.5 கிராம்) வைத்துக் கயிற்றால் கட்டித் தலைகீழாய்த் தொங்கவிடவும்.

2. பெண் ஊர்க்குருவியை மேற்கூறியவாறு அதன்வாயில் அபின் வராகனெடை 1½ (6.3 கிராம்) போட்டுக் கயிற்றால் கட்டித் தலைகீழாய்த் தொங்கவிடவும்.

3. பெண் முதலை முன்போன்றே செய்து அதன்வாயில் தண்ணீர் விட்டு ஏழுமுறை கழுவி, கழற்சிக்காய் அளவுள்ள கஞ்சாவை நல்ல வெல்லம் வராகனெடை 3-ல் (12.6 கிராம்) வைத்து மூடி, வாய்க்குள் செலுத்திக் கட்டித் தலைகிழாய்த் தொங்கவிடவும்.

பிறகு இவைகளின் தோல், நகம், மயிர், குடல், பிச்சி ஆகிய வற்றை நீக்கிப் பொடியாய் அரிந்து, உலர்த்தி இடித்துக்கொண்டு, இத்துடன் கொத்தமல்லி, கருஞ்சீரகம், சோம்பு, ரோஜாப்பூ, ஜாதிக்காய், சாதிப்பத்திரி, மதனகாமேஸ்வரப்பூ வகைக்குப் பலம்¼ (8.75 கிராம்) இடித்துச் சூரணித்து, 10 பலம் (350 கிராம்), சூரணத்திற்குச் சர்க்கரை பலம் 5 (175 கிராம்) நெய் பலம் 2 (87.5) சேர்த்து இளம் இலேகியம் செய்து 5 அல்லது 7 நாள் சாப்பிடவும். இச்சா பத்தியம். தாதுவிர்த்தியாகும்.

**உடும்பின் நெய்.**

உடும்பின் நெய்யைப் பயன்படுத்த இரத்தப்பெருக்கு நீங்கி போம் என்று கூறப்பட்டிருக்கின்றது.

---

## எரிவண்டு

# MYLABRIS SPS

## No. Colepters Telinifiy, Blistering Bettle Cantharides.

வண்டுகளுள் அநேகவித எரிவண்டுகள் உண்டு. எரிவண்டுகளைக் காலை அல்லது மாலைவேளைகளில் சேகரித்துக் காடிநீர் ஆவியில் வேகவைத்து, வெய்யிலில் நன்றாய்க் காயவைத்துக் காற்று நுழையாத குப்பிகளில் அடைத்து வைக்கக் கொடாமல் இருக்கும். விரண முண்டுபண்ண எரிவண்டைப் பயன்படுத்திக் கொள்ளலாம். இதற்கு வீரியம் அதிகமானபடியினால் உள்ளுக்குக் கொடுக்கக்கூடாது. எரிவண்டுக் களிம்பு கீழ்க்காணும் முறையில் செய்யப்படுகின்றது.

எரிவண்டு, வெள்ளை மெழுகு, வெள்ளைக் குங்கிலியம், ஆட்டுக் கொழுப்பு இவை வகைக்குச் சமபங்கு எடுத்து, முதலில் ஆட்டுக் கொழுப்பு, குங்கிலியம், மெழுகு இம்மூன்றையும் உருக்கி, அதில் எரிவண்டைப் பொடியாய் அரைத்துச் சேர்த்துக்கொள்ளவும். இதைச் சீலையில் தடவி நோயுள்ள இடத்தில் போட்டால் கொப்பளிக்கும். கொப்புளத்தைக் கத்தரித்து விட்டுத் தேங்காய் எண்ணெய் தடவி, வாழைக் குருத்தை மேலுக்குப் போட்டால் புண் ஆறும்.

இருமலினால் மார்பு நோய் அதிகரித்தால் மார்பின்மேலும், மயக்கத்திற்கும் பைத்தியத்திற்கும் பிடரியின் மேலும், காது நோயினால் காது கேளாவிட்டால் காதின் பின்புறத்திலும், மண்

ஷீரல் வீக்கத்தினுல் உண்டாம் நோய், நாட்பட்ட கணுக்களின் வீக்கம், இடுப்பு நோய், தசைப் பிடிப்பு இவைகளுக்கு நோய் கண்ட இடங்களிலும் இதனைப் போடவும்.

மேலைநாட்டினர் முடிவளர்க்கும் தைலங்களில் எரிவண்டுகளி லிருந்து எடுக்கும் சத்தைச் சேர்க்கின்றனர்.

---

## எலும்புகள்

## BONES

**வேறு பெயர் :** *அஸ்திகள்.*

ஆண் கழுதை, பெண் கழுதை, ஆண் குதிரை, பெண் குதிரை, எருமைக்கடா, எருமை, எருது, பசு, ஆண் கரடி, பெண் கரடி, ஆண் புலி, பெண் புலி, ஆண் மான், பெண் மான், ஆண் ஆடு, பெண் ஆடு, என்னும் இவற்றின் எலும்புகளைக் . கீழ்க்காணும்படி சுத்தி செய்து, பற்பம் செய்து பின்காணும் விதமாக வழங்க வேண்டும்.

### சுத்தி.

பொடி செய்த எலும்புத்தூள் பலம் 1-க்கு (35 கிராம்) புளித்த பசுவின் மோர் 3 பலம் (105 கிராம்) விசிதம் விட்டு, சூரியஉதயம் முதல் அத்தமிக்கும் வரையில் வெய்யிலில் வைக்கவும். இவ்விதம் ஒவ்வொரு நாளும் மேற்படி மோர் மும்மூன்று பலம் விட்டுச் சூரிய புடத்தில் ஐந்து நாட்கள் வைக்கவும். அதன் பின்பு மேற்படி மோர் விடாமல் இரண்டு நாட்கள் வெய்யிலில் வைத்து, ஈரமில்லா மல் நன்ருய் உலர்ந்த பின்பு, நீர் விட்டுக் கழுவி உலர்த்திக் கொள்வதே எலும்பின் சுத்தியாம்.

### பற்பம்.

ஒரு பலம் (35 கிராம்) சுத்திசெய்த எலும்பிற்கு, கீழுள்ள பட் யலின் முறைப்படி கற்ருழைச் சாறுவிட்டு அரைத்து, வில்லை செய் துலர்த்திக் கவசித்துப் புடமிட்டு எடுக்கப் பற்பமாம்.

| சாற்றின் பெயர். | அளவு பலம். | அரைக்கும் நாள். | வில்லை உலர்த்தும் நாள். | கவசம் உலர்த்தும் நாள். | புடம் வரட்டி. |
|---|---|---|---|---|---|
| கற்ருழைச்சாறு | 2 | 4 | 3 | 1 | 32 |
| ஷை | 2 | 4 | 3 | 1 | 28 |
| ஷை | 2 | 4 | 3 | 1 | 24 |
| ஷை | 2 | 4 | 3 | 1 | 20 |

**அளவு :** கடலையின் முழுக்கூறு உத்தமம். முக்காற் கூறு மத்திமம். அரைக்கூறு அதமம். காற்கூறு அதமாதமமாம்.

**மிருகங்களின் எலும்பு பற்பவகைகளும் அவற்றால் தீரும் நோய்களும்.**

''கர்த்தவமா மையா கரடிபுலி மான்மையங்கங்
கர்த்தவமா மையகலக் காண்டலைக்—கர்த்த
மதுமேக மாலரந்தை வாந்திவிக்க லைதீ
மதுமேக மாலுளைநோய் மல்.''

(ப—ரை.) : கர்த்தவம்—ஆண் கழுதை, பெண் கழுதை மா;—ஆண் குதிரை, பெண் குதிரை; மை—எருமைக்கடா, எருமை, ஆ—எருது, பசு; கரடி—ஆண் கரடி, பெண் கரடி; புலி—ஆண் புலி, பெண் புலி; மான்—ஆண் மான், பெண் மான்; மை—ஆண் ஆடு, பெண் ஆடு என்னும் இவற்றின், அங்கம்—எலும்பினாலாகிய கர்த்த அம்மாமை அகலக்காண் அடலை—கறுத்திருக்கும் களங்கம், நீங்கும்படி உள்ள பற்பத்தை, கர்த்து—மேகப்பிணி, அம்—சன்னி மது—உன்மத்தம், மேகம்—உஷ்ணம், மால்—பித்தரோகம், அரந்தை—உபத்திரப்பிணி, வாந்தி வாந்தி—வாந்தி நோய், விக்கல்—விக்கல் நோய், ஐ—கப நோய், தீ—பித்தாதிக்கம், மது—வாதாதிக்கம், மேகம்—தலைவலி, மால்—மயக்கந் தரும் ரோகம் உளை—உளைப்புப்பிணி, நோய்—நோய்ப்பிணி, மல்—மாரடைப்பு ஆகிய இவற்றிற்குத் தனித்தனியே பழச்சாற்றில் அனுபானித்துக் கொடுக்கத்தீரும்.

மேகப்பிணிகளுக்கு ஆண் கழுதை எலும்பின் பற்பத்தையும், சன்னிகளுக்குப் பெண்கழுதை எலும்பின் பற்பத்தைப், உன் மத்த நோய்களுக்கு ஆண் குதிரை எலும்பின் பற்பத்தையும் வெப்ப நோய்களுக்குப் பெண் குதிரை எலும்பின் பற்பத்தையும், பித்த நோய்களுக்கு எருமைக்கடா எலும்பின் பற்பத்தையும் உபத்திரவ நோய்களுக்கு எருமை எலும்பின் பற்பத்யையும், வாந்தி நோய்களுக்கு எருது எலும்பின் பற்பத்தையும் விக்கல் நோய்களுக்குப் பசு எலும்பின் பற்பத்தையும், கபநோய்களுக்கு ஆண் கரடி எலும்பின் பற்பத்தையும் பித்த நோய்களுக்குப் பெண் கரடி எலும்பின் பற்பத்தையும் வாத நோய்களுக்கு ஆண் புலி எலும்பின் பற்பத்தையும், தலைவலிகளுக்கு பெண்புலி எலும் பின் பற்பத்தையும், மயக்கம் தரும் ரோகங்களுக்கு ஆண்மான் எலும்பின் பற்பத்தையும், உளைப்பு நோய்களுக்குப் பெண் மான் எலும்பின் பற்பத்தையும், நோய்ப் பிணிகளுக்கு ஆண் ஆட்டெலும்பின் பற்பத்தையும் மாரடைப்பு நோய்களுக்கு பெண் ஆட்டெலும்பின் பற்பத்தையும் மேற்கண்ட அளவுப்படி பழச்சாற்றில் அனுபானித்துக் கொடுக்க மேற்கண்ட நோய்கள் நீங்குமென்ப.

இதனை

''வண்மையைப் பொறித்த திண்மையார் வாகட
முழுநெறிப் பனுவலின் விழுமிய பொருணிலை
யறைமுறை கேட்டி யிறையுறு மாணவ
கர்த்தவமாமை கபிலைமா னென்குட
னேத்தவல் லியமறி யென்புறு மடலையைக்
கனிமதுப் பிழியினே யனுபா னித்ததை
மேகான லஞ்சன வெறியுட் டணமனல்
போகாவு பத்திரம் புன்னலி சத்திமா
வின்னலிப் பிணித்துய ரிடருளச் செயுநாள்
வின்னமி லாதயில் லிப்பது மனுமுறை
யாயுள்வே தியருறு மதிரிஃ தாமே.''

என்ற மாபுராணப் பெருநூலிலுள்ள ஆசிரியப்பா சூத்திரநடையால் உணரலாம்.

### கோட்டான் எலும்பு பற்பம்

முன்சொன்ன எலும்புகளின் சுத்தி முறைப்படி, சுத்தி செய்த கோட்டான் எலும்புப்பொடி பலம் 1-க்கு (35 கிராம்) கீழ்க் காணும் பட்டியலின்படி தண்ணீர் விட்டான் கிழங்குச்சாறுவிட்டு, முறைப்படி அரைத்து வில்லை தட்டி உலர்த்திச் சில்லிட்டுச் சீலை செய்து புடமிட்டெடுக்கப், பற்பமாம்.

| சாற்றின் பெயர். | சாற்றின் அளவு | அரைக்கும் நாள். | வில்லை உலர்த்தும் நாள் | கவசம் உலர்த்தும் நாள். | புடம் வரட்டி |
|---|---|---|---|---|---|
| தண்ணீர் விட்டான்கிழங்குச் சாறு. | 3 | 4 | 3 | 1 | 32 |
| .. .. .. | 3 | 4 | 3 | 1 | 28 |
| .. .. .. | 3 | 3 | 2 | 1 | 24 |
| .. .. | 3 | 3 | 2 | 1 | 20 |

ஆண் கோட்டான், பெண் கோட்டான், ஆகிய இருசாதிப் பட்சிகளின் எலும்புகளையும், மேற்கண்ட பாகப்படியே தனித்தனிச் செய்துகொள்ள வேண்டும்.

அளவு : கடலையின் முழுக்கூறு உத்தமம். முக்காற்கூறு மத்திமம். அரைக்கூறு அதமம். காற்கூறு அதமாதமமாகும்.

### கோட்டான் எலும்பு பற்பத்திற்குத் துணை மருந்துகளும் தீரும்நோய்களும்.

''நிதம்பத் துடைகோச நேர்வாமக் கட்டி
நிதம்பத் துடைகோச நேராய்— நிதம்பத்துக்
கன்னலற லாமுமனங் கப்பொடிபூ சம்பீர்பேய்க்
கன்னலற லாகுமுவ கை.''

(ப-ரை) நிதம்பத்துடை கோசம் நேர்வு ஆம் அக்கட்டி— பெண் களுக்கு நிதம்பத்துக் கடுத்த துடையிலும், ஆண்களுக்குக் கோசத் துக்கு நேரிலும் உண்டாகும் அவ்வகைக் கட்டிகள், நிதம்பத்து உடை கோசம் நேராய்—கல்லினுல் உடைபட்ட முட்டையைப் போன்றிருக்கும், நிதம் பத்துக்கன்னல்அறல் ஆம்—பிரதிதினமும் பத்து நாழிகைக்கு மேல் கடுப்புண்டாகும், ஊமன் அங்கம் பொடி—அதற்குக் கோட்டான் எலும்பின் பற்பத்தை, பூசம் பீர் பேய்க்கன்னல்— பேய்ப்புடல், பேய்ப் பீர்க்கு, பேய்க்கரும்பு, அறல் ஆகும் உவகை—என்னும் இவற்றின் சாற்றில் அனுபானித் துக் கொடுத்தால் அந்நோய் நீங்கிக் களிப்புண்டாகும்.

பெண்களுக்கு நிதம்பத் தானத்திற்கு நேரான அடித்துடையி லும், ஆண்களுக்குக் கோசத்திற்கடுத்த அடித்துடையிலும், வாத சம்பந்தத்தால் விருத்தமாகவும், பித்த சம்பந்தத்தால் நீள மாகவும், சேத்தும சம்பந்தத்தால் சதுரமாகவும், கட்டி காணு வதும், அவ்வாறு காண்பதற்கு முன்னே சுரம் தலைவலி முதலியன உண்டாவதும், அக்கட்டிகள் கல்லிலகப்பட் டுடைந்த முட் டையைப் போன்றிருப்பதும், நாளும் பத்து நாழிகைக்கு மேல் கடுப்பும் எரிவும் உண்டாதலும் உண்டு. இவ்வகைக் குணங்களி ருந்தால் அவைகட்கு முறையே ஆண்கோட்டான் பெண்கோட் டான் என்னும் இரண்டின் எலும்பையும் தனித்தனியே பின் காணும்படி கொடுக்க வேண்டும்.

ஆண்பாலாருக்கு முற்கூறிய கட்டியானது வாதத்தைப்பற்றி வரின் பேய்ப்புடச்சாறும், பழச்சாராயம் ஆகிய இரண்டையும் கலந்து, பித்தத்தைப் பற்றியவரின் பேய்ப்பீர்க்குச்சாறு, பட்டைச் சாராயம் இவை இரண்டையும் கலந்தும், கபத்தைப்பற்றிவரின் பேய்க்கரும்புச்சாறு, அரிசிச்சாராயம் என்னும் இரண்டையும் கலந்தும், பெண்கோட்டான் எலும்பின் பற்பத்தை அனுபானித் தும் கொடுத்தல் வேண்டும். அக்கட்டி பெண்பாலாருக்கு வாதத் தைப் பற்றி வரின் பேய்புடற்சாறு, தென்னங்கள் என்னும் இரண் டையுங் கலந்தும், பித்தத்தைப் பற்றியதாகில், பேய்ப் பீர்க் குச்சாறு, பனங்கள் ஆகிய இரண்டையும் கலந்தும், சேத்து மத்தைப் பற்றியதாகில் பேய்க்கரும்புச்சாறு ஈச்சங்கள் இவை இரண்டையும் கலந்தும், ஆண்கோட்டான் எலும்பு பற்பத்தை அனுபானித்தும் கொடுத்தல் நல்லது. இம்முறையில் அவரவர் நோய் நீங்கும்.

இதனை,

''மேலான வுரையாண்பெண் ணிரண்டில் வாத
மேகத்தைப் பற்றினதாற் குறிக்கு நேராய்க்
காலான துடைக்கணுண்டாய் வருத்தஞ் செய்யுங்
கட்டிகளை யடக்க வென்முற் கூகை யத்திப்
பாலானவ விடத்தைப் பிராமணத் திட்டம்
பகர்பேயின் புடலிரதம் பானச் சாதிக்
கேலான வகையிரண்டி லறிந்து கொண்ட
விலக்கணத்தா லயின்றதைமேற் பூசி டாயே.''

என்ற போகர் மூவாயிரத் திரட்டுச் செய்யுளாலும்,

"ஆண்பெ ணிருகுறிப் படுதுடை
மாண்பெய் பருவ ருவளிமுதல்
காண் பையு மனதிகணிபொடி
மாண்பை மணைவழி மதுகளே".

என்ற மாபுராணச் செய்யுளாலும் உணரலாம்.

### பேரண்ட பற்பம்.

மண்டை ஓடு, சீனக்காரம், இரண்டையும் கல்வத்திலிட்டு எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து வில்லைதட்டி உலர்த்திப் புடமிட்டு எடுத்துப் பொடியாக்கிப் பதனம் பண்ணிக்கொள்ளவும்.

அளவு : வராகனெடை (4.2 கிராம்) காலை மாலை பன்னிரண்டு நாள்.

துணை மருந்து : கழுதைப்பால் இரண்டு பங்கும், இஞ்சிச்சாறு ஒரு பங்கும் சேர்த்து அதற்குச் சமன சர்க்கரை கூட்டி அதில் பற்பத்தை இழைத்துக் கொடுத்துத் தும்பைச்சாற்றால் நசியம் செய்து பேய்ப்பீர்க்கு பேய்மிரட்டிபேய்ப்புடல் பேய்க் கும்மட்டி பேய்அத்தி பேய்த்தும்பை எலுமிச்சம்பழம் இவைகளைத் தலையில் தேய்த்து நூறு குடம் நீர் வார்க்கவும் .

பத்தியம் : பச்சரிசியும் பருப்பும் சமைத்துக் கொடுக்கவும். உப்பு ஆகாது.

தீரும் நோய்கள் : பிரமை, பித்தம் முதலியன.

### (வேறு.)

மனிதன் மண்டையோடு, நாய் மண்டையோடு, மாட்டு மண்டையோடு இவைகளைச் சரியெடையாய்க் கல்வத்திலிட்டுக் கழுதைப்பாலால் மைபோல ஆட்டி, வழித்தெடுத்து, வில்லைதட்டி, உலரவிட்டுக் குக்குடப் புடம் போட்டெடுக்கத் தவளநிறப் பற்பமாம்.

அளவு : கழஞ்சு (5.1 கிராம்) அளவு 12 வேளை கொடுக்கவும்.

துணை மருந்து : கழுதைப் பால் இரண்டு பங்கும், இஞ்சிச் சாறு ஒரு பங்கும், சர்க்கரை ஒரு பங்கும் கூட்டிப் பற்பத்தைக் கலந்து கொடுக்கவும்.

தீரும் நோய்கள் : பித்தம், பயித்தியம், பிரமை முதலியன.

---

## ஓணான்.

# CALOTIS

# BLOOD SUCKER

### Commn Agemaid Lizard

ஓணான் இரத்ததில் ஒன்று அல்லது இரண்டு துளிகள், ஒரு சிறு பாலாடை கழுதைப்பாலில் கலந்து கொடுக்க, கருங் கிரந்தி நீங்கும்.

ஓணான் நெய்க்கு இசிவகற்றிச் செய்கை உண்டு. இதனை வலிநோய்க்கு வழங்குவதுண்டு. இதனைக் கீழ்க் காணும் அடியால் உணர்க.

> "......................ஓணா னெய்க்குக்
> காணாப் பிறவலி நோய் காணாது."

சகல வலிப்புகட்கும் கொடுக்கப்படும் சோதிரிஷி தைலத்தில் பெரும் ஓணான், சிறு ஓணான் சேருகின்றன.

ஓணான், ஓந்தி இவைகளைக் கொண்டு வாதத்திற்கு சுடர்த் தைலம் செய்வதுண்டு. அவற்றிலொன்றைக் கீழ்க்காண்க.

பச்சை ஓந்தியின் தலையை அறுத்து, அதற்குள் இரசம், இரச கற்பூரம் கந்தகம் வகைக்குப் பலம் ஒன்று (35 கிராம்) போட்டுச் சீலையை வேப்பெண்ணெயில் நனைத்து ஓந்திக்குச் சுற்றி கதிரில் குத்தி, சுடர்த்தைலம் வாங்கவும். இதற்குவிட மூக்கால்படி (1.5 லிட்டர்) வேப்ப எண்ணெயைப் பயன் படுத்திக் கொள்ள வேண்டும்.

இளம் பிள்ளை வாதத்திற்கு மேலுக்குப் பூச இது பயன் படும்.

---

## கஸ்தூரி.

# MOSCHUS MOSCHIFERUS MUSK.

இப்பொருள், மார்க்கம், மார்ச்சாரி, மான்மதம், நாபி, மிருகநாபி என்னும் வேறு பெயர்களினாலும், பிறமொழிகளில் கஸ்தூரி என்னும் பெயரினாலும் வழங்கப்படுகிறது. இப்பெயர், பொதுவாய்க் கஸ்தூரி மணமுள்ள தாவர சங்கமப் பொருள்களையும், சிறப்பாய் (திபெத், ஆசாம், காஷ்மீரம், இமயமலை, சீனா, ரஷ்யா இவ்விடங்களில் அதிகமாய் வசிக்கின்ற) கஸ்தூரி மானின் ஆண்குறி மலருக்கும் மேல்தோலுக்கும் இடையே உண்டாம் கழிவுப் பொருளையும் குறிக்கும். இது, பெண்மானை வசீகரித்தற் பொருட்டு, வலிமையும் இளமையும் உடைய ஆண்மானுக்குக் குளிர்காலத்தில் உற்பத்தியாகின்றது. இக் கழிவுப் பொருள் ஒரு மெல்லிய தோலால் மூடப்பட்டிருக்கும். ஒரு மானினின்று முக்கால் (26 கிராம் முதல் ஒன்றரைப்பலம் (52·5) கிராம்) வரை கிடைக்கும் இதன் மணம் நெடுந் தூரம் பரவும் தன்மையை உடையது. ஆதலினால் வேடர் வேட்டையாடும் பொழுது, இம்மணத்தால் நரம்புத் தளர்ச்சியடைந்தும், கண்ணொளியும் காதோசையும் குன்றியும் வருந்துகின்றனர். இம்மான் குளிர்காலம் கழிந்தவுடன், காற்குளம்பினால் பையை உதைத்துக் கஸ்தூரியைச் சிந்தவைக்கிறது. இது கிடைத்தலரிது. ஆனால் சிறந்தது. பல ஜீவராசிகளினுடைய கழிவுப் பொருளும், பல தாவர வர்க்கமும் இதன் மணத்தைப் பெற்றிருக்கின்றன. இவைகளின் உதவியால், செயற்கைக் கஸ்தூரி செய்து வாசனைச் சாமான்களுக்கு உபயோகிக்கின்றனர். தேவையின் பொருட்டால், உலர்ந்த குருதி, கல்லீரல், மொச்சை, கோதுமை, பார்லியரிசி இவைகளைக் கஸ்தூரியுடன் கலக்கின்றனர். நிற்க,

இதைச் சோதிக்கப் பல சோதனைகள் உள :—

(1) சில குன்றியெடை கஸ்தூரியை நீரிலிட கரையாதிருந்தால் உண்மைப் பொருளென்றும், கரைந்தால் கலப்பென்றும் அறியலாம்.

(2) சில குன்றியெடையை நெருப்பிலிட உருகிக் குமிழிட்டால் உண்மைச் சரக்கென்றும், உருகாது கரிந்து உருக்குப் போலானால் கலப்பென்றும் அறியலாம்.

(3) உண்மைக் கஸ்தூரியைப் புதைத்து வைத்தெடுத்தாலும் மணம் மாறாது.

(4) உண்மைக் கஸ்தூரி, தொடுதற்கு மிருதுவாயும் நெய்ப்பாயும் இருக்கும்.

(5) ஒரு நூல்கயிற்றைப் பெருங்காயத்திலிட்டு இழுத்துப் பிறகு கஸ்தூரியிலிட்டு இழுக்கப் பெருங்காயத்தின் மண மிருந்தால் போலிச் சரக்கென்று தள்ளவும்.

இச் சோதனையைப் பாஞ்சாலத்தில் கையாளுகின்றனர். எங்கள் அனுபவமும் இஃதே.

(6) இது சாதாரணமாய்ப் பழுப்புடன் கூடிய கறுப்பு நிறத்தைப் பெற்றிருக்கும். மற்றும் கஸ்தூரியின் ஐவகைகளும், அவற்றின் நிறம் உருவம் முதலியனவும் கீழ்க்காணும் செய்யுளினாலறியலாம்.

"கஸ்தூரி யைந்தாங் கரிகைதிலகை குளுந்தை
கைத்தபிண்ட கைநாய கைமுறையே—மொய்த்தசிவப்
பெள்ளுகொள்ளு கட்டி சிறிதுபரு மங்கனென
விள்ளு மிவைக்கேகும் வினை."

வடநூல்களிலே காம்ரூபா, நேபாலி, காஷ்மீரி என்று மூன்று வகைகள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. காம்ரூபா, திபெத் சைனா இவ்விடங்களிலிருந்து காம்ரூபா என்னும் ஊரின் வழியாக வருகின்ற சரக்கைக் குறிக்கிறதென்றும் அது சிறந்த தென்றும் கூறுகின்றனர். நிற்க

இதன் உபயோகத்தை ஆராய்வாம் ; இது, கைப்புச் சுவையையும் வெப்ப வீரியத்தையும் உடையதென்பது யாவருமறிந்ததே. இதற்கு வெப்புண்டாக்கி, உடல் உரமாக்கி, இசிவகற்றி ஆகிய செய்கைகளுண்டென்று ஆராய்ச்சியாளர் கூறுவர். மற்றும் கஸ்தூரி கீழ்க்கண்டவாறு செயல் படுமென்று கூறப்பட்டிருக்கிறது. (இது முதன்மையாக இதயத்திலும் நரம்பு மண்டலத்திலும் தொழில்புரிந்து மனதிற்கு உற்சாகத்தை ஊட்டி, மூளை, காசேருக்கொடி, நரம்பு முனைகளைத் தூண்டி, இரத்தச் சுற்றோட்டத்தை நல்ல நிலைமைக்கு கொண்டு வந்து நாடியின் இரத்த அழுத்தத்தை அதிகப்படுத்தும். சல ஜனன உருப்புகளைத் தூண்டும் சக்தியும் இதற்கு உண்டு. மூச்சை இயங்கும் மத்தியஸ்தானத்தைத் தூண்டிவிடும், சிறுநீர், பால், வியர்வை வாயிலாக உடலை விட்டு இது வெளிப்படும். அருந்தியவுடன் இரத்த மண்டலத்தையும் மூளையையும் தூண்டி சிறிது நேரம் கழித்து உறக்கத்தை உண்டு பண்ணும்). இதன் குணத்தைக் கீழ்க் காணும் செய்யுளினால் அறியலாம். இதை முதல் இரண்டு செய்கைகளுடன் ஒப்பு நோக்குக.

"சொல்லரும் வசியங் காந்தி சுகமுதல் அனுகும் பின்னும்
மெல்லியார் தமக்கு நாதம் வீர்த்தியாம் தலைநோ யேகும்
பல்லுறு கபமும் தீரும் பகரொணாப் பலமும் உண்டாம்
மல்லடர் சந்நி ரூட்சை மாறுங்கஸ் தூரிக் கென்னே."

இஃதுமன்றி, பிதற்றல், கபவாதம், சுவாசரோகம், வலிப்புகளுக்கும் இது சிறந்தது. இக்குணங்களைக் கீழ்ச் செய்யுளால் உணர்க.

" பிள்ளைப் பிணிக்குப் பேராகத் தான் கொடுக்க
உள்ளநோய் ஓடிடும் ஓதக்கேள்—கள்ள
மாந்தவயி றுப்புசமும் வடிவாய் இளந்தேகம்
சோர்ந்து கிடக்கும் சுழிமாந்தம்—காந்திடும்
நாவறட்சிக் கணமும் நளிர்க்காய்ச்ச லுங்குளிரும்—மேவும்
தூவி இரத்த தொந்த சுரம்.
முக்குக் கணமும் முதிர்பால் கிரிச்சிரமும்
பக்கியின் தோஷம் பழங்காய்ச்சல் அக்கணமே
இத்தனை நோயெல்லாம் இருப்பிடத்தை விட்டுவிட்டு
கத்திவிழுந் தோடுங் காண்."

மேலே சொல்லப்பட்ட நோய்களுக்கு, இதனை $\frac{1}{4}$ (32 மி.கிரா.) முதல் 2குன்றி (260 மி. கிரா.) யெடைவரை உபயோகிக்கலாம்.

தமிழ் வைத்தியர்கள், இதனைத் தனியாய் உபயோகப் படுத்துவதோடு, மற்றைய சரக்குகளுடன் சேர்த்தும், தைலம், மெழுகு, மாத்திரை பொடி முதலிய வைகளாகச் செய்தும், நோய்க்குத் தக்கவாறு அனுபானித்தும் தொன்று தொட்டு உபயோகித்து வருகின்றனர். அவற்றுள் சிலவற்றை ஆராய்வாம்.

தனவந்தர்கள், தாம்பூலத்துடன் உடல் தேற்றியாகக் கஸ்தூரியை அருந்துகின்றனர்.

நாட்பட்ட சுரநோயினருக்கு உண்டாகும் உடல்தளர்ச்சியை நீக்கும் பொருட்டு ப்பூரண சந்திரோதயத்தை $\frac{1}{4}$(32 மி. கிரா.) முதல் $\frac{1}{2}$ குன்றி (65 மி. கிரா.) வரை இதனுடன் சேர்த்துத் தேனில் இழைத்துக் கொடுத்தல் பழக்கம்.

கஸ்தூரியுடன் தாம்பிர செந்தூரத்தை $\frac{1}{4}$ (16 மி. கிரா.) முதல் $\frac{1}{2}$ (32 மி. கிரா.) அரிசி எடை சேர்த்து, உத்தாமணிச் சாற்றிலே அனுபானித்துக் கொடுக்க, சுவாசகாச நோய் நீங்குமென்பதனைக் கீழ்க்காணும் மருந்து பாரதச் செய்யுளினாலறிக.

" சுவேதவா கனனுன மைந்தனெனு மைந்தனைச்
சொர்க்கமெனு முத்த மாங்கத்
தோன்றலெனு மான்மத வலாரிதன் பகையான
சுவாசமாங்கால கேய
நிவாதகவ சத்தவுணர் முப்பத்து மூன்றுன
நிகழ்லக்க ரோமா கரரை
திமிடத்தி லேகொன்று வேலிச்ச ரத்தினுல்
நீருக்கி யகாலையே."

தாய்க்கு ஈன்ற பிறகு தடைப்பட்ட அழுக்கு படுவதற்கும், சுரம் நீங்குதற்கும் கஸ்தூரிக் கறுப்பு ¼ (32 மி. கிரா.) முதல் ½ (65 மி. கிரா.) குன்றியும், பூடுக் கறுப்பு¼ (32 மி. கிரா) முதல் (130 மி. கிரா.) 1 குன்றியு சேர்த்துத் தேனில் இழைத்துக்கொடுத்தல் மரபு. கஸ்தூரிக் கறுப்பின் முறையைக் கீழே காண்க.

கஸ்தூரி 1 வராகனெடை (4.2 கிராம்), பச்சைக் கர்ப்பூரம் கோரோஜனை, இரசம், பூரம், இரச செந்தூரம், இலிங்கம், கந்தகம், தாளகம், மனோ சிலை, ஓமம், குங்குமப்பூ, திப்பிலி இவற்றைத் தனித்தனி 5 வராகனெடை (21 கிராம்) எடுத்துக் கஸ்தூரியைத் தவிர, மற்றச் சரக்குகளைத் தனித்தனியாய்ப் பொடித்து, முறைப்படி ஒன்றாகக் கலந்து பின்பு கஸ்தூரியைப் பொடித்து அவைகளுடன் சிறுகச் சிறுகச் சேர்த்து அரைத்து கொள்ளவும்.

அளவு: ½ (65 மி. கிரா.) முதல் 1½ குன்றி (195 மி. கிரா.) யளவு.

தேரன்யமக வெண்பாவில்கூறப்பட்ட கஸ்தூரி மாத்திரையையும் அதனால் தீரும் பிணிகளையும் கீழ்க்காணும் செய்யுளினாலும் அதன் பழைய உரையினாலுமறிக.

''மாரனேருங் கத்தூரி மாத்திரைமுன் முக்கடுகை
மாரனேருங் கத்தூரி மாலலங்கல்— மார
வருணமுனி யாதவமே மாருத முன்னுநோய்
வருணமுனி யாதவமே மால்.''

(ப-ரை) மாரன் நேருங் கத்தூரி மாத்திரை— மன்மதனை யொத்த அழகு வாய்க்கச் செய்யும் கத்தூரி மாத்திரையைச் செய்யும் விதம் எப்படி யெனின், முன்— கஸ்தூரி, முக்கடுகு— சுக்கு, மிளகு, திப்பிலி, ஐ— கடுகு, மாரநேருங் கத்தூரி—மாயும்படி அழுந்த மத்திக்க, மாலலங்கல்—துளசிச் சாறு விட்டும், மார— மகிழம் பூச்சாறு விட்டும், வருணம்— தண்ணீர்விட்டான் கிழங்குச்சாறு விட்டும், முனி—அகத்திச்சாறு விட்டும் அரைத்து மாத்திரையாக உருட்டி, ஆதவம்—வெய்யிலிலே உலர்த்தி, ஏ—இசைவான பிறகு, மாருத முன்னுநோய்—வாத முதலான நோய்களெல்லாம் போகிறதற்கு, வருணம்—தண்ணீரிலே புசித்தால், வாதசுரம், வாத நளிர், வாதப் பிடிப்பு முதலான பிணிகளெல்லாம் போமென்றும் முனி—தேனிலே புசித்தால் பித்தநோய், பித்த சுரம், பித்த வாயு முதலான பிணிகளெல்லாம் போம் என்றும், ஆதவமே — கொன்றைப் பூச்சாற்றிலே புசித்தால், சேட்பசுரம், சேட்ப சன்னி, தலைவலி, தலைக்குடைச்சல் போமென்றும், மால்— எலுமிச்சம்பழச்சாற்றிலே புசித்தால் மூலவிப்புருதி ஆசனரூடி, மேக குன்மம் போன்ற சகல நோய்களும் நீங்கும் என்றும் கூறப்பட்டிருக்கிறது.

மற்றும் தோடசந்நிபாதம், பித்தசுரம், தலைவலி, வாந்தி, நீர்க்கோவை முதலிய நோய்கள் நீங்க கீழ்க்காணும் குளிகையைச் செய்து தாய்ப் பாலிலனுபானித்துக் கொடுக்கவும்.

"எய்தாமல் கஸ்தூரி கழஞ்சு ஒன்று
இதமான குங்குமப்பூ கழஞ்சி ரண்டு
எய்தாமல் ரோசனையுங் கழஞ்சு மூன்று
இவை மூன்றுங் கல்வத்தி லிட்டுக் கொண்டு
எய்தாமல் அமுர்த மெனு முலைப்பால் விட்டு
இனிதான சாமமொரு றரைத்துக் கொண்டு
எய்தாமல் குன்றிபோல் றிழலு லர்த்தி
எடுத்துநீ செப்புதனில் அடைத்தி டாயே."

நிற்க, பாலர்கட்குண்டாம் வலிப்பு நோய், சுவாச காசம், மயக்கம், கபவாதம், வயிற்றுநோய், ஆசன அடைப்பு, கட்டி, வாதம், உன்மாதம் முதலியன நீங்க, தேரன் தைலவர்க்கத்தில் கூறியுள்ள கஸ்தூரித் தைலத்தை ½, ¼, 1/8 பலம் (17.5, 8.75, 4.38 கிராம்) கணக்காய் நிறுத்து அனலில் வெதுப்பிக் காலையில் மாத்திரம் கொடுத்துவர, நீங்கு மென்றறிக.

கஸ்தூரி, வாசனைத் திரவியங்களுள் ஒன்றாகையினல், தைலங்களுக்கு மணம் ஊட்டுவிக்க இது மற்றைய வாசனைத் திரவியங்களுடன் உபயோகிக்கப்படுகின்றது. உதாரணமாய்ச் சுக்குத் தைலம், சிறுசந்தனாதித் தைலம் முதலியவற்றில் காணலாம்.

மகாராஜ மிருகாங்கம், பூரணசந்திரோதயம் போன்ற பெரு மருந்துகளிலும், காமவிருத்திச் செய்கையுடைய மாத்திரைகளிலும் கஸ்தூரி சேர்க்கப்படுகின்றது.

ஆங்கில வைத்தியர், கஸ்தூரியுடன் 1½ குன்றி (195 மி. கிரா.) யளவு சூடனைச் சேர்த்து, இருதயத்தைத் தூண்டுவதற்காக உபயோகிக்கின்றனர். சூடன், கஸ்தூரியின் மணத்தை மாற்றுவதாகவும் கூறுகின்றனர்.

முகவசீகரம் தரும்பொருட்டு, இதனை நெற்றியில் பொட்டாக இட்டுக்கொள்ளுதல் பழக்கம்.

இருமல் வியாதிக்குக் கஸ்தூரி பங்கு 1, குங்குமப்பூ, சாதிக்காய், சாதிப்பத்திரி, இலவங்கம் இவை வகைக்குப் பங்கு ¼, இவைகளைக் கல்வத்திலிட்டுச் சேர்த்தரைத்து, துளசிச்சாறுவிட்டு நான்கு நாளரைத்து, கடலைப்பிரமாணம் மாத்திரைகள் செய்து நாளொன்றுக்கு 1 முதல் 2 மாத்திரைகள் வீதம் கொடுத்தலுமுண்டு.

## காண்டா மிருகக் கொம்பு

# RHINOCEROS UNICORNIS, LION.

### The Great One Horned Rhinoceros.

விளம்புதற் கரிய காண்டாமிருக நற் கொம்பின் மேன்மை

* * * * * * *

ஓதுதும் பயித்தி யங்க ளோடிடும் பித்தந் தாகம்
தீதுறு வறட்சி மேகஞ் செப்பருங் கயங்க பாலம்
ஏதமா மெய்யி ளைப்போ டெரிவுநஞ் சுண்ட வெப்பம்
கோதுறு மருத்தீ டாதி குலைத்திடு மயிர்தோ டொக்கும்.

(பொ-ரை) காண்டாமிருகத்தின் கொம்பினுல், பைத்தியம், பித்தம், தாகம், வறட்சி, மேகம், கயம், இளைப்பு, எரிச்சல், நஞ் சுண்டதினுல் ஏற்பட்ட வெப்பம், மருந்தீடு முதலியன நீங்கும்.

(ப. சூ.)

பயன்

இக்கொம்பை நீர்விட்டு இழைத்து உள்ளுக்குக் கொடுக்க, மேற்கண்ட நோய்கள் நீங்கும்.

இதனைக் கொண்டு செய்யப்படுகின்ற பற்பத்தின் முறையை யும் பயனையும் கொம்பு பற்பத்தின்கீழ்க் காண்க.

மற்றும் இக்கொம்பு பற்பம் தமரகநோயில் வழங்கப்படுகிறது.

தோடங் கண்டவிடத்தில் காண்டாமிருகக் கொம்பைச் சேர்த்து இழைத்துக்கொடுப்பது ஈழநாட்டு வழக்கம்.

காண்டாமிருகத் தோல்.

இதனை நீர்விட்டு இழைத்துக் கொடுத்துவரப் பைத்தியம் விலகும்.

## கிளிஞ்சல்.

# OSTREA EDULTS, LINN.
# COMMON OYSTER SHELL.

வேறு பெயர் : சுத்தி, ஏரல்.

இது, சிறுகிளிஞ்சில் பெருங்கிளிஞ்சில் என இருவகைப்படும்.

### பொது சுத்தி.

ஒரு வீசை கிளிஞ்சிலுக்குத் தமரத்தைச் சமூலச்சாறு 1 படி (2 லிட்.), காடி 1 படி (2 லிட்.) மோர் 1 படி (2 லிட்.) இவற்றை ஒன்ருய்க் கலந்து ஒரு பாத்திரத்திலிட்டு, அதில் மேற்படிக் கிளிஞ்சிலைப் போட்டு, அப்பாத்திரத்திற்கு வேடுகட்டி ஏழுநாள் வெய்யிலில் வைத்து எடுக்கவும்.

அதன்பின், செங்கழுநீர்ச்சமூலச்சாறு, மோர், காடி வகைக்கு ஒரு படி (2 லிட்.) சேர்த்து முன்போலவே பாத்திரத்தில் விட்டு, அதில் மேற்படிக் கிளிஞ்சிலை மறுபடியும் போட்டு, அப்பாத்திரத்திற்கு வேடுகட்டி ஏழு நாள் வெய்யிலில் வைத்து எடுக்கவும்.

அப்பால், மணத்தக்காளி சமூலச்சாறு, மோர், காடி, வகைக்கு ஒரு படி (2 லிட்.) சேர்த்துப் பாண்டத்திலிட்டு, அதில் மேற்படிக் கிளிஞ்சிலைப் போட்டு பாண்டத்திற்கு வேடு கட்டி ஏழு நாள் வெய்யிலில் வைத்து எடுக்கச் சிறந்த சுத்தியாம்.

இதனை,

''இருவகை யேரலி னங்க ளழுக்கற
வருமை தமரத்தை வங்கழு நீர்காளி
யொருமை யிருபத் தொருநாள் முப்பாவாய்
தருமொருங் காடியுந் தானிக ராவதே.''

என்ற திருமூலநாயனுர் திருமந்திரச் செய்யுளால் உணர்க.

---

* • is a shell found in the Atlant.c and Indian ocean Coasts.................. ntains Calcium Carbonate 85 to 95 Percent, Phosphate and sulphate of Calcind magnesium, Oxide of Iron, alumina and silrea ........ ....The ashes (bhaare antacid and alterative and used in cases of Diarrhoea and chronic intestinas. Dose is 5 grains. The animal is supposed to possess aphrodisiac Propertie therefore eaten raw or Cooked. The paste of the shell is used as an absorbents

## சிறுகிளிஞ்சில் பற்பம் அளவு முதலியன

''ஏகா தசிக்குப்பி னஞ்சிறிய வேரலைமை
யேகா தசிக்கு மிறளிவன்னி—யேகா
மனையட்டா ராபரணி மாரிசிநான் கூர்கா
மனையட்டா ராபரணி மை.''

(ப-ரை) ஏகாதசிக்குப்பின்—பதினொரு தினங்கட்குப் பிறகு, அம் சிறிய ஏரலை—அழகுள்ள சிறு கிளிஞ்சிலை, மை ஏகாது அசிக்கும் இறளி வன்னியே—கறுப்புச் சேராமல்நல்லபற்பமாக்கக்குருவி ஆல் என்னும் மரத்தின் சமூலச்சாறும், வன்னியிலைச்சாறும் விட்டரைத்துப் புடமிட்டெடுக்க, காமனை அட்டார் ஆபரணி—அதன் பின் கிளிஞ்சிலானது மன்மதனைத் நகித்த சிவபிரானது ஆபரணமான எலும்புபோல் வெளுப்பாகும், மாரிசி நான்கு—இதன் பிரமாணமாவது மிளகின் நாலிலொரு பாகமே, ஊர் காமன் ஐ அட்டார்—இதைப் புசிக்க வேண்டிய நிலங்கள் இந்திரனுடையதும் முருகக் கடவுளுடையதும், இடையர்களுடையதுமான மருதம் குறிஞ்சி, முல்லை என்பவைகளே, ஆபரணிமை—இதைப் புசிக்க வேண்டிய மாதங்களாவன—வைகாசி, சித்திரை, ஆனி என்பவைகளே.

ஒரு பலம் (35 கிராம்) சுத்தி செய்த சிறு கிளிஞ்சிலுக்குக் கீழ்ப் பட்டியில் காணுமாறு குருவி ஆல் சமூலச்சாறு, வன்னியிலைச்சாறு இவை இரண்டிலும் முறைப்படி அரைத்து, வில்லை செய்து உலர்த்தி, சில்லிட்டுச் சீலை செய்து புடமிட்டெடுக்கப் பற்பமாம்

| சாற்றின் பெயர். | அளவு பலம். | அரைக்கும் நாள். | வில்லை உலர்த்தும் நாள். | கவசம் உலர்த்தும் நாள். | புடம் வரட்டி. |
|---|---|---|---|---|---|
| குருவி ஆல்சமூலச்சாறு | 4 | 11 | 10 | 1 | 30 |
| வன்னியிலைச்சாறு | 4 | 11 | 10 | 1 | 30 |

**அளவு** : மிளகின் நாலின் ஒரு பாகம் உத்தமமாகவும், இரு பாகம் மத்திமமாகவும், முப்பாகம் அதமமாகவும், மிளகின் முழுப்பாகம் அதமாதமமாகவும் கொண்டு புசிக்க வேண்டும்.

**புசிக்க வேண்டிய நிலம்:** மருதம், குறிஞ்சி, முல்லை என்பவைகள்.

**புசிக்க வேண்டிய மாதங்கள்** : வைகாசி, சித்திரை, ஆனி ஆகும்.

இதனை,

''பெருசிறு கிளிஞ்சி லென்னும்பேதத்திற் சிறுகிளிஞ்சில்
வருப்பருப்பத்திற் காலும் வன்னியு மூலமெல்லாம்
பருமிள களவை நான்காம் பாகசா தனனூர் மூன்று
மெருது மூன்றுதி கால மெஞ்சிய தியுத்த மாமே.''

என்ற மாபுராணச் செய்யுளால் உணர்க.

சிறுகிளிஞ்சிற் பற்பத்தின் அனுபானமும் தீரும் நோய்களும்

சாத்திய மதுமேகத்திற்குச் சிறுபாலைச் சாற்றிலும்.
அசாத்திய மதுமேகத்திற்குப் பெரும்பாலைச் சாற்றிலும்;
சாத்திய வாதத்திற்குச் சிறுதுளச்சி சாற்றிலும்,
அசாத்திய வாதத்திற்குப் பெருந்துளச்சி சாற்றிலும்;
சாத்திய பித்தத்திற்குச் சிறுமாமரச் சாற்றிலும்,
அசாத்திய பித்தத்திற்குப் பெருமாமரச் சாற்றிலும்;
சாத்திய பிடிப்புக்குச் சிறுபருத்திச் சாற்றிலும்,
அசாத்திய பிடிப்புக்குப் பெரும்பருத்திச் சாற்றிலும்;
சாத்திய கடுப்புக்குச் சிறுகீரைச் சாற்றிலும்,
அசாத்திய கடுப்புக்குப் பெருஞ்சிறுகீரைச் சாற்றிலும்:
சாத்திய உப்புசத்திற்குப் பசுவின் பாலிலும்,
அசாத்திய உப்புசத்திற்கு ஆட்டின் பாலிலும்;

சாத்திய இருமலுக்குப் பசுவின் வெண்ணெயிலும்,
அசாத்திய இருமலுக்கு ஆட்டின் வெண்ணெயிலும்;
சாத்திய மயக்க சன்னிக்குக் குளிர்ந்த நீரிலும்,
அசாத்திய மயக்க சன்னிக்கு வெந்நீரிலும;
சாத்திய பிரமைக்கு நெல்லரிசிமாவிலும்,
அசாத்திய பிரமைக்குத் தினையரிசிமாவிலும்;
சாத்திய சுரத்திற்கு தென்னங் கள்ளிலும்,
அசாத்திய சுரத்திற்குப் பனங்கள்ளிலும்;
சாத்திய சத்திக்குத் தேனிலும்,
அசாத்திய சத்திக்குக் கொசுத்தேனிலும்;
சாத்திய கயரோகத்திற்குப் பழச்சாராயத்திலும்,
அசாத்திய கயரோகத்திற்குப் பட்டைச் சாராயத்திலும்

மேற்படிப் பற்பத்தை முறையே அனுபானித்துக் கொடுக்க மேற் கண்ட நோய்கள் நீங்கும் என்ப.

இதனை,

''அறைகிறேன் சிறுகிளிஞ்சிற் பற்ப முண்ணு
மனுபானத் துடனேநோ யகலு மாண்மை
யுறைகிறேன் சிறுபாலை பெருத்த பாலை
யொடுதுளசி மாபருத்தி சிறுத்த கீரை

பறைகிறேன் பால்வெண்ணெய் நீர்மா கட்டு
பழச்சாராய மிவைசாத்ய மதுமே கம்போம்
கறைகிறேன சாத்யமது மேகமும்போ
மிசைவாகப் பித்தகய மீருய்ப் போமே.''

என்ற சட்டை முனி ஆயிரத்திலுள்ள செய்யுளாலும்,

''மெய்யடா சிறுகிளிஞ்சிற் பருப்ப நன்மை
விளம்புகிறே னென்மகனே வினவிக் கேளாய்
பொய்யடா மற்றதெல்லா மதுமே கம்போம்
புகலிறுதிக் கயரோகம் பொகு மப்பா
செய்யடா சிறுபாலை பெரும்பாலைப்பேர்
சிறுகீரை மாபருத்தி மால லங்கல்
வெய்யடா பால் வெண்ணெய் தண்ணீர் நென்மா
வீரைதேன் பழச்சாராய மிகுந்த தாமே.''

என்ற கொங்கணர் முன்னூற்றுச் செய்யுளாலும் அறியலாம்.

## கிளிஞ்சில் மெழுகு.

சிறுகிளிஞ்சலைச் சேகரித்துக் கரி நெருப்பிற் காய்ச்சி, பச்சை நெல்லிக்காய்ச்சாற்றில் துவைக்கவும். இப்படி மூன்று முதல் ஐந்து முறை செய்ய மலரும். இதனை கல்வத்திலிட்டுச் சிற்று மணக்கெண்ணெய் சிறுகச் சிறுக விட்டு மெழுகுப் பதம் வரு மட்டும் அரைக்கவும்.

இதைக் கால்வெடிப்புக்குப் பூசிவரத் தீரும்.

## பெருங்கிளிஞ்சிற் பற்ப அளவு முதலியன.

''மாவிலங்க முல்லையற்க மாழை சதுரேரன்
மாவிலங்க முல்லை மணியளவை—மாவிலங்கம்
வேலையரி கன்னி மிதுன முனிவிலக்கு
வேலையரி கன்னிலமே மேல்.''

**(ப-ரை.)** மாவிலங்கம் முல்லை அற்கம் மாழை—மாவிலங்க வேர்ப் பட்டைச் சாறு, காட்டுமல்லிகைச் சமூலச்சாறு, வெள்ளெருக்கன் சமூலச் சாறு, புளிமா சமூலச்சாறு, சதுர் ஏரல் ஆக இந்நான்கை யும் தனித்தனி விட்டரைத்துப் புடமிடக் கிளிஞ்சில் பற்ப மாம், மாவிலங்கு அம் முல்லை முல்லை இப்பற்பம் அருந்துங்கால் முல்லை நிலத்தைப் பெரும்பாலும் நீக்குவாயாக மணி அளவு ஐ மாவில் அங்கம்—அளவு குன்றிமணியின் கால்பாகத் திற்பாதியாம், வேலை அரி கன்னி மிதுனம் முனிவிலக்கு—மாதங், களிலே, ஆவணி, புரட்டாசி, ஆனி, மார்கழி ஆகிய நான்கையும் நீக்குவாயக, வேலையர் இகல் நிலமே மேல் வேலாயுதக் கடவுளின் வலியுள்ள குறிஞ்சி நிலமே இப்பற்பத்தை அருந்துங்கால் வசிப் பதற்கு மேன்மை உடையதாகும்.

ஒரு பலம் (35 கிராம்) சுத்தி செய்த பெருங்கிளிஞ்சலுக்குக் கீழ்க்காணும் பட்டியலின்படி, மாவிலங்க வேர்ப்பட்டைச் சாறு, காட்டுமல்லிகைச் சமூலச்சாறு, வெள்ளெருக்கன் சமூலச்சாறு புளிமா சமூலச்சாறு இவைகளைக்கொண்டு அரைத்து, வில்லை செய்துலர்த்திப் புடமிட்டெடுக்கப் பற்பமாம்.

| சாற்றின் பெயர். | அளவு பலம். | அரைக்கும் நாள். | வில்லை உலர்த்தும் நாள். | கவசம் உலர்த்தும் நாள். | புடம் வரட்டி. |
|---|---|---|---|---|---|
| மாவிலங்கவேர்பட்டைச்சாறு | 4 | 8 | 7 | 1 | 40 |
| ஊசிமல்லிகைச்சாறு | 3 | 6 | 5 | 1 | 30 |
| வெள்ளெருகன்ச்சாறு | 2 | 4 | 3 | 1 | 20 |
| புளிமாமூலச்சாறு | 1 | 2 | 1 | 1 | 10 |

இதனைப் புசிப்பதற்கு, முல்லை நிலம் நீங்கலான மற்றநிலங்கள் ஆகும். ஆயினும், குறிஞ்சி நிலமே சிறந்தது.

**அளவு** : குன்றிமணியை எட்டுப் பங்காக்கி, அவற்றுட் ஒன்று முதல் எட்டுவரையில், முறையே உத்தமம், மத்திமம், அதமம் அதமாதமம் ஒருபுடைத்துணிவு, முழுத்துணிவு, அநந்தம், அபரிமிதமெனக் கொள்க.

**மாதங்கள்** : ஆவணி, புரட்டாசி, ஆனி, மார்கழி இவற்றை நீக்கி மற்ற மாதங்களில் உண்ணலாம்.

பெருங்கிளிஞ்சிற் பற்பத்தின் துணைமருந்தும் தீரும் நோயும்.

''ஏர லடலை யினைமூல நீர்ப்பந்தி
யேர லடலை யினைசத்தி—யேரல்
வனமா தளையமுத மச்சிகைநெய் வெந்நீர்
வனமா தளையமுத மா''

**(ப-ரை)** ஏரல் அடலையினை—கிளிஞ்சிற் பற்பத்தை, மூலம் வாதாதி மூன்று மூலங்களுக்கும், நீர்ப்பந்தி—மூவகை-நீர்கட்டுக்கும், ஏர்—மூவகை நீரேற்றத்திற்கும், அல்—மூவகை மயக்கத்திற்கும், அடல்—மூவகைச் சுரத்திற்கும், ஐ—மூவகைச் சந்நிக்கும், இனை—மூவகை உபாதிக்கும், சத்தி—மூவகைச் சத்திக்கும் முறையே, ஏர்—நற்சீரகம், காட்டுச் சீரகம், கருஞ் சீரகம், அல்—சுக்கு, இஞ்சி, பேரரத்தை, வனம்—பனங்கள், தென்னங்கள், ஈச்சங்கள், மாது—பசு வெண்ணெய், எருமை வெண்ணெய், ஆட்டு வெண்ணெய், அலை பசுந்தயிர், எருமைத் தயிர், ஆட்டுத் தயிர், அமுதம்—பசும் பால், எருமைப்பால், ஆட்டுப்பால், மச்சிகை பசுவின் மோர், எருமை மோர், ஆட்டின் மோர்,

நெய்—பசுவின் நெய் எருமை, நெய், ஆட்டு நெய், வெந்நீர்—சுத்த வெந்நீர் சுக்கு வெந்நீர், மிளகு வெந்நீர், வனம்—துளசி, ருத்திரசடை, கஞ்சாங்கோரை, மாதுளை, எலுமிச்சை, கெடராம், அமுதம்—சீந்தில், கோவை, வல்லாரை, மா—புளிமா தேமா, நறுமா ஆகிய இவ்வனுபானங்களில் கொடுக்க வேண்டும்.

வாத மூலத்திற்கு நற்சீரகத்திலும், பித்த மூலத்திற்குக் காட்டுச் சீரகத்திலும், கபமூலத்திற்குக் கருஞ்சீரகத்திலும், வாத நீர்க்கட்டுக்குச் சுக்கிலும், பித்த நீர்க்கட்டுக்கு இஞ்சியிலும், கப நீர்க்கட்டுக்குப் பேரரத்தையிலும் வாதநீரேற்றத்திற்குப் பனங்கள்ளிலும்பித்த நீரேற்றத்திற்குத் தென்னங்கள்ளிலும், கப நீரேற்றத்திற்கு ஈச்சங்கள்ளிலும், வாதமயக்கத்திற்குப் பசுவின் வெண்ணெயிலும், பித்த மயக்கத்திற்கு எருமை வெண்ணெயிலும், கப மயக்கத்திற்கு ஆட்டு வெண்ணெயிலும், வாத சுரத்திற்குப் பசுவின் தயிரிலும், பித்த சுரத்திற்கு எருமைத் தயிரிலும், கப சுரத்திற்கு ஆட்டுத் தயிரிலும், வாத சன்னிக்குப் பசுவின் பாலிலும், பித்த சன்னிக்கு எருமைப்பாலிலும், கப சன்னிக்கு ஆட்டுப் பாலிலும், வாத நோய்க்குப் பசுவின் மோரிலும், பித்த நோய்க்கு, எருமை மோரிலும், கப நோய்க்கு ஆட்டு மோரிலும், வாத சத்திக்குப் பசுவின் நெய்யிலும், பித்த சத்திற்குப் எருமை நெய்யிலும், கபசத்திக்கு ஆட்டு நெய்யிலும் மேற்படி பற்பத்தை அனுபானித்துக் கொடுக்க வேண்டும்.

அன்றியும், வெந்நீர், சுக்குநீர், மிளகுநீர், துளசிச்சாறு, ருத்திர சடைச்சாறு, கஞ்சாங்கோரைச்சாறு, மாதுளை ரசம், எலுமிச்சை ரசம், கெடாரங்காய் ரசம், சீந்தில் சாறு, கோவைச்சாறு, வல்லாரைச்சாறு, புளிமா ரசம், தேமா ரசம், நறுமா ரசம் என்னும் இவற்றிலும் நோய்கட்கேற்றவாறு, சமயத்திற்கேற்பவும் தனியாகவும் அனுபானித்தும் கொடுக்கலாம்.

இதனை,

"கேளடா புலத்தியா என்மகனே மேலே
கெடியுள்ள வாதமுத லானமூல
நாளடா நீர்க்கட்டு நீரி றெற்ற
நண்ணுசுர முதலாக வல்லி யீரு
யாளடா வேரல்வெண் மைகு டாரியாதி
யனுபானந் துடனூட்ட வகன்று போகு
மூளடா நற்குணத்தைக் கைவிடா தென்றும்
முன்னோர் களியம்பினதா முகம தாமே.''

என்ற அகத்தியர் இருபத்தோராயிரத்துச் செய்யுளால் அறிக.

---

# குளம்புகள்.

# HOOFS.

**வேறு பெயர் : நகங்கள்.**

காட்டெருமை, நாட்டெருமை, காட்டுப் பசு, நாட்டுப் பசு, காட்டுக் கரடி, நாட்டுக் கரடி என்னும் பன்றி, காட்டுப் புலி, நாட்டுப் புலி என்னும், பூனை, காட்டுக் குதிரை என்னும் கோவேரிக் கழுதை, நாட்டுக் குதிரை, காட்டுமான் என்னும் கலைமான், நாட்டு மான், காட்டாடு என்னும் வெள்ளாடு, நாட்டாடு என்னும் செம்மறியாடு ஆகிய இவற்றின் கால் குளம்புகளைக் கீழ்க்காணு மாறு சுத்தி செய்து, பற்பம் பண்ணித் தேனில் அனுபானித்துக் கொடுக்க வேண்டும்.

## சுத்தி.

இராவின காற் குளம்புப் பொடி பலம் 1 (35 கிராம்)-க்கு, 5 பலம் (175 கிராம்) இளநீர் விட்டுச் சூரிய உதய முதல் அத்தமி மிக்கும் வரையில் வெய்யிலில் வைக்க வேண்டும். இவ்விதம் ஐந்து நாள், நாள்தோறும் ஐந்தைந்து பலம் இளநீர் புதிது புதியாய் விட்டுக் காலை முதல் மாலை வரையில் வெய்யிலில் வைத்தும், பின்பு 2 நாள் மேற்படி இளநீர் விடாமல் வெய்யிலில் வைத்தும், நீரெல்லாம் சுவறி உலர்ந்த பின்பு கழுவியெடுக்க, காற் குளம்புப் பொடி சுத்தியாம்.

## பற்பம்.

ஒரு பலம் (35 கிராம்) சுத்தி செய்த காற் குளம்பிற்குக் கீழ்க் காணும் பட்டியில் கண்ட முறைப்படி வன்னியிலைச் சாறுவிட்டு அரைத்து, வில்லை செய்து உலர்த்திச் சில்லிட்டுப் புடமிடப் பற்ப மாம்.

| சாற்றின் பெயர். | சாற்றின் அளவு. | அரைக்கும் நாள். | வில்லை உலர்த்தும் நாள். | கவசம உலர்த்தும் நாள் | புடம் வரட்டி. |
|---|---|---|---|---|---|
| வன்னியிலைச் சாறு .. | 6 | 6 | 5 | 1 | 40 |
| — .. .. | 5 | 5 | 4 | 1 | 35 |
| — .. .. | 4 | 4 | 3 | 1 | 30 |
| — .. .. | 3 | 3 | 2 | 1 | 25 |

அளவு : கடலையின் முழுக் கூறு உத்தமம். முக்கால் கூறு மத்திமம். அரைக்கூறு அதமம். கால்கூறு அதமாதமம் ஆம்.

**காற் குளம்புகளின் பற்ப வகைகளும் அவற்ருல் தீரும் நோய்களும்.**

''கா்ளுட்டு மையா கரடிபுலி மாவுழைமை
காளுட்டு மையா கலைப்பொடிசெய்— காளுட்டு
கண்டா விடதமனல் காலறல்கால் குன்மமுமை
கண்டா விடதமனல் கை''.

(ப-ரை) கான் நாட்டு மை ஆ கரடி புலி மா உழை மை— காட்டிலும் நாட்டிலுமுள்ள எருமை, பசு, கரடி, புலி, குதிரை, மான், ஆடு என்னுமிவற்றின், கால் நாட்டும் ஐ ஆகலை பொடி செய்— கால்களில் பதிந்திருக்கும் அழகமைந்துள்ளவைகளான குளம்புகளைப் பற்பமாக்குவாயக, கான் ஆட்டு—தேனிற் குழைப்பாயாக கண்டாவிடதம்— இதன் பெயர் கண்டாவிடதமாகும். (இதை) அனல் கால் அறல் கால் குன்மம் மு ஐ— பித்தாதிக்க ரோகம், வாதாதிக்க ரோகம், சேத்து மாதிக்க ரோகம், சத்தி, வயிற்று நோய், மூவகைச் சன்னிகள், கண்தாவிடதமன் அல்கை— நேத்திர வாயு இசிவு, ருத்திர வாயு, உன்மத்தம், கண்மறைவு, காச நோய் என்னும் இந்நோய்கட்கு முறையே கொடுக்கத் தீரும்.

அன்றியும் முன்கண்ட அளவே, முன் அனுபானத்தில் கொடுக்க, காட்டு நரிக் குளம்பு பற்பத்திற்குச் சூலையும், நாட்டுநரிக் குளம்புப் பற்பத்திற்கு வல்லையும், காட்டு நாயென்னும் செந்நாய்க் குளம்புப் பற்பத்திற்கு மூலமும், நாய்க் குளம்புப் பற்பத்திற்குப் பவுத்திரமும், காட்டுமுயல் குளம்புப் பற்பத்திற்குப் பாரிசவாயுவும், நாட்டு முயல் குளம்புப் பற்பத்திற்கு பக்க வாதமும் நீங்கும் என்றறிக.

———

## குளவிக்கூண்டு.

## WASPSNEST

இஃது இரு வகைப்படும்: (1) மண் குளவிக் கூண்டு, (2) அரக்குக் குளவிக் கூண்டு இவைகளைக் கொண்டு செய்யப்படும் குடிநீர் விக்கல்க்குச் சிறந்த மருந்தாகக் கருதப்படுகின்றது. இதனைக் கீழ்க் காண்க :

"அரக்கெனினு மண்ணெனினு மாங்குளவிக் கூண்டைப்
பொருக்கிநற் புட்பரசம் பூட்டி— வறுத்து
விளர்வரிசி நெற்பொரியும் வெல்லம்பு மட்டுங்
தளாவிக்கல் தள்ளிவிடுந்தான்."

(பொ-ள்) அரக்கு அல்லது மண் குளவிக் கூண்டு, விளாம்பழ விதை, நெற் பொரி, திப்பிலி இவைகளை ஒன்று சேர்த்து தேன் விட்டு வறுத்துக் குடி நீர் முறைப்படி செய்து அருந்த விக்கல் நீங்கும்.

---

## கொம்பரக்கு.

## CARTERIA LACCA OR COCCUS LACCA TACHARDIA LACCA, LAC

அரக்கு, மரத்தின் கிளைகளில் அரக்கை உற்பத்தி செய்கின்ற சிறு பூச்சிகள் (Carteria lacca) குளிர் காலத்தில் முலைக்காம்பொத்த கூடுகளைத் தம் உடலினின்றும் உற்பத்தியாகும் செந்நிறப் பொருளைக்கொண்டு அமைக்கின்றன. இப் பூச்சியானது சிறிய பை போன்றிருக்கும். சில காலம் கழித்துக் கூடுகளிலிருந்து சிறிய பூச்சிகள் வெளிப்பட்டு விடுகின்றன. கொம்பைச் சுற்றிக் கட்டப் பட்ட இவ் வரக்கிற்குக் கொம்பரக்கென்று பெயர். கொம்பைத் தட்டி அரக்கைச் சேகரித்துச் சுத்தி செய்து கொள்ளல் வேண்டும். இவ்வரக்கைப் பற்பல உருவங்களாக மாற்றி அமைத்து வெவ் வேறு பெயர்களுடன் வழங்குகின்றனர். அரக்கை மெருகு நெய் செய்வதற்கும், நகைகள் செய்வதற்கும், முத்திரை இடு வதற்கும், பட்டுகளுக்குச் சாயமேற்றுவதற்கும் உபயோகிக்கின் றனர்.

நிற்க, அரக்கிற்கு துவர்ப்பிச் செய்கையும், உடல் தேற்றிச் செய்கையும், துவர்ப்பு, கைப்புச் சுவைகளும், வெப்ப வீரியமும் கைப்புப் பிரிவும் உண்டு. இதன் குணத்தைக் கீழ்ச் செய்யு ளால் அறியலாம்.

''குட்ட மசிர்க்கு பித்தங் குன்மமிரைப் பென்புருக்கி
பட்டிடு புண்ணுகச்சூர் பங்கநோய் நொட்டோ
ரரக்கரக்குஞ் சந்நிசுர மையமிவைக் கொல்லா
மரக்கரக்கு நூல்லயறி.''

(பொ-ரை) அரக்கு குட்டம், அசிர்க்கரம், இரத்தபித்தம், குன் மம், சுவாசம், எலும்புருக்கி, அடிபட்ட புண், உடல் வலி, முடம், சந்நிபாத சுரம், கபம் முதலிய நோய்களைப் போக்கும் என்க.

மற்றும், இதனால் பெரும்பாடு, இரத்த சீதபேதி முதலியன நீங்குவதோடு, இது மார்பிற்கு வலிமையைக் கொடுக்குமென்று கூறப்பட்டுள்ளது.

### உபயோகங்கள்.

அரக்கைப் பொடி செய்து 3 (390 மி. கிராம்) முதல் 10 குன்றி (1.3 கிராம்) வரை தேனில் கலந்து கொடுத்து வர, வாந்தியில் காணும் இரத்தத்தை நிறுத்தும்.

இரத்த சீதபேதியை நிறுத்த, இலவம் பிசின் சூரணம் மூன்று குன்றி (390 மி. கிராம்) யுடன் கொம்பரக்குச் சூரணம் மூன்று குன்றி (390 மி. கிராம்) அளவு சேர்த்து, நாள் ஒன்றுக்கு மூன்று அல்லது நான்கு வேளை வீதம் கொடுத்துவர வேண்டும்.

கொம்பரக்கு 1, இலவம் பிசின் ½, மாசிக்காய் ¼, ஜாதிக்காய் 1/8 பங்காய் நிறுத்தெடுத்து, ½ படி (1 லிட்.) நீர் விட்டு 1/8 படி (125 மி. லிட்.) யாகக் குறுக்கி, அதை இரு பங்காக்கிக் காலை மாலை பிச்சு ஆக உபயோகித்துவர, கிரகணி, இரத்த பேதி, பித்த சுரத்தில் காணும் பேதி முதலியன தீரும். இதனை இறையாட்சி இந்திய மருத்துவக் கல்லூரி சித்த ஆதுர்சாலையில் வழங்குகின்றனர்.

அரக்கைச் சூரணம் செய்து, அடிப்பட்ட புண்களின்மீது வைத்தழுத்திக்கட்ட, வடியும் ரத்தம் நின்று புண் ஆறும். கண்டமாலை க்ஷயம் முதலிய நோய்களில் காணும் துஷ்ட விரணத்திற்கும் இதனை உபயோகிக்கலாம்.

### அரக்குத் தைலம்.

''துரும வியாதி யெண்குடுப்பஞ் சுராற் றறலெண் ணுன்குகடன்
சுருக்கப் பலையிந் தனக்கனலாந் தொகைக்கெட் டொன்றாய் வடிகுடிநீ
ரருமை நறும்பா லெட்டயில மந்நீர்க் கருத்த மவந்திமஸ்து
மாற்றப் பளவைப் படிப்பலமா மார நிசிபுட் கரஞ்சிகரச்
சரும மடைபச் சிலைமதுரஞ் சடைகிச் சிலிரோ கணியேலை
சதபுட் பியும்வா லரியுரிபூஞ் சாந்தோ டுபய வசைமுசலி
உரும முறுசெவ் வல்லிகண மொவ்வொன் றினுக்கோ ராம்மிரமா
யூற்றும் பயசா லிழையெல்லா மூற்றிக் கரைத்துத் தானமிடே.''

(பொ-ள்) கொம்பரக்கு பலம் 32 (1,120 கிராம்) குடிநீர்ப் பாண்டத்தில் கிழிகட்டித் தொங்கவிட்டு, மருதஞ்சார்ந்த ஆற்றுநீர் மரக்கால் (32) விட்டு, சிற்றுமுட்டி விறகினல் எரித்து, (8-ல்) ஒரு பங்காய் வடித்த குடி நீரில், பசுவின்பால் படி 4-ம் (8 லிட்.) நல்லெண்ணெய் படி 4-ம் (8 லிட்) காடிச் சலம், தயிர்ச்சலம் இவைகள் வகை 1-க்கு பலம்.32-ம் (1,120 கிராம்) சேர்த்து, இதில் சந்தனம், கஸ்தூரி மஞ்சள், கோஷ்டம், இலவங்கப்பட்டை, இலவங்கப் பத்திரி, பச்சிலை, அதிமதுரம், சடாமாஞ்சில், பூலாங் கிழங்கு, கடகரோகணி, ஏலம், சதகுப்பை, கிளியூறல்பட்டை, பூசாந்திரப்பட்டை, சீரகம், கருஞ்சீரகம், பெருகன் கிழங்கு, செவ்வெள்ளிக்கொடி என்னும் கற்கத்திரவியம் ஆகிய (18-ம்)

வகை 1-க்கு பலம் 1 (35 கிராம்) ஆகத் தனித்தனியே பொடித்து நிறுத்து, மேற்படிப் பாலால் பதமாக அரைத்து, எல்லாம் ஒன்றுபடக் கரைத்து அடுப்பின்மிசை வைப்பாயக.

இதன் மகிமை.

''உத்தான மிட்டுமுதற் பொருளை வாழ்த்தி
யொல்கவெரித் தைந்தாநா ளுதய முந்தி
யோது பரு வத்துவடித் ததற்குச் சுத்தி
யொருமதிநெற் புடந்தீர்வ தொளிரி லாட்சைச்
சத்தான தைலத்தின் பெயரைச் சொல்லிற்
சப்ததா துச்சுரமுஞ் சடக்க டுப்புஞ்
சந்திரா வர்த்தமொடு சூரியா வர்த்தந்
தலைச்சூலை வியர்வுறுகற் ருழை வாச
முத்தான வெயிற்றினடிச் சுரப்பு மாற்ற
மொழிய வொட் டாச்சுரக்கி னமுமூர்த் தமாக
மூச்செழுப் புஞ்சுவாச காசச் செருக்கு
முதிருழலை யுதிரத்தின் முரிவும் பாண்டுக்
கொத்தான நோய்களுமுள் ளீர லுக்குட்
குளிர்ந்தெழுந்தங் கவயவியைக் குலுக்கி யாட்டுங்
குளிச்சுரமு நாட்பட்ட சுரமுந் தீவாய்க்
குயவரியை நேருமயக் குழாத்த தாமே.''

(பொ-ரை) கடவுளைப் பூசித்து, அடுப்பின்மீது வைத்த எண்ணெயைத் தகுந்த விறகினால் (4) நாள் வரைக்கும் மெல்லென எரித்து, 5-வது நாள் உதய காலத்திற்கு முன் வடித்து, ஒரு மாதம் நெற்புடம் வைத்து சுத்தி புரிந்தெடுத்துப் பதனஞ் செய்யவும். இதில் சிவந்த அரக்கினது சத்துச் சேருதலால், இந்தத் தைலத்தின் பெயரைச் சொன்ன மாத்திரத்தில், சப்த தாதுக்களைப் பற்றிய சுரங்கள், தேகக் கடுப்பு, சந்திராவர்த்தம், சூரியாவர்த்தம், கபாலச் சூலை, வியர்வையாற் பிறக்கின்ற நற் ருழை நாற்றம், பற்களின் வேரில் வீங்குகின்ற வீக்கம், வார்த்தை சொல்ல ஒட்டாத சுரக்கின ரோகம், ஊர்த்துவ கதியாக மூச்சை எழுப்புகின்ற சுவாசகாச ரோகம், அதிகரித்த உழலை ரோகம், உதிரக் கெடுதி, ஐவகைப் பாண்டு ரோகங்கள், ஈரலுக்குள் குளிர்ச்சியை உண்டாக்கிப் பின்பு, நரம்புகளில் வியாபித்துத தேகத்தைக் குலுக்கி ஆட்டுகின்ற நளிர்ச் சுரம் புராண சுரம் ஆகிய ரோகங்களெல்லாம், தீவாயையுடைய புலிமுன் அகப்பட்ட ஆட்டுக்கூட்டத்தைப் போலாகும்.

நிற்க, அரக்கு, சந்தனாதித் தைலத்திலும், அசுவகந்தி, பலா லாட்சா தைலம் போன்ற தைலங்களிலும் சேர்க்கப்பட்டிருக் கின்றது.

# கொம்புகள்

# HORNS

கலைமான், எருமை, எருது, ஆட்டுக்கடா, காண்டா மிருகம், கடமை, புள்ளிமான், காட்டுப் பசு, காட்டாடு, காட்டெருமை, வரையாடு, வரைப் பசு வரை எருமை, வரைக் கடமை, வரைக் காண்டாமிருகம், ஆகிய இம்மிருகங்களின் ஆண் பெண்களுடைய கொம்புகளைத் தனித்தனியே பின் காணும் முறைப்படி சுத்தி செய்து பற்பமாக்கிப் பின்காணும் விதமாய் உபயோகிக்கவேண்டும் இதனைக் கீழ்காணும் செய்யுளால் உணர்க.

''கலைக்கோ டுமையாமை காண்டா கடமை
கலைக்கோ டுமையடலைக் காண்வி—கலைக்கோடு
முக்கலிரு மல்பன்னல் மோதலழு லாதறும்மல்
முக்கலிரு மல்சுதை முன்.''

(பொ-ள்) கலை—ஆண் கலைமான், பெண் கலைமான், மை—எருமைக்கடா, எருமை, ஆ—எருது, பசு, மை—ஆட்டுக்கடா, ஆடு, காண்டா—ஆண் காண்டாமிருகம், பெண் காண்டா மிருகம், கடமை—ஆண் கடமை, பெண் கடமை என்னும் இவற்றின், கோடு—கொம்புகளை, கலைக்கோடு மையடலைகாண்—மூன்றாம் பிறையைப் போல் நிறமுடைய பற்பமாக்கு வாய் (அவ் வாறாக்கிக் கொடுத்தால்) முக்கல், இருமல், பன்னல், மோதல், அழலாதல் தும்மல்—மூவகை முக்கல், மூவகை இருமல், ஒவகைத் தெறித்தல், மூவகை இடிப்பு, மூவகைச் சுரம், மூவகைத் தும்மல், முக்கல் இருமல் சுதைமுன்—மூவகைக் கல் லடைப்பு, மூவகைப் பிடிப்பு, மூவகைச் சன்னி, மூவகை உன் மத்தம், என்னும் இவைகள், விகலைக்கு ஒரு நிமிடத்திற்குள்ளே, ஓடும்— ஓடிவிடும்.

### கொம்புகளின் சுத்தி.

சீவின கொம்புத் தூள் பலம் 1 (35 கிராம்)க்கு அகத்தி யிலைச் சாறு 3 பலம் (105 கிராம்) விட்டு, சூரிய உதயம் முதல் அத்தமிக்கும் வரையில் வெய்யிலில் வைக்கவும். இவ்விதம் மீண் டும் நான்கு நாட்கள், ஒவ்வொரு நாளும் மேற்படி இலைச் சாறு மும்மூன்று பலம் வீதம் விட்டுச் சூரிய புடம் வைத்துப் பின்பு ஆறாம் நாள் முதல் மேற்படிச் சாறு விடாமல் வெய்யிலில் வைத்து, ஈரமில்லாமல் நன்றாய் உலர்ந்த பின்பு, நீர் விட்டுக் கழுவி உலர்த்திக்கொள்ளவதே கொம்புகளின் சுத்தியாம்.

### கொம்புகளின் பற்பமுறை.

மேலே குறிப்பிட்டபடி தனித்தனியாகச் சுத்தி செய்த கொம்பு களைத் தனித்தனியாகக் கீழ்க்காணும் பட்டியின்படி பச்சைப் பாத்தைச் சாறு கொண்டு அரைத்து, வில்லை தட்டி உலர்த்திக் கபசித்துப் புடமிடப் பற்பங்களாம்.

| சாற்றின் பெயர். | சாற்றின் அளவு. | அரைக் கும் நாள். | வில்லை உலர்த் தும் | கவசம் உலர்த் தும் நாள. | புடம் வரட்டி. |
|---|---|---|---|---|---|
| பட்சைப் பேரரத்தைச் சாறு | 4 | 6 | 5 | 1 | 40 |
| ஷை .. | 4 | 5 | 4 | 1 | 35 |
| — .. | 3 | 4 | 3 | 1 | 30 |
| — .. | 3 | 3 | 2 | 1 | 30 |
| | 2 | 2 | 1 | 1 | 25 |
| — . | 4 | 2 | 1 | 1 | 20 |

**கொம்புப் பற்பங்களின் அளவு.**

முழுக் கடலைக் கூறு உத்தமம், முக்கால் கடலைக் கூறு மத்திமம். அரைக் கடலைக் கூறு அதமம். கால் கடலைக் கூறு அதமாதமம்.

**தீரும் நோய்களும் துணை மருந்தும்.**

வாத முக்கலுக்கு ஆண் கலைமான் கொம்புப் பற்பத்தையும், பித்த முக்கலுக்குப் பெண் கலைமான் கொம்புப் பற்பத்தையும், சிலேத்தும முக்கலுக்கு எருமைக் கடாவின் கொம்புப் பற்பத்தையும், வாத இருமலுக்கு எருமைக் கொம்பின் பற்பத்தையும் பித்த இருமலுக்கு எருதின் கொம்பு பற்பத்தையும், சிலேத்தும இருமலுக்குப் பசுவின் கொம்பு பற்பத்தையும், வாதத் தெறித்தலுக்கு ஆட்டு கடாவின் கொம்பின் பற்பத்தையும் பித்த தெறித்தலுக்கு ஆட்டுக் கொம்பின் பற்பத்தையும் சிலேத்துமத் தெறித்தலுக்கு ஆண் காண்டாமிருகத்தின் கொம்புப் பற்பத்தையும், வாத இடிப்புக்கு பெண் காண்டா மிருகத்தின் கொம்புப் பற்பத்தையும், பித்த இடிப்புக்கு ஆண் கடமைக் கொம்பின் பற்பத்தையும், சிலேத்தும இடிப்புக்குப் பெண் கடமைக் கொம்பின் பற்பத்தையும், வாத சுரத்திற்கு ஆண் புள்ளிமான் கொம்புப் பற்பத்தையும், பித்த சுரத்திற்குப் பெண் புள்ளிமான் கொம்பின் பற்பத்தையும், சிலேத்தும சுரத்திற்கு ஆண் காட்டுப் பசுக் கொம்பின் பற்பத்தையும், வாதத் தும்மலுக்குப் பெண் காட்டுப் பசுவின் கொம்பின் பற்பத்தையும், பித்த தும்மலுக்கு ஆண் காட்டாட்டுக் கொம்பின் பற்பத்தையும், சிலேத்துமத் தும்மலுக்குப் பெண் காட்டாட்டுக் கொம்புப் பற்பத்தையும், வாதக் கல்லடைப்பிற்கு ஆண் காட்டெருமைக் கொம்புப் பற்பத்தையும், பித்தக் கல்லடைப்பிற்குப் பெண் காட்டெருமைக் கொம்புப் பற்பத்தையும், சிலேத்துமக் கல்லடைப்பிற்கு ஆண் வரையாட்டுக் கொம்புப் பற்பத்தையும், வாதப் பிடிப்புக்குப் பெண் வரையாட்டின் கொம்புப் பற்பத்தையும், பித்தப் பிடிப்புக்கு ஆண் வரைப் பசுவின் கொம்புப் பற்பத்தையும், சிலேத்துமப் பிடிப்பிற்குப் பெண் வரைப் பசுவின் கொம்புப்

பற்பத்தையும், வாத சன்னிக்கு ஆண் வரையெருமைக் கொம்புப் பற்பத்தையும், பித்த சன்னிக்குப் பெண் வரை எருமைக் கொம்பின் பற்பத்தையும், சிலேத்தும சன்னிக்கு ஆண் வரைக் கடமைக் கொம்பின் பற்பத்தையும், வாத உன்மத்தத்திற்குப் பெண் வரைக் கடமைக் கொம்பின் பற்பத்தையும், பித்த உன்மத்தத்திற்கு ஆண் வரைக் காண்டாமிருகக் கொம்புப் பற்பத்தையும், சிலேத்தும உன்மத்தத்திற்குப் பெண் வரைக் காண்டாமிருகக் கொம்புப் பற்பத்தையும், முன் பிரமாணப் படி முலைப்பாலில் அனுபானித்துக் கொள்ள முறையே முன்கண்ட நோய்கள் தீரும்.

இதனைக் கீழ்க்காணும் உதாரணச் செய்யுட்களினால் அறியலாம்.

''கலைமானின் முதலாயிணைக் கடைமைத்திர ளிரு
புலையாவரு முயர்கொட்ட லுறுதாவள வவிழ்த
மலைவாதமு வினைநோயற மடவார்முலை யமுத
மிலையாயுணி லறுமேயிஃ துரமாமறை நெறியே.''

(மாபுராணம்.)

''மான்கலைமுன் கடமையந்த முறைதப் பாதே
வருமருப்பி னலாகு மடலை யுண்ண
நான்கலைசொல் வழிமுலைப்பா லனுபா னித்து
நாளுமயின் றிடவேந்த னமைச்சன் . மீளி
யூன்கலைநோய் பலவதெலா மகன்று போகு
மோகோகோ விதன்மகிமை யுரைக்கொ ணாதே
தேன்கலைநா விதையுரைத்தார் வடபான் மைக்கண்
செப்பியவர் விப்புவியிற் றேர்ந்து ளோரே.''

(ஆயுள் வாசிட்டம்.)

## கொம்பு பற்பப் புறநடை.

### மதன காமேசுரம்.

''செவ்வி யுறுமிச் சிறுங்கா டலைகாமச்
செவ்வி யுறுமித் திருப்பவே—செவ்வி
வரவத்தி மாதவசி வாதுமைநெய் புன்மா
வரவர்த்தி மாதவசி மார்.''

(பொ-ள்) செவ்விஉறும் இச்சிறுங்க அடலை—பக்குவமடைந்துள்ள இக் கொம்பு பற்பங்களை, மாதவசிமார்—பெருந்தவத்தை உடையவர்களும், காமச் செவ்வி உறுமித் திருப்ப அத்திவர—காம விகாரத்தினால் கோபித்துத் திரும்பும் மதங்கொண்ட யானையைப்போல் பாய்ந்து வருவதற்கு, செவ்வி வரவத்தி—செந்நிறமுடைய அத்திக் கனியின் விதையும் அதன் பிசினும், மா—மாம்பருப்பும் அதன் பிசினும், தவசி—முருங்கை விதையும்

அதன் பிசினும், வாதுமை—வாதுமைப் பருப்பும் அதன் பிசினும், நெய்—பசுவின் நெய்யும், புல்—கற்கண்டும், மா—கோதுமை மாவும் ஆகிய இவைகளை லேகியமாக்கி மேற்படி பற்பங்களைச் சேர்த்துக் கொடுக்கவும்.

செய்முறை : முற்கூறிய முப்பதுவகைப் பற்பத்திலும், வகைக்குக் கால் வராகனெடை (1 கிராம்) யாகக் கூடிய ஏழரை வராகனெடையும் (30 கிராம்), அத்தி விதை அதன் பிசின், மாம்பருப்பு அதன் பிசின், முருங்கை விதை அதன் பிசின், வாதுமைப் பருப்பு அதன் பிசின் ஆகிய இவ்வெட்டும் வகை 1-க்கு வராகனெடை ஒன்றே முக்காலரைக்காலாகக் (7.5 கிராம்) கூடிய வராகனெடை பதினைந்தையும் (60 கிராம்) ஒன்றாய்க் கூட்டி, சாதிக்காய் 3/4 பலமும் (26 கிராம்) சேர்த்து, இம்மூன்று பலத்தை (105 கிராம்) நாள் ஒன்றுக்கு ஐந்து பலம் (175 கிராம்) வீதம் அத்திக்கள் விட்டு ஐந்து நாளரைத்து, ஆறும் நாள் பசுவின் நெய் 3-பலம் (105 கிராம்), கற்கண்டுப் பொடி 1 பலம் (35 கிராம்) ஆகிய இவற்றுடன் 1/2 பலம் (17.5 கிராம்) கோதுமை மாவைக் கொஞ்சம் நெய்யில் சிவக்க வறுத்து மற்றவைகளுடன் சேர்த்து, ஒன்றாய்க் கலந்து இலேகியமாகச் செய்து கொள்ளவும்.

மருந்து புசிக்கும் இரண்டு நாளைக்குமுன் எண்ணெய் தேய்த்து முழுகி, மறுநாள் பேதிக்கு அருந்தி, புளி, மோர், தயிர், கனிவகைகள், பெண் போகம் என்னும் இவற்றை நீக்கிப் பத்தியமாயிருந்து, மேற்படி லேகியத்தை வேளைக்கு வராகனெடை $\frac{1}{2}$ (2 கிராம்), $\frac{3}{4}$ (3 கிராம்) அளவாகப் புசித்துவர வேண்டும். அங்ஙனம் அருந்தினல், மேகவெட்டை, நரம்பு வாதம் என்னும் இவற்றால் இரத்தச் சத்து நீத்துப் போயாவது அல்லது நரம்பில் வாதம் தங்கி அசைவில்லாமற் போயாவது இவ்விரண்டினுமல்லாமல், இரத்த சத்தை நட்டபடுத்தும் மருந்துகளைப் புசித்து, அதனால் இரத்த சத்து நீத்துப் போயாவது இருப்பவர்களுக்கும், பெருந்தவ சிரேஷ்டர்களாயிருப்பவர்களுக்கும், ஓடும் வெள்ளம் அணையினால் திரும்புவது போல, இரத்தப் பசை உண்டாகி, நரம்புகள் முறுக்கேறி, உடல் உரம், ஊக்கம் முதலியவற்றைப் பெறும். இதனைக் கீழ்க்காணும் உதாரணச் செய்யுட்களால் உணர்க.

"நரைதிரை வார்த்திபஞ் சாலே சுரங்கை நடுக்க லின்றி
யரசிளங் காளை யெனவா லிபமெழி லாண்மை தந்தித்
தரைபுகழ் ஞாங்கர்ப் பிதாவருண் மானையுந்தானி னைக்கா
வொருமருந் தாகிய காமே சுரமென வோங்க லொன்றே."

(வாகடச் சந்திரோதயம்)

"விசத் துளைசெய காமேசுர முண்டிடக்
கோசத் துளையுங் குறுகுமிள மையாம்
நேசத் துளையும் நியமிக்க வொண்ணது
பேசத் துளையும் பெருமித மிகுமே."

(திருமூலர் திருமந்திரம்.)

## கோரோசனம்.

# FEL BOVINUM PURIFACTUM
# PURIFIED OXGALL OR OXBILE.

இப்பொருள், ரோசனம், கோமந்திரம், வச்சலமணி, ஜாதி என்னும் வேறு பெயர்களினுலும் வழங்கப்படுகின்றது, பொது வாய் மிருகங்களின் பித்தைக் குறிக்கும்பொழுது, ரோசனம் என்றும், சிறப்பாகப் பசுவின் பித்தைக் குறிக்கும் பொழுது கோரோசனமென்றும் (கோ+ரோசனம்—கோரோசனம்), ஆட்டின் பித்தைக் குறிக்கும்பொழுது மைரோசனமென்றும் வழங்கப்பட்டிருத்தல் காண்க. உலகவழக்கில், உரோசனத்தை கோரோசனே என்று வழங்குதற்குக் காரணம் யாது என ஆராயப்புகின், பெரும் பாலும் பசுவின் ரோசனமே மருந்துகளில் கையாளப்படுவதினுலென்க. இவற்றைக் கீழ்க்காணும் மேற்கோள்களினுல் தெளியலாம்.

''சத்துக்குளே நல்லு ரோசனே நிட்கந்தனே யிட்டிறுத்துவை''

மாந்தத் தைலம்—தே. தை. சு)

என்றும்,

''இரத்த முரோசனஞ் கோஷ்டமதுர மெருவை கழஞ்சு.''

(பீநசக்கிருதம்—தே-தை-சு.)

என்றும் சொல்லப்பட்டுள்ளன. மேலும்,

''சீன நற்றிரி ரத்த முரோசனஞ் சிகர மைந்திடு நீட்க
மொன்றென்று''

(கண் தைலம்—தே. தை. சு.)

என்று பொதுவாகவும்,

''கோடாசல மாத்திரை யுடற்குக் கோடாசல மாத்திரை
யாமே
கோரோசமுக் கடுபலே கோட்டமரி தாரம் பவளம்,''

(தே—கரிசல்.)

என்று சிறப்பாகப் பசுவின் உரோசனத்தைக் குறிப்பதும்,

''வடுவில் சீரக பலமை ரோசனே
கடுகு ரோகணி சிவதை மனேசிலே.''

(திருப்புகழ் சித்துவகுப்பு.)

என்று சிறப்பாக ஆட்டின் ரோசனத்தை குறிப்பதை அறிக. '' கல்லீரலினின்றும் உற்பத்தியாகிப் பித்துப்பையில் சேரும் பித்தை, மூன்றிலொன்ருய்ச் சாராயத்தைக் கலந்து முறைப்படி சிறுகவைத்து பெருமாத்திரையாய் உருட்டி கொள்ளுதல் மரபு'' எருமை, மான், காட்டுக்கரடி, மயில், மீன்கள் இவைகளின் பித்தை உபயோகிப்பதும் உண்டு. ஆட்டின் வயிற்றில் பிறப்பதையும், பசுவின் வயிற்றில் பிறப்பதையும் பெரும்பாலும் உபயோகிக்கின்றனர். இதை,

''வேதந்தனி லிரண்டாய்க் கூறியகோ ரோசனைகட்கு.''
(ப. சி.)

என்ற தொடரினுலறியலாம். நிற்க, இதன் சோதனையை அறியவாம். கோரோசனை விலையுயர்ந்த சரக்காகையால், செயற்கையில் செய்யப்பட்ட கோரோசனையைக் கடைகளில் விற்கின்றனர். இதைச் சோதிக்க, ஒரு சிறிய ஊசியைப் பழுக்க காய்ச்சி, கோரோசனையில் குத்திப் பிடுங்கினுல், மஞ்சள், நிறப்புகையுடன் ஊசியின்மேல் மஞ்சள் நிறம் பதியின் நல்ல சரக்கெனறும், ஊசியின்மேல் கறுப்பு நிறம் பதியின் நல்ல சரக்கன்று என்றும் கண்டுக்கொள்ள வேண்டியது. நிற்க, இதன் உபயோகத்தை ஆராய்வோம். இது கைப்புச் சுவையையும் வெப்ப வீரியத்தையும் கார்ப்புப் பிரிவையு முடையது. மற்றும் இதற்கு 1. மலமிளக்கி, 2. இசிவகற்றி, 3. குளிர்ச்சியுண்டாக்கி, 4. பித்தசமனி, 5. கோழையகற்றி ஆகிய செய்கைகள் உண்டு.

இதன் குணத்தை கீழ்காணும் செய்யுலினுலறியலாம்.

''நீரிழிவு மேகசுர நீங்காக் கனல்வேகங்
கூறியவுன் மாதங் குழந்தைகள்நோய்—பாரகபம்
வீறுவை சூரியும் போம்......................''

(கனல்வேகம்—பித்தாதிக்கம், குழந்தைகள்நோய்—கிரந்தி, மாந்தம், கணம் முதலியன. வைசூரி அம்மைநோய்.)

இதனைக் குழந்தைகளுக்கு 2 கடுகுப்பிரமாணமும், மற்றை யோருக்கு இரண்டு குன்றி (260 மி.கிராம்) அளவு முதல் ஐந்து குன்றி (650 மி.கிராம்) அளவுவரையும் உபயோகிக்கலாம்,

இதனைக் நோய்க்குக் தக்க அனுபானத்தில், தனியாகவும், மாத்திரை, தைலம் முதலிய முறைகளாகச் செய்து உபயோகிக்கின்றனர். இவற்றுள் சிலவற்றை ஈண்டுக் கூறவாம்.

கோரசனையை முலைப்பாலிலாவது, கற்பூரவள்ளி இலைச் சாற்றிலாவது அனுபானித்துக் கொடுக்கச் செங்கிரந்தி தீரும். நீர்கோவைக்கு வெற்றிலைச் சாற்றிலே யனுபானித்துக் கொடுக்கலாம். கண் இருள் நீங்கி, இதனை முலைப்பாலில் இழைத்து கண்ணிலிட்டு வரவும்.

படல முதலிய கண் நோய்கள் தீர, தேரன் தைலவருக்கச் சுருக்கத்தில் கூறப்பட்ட கண் தைலத்தில், கோரோசனையும் முக்கிய சரக்காமாறு கண்டு கொள்க.

வைசூரி என்று கூறப்படுகின்ற அம்மை நோய்க்குக் கோரோசனையைப் பசும்பாலில் இழைத்துக் காலை மாலை கொடுத்தல் வழக்கம். மற்றும் காலை மாத்திரம் இதைக் கொடுத்து, மாலையில், தோல் சுட்ட சாம்பல் சிட்டிகையுடன் கலந்து கொடுத்தலுமுண்டு. இப்படிக் கொடுத்தலினால், இந்நோயிலுண்டாம் அதிவெப்பம் தணியுமென்க.

மற்றும் கோரோசனை, தொண்டை நோய்க்கும் வெப்ப நோய்க்கும் சிறந்ததென்பதையும், அதன் முறையையும் கீழே காண்க :

''கோரோசனை யொன்று லிங்க மிரண்டு
கூட்டியரைத் தாவின் வெண்ணெயிற் றின்னிவே
மாறுநோய்த் தொண்டை வெப்போடு
மாறு மென்றே கும்மி யடியுங்கடி.''

(அ. வைத்தியக்கும்மி.)

மேற்கூறிய முறையில் சேர்க்கப்பட்ட இலிங்கத்தின் குணத்தைப் பொருட்பண்பு நூலில் கூறப்பட்ட செய்யுளினாலறியலாம்.

''பேதிசுரஞ் சந்நி பெருவிரண நீரொடுத
காதகடி காசங் கரப்பான்புண்—ணோத
உருவிலிங்க சங்கதமா யூறுகட்டி யும்போங்
குருவிலிங்க சங்கமதைக் கொள்.''

மற்றும், பவளக்கால் மல்லிகையின் இலை, மிளகு, கோரோசனை இம் மூன்றையும் சரியளவு எடுத்து அரைத்து, மாத்திரை ஆக்கி முறைச் சுரத்திற்கு மூன்று தினம் கொடுக்கத் தீரும்.

(மா. வ.)

கோரோசனை, குங்குமப்பூ, பச்சைக் கற்பூரம், கற்பூரம், ஏலம், கிராம்பு, கோஷ்டம், சாதிக்காய், அக்கராகாரம் வகைக்கு மூன்று கழஞ்சு (16 கிராம்) எடுத்துப் பொடித்து, சந்தனத் தூள் குடி நீரால் நான்கு சாமமும், சண்பகப் பூக் குடிநீரால் இரண்டு சாமமும், குங்குமப்பூக் குடிநீரால் இரண்டு சாமமும் அரைத்துக் குன்றி அளவு மாத்திரை செய்து உலர்த்திக் கொண்டு, முலைப்பாலில் கொடுக்க, சேத்தும நோய்கள், சன்னி, நீர்த் தோடங்கள், மயக்கம், சிலேத்தும சுரம் நீங்கும். இம்மாத்திரையை அண்டத் தைலத்தில் கொடுக்க வலிப்பிசிவு நீங்கும்.

குறிப்பு : அப்பிரக பற்பம், இரச்செந்தூரம் முதலியவைகளை, இம்மாத்திரையுடன் கூட்டிக்கொள்வது நம்நாட்டு மருத்துவர்களின் புராதன வழக்கம். இவைகள் கொடிய சரக்காயும், இக்காலத்துச் சிசுக்களுக்கு ஏற்காதனவாயும் இருப்பதால், இவ்விரண்டையும் நீக்கிக் கூறப்பட்டன.

மாந்தப் பிணிக்குக் கீழ்காணும் செய்யுளில் கூறப்பட்ட கோரோசனை மாத்திரையைச் செய்து கொடுக்கத் தீரும் :—

''சீர்சிறந்த மாசிக்காய் திப்பிலிகோ ரோசனமும்
கார்சிறந்த கோட்டம் கருஞ்சீரம்—பேர்சிறந்த
அக்கார காரம் அரைத்துமுலைப் பாலிலிட
இக்கணமே தீரும் இது.''

சுரம் நீங்கவும் மலங்கழியவும் கோரோசனம் வராகனெடை இரண்டு (8.4 கிராம்) கடகரோகணி, நேர்வாளம் இவைகள் வகைக்கு வராகனெடை ஒன்று (4.2 கிராம்), இவைகளை முலைப் பால்விட்டு நான்கு சாமமரைத்து பயறளவு உருண்டை செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவும். இதை வாத சுரத்திற்கு ஒரு மாத்திரை இஞ்சிச் சாற்றிலும், பித்தசுரத்திற்கு ஒரு மாத்திரை முலைப்பாலிலும், கபசுரத்திற்கு ஒரு மாத்திரை ஆடாதோடை, கண்டங்கத்திரி, தூதுவளை இவைகளின் இலை சரியெடை எடுத்துப் பிட்டவியல் செய்து பிழிந்த சாற்றிலும் கொடுக்கத் தீரும். இச்சாபத்தியம் வைக்க வேண்டும்.

இம்மாத்திரை வயிறு கழியுமாறு செய்யுமாதலால், காலையில் மாத்திரம் உபயோகிக்கவேண்டும். மாலையில் வயிற்றைப் போக்காத கோரோசன மாத்திரையில் ஒன்று, மேற்படி துணை மருந்துகளோடு சேர்த்துக் கொடுக்கலாம்.

அச்சரத்திற்குக் கீழ்க்காணும் கோரோசனை எண்ணெயை உபயோகிக்க நல்ல பலனை அளிக்கும்.

''கருஞ்சீரகம் ரோகணி கடுக்காய் காட்டுமல்லி கைவேர்
வகைக்கு
ஒருவராகன் இண்டங் கொழுந்து ஒருபிடியுள் ளிபல மிரண்டு
முருவிளக்கெண் ணெய்படி யரைக்கால் முலைப்பால்வீ சம்படி
யாக
மருத்தையிடித் தெண்ணெய்தன்னில் மயனபதங் கோரோ
சனையே.''

''சினையே இரண்டு வராகனெடை சேரப் பொடித்தெண்
ணெய்விட்டு
தனையே வடித்துண் ணக்கேளு சதிரா வயிற்று வேக்காடும்
வினைய மாக வேநாக்கு வெந்த புண்ணு யிருப்பதுவும்
பனியக் காய்ச்ச லுந்தீரும் பத்திய மிதற்கு நலமாமே''.

நிற்க, காட்டாட்டு ரோசனையை (Goat Bazaar) 1/2 (65 மி. கிரா.) முதல் 1 குன்றி (130 மி. கிரா.) வீதம் பாலிலேனும் தனியாகவேனும் கொடுத்துவர, விஷங்களை முறிக்கும்; தலை, மூளை, இருதயம் முதலிய இராச உறுப்புகளுக்கு வலிவையும், பஞ்சேந்திரியங்களுக்கு அதிக சக்தியையும், தாது விர்த்தியையும், தேக பலத்தையும் சந்தோஷத்தையும் உண்டுபண்ணும்; சிறப்பாக இருதய நோய்களைப் போக்கும்.

---

## கோழி.

## GALLUS DOMESTICUS
## DOMESTIC COCK AND HEN.

இஃது ஆண்டலைப்புள், வாரணம், குக்குடம், காலாயுதம், குருகு என்ற வேறு பெயர்களினாலும் வழங்கப்படுகின்றது.

இதற்கு வெப்பமுண்டாக்கி, காமம் பெருக்கிச் செய்கைகள் உள. இதன் பொதுக் குணத்தைக் கீழ்க்காணும் செய்யுளால் அறிக :

''கோழிக் கறிநெருப்பாங் கொள்ளின் மருந்துரம்வங்
கூழைக் கடுப்புமந் தங்கூறரச—மாழ்கிப்போ
நீளுற்ற போக நிணக்கிரந்தி பித்தமுண்டாந்
தூவித்த மெய்யிளைக்குஞ் சொல்.''

(பொ-ரை) : சூடுள்ள கோழிக்கறியை உண்ணில் ஔஷதவேகம், மகாவாதம், சுவாசம், தேகக்கடுப்பு, மந்தாக்கினி, மூலம் இவை போம். சுக்கிலம், கொழுப்புள்ள விரணம், பித்தம் இவை விளையும். உடம்பு இளைக்கும்.

குறிப்பு : வங்கூழ்—வாயு.

நிற்க, கோழிக்கறியை அருந்தியவர்களுக்குப் பித்தநாடி மிக்குத் தோன்றும் என்பதனை,

''தீன்மிக வருமே கோழி தின்றவர் நாடி பித்தம்.''

என்னும் நாடி நூல் அடியால் அறிக.

### உபயோகம்.

கண்ணில் காணும் இரத்தபித்த நோய்க்குச் சேவலின் கொண்டையை அறுத்து, அதனின்று வடியும் இரத்தத்தைக் கண்ணில் துளிக்க இரத்தம் நிற்கும்.

கோழி எச்சத்தை வெற்றிலையில் வைத்துக் கொடுக்கத் தேள் விஷம் நீங்கும்.

எருக்கம்பாலைச் சீலையில் நனைத்து, அதை மயிலிறகின் மீது சுற்றி, அதன் மீது கோழி எச்சத்தைத் தடவி, தேள் கொட்டு வாயில் புகைபடும்படி செய்யக் கடுப்பு நீங்கும்.

கோழியை ஆதியாகக் கொண்டு செய்கின்ற குக்குடாதிச் சூரணத்தினால் அஷ்ட குன்மம் பதினெண் கிரகணி, அதிசாரம் முதலிய வயிற்றைப் பற்றிய பலவகைப் பிணிகள் நீங்கும், செறியா நோய் உள்ளவர்களுக்கும் கொடுக்கலாம்.

## கோழிக்கல்.

இது, கோழியின் களத்திலும் ஈரலிலும் கிடைக்கும். இதனை நீர் விட்டு அரைத்துச் சுண்டை அளவு காலை மாலை இரு வேளைக் கொடுத்து வர, அதிபசி உண்டாம். தேகபுஷ்டியும் ஏற்படும்.

இரசமெழுகு போன்ற மருந்துகள் அருந்துகின்ற காலத்துப் பத்தியத்தை முறிப்பதற்குக் கோழிச்சாற்றைக் கையாள வேண்டுமென்று கூறப்பட்டிருக்கின்றது.

இதனைச் சமைத்து உணவோடு அருந்துவதுண்டு.

கோழிக்கறியின் குணங்களை எலுமிச்சம்பழம் மாற்றி விடுமாகையால், இதனை அருந்துங்காலத்து அதனை நீக்கவும்.

கோழிக்கல் பைக்குள்ளிருக்கும் மஞ்சள் தோலை, உலர்த்திச் சிறிது வறுத்து, இளம்வறுப்பாக வறுத்து சீரகம், சீனக்கற்கண்டு இவை இரண்டையும் சேர்த்து தேவையான அளவு நெய் விட்டு இலேகிய பதத்தில் அரைத்து வைத்துக் கொள்ளவும்.

இதனைச் சுண்டை அளவு காலை மாலை கொடுத்துவர, செறியாமையினால் ஏற்படும் பேதி நீங்கும்.

## கோழிமுட்டை.

இது சிற்றண்டமென்றும் வழங்கப்படும். இதற்கு உள்ளழலாற்றி மலமிளக்கி, போஷணகாரிச் செய்கைகள் உள.

''வாதபித்தஞ் சேர்ப்பிக்கும் வன்றேடம் புண்போக்கு
தாதுவை மெத்த தழைப்பிக்கு—மோது
கபத்தை யடக்குங் கரப்பானுண்டாக்கு
மிபத்தையுறுங் கோழிமுட்டை யெண்.''

(பொ-ன்) கோழிமுட்டை வாததோடம் விரணம் கபப் பிணி இவைகளை நீக்கும்; வாதப்பயித்தியம் சுக்கிலதாது கரப்பான் இவைகளை உண்டாக்கும்.

*முட்டை ஓட்டில் ஒருவிதச் சுண்ணாம்பு இருக்கிறது.

### முட்டை ஓட்டுப் பற்பம்.

இதற்கு நீர்முள்ளிச்சாறு விட்டு ஒரு நாள் அரைத்து மறு நாள் வில்லை செய்துலர்த்தி சில்லிட்டுச் சீலைசெய்து தகுதியான வரட்டியில் புடமிட்டெடுக்கப் பற்பமாம்.

இப்பற்பத்தை வெண்ணெயில் அனுபானித்து, அத்திசுரத்தினால் உண்டான தோடரோகத்திற்குக் கொடுக்க நீங்கும்.

கோழிமுட்டையின் வெள்ளைக்கரு நீரில் கரையும். வேக வைத்தால் கட்டியாகிவிடும். சவ்வீரம், மயில்துத்தம், பால் துத்தம் இவைகளுள் ஒன்றை விடமிக்கும்படி தின்றவர்களுக்கு, முட்டையின் வெள்ளை அம்பிலி கொடுத்தால் முறிந்துவிடும்.

வெள்ளைக்கரு, பதார்த்தங்களின் அழுக்கை எடுக்கவும், தேகத்தில் எரிச்சலைத் தணிக்கவும் உபயோகப்படுகிறது.

குன்றிப்பற்று அரைப்பதற்கும், கண்ணோய்களுக்காக அரைக்கும் சில புறவளையங்களிலும் முட்டைவெண்கரு சேர்கின்றது.

மஞ்சள் கருவை, நோயினருக்குக் கொடுத்தால் தேகபோஷணையைக் கொடுக்கும்.

### அண்டத்தைலம்.

முட்டைகளை அவித்தெடுத்து, உடைத்து, மஞ்சள் கருவை மாத்திரம் ஓர் இருப்புச் சட்டியில் இட்டு அடுப்பேற்றி, எரித்துக் கிண்ட கருகித் தைலம் இறங்கும். இதனை வடித்தெடுத்துப் பத்திரப்படுத்தவும்.

இத்தைலத்தை நாவில் தடவிவர, நாவைப் பற்றிய வாதம் நீங்கும்.

இத்தைலத்தில் குங்குமப்பூ, கோரோசனை முதலியன கலந்து, துளிக் கணக்கில் குழந்தைகளுக்குக் கொடுக்க, மாந்தம், வலிப்பு, நீர்க்கோவை முதலியன நீங்கும்.

---

* The egg shell is Composed of Carbonate of lime Phosphate of lime and tracas of Sulphur and Iron somc organic mattre 1.5 P.C. and salts as the Cnlosides Iodides Sulphates and phosphates of potassium, Calcium and magnesium.

வானமெழுகு அரைப்பதற்கு இத்தைலம் பயன்படுகிறது.

மற்றும், முட்டையைத் தனியாகவும், பாலில் அடித்தும், அரைவேக்காடு அல்லது முழுவேக்காடாக வேகவைத்தும், ஓடு நீக்கிப் பொரியல் முதலியன செய்து மிளகு உப்பு கூட்டியும் அருந்த, சிறந்த போஷணையைக் கொடுக்கும்.

### சிற்றண்ட மெழுகு.

வில்வவேர் பத்து வீசை கொண்டு வந்து நறுக்கி, பின் நிழலில் உலர்த்திப் பாண்டத்திலிட்டு, வாய் மூடிச் சீலை செய்து குழித்தைலம் வாங்கி, தலை அண்டம் (முட்டை) பீங்கானிலிட்டுத் தைலம் நிறைய வார்த்து, நாற்பது நாள் வெய்யிலில் வைத்து, வற்ற வற்ற தைலத்தை வார்த்துவந்தால் பசுமை நிறத்தை யுடைய மெழுகாகும்.

இதனைச் சுண்டக்காய் அளவு தேனில் ஈய, வாதம் சூலை நீங்கும்.

### அண்ட எருக்கன் செயநீர்.

ஒரு பங்கு எருக்கின் பால், $\frac{1}{4}$ பங்கு முட்டை வெண்கரு இரண்டையும் ஒரு புட்டியில் அடைத்து வைத்திருந்து, ஐந்து நாட்கள் கழித்து வீரம் 1 சிட்டிகை சேர்த்து எடுத்துக்கொள்ள, கடுங்காரமுள்ள செயநீராம். இதனைக் காரமுள்ள மருந்துகள் செய்வதற்கு ஆளுவதுண்டு.

### முட்டைச் சோதனை.

சுமார் 12 அவுன்ஸ் (336 மி. லிட்.) நீரில், 1 அவுன்ஸ் (28 மி. லிட்.) உப்பைப் போட்டுக் கலக்கி, அதில் முட்டையைப் போட்டுப் பார்த்தால் முட்டை எவ்வளவுக்கெவ்வளவு மேலே மிதக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு அது நாட்பட்ட முட்டையாகும். ஒரு புது முட்டை கொஞ்சமேனும் மிதக்காமல் கீழே போய்விடும். ஒரு நாளான முட்டையானால், கீழே படியாமல் நீரில் கொஞ்சம் மிதக்கும். மூன்று நாளான முட்டையானால், தண்ணீரின் மேலேயே மிதக்கும்.

முட்டைகளைக் கெடாமல் பாதுகாக்கும் வழிகள் :

(1) சுண்ணாம்பு தாளித்த நீரில் முட்டைகளை அமிழ்த்தி வைத்தல்.

(2) ஒரு பெட்டியில் கொஞ்சம் உப்பைப் பரப்பி, அதன்மேல் முட்டைகளைப் பரப்பி, முட்டைகளின்மேல் உப்பை போட்டு மூடி, இப்படியே முட்டையும் உப்புமாய்ப் பெட்டி முழுவதும்

நிரப்பிவிட வேண்டும். பெட்டியை மூடியினால் மூடி, ஆணி இட்டு முடுக்கிவிட வேண்டும். தேவையான போது மூடியைத் திறந்து மேலே இருக்கும் முட்டைகளை எடுத்துக்கொள்ளலாம். பெட்டிக்கு உபயோகிக்கும் உப்பு ஈரமாய் இருக்கக்கூடாது. பெட்டியில் உள்ள உப்பு, முட்டையில் உள்ள ஈரத்தை இழுத்துக் கொள்ளுமாகையினால் முட்டையிலுள்ள கரு சிறிது ஆட்டங் கொடுக்கும். இதனால், இதை விலைக்கு வாங்குகிறவர்கள், முட்டை கெடுதலடைந்திருக்கிறதென்று வாங்க விரும்ப மாட்டார்கள். மேற்சொன்ன முறைப்படி பக்குவம் செய்த முட்டைகளை வீட்டு உபயோகத்திற்கென நீண்ட நாள் வைத்திருக்கலாம்.

(3) முட்டைக்கு ஓடு இருப்பினும், அந்த ஓட்டில் சிறு துவாரங்களிருப்பதால், அவைகளின் வழியே காற்றுப் போய்க் கொண்டும் வந்துகொண்டுமிருக்கும். அதனாற்றான், முட்டைகள் கெட்டுப் போகின்றன. ஆகையால் முட்டைகளின் மேல் பன்றிக் கொழுப்பு அல்லது வாசிலேன் பூசி, ஒரு முட்டையின்மேல் மற்றொரு முட்டை படாதவாறு வைத்திருந்தால், முட்டை பல நாட்கள் வரையும் கெடாது பக்குவமாக இருக்கும்.

நிற்க, கோழி வகையில் கருங்கோழி, கானாங்கோழி, வான் கோழி, சம்பங்கோழி என்ற நான்கு வகைகள் உண்டு. இவைகள் பெரும்பாலும் உணவிற்காகவே பயன்படுகின்றன. இவைகளின் கறிக்குணத்தைக் கீழ்ச் செய்யுட்களால் அறியலாம்.

### கருங்கோழிக் கறியின் குணம்.

"குட்டங் கடிகிருமி கோரவா தக்கூட்ட
மட்டிடாச் சூலையறு மாதரசே—துட்ட
கிரந்தியொடு புண்வலிபோங் கேளுடலு ரக்கு
மருந்துகருங் கோழியூன் வை."

(பொ-ள்) மருந்தாகிய கருங்கோழிக்குக் குஷ்டம், கானாக்கடி புழு, மகாவாதங்கள், சூலை, சிறு சிரங்கு, விரணம் இவை போம். உடல் வலுக்கும்.

கொடிவேலி வேர், ஓமம் உழக்கு இவைகளை அரைத்துக் கோழியின் குடலை நீக்கி முன் மருந்தை வைத்துத் தைத்துப் பாண்டத்தில் நீர் விட்டு அதில் கோழியை அழுத்தி, ஒரு விறகினால் எரித்து, வெந்தபின்பு தின்றால் மேகம் உள்மூலம், புறமூலம் நீங்கும் என்ப.

### கானாங்கோழிக் கறிக் குணம்.

"உத்தமமா நோயனைத்து மோடு மிருமலறும்
பத்திய மாங்கரப்பான் பாறுமே—முத்தவொளி
தானுங் கனிமொழியே சார்ந்த மறுவகலுங்
கானாங்கோழி கறியைக்காண்."

(பொ-ரை) நறிய கானுங்கோழிக் கறியால், வாத கப நோயி னங்கள், காசம், கரப்பான், வியங்கலாஞ்சனம் இவை போம். இது பத்தியத்திற்கு உதவும்.

வான்கோழிக் கறியின் குணம்.

''போகமிகு மெய்யிற் புளகிதம்வான கோழிதனக்
காகமதி லைய மதிகமுறுந்—தேகமெலாந்
தானே கரப்பானுஞ் சாற்ற வுரிசையுமாந்
தேனே யிதனைத் தெரி.''

(பொ-ரை) உரிசையையுடைய வான்கோழிக் கறிக்கு விந்துவும் மகிழ்ச்சியும் சிலேஷ்மபந்தமும் கரப்பானும் உண்டாகும் என்ப.

சம்பங் கோழிக் கறியின் குணம்.

''வரட்சி சொறிசிரங்கு வன்கரப்பா னென்னுந்
திரட்சி யொடுபலநோய் தீரும்—பொருட்சிகரி
கும்பங்க டாக்களிற்றின் கோடெனச்சொற் பூண்முலையாய்
சம்பங்கோ ழிக்கறிக்குத் தான்.''

(பொ-ரை) சம்பங்கோழிக் கறிக்கு வறட்சி, சொறி, சிரங்கு, கரப்பான் முதலிய பற்பல ரோகங்களும் நீங்கும் என்ப.

கருங்கோழிச் சூரணம்.

''முற்றற் கோழி தான்பிடித்து முதுகைப் பிளந்து கடுகுப்பு
ஒத்த காயம் எண்கழஞ்சு முடிக்கு மிளகு வெள்ளுள்ளி
பற்றிப் பிடித்ததற் குள்ளிட்டுப் பகரும் பானையின் மேல் வைத்துச்
சுற்றிச் கூட்டிப் பானைக்குள் சொல்லு மருந்து நீர்கேளும்
சங்கம் வேர்பிரப் பங்கிழங்கும் சாற்றும் வெள்ளறுகு செருப்படையும்
புங்கம் வேரோடு கடம்பம்வேர் புனலிக் கொடியும் இலைக் கள்ளி
லிங்கம் வேருடன் கொடிக்கள்ளி இயற்றுஞ் சதுரக் கள்ளி யுடன்
அங்கஞ் சொரியும் திரிகள்ளி ஆன செங்கத் தாரியுடன்
பங்கம் பாலை சாரணையும் பகருங் கால்தூக் கதுகூட்டி
நறுக்கிப் பெரும் பானையிலிட்டு நான்கு வெள்ளந் தண்ணீர் விட்டு
எரித்து நான்கு சாமந்தான் இயல்பாஞ் சீலை மண்செய்து
எரித்த பின்பு தானெடுத்தே எழுந்த கதிரோன் முன்பரப்பி
நறுக்கி யிடித்து வடித்தனை நண்ணி வெருகடி தேன்றனிலே
கொள்ளே யின்னு மநுபானம் கூட்டு மிஞ்சிச் சாறு தனில்

நள்ளுந் திரிகடு கியாழத்தில் நற்கொடி வேலிக் குடிநீரில்
வெள்ளைப் பூண்டு தயிலத்தில் விரும்பி யிருபது நாள்கொள்ள
விள்ளு நோயில் வகைகேளாய் விக்கல் குட்டம் *ஈரிரண்டும்
தள்ளுஞ் சூலை பதினைந்தும் தானே வாயு தொகுபுண்கள்
பிரமிய மூலம் பாலக்ஷயம் பேரா மூல முதலனைத்தும்
வண்டு கடியு மிவைதீரும் வகையாய்ப் பத்ய மிவையறிந்து
சால வுப்பில் சோறுண்டு தயங்கும் பத்து நாள்சென்று
பால்கள் நெய்கள் அவைபருகின் பருத்த நோய்கள் பறந்
திடுமே.''

---

## சங்கு.

## TURBINELLA RAPA OR XANCHUSPYRUM OR GASTROPODA, CONCH CONCH SHELL.

இது, நந்து, சுத்தி, நாகு, வளை, கம்பு, கோடு, வாரணம், வெள்ளை, வண்டு, இடம்புரி, சங்கம், தேவதத்தம் போன்ற வேறு பெயர்களினாலும் வழங்கப்படுகின்றது. இஃது அதிகமாய் இந்துமகா சமுத்திரத்தின் கரையோரங்களில் கிடைக்கின்றது. இப்பி ஆயிரஞ் சூழ்ந்தது இடம்புரி என்றும், இடம்புரிச்சங் காயிரஞ் சூழ்ந்தது வலம்புரி என்றும், வலம்புரி ஆயிரஞ் சூழ்ந்தது சலஞ்சலம் (பணிலம்) என்றும், சலஞ்சலங்கள் ஆயிரஞ் சூழ்ந்தது பாஞ்சசன்னியம் என்றும் கூறுவர். சங்கில் பல வகைகளிருப்பினும், மருத்துவத்திற்குப் பயன்படுவது ஊதுசங்கொன்றே என்பதை அறிதல் வேண்டும்.

### செய்கையும் குணமும்.

சங்கிற்கு உடல் உரமாக்கி, துயரடக்கி, அகட்டுவாயுவகற்றி, பசித்தீத்தூண்டி, துவர்ப்பி, வெப்பகற்றி, கோழை அகற்றி முதலிய செய்கைகள் உள. இதன் பொதுக் குணத்தைக் கீழ்ச் செய்யுளால் உணரலாம்.

> ''கசிவா மிரத்த பித்தங் கண்ணோய்க ளேகும்
> பசியாறும் வாதம் பறக்கு—மிசிவுடனே
> தங்கு முளைவிரணந் தானகலு மேவெள்ளைச்
> சங்கமது வுண்டாயிற்றான்.''

(பொ-ரை) வெண்சங்கினால் இரத்தபித்தம், கண்ணோய்கள், வாத மிகுதி, இசிவு, முளைக்கட்டி முதலியன நீங்கும். பசி உண்டாம் என்க.

---

* ஈரிரண்டு—வெண்குட்டம், கருங்குட்டம்.

## சுத்தி.

ஒரு பலம் (35 கிராம்) சங்கிற்கு ஐந்து பலம் (1.75 கிராம்) இலைக் கள்ளிச் சாற்றைக் காலையில் விட்டு மாலை வரை வெய்யி லில் உலர்த்தி, மறுநாள் காலையிலும் புதிதாக மேற்படி சாற்றை விட்டு வெய்யிலில் வைக்கவும். இங்ஙனம் மேலும் மூன்று முறை செய்து நீர்விட்டு கழுவியெடுக்கச் சுத்தியாம்.

### (வேறு.)

சங்கைக் கற்சுண்ணாம்பில் புதைத்துத் தாளித்துக் கழுவி யெடுக்கச் சுத்தியாம்.

### (வேறு.)

கற்சுண்ணாம்பும் உவர்மண்ணும் சமவெடை கூட்டி, எண் மடங்கு நீர் சேர்த்துத் தெளிவெடுத்து, அதில் சங்கைப் போட்டு எரித்துக் கழுவி எடுக்கச் சுத்தியாம்.

## பற்பம்.

ஒரு பலம் (35 கிராம்) சுத்தி செய்த சங்கை எடுத்துக் கீழுள்ள பட்டியில் குறித்த முறைப்படி அரைத்து உலர்த்திப் புடமிடவும்.

| சாற்றின் பெயர். | அளவு பலம். | அரைக்கும் நாள். | வில்லை உலர்த்தும் நாள். | கவசம் உலர்த்தும் நாள். | புடம் வரட்டி. |
|---|---|---|---|---|---|
| முகின்பாளை பூச்சாறு | 6 | 6 | 5 | 1 | 36 |
| குருக்கத்திப்பூசாறு | 5 | 5 | 4 | 1 | 28 |
| மாமரச்சமூலச்சர்று | 5 | 5 | 4 | 1 | 25 |
| குழிநவலிலசமூலச்சாறு | 4 | 4 | 3 | 1 | 20 |
| அத்திசமூலச்சாறு | 4 | 4 | 3 | 1 | 18 |
| புன்னைசமூலச்சாறு | 4 | 4 | 3 | 1 | 16 |
| ஞ்சிகொதிநீர் | 3 | 8 | 2 | 1 | 16 |

## பற்ப மகிமை.

இச்சங்குபற்பம் பெண்களுக்கு மாதவிடாய் வருங்காலத்துத் துன்பத்தைப் பண்ணுகின்ற சூதக சன்னிநோயைப் போக்கி, மன்மதனுக்கு நிகரான அழகைக் கொடுத்து, மலையைப்போல் அதிக பலத்தைக் கொடுக்கு மென்ப.

"—ரூத

கசனி கராந்திரிவல்காது சங்கத்துளங்
கசனி கராத்திரிய காண்."

என்ற அடிகளால் அறிக.

**பற்பத்தின் அளவு.**

அவரைக் கொட்டையில் நான்கில் ஒரு கூறு உத்தமம் என்றும், இரண்டு கூறு மத்திமம் என்றும், மூன்று கூறு அதமம் என்றும், முழுக்கூறு அதமாதமமாகுமென்றும் கூறப்பட்டுள்ளது. இதற்கு மேற்பட்ட அளவு மிகுதியாம். அளவு அதிகப்படினும் குறையினும் பொல்லாங்குகள் நேரிடும் என்பதனை,

"வாகான வுரைப்படியே யவிழ்த நன்மை
வருமளவைப் பிரமாண வகைமை தப்பிப்
போகாமற் படிபுரிந்தா லதுவே நன்மை
புரியாட்டா லதுதானே பொல்லா தாகி
யாகாத வாதபித்த சேட்ப மூன்று
மனுபோக மிகுதியென்றே யாகுமேலே
வேகாத நெருப்பையொத்த மெய்யைச் சுட்டு
விழலாக்கிப் போகுமடா மருந்தைத் தானே."

என்று போகர் ஆயிரத்தில் புகன்றுள்ளதால் அறிக.

**சங்கு பற்பத்தினால் தீரும் நோய்களும் துணை மருந்துகளும்.**

| | |
|---|---|
| தேன் .. .. .. | வாத நோய். |
| வெந்நீர் .. .. .. | நடுக்கம். |
| குளிர்ந்த நீர் .. .. | பித்தம். |
| ஆளிவிரை ரசம் .. | கப நோய். |
| கடுகுச்சமூலச்சாறு .. .. | சுரம். |
| நெற்கதிர் பசுங்காய்ச்சாறு | மூர்ச்சை. |
| பசுவின் பால் .. .. | தும்மல் (சலம மீறி வரப்பட்ட தோடப்பிணி). |
| பசுவின் தயிர் .. .. | விக்கல். |
| மோர் .. .. .. | பித்தவாயு, பந்தத்தால் வர பட்ட சத்திவாதப்பகட்டல். |
| வெள்ளைச்சர்க்கரை .. | குன்மம். |
| பனவெல்லம் .. .. .. | நளிருடன் கூடிய சீதவெப்பம். |
| பழங்கள் .. .. .. | படலிகை வாயு முதலிய கண்ணோய்கள். |
| நெய் .. .. .. | கழலை (புரைகுழல்). |
| அறுகு சமூலச்சாறு .. | வாதசுரம். |
| சோற்றுக்கொதி தண்ணீர் | பித்தசுரம். |
| கடம்பமர சமூலச்சாறு | கபசுரம். |

(வேறு.)

சங்குப் பற்பத்தை நந்தியாவர்த்தத்தின் சமூலச்சாற்றில் அனுபானித்துக் கொடுக்க, வாதத்தைப் பற்றி வந்த வாத சந்நிவல்லை, குன்மம், பெருவயிறு, பாண்டு, மேகவாதம், பட்ச வாதம், தனுர்வாதம், சூதிகாவாயு, மூலம், பிரமியம், காசம், க்ஷயம், முதலிய பெரும்பிணிகளும், நொச்சிச் சமூலச் சாற்றில் கொடுக்க, கபத்தைப்பற்றி வாரா நின்ற கபசந்நி, சுரம், நளிரானவப்பிணி, விலாப்புர சந்நிவாதப் பிணி, பீநசம், மார்வலி, மகா சலோதரம், வல்லை முதலிய பிணிகளும், தேனில் கொடுக்க, பித்தசந்நி, பித்தசோகை, பித்த வாத மகோதரப் பிணி, பித்த க்ஷயம், பெரும்பாடு, பித்த பாண்டு, மூலம், வல்லை, குன்மம், வாயில் நீர் ஊறல், பிரமை, காரகம், முதலிய பிணிகளும் நீங்கும் என்க.

(வேறு.)

சங்க சமூலத்தைலம், புங்கமரத் தைலம், தும்பைத் தைலம், துளசித் தைலம், தேங்காய்த் தைலம் இவற்றைத் தனித்தனியே எடுத்து, முப்பத்திரண்டு பங்குக்கு, சங்குப் பற்பம் ஒரு பங்கு சேர்த்துக் கூந்தலில் தடவித் தேய்த்து ஊறவைத்து முழுகினால், முறையே கூந்தலிலுள்ள நரை, செம்பட்டை நிறம், முனைவெடித் தல், நடுவில் முறிதல், சுருண்டிருத்தல் இவைகள் நீங்கும், இவை களுக்கு, முறையை வேலம்பாசி, எலுமிச்சபழரசம், முன்னைக்கீரை, நாவல் சமூலச்சாறு, நெல்லிச் சமூலச்சாறு இவற்றை அரைப்பாகப் பயன்படுத்துக.

ஒவ்வொரு அரைப்பிலும் கால்பணவெடை (122 மி. கிரா.) கஸ்தூரி கலந்து கொள்ள வேண்டும். நீராட வெந்நீரை உபயோகித்தல் வேண்டும். உதயத்திற்கு முன் தைலத்தைப் பூசி அஸ்தமனதிற்குமுன் நீராடல் வேண்டும். இங்ஙனம் ஐந்து நாள் செய்து, ஐந்து நாள் விட்டு, மறுபடியும் ஐந்து நாள் இவ் விதம் ஐந்து முறை செய்தல் வேண்டும்.

பற்பம் (வேறு).

கற்சுண்ணாம்பில் சுத்திசெய்த சங்கை, உத்தாமணி இலை விழுதில் புதைத்துக் கனபுடமிடப் பற்பமாம்.

**அளவு :** இரண்டு குன்றி (260 மி. கிரா.) வரை.

**துணை மருந்து :** நெய்.

**தீரும் நோய்கள் :** இருமல் மூலம், வயிற்றுப்பிணி, அண்ணாக்குத் தூறு (Enlarged tonsils) மார்பு வலி, வாயு, குன்மம்.

(வேறு.)

சங்கை நீரில் கழுவித்துடைத்து, சிறுதுண்டுகளாக உடைத்துக் கீழாநெல்லிச் சாற்றில் மூன்று நாள் ஊறவைத்துப் பின்பு ஒரு குடுவையில் போட்டு, மேற்படி சாற்றைவிட்டுச் சீல்லிட்டுச் சீலைசெய்து காய வைத்து, ஐம்பது எருவில் புடம்போடப் பற்பமாம்.

அளவு : ½ (244 மி. கிர்ரா.) முதல் 1 பணவெடை (488 மி. கிரா.) வரை இருவேளை கொடுக்கவும்.

துணை மருந்து : வெண்மணய் அல்லது எலுமிச்சம் பழச்சாறு.

தீரும் நோய்கள் : மாரடைப்பு, மார்பு எரிச்சல், நெஞ்சு வலி, நீர்சுருக்கு வெள்ளை முதலியன.

(வேறு.)

"வெண்பணில பற்பமெவ ருண்பரவ ருக்குடல மென்பொனிற
மிக்கு மதுசெய்
பணபினையு ரைக்கிலொரு கண்புகையி ருட்டலறு மிஞ்சிய பயித்ய
மறுமெய்
விண்பதும் பத்ரியரை சங்கின்மிசை யப்பதனை விஞ்சுரவி
வைத்தொ ருபகல்
எஞ்சுபுட மிட்டெடடதை யுண்கிருத முத்தினள வினபமிகு
பதயம் லகுவே."

"சொன்னவிப் பணில பற்பஞ் சுராங்குச மெவ்வா றென்னில்
வன்னிபோற் றரிக்குங் காய்ச்சல் வாங்கிடாப் பழைய தாகிச்
சந்நிதொந் தித்துச் சேனைத்தலைவனைத் தேடும் போது
தின்னுமா லலங்கற் சாற்றிற் சிங்கமா தங்க மாமே."

(பொ-ரை) சுத்தி செயத சங்கிற்குத் தாமரை இலை விழுதைப் பூசி ஒரு நாள் வெய்யிலில் உலர்த்திக் கனபுடமிட்டெடுக்கப் பற்பமாம்.

அளவு : முத்தினளவு

துணை மருந்து : நெய்.

தீரும் நோய்கள் : கண் புகைச்சல், கண் இருள், பித்தம் முதலியன உடலுக்கும் நிறமுண்டாகும்.

இப் பற்பத்தைத் துளசிச் சாற்றில் கொடுக்க, கபத்தைத் தேடிக்கொண்டிருக்கின்ற சந்நி, தொந்தித்த நாட்பட்ட சுரம் ஆகியன நீங்கும் என்பதாம்.

நிற்க, நத்தையை நசுக்கிச் சங்கிற்குள் வைத்து, மேற் கூறியவாறே புடமிட்டெடுத்த பற்பத்தை க்ஷயத்திற்குக் கொடுத் தல் பழக்கத்தில் இருக்கின்றது. சங்கினால் க்ஷயம் முதலிய கப நோய்கள் நீங்குமென்பதை,

''ஆகுமிச் சங்க பற்பத்தாலே கயமா னதெலா மறுமேன் மேல்
போகு மிருமல் சுவாசமொடு ஆகு பொரும லுபத்திரவ
தாக முருமல் மிகுபத் யமாகத் துறைநீ கற்றிடு
சாகக் கறிபா கத்தது..........வீர.''

என்ற தேரன் தருச் செய்யுளினால் உணர்க.

## செந்தூரம்.

சங்கை, வெள்ளைச்சாறு வேளைச் சாறு, கற்றாழைச்சாறு இரண்டையும் கொண்டு தனித்தனியாய் அரைத்து, முறைப்படி புடமிட்டெடுக்கச் செந்தூரமாம். இதனை,

''நத்தை சோதணி மாக்கவே நவின்ற மேற்படி யொன்றிலே
சத்தி குமரி யிரண்டிலே தருண வரன்முறை தேட்டியே
வித்தை யருமை யறிந்தேசெய் வேத வழியில் நூன்மை யாய்
மித்ர பேத மில்லாமல் வேட்கை யறிந்து செய்வீரே.''

என்று புகன்றிருப்பதால் அறிக.

### செந்தூரத்தினால் தீரும் நோய்களும் துணை மருந்துகளும்.

| | | |
|---|---|---|
| வெள்ளைச்சாறு வேளைச்சாறு | .. | உட்டண மேகம். |
| சந்தனக் குழம்பு | .. | வாதம். |
| உள்ளிரசம் .. .. | .. | சுவேதசந்நி பித்த நோய். |
| சாம்பிராணியிலைச்சாறு | .. | வீக்கபாண்டு. |
| எலுமிச்சம் பழரசம் | .. | வெண்குட்டம். |
| வெல்லம் .. .. | .. | குன்ம மது மேகம். |
| நாவல் பழரசம் .. | .. | ரூபவிகாரத் தேமல் மேகம். |
| இலவங்கப்பட்டைச்சாறு | .. | சந்நிதோடக் குளிர்மை. |

## வெள்ளை மாத்திரை.

பவழம், பால்துத்தம், சீனகாரம், பொரித்த துருசு இவைகள் வகைக்கு ஒரு வராகனெடையும் (4-3 கிராம்) சங்கு வராக னெடை இருபத்து நான்கும் (1008 கிராம்) எடுத்து நீர்விட்டுக் கழுவி, உலர்ந்தபின் தூள் செய்து கல்வத்திலிட்டுத்

தாய்ப்பால் அரைக் கால்படி (168 மி. லிட்.) விட்டரைத்து, அதன்பின் இளநீர் கால்படி (336 மி. லிட்.) விட்டரைத்து, மெழுகுப் பதத்தில் மாத்திரைகளாய்த் திரட்டி உலர்த்திக் கொள்ளவும்.

துணை மருந்துகள் : சுத்தநீர் அல்லது முலைப்பால்.

தீரும் நோய்கள் : இரத்தப்படலம் முதலிய கண்ணோய்கள்.

குறிப்பு : இம்மாத்திரையை ஓர் ஆண்டு கழித்து உபயோகித்தல் வேண்டும்.

மற்றும் சங்கை, முலைப்பாலில் தனியாகவாவது அல்லது கரிவேப்பிலை சேர்த்தாவது இழைத்து முகப்பரு மோகப்பரு முதலியவைகளுக்கும் கண்கட்டிக்கும் எழுதலாம்.

---

## சாணம்.

## DUNG.

பசு, எருமை, வெள்ளாடு, கழுதை இவைகளின் சாணம் மருந்துகள் செய்வதற்குப் பயன்படுகின்றன. இவைகளின் குணத்தைக் கீழ்க்காணும் செய்யுட்களால் உணர்க.

### பசுச் சாணத்தின் குணம்.

''ஆவினது சாண மடிபடுவீக் கம்முதிரந்
தாவி வருகிருமி சார்ந்தகப—மேவுசுரந்
தங்குந்தா கம்போக்குஞ் சாற்றின்மெய்ச் சுத்தியப்பால்
தெங்கின்பா லுக்கொக்குந் தேர்.''

(பொ-ரை) பசுஞ்சாணம் கல் முதலியவைகளால் அடிப்பட்ட வீக்கம், ஒழுகுகின்ற உதிரம், கிருமிரோகம், கபஞ்சேர்ந்த காய்ச்சல், மிகுந்த தாகம் இவைகளை நீக்கும். தேக சுத்தி உண்டாகும். இது தெங்கின்பாலை ஒக்குமென்க.

### எருமைச் சாணத்தின் குணம்.

''வயிற்றுப் பிசமிரத்த வாந்திகா மாலை
நிய்ம்பெரும் பாடுபுண் ணீங்கும்—வியத்த
க்ருமைச்சா ரங்கவிழிக் காரிகையே நாளும்
யெருமைச்சா ணத்தி னியல்பு.''

(பொ-ரை) எருமைச் சாணத்தால் வயிற்றுப்பொருமல், இரத்த வாந்தி, காமாலை, பெரும்பாடு, புண் இவைகள் நீங்கும்.

### வெள்ளாட்டுப் புழுக்கையின் குணம்.

''உருக்கைநீ றுக்கு முதரநோய் போக்கும்
திருக்கான வாதநோய் நீக்கு—நெருக்கான
தோட்டுக் குழையணங்கே தொல்புவியோர் சொல்லிடுவெள்
ளாட்டுப் புழுக்கை யது.''

(பொ-ரை) வெள்ளாட்டுப் புழுக்கை உருக்கை அல்லது எஃகு என்னும் உலோகத்தைப் பற்பிக்கும். மகோதரத்தையும் வாதநோயையும் நீக்கும்.

பயன்.

பசுவின் சாணப்பால் நேர்வாளம், சேங்கொட்டை இவைகளைச் சுத்தி செய்யப் பயன்படுத்தப்படுகின்றது.

பசுவின் சாணம் கவசம் செய்வதற்கும், வரட்டி புடமிடவும் பயன்படுகின்றன.

பசுவின் சாணத்தை நீர்விட்டுக் கரைத்துக் கொதிக்கவைத்து, பொறுக்கக்கூடிய. சூட்டில் வீக்கத்திற்குமேல் பற்றிட விரைவில் அவ்வீக்கம் கரையும்.

பசுவின் சாணப்பாலைப் பாடாணங்களுக்கு முறிப்பாய்ப் பயன் படுத்துகின்றார்கள், கன்று ஈனுத இளம்பசுவின் சாணத்தைத் துணியிலிட்டுப் பாலெடுத்து உள்ளுக்குக் கொடுக்க, தேள் கடியினால் உண்டாம் விடம் இறங்கும்.

பசுவின் பால், தயிர், நெய், நீர், சாணம் இவ்வைந்தின் கூட்டிற்கு பஞ்சகௌவியம் என்று பெயர், இதனை மெய் சுத்திக்கு சில வேளைகளில் அருந்த ஆன்றோர் கூறியிருக்கின்றனர்.

செம்பு பற்பப் புடத்திற்கு ஆட்டெரு பயன்படும்.

பறங்கிப்பட்டைப் பதக்கம் செய்வதற்கு வேசரியின் இலத்தி சாறு பயன்படுகின்றது. இன்னும் இலத்தியின் பால் ஊமத்தை யாற்றித் தைலத்தில் சேருகின்றது.

## சிறுநீர்.

## URINE.

வேறு பெயர் : நீர், அமுரி, மூத்திரம், இதனை,

''..................நீர் சிறு நீரமுரி
மூத்திரமென் றேபெயரோர் மூன்று.''

என்ற அடிகளால் உணர்க.

---

Of these cow's urine which contains ammonia in a concentrated form, is much used both internally and externally.

பல மிருகங்களின் சிறுநீர் மருந்துகளில் சேருகின்றது. இவைகளின் குணங்கள் பதார்த்தகுண சிந்தாமணியில் விளக்க மாய்க் கூறப்பட்டிருக்கின்றன இவைகளுள் பசுவின் நீர் உள்ளுக்கும் வெளிக்கும் பயன்படுத்தப்படுகின்றது. இதற்குச் சிறுநீர் பெருக்கிச் செய்கையும் மலமிளக்கிச் செய்கையும் உள.

மூத்திரங்களின் வகை, அவைகளின் குணம் முதலியவற்றைக் கீழ்க் காணும் செய்யுட்களால் அறியலாம்.

**மூத்திர வகை.**

**சிறுநீரின் குணம்.**

''காணுக் கடிபோங் கதித்தெழுநத வீக்கமது
காணுது காயசித்தி கைக்குளநல்—பூணே
பதித்தகொங்கை மாதே பகர்மாந் தருக்கு
ளுதித்தசிறு நீருக்கென்றோர்.''

இதுவுமது.

''அங்கியுவ ருறைசிறுநீர் வாசம் போக்கு
மதைப்பருகி லிருமலிரைப் பரத்த நோயும்
பொங்கிவரு மேகவிகா ரமுடன் கிரந்திப்
புண்களும்போ மதைநசியம் புரியிற் சூடுந்
தங்கியதோ ரபஸ்மாரஞ் சந்நி யாசஞ்
சருவவிடம் விடசுரம் தவறுண் டோடும்
இதனைத் தொட்டலம்பிற் கண்மு கங்கா
திவ்விடத்து ளெழும்விரண மிரியுங் காணே.

(பொ-ரை) மாந்தர்களின் சிறுநீரினுல் காணுக்கடி விஷமும், சோபையும், வாததோஷமும் தீரும். அதை முறைப்படிப் பருகில் இருமல், சுவாசம், அசிர்க்கரம், மேகமூத்திரம், கிரந்தி விரணம் ஆகியவைகள் போம். நசியஞ் செய்தால் சுரம், அபஸ்மாரம், சந்நியாசம், சர்வ விஷம், விஷசுரம் ஆகியவைகள் நீங்கும். அந்த நீராற் கழுவினுல் விழி, முகம், செவி இவ் விடங்களில் பிறக்கின்ற கட்டிகள் விலகும். அன்றியும் காய சித்திக்கும் உதவு மென்க.

**பசு மூத்திரக் குணம்.**

''விடபாண்டு சோபைபல வீக்கஞ் சகல
விடமுதிர மாலையென மெத்தப்—புடவிதனிற்
பேசலக்க ணேடுதந்தப் பீடை யகன்றிடுமே
கோசலத்தா லாரணங்கே கூறு.''

(பொ-ரை) கோசலத்தால் விஷப்பாண்டு, சோபை, பற்பல விக்கம் சகல விஷம், அசிர்க்கு, காமாலே, பல்நோய் முதலிய பிணிகள் போம் என்க.

எருமை மூத்திரக் குணம்.

உதரநோய் பாண்டோ டுரத்தகா மாலே
விதிர வருசோபை மேகம்—முதிர்க்கிருமி
யாசியநோ யேகு மடரெருமை மூத்திரத்தால்
மீதிலன் லுண்டாகுமே.''

(பொ-ரை) எருமை மூத்திரத்தால் பெருவயிறு, பாண்டு காமாலே, பிரமேகம், சோபை, கிருமி முதலிய நோய்கள் போம். இதனுல் சூடு முண்டாகும்.

வெள்ளாட்டு மூத்திரக் குணம்.

''சோபையொடு பாண்டுவைத்து ரத்தும் பலவீக்க
தாபமகற் றும்முதிரத் தைப்போக்கும்— கோபமுடன்
உள்ளாட்டுத் துர்ச்சதையோ டோங்குதர நோயகற்றும்
வெள்ளாட்டு மூத்திரம்வி ரைந்து.''

(பொ-ரை) வெள்ளாட்டு மூத்திரம் சோபை, பாண்டு, பற்பல வீக்கத்தினெரிச்சல், இரத்தப்போக்கு, துர்மாமிசம், மகோதரம் இவைகளே நீக்கும்.

யானே மூத்திரக் குணம்.

''அதிதூலஞ் சோபை யனிலங் கிருமி
யெதி விடங்க ருங்கரப்பா னேகும்—அதிராத
யானே யெனப்பலமு மங்கபுஷ்டி யுங்கொடுக்கும்
யானேவிடு மூத்திரமென் றோது.''

(பொ-ரை) யானே மூத்திரத்தால் அதி தூல நோய், சோபை, வாயுகிருமி, விஷம், கருங்கரப்பான் இவைகள் போம், யானேயைப் போன்று வன்மையும் சரீரபுஷ்டியும் உண்டாமென்க.

குதிரை மூத்திரக் குணம்.

''பாதவன் மீகம் படர்தடிப்பு நீள்கிருமி
வாத மொடுகபமு மாறுங்கா—ஞ்ேவரிய
பொற்குவட்டை யொத்தமுலேப் பூவையரே சூடுடைய
நற்குதிரை மூத்திரத்தி ஞல்.''

(பொ-ரை) சூடுள்ள குதிரை மூத்திரத்தால் பாதப்புற்று, கண்டு கண்டாகத் தடித்தல், கிருமிரோகம், வாதநோய், கப தோஷம் இவைகள் போம்.

## ஒட்டை மூத்திரக் குணம்.

''மேலேயூ ருந்தடிப்பு விசி யெழுஞ்சந்நி
சூலை யுதரவர்த்தந் தொடர்குமைஞ்—சீலநனே
மண்டலகுஷ் டேகும் வருமொட்டை மூத்திரத்தா
லுண்ட னலமாதே யுரை.''

(பொ-ரை) வெப்பத்தையுடைய ஒட்டை மூத்திரத்தினால் சரீரத்திலோடிப் புடைக்கின்ற தடிப்பு, சந்நிபாதம், சூலை, பிடிப்பு, உதரவர்த்தவாதம், வயிற்று வலி, மண்டலகுஷ்டம் இவை நீங்குமென்க.

## கழுதை மூத்திரக் குணம்.

''வேசரிநீ ரால்வெப்பம் வீரியநஷ் டங்குஷ்டங்
காச மிரைப்புவிஷங் காற்கிருமி—வீசிடுபுண்
மேகபஸ் மாரம் வெடியச் சரங்கிரந்தி
மோகுமின்னுஞ் சேய்ப்பிணியும் போம்.''

(பொ-ரை) கழுதை மூத்திரத்தால் உஷ்ணம், தாது நஷ்டம், அவுதம்பரகுஷ்டம், காசம், இரைப்பு, சில்விஷம், கால் களிலுள்ள கிருமி விரணம், தந்தி மேகம், அபஸ்மாரம், ஜிக் வாகண்டக ரோகம், கிரந்தி, பாலரோகங்கள் இவை போம். (வேசரி—கழுதை.)

## பசு நீரின் உபயோகம்.

பசுவின் நீரை வடிகட்டி ஒன்று முதல் இரண்டு அவுன்ஸ் வரை கொடுத்துவர, அகுவை, மகோதரம், நீர்க்கட்டு, மலக்கட்டு பெருநோய், தோல் சம்பந்தப்பட்ட பிணிகள் நீங்கும்.

எட்டு அவுன்ஸ் பசுவின் நீரில், ஒரு கடுக்காய்த் தோலிட்டு ஊறவைத்துக் கலந்து வடிகட்டி, ஓர் அவுன்ஸ் நீரைக் கொடுக்க, அகுவை, மகோதரத்தில் உண்டாம் மலசலக் கட்டு இவற்றை நீக்கிக் குணம் தரும்.

இருவி, நரபி இவை போன்றவைகளைத் தனித்தனிப் பசுவின் மூத்திரத்தில் மூன்று நாள் ஊறவைத்தெடுக்கச் சுத்தியாம்.

அயம், உருக்கு, மண்டூரம் இவைகளைத் தனித்தனியாகக் கொல்லன் உலையிலிட்டுக் காய்ச்சி பன்முறை பசுவின் நீரில் தோய்த்தெடுக்கச் சுத்தியாகும்.

வெள்ளாட்டு மூத்திரத்தை வெதுப்பி வடிகட்டி வேளைக்கு ஒன்று முதல் ஒன்றரை அவுன்ஸ் வீதம் சடாமாஞ்சில் அல்லது தசமூலக்குடிநீருடன் கொடுக்கக் காக்கைவலி குணமாம். இதற்குச் சிறுநீர் பெருக்கிச் செய்கையும் மலமிளக்கிச் செய்கையும் உள.

Ancient India Physicians advocated that consumptive patients should sleep with goats and inbale the ammonia given off from their urinary excretions (Dr. C. Muthu, M.D.).

குதிரை மூத்திரம் நவமணி சுத்திக்குப் பயன்படுகின்றது.

கழுதை மூத்திரம் தாளகத்தைச் சுத்தி செய்யப் பயன்படுகின்றது.

சிறுநீர், சில மருந்துகளுக்கு அனுபானமாயக் கூறப்பட்டுள்ளது. சிறுநீரைக் காய்ச்சி எடுக்கின்ற உப்புக்கு அமுரி உப்பு என்பது பெயர். இவ்வுப்பு சில மருந்துகளில் அபூர்வமாய்ச் சேர்க்கப்படுகின்றது.

---

## சுறா.

## SQUALUS CARCHARIUS

## SHARK, WHITE SHARK.

வேறு பெயர் : மகர மீன்.

இம்மீன் தென்னிந்தியாவின் கடற்கரை ஓரங்களில் அதிகமாக கிடைக்கின்றது. இதில் கொம்பன்சுறா, புலிமுகச் சுறா, மாட்டுச் சுறா, பால்சுறா, என பலவகைகள் இருப்பினும், பத்தியத்திற்கு பயன்படுவது பால்சுறாவே, இதன் குணத்தைக் கீழ்க்காணும் செய்யுட்களால் அறிக.

''வாத கபமறுக்கு மன்னுகி டம்போக்கும்
ஊது குடல்வாதம் ஓடுங்காண்—ஆதரவாய்
எல்லாப் பிணிக்கும் இதமாகும் நல்லசுறா
நல்லா ரறிய நவில்.''

(பொ-ரை) சுறாமீன் கறியினால் வாதகபம், கிருமி, குடல் வாதம் முதலிய நோய்கள் நீங்கும்.

''சூலைகி ராணிகுன்மந் அஷ்டவதி சாரமிவை
வேலை யுலகை விடுத்தோடுஞ்—சால
அருப்பசியுண் டாகும் அபத்தியமல் லாத
சுறாக்கருவா டுண்பார்க்குச் சொல்.''

(பொ-ரை) சுறாக்கருவாடு பத்தியப் பொருளாவதோடு, சூலை, கிராணி, குன்மம், அதிசாரம் முதலிய நோய்களையும் நீக்கும்; மிக்க பசியையும் உண்டாக்கும்.

சுறாவிற்குப் பால்பெருக்கி, வாதமடக்கி, பிரசவ அழுக்க கற்றி ஆகிய செய்கைகள் உள.

### உபயோகம்.

இம்மீனை முறைப்படி சுத்தம் செய்து, மிளகு, பூண்டு முதலியன சேர்த்துக் குழம்பு செய்தும் வேகவைத்து முள்ளந்தண்டெலும்பு முதலியவற்றை நீக்கி வெங்காயம், பூண்டு, பச்சை மிளகாய் இவைகளைச் சேர்த்துப் புட்டாக்கியும் உண்டால் வாத சீதத்தால் உண்டான உடல்வலி, நீர்க்கோவை, பிரசவ அழுக்கு இவைகள் நீங்கும், பால்பெருகும்.

சுறு மீனின் கல்லீரலுடன் வெல்லம் சேர்த்துப் புட்டாக்கி மாலைக் கண்ணுக்குக் கொடுப்பது நாட்டு வழக்கம்.

இம்மீனின் கல்லீரலிலிருந்து எடுக்கப்படும் நெய், சாராய நிறமுடையதாயும் வெகுட்டலுடையதாயும், உண்ண அருவருப்புடையதாயும் இருக்கும்.

**அளவு :** 1 (4 மி. லிட்.) முதல் 3 தேக்கரண்டி (12 மி. லிட்).

இதில் வைட்டமின் எ-யும் டி-யும் இருக்கின்றன. இஃது எளிதில் சீரணமாகி உடலில் சேர்ந்து உடலுக்கு வன்மையைக் கொடுக்கும். அதிக அளவில் கொடுத்தால் பேதியை உண்டு பண்ணும்.

குழந்தைகளின் கணைக்கு, இதை உள்ளுக்கும் கொடுத்து மேலுக்கும் பூசிக் காலை வெய்யிலிலிட்டுவரக் குணமுண்டாகும்.

தீச்சுட்ட புண், வெந்நீர் விரணம், நாள்பட்ட விரணம் இவைகளுக்கு மேலே பூசிவரக் குணமாம்.

இதனை, உடல் இளைத்தவர்களுக்கும், இளைப்பு நோயால் வருந்துகின்றவர்களுக்கும் வழங்கப் பயனளிக்கும்

---

## தந்தம்.

## TEETH

**வேறு பெயர் :** பல்.

ஆண் கரடி, பெண் கரடி, ஆண் செம்மறி, பெண் செம்மறி, ஆண் யானை, பெண் யானை, பசு, இடபம், எருமைக்கடா, எருமை, ஆண் ஒட்டை, பெண் ஒட்டை, ஆண் குதிரை, பெண் குதிரை, ஆண் பன்றி, பெண் பன்றி என்னும் இவற்றின் பற்களைப் பின்சொல்லும் விதமாகச் சுத்தி செய்து, பற்பம் பண்ணிப் பின் காணும் விதமாய் உபயோகிக்க வேண்டும்.

**சுத்தி.**

இடித்துத் தூள் செய்து பல்லின் பொடி பலம் 1 (35 கிராம்) க்கு, முலைப்பால் பலம் 5 (175 கிராம்) விட்டு, சூரியோதய முதல் அத்தமிக்கும் வரையில் வெய்யிலில் வைக்க வேண்டும். இவ்விதம் ஐந்து நாட்கள் நாள்தோறும் ஐந்து ஐந்து பலம் முலைப் பால் புதிது புதிதாய் விட்டுக் காலை முதல் மாலை வரையில் வெய்யிலில் வைத்துப் பின்பு 2 நாட்கள் மேற்படி பாலெல்லாம் சுவறுமாறு வெய்யிலில் வைத்து, நன்ருய் உலர்ந்த பின்பு கழுவி யெடுக்கப் பற்கள் சுத்தியாம்.

ஒரு பலம் (35 கிராம்) சுத்தி செய்த பல்லின் பொடிக்குக் கீழ்க் காணும் பட்டியலின் முறைப்படி, தூதுவளைச் சமூலச்சாறு விட்டு அரைத்து வில்லை செய்து உலர்த்திச் சில்லிட்டுப் புடமிடப் பற்பமாம்.

| சாற்றின் பெயர். | சாற்றின் அளவு. | அரைக்கும் நாள். | வில்லை உலர்த்தும் நாள் | கவசம் உலர்த்தும் நாள். | புடம் வரட்டி. |
|---|---|---|---|---|---|
| தூதுவேளைச் சமூலச்சாறு | 4 | 4 | 3 | 1 | 40 |
| டிடி | 4 | 4 | 3 | 1 | 35 |
| டிடி | 4 | 4 | 3 | 1 | 30 |
| டிடி | 4 | 4 | 3 | 1 | 25 |

அளவு : முழுக்கடலை அளவு உத்தமம், முக்கால்கடலை அளவு மத்திமம், அரைக் கடலை அளவு அதமம், கால் கடலை அளவு அதமாதமம் ஆகும்.

**தந்தங்களின் பற்பவகைகளும் அவற்ருல் தீரும் நோய்களும்.**

''பல்லமைமா தங்கம் பசுமையொட்டை மாவேனம்
பல்லமைமா நீற்றைப் பதிமதுவிற்— பல்லமைமா
காங்கை யனிலங் கயமால் களிகிரந்தி
காங்கை யனிலமறு கல்.''

(பொ-ரை) பல்லம்— ஆண் கரடி, பெண் கரடி, மை— ஆண் செம்மறி, பெண் செம்மறி, மாதங்கம்— ஆண் யானை, பெண் யானை, பசு— ருது, பசு, மை— எருமைக்கடா, எருமை, ஒட்டை— ஆண் ஒட்டை, பெண் ஒட்டை, மா— ஆண் குதிரை, பெண் குதிரை, ஏனம்— ஆண் பன்றி, பெண் பன்றி, என்னு மிவற்றின், பல் அமை மா நீற்றை— பற்களால் அமைந்த சிறந்த பற்பத்தை, பதி மதுவில்— கள்ளிற் குழைத்து, பல்— மகோதரம், அம்— சன்னி, ஐ— சேத்துமம், மா— பெருவியாதி, காங்கை— சுபாதிக்கம், அனிலம்— வாதாதிக்கம், கயம்— காசம், மால்—

பித்தம், களி—பிரமை, இரந்தி—மேகம், காம்—பீனசம், கை—பிடிப்பு, அல்—அதிசாரம் நிலம் நீரிழிவு, மறு—குட்டம், கல்—இருமல் ஆகிய இவைகட்கு முறையே கொடுக்கவும்.

மகோதரத்திற்கு ஆண் கரடிப் பல்லின் பற்பத்தையும், சன்னிக்குப் பெண் கரடிப் பல்லின் பற்பத்தையும், சேத்தும நோய்களுக்கு ஆண் செம்மறியாட்டுப் பல்லின் பற்பத்தையும், பெருவியாதிக்குப் பெண் செம்மறியாட்டுப் பல்லின் பற்பத்தையும், சுர விசேடத்திற்கு ஆண் யானைப் பல்லின் பற்பத்தையும், வாதாதிக்க நோய்களுக்குப் பெண் யானைப் பல்லின் பற்பத்தையும், காச நோய்களுக்கு இடபப் பல்லின் பற்பத்தையும், பித்த, நோய்களுக்குப் பசுப்பல்லின் பற்பத்தையும், பிரமை நோய்களுக்கு எருமைக்கடாப் பல்லின் பற்பத்தையும், மேக நோய்களுக்கு எருமைப் பல்லின் பற்பத்தையும், பீனச நோய்களுக்கு ஆண் ஒட்டைப் பல்லின் பற்பத்தையும், பிடிப்பு நோய்களுக்குப் பெண் ஒட்டைப் பல்லின் பற்பத்தையும், அதிசார நோய்களுக்கு ஆண் குதிரைப் பல்லின் பற்பத்தையும், நீரிழிவு நோய்களுக்குப் பெண் குதிரைப் பல்லின் பற்பத்தையும், குட்ட நோய்களுக்கு ஆண் பன்றிப் பல்லின் பற்பத்தையும், இருமல் நோய்களுக்குப் பெண் பன்றிப் பல்லின் பற்பத்தையும், மேன் அளவுப்படி பனங்கள்ளில் அனுபானித்துக் கொடுக்க முறையே முன்கண்ட நோய்கள் தீரும்.

இதனை,

"சொல்லுகிறேன் புலத்தியா மகனே கேட்டிச்
சொற்பெரிய பதினாறு மிருக மாதி
பல்லுகளா லுளதாகு மடலைக் கெல்லாம்
பனங்கள்ளே யனுபான மகோத ரப்பே
ரொல்லுகிற சன்னிகபம் பெருவியாதி
யுட்டணமா னிலகாச பித்தம் பிரமை
வெல்லுகிற படைக்கலமா முன்னிப் பாராய்
வேதவே தியரறிவார் விகுதியாமே."

என்ற அகத்தியர் இருபத்தோராயிரத்திலுள்ள செய்யுளாம்.

"ஆசங்கை யேதுக்கடி யகப்பா யாண்கரடிப்பற் றூள்
பேசும்பனங் கள்ளடி யகப்பாய் பெரு மகோதரமே
மோசங்க ளேதுக்கடி யகப்பாய் முன் பெண் கரடிப்
பற்றூள்
வீசும் பனங்கள் ளடியகப்பாய் வியுமே சன்னியெல்ரலாம்."

என்ற அகப்பேய்ச் சித்தர் செய்யுளினாலும் உணரலாம்.

தேன்.

# MEL.

# HONEY.

தேனீக்கள், மரஞ் செடி கொடிகளிலுள்ள பூக்களில் அமைந்திருக்கும் அமிர்தத்தைப் பருகித் தம் உடலிலுள்ள தேன்பையில் சேர்த்துக் கொள்கின்றன. அப்போது அப் பையில் இருக்கும் அமிர்தம் ஒருவித மாறுதலை அடைகின்றது. இம்மாற்றமடைந்த அப்பொருளைத் தேனீக்கள் அடியிலுள்ள அறைகளில் உமிழ்ந்து சேர்த்துவைக்கின்றன. இப்பொருளுக்குத் தேன் என்பது பெயர். தேனீக்கள் பெரும்பாலும் தேன் கூடுகளை மலை, கொம்பு, மனை, புற்று மரப்பொந்து போன்ற இடங்களில் கட்டுகின்றன. தேன் சேகரிக்கும் வேடர்களும் வில்லியர்களும் இவ்வடைகளை மூட்டை, புழு, தேனீ, மகரந்தப்பொடி முதலியவற்றுடன் சேர்த்தே பிழிந்து கடைக்காரர்களிடம் கொடுக்கின்றார்கள். ஆதலினால் அந்தத் தேன் அசுத்தமுடையதாய்ச் சுகாதாரமுறைக்குப் பொருந்தாததாய் இருக்கும். தற்காலம் கூடுகளமைத்து, அதில் தேனீக்களைப் பழக்கி, இயந்திரங்களைக் கொண்டு மாசின்றி இறக்கும் தேனே சிறந்ததாகக் கருதப்படுகின்றது. கடைகளில் சிலர், சர்க்கரையைப் பாகு காய்ச்சி வைத்துக்கொண்டு, தேன் என்று விற்பனை செய்கின்றார்கள். குடகு நாட்டில் பானைகளைத் துவாரமிட்டு, இலவங்கப்பட்டை, வாசனை மெழுகு முதலியவற்றைப் பூசி, அரவமற்ற இடத்தில் வைத்துத் தேனீக்களை நுழையப் பழக்கித் தேனெடுக்கின்றார்கள். தேன் கூடுகளிலிருந்து ஒழுகும் பொழுது சேகரித்தெடுத்த புதிய தேனே சிறந்ததாகும்.

தேன் கூட்டிலிருந்து எடுத்த புதிய தேன் இனிப்பாயும், தெளிவாயும், இளமஞ்சள் நிறமாயுமிருக்கும். பிறகு படிப்படியாய் உறைந்து மங்கலாகிவிடும் புஷ்பங்களுக்குத் தக்கவாறும், கால தேசத்திற்கு ஏற்றவாறும் தேனின் மணம், உருசி, குணம் முதலியன வேறுபடும்.

தேனில் உடலுக்குத் தேவையான இனிப்புணச் சத்து, உலோகச் சத்துகள், வைட்டமின் போன்ற எல்லா சத்துக்களும் சிறுசிறு அளவில் பொருந்தியிருப்பதாகத் தற்கால விஞ்ஞானிகள் கண்டுபிடித்திருக்கின்றார்கள்.

நம் நூற்களில் தேன் 12 நாழிகையில் ஜீரணமாகிவிடுகின்றதென்று கூறப்பட்டுள்ளது. ஆதலினால், இது விரைவில் உடலில் சேர்ந்து பலத்தைக் கொடுக்கின்றது. இதனை மேனாட்டார் சிறந்த ஆகாரமாய்த் தேக பலத்திற்காகவும் ஆரோக்கியத்திற்காகவும் உட்கொண்டு வருகின்றனர்.

## தேனின் செய்கையும் நன்மையும்.

உள்ளழலாற்றி, மலமிளக்கி, துவர்ப்பி, அழுகலகற்றி, கோழை யகற்றி, போஷணகாரி, பசித்தீர்த்தூண்டி, தூக்கமுண்டாக்கி போன்ற பல செய்கைகள் உள.

தேனைக் குழந்தைகளுக்குக் கொடுக்க, அது சிறுநீரைச் சிறிது அதிகப்படுத்துவதோடு வயிற்றுப் பொருமலையும் குறைக்கும்.

தேனில், 1. மலைத்தேன், 2. கொம்புத்தேன், 3. மரப்பொந்துத் தேன், 4. புற்றுத்தேன், 5. மனைத்தேன் என ஐவகை உண்டு.

இவ் வைவ்வகைத் தேன்கள், ஒன்றற்கொன்று குணத்தில் வேறுபடுவதைக் கீழ்க்காணும் செய்யுட்கள் உணர்த்தும். மேனாட்டார் இவ்வேறுபாடுகளை அறியார்.

### 1. மலைத்தேனின் குணம்.

''ஐயிருமல் விளைவிக்க லக்கிப்புண் வெப்புடல்நோய்
பைய வொழியும் பசியுமுறும்—வையகத்தி
லெண்ணுமிசை யாமருந்திற் கேற்ற வனுபான
நண்ணுமலைத் தேனென்றி னால்.''

(பொ-ரை) மலைத்தேனினால் கபகாசம், சுவாசம், விக்கல், கண் விரணம், சுரம், தேகக்கடுப்பு முதலிய பிணிகள் நீங்கும். பசியும் தொனியும் உண்டாகும். இது மருந்துகளுக்கு நற்றுணை மருந்தாகும்.

### 2. கொம்புத் தேனின் குணம்.

''வாதபித்த வையத்தை மாற்றுமுளை மாந்தைதனைக்
காதமென வோடக் கடியுங்காண்—பூதரமாம்
வம்புமுலை மாதே வருமருசி நீக்கிவிடுங்
கொம்புத்தே னென்றுகுங் கூறு.''

(பொ-ரை) கொம்புகளில் கட்டுகின்ற தேன் முக்குற்றம், உளை மாந்தை, அரோசகம் முதலிய பிணிகளை ஓட்டுமென்க.

### 3. மரப் பொந்துத் தேனின் குணம்.

''பசிவெப்பாம் வாந்திமந்தம் பல்விக்கல் வெய்ய
ருசிமுக்க பந் தூல ரோகங்—கசிவகலாக
கொந்துத்தேன் பாடுங் குழலணங்கே காவின்மரப்
பொந்துத்தே னுண்டாயிற் போம்.''

(பொ-ரை) மரப்பொந்து தேனினால் பசியும் வெப்பமும் உண்டாம். வாந்தி, அக்கினி மந்தம், பலவகைப்பட்ட விக்கல், அரோசகம், காசம், சுவாசம், க்ஷயம், அதி தூலம் முதலிய பிணிகள் நீங்கும்.

### 4. புற்றுத் தேனின் குணம்.

''கொப்பணியு மாதே குவலயத்து ளெல்லார்க்கு
மொப்பநின்ற வைய மொளிக்குங்காண்—காப்புளிக்குங்
காசசுவா சம்வாந்தி கண்ணிலெழு நோய்களறும்
வீசுபுற்றுத் தேனுக்கு மெய்.''

(பொ-ரை) புற்றில் கட்டுகின்ற தேன் ஐயம், காசம், சுவாசம் வாந்தி, கண்ணோய்கள் முதலியவற்றை நீக்கும்.

### 5. மனைத் தேனின் குணம்.

''புண்ணும் புரையும்போம் போகரக் கரப்பனறு
மெண்ணரிய தீபனமா மேந்திழையே—கண்ணுகளிற்
பூச்சிபுழு வெட்டுகபம் பொல்லா விருமலறும்
பேச்சின்மனைத் தேனுக்குப் பேசு.''

(பொ-ரை) வீடுகளில் கட்டுகின்ற தேனால் புண், சிலையோடல், கரப்பான், நேத்திரவிரணக்கிருமி, புழுவெட்டு, கபகோபம், காசம் முதலிய பிணிகள் நீங்கும். பசி உண்டாம்.

### 1. புதிய தேன், 2. பழைய தேன்.

நிற்க, புதிய தேனுக்கும் பழைய தேனுக்கும் உள்ள வித்தியாசங்கள் அதிநுட்பமாகக் கூறப்பட்டுள்ளன. இதனையும் மேனாட்டார் உணரார். இதனைக் கீழ்ச் செய்யுட்களால் தெரிந்து கொள்க.

### 1. புதிய தேனின் குணம்.

''ஆயுளுட னுட்டிணம ரோசி யகக்கபமு
மேய வழகும் வளர்ந்திடுங்காண்—தூய
மதிய மெனுவதன மாதரசே நாளும்
புதிய நறுந்தேனாற் புகல்.''

(பொ-ரை) புதுத் தேனினால் நிறைந்த ஆயுளும், உடல் வெப்பமும், ஒளியும் உண்டாகும். இது மிகச் சேர்த்தால் அருசியும் நெஞ்சிற் கபமும் விளையும்.

### 2. பழைய தேனின் குணம்.

''வாதப் பெருக்கை வயிற்றெரிவைத் தநதுறைகட்டி
தேப் படுத்துமின்னுஞ் செப்பவோ—மாதரசே
சத்திப் புறுமரசந் தன்னைத்தூண் டும்புளிப்புத்
தித்திப் புறும்பழைய தேன்''.

(பொ-ரை) புளிப்பும் இனிப்புங் கலந்த சுவையையுடைய பழைய தேனானது, வாதரோகக் கூட்டத்தையும், வயிற்றெரிச் சலையும், வாதமூல ரோகத்தையும் விளைவிக்கும். அன்றியும் மருந்தினது நற்குணங்களைக் கெடுக்கும் என்ப.

சுத்தி.

கடைத்தேனில் மெழுகு, தேன் ஈ, புழு, முட்டை, மகரந்தப் பொடி முதலிய மலினங்களிலிருக்குமாகையினால், இதனை உப யோகிக்குமுன் நீர் இயந்திரத்தில் வைத்துக் காய்ச்சிச் சூடா யிருக்கும்போதே, ஈரக் கம்பளித் துணியில்விட்டு வடிகட்டிக் கொள்ள வேண்டும்.

ஓட்டைச் கட்டுத் தேனில் போட்டு முரித்து உபயோகிப்பது வீட்டு வழக்கம்.

உபயோகங்கள்.

இலேகியம், பாணிதம், மெழுகு, கட்டு, கண் மை போன்ற மருந்துகள் செய்வதற்குத் தேன் பயன்படுகிறது.

பற்பம், செந்தூரம், சூரணம், மாத்திரை, குடிநீர் போன்றவை களுக்குத் தேன் ஒரு சிறந்த துணை மருந்தாகும். இஃது அனு பானப் பொருளாவதன்றி அவிழ்தப் பொருளுமாகி, தேகத்தை நன்னிலையில் வைத்து, வாத முதலிய முக்குற்றங்களையும் போக்கு கின்றதென்பதனை,

''அனுபான மாய்ப்பின் அவிழ்தமுமாய்த் தோன்றி
கனமான தேகநிலை காட்டிப்—பினுமே
யரசன் முதல்வோ ரையுமாட்டு வித்தாலே
பிரசத் தினாற்போம் பிணி.''

என்ற தேரன் பொருள்பண்பு நூல் செய்யுளால் அறிக.

அவிழ்தம் பலிக்க வேண்டுமாயின் அனுபானப்பொருள் தேவை என்பதனையும், அவ்வனுபானப் பொருள்களுள் தேனும் ஒன்று என்பதனையும்,

''அனுபானத் தாலே யவிழ்தம் பலிக்கும்
இனிதான சுக்கு ன்னவிஞ்சி—பினுமுதகங்
கோமயம் பால்முலைப்பால் கோநெய்தேன் வெற்றிலைநீர்
ஆமிதையா ராய்ந்துசெய லாம்.''

என்ற செய்யுளால் உணர்க.

குழந்தைகளின் இருமலுக்குத் தேன் இரண்டு அவுன்ஸ் (56 மி. லிட்.) விளாவினகாடி அல்லது எலுமிச்சம் பழரசம் சமன்கூட்டி குறைந்த அளவில் கொடுத்துவரத் தணியும்.

சுவாசகாச நோயில் மலத்தைக் கழித்துக் கஷ்ட சுவாசத்தை நிறுத்த சிற்றாமணக்கு நெய் ½ அவுன்ஸ் (14 மி. லிட்), தேன் ¼ அவுன்ஸ் (7 மி. லிட்.) கூட்டி நன்றாய்க் கலந்து கொடுக்க நற் பலனை அளிக்கும்.

தேனும் தண்ணீரும் கலந்து உட்கொள்ள வேண்டுமென்று பிர யத்தனம் செய்வதற்குமுன்பே, நாட்சென்ற சீதசுரம் பயப்பட்டு ஓடும் என்று கூறப்பட்டுள்ளது. இதனை,

''பயப்படு பிரசமுன் பழகுமைச் சுரம்
பயப்படு மாறெனா.''

என்ற அடிகளால் உணர்க.

மற்றும் தேனைப்பானம் செய்துவந்தால், கபப்பிணிகள் நீங்கும் என்பதை ''இறவுளர் அமுதையை இறவுளதாக்கும்'' என்ற கரி சல் அடியால் அறியலாம்.

உள்ளழலாற்றிச் செய்கைக்காக, தேனைச் சூடுள்ள பார்லி அரி சிக் கஞ்சித் தெளிநீருடன் கொடுப்பதுண்டு. இதனால் மலபந்தம், செரியாமை, நீர்க் கோவை, இருமல், தொண்டை விரணம், நுரையீரலைப்பற்றிய பிணிகள் முதலியன நீங்கும்.

கபவாத சுரத்தினால் வருந்து நோயினருக்கும், இளைத்த உடம் பினருக்கும் இதயத்தை பலப்படுத்த தேனை வழங்கி வரலாம்.

வயோதிகர்களுக்குக் காணும் கோழையை அகற்றி, உடலில் வெப்பத்தை உண்டுபண்ணுவதற்கும், சக்தியை அதிகப்படுத்து வதற்கும் தேனைக் கொடுத்து வரலாம்.

மதுமேக நோயிற்காக வழங்கப்படும் மருந்துகளுள், தேனும் ஒரு முக்கியப் பொருளாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றது.

தேனுடன் சுண்ணாம்பு கூட்டிக் குழைத்து, பழுப்பதற்காகக் கட்டிகளின் மீதும், தலைவலிக்குத் தலைப்பொட்டிலும், வயற்று வலிக்குக் கொப்புழைச் சுற்றிலும் போட்டு வருவது நாட்டு வழக்கம்.

வாய் கொப்புளிக்க உபயோகிக்கும் குடிநீர்களுடன் தேன் சேர்ப்பதுண்டு. இது கோழையை நீக்கும்.

முலைக்காம்பு விரணத்திற்கும், பால் கட்டிற்கும் தேனை வெளிப் பிரயோகமாக உபயோகிப்பதுண்டு.

வயிற்று வீக்கத்தில் அதன் மீது தேனைத் தேய்த்துவர வலி குறைந்து வீக்கம் வடியும்.

தீச்சுட்டபுண், வெந்நீர் படுவதினால் உண்டாம் புண், விரணம முதலியவற்றிற்கு தேன் போட்டுவரச் சீக்கிரத்தில் ஆறும்.

அழுக்குடன் கூடிய எண்ணெய்பசையுள்ள கையில் இதனைத் தேய்த்துக் கழுவ நீங்கும்.

தேனை ஒரு குறிப்பிட்ட முறையில், முகத்தில் கருங்கோடுள்ள இடத்திலும், புள்ளிகளுள்ள இடத்திலும் தடவி வெந்நீரால் கழுவினால் நல்ல வசீகரம் உண்டாகும் என்பர்.

தேனீ வளர்த்தலையும் தேன் சேகரித்தலையும் பற்றி எழுதப் பட்ட நூல்களில், தேனைப் பற்றி அழகான சில செய்திகள் கிடைக் கின்றன.

"ஐரோப்பா கண்டத்தில் வசிக்கும் மக்களுள் பெரும்பாலோர் தங்களுடைய தினசரி உணவுப் பொருள்களில் இதையும் ஒன்றாகச் சேர்த்துப் சாப்பிட்டு வருகின்றனர். இங்கிலாந்தில் செலவாகும் தேனைக் கணக்கிட்டால், வருடத்திற்குத் தலைக்கு கால் ராத்தல் தேன் ஆகிறதாம். அமெரிக்காவிலுள்ள யுனைடெட் ஸ்டேட்ஸ் கவர்ன்மெண்டார், மக்களை அதிகத் தேன் சாப்பிடும்படி பிரசாரம் செய்கின்றனராம். தேனை உட்கொள்பவர்களுக்கு மேனியழகு அதிகப்படுமாம். சருமத்தில் சுருக்கங்கள் விழாவாம். நம் முன்னோர்கள் தேனை அருந்தி வந்தால் தேகாரோக்கியமும் நீண்ட ஆயுளும் உண்டாமென்று இதனைப் பானமாய் அருந்தி வந்திருக்கிறார்கள். இருக்கு வேதத்தில், தேனினால் செய்யப் பட்ட ஓர் இனிய பானத்தை ரிஷிகள் முதல் தேவர்கள் வரை உப யோகித்து வந்திருப்பதாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. முல்சம் என்ற பானத்தை ரோமர்களும், லிப்பிடெஸ் என்ற பானத்தை ருஷ்யர்களும், கிளாரி, பிராகெட் என்ற பானங்களை மத்தியகாலப் பிரிட்டிஷாரும் தேனிலிருந்து செய்து உபயோகித்து வந்திருப்ப தாய் மேனாட்டு வரலாறுகள் கூறுகின்றன. தேனிலிருந்து செய் யப்படும் பீர் அல்லது ஒயினைத் தென் ஆப்பிரிக்கா விலும், கீழ் ஆப்பிரிக்கா முதலிய இடங்களிலுமுள்ள சுதேசிகள் உபயோகிக்கின்றார்கள். நைஜீரியாவில், தேனிலிருந் தும் தினையிலிருந்தும் செய்த தொரு பானத்தை ஏழைகள் சிறப் பாகப் பருகுகின்றார்கள். இலங்கையிலுள்ள மலைவெட்டர் என் னும் ஜாதியார் தேனை முக்கிய உணவுப் பொருளாய்ப் பயன் படுத்துவது மன்றி, அதனை அடமானம் வைப்பதற்கான ஜாமின் பொருளாகவும் உபயோகிக்கின்றனராம். கீழ் ஆப்பிரிக்காவில் சுக் என்ற ஜாதியாரிடமிருந்து அந்நியர் நிலத்தை வாடகைக்கு வாங்க வேண்டுமானால், தேனிலிருந்து செய்த ஒருவித பானத்தைக் கொடுக்க வேண்டுமாம்.

டெமோகிரிடியஸ் என்ற கிரேக்க தத்துவ சாஸ்திரி ஒருவர் தேனை வெந்நீரில் விட்டு அதிலிருந்து எழும் ஆவியைமட்டும் உட்கொண்டு பல நாட்கள் எமன் தன்னை நெருங்கவொட்டாத படி தடுத்து வந்தாராம்.

ஓர் இளைஞன் ஏதோ அடிப்பட்டதனால், 3 வாரங்களுள் **160** இராத்தல் எடையிலிருந்து **100** இராத்தல் உடையவனாய் மரணத்

தருவாயிலிருந்தானும். அவனைச் சில வைத்தியர்கள், கைவிடக்கூடியவன் என்று தீர்மானித்துச் சிகிச்சை இன்றி விட்டார்களாம். வைத்திய சாஸ்திரி ஒருவர் அவ்விளைஞனுக்கு ஒரு தேக்கரண்டி (4 மி. லிட்.) தேனை அரை டம்ளர் பாலில் கலந்து ஒரு மணிக்கொருமுறை கொடுக்குமாறு ஏற்பாடு செய்தாராம். அதனால், அவன் பத்து நாட்களுக்குள் சௌக்கியமடைந்து மூன்று வாரங்களுக்குள் முன்போலத் தேக சுகத்தை அடைந்தானும்.

பிரிட்டிஷ் கீழ் ஆப்பிரிக்காவிலுள்ள வாசாமியா என்ற குலத்தினர் தங்கள் ஜாதிப்பெண்கள் பிரசவிக்கில் தீட்டுக்கழியும் வரையில் வெந்நீர் கலந்த தேனையே உணவாகக் கொடுப்பார்களாம்.

தென்னாட்டில் அநேக தமிழ் குடும்பத்தினர், குழந்தைகளின் நாவில் தேனைத்தடவி அவைகளைச் சுவைக்கும்படி செய்து வருகின்றனர். அன்றியும், தமிழ் நாட்டார் தம்பதிகள் நீடூழி வாழ வேண்டுமென்னும் எண்ணத்துடன், மாப்பிள்ளையும் பெண்ணும் தம்வீடு வந்ததும், பழமும், தேனும், தயிரும் கலந்து கொடுக்கின்றனர். தமிழ் நாட்டு வேடுவர்கள், தேனும் தினைமாவும் கலந்து புசிப்பதையும், இதனைத் தேக்கிலையில் வைத்து அருந்துவதையும் காண்கின்றோம். பக்தர்கள், பழனியில் தேன் கலந்த பஞ்சாமிருதத்தைக் கடவுளுக்குப் படைத்து, அதை அருந்தித் தேகநலம் பெறுவதைத் தமிழ் நாடறியும்.

முற்காலத்தில் எகிப்தியரும் அசிரியரும், அழுகிப்போகாமல் பல நாட்கள் வரைச் சவங்களைப் பாதுகாக்கத் தேனை உபயோகித்து வந்திருக்கின்றனர். அப்துல் லதீப் என்ற பேராசியர் ஒருவர், ஒரு குழந்தையின் சவத்தை அதன் தாய் முத்திரையிட்ட தேன் ஜாடியில் வைத்துப் பாதுகாத்து வந்ததாய்க் கூறுகிறார். இன்னும் அக்காலத்தில் கொழுப்பையும் தேனையும் இறந்தவர்களது உடலின் மேல் தடவி சவங்களைப் பாதுகாத்து வந்ததாய் ஹோமர் என்ற கிரேக்க மகாகவி கூறியிருக்கின்றார். இம்முறையில் தான் மகா அலெக்ஸாந்தரது சவமும் பாதுகாக்கப்பட்டதாம். தேன் அழுகக் கூடிய சவங்களையும் பாதுகாக்கக்கூடியதாய் இருப்பதனால் அதை உட்கொள்பவர்கள் நிச்சயம் உடல் உரம் பெறுவார்கள் என்பதிலும், ஆயுள் நீடிக்கப்பெறுவார்கள் என்பதிலும் ஐயமில்லை.''

ஆயினும், தேனும் நெய்யும் சம அளவு சேர்த்து அருந்தினால் விடமிக்கும்.

தேன் கற்கண்டு.

தேனானது உறைந்து கற்கண்டாய் மாறுவதுண்டு. அக் கற்கண்டினால் கண்ணில் படருகின்ற துர்மாமிசப்படலம், சுரம், கபநோய், வாதநோய் முதலியன நீங்கும். இன்னும் அதிக பசியையும் இசைப்பாட்டிற்குரிய தொனியையும் உண்டு பண்ணும். இதனை,

"தேனிற் பிறந்த செழுங்கண்டாற் கண்விழிக்கு
னூனிற் படர்படல மோடிடுங்காண்— கானத்திற்
காகுஞ்சுரமாகு மண்டும் பசிகபங்கா
லேகுஞ் சுரமேகு மெண்."

என்ற வெண்பாவால் அறிக.

இக்கற்கண்டை நன்ருய்ப் பொடித்துச் சிறிதளவு கண்ணில் இட்டுவரக் கரைந்து, இது கண்ணில் படருகின்ற படலத்தைக் கரைக்கும்.

இதை வாயிலிட்டுச் சுவைத்தருந்தி வர, செய்யுளில் கூறப் பட்ட மற்றைய குணங்களைக் கொடுக்கும் என்ப.

---

நண்டு.

## CRAB.

இது ஞெண்டு, களவன், குளிரம், நள்ளி, கவைத்தாள், கர்க்கடகம், அலவன் என்னும் வேறு பெயர்களினலும் வழங்கப்படும். இஃது அதிகமாகக் கடலிலும் வயல்களிலும் கிடைக்கும். நண்டு, சில வகுப்பினர்களின் உணவுப் பொருள்களுள் ஒன்ருகும். உணவிற்கும், மருந்திற்கும் வயல்களில் கிடைக்கக்கூடிய பால் நண்டே சிறந்ததாகும். இதன் கறிக்கு பித்தமகற்றி, சிறுநீர் பெருக்கி, மலமிளக்கி, குருதிப்பெருக்கி, இதய வெப்பமுண்டாக்கிச் செய்கைகள் உள. கடலிலும், கழிகளிலும் கிடைக்கும் பெரிய நண்டு பலவகைப் பிணிகளை உண்டு பண்ணும் என்பதைக் கீழ்ச் செய்யுள் வலியுறுத்தும்.

கடல் நண்டுக் கறியின் குணம்.

குன்மவலி வாதங் கொடுங்கரப்பா னுண்டாக்குஞ்
*சன்மச் சொறியைத் தருவிக்கும்—பின்னு
முதிரக் கழிச்சறனை யோங்குவிக்கு மாதே
யதிரக் கடனண்டது.

(பொ-ரை) கடல் நண்டுக் கறி வயிற்றுவலி, வாதகோபம், துன்பத்தை விளைவிக்கின்ற கரப்பான், சருமச் சொறி, இரத்தக் கழிச்சல் முதலியவற்றை உண்டுபண்ணும் என்க.

---

* சருமம் என்பது எதுகையை நோக்கி சன்மம் எனத் திரிந்தது.

### வயல் நண்டுக் கறியின் குணம்.

வயலினூறு நண்டருந்த வாதக் குடைச்ச
லயலி லிருக்கா தணங்கே—துயிலவொட்டா
வன்சயித்தி யங்கரப்பான் மன்குடலி ரைச்சலும்போ
முன்பயித்தி யங்கதிக்கு முன்.

(பொ-ரை) வயல் நண்டுக்கறியை உண்ணில் வாதக் குடைச்சல், தூங்கவிடாதபடி செய்யும் அதிசீதளம் (கபம்), கரப்பன், நிலைபெற்ற குடலிரைச்சல் முதலிய பிணிகள் நீங்கும். பித்தம் பெருகு மென்க.

### உபயோகங்கள்.

### நண்டுத் தீநீர்.

வயல் நண்டுகளைக் கொண்டுவந்து ஓட்டுடன் இடித்துப் பத்துப் பங்கிற்கு ஒரு பங்கு சோம்பு அல்லது நற்சீரகம் சேர்த்து, இவைகளுக்கு எண் மடங்கு நீர் சேர்த்து வாலையிலிட்டுத் தீநீராக்கிக் கொள்ளவும். இதனை மடக்கி மடக்கிச் செய்துகொள்வதும் உண்டு.

அளவு : $\frac{1}{2}$ (14 மி. லிட்.) முதல் 1 அவுன்ஸ் (28 மி. லிட்.) வரை.

செய்கை : வெப்பகற்றி, உடல்உரமாக்கி.

தீரும் நோய்: குளிர்சுரம், க்ஷயம்.

### நண்டுக் கொழுப்பு.

பூரத்தை அப்பிரகத்தகட்டின் மீது வைத்து நண்டுக் கொழுப்பால் சுருக்கிடக்கட்டும்.

### நண்டுச் சாறு.

25 நண்டைக் கழுவி உரலிலிட்டு இடித்து, ஒரு மட்பாண்டத்திலிட்டு சுக்கு, மிளகு, தனியா, அதிமதுரம், சிற்றரத்தை, கறிமஞ்சள் வகைக்குப் பலம் $\frac{1}{4}$ (8.75 கிராம்) வீதம் எடுத்துப் பொடித்து, $2\frac{1}{2}$ படி (4 லிட்) நீர் சேர்த்து, நாலில் ஒன்றாகக் காய்ச்சி வடித்து வேளைக்கு ? (56 மி. லிட்), 3 (84 மி. லிட்.) அவுன்ஸ் வீதம் மும்முறை அருந்திவர நீர்க் கோவை, சுரம், தேக்கெடுப்பு, சயித்தியம் முதலியன நீங்கும்.

### நண்டுக் குழிநீர்.

''வாந்தியறுந் தாகமறு மாருத விக்கலறுங்
காந்த லெரிவுங் கடிதேகுந்—தோய்ந்துவருங்
கண்டுக்குயர்ந்த கனிமொழியே பன்னுளும்
நண்டுக் குழிநீரை நாடு.''

(பொ-ரை) வயல்களிலிருக்கின்ற நண்டுக்குழி நீரால் வாந்தி, தாகம், நீங்காத விக்கல், தேக வெப்பம், எரிவு முதலியன விரைவில் நீங்கும் என்க.

நண்டுக்குழிநீரைக் கொண்டுவந்து வடிகட்டி ¼ (42 மி லிட்.) முதல் ½ ஆழாக்கு (84 மி. லிட்.) வீதம் அருந்திவந்தால், மேற்கண்ட நோய்களுடன் குழந்தைகட்குக் காணும் இருமலும் கக்குவானும் விலகுமென்பர்.

**க்ஷயம் தீர்க்கும் நண்டுக் குழம்பு.**

நண்டிடித்த ரசம் படி 1 (2 லிட்.), மோடி வராகனெடை 1 (4.2 கிரா.), சீரகம் வராகனெடை 1 (4 2 கிரா.), கஸ்தூரி பணவெடை 1 (488 மி. கிரா.) கோரோசனம் பணவெடை 1½ (732 மி. கிரா.), குங்குமப்பூ பணவெடை 2 (976 மி. கிரா.), இலவங்கம் தோலா 3 (35 கிரா.), சாதிக்காய் தோலா ¼ (8.75 மி. கிரா.), இலவங்கப்பட்டை தோலா ¼ (8.75 கிரா.), ஓமம் தோலா ¼ (8.75 கிரா.) இவைகளை வெதுப்பி நண்டு ரசத்தால் மைபோல அரைத்து, இதற்குப் போதுமான மிளகாய், மிளகு, புளி, உப்பு, தனியா, பூண்டு, வெங்காயம், கருவேப்பிலை, பச்சைக் கொத்தமல்லி. இஞ்சி இவைகளை இட்டுக் கொதிக்க வைத்துத் தாளித்துக் கொதிக்கும்போது மேலே மிதக்கும் நெய்யையெல்லாம் வழித்துவிட்டு, மற்றவற்றைச் சிறு தீயால் எரித்துக் குழம்புப் பக்குவத்தில் இறக்கிப் பத்திரப்படுத்தி, வேளைக்குக் கால்படி குழம்புச் சாதத்தில் விட்டு முதலில் சாப்பிட்ட பிறகு வேறு ஏதாவது சாப்பிடலாம். குணப்பட்டு விடும்.

---

## நத்தை.

## FRESH WATER SNAIL.

இஃது, *ஊமைச்சி என்ற வேறு பெயராலும் வழங்கப்படுகின்றது. இது குளங்களில் அதிகமாயிருக்கின்றது. இது நீரிலுள்ள மலினங்களை அருந்தி நீரைத் தெளியவைக்கின்றது.

சில வகுப்பினர் நத்தையை உப்பிட்டு வேகவைத்து அருந்துகின்றனர். இக் கறியின் குணத்தைக் கீழ்க்காணும் செய்யுளால் உணரலாம்.

''நத்தைக் கறிதனக்கு நாடாது மூலமுத
லொத்தமல ரோகமெலா மோடுங்கா—ணித்தநித்தந்
தின்றாற் செரியாது தேடரிய தாதுவிர்த்தி
நன்றாகு மாதே நவில்.''

---

*குறிப்பு.—தலை அகன்றும் முனை மெலிந்தும் நீள வடிவமாக இருக்கிற ஒரு பிராணியை ஊமைச்சி எனக் கூறுவாருமுளர்.

(பொ-ரை) நத்தைக் கறிக்கு மூலமுளையும், மலாசயப்பிணிகளும் நீங்கும். இதைத் தினமும் புசிக்கில், அசிரணமும் சுக்கிலப் பெருக்கமும் உண்டாகும்.

### நத்தைச் சிற்பி பற்பம்.

வேண்டிய அளவு நத்தையைக் கொண்டு வந்து நீர் விட்டுச் சுத்தி செய்து, ஒரு பானையில் பாதியிருக்கும்படி போட்டு, சில் விட்டுச் சீலை செய்து, கனபுடமிட்டெடுக்கப் பற்பமாகும். இப் பற்பத்திற்குத் துத்தியிலைச் சாறுவிட்டு அரைத்துச் சிறு பில்லைகள் செய்து, சில்லிட்டுச் சீலை செய்து, புடமிட்டு எடுக்க மூல நோயில் நன்றாய் வேலை செய்யும்.

அளவு : ½ முதல் 1 புளியம் வித்தின் அளவு.

துணை மருந்துகள் : நெய் அல்லது வெண்ணெய்.

தீரும் நோய்கள்: மூல இரத்த பேதி, சீதபேதி, மூலக்கடுப்பு முதலியன வாகும்.

நத்தைச் சதையைக் கொண்டு ஆமை லேகியத்தைப் போலச் செய்து கொடுக்க மூலம் நீங்கும்.

நத்தை தாளகக்கருப்புச் செய்வதற்கு உபயோகமாகின்றது.

---

## நரி எச்சம்.

## JACKAL'S EXCRETA.

இதனை, வேப்பந்தோலுடன் கலந்து புகை போட மூலம் நீங்கும் என்பதை,

''ஆசன ரூடி யதுவே பவுத்திரமாம்
பேசு மதுபறக்கப் பேதிக்கும்—மோசமில்லை
வெம்புகைதந் தாற்றணலால் வேம்பின் புறணியுடன்
சம்பு வெனுநரி யெச்சம்.''

என்ற செய்யுளால் உணர்க.

## பலகறை.

# CYPRAEA MONETA LINN
# PORCELANEOUS SHELLS, COWRY

### Marine Shell

கடல்படு திரவியம் ஐந்தனுள் ஒன்றாகிய இது, கவடி, சோகி, வராடி என்ற வேறு பெயர்களினால் வழங்கப்படுகின்றதென்பதை,

''மண்ணிய கவடி சோகி வராடியே பலகறைப்பேர்''

என்ற நிகண்டுச் செய்யுளடியால் உணர்க.

இதன் உருவம் புளியின் வித்து முதல், வாதுமைக் கொட்டைப் பருமனளவு இருக்கும். வெள்ளை, மஞ்சள், சிவப்பு ஆகிய மூன்று நிறங்களில் இது கிடைக்கும். வெண்ணிறப் பலகறையே சிறந்ததாகும்.

### சுவையும் செய்கையும்.

இது கைப்புச் சுவையை உடையது. இதற்கு தாதுவெப்பகற்றி செய்கையும், கோழையகற்றிச் செய்கையும், வெப்பகற்றிச் செய்கையும், வெளிப் பிரயோகத்தில் தடிப்புண்டாக்கிச் செய்கையும் உள.

### பொதுக் குணம்.

''மந்தந்தா கங்கிரகணி மாவிடச் சுரங்கண்ணோய்
தொந்தம் பரிநாமச் சூலைகய—மிந்த
வுலகறையைக் காலொடிவை யோடு நரைத்த
பலகறையை காணினியம் பார்.''

(பொ-ரை) வெண் பலகறையினால் அலசம், தாகம், கிரகணி மகர விடச் சுரங்கள், விழிநோய், வாத தொந்தம், பலவிதக் குத்தல் சுயம், கபவாதம் முதலியன நீங்கும்.

மற்றும் இதனால், அஜீரணம், காமாலை, கல்லீரல், மண்ணீரல் வீக்கம், சுவாசகாசம் , காசம் முதலிய நோய்களும் தீரும்.

### சுத்தி.

ஒரு பலம் (35 கிராம்) பலகறைப் பொடிக்கு, பத்து பலம் (350 கிராம்) தமரத்தம் பழச்சாற்றைக் காலையில் விட்டு, மாலை வரை வெய்யிலில் வைத்து எடுத்து மறு நாள் காலையிலும் புதிதாக மேற்படி சாற்றை விட்டு வெய்யிலில் வைக்கவும். இம்மாதிரி பதினைந்து நாட்கள் செய்தெடுக்கப் பலகறை சுத்தியாகும்.

இவ்விதம் சுத்தி செய்யப்பட்ட பலகறையினல் செய்யப்பட்ட அவிழ்தங்கள், பலவகைப்பட்ட காமாலைகள், தேமல்கள், எரிந்து உஷ்ணப் பெருக்கத்தை உண்டாக்கும் நேந்திரப் பிணிகள் முதலி யவற்றை நீக்கி உடலை உரமாக்கும். இதன் பெருமையை,

''சோகிய மலத்தாலே யுலகிங்காச்சே சோர்வறநீ யறியப்பா''

என்ற கொங்கணர் குறுந்திரட்டு வாக்காலறிக.

(வேறு.)

பலகறையை எலுமிச்சம் பழச்சாற்றிலேனும் அரிசிக் கஞ்சியிலே னும் ஊறவைத்தெடுக்கச் சுத்தியாம்.

பலகறைப் பற்பம்.

ஒரு பலம் (35 கிராம்) சுத்தி செய்த பலகறையை எடுத்துக் கீழுள்ள பட்டியில் குறித்த முறைப்படி அரைத்து உலர்த்திப் புட மிடவும். அரைக்கும் ஒவ்வொரு நாளும், குறித்த எடை புதிய சாற்றை உபயோகிக்கவும். பில்லையை உலர்த்த, பகலில் சூரிய ஒளியில் வைப்பது போல, இரவில் பனியிலும் வைத்தல் வேண் டும்.

| சாற்றின் பெயர். | அளவு பலம். | அரைக்கும் நாள். | வில்லை உலர்த்தும் நாள். | கவசம் உலர்த்தும் நாள். | புடம் வரட்டி. |
|---|---|---|---|---|---|
| கரபுன்னைச் சமூலச்சாறு | 4 | 6 | 5 | 1 | 36 |
| சித்திரமூலச் ,, | 4 | 5 | 4 | 1 | 30 |
| கல்லால் ,, | 4 | 4 | 3 | 1 | 24 |
| காட்டுமல்லிகைச் ,, | 3 | 3 | 2 | 1 | 18 |
| நீலோற்பலச் ,, | 2 | 2 | 1 | 1 | 12 |
| சந்தனக்குழம்பு தெளிநீர் | 1 | 1 | 1 | 1 | 6 |

இதனளவு, கடலையின் ஐந்து கூறுகளில் ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து கூறுகளாம். இவை முறையே உத்தமம், மத்திமம், அதமம், அதமாதமம், அனந்தமாகும்.

| துணை மருந்துகள். | தீரும் நோய்கள். |
|---|---|
| பால் .. .. .. | பாண்டுவை நோய். |
| பன்னீர் .. .. | மேக உட்டண நோய். |
| வெண்ணெய் .. .. | வாந்தி. |
| பசுவின் மோர் .. .. | வயிற்று வலி. |

| | |
|---|---|
| பசுவின் நெய் .. .. | மகாமூர்ச்சை. |
| குளிர்ந்த நீர் .. .. | நளிர். |
| தயிர் .. .. .. | சந்நி. |
| புளித்த காடி .. .. | பிடிப்பு. |
| வெந்நீர் .. .. | சோகை. |
| சிறுகீரை இரசம் .. | பக்க சூலை. |
| கற்றாழை இரசம் .. | வீங்கு மாந்தம். |
| தண்ணீர் விட்டான் கிழங்குச்சாறு .. | தேகமெல்லாம் கடுக்கும் வாத வியாதி. |

| | |
|---|---|
| கள் .. .. .. | கப நோய், அதைச் சேர்ந்து வரப்பட்ட கபசுரம், சந்நி பாதம், பீனசம், மகோதரம், உப்புசம், ஈளை, இருமல் முதலியன. |
| வெள்ளைச் சர்க்கரை .. | பித்த நோய், அதைச்சேர்ந்து வரப்பட்ட பல்லை நோய், பெரு வயிறு, பீனசம், விக்கல் முதலியன. |
| மகிழம்பூ இரசம் .. | வாத நோய், அதைச் சேர்ந்து வரப்பட்ட வாத குன்மம், வாத மகா பாரிச சந்நி, வாத சந்நி பாதம், வாத மகா சலோதர நோய், வாதசுரம், அஜீரணம் முதலியன. |

புறநடை.

வாதத்தைச் சேர்ந்த மேக உஷ்ணப் பிணியில், வயிறு ஒரு பக்கம் இழுத்துக் கொள்ளுதல், பசியின்மை, திமிர், பக்கம், வயிற்றடி, கன்னம், கழுத்து இவ்விடங்களில் பரு தோன்றித் துன்பத்தைக் கொடுத்தால் இவற்றிற்குப் பலகறைப் பற்பத்தை மிளகு இரசத்தில் அனுபானித்துக் கொடுக்கவேண்டும்.

பித்தத்தைச் சேர்ந்த மேக உஷ்ணப் (தினவென்கிற) பிணியில் அக்கரம் போலிருந்தல், வாய்நீர் ஊறல், வாந்தி, விக்கல், பெருந்தாகம், வாய், உதடு, முகவாய்க்கட்டை, மார்புப் பள்ளம், விரல் இவ்விடங்களில் புண், பரு கண்டு ஆறுதிருத்தல் இவற்றிற்குப் பலகறைப் பற்பத்தைச் சுக்கு இரசத்தில் அனுபானித்துக் கொடுக்கவேண்டும்.

கபத்தைச் சேர்ந்த மேக உஷ்ணப் (சொறி என்ற) பிணியில் கழுத்தில் துர்நாற்றத்துடன் வியர்வை காணுதல், வயிறு உப்பி மேற் சுவாசம் கண்டு பசி, தாகமில்லாதிருத்தல், பீனசம்போல் மூக்கில் இரத்தம் வடிதல், முழங்கால், முதுகு, உச்சி இவ்விடங்களில்பருவும், கட்டியும் கண்டு, தலையில் ஒருவித சொறி, தேமல் போலத் தோன்றி, சொறிந்தால் சாம்பல் பொர்டியைப்போல் தூள் உதிர்ந்து கொண்டிருத்தல் இவற்றிற்குப் பலகறைப் பற்பத்தைத் திப்பிலி இரசத்தில் அனுபானித்துக் கொடுக்க வேண்டும்.

மேற்படி பிணிகளுக்குப் பத்தியம் : புளி, நல்லெண்ணெய், கடுகு, பெண் போகம் ஆகியவற்றை நீக்க வேண்டும்.

அருந்தும் நாளளவு : இரண்டு பட்சம் அருந்தி, மறுபத்தியம் இரண்டு பட்சமிருக்க வேண்டும்.

இடைப்பகல் சிற்றுண்டி : வாத மேகத்திற்குத் தேங்காய்ப் பாலில் நல்ல வெல்லத்தைச் சேர்த்துக் குழப்பிய பால்.

பித்த மேகத்திற்குத் தேங்காய்ப் பாலுடன் சர்க்கரை, கோதுமை மா சேர்த்துச் செய்யப்பட்ட பட்சணம்.

கப மேகத்திற்கு, தேங்காய்ப்பாலில் அரிசிமா, கற்கண்டு, பசுவின்பால் கூட்டிய (களி) தேங்காய்ப் புட்டடையாகச் செய்து உண்ணவேண்டுமென்ப.

சிவவெறி நஞ்சிற்குப் பலகறைப் பற்ப ஆட்சி.

செயற்கையாகவும் இயற்கையாகவும் வெறிபிடித்த நாய், நரி, மனிதர், பசு, எருமை, பன்றி இவைகளினால் உண்டாம் நஞ்சிற்குப் பலகறைப் பற்பத்தைத் தக்க துணை மருந்துடன் அளித்து, தேகத்தை நிலைக்கச் செய்ய வேண்டுமென்பதை,

''நாய்நரிமா னிடர்பசுகா ரானிருளி வெறியிரண்டி
னடையி யற்கை.
யாய்ச்செயற்கை வழிகுணத்தி னலறிந்திட் டதற்கமைய
வநுகூலித்தே
நீயுளமா கவடிவெண்மை யனுபானப் படியளித்து
நிலைக்கச் செய்தே
மாய்வுறுதே கத்தைமகி தலத்திருத்தி யாயுண்மறை
வன்மை யுள்ளோய்.''

என்ற மாபுராணச் செய்யுளாலறிக.

இவற்றுள் செயற்கை வெறி என்பது உயர்திணையாகிய மாந்தர்க்கு மருந்தினால் வரும் வெறியும், அஃறிணையாகிய நாய், நரி, பசு, எருமை, பன்றி இவைகட்குச் சுடுகாட்டிலுள்ள தலையோட்டில் தங்கிய நீரைக் குடித்தலால் உண்டாகும் வெறியுமாகும்.

இயற்கை வெறி என்பது மேலே சொல்லப்பட்ட அஃறிணை உயிர்களுக்குப் பிறவியிலேயே உண்டான வெறியையும், உயர்திணை உயிராகிய மாந்தர்க்கு ஊழியினால் உண்டாம் வெறியையும் குறிக்கும்.

இவ்விருவகையுள் செயற்கை வெறி நஞ்சு தீர்வதும் (சாத்தியமும்) இயற்கை வெறி நஞ்சு தீராததும் (அசாத்தியமும்) ஆகும்.

மேற்கண்ட நஞ்சுகளுக்குப் பலகறைப் பற்பத்தைக் கீழ்க்கண்ட துணை மருந்துகளுடன் கொடுத்து, அததற்குக் கூறப்பட்ட உணவைக் கொடுக்க வேண்டும்:—

1. செயற்கை வெறிநாய் நஞ்சுக்குப் பலகறைப் பற்பத்தை அளவுப்படி கல்லாலின் சாற்றில் கொடுத்துக் கொள்ளுக் கஞ்சியும்.

2. இயற்கைவெறிநாய் நஞ்சுக்கு, மேற்படி மருந்தை நிலப்பனைச் சாற்றில் கொடுத்து காராமணிப் பருப்புக் கஞ்சியும்,

3. செயற்கை வெறிநரி நஞ்சுக்கு, மேற்படி மருந்தைக் கீழாநெல்லிச் சாற்றிற் கொடுத்துச் சிறுபயற்றங் கஞ்சியும்,

4. இயற்கை வெறிநரி நஞ்சுக்கு. மேற்கண்ட மருந்தை மூங்கிலின் சாற்றிற் கொடுத்துத் துவரம் பருப்புக் கஞ்சியும்,

5. செயற்கை வெறிப் பசு நஞ்சுக்கு, மேற்கண்ட மருந்தை நாயுருவிச் சாற்றிற் கொடுத்து வரகரிசிக் கஞ்சியும்,

6. இயற்கை வெறிப் பசு நஞ்சுக்கு, மேற்கண்ட மருந்தை வெற்றிலைச் சாற்றிற் கொடுத்துச் சாமையரிசிக் கஞ்சியும்,

7. செயற்கை வெறி எருமை நஞ்சுக்கு, மேற்கண்ட மருந்தை வன்னியிலைச் சாற்றிற் கொடுத்துப் புல்லரிசிக் கஞ்சியும்,

8. இயற்கை வெறி எருமை நஞ்சுக்கு, மேற்கண்ட மருந்தைக் கோரைச் சாற்றிற் கொடுத்துத் தினையரிசிக் கஞ்சியும்,

9. செயற்கை வெறிப் பன்றி நஞ்சுக்கு, மேற்கண்ட மருந்தைப் பாகலிலைச் சாற்றிற் கொடுத்து மூங்கிலரிசிக் கஞ்சியும்,

10. இயற்கை வெறிப் பன்றி நஞ்சுக்கு, மேற்கண்ட மருந்தைப் பேய்ப்புடற் சாற்றிற் கொடுத்துக் கோதுமை அரிசிக் கஞ்சியும்,

11. செயற்கை வெறி மனிதர் நஞ்சுக்கு மேற்கண்ட மருந்தை நரிப்பயற்றங்கொடிச் சாற்றிற் கொடுதது அவரைப் பருப்புக்கஞ்சி யும்,

12. இயற்கை வெறி மனிதர் நஞ்சுக்கு மேற்கண்ட மருந்தை செருப்படைச் சாற்றிற் கொடுத்து உளுந்துக் கஞ்சியும் முறையே ளாய்ச்சிக் கொடுக்க வேண்டும்.

மற்றும் மேற்படி நஞ்சுக் குறி குணங்கள், நஞ்சினரைவைக்கு முறை இவைகளை நஞ்சு நூலில் பரக்கக் காணலாம்.

காயங்களுக்கு பலகறை பற்ப ஆட்சி.

1. முள் தைத்த காயம், மாடு முட்டின காயம், புண் இவைகளுக்குப் பலகறைப் பற்பத்தைக் கிளி முட்டைக் கருவில் இழைத்துத் தடவ வேண்டுமென்றும்,

2. பனை மட்டைக் கருக்கினல் அரிபட்ட புண்ணுக்கு,மேற்படி பற்பத்தை கோழி முட்டைக் கருவில் இழைத்துத் தடவ வேண்டுமென்றும்,

3. கத்தி, ஈட்டி, பாங்கு இவைகளினல் உண்டான காயப் புண்ணுக்கு, புரு முட்டைக் கருவில் மேற்படி மருந்தை இழைத்துத் தடவ வேண்டுமென்றும்,

4. கல்லடி காயம், விழுந்த காயம் இவைகளுக்குத் தவளை முட்டைக் கருவில் மேற்கண்ட மருந்தை இழைத்துத் தடவ வேண்டுமென்றும்,

5. கதை, தடி, உலக்கை முதலியவைகளால் உண்டான காயத்திற்கு காக்கைமுட்டைக் கருவில் மேற்படி மருந்தை இழைத்துத் தடவ வேண்டும் மென்றும்,

6. கையால் அடிப்பட்டும் நகத்தால் கிள்ளுப்பட்டும் உண்டான காயங்களுக்கு, அன்றிற் பட்சி முட்டைக் கருவில் மேற்கண்ட மருந்தை இழைத்துத் தடவ வேண்டுமென்றும்,

7. வெகு விதத்தில் ஊறுபட்டு ஆருமலிருக்கிற பழம் புண்காயங்களுக்கு ஆமை முட்டைக் கருவில் மேற்கண்ட மருந்தை இழைத்துத் தடவ வேண்டுமென்றும் கூறப்பட்டுள்ளன.

புண் காயம் ஆறும் வரை இதைச் செய்யவேண்டும் என்ப.

பற்ப மகிமை.

இப்பற்பம், உடலிலிருந்து நீங்கிய வன்மையைத் திரும்ப கொடுத்து மகிழ்வை உண்டு பண்ணும் என்பதாம்

### பற்பம் (வேறு).

''கவடியின் பொடிவிட மித்தசுர மறக்கண்டாவலி
அவிடத மாகிவாயு வுதகமதை யழிக்கும்
செவிகுடர்க் குரஞ்செயு மதுசெயு முறைதேனில்
ஒவுநிம் பத்திலரடு பொடிக்குப் பொடியுறவே.''

### பலகறைச் செந்தூரம்.

ஒரு பலம் (35 கிராம்) சுத்தி செய்த பலகறைப் பொடிக்கு, மாம்பட்டைச்சாறு, ஆனைவணங்கிச் சாறு, விடத்தெரிச்சாறு, செருப்படைச்சாறு இவைகளைப் பற்பத்திற்குக் கூறிய அளவின் படி விட்டரைத்து, வில்லை செய்துலர்த்திக் கவசித்துப் புடமிட் டெடுக்கச் செந்தூரமாம்.

| துணை மருந்துகள். | தீரும் நோய்கள். |
|---|---|
| வெள்ளுள்ளிச்சாறு .. | கப வேதனை. |
| ஆத்திச்சாறு .. | காங்கைப்பிணி. |
| தும்பைச்சாறு .. | வாதசுரம். |
| வெந்நீர் .. .. | பித்தசுரம். |
| சர்க்கரை .. .. | சந்நிவெப்பம். |
| வெண்ணெய் .. .. | மூலம். |
| ஆனைக்காஞ் சொறிச்சாறு | உருத்திரவாயு. |
| இலவணம் .. .. | மூடிகவாதசுரம். |

இதனை, 2½ (325 மி. கிரா.) முதல் 5 குன்றி (650 மி. கிரா.) அளவுவரை கொடுத்துவர, நீரெரிச்சல், பிரமேகம் நீங்கும். இதனைக் களிம்பாக்கிப் புண்ணுண்டாக்கிச் செய்கைக்காக உப யோகிப்பதுண்டு.

### குட்டங்குறை நோய்ப் புண்களுக்கு.

''தேசிப் பழத்தின் சாறெடுத்துத் திரும்பக் கலச மதனிலிட்டு
பேசும் பலகறை தானெட்டுப் பேணிக் கலச மதிலிட்டு
வாசமாக மூடியிட்டே மறுகால் ரவியில் வைத்ததனைக்
கூச வேண்டா மாறுநாள் கொதித்து வெந்து நீறுமே.

வெந்து கொதித்த நீறதனில் மிகுந்த எள்ளி னெய்விட்டுச்
சிந்தை மகிழக் குழைத்தெடுத்துத் திரும்பப் புண்மேலிடுவீரேல்
வந்த குட்டங் குறைநோயும் வறிய புண்ணு மாறிவிடும்
சிந்தை மிகவே சிவனாணை தீரு மென்றார் திருமுனியே.''

இது பஞ்சசுண்ணக் குகையில் ஒன்றாய்ச் சேர்க்கப்படுகிறது.

---

## பன்றி.

## SUS INDICUSHOG, SWINE, PIG.

வேறுபெயர் : கிடி, கோலம், வராகம், அரி.

இதில் ஊர்ப்பன்றி, காட்டுப்பன்றி, முள்ளம்பன்றி என்று மூவகை உள. இவற்றுள் ஊர்ப்பன்றியின் மாமிசத்தால், அனந்த நோய்கள் வளர்ந்தெழுநது, உண்ணும் மருந்துகள் பயனற்றுப் போகுமாகையால், முள்ளம் பன்றியின் இறைச்சியும், காட்டுப் பன்றியின் இறைச்சியுமே சிறந்தது.

பன்றியின் மாமிசத்தையும், கொழுப்பையும் உள்ளுக்குக் கொடுப்பது நாட்டு வழக்கம். இதற்கு, உள் அழலாற்றி, வறட்சிய கற்றி, மலமிளக்கி ஆகிய செய்கைகள் உள. இதன் குணத்தைக் கீழ்க்காணும் செய்யுட்களால் உணர்க.

''ஏறிய வாதம் போகும் எழும்பிடுங் காசநோய்கள்
வீறிடும் விழிநோய் சீதம் விஷக்கடி கிரந்தி யுண்டாங்
கூறிடு மூலங் கீலங் குதங்குடல் வாதம் நாசம்
மாறிடு காட்டுப் பன்றி மாங்கிசந் தனையுண் பார்க்கே.''

(பொ-ரை) காட்டுப் பன்றி இறைச்சி வாதம், காசம், கண்ணோய் கபம், விடக்கடி, கிரந்தி, மூலம், தோலைப்பற்றிய நோய், குத நெகிழ்ச்சி, குடல் வாதம் முதலிய நோய்களை நீக்கும்.

''பன்றிநெய் நீர்க்கடுப்பு பாயுமூலத்திரத்தங்
கன்றிய வாதக் கடுப்பு முதற்றுன்றிய நோய்
போக்கும்..........

(பொ-ரை) பன்றி நெய்யினால் நீர்க்கடுப்பு, இரத்த மூலம், வாதக் கடுப்பு முதலியன நீங்கும். மற்றும் இதனால், அக்கி, தீச்சுட்ட புண்கள், ஆறாத குழிப் புண், சுளுக்குகள் ஆகியவையும் குணமாகும்.

**பயன்.**

பன்றிக் கொழுப்பை ஓர் இருப்புச் சட்டியிலிட்டு அடுப்பேற்றிச் சிறுதீ கொண்டு உருக்கி நெய்யாக்கி வடித்துக் கொண்டு, கோழி இறகால் தொட்டு, அக்கிப் புண், தீப்பட்ட விரணம், குழிப்புண் இவைகளுக்குப் போட்டு வர விரைவில் ஆறும்.

இந்நெய், புண்களுக்குச் செய்யப்படும் களிம்புகளில் சேரும்.

சாம்பிராணி ஒரு பங்கும் பன்றி நெய் நாற்பது பங்கும் எடுத்து, நெய்யை உருக்கி, அதில் சாம்பிராணிப் பொடியைக் கூட்டி மேலுக்கு உபயோகிக்கலாம். இது சீக்கிரத்தில் கெட்டுப் போகாது. இதனால், பன்றி நெய்யினால் நீங்கக் கூடிய பிணிகள் நீங்கும்.

### சிலைத் தைலம்.

பன்றி நெய் 20 பலத்தை (700 கிராம்) ஒரு பாண்டத்திலிட்டு அதில் அரசு, ஒதி, வேல், நெல்லி, செம்புரா இவைகளின் பட்டைச் சாறு வகைக்குப் பலம் 2 (70 கிராம்) புங்கம்பால் பலம் 2 (70 கிராம்) விட்டுச் சாதிலிங்கம், களிப்பாக்கு, காய்ச்சுக்கட்டி என்னும் கற்கத் திரவியம் வகைக்கு பலம் ஒன்று (35 கிராம்) ஆக நிறுத்துப் பொடித்து அதிற் போட்டு, மூன்று நாளூறிய பின்பு, நான்காவது நாள் அடுப்பில் வைத்து மெல்லென எரித்துப் பதத்தில வடித்து வைத்துக் கொண்டு பூசினால், புரையோடிய விரணங்ள எல்லாம் ஆறிப்போம்.

---

## பாம்புச் சட்டை.

## SNAKES SLOUGH.

இதனை நெருப்பிலிட்டுப் புகைக்கச்செய்து, அதைக் குழந்தைகளின் முகத்தில் படும்படிச் செய்ய, தோடம் நீங்கும். இப்புகையின் நாற்றம் நீங்க, உடனே சாம்பிராணிப் புகை காட்டுவதுண்டு.

பாம்புச் சட்டை, கழுதையின் இடது பாகத்திலுள்ள சடை மயிர் ஆகிய இவை இரண்டையும் சிவப்புச் சீலையில் சுற்றி, வேப்பெண்ணெய் விட்டுக் கொளுத்திச் சுடர்த் தைலம் வாங்கி, மூன்று நாட்களுக்கு ஆறு வேளைகள் ஒரு கரண்டி வீதம் உள்ளுக்குக் கொடுத்து மேலுக்கும் பூசினால் பயித்தியம் தீரும்.

(புலிப்பாணி வைத்தியம் 500)

---

## பாலும் பாற்பொருள்களும்.

## LACTUS.

## MILK AND MILK PRODUCTS.

வேறு பெயர் : பயம், க்ஷீரம், சுதை, பயசு, பாகு, அமுது, துத்தம், சாறு.

பசுவின் மடியில் இருந்து சக்கை நீங்கி ஒழுகும் பொருளுக்குப் பால் என்று பெயர் சொல்லப்படும்.

பால், ஊன்செய் பொருளும், சருக்கரையும், நில உப்புக்களும் இவைகளோடு கொழுப்பின் நுண்துளிகளும் சேர்ந்து நீர்மயமாய் இருக்கின்றது. பாலில் முக்காலே அரைக்கால் பங்கு நீர் உண்டு.

இதன் நிறம் வெண்மை. ஆகையினுல், இதில் ஏழு நிறங்கள் கலந்துள்ளன.

பாலில் உள்ள ஊன் செய் (Casein) பொருள் மிகு விரைவில் செந்நீரில் கலந்து கொள்கிறது. பாலில் உள்ள கொழுப்பும் சர்க்கரையும் உடலுக்கு வெப்பமும் வன்மையும் கொடுக்கின்றன. பாலில் உள்ள நில உப்புக்களில் சேர்ந்திருக்கும் சுண்ணும்பும், எரியமும் (Phosphorous) மூளையையும் நரம்புகளையும் செவ்வனே வேலை செய்யுமாறு செய்கின்றன. இந்த உப்புக்களுடன் உவரமும் (Zodium) சேர்ந்து, தூம்பற்ற சுரபிகளுக்கு (Duotless glands) எழுச்சி மருந்துகளாக உபயோகப்படுகின்றன. மற்றும் சுண்ணும்புச் சத்திஞல் பற்களும் எலும்புகளும் உறுதி அடைகின்றன. உடற்குள்ளே பால் சென்றவுடனே, செந் நீரின்கண் உள்ள வெள்ளை அணுக்கள் அதிகப்பட்டு, நோயை அணுக ஒட்டாமல் தடுக்கின்றது. பாலில் காடிப் பொருள்களும் உண்டு. அவைகள், உணவுப் பொருள்களை மாற்றமடையச் செய்து செந்நீரில் கலக்கப் பேருதவி செய்கின்றன. இதனுல் பாலில், உயிர்களின் வளர்ச்சிக்கும் உரத்துக்கும் வேண்டிய பொருள்கள் எல்லாம் கூடி முழு உணவுப் பொருளாய் அமைந்து இருக்கின்றது.

பாலும் பால் சேர்ந்த பொருள்களும் சிறந்த உணவாகின்றமையினுலும், காய்ச்சாமலே பாலை அருந்தக் கூடுமாகையினுலும், இஃது, எப்பொருளும் ஈடாகாத முழு உணவுப் பொருளாய் இருப்பதினுலும், பாலில் இருந்து உண்டாக்கப்படும் தயிர், மோர், வெண்ணெய் முதலிய உடன்படு பொருள்களும் உரந்தரும் உணவுகளாக இருக்கின்றமையாலும் பாலில் உய்வன (Vitamins) அனைத்தும் அடங்கி இருத்தலினுலும் இது சிறந்த உணவாகக் கருதப்படுகின்றது.

### பாலின் வகைகளும் குணங்களும்.

பாலில் சிறந்தது ஆவின் பாலே ஆகும். தமிழ் மக்களால் பழைய காலந் தொட்டே இதனுடைய சிறப்புகள் நன்கு உணரப் பட்டு வந்திருக்கின்றன. ஆயர்கள், பாலில் தயிர், மோர், வெண்ணெய் முதலிய பொருள்களைக் கண்டு வழங்கும் கலையினை அறிந்திருந்தார்கள். இத்தகைய ஆவின் பாலிலும் புகர்நிறப் பசு (கபிலை), செந்நிறப் பசு ஆகிய இப்பசுக்களின் பால் மிகவும் சிறந்தது. ஆவின் பாலில், ஐம்பூதத் தன்மைகளும் உள்ளன. பால் ஆகாசக் கூறும், தயிர் வளிக்கூறும், நெய் தீயின் கூறும் மோர் நீரின் கூறும், வெண்ணெய் மண்ணின் கூறும், உடையனவாக இருக்கின்றன.

**ஆவினது பாலின் பொதுக் குணம்.**

''பாலர் கிழவர் பழஞ்சுரத்தோர் புண்ணுளி
சூலையர் மேகத்தோர் துர்பலத்தோர் ஏலுமிவர்
எல்லார்க்கும் மாகும் இளைத்தவர்க்குஞ் சாதகமாய்
நல்லாய் பசுவின்பால் நாட்டு''.

(பொ-ரை) பசுவின் பாலானது, குழந்தைகட்கும் கிழவர்கட்கும் பழைய சுரம், புண், சூலை, பிரமேகம், துர்ப்பலம், மெலிவு (இளைப்பு) ஆகிய இவைகளை உடையவர்களுக்கும் ஆகும் என்க.

தேரன்காப்பியத்திலும், தருவிலும் கீழ்க்காணுமாறு பால் வகைகளுக்கு குணம் கூறப்பட்டுள்ளது.

''உணவின் பகுதியை யோதலுற் றனமினிப்
பணிவுள வெண்பசும் பாலிளைப் பாற்று
நற்பசு வின்சுதை நாவிளைப் பாற்றிடும்
பொற்பான செம்பசு போக்குங் கயப்பிணி
புள்ளியா மேகநோய் போக்கிடு நிச்சய
மடாச்சுதைத் தீபன மாக்கிடு மட்டபால்
விடாத்தொடர் காத்திர வெம்மையை மாற்றுமே.''

(தேரன் காப்பியம்)

பொ-ரை) வெண்மையாகிய ஆவின் பால் களைப்பைப் போக்கும். காராம் பசுவின் பால் தாகத்தைத் தணிக்கும். செம்மை நிறமுள்ள ஆவின் பால் க்ஷயரோகத்தையும், புள்ளிகளையுடைய ஆவின் பால் மேக ரோகத்தையும் போக்கடிக்கும். காய்ச்சாத பால் பசி தீபனத்தை உண்டாக்கும்; காய்ச்சிய பால் சரீரத்தில் உள்ள வெப்பத்தைத் தணிக்கும்.

ஆட்டுபாற் கபம் பசு—மாட்டுப் பாலனல் வெள்ளை
யாட்டுப்பாற் பித்தம் பள்ளை யாட்டுப் பால்வளிக் கபம்
கோட்டுமே திப்பால் வாதம்—காட்டெரு மைப்பா லையம்.

(தேரன்தரு)

(பொ-ரை) ஆட்டுப்பால் கபத்தையும், பசுவின் பால் வெப்பத்தையும், வெள்ளாட்டுப் பால் பித்தத்தையும், பள்ளை ஆட்டுப் பால் வாத கபத்தையும், எருமைப்பால் வாதத்தையும், காட்டு எருமைப் பால் கபத்தையும் அதிகப்படுத்தும்.

பதார்த்த குண சிந்தாமணியில் கீழ்க்காணுமாறு பால் வகைகளும் அதன் குணங்களும் கூறப்பட்டுள்ளன.

**வெண்மை செம்மை கருமை கபிலை என்னும் இந்நிறமுள்ள பசுக்களின் பாற்குணம்.**

''வெண்பசுவின் பால்போக்கும் பித்தத்தை மெய்சிவந்த
வண்பசுவின் பால்போக்கும் வாதத்தைக் கண்சிறந்த
காராவின் பால்போக்கு மையங் கபிலைப்பால்
ஆரமிர்தாந் தோஷ மறுக்கும்.''

(பொ-ரை) வெண்மைநிறப் பசுவின்பால் பித்தகோபத்தையும், செம்மைநிறப் பசுவின் பால் வாத தோஷத்தையும், கருமை நிறப் பசுவின் பால் கபரோகத்தையும், கபில நிறப் பசுவின் பால் திரி தோஷத்தையும் போக்கும். கபிலை என்பது கருமை கலந்த பொன்னிறமாம் என்க.

### காராம் பசுவின் பாற்குணம்.

''கண்ணோ யகற்றுங் கயரோகந் தான்போக்கு
மண்ணிலுள்ள பால்தோஷம் மாற்றுங்காண்—பெண்ணே
இரத்தபித்தம் போக்கு மிராச வசியங்
கறுத்தபசும் பாலதனைக் காண்.''

(பொ-ரை) பெண்ணே காராம் பசுப் பால் விழிப்பிணி, க்ஷயம், மற்ற பாலின் தோஷங்கள், ரத்த பித்த ரோகம் இவைகள் நீக்கும். வசியமாம்.

### நாரைமான் கபிலை என்னும் பசுக்களின் பாற்குணம்.

''நாரைப் பசுவின் பால் நாளுமுய லேயகற்று
மாரை நிறப்பசும்பால் வாய்த்திடினோ வேரையுறு
முப்பிணியும் போகு மொழிகபிலை யின்பாலுக்
கெப்பிணியும் போமே யிறங்கி.''

(பொ-ரை) நாரைப் பசும்பால் முயல்வலி தீர்க்கும். கபிலை பசும் பாலால் திரிதோஷமும் பல பிணியும் தீருமென்க.

### கொம்பசையும் பசுவின் பாற்குணம்.

''கொம்பசையு மாப்பாலோ கூறுபித்தம் போக்கிவிடும்
தம்பவா தத்தைத் தருவிக்கும்—வம்புமுலை
மானேகேள் விந்துவை வளர்க்குங் கபமதனைத்
தானே யெழுப்புமெனச் சாற்று.''

(பொ-ரை) அசைகின்ற கொம்பையுடைய பசுவின் பால், பித்தரோகத்தை நீக்கும்; தனுஷ்தம்ப வாதம், சுக்கில தாது, கபநோய் இவைகளை வளர்க்கும்.

### மூன்றுமீற்று நான்காமீற்றுப் பசுக்களின் பாற்குணம்.

''மூன்றுமீற் றின்பால் முதிர்கபத்தைப் போக்கிவிடும்
ஏன்றநா லாமீற் றெனும்பாலுங் கூன்றுதிரி
தோட மகலுஞ் சுகமுண்டிவ் வாப்பாற்சந்
தோடமெ வர்க்குமுண்டாக் கும்.''

(பொ-ரை) மூன்றும் ஈற்றுப் பசுவின் பால் நீடித்த சிலேஷ்ம நோயையும் நான்காம் ஈற்றுப் பசுவின் பால் வாதாதி மூன்று தோஷங்களையும் நீக்கும். சரீர சவுக்கியத்தையும் மகிழ்ச்சியை யும் உண்டாக்கும்.

ஆகாப் பசுவின் பாற்குணம்.

''விஞ்சு வரணை தாராநோய் மிகுத்துச் சுழலல் வெண்புள்ளி
துஞ்சி யலைந்து மலமருந்தல் சுடுகா டேகி யெலும்புணலிவ்
வஞ்சு வகையி னுவின்பா லாகா தணுகிற் றிரிதோஷம்
நெஞ்சி லடையுங் கயநோயா னிறைந்த வயதுங் குறைந்
திடுமே.''

(பொ-ரை) அரணை நோய், தாரா நோய்களை யுடையதாயிருத் தல் மிகவுஞ் சுற்றுதலோடு வெண்புள்ளி பெற்றிருத்தல், தூங்கித் திரிந்து மலம் அருந்தல், சுடுகாட் டெலும்பு உண்ணல் ஆகிய ஐந்து வகையான பசுக்களின் பால் ஆகாவாம். இவை சேருமாகில், வாதாதி மூன்று தோஷங்களும் மார்பிற் சேர்ந்து, க்ஷயத்தை விளைப்பதும் ஆயுளைக் குறைப்பதும் செய்யும்.

பகற்பசுவின் பாற்குணம்.

''பகற்பால் சிசுகட்குப் பக்குவமென் றுலும்
விகற்பமு டன்பருக மெய்யே—யெதற்குமிகத்
தீதடரச் செய்யுமித்தாற் சேராதுட் காய்ச்சலனல்
தாதுவிழும் பூங்குழலே சாற்று.''

(பொ-ரை) பகற்பசுவின்பால் குழந்தைகளுக்குப் பக்குவமா மென்றாலும், பற்பல கபநோயையும், தாம்பூலம் புளிப்பு முதலி யன சேருமிடத்துக் கெடுதியையும் செய்யும்; உட்சூட்டையும் வெப்பத்தையும் நீக்குமென்க.

இராப்பசுவின் பாற்குணம்.

''பகற்பசும்பால் காய்ச்சிப் பருகி னழலும்
விகற்பமு மீளையுமி ராவாம்—புகல்பித்த
வேகமும்போ மேனியெல்லா மேயிடுந் தாதுவுமாம்
போகமுமுண் டாகும் புகல்''.

இதுவுமது.

''இரவின்பால் கண்ணி லெழுபிணி போக்கும்பின்
பரவியநோ யும்போக்கும் பாரில்—விரகமுற்றூர்க்
கத்தியம் பன்னவிழி யாயிழையே யாவருக்கும்
பத்தியமா மென்றைக்கும் பார்''.

(பொ-ரை, பகலிற் சுரந்து இரவில் கறக்கின்ற பாலை விதிப்படி காய்ச்சியருந்த, தேக அழற்சி, கபரோகம், சுவாசம், பித்தகோபம் நேத்திர வியாதி, விந்துவின் கெடுதியா லனுசரித்த சிற்சில ரோகங்கள் ஆகிய இவை நீங்கும். தேகத்தில் மினுமினுப்பும், சுக்கிலப் பெருக்கமும், மாதர் மேல் விருப்பமு முண்டாகும். இது பத்தியத்திற் குதவுமென்க. (பகல் முழுதுஞ் சுரந்திருந்து இரவில் கறப்பது பகற்பால்).

### எருமைபாற் குணம்.

''வாதத் திமிரை வரவழைக்கும் புத்தியினற்
றேதத் தெளிவைநனி போக்குங்காண்—கோதற்றே
யங்கத் துருமருந்தை யன்றே முறித்து விடும்
பங்கத் துறுமேதிப் பால்.''

(பொ ரை) எருமைப் பால் திமிர் வாயுவைத் தருவிக்கும்; தெளிந்த புத்தியின் கூர்மையையும், நல்ல மருந்தின் குணத்தையும் கெடுக்கும்.

### வெள்ளாட்டுப்பாற் குணம்.

''வெள்ளாட்டு பாலுக்குமேவியநற் றீபனமாந்
தள்ளாடு வாதபித்தஞ் சாந்தமாம்—உள்ளிரைப்புச்
சீதமதி சாரஞ் சிலேஷ்மமறும் புண்ணுறும்
வாத சிலேஷ்மமும்போ மாய்ந்து.''

(பொ-ரை) வெள்ளாட்டுப் பாலினால் வாதபித்த தொந்தம், சுவாச காசம், சீதாதிசாரம், கபதோஷம், விரணம், வாதத்தினுண்டாகிய வீக்கம் முதலிய துன்பந் தீரும். நல்ல பசியும் உண்டாமென்க.

### செம்மறியாட்டுப்பாற் குணம்.

''செம்மறிப்பால் பித்தஞ் சிலேஷ்மத்தை யுண்டாக்கும்
விம்மும் வயிறுமிக மேன்மூச்சாங்—கொம்மை
வருமுலையாய் பத்தியத்தில் வாராது வாய்வாம்
பருகுவர்க்கு நாளும் பகர்.''

(பொ-ரை) வாத ரூபமான செம்மறியாட்டுப் பால், பித்த சிலேஷ்ம தொந்தம், வயிற்றுப்புசம், மேற்சுவாசம் ஆகியவற்றை உண்டாக்கும்; பத்தியத்திற்குதவாது. இதனால், வாயு அதிகரிக்குமென்க.

### யானைப்பாற் குணம்.

''வாதம்போந் தாதுபுஷ்டி வந்தடரும் வன்பலமோ
யாதுபித்தங்கூடி யழகுதிக்குந்— தாதுமலர்த்
தேனைப்பா லிற்கலந்த தித்திப்பைப் போலிருக்கும்
யானைப்பா லுண்ணுமவர்க்கு.''

(பொ-ரை) தேனும் பாலுங் கலந்தது போன்ற இனிப்புடைய யானைப் பாலைக் குடிப்பவர்க்கு வாதகோபம் நீங்கும். சுக்கில விருத்தியும், மிகுவன்மையும், பித்த சம்பந்தமான நோயும், தேக அழகும் உண்டாகு மென்க.

### குதிரைப்பாற் குணம்.

''வீரியவி ருத்தி விளைக்குமழ குண்டாகுங்
காரியத்திற் காமங் கதிப்பிக்கும்—வாரார்
கரகமெனச் செப்புமுலைக் காரிகையே கேளாய்
துரகதப்பால் செய்யுந் தொழில்.''

(பொ-ரை) குதிரைப்பால் சுக்கிலப் பெருக்கத்தையும், சரீர வனப்பையும், புணர்ச்சியில் நிருவாகத்தையும் உண்டாக்கு மென்க.

### ஒட்டைப்பாற் குணம்.

''ஒட்டைப்பா லுக்குமந்த மூவாதம் சூலையோ
டட்டகு ணக்கரப்பா னுவதன்றி—மட்டிடாக்
காதிரைச்சன் மந்தமதி காசங் சுவாசமுமா
மாதரைக்கு ஞளும் வழுத்து.''

(பொ-ரை) ஒட்டைப் பாலினால் அக்கினி மந்தம், வாதசூலை, எண் விதக் கரப்பான், கர்னநாத செவிடு, புத்திக் குறைவு, அதி இருமல் இரைப்பு இவை உண்டாகும்.

### கழுதைப்பாற் குணம்.

''கழுதைப்பால் வாதங் கரப்பான் விரணந்
தழுதளையுள் வித்திரதி தானே—யெழுகின்ற
ஒட்டியபுண் சீழ்மேக மோடு சொறிசிரங்கு
கட்டியிவை போக்குங் கழறு.''

### இதுவுமது.

''கத்தபத்தின் பாற்குக் கரிய கிரந்தியறுஞ்
சித்தப்பிரமை பித்தந் தீருங்காண்—தத்திவரும்
ஐய மொழியு மதிக மதுரமுமாஞ்
செய்ய மடமயிலே செப்பு.''

(பொ-ரை) கழுதைப்பால் மிகு மதுரத்தை யுடையது; இது வாத நோய், கரப்பான், புண், தழுதளைரோகம், உள்வித்திரதிக் கட்டி, ஒட்டுக் கிரந்தி, சீழ்ப்பிரமேகம், சொறி சிரங்கு, கட்டி, கருங் கிரந்தி, சித்தப்பிரமை, பித்த தோஷம், கபநோய் இவைகளை போக்கும்.

### பாத்திர பேதத்திலுண்டாகிய பாற் குணம்.

''செம்பிலிடும் பால்வாத சீதமொழிக் கும்பொன்மண்
கும்பத் தடுபால்போக் கும்பித்தை—யம்புவியுள்
வெள்ளி யறையிரும்பில் விட்டுக்காய்ச் சும்பாலாற்
றுள்ளியுறை யையமறுஞ் சொல்.''

(பொ-ரை) செப்புப் பாத்திரத்தில் காய்ச்சிய பால் வாத சிலேத்மத்தையும், பொன் மண் பாத்திரங்களில் காய்ச்சிய பால் பித்த தோஷத்தையும் வெள்ளி வெண்கலம் இருப்புப் பாத்திரங் களிற் காய்ச்சிய பால் காசரோகத்தையும் போக்கு மென்க.

### ஆடையெடுத்த பாற்குணம்.

''ஆடை யெடுக்கும்பா லக்கினிமந் தப்படுமே
வாடைநல்லாய் சீரணமாம் வாதமறுங்—கோடையிடி
போலு மெழுந்தபித்தம் போகுமே கூரியசீர்
வேலனைய கண்ணுய் விதி.''

(பொ-ரை) ஏடு நீக்கிய பாலால் அக்கினி மந்தமும் சீரணமும் உண்டாம். வாத பித்த கபதோஷங்கள் நீங்குமென்க.

### காய்ச்சும் பாலுக்கு நீரளவை கூறல்.

''ஆடுபசும் பால்காய்ச்சி லஷ்டபா கம்புனலாம்
நீடெருமை செம்மறிக்கு நேர்நேராந்—தேடரிய
சுக்குசிறு காஞ்சொறிவேர் கூட்டிச் சுவறியபா
லொக்கும்வெள் ளாட்டுப்பாற் குரை.''

(பொ-ரை) வெள்ளாடு, பசு இவைகளின் பாலுக்கு எட்டி லொரு பங்கும், எருமை செம்மறியாடு இவைகளின் பாலுக்குச் சரிபங்கும் நீர் விட்டுக் காய்ச்ச வேண்டும். எவ்விதப் பால் களுக்கும், சுக்கு சிறுகாஞ்சொறி வேர் சேர்த்துக் காய்ச்சில், அவைகள் வெள்ளாட்டுப் பாலுக்கு ஒப்பாகும்.

### பாலேட்டின் குணம்.

''பாலேட்டாற் பித்தமறும் பாழ்த்தகொடும் வாந்தியும்போம்
மாலாட்டு மூர்ச்சையும்போம் வன்பலமா—மேலாலே
தாதுமிகுந் தீபனமாந் தானே விளைத்தார்க்குக்
கோதுமறு மாமயிலே கூறு.''

(பொ-ரை) பாலிலுண்டாகும் ஏட்டினுல் பயித்திய நோயும், கொடிய வாந்தியும், மூர்ச்சையும் நீங்கும். மிகுபலமும், சுக்கில மும், ஜடராக்கினியும் விருத்தியாம். இதைத் துர்ப்புல தேகிகள் உண்ணிலும் அவர்கள் உடலிலுள்ள குற்றங்கள் அறும்.

## முலைப்பாலின் பொதுக்குணம்.

''தன்னியமென் றேதிச் சருவதோ ஷங்கள்போம்
உன்னிய தாப மொழியுங்காண்—சந்நியொடு
வாதசுரம் பித்தசுரம் வன்கபச்சு ரந்தணியுங்
கோதில்வன் மையுண்டாங் கூறு.''

## இதுவுமது.

''இருந்தோஷம் போக்கு மிகற்கிரிச்சந் தீர்க்கும்
அருந்து மருந்தினனு பானம்—பொருநதுமது
அஞ்சனத்திற் காகு மனல்வறட்சி நீக்கிவிடும்
பஞ்சினடி மாதர்தம் பால்.''

(பொ-ரை) தாய்ப்பாலானது ஏழுவகைத் தோஷங்கள், வெப்பம், சந்நிபாதம், வாத பித்த கப சுரங்கள், திரிதோஷம், வாத கிரிச்சரம், நாவறட்சி, ஆகிய இவைகளைப்போக்கி வன்மையைத் தரும். மருந்தனுபானத்திற்கும் கலிக்கத்திற்கும் ஆகுமென்க (தன்னியம்—முலைப்பால்).

## கருமை செம்மைநிற மாதர்களின் முலைப்பாற் குணம்.

''கரியநிற மாதர் கலசமுலைக் கீரம்
அரியவிழிக் காமருந்திற் காகா—திருநிலத்துள்
நோயணுகாச் செய்ய நுடக்கிடையார் தம்முலைப்பால்
தீயமுத்தோ ஷம்போக்குஞ் சேர்''.

(பொ-ரை) கரிய நிறமாதர் முலைப்பால், கண் வயித்தியங்களுக்கே யன்றி ஔஷதங்களுக்கும் உபயோகமாகாது. வியாதி இல்லாத செம்மை நிற மாதர் முலைப்பால் வாதாதி முத்தோஷங்களையும் போக்கும் (சீரம்-பால்).

## பரத்தையரின் முலைப்பாற் குணம்.

''பரத்தை முலைப்பாற்குப் பாரமுத் தோஷங்கள்
உரத்து வரும்வாத முண்டாகும்—இரத்தச்
சொறிகிரந்தி புண்ணுந் தொடர்கழறேய் சேருங்
குறியறிந்து நீக்கிக் கொடு''.

(பொ-ரை) வேசையர் முலைப்பாலால் திரிதோஷங்கள், வாத ரோகம், இரத்தச்சொறி, கிரந்தி, விரணம், கழல்வாதம் இவை உண்டாகுமென்க.

## தயிரின் பொதுக் குணம்.

''தயிருணப் பயித்திய சஞ்சல மகற்றி மெய்
யெயிலென வின்பமு மெய்திடப் புரியும்.''

(பொ-ரை) பித்தாதிக்கத்தினால் உண்டாகும் சாதாரண நோய்களை எல்லாம் ஒழித்து உடம்பிற்கு உறுதியையும் சுகத்தினையும் உண்டாக்கும்.

### தயிர் வகை.

#### பசுவின் தயிர்க் குணம்.

''பசுவின் றயிராற் பசிமிகவு முண்டா
மிசிவுறும் சீரணனோ யேகு—பசையகன்ற
தாக மிளைப்பிருமல் தாங்கொணா மெய்யெரிவு
மேகு முலகி லியம்பு.''

(பொ-ரை) பசுவின் தயிரால் பசியுண்டாகும்; இசிவு, சீரணரோகம், தாகம், களைப்பு, இருமல், எரிச்சல் இவை நீங்கும்.

#### ஆடையெடுதத தயிர்க்குணம்.

''ஆடை யெடுத்தயி ரையமி ளைப்பறுக்கும்
நாடு கிரிச்சரத்தை நாடவொட்டா—தாடொலியா
லுண்டாங் கிராணி யுறைமேகம் போக்கிவிடுந்
தண்டார் குழலணங்கே சாற்று.''

(பொ-ரை) ஏடு நீக்கிய தயிரானது சிலேஷ்மரோகம், ஆயாசம் மூத்திரக்கிரிச்சரம், வாதகிராணி, மேகரோகம் இவைகளை நீக்குமென்க.

#### எருமைத் தயிர்க் குணம்.

''எருமைத் தயிருக் கெரிவுபித் தம்போம்
வருமை கரப்பனொடு வாதம்—பெருமிதஞ்சேர்
தூல வுடலுமுமாந் தூயறிவு மந்தமுறுங்
கோல விழிகுளிருங் கூறு.''

(பொ-ரை) எருமைத் தயிரினால் எரிச்சலும் பித்தநோயும் போகும். கபத்தைப்பற்றிய கரப்பான், வாதரோகம், அதிதூலரோகம், புத்தி மந்தம், கண்ணுக்குக் குளிர்ச்சி ஆகிய இவைகள் உண்டாகுமென்க.

#### வெள்ளாட்டின் தயிர் மோர் இவைகளின் குணம்.

''வெள்ளாட்டின் வெண்டயிரோ மிக்கனல மாகுமதற்
குள்ளாடை யான்மந்த முண்டென்பார்—வெள்ளாட்டின்
மோரோமே கத்தை முதிரா தடித்துவிடும்
பாரோ ரறியப் பகர்.''

(பொ-ரை) வெள்ளாட்டின் தயிரால் அதிக உஷ்ணமும், அதன் ஏட்டால் மந்தமும் விளையும். மோரானது பிரமேக ரோகத்தைப் போக்கும்.

## செம்மறியாட்டுத் தயிர்க் குணம்.

"செம்மறியின் றன்தயிரைத் தின்ன மதுரமிகுங்
கொம்மைமுலை மாதரசே கூறக்கேள்—அம்ம
கரப்பான் சொறியுங் கடுப்பிரத்த வாய்வு
முரப்பா முடல்கெடுமென் றோர்."

(பொ-ரை) மதுரமுள்ள செம்மறியாட்டின் தயிரை உண்டால் கரப்பான் சொறி, மூலக்கடுப்பு, இரத்தமூலம், வாதரோகம் ஆகிய இவைகள் பெருகுவதுமன்றிச் சரிரத்திற்குத் துன்பமுமுண்டாகும்.

## ஒட்டைத் தயிர் குணம்.

"தீபனமு முண்டாஞ் சிறுகரப்பான் புண்ணுமாற்
பூபதிபொன் மேனி புளகிக்குந்—தாபதமாம்
ஒட்டைத் தயிர்நிதமு முண்ணவதி தாகம்போந்
துட்டக் கிருமியறுஞ் சொல்."

(பொ-ரை) ஒட்டைத் தயிரைக் குடித்தால் ஜடராக்கினி, சிறு கரப்பான், விரணம், உடலிற்கு அழகு இவை உண்டாம். தாகமும் மலக்கிருமி ரோகமும் நீங்குமென்க.

## மோரின் பொதுக் குணம்.

"மோருண வளிமுதன் மூன்றையு மடக்கி
யாருமெய் யினைத்தின மாதரித் திடுமே."

(பொ-ரை) மோரானது வாத முதலிய முக்குற்றங்களையும் அதிகரிக்க வொட்டாமலடக்கி, உடம்பை நாடோறும் காப்பாற்றும்.

## மோர் வகை.

## பசுவின் மோர்க் குணம்.

"வீக்க மகோதரமுள் வீறுகுன்மம் பாண்டுபித்தந்
தாக்குமருந் திட்டததி சாரமொடு—கூக்குரலே
மாறுத் திரிதோஷ மந்தமனற் றுகம்போம்
வீறுவின் மோருக்கு மெய்."

(பொ-ரை) பசுவின் மோரினால் வீக்கம், மகோதரம், வயிற்று வலி, பாண்டுரோகம், பித்தகோபம், இடுமருந்தால் வரும் நோய்கள், பேதி, திரிதோஷம், அக்கினிமந்தம், வெப்பம், நீர்வேட்கை இவைகள் போம்.

## எருமை மோர்க் குணம்.

"தாகங் கிராணி சலங்கழிச்சல் காமாலை
ஆகங் குடைபுழு மற்றுப்போ—மோகமுவுறந்
தேவா மிருதமுமாஞ் சீர்மா டோர்தமக்கு
மூவா மருந்தெருமை மோர்."

(பொ-ரை) எருமை மோரினால் தாகம், கிராணிரோகம், சலக் கழிச்சல், காமாலை, கிருமி ஆகிய இவைகள் நீங்கும். போக விருப்பமாம் சிறந்த மானிடர்களுக்கு இது கெடாத அமுத மாகும்.

ஓட்டையின் மோர்க் குணம்.

''ஓட்டைமோர் மெத்தவன லோங்கியவா தந்தணிக்குங்
கிட்டுமந்த நெய்ப்பெருமை கேட்பீரால்—நெட்டுலகின்
மந்தஞ்செய் தாலும் வலிவிந்து வைப்பெருக்கு
மந்தஞ்சேர் கண்ணு யறி.''

(பொ-ரை) ஓட்டையின் மோர் பித்தவாததொந்தத்தைச் சாந்தி செய்யும். அதன் நெய்யானது அக்கினிமந்தஞ் செய்வதா யிருந்தாலும், சுக்கில தாதுவை விருத்தி செய்யும்.

வெண்ணெய்ப் பொதுக்குணம்.

''வெண்ணெயை யுண்டிட விந்துவைப் பெருக்கிமேற்
றண்ணென மெய்வலி தனக்குர மாகுமே.''

(பொ-ரை) வெண்ணெயை உண்டால் தாதுவிர்த்தியையும், தேகத்திற்குக் குளிர்ச்சியையும், பலத்தையும் உண்டுபண்ணும்.

வெண்ணெய் வகை.

முலைப்பால் வெண்ணெய்க் குணம்.

கண்ணெரிவுங் கையெரிவுங் காலெரிவு நாசிகளி
லண்ணெரிவு மண்ணி லகன்றிடுங்காண்—தண்ணு
ரலைப்பால்வன் மாதுக் கணிசெய்யு மாதர்
முலைப்பால்வெண் ணெய்க்கு முரிந்து.''

(பொ-ரை) சிறந்த மாதர் முலைப்பால் வெண்ணெய்க்குக் கண், கை கால், நாசி இவ்விடங்களில் உண்டாகும் எரிச்சல் நீங்கும்.

பசு வெண்ணெய்க் குணம்.

''கண்ணி லெழுநோயுங் கண்ணெரிவும் பீளையும்போ
மெண்ணும் பசியு மெழும்புங்காண்—நண்ணரிய
ஆவினறும் வெண்ணெய்க் ககலும்வன் மேகமெல்லாம்
பூவினர்க் கெல்லாம் புகல்.''

(பொ-ரை) பசுவின் வெண்ணெயால் கண்ணோய், கண்ணெரிச்சல் பீளை சாரல், பிரமேகம் இவை போம். பசியுண்டாம்.

### எருமை வெண்ணெய்க் குணம்.

''எருமைவெண் ணெய்க்கில் லெரிநீ ரிழிவு
பருவமயி லேகேளிப் பாரிற்—கிருமியுறும்
மந்தமாம் வாதமிகு மாருக் கபங்கரப்பான்
ளுந்தமா நோயடருஞ் சொல்.''

(பொ-ரை) எருமை வெண்ணெயினால் பித்த மூத்திரகிரிச்சரம் நீங்கும். மலாசயக் கிருமி, அக்கினி மந்தம், வாத ரோகம், கபாதிக்கம், கரப்பான், தொந்தரோகம் ஆகிய இவைகள் உண்டாகும்.

### வெள்ளாட்டு வெண்ணெக் குணம்.

''வெள்ளாட்டு வெண்ணெயது வீறுசுரந் தான்போக்குந்
தள்ளாடு பித்தந் தணிக்குங்காண்—தெள்ளுமொழி
மானே பசியெழுப்பும் வன்கரப்ப னேகடற்குட்
டானே துரத்திவிடுஞ் சாற்று.''

(பொ-ரை) வெள்ளாட்டு வெண்ணெய் சுரரோகம், பித்த நோய் கரப்பான் ஆகிய இவைகளை நீக்கும். பசியை உண்டாக்கும்.

### ஓட்டை வெண்ணெக் குணம்.

''கட்டழகு செய்யுநற் காரிகையீர் கேண்மின்கள்
ஓட்டைவெண்ணெய் மந்த மொடுவாதங்—கிட்டவைக்கும்
நீரழிவுக் கேற்கு நிறைபித்தம் போக்கிவிடும்
பாரறியச் சொன்னோம் பகுத்து.''

(பொ-ரை) ஓட்டை வெண்ணெயானது நல்ல அழகையும் மந்தத்தையும் வாதரோகத்தையும் உண்டாக்கும். நீரிழிவையும் பித்த கோபத்தையும் நீக்குமென்க.

### நெய்ப் பொதுக் குணம்.

''நெய்யுண வுண்டவை நேர்வுறச் செய்துமேன்
மெய்யையுந் திண்ணிய மேருவெனச் செய்யும்.''

(பொ-ரை) நெய்யை வேண்டிய அளவாய் உணவுகளிற் சேர்த்து உட்கொள்ளின், அஃது உண்ட உணவைச் சரிப்படுத்திச் சரீரத் திற்கு மிகுந்த பலத்தையும் புஸ்டியையும் உண்டாக்கும்.

### நெய் வகை.

### பசுவின் நெய்க் குணம்.

''தாகமுழ லைசுட்கம் வாந்தி பித்தம் வாயுபிர
மேகம் வயிற்றெரிவு விக்கலழல்—மாகாசங்
குன்மம் வறட்சி குடற்புரட்ட லஸ்திசுட்கஞ்
சொன்மூலம் போக்குநிறைத் துப்பு.''

(பொ-ரை) பசுவினது நெய்யானது தாகம், உழலைப்பிணி, அதிசுட்கரோகம், வாந்தி, பித்தாதிக்கம், வாத விஷம், விரணப் பிரமேகம், வயிற்றிலெரிவு, பித்த விக்கல், இருமல், வயிற்றுவலி, வறட்சி, சிலேப்பு, குடல் நெளிதல், அஸ்தி சூம்பல், மூல ரோகம், ஆகிய இவைகளை நீக்கும்.

**காரம் பசுவின் நெய்க் குணம்.**

"காராம் பசுனெய்யாற் கண்ணுக் கொளியுண்டாம்
நீரார் விழிபுருவ நெற்றிசிரச்—சூரொழியும்
மெய்யிற் குழைவு மிளிர்பொன் னிறமுண்டாம்
நெய்யிலிது மேலே நிகழ்த்து."

(பொ-ரை) காராம் பசு நெய்யால் நேத்திரத்திற்கொளியும், உடல் வன்மையும், பொற் ற்யலும் உண்டாகும். கண், புருவம், நெற்றி, தலை இவைகளைப்பற்றிய நோய்கள் விலகும்.

**எருமையின் நெய்க் குணம்.**

"புத்திகெடு மெய்யழகு போதக் கெடுநயனம்
மெத்தவொளி மாறிவிடு மேதினியிற்—சத்தியமாம்
வாதமொடு பித்த மாருக் கரப்பானுங்
கோதெருமை நெய்யருந்திற் கூறு."

(பொ-ரை) எருமை நெய்யால் அறிவு, அழகு, கண்ணொளி இவைகள் மத்திமமாம். வாத பித்த தோஷம் கரப்பான் இவை உண்டாகும்.

**வெள்ளாட்டின் நெய்க்குணம்.**

"ஐயைப்போக் கும்வாதத் தாண்மையைக் கெடுத்துவிடு
மெய்வளர்க் கும்விழி யைத்துலக்கும்—வையகத்திற்
பத்தியத்திற் காகும் பயமிலைவெள் ளாட்டின்னெய
நித்தியங்கொண் டாலும்கொள் நீ."

(பொ-ரை) வெள்ளாட்டின் நெய்யை உண்ணில் அது சிலேஷ்மாதிக்கத்தையும் வாத கோபத்தையும் போக்கும்; சரீரத்தை வளர்ப்பது மன்றிக் கண்ணுக் கொளியை உண்டாக்கும்; பத்தியத்திற்கும் உதவும்.

**செம்மறியாடு, பள்ளையாடு இவைகளின் நெய்க்குணம்.**

"செம்மறியி னெய்யதனைத் தின்ன மதுரமுமாங்
கொம்மைமுலை மாதரசே கூறக்கே—ளம்முறுங்காண்
பள்ளையின்னெய் பித்தொழிக்கும் பாருலகி லெல்லாருங்
கொள்ளத்தான் மந்தமுறுங் கூறு".

(பொ-ரை) மதுரமுள்ள செம்மறியாட்டு நெய்யால், கபநோயதி கரிக்கும், பள்ளையாட்டு நெய் பித்த நோயை ஒழிக்கும்; மந்தமுமா மென்க.

### கலப்பு நெய்யின் குணம்.

''நெய்யுட் பலநெய்க்கு நீள்சுக்கி லம்பெருகும்
வெய்யபசி யுண்டாம் விடும்பித்த—மெய்யனலா
லுள்ளபித்த வெக்கைபோ மோங்குயிருந் தாணிலைக்குங்
கொள்ளத்தெரியுங் குணம்''.

(பொ-ரை) எருமை நெய் முதலிய கலப்பு நெய்யால் சுக்கிலம் பெருகும். தீபனமும் உண்டாம். பித்ததோஷமும் தேகக் கொதிப்பாலாகிய பித்த சுரமும் போம். உயிரைத் தாங்குகின்ற உடலும் பலக்கு மென்க.

## பால், பால் பொருள்களின் உபயோகம்.

### பசுவின் பால்.

மக்கள் தம் குழந்தைப் பருவத்திலிருந்தே பால் பருகி வருகின்ஞர்கள். குழந்தைகட்குப் பால் ஒன்றே தனி உணவாய் இருக்கின்றது. குழந்தையின் நிறம் விளக்கமடைய, அது கருவிலிருக்கும் போதே தாய், பாலில் குங்குமப்பூ முதலியன இட்டுப் பருகி வருவது வழக்கம். கல்வி பயிலுங் காலங்களில் மாணவர்களுக்குப் பால் சிறந்த ஞானம் பயக்கும் உணவாயிருக்கின்றது. பாலைக் கொண்டு பாலடிசில், பால்வடை, பால் கொழுக்கட்டை, பாலேடு பாற்கட்டி, பாற்பாயசம், பால் பொங்கல், பாற்கூழ், திரட்டுப் பால், பாற்குழம்பு போன்ற பல்வகைப்பட்ட உயர்ந்த பண்டங்கள் செய்து உணவாகக் கொள்ளப்படுகின்றது.

காச நோய் நீங்க, பாலில் காஞ்சொறி வேரிட்டுக் காய்ச்சி அருந்துவது பண்டை நாள்தொட்டு வழக்கில் இருக்கின்றது.

நோய் நீங்கியபின், முழுகுவதற்கு ஒமத்திற்குப் பசும்பால் விட்டு அரைத்துத் தலையில் தேய்த்துக் கொள்வதுண்டு.

பசுவின்பால், சுக்குத்தைலம், பிருங்கமலகத் தைலம், கீழ்வாய் நெல்லித் தைலம், பொன்னுங்காணித்தைலம் போன்ற பல முடித் தைலங்களில் சேர்க்கப்பட்டிருக்கின்றது.

சில தைலங்களுக்கு பசும்பால் சேர்க்கும் அளவைச் சொல்லியிருந்தாலும் வேண்டுமானால் அத்தைலத்திற்கு எண்மடங்களவு சேர்த்தாலுஞ் சேர்க்காலம். இதனை,

''பயசு தயிலத் தொகைக்கெண் கூறமைக்கினும்.''
என்ற அடியால் உணர்க.

பசுவின் பாலை அருந்தி வந்தால் பெண்களுக்குப் பால் சுரக்கும். இரத்தபித்தம், வாந்தி முதலிய பித்த நோய்கள் நீங்கும்.

சவ்வீரம், மயில்துத்தம், திராவகம் முதலிய விடப்பொருள்களை விடமிக்க அருந்தியவர்களுக்கு, விடமுரியப் பசும்பாலைக் கொடுக்கலாம்.

காலையில் பச்சைப்பாலைப் பருகிவந்தால், கைகால் எரிவு, காமாலை, இரத்தபித்தம், பாண்டு, தாது நட்டம், கபம் (மார்புச் சளி) இவை நீங்கும்; பலம் உண்டாம். குழந்தைகட்கும் பொருந்தும். இதனைத் தாரோஷணச் சிகிச்சை என்பர். அதாவது கறந்த பாலை சுடுகை ஆறுவதற்குமுன் உண்பதாம். இதனை,

"கையெரிவு காலெரிவு காமிலமி ரத்தபித்த
மெய்யரிவு பாண்டுநோய் விந்துநஷ்டம்—வெய்ய
விதயகபம் போம்புட்டி யெய்துஞ்சேய்க் கொவ்வு
முதயமதிற் பச்சைப்பா லுண்."

என்ற செய்யுளால் அறிக.

பால், பஞ்ச தீபாக்கினி, சரபுங்க வில்வாதி, வெண்பூசுணை, தேற்றான், இம்பூரல் போன்ற பலவகைப்பட்ட இலேகியங்களிலே சேர்க்கப்படுகின்றது.

கந்தகம், சிவதை, நிலாவாரை, அசுவகந்தி, பரங்கிச்சக்கை போன்ற பொருள்களையும், சூரணங்களையும் தூய்மை செய்வதற்குப் பால் பயன்படுத்தப்படுகின்றது.

பால், பற்பசெந்தூரச் சூரணங்களை அனுபானித்துக்கொடுக்கப் பயன்படுவதோடு, பத்திய உணவாகவும் வழங்கப்படும்; இது காப்பி, தேயிலை, கோக்கோ முதலிய பானங்களுக்கும், கோதுமை நொய், சவ்வரிசி, அரோ ரூட், பார்லி அரிசி முதலிய கஞ்சிகளுக்கும் உபயோகப்படுகிறது.

அதிசாரம், அசீரணசுரம், கபநோய் இருக்கும் காலத்தில் பாலை உபயோகிக்கக்கூடாது.

சன்னி சுரத்தில் பேதியிருந்தால், பசுவின் பாலைக் காய்ச்சி எலுமிச்சம் பழச்சாறு விட்டு முறித்து வடிகட்டித் தெளிவு நீரைக் கொடுப்பதுண்டு.

சோடாவில் பசும்பால் சேர்த்து உண்டால் வயிற்றுவலி, வாந்தி, நீர்கட்டு, நீர் எரிவு இவை நீங்கிப் பசியுண்டாம்.

மேக வெட்டை, கைகால் பிடிப்பு, சொறிசிரங்கு, கண் நோய்கள் போன்ற பல பிணிகளுக்கும், பாலை ஊசிவழி தசையினுட் செலுத்தல் மேனாட்டு முறை.

சிலர், சுர நோயில் பாலைப் பயன்படுத்தலாம் என்றும், சிலர் பயன்படுத்தக்கூடாதென்றும் கூறுகின்றனர்.

முற் கூறியவர், வயிற்றில் ஐயக்குற்றத்தால் வெப்பு உண்டாவதால், பாலைப் பயன்படுத்த ஐயம் மிகுந்த காய்ச்சல் எளிதில் தீராதென்பர். பிற்கூறியவர், வெப்பின் சூட்டைத் தணிக்கப் பாலைச் சிறிய அளவில் கொடுக்கலாம் என்பர்.

பாலில் திப்பிலி, அதிமதுரம், மிளகு இவைகளிலொன்றைச் சிறிதளவு சேர்த்துச் சீனைக் கற்கண்டு கூட்டிக் காய்ச்சிக் குடிக்கத் தொண்டைக் கட்டு, வரட்டு இருமல் நீங்கும்.

முலைப்பால்.—முலைப்பாலில் குழந்தைகளுக்கு வேண்டிய உணவுச் சத்துக்களெல்லாம் இருக்கின்றபடியால், எளிதில் சீரணமாகக் கூடிய சிறந்த ஆகாரமாக இருக்கின்றது. முலைப்பாலை உண்ணும் குழந்தைகளுக்குத் தொத்துநோய் உண்டாவதில்லை. குழந்தைகளுக்கு முலைப்பால் ஊட்டும்பொழுதே, அதனுடன் அறிவு, அன்பு முதலிய உயர்குணங்களைத் தாய்மார் அருளோடு செலுத்துகின்றனர்.

முலைப்பால் மருந்துகளுக்குப் பெரியதொரு அனுபானப் பொருளாகக் கொள்ளப்பட்டிருக்கின்றது.

சன்னி, சுர தோடங்களில் மலச்சிக்கல் உண்டாய் மலம் சாகு (ஆட்டு)ப் புழுக்கை போல் தீய்ந்தகாலத்து, முலைப்பாலை ஆகாரமாகக் கொடுத்துவர மலத்தை வெளிப்படுத்தும்.

சுரத்தைத் தணிக்க முலைப்பாலில் பச்சைக்கர்ப்பூரம், குங்குமப் பூ, இலவங்கம், வெற்றிலைக்காம்பு இவைகளைச் சிறிய அளவில் எடுத்து அரைத்துச் சேர்த்து, அப்பாலைச் சீலையில் தோய்த்து நெற்றியில் ஈரம் காயாமல் போட்டுவர சுரம், தலைவலி தணியும்.

நீர், மலம் இவைகள் கட்டுப்பட்டால், துணியை முலைப்பாலில் தோய்த்து அடிவயிற்றில் போட அவை இறங்கும்.

கண்ணோய்க்கு முலைப்பாலைக் கண்ணிலிடுவதும், கண் மருந்துகளை முலைப்பாலில் உரைத்து உபயோகிப்பதும் உண்டு. இதற்குக் கரியநிற மாதர்பாலைப் பயன்படுத்த வேண்டும் என்றும் கூறப்பட்டிருக்கிறது.

இலிங்கம், இரசச் செந்தூரம், பூரம் போன்ற தாதுப் பொருள்களைச் சுத்தி செய்யவும், சண்டமாருதச் செந்தூரம், கஸ்தூரி மாத்திரை போன்ற மருந்துகள் அரைப்பதற்கும் இப்பால் பயன்படுகின்றது.

சரணுதித் தைலம் போன்ற தைலங்களிலும் இது சேர்க்கப் பட்டிருக்கின்றது.

முலைப்பால், இஞ்சிரசம் இவை இரண்டும் சேர்ந்த எடைக்குச் சமன் நலலெண்ணெய் கூட்டிக் காய்ச்சி, முடித்தைலமாகப் பயன்படுத்த நீரேற்றத்தினால் உண்டான தலைவலி குணமாம்.

எருமைப்பால்.—மேலை நாடுகளில் எருமைகள் கிடையா. இந்தியாவில் பசுக்களை காட்டிலும் எருமைகள் அதிகம். பசும்பாலைவிட எருமைப் பால் ஊட்டத்தில் மேன்மைப்பட்டுள்ளது. இதில் தசை வளர்ச்சிக்குரிய பொருளும் கொழுப்பும் மிகுதியாய் இருக்கின்றன. எருமைப்பால் அழுத்தமாகவும், செரிப்பதற்குக் கடினமாகவும் இருக்கின்றது. அறிவுத் துறையில் உழைப்போர் பசும்பாலையும், உடலுழைப்புடையவர்கள் எருமைப் பாலையும் பயன்படுத்துகின்றனர் இஃது உடற்கட்டுகளை உறுதிபடுத்தும். எருமைப் பாலைக் குழந்தைகளுக்கும், பெண்களுக்கும், பிணியாளருக்கும், நோயினால் மெலிந்தவர்களுக்கும், அறிவுத் துறையில் உழைப்பவர்களுக்கும், கிழவர்களுக்கும் கொடுத்தல் கூடாது.

வெள்ளாட்டுப்பால்.—ஊன்செய் பொருளும், கொழுப்புப் பொருளும் குறைவுபட்ட வெள்ளாட்டுப்பால் இனிப்பிலும் குறைவுபட்டிருக்கிறது. இது விரைவில் செரிக்கக்கூடியது. மருந்துண்ணும் நோயாளிக்கு இப்பால் சிறந்த பத்தியப்பொருளாகும். நீர் மிக்க சூட்டினால் மஞ்சள் நிறப்பட்டுக் குறைந்தபொழுது இப் பாலை உண்டுவந்தால் அது விரைவில் குணமாகும்.

வெள்ளாட்டுப்பாலுடன் நீர் சேர்த்துக் காய்ச்சிக் கற்கண்டுத் தூள் சேர்த்து, காலை மாலைகளில் அருந்திவர கப நோய்கள் நீங்கும்.

பாண்டு, சோபை, காமாலை, ஆகிய நோய்களுக்கு அயம், அயகாந்தம் இவைகளாலாகிய செந்தூரங்களை வழங்கும்பொழுது, காய்ச்சிய வெள்ளாட்டுப் பாலைச் சோற்றுடன் கூட்டிப் பத்தியமாக உண்டுவரின் விரைவில் நோய்கள் நீங்கும்.

மிளகுத் தைலம், வாதகேசரித் தைலம், அமிர்தாமலகத் தைலம் நிர்க்குண்டித் தைலம், மூலயோக நிர்க்குண்டித் தைலம், உளுந்து தைலம், லகுவிடமுட்டித் தைலம் போன்ற தைலங்களில் வெள்ளாட்டுப் பால் சேர்க்கப்படுகின்றது.

கணை, கல்லீரல், மண்ணீரல் முதலிய நோய்களினால் வருந்தும் குழந்தைகளுக்கு வெள்ளாட்டுப்பாலை உணவாக வழங்கிவர அவை குணமடையும்.

இளைப்பு நோயினால் வருந்துகின்றவர்கள், பலவகைத் தாவரங்களை உண்ணும் இயல்புடைய வெள்ளாட்டுப் பாலை உண்டுவர பயனைத் தரும்.

கழுதைப் பால்.—கழுதைப் பால், மற்றெல்லாப் பால்களைக் காட்டிலும் இனிப்பாய் இருக்கும். இப்பால், உடல்வெப்பத்தையும்

கபத்தையும் தணித்துக் குளிர்ச்சியைக் கொடுக்கக் கூடியது. ஈளை போன்ற நுரையீரல் நோய்களுக்குச் சிறந்ததாகக் கருதப் படும்.

கழுதைப்பாலில் உள்ள பொருள்கள் எல்லாம் அநேகமாகத் தாய்ப்பாலில் உள்ள பொருள்களின் அளவையே ஒத்திருக்கின்றன. ஆதலின் இதைத் தாய்ப்பாலுக்கு அடுத்தது என்று சொல்லலாம், இஃது எளிதில் செரிக்கக் கூடியது. தாய்ப்பாலுக்குப் பதிலாக கல்கத்தா போன்ற இடங்களிலே கழுதைப் பாலைக் குழந்தை களுக்குக் கொடுக்கின்றனர்.

கழுதைப்பால் ஒரு சிறு பாலடை அளவில், ஓணான் இரத்தம் ஒன்று அல்லது இரண்டு துளிகள் கலந்து கொடுக்க, கருங்கிரந்தி நோய் நீங்கும். இந்நோய் வராமலிருப்பதற்காகவும் இது வழங்கப்படுகின்றது.

கழுதைப்பாலை அருந்தி வந்தால் மேக நோயும் பயித்தியமும் நீங்கும்.

பேரண்டபற்பம் செய்வதற்கும் அப் பற்பானுபானத்திற்கும் இப் பாலைப் பயன்படுத்துகின்றார்கள்.

குறிப்பு.—கழுதைப் பாலில் நெல்விட்டு வைத்தால் அது கெடாமலிருக்கும் என்று சொல்லப்படுகின்றது.

## தயிர்.

சாதாரணமாகப் பகல் உணவின் முடிவில் தயிர் சேர்த்து உண் பது வழக்கம். இதனால் உடலுக்கு அழகும் வன்மையும் உண்டாம். இரவில் உண்ணாமலிருந்தால் சன்னிநோய் சேராது. இதனை ''இராசனி யனையிலை இராசனி யிராசனீ'' என்ற அடியால் உணர்க.

வெள்ளை, வெட்டை, காமாலை நோய்களை நீக்கக்கூடிய பச்சிலை களை அரைத்துத் தயிருடன் கொடுப்பது வழக்கம்.

தயிரைத் துணியில் மூட்டையாக முடிந்து கட்டி, அதனின்று வடியும் தண்ணீரைக் குடல் மெலிந்தவர்கட்குக் கொடுத்துக் கொண்டுவர, அது உணவாகவுமாகி, வயிற்றில் காணும் வெப்ப புண்களையும் ஆற்றிப் பசியையும் உண்டுபண்ணும். இத்தயிர்த் தெளிவை (தயிர்மஸ்து) அரக்குத் தயிலம் போன்ற தைலங்களில் சேர்ப்பதுண்டு. தோல் நோய்களுக்கு நீரடி முத்து, கார்போக அரிசி, கொப்பரைத் தேங்காய், காட்டுச் சீரகம், கருஞ் சீரகம், கெந்தகம் இவைபோன்ற பொருள்களைத் தயிரில் கலந்து அரைத் துப்போட சொறி சிரங்கு, கரப்பான் முதலியவைகள் தீரும்.

அசீரண பேதிக்கு வழங்கப்படும் தயிர்ச்சுண்டிச் சூரணத்திலும் தயிர் சேருகின்றது. வற்றலிடவும் தயிர் உபயோகப்படு கின்றது.

## மோர்.

உணவுமுடிவில் மோர் சேர்ந்த உணவு உண்பது தமிழ் நாட்டில் பழக்கத்தில் இருக்கின்றது. இது மலசலக்கட்டு உண்டாகாமல் உடல் வெப்பத்தைத் தணிக்கும். ''நீரைவிட்டு மோரைப் பெருக்கு'' என்னும் பழமொழிப்படி, அன்று கடைந்த மோரை நீர் விட்டுப் பெருக்கித் தாராளமாய்ப் பயன்படுத்திக் கொண்டு வர கணுக்கால் வீக்கம், வலி, முதலியன நீங்கும். நீர் இறங்கும்.

கடுநடையாளரும் கடும்பசியுள்ளோரும் அதிக வெப்படைந்தோரும் பசுவின் மோரை யருந்த, அழல் தாகம் முதலியன தீர்ந்து நன்மையடைவர்.

குட்டம் முதலிய நோய்களுக்கு மருந்தருந்தும் காலத்து, நீர் பெருக்கிய மோரை அடிக்கடி உட்கொண்டுவர, சிறுநீர் வாயிலாகத் துர்நீர் கழிந்து சுகம் கொடுக்கும்.

மகோதரம், வயிற்றுவலி, பாண்டு, பித்தகோபம், பேதி, தாகம், பசிமந்தம் முதலிய நோய்களில், இது பத்தியப்பொருளாகவும் துணை மருந்தாகவும் வழங்கப்படுகின்றது.

சுத்தியாரநாளத் தைலம் போன்ற தைலங்களில் மோரின் நீர் சேர்க்கப்பட்டிருக்கின்றது.

## வெண்ணெய்.

வெண்ணெய்க்கு உள்ளழலாற்றி, உடலுரமாக்கி ஆகிய செய்கைகள் உள. உண்ணும் பொருள்களிலும் சிற்றுண்டி வகைகளிலும் வெண்ணெயைச் சேர்த்துக் கொண்டால் உடல் வன்மை பெறும்.

பழக்கிராம்பு பக்குவ வெண்ணெய் போன்ற கண்ணிலிடு மைகளிலும் அமிர்த வெண்ணெய், வங்க வெண்ணெய் போன்ற புண்ணிலிடு மருந்துகளிலும் வெண்ணெய் சேருகின்றது.

வெண்ணெய்யைத் தடவ வாயில் உண்டாகும் விரணங்கள் நீங்கும்.

சோறு வடித்துச் சூடாக இருக்கும் சமயம் சிறிது வெண்ணெய் கூட்டிபிசறி, ஒரு சுத்தமான துணியில் வைத்து முடிச்சுக்கட்டிப் பொறுக்கக் கூடிய சூட்டில் கண்களுக்கு ஒற்றமிடக் கண்வலி நீங்கும்.

நீரெரிச்சல், நீர்ச்சுருக்கு, நீரடைப்பு, வெள்ளை முதலிய நோய்களுக்கு கல்நார் பற்பம், சிலாசத்துப் பற்பம், குக்கில் பற்பம் முதலியவற்றை உள்ளுக்குக் கொடுக்கும்போது, பசுவின் வெண்ணெயை அனுபானமாகக் கொண்டால் விசேட நன்மை தரும்.

## நவநீத பற்பம் அதன் அளவு முதலியன.

''ஐயவி பூதி யவுரி கிலுகிலுப்பை
யையவி பூதி யறமிரட்டி—யையவி
யேகமட்ட மீன மிரட்டை துலாந்தனுவோ
யேகமட்ட மீனவனி யில்''.

(ப-ரை.) ஐய விபூதி—வெண்ணெயின் பற்பமாவது, அவுரி—நீலியிலைச்சாறு, கிலுகிலுப்பை-வட்டக் கிலுகிலுப்பைச் சாறு, ஐயவி—சீந்திற் சமூலச் சாறு, பூதி—குப்பைமேனிச் சமூலச் சாறு என்னும் இவற்றில் அரைத்துப் புடமிட, அறம் இரட்டி—தரும தேவதையைக் காட்டிலும் இருமடங்கு வெண்மையான பற்பமாம், ஐயவி ஏகம் அட்டம்—இப்பற்பத்தின் அளவு ஒரு கடுகு முதல் எட்டுக் கடுகு வரையிலுமாம், மீனம் இரட்டை துலாம் தனு ஒய்—பங்குனி, ஆனி, ஐப்பசி, மார்கழி என்னும் இம்மாதங்களை மருந்துண்ணுதற்கு ஒழிப்பாய், ஏகம் அட்டம் ஈன் அவனி இல்—ஒப்பற்ற அஷ்ட ஐஸ்வரியங்களையும் விளைவிக்கின்ற மருத நிலமே மருந்து சாப்பிடுவதற்கு இடமாகும்.

வெண்ணெய் பற்பமாவதற்கு, மேற்படி வெண்ணெய் ஒரு பலத்திற்கு நீலியிலைச்சாறு 1 பலம் (35 கிராம்) விட்டு அரைத்து, வில்லை தட்டி இரவில் பனியில் வைத்து, மறுநாளும் இப்படியே செய்து, எட்டு நாட்களரைத்து, எட்டு நாட்கள் நிழலிலுலர்த்தி அதன்பின் வட்டக் கிலுகிலுப்பைச் சாறு, சீந்திற் சமூலச்சாறு, குப்பைமேனிச் சமூலச்சாறு இவை ஒவ்வொன்றையும் தனித் தனியே விட்டு, முன்போன்றே ஒவ்வொன்றையும் எட்டு நாட்கள் அரைத்து, எட்டு நாட்கள் உலர்த்தி, இம்முறையில் அறுபத்து நான்கு நாட்கள் கழிந்த பின்பு, அறுபத்தைந்தாம் நாள் பில்லையை ஓட்டில் வைத்துக் கவசித்து, ஒரு நாள் வெய்யிலிலுலர்த்தி மறுநாள் காட்டு வரட்டியிற் புடமிட்டு ஒரு நாள் ஆறவைத்தெடுக்கப் பற்பமாம்.

இப்பற்பத்தை, ஒரு கடுகு முதல் எட்டுக் கடுகு வரையிலும் உண்ணில் முறையே உத்தமம், மத்திமம், அதமம், அதமாதமம் ஒரு புடைத் துணிவு, முழுத் துணிவு, அனந்தம், அபரிமிதம் என்பர். இதைப் பங்குனி, ஆனி, ஐப்பசி, மார்கழி என்னும் நான்கு மாதங்கள் நீங்க, மற்ற மாதங்களிலே மருத நிலத்திலே சாப்பிட வேண்டும். இதனை,

''வினவியதோர் மாணவனே யினிது கேளாய்,
வெண்ணெய்ப்பற் பம்பண்ணும் மார்க்கத் துண்மை
புனையவிரி யிடைக்கிடையே யொருநா ளென்ன
புகலிருநா லெனுமளவே பகண்டை சீந்தில்
வனைமேனி யிப்படியே யறுபா னன்கு
வைகலற மேற்புடமொன் றதின்மே லில்லைத்
தினையளது போதுமடா சகல நோயுந்
தினகரனைக் கண்டகனி சிவனும் பாரே.''

என்ற போகர் மூவாயிரத் திரட்டுச் செய்யுளினாலும்,

''கவினத்தி னடலையென்ன மொழியப் போமோ
கழறுகிறேன் புலத்தியனே மகனே கேளாய்
புவிமெச்சு மவுரிவட் டக்கிலு கிலுப்பை
பூதியைமு னமுதவல்லி நேர்க்கு நேரே
யிவினத்தி லறுபத்து நாலின் மேலே
யிடபுடமொன் றதிகமிலை யிசையும் வெண்மை
நவியத்தா லடிபடு தருக்க ளென்ன
நலிகளடி படும.தனை நண்ணு முன்னே.''

என்ற அகத்தியர் இருபத்தோராயிரச் செய்யுளினாலும்,

''ஐயப்பொடி யெண்வகை யாமளவை
யையப்படி லுத்தம மாதியதே
யையப்படி வாமென வாயுளர்
செயைப்பிரமைக் கஃதந் தகனே.

என்ற மாபுராணச் செய்யுளாலும் அறியலாம்.

நவநீத பற்பத்திற் கனுபானமும் தீரும் நோய்களும்.

''மருத்தாதி மேகம் வனிவல்லை குன்மமூலம்
மருத்தாதி மம்மயிர்நீர் மாலி—மருத்தாதி
காயமளை சாயக பித்தமி லாங்கலிபால்
காயம லைகோர கை.

(ப-ரை) மருத்தாதி மேகம்—வாத பித்த சேத்தும மேகம், வனி—வாத பித்த சேத்தும சுரம், வல்லை—வாத பித்த சேத்தும வல்லை, குன்மம்—வாத பித்த சேத்தும குன்மம், மூலம்—வாத பித்த சேத்தும மூலம் என்னும் இவற்றிற்கு, மருத்தாது—தேனிலும், இமம்—பனித் தண்ணீரிலும், அயிர்—சர்க்கரையிலும், நீர்—குளிர்ந்த நீரிலும், மாலி—கள்ளிலும், மருத்தாதி—சீந்திற் சமூலச் சாற்றிலும், காய் அம்—வெந்நீரிலும், அளை—தயிரிலும், சாய—கோரைச் சாற்றிலும், கபித்தம்—விளாவிலைச் சாற்றிலும், இலாங்கலி—தேங்காய்ப் பாலிலும், பால்—முலைப் பாலிலும், காயம்—வெண்காயச் சாற்றிலும், மலை—கற்றாழைச் சாற்றிலும், கோரகை—கஞ்சாச்சாற்றிலும் முறையே மேற்படி பற்பத்தைச் சேர்த்துக் கொடுக்கவும்.

வயிற்றுவலி, பக்கத்தையிழுத்துக்கொண்டு வேதனை செய்தல், தசை நோதல் என்னும் குணங்களுடைய வாத மேகத்திற்குத் தேனிலும், வாய் நீர் பெருகுதல், வாய் இலைத்து அரோசக மாயிருத்தல், வயிற்றெரிவு, மாரடைப்பு என்னும் இக்குணங் களுடைய பித்த மேகத்திற்குப் பனித் தண்ணீரிலும், கால் கை ஆகிய இவற்றின் வீக்கம், கள்ளைப் போல் நீரிறங்கல், அதி தாகம், முகவெளுப்பு என்னும் இக்குணங்களுடைய சேத்தும

மேகத்திற்குச் சர்க்கரையிலும், வாதசுரத்திற்குக் குளிர்ந்த நீரிலும், பித்த சுரத்திற்குக் கள்ளிலும், கபசுரத்திற்குக் சீந்தில் இலைச் சாற்றிலும், வாதவல்லைக்கு வெந்நீரிலும், பித்த வல்லைக்குத் தயிரிலும், கபவல்லைக்குக் கோரைச் சாற்றிலும், வாத குன்மத்திற்கு விளாமரப்பட்டையின் சாற்றிலும், பித்த குன்மத்திற்குத் தேங்காய்ப் பாலிலும், கபகுன்மத்திற்கு முலைப் பாலிலும், வாத மூலத்திற்கு வெண்காயச் சாற்றிலும், பித்த மூலத்திற்குக் கற்றாழைச் சாற்றிலும், கபமூலத்திற்குக் கஞ்சாச் சாற்றிலும் மேற்படி மருந்தைச் சேர்த்துக் கொடுக்க நீங்கும்.

### நவநீத பற்பம் (வேறு).

'' தூசனை பகண்டை வாதுமைநெ யிமூன்றினாற்
பாசறு நவநீதம் பற்பம் தாமே''

(க-ரை) கொக்கு, இலந்தை, வாதுமை நெய் இம் மூன்றினாலும் குற்றமற்ற நவநீதமானது பற்பமாகும்.

இதன் செய்முறை: பசுவின் வெண்ணெய் பலம் 1-க்கு (35 கிராம்) கொக்கினது காலெலும்பின் மேற்றோல் பலம் 2 (70 கிராம்), இலந்தையிலைச் சாறு பலம் 2 (70 கிராம்), வாதுமை நெய் பலம் 2 (70 கிராம்) இவற்றை ஒன்று சேர்த்து, இரண்டு நாழிகை அரைத்து, ஒரே உருண்டையாக உருட்டி, அதன்மேல் இலந்தைப் பூ, கண்ணுவல்லி இலை இவை இரண்டையும் அரைத்துக் கவசித்து, மூசைக்குள் வைத்து, மேல்மூடிச் சீலை மண் செய்து, ஓர் இரவு முழுவதும் பனியில் வைத்து, மறு நாள் சூரியோதயத்திலெடுத்துப் புடமிடப் பற்பமாகும்.

### நெய்.

சுடுசோற்றில் நெய் விட்டுப் பிசைந்து சாப்பிட்டால், இது தேகத்திலுள்ள கொதிப்பை ஆற்றிக் குடர் புண்ணை நீக்கும், இது மச்சை தாதுவை விருத்தி செய்து இளைப்பு நோய் முதலிய நோய்களுக்கு இடங்கொடுக்காமல் பாதுகாக்கும். நெய்யை உருக்கிப் புசிக்க வேண்டும். உருக்காமல் புசித்தால் வயிற்றில் மந்தத்தை உண்டுபண்ணும். இதனை, ''இழுதை யதியெனி விழுதை யாக்கும்'' என்ற அடியால் உணர்க.

சுக்கு, மிளகு, நற்சீரகம் ஆகிய இம்மூன்றையும் வறுத்துப் பொடி செய்து நெய் சேர்த்து சாப்பிட்டுவர செரியா மந்தமும் பேதியும் நீங்கும்.

சோற்றுக் கொதிநீரில் சிறிது நெய் சேர்த்து அருந்த வயிற்று வலி நீங்கும். இந்நீரில் பனங்கற்கண்டு சேர்த்து அருந்தினால் உடற்சூடும் புகையிருமலும் நீங்கும்.

பற்ப செந்தூரங்களுக்கு நெய் துணைப் பொருளாகும் இலேகியங்களிலெல்லாம் நெய் சேரும்.

சிற்றுண்டிகளை நெய்யில் வேகவைப்பது சிறந்தது.

இது தைலம் கிருதம் முதலியவற்றில் சேரும்.

நெய்யைத் தலையில் தேய்த்து மூழ்கிவர, இரசதாதுவின் கொதிப்பால் ஏற்பட்ட எரிச்சல், பித்தம், மூர்ச்சை, இரத்த பித்தநோய் முதலியன நீங்கி நன்மை உண்டாம்.

படுக்குமுன் உள்ளங்காலில் நெய்பூசித் தவிடு ஒற்றி, காலையில் கழுவிச் சந்தனம் பூசிவர கண்ணோய்கள் அணுகா.

---

## பிச்சி.

## BILE

**வேறு பெயர்: பிச்சு, பித்து.**

பசு, எருமை, ஆடு, மான், பன்றி, நாய், பூனை, மயில், மீன், பாம்பு இவைகளினுடைய பிச்சு, மருந்துகளில் தனியாகவும் கூட்டாகவும் சேர்க்கப்படுகின்றது. பிச்சிற்கு மலமிளக்கிச் செய்கை உண்டு. சந்நி நோய்களுக்காக வழங்கப்படுகின்ற வைரவ மாத்திரைகளை அரைப்பதற்கு இதனைப் பயன்படுத்து கின்றனர். அவ்வாறு சேர்வதை வைரவ மாத்திரைகளின் கீழ்க்காண்க.

காட்டுச் சீரகம், உலர்ந்த தரா இலை சமவெடை எடுத்துச் சூரணம் செய்து, கல்வத்திலிட்டு வெள்ளாட்டின் பிச்சு விட்டு நான்கு நாளரைத்துத் தேற்றாங்கொட்டை அளவு மாத்திரை செய்து, நிழலில் உலர்த்திக் கொள்ளவும், நாள் ஒன்றுக்கு இருவேளை வீதம் மூன்று மாதம் அருந்தி வர வெண்குட்டம் நீங்கும். இதனை மேலுக்கும் பூசுவதுண்டு.

எஃகுச் சுத்திக்கு வெள்ளாட்டுப் பிச்சி பயன்படுகின்றது.

வெள்ளாட்டுப் பிச்சியில், முற்றிய சத்திச்சாரணை வேரை இட்டுப் பாவனை செய்து எடுத்து, நந்தியாவட்டப் பூச்சாறு விட்டுத் தேய்த்துக் கண்களில் விட 96 கண் வியாதிகளும் நீங்கும்.

இலிங்கத் துண்டை வெள்ளாட்டுப் பித்தப் பைக்குள்ளிட்டு வாய்ப் பாகத்தைக் கயிற்றால் கட்டி, சுருக்குக் கொடுக்கவும். இவ்விதம் பலமுறை செய்தால் இலிங்கம் கட்டும்.

## புலி.

## TIGER.

**இக்கட்டுரையில் புலியின் தோல், இறைச்சி, இரத்தம், கொழுப்பு, பித்தம், நகம், மீசை, என்பு, மலம் ஆகியவற்றின் குணங்களைப்பற்றிக் கூறப்படும்.**

புலியின் உக்கிரத் தன்மையையும் வன்மையையும் மாமிச உணவையும் நோக்குழி, அதன் உடலுறுப்புக்கள் அனைத்தும் வெப்ப வீரியத்தை உடையன என்று கூறலாம். யோக மார்க்கத்திற்கு அறிவே முக்கியம். அறிவிற்கு முதற்காரணம் பித்தம். பித்தத்தை அதிகரிப்பது, வெப்பம். அவ்வெப்பத்தை உண்டு பண்ணவே யோகிகள் புலித் தோலாசனத்தைப் பயன்படுத்துகின்றனர் போலும்! குளிர்ச்சியை உடைய உடலினர்க்கும் உடல்வன்மை குறைந்தவர்களுக்கும் மேற்படி தோலைப் படுக்கையாகவும் இருக்கையாகவும் உபயோகிக்கலாம்.

புலி மாமிசமும் இரத்தமும் எளிதில் சீரணமாகி உடலில் சேரும் ஆதலால், இவற்றை இளைப்பு நோயிலும் இளைக்கச் செய்கின்ற மற்றைய நோய்களிலும் பயன்படுத்தல் உண்டு. மற்றும் இறைச்சியில் உன்மாத நோய் நீங்கும் என்பதை,

''வருபுலி மாங்கிசத்தால் மாறுமுன் மாதரோகம்.''

என்னும் பதார்த்தகுண சிந்தாமணி அடியால் உணர்க.

புலி இறைச்சியும் இரத்தமும் எல்லாக் காலங்களிலும் கிடைக்கா. ஆதலால், புலியைக் கொல்லுங் காலத்து இரத்தத்தை ஒரு பாண்டத்தில் பிடித்துச் சீலையில் நனைத்து உலர்த்தி வைத்துக் கொண்டு, வேண்டுங் காலத்து ஒரு துண்டை நீரில் நனைத்துக் கரைத்துக் கையாளுவதும், இறைச்சியை நீண்ட மெல்லிய துண்டுகளாக நறுக்கி உலர்த்திப் பைகளில் வைத்துக் கொண்டு விற்பதும், அதை வேண்டுங் காலத்துக் கையாளுவதும் பழக்கமாகும்.

புள்ளியுடைய செம்புலியின் இறைச்சியை, அம்மைநோய்த் தற்காப்பிற்காக மகாராஷ்டரர்கள் அருந்துகின்றார்கள்.

அந்த இறைச்சி அதிகமாக கிடைத்த காலத்தில் தாழ்த்தப் பட்ட மக்கள் அதை கறி செய்து அருந்தி, அதனால், சின்னாட்கள் வரை தாங்கள் உடல் வன்மையையும், மனோ சக்தியையும், ஊக்கத்தையும் அடைந்திருப்பதாகக் கருதுகின்றனர். இங்ஙனம் கருதுவது, ''மனிதன் தன்மை, அவன் உண்ணும் உணவின் தன்மை ஆகியவற்றைப் பொருத்திருக்கின்றது' என்ற ஆப்பிரிக்கா தேசத்துப் பூர்வ குலத்தாரின் கொள்கையை ஒத்திருக்கின்றது.

உள்ளங்கால், உள்ளங்கைகளில் உண்டாகும் கட்டிகளுக்குப் புலி மாமிசத்தை வைத்துக் கட்டத் தீரும்.

புலியின் கொழுப்பைக் கீல்வாயு, பட்சவாதம், சுளுக்கு, வீக்கம் முதலிய நோய்களுக்கு மேற்பூச நீங்கும்.

நரம்புத் தளர்ச்சிக்குக் கொழுப்பை மேற்பூசி மர்த்தனம் செய்து வெந்நீர் ஊற்றத் தீரும்.

நபுஞ்சகத்திற்கு இதை லேபமிட நீங்கும்.

புலிக் கொழுப்பைக் குன்றியளவு வாழைப்பழத்தில் புதைத்து உண்ண அம்மைக்குத் தற்காப்பாகும்.

கக்குவான் நோயில் உண்டாம் விடா இருமலைத் தணிக்க, மிகக் கவனத்துடன் சிறிது கொழுப்புப் புகையைக் குழந்தையின் அருகே பிடிக்க தீய்ந்த புகையானது கட்டிய கோழையை வெளிப்படுத்திக் குணத்தைக் கொடுக்கும்.

நிற்க, புலிக் கொழுப்பிற்குப் பதிலாகக் கரடி கொழுப்பை உபயோகிக்கலாமென்றும், இவைகளைவிடச் சிறந்தது உடும்புக் கொழுப்பு என்றும், கரடிகள் நிறைந்த இடங்களில் வாழும் அமெரிக்க இந்தியர்கள் கரடிக் கொழுப்பை மேற்பூச்சிற்கும், எண்ணெய்ப் பசைக்கும், கேசத்திற்கும் உபயோகித்து வருகின்றார்கள் என்றும் கூறப்பட்டுள்ளன.

புலிப் பிச்சில் இலவங்கத்தை ஊற வைத்து உலர்த்தி, சுவாச காச நோயில் தினம் மூன்று வேளை ஒவ்வொரு இலவங்கத்தைச் சுவைத்தருந்தி, பால் குடிக்க அந்நோய் நீங்கும். கப நோய் வகையில் ஒன்றுகிய சுவாச காசமானது வெப்ப வீரியத்தையுடைய பிச்சு, இலவங்கம், பால்போன்ற பொருள்கள் ஆகிய இவற்றுல் நீங்கும் என்பதை உணர்தல் வேண்டும்.

புலி நகத்தை வன்னியிலைச் சாறு விட்டரைத்து, வில்லை செய்து உலர்த்தி புடமிட்டெடுக்கப் பற்பமாம். இதனைத் தேனில் அனுபானித்துக் கொடுக்க வேண்டும். இக்கண்டா விழ்தத்தைப் பித்த சன்னி ரோகத்தில் தோஷித்த தோஷத்திற்குக் கொடுக்க நீங்கும்.

நகத்தைச் சீவி நல்லெண்ணெயிலிட்டுக் காய்ச்சிக் கருகியபின் வடித்து, அத் தைலத்தை முகத்தில் உண்டாம் பருக்களுக்குத் தடவ அவை நீங்கும்.

மற்றும், புலிநகம் ஒன்று அல்லது பலவற்றைப் பொன் அல்லது வெள்ளியில் கட்டிக் குழந்தை கழுத்தில் அணிய, கண்ணேறு (திருஷ்டி தோடம்) நீங்குமென்பர்.

பயத்தினால் அழுகின்ற குழந்தையின் இடக் கையில் புலித் தோல் துண்டொன்றைக் கறுப்புப் பட்டுக் கயிற்றில் முடிந்து கட்ட அது தீரும்.

புலியின் முன்கால் மேலிருக்கும் வளைந்த எலும்புத் துண்டையும் சீலையில் முடியிட்ட உலர்ந்த மாமிசத் துண்டையும் நன்மை உண்டாவதற்கும், பூத பைசாசங்கள் அணுகாதிருப்பதற்கும், கழுத்தில் அணிந்து கொள்வதுண்டு. மற்றும், புலியின் கண்ணை வைத்திருப்பவர், எதற்கும் (புலிக்கும்) பயப்பட வேண்டிய தில்லை என்றுங் கூறுவர்.

நிற்க, புலியின் மீசை கொடிய நச்சுப் பொருளாகுமென்றும், மீசையின் உரோமம் ஒன்றே ஓர் ஆளை மாய்த்துவிடு மென்றும், இதை இடு மருந்தாக உபயோகித்தல் உண்டென்றும், இதனால் இளைப்பு நோயில் உண்டாகக் கூடிய குறி குணங்களாய் இருமலும் இளைப்பும் தோன்றுமென்றும் கூறுகின்றனர். இக் காரணத்தினாலேயே, புலியைக் கொன்ற பின்பு மீசையைக் கத்தரித்துக் கொளுத்திப் பிறர் பயன்படுத்தாவண்ணம் செய்கின்றனர்.

புலி மீசையைப் பாலிலிட்டுக் காய்ச்சித் தோய்த்துக் கடைந்து எடுக்கும் வெண்ணெயை, புலிக் கொழுப்புக்குப் பதிலாக மேலுக்கு மாத்திரம் உபயோகிப்பதுண்டு. அம்மோரையும், மீசையையும் மற்றவர் பயன்படுத்தா வண்ணம் அகற்ற வேண்டு மென்ப.

ஆண், பெண், புலிகளின் என்பைத் தனித்தனியாகக் கற்றாழைச் சாறு விட்டரைத்து, வில்லைசெய்துலர்த்திப் புடமிட்டெடுக்க பற்பமாம். இவற்றைப் பழச்சாராயத்தில் அனுபானித்துக் கொடுக்க வேண்டும். ஆண் புலி என்பினால் செய்யப்பட்ட பற்பம் வாதமிகுதிப் பிணியையும், பெண் புலி என்பினால் செய்யப்பட்ட பற்பம் பலவகைப்பட்ட தலைவலிப் பிணிகளையும் போக்கும்.

புலி மலத்தினால் தாளகம் நீறாகுமென்று சொல்கின்றார்கள்.

(Based on the articles 'The Tiger in Indian Medicine" and "The Tiger in Indian Magic" by Mary L. B. Fuller which have appeared in the issues of the Illustrated Weekly of India 5th and 12th March 1944.)

## புறா வெச்சம்.

இதனை நீர் விட்டுக் குழைத்துக் கட்டிகளின்மீது தடவிவர சிக்கிரத்தில் அவை பழுத்து உடையும். புறாவெச்சத்தைத் தழுதாழை இலையுடன் சேர்த்து வதக்கி வாத நோயுள்ள இட களில் ஒற்றடமிட நோய் தணியும்.

# புனுகு (புழுகு)

# VIVERRA CIVETTA, V. ZIBETHA, V. RASSE, LIN CIVET CAT

இதற்குப் பிலாளகம் என்னும் வேறு பெயரும் உண்டு. இது வட மொழியில் கந்த மார்ஜாலபிஜம் என்று வழங்கப்படுகின்றது. இது புனுகுப் பூனை என்ற ஒருவிதப் பூனையினின்று எடுக்கப் படுகின்றது. இப்பூனை, மலையாளம், ஆப்பிரிக்கா. தென் ஆசியா முதலிய இடங்களில் அதிகமாகக் கிடைக்கும். இப் பூனையின் மல வாய்க்கும் குறிக்கும் மத்தியில் இரண்டு பைகள் இருக்கின்றன. இந்தப் பைகளில் வாசனையுள்ள ஒரு வகைப் பிசுபிசுப்புப் பொருள் சேருகின்றது. இந்த நெய்ப்புப் பொருளே புனுகாகும். புனுகைச் சேகரிப்பதற்காக மேற்படிப் பூனையை ஒரு கூட்டில் அடைத்து, அக்கூட்டின் நடுவில் ஒரு மூங்கில் துண்டைச் சுழலும்படி இசைத்து வைத்தால், இப்பூனை அடிக்கடி மலவாயை இம்மூங்கிலின் மேல் தேய்க்கும். அப்பொழுது மூங்கிலின் மேல் புனுகு படியும். இதனைச் சேரச்சேர வழித்து எடுத்துக் கொள்ளல் வழக்கம். சவ்வாது என்னும் பொருளும், புனுகுப் பூனையினின்றும் உருவத்தில் சிறிது வேறுபட்ட சவ்வாதுப் பூனையென்று கூறப்படும் ஒருவிதப் பூனையினின்றும் மேற்கூறிய வாறே எடுக்கப்படுகின்றது. இதன் குணம் முதலியன புனுகை ஒத்திருக்கும்.

* புனுகையும் சவ்வாதையும் மணத்திற்காக மணப்பூச்சு. வர்த்தி முதலிய மணப் பொருள்களில் சேர்க்கின்றனர். பண்டை நாளில் மக்கள் கூந்தலுக்கு மணம் ஊட்டுவிப்பதற்காக புழுகு நெய் உபயோகித்ததைச் சிலப்பதிகாரம் போன்ற காவியங்களால் அறியலாம்.

சுத்தி.

புழுகைப் புறங்கையிலிட்டு, ஒரு பிளந்த ஈர்க்கால் தேய்த்து, அதில் கலந்திருக்கும் புனுகுப் பூனையின் உரோமங்களை நீக்கிக் கொள்வதே சுத்தியாகும்.

(வேறு)

இதனைச் சந்தனக்கல் அல்லது சுத்தமான படிகக் கல்லின் மீது வைத்து சுத்த நீர் விட்டுக் கழுவி வழித்துக் கொள்ளவும்.

புனுகிற்கும் சவ்வாதிற்கும் கைப்புச் சுவையும், வெப்ப வீரிய மும், கார்ப்புப் பிரிவும், வெப்பமுண்டாக்கி, காமமுண்டாக்கி, இசிவகற்றி ஆகிய செய்கைகளும் உள.

### சவ்வாதின் குணம்.

''சுரமுந் தலைவலியுந் துண்டத் தடைப்பு
முரமுந்து நோயோடு டற்குப்—பரவிமிகக்
குத்துகின்ற வாயுவும்போங் கோதிற்சவ் வாதினுக்கு
மெத்த வசியமுமாம் விள்.''

(பொ-ரை) குற்றமற்ற சவ்வாதினால், சுரம், தலைவலி, மூக்கடைப்பு, மார்புநோய், உடலில் பரவிக் குத்துகின்ற வாயு முதலியன நீங்கும். பசியையும் சுரத்தையும் (குரல் ஒலி) உண்டுபண்ணும் என்பர்.

பதப்படுத்தப்பட்ட புனுகு உற்பத்தியாகின்ற பைகளுக்குப் புழுகுச் சட்டம் என்பது பெயர். இதன் குணத்தைக் கீழ்ச் செய்யுளால் அறிக:—

### புழுகுச் சட்டத்தின் குணம்.

''ஆயுளுங் காந்தி யுண்டா மசீரண வாதம் போகுந்
தேகந்தான் வளரும் பித்த சிலேஷ்மமும் விடமு மேகு
மாசறு மாயு ளுண்டாம் வனசமா தருளுஞ் சேரும்
வாசமார் புழுகுச் சட்ட மகிமையை உரைக்குங் காலே.''

(பொ-ரை) மணமுள்ள புழுகுச் சட்டத்தினால் மந்தவாதம், பித்த கபம், விடம் முதலியன நீங்கும். காந்தி, அழகு, நிறைந்த ஆயுள், திருமகள் அருள் முதலியன சேரும் என்ப.

### உபயோகம்.

முகத்திலுண்டாம் பருவில் இரண்டொரு வேளை புனுகை மேற் றடவ அது கரைந்து விடும். ஒரு சமயம் அதில் சீழ் இருந்தால், வீக்கம் அதிகரிக்காமல் உடைந்து ஆறும்.

புனுகைச் சந்தனத்துடன் கலந்து தேகத்தில் பூசிக் கொள்ள, மன உற்சாகம் உண்டாவதுடன், சொறி, நமைச்சல், வியர்வை, துர்நாற்றம், பரு முதலியன நீங்கும்.

இதனை ஒரு குன்றி (130 மி.கிரா) முதல் இரண்டு குன்றி (260 மி.கிரா.) வரை கொடுக்க, சூதக சந்நியும் நரம்புத் தளர்ச்சியும், நீங்கும்.

புனுகும் சவ்வாதும், கஸ்தூரி மெழுகில் சேர்வதைக் கீழ்க் காணும் முறையால் உணரலாம்:—

(1) கஸ்தூரி 1 பங்கு, (2) பச்சைக் கற்பூரம் 2 பங்கு, (3) கோரோசனை 4 பங்கு, (4) குங்குமப்பூ 4 பங்கு, (5) புனுகு $\frac{1}{4}$ பங்கு, (6) ஜவ்வாது $\frac{1}{4}$ பங்கு, (7) பூ நீக்கிய லவங்கம் 4 பங்கு, (8) வால்மிளகு 4 பங்கு, (9) ஏலக்காய் அரிசி 8 பங்கு,

(10) சிறு லவங்கப்பட்டை 8 பங்கு—இவைகளை ஒன்றுபடக் கலந்து, கற்பூர வெற்றிலைச் சாறு, கர்ப்பூரவல்லிச்சாறு, தூதுவளைச்சாறு, மட்டி நீக்கிய இஞ்சிச் சாறு, மிளகுக் குடி நீர், கொடி வேலி வேர்ப்பட்டைக் குடிநீர், மஞ்சள் கரிசாலைச் சாறு இவைகளைத் தனித்தனி விட்டு ஒவ்வொரு சாமமரைத்து, நிழலில் உலர்த்திப் பிறகு தேன் விட்டு மெழுகு பதத்தில் அரைத்துக் கொள்ள வேண்டும்.

பயறளவு தேனில் கொடுக்க சந்நி, சீதளம், சுரம், கப நோய், உப்பு மாந்தம், முகவாதசந்நி, சூதகசந்நி இருமல், மாரடைப்பு, நடுக்குவாதம் ஆகியன நீங்கும்.

மற்றும், புனுகு, மகா ஏலாதி மாத்திரை போன்ற மாத்திரை களில் கூட்டப்படுகின்றது. புனுகுச் சட்டம், நாசி ரோகத் தைலம் போன்ற தைலங்களில் சேர்க்கப்படுகின்றது.

நிற்க, உருக்கினத்திற்கு ஆதி சவ்வாது, சுண்ணத்திற்கு ஆதி புனுகு என்பதை,

''காத்திடவே உருக்கினத்திற் காதி சொல்வேன்
காரமொரு சவ்வாது சார மூன்றும்
வாத்திடவே வீரமொடு புனுகு சீனம்
மக்களே யிவைமூன்றும் சுண்ணத் தாதி''.

என்ற காரசாரத்துறை அடிகளால் உணரலாம்.

மணமுள்ள புழுகுப் பூனையின் இறைச்சியினால் இடுப்பு, மார்பு இவ்விடங்களில் உண்டாம் நோய், கடுப்பை உண்டு பண்ணுகின்ற வாதம், இவை நீங்கி, நல்ல பசியும் தாதுவும் உண்டாகும் என்பதை,

''இடுப்பி லுரத்தி லெழுநோ யகற்றுங்
கடுப்புறுவா தத்தைக் கருக்குஞ்—தொடுப்பி
லமிழ்தா துவும்நல் லரும்பசியு நல்குங்
கமழ்புழுகுப் பூனைக் கறி.

என்ற பதார்த்த குணசிந்தாமணிச் செய்யுளால் அறிக.

## பூநாகம்.

## EARTH WORM

இப்புழு, நாக்குப்பூச்சி, பூமிவேர், நாங்கூழ்ப்புழு, மண் சுமந்த வாசுகி, கண்டபதம் என்ற வேறு பெயர்களினாலும் வழங்கப்படுகின்றது. இது சதுப்பு நிலங்களில் அதிகமாகக்

கிடைக்கின்றது. இதில் இருவகை உண்டு. ஒன்று சிவப்பு நிறத்தை உடையது. மற்றொன்று வெளிரதுடன் கூடிய சிவப்பு நிறத்தை உடையது. இவற்றுள் முன்னது சிறந்தது. இதில் செம்புச் சத்து இருக்கின்றது. இது சூட்டைத் தரும்; வறட்சியை உண்டுபண்ணும். இதன் குணத்தைக் கீழ்ச் செய்யுளால் உணரலாம்.

> ''மாதவறு செய்வறட்சி மாறுமடங் காச்சந்நி
> பாதவறு நோயோடு பாறுமடல்— வாதவாறு
> குண்டபதமீளு மோக்காள மையமும்போங்
> கண்ட பதமென்னுங் கால்.''

(பொ-ரை) பூநாகத்தினால் மிகவும் துன்பத்தை விளைவிக்கின்றதாக ரோகமும், எழுவிதஅசாத்திய சந்நிபாத சுரங்களும் போகும். ஊருஸ் தம்பம் என்கிற மகாவாதமாகிய புலியினால், கவர்ந்து கொள்ளப்பட்ட தொடையாகிய உறுப்பு மீளுவதோடு, ஓக்காளமும் கபநோயும் ஒழியு மென்க.

குறிப்பு.—புலிவாயில் அகப்பட்ட ஆட்டுத்தொடை மீளாதது போல், இந்த மகாவாதத்தில் அகப்பட்ட மனிதர்தொடை இவ் வியாதியிலிருந்து நீங்குவது அருமையாயிருப்பினும், நீக்கும் என்னும் துணிபு தோன்ற அறுகுண்டபதம் மீளும் என்றார். (அறுகு —புலி.)

சுத்தி.

இப்பூச்சிகளைப் பாலில் விட்டால் பாலையருந்தி மண்ணைக் கக்கி விடும் பின்பு எடுத்துக் கொள்வதே சுத்தி. பூச்சிகள்மீது சுண்ணும்புநீர் தெளிக்க உடனே இறந்துவிடும்.

(வேறு).

மேற்கூறியவாறு மோரிலிட்டு எடுப்பினும் சுத்தியாம்.

உபயோகம்.

நாக்குப் பூச்சியைச் சுத்திசெய்து உலர்த்திச் சூரணித்து, கொடி முந்திரிகைப் பழச்சாற்றில் மூன்று வராகனெடை (12.6 கிராம்) சேர்த்துக் குடிக்க, கல்லடைப்பு, நீரடைப்பு உடனே நீங்கும்.

இதனை மாமிசங்களின் இரசத்தில் கலந்து குடிக்கத் தாது விருத்தி அதிகரிக்கும்.

இதை வாதுமை நெய்யுடன் கலந்து பூச, அண்டவாதமும் அண்டப் புண்ணும் நீங்கும்; பிரசவ வேதனையை நீக்கும்.

நாக்குப் பூச்சியை எள்ளெண்ணெயிலிட்டு எரித்துக் குடிக்க, நாட்பட்ட இருமலையும் தொண்டை வலியையும் நீக்கும்.

---

* கண்டபதம்—பூநாகம்

இதனைப் பச்சையாய் அரைத்துப் பூச அறுந்த நரம்புகள் கூடும். இத்துடன் கருங்கல்லைச் சுட்டுச் சேர்த்தரைத்துப் பூச, இது மூட்டுப் பிசகுகளைச் சீர்ப்படுத்தும். அடிபட்டதினால் உறைந்த உதிரத்தைக் கரைக்கும்.

நாக்குப்பூச்சியுடன் உலர்ந்த அட்டையைச் சமமாகச் சேர்த்து, எள் எண்ணெயிலிட்டு எரித்து ஆண்குறியில் பூசி வர, ஆண்மை மிகும்.

இப்பொருளைக் கையாளும் பொழுது நெய், பால், மாமிசாதிகளை அதிகமாய்ச் சேர்க்க வேண்டும்.

## பூநாகச் செந்தூரம்.

மோரிலிட்டுச் சுத்தி செய்த பூநாகத்தை ஆடுதீண்டாப்பாளைச் சாறு விட்டு நன்றாய் அரைத்து, 10 புடமிட்டெடுக்க அது செந்தூரமாம்.

இதனைக் குன்றி அளவில் தக்க துணைமருந்தில் கொடுத்துவர க்ஷயசுரம் குணமாகும்.

## பூநாகக் கருக்குக் குடிநீர்.

பூநாகம் 1 பலம் (35 கிராம்), மயிலிறகு $\frac{1}{4}$ பலம் (8.75 கிராம்) இவை இரண்டையும் புதுச் சட்டியிலிட்டுக் கருக்கி, அதில் சிறிதளவு தேன்விட்டு $\frac{1}{4}$ படி (500 மி. லிட்.) நீர் சேர்த்து, அதனுடன் ஏலக்காய்த் தோல் $\frac{1}{4}$ பலம் (8.75 கிராம்) கூட்டி, நாலில் ஒன்றாய்க் குறுக்கிக் காலை மாலை கொடுத்து வர நாவறட்சி, சந்நிதோடம் நீங்கும்.

## பூநாகக் கருக்கு.

பூநாகம், மயிலிறகு இவை இரண்டையும் சமனெடை எடுத்து, சட்டியிலிட்டுச் சாம்பலாக்கி, இதனை 5 குன்றி (650 மி. கிராம்) அளவு வீதம் தேனில் குழைத்து நாவில் காலை மாலை தடவி வரப் பூநாகக் கருக்குக் குடிநீரில் சொல்லப்பட்ட பிணிகள் நீங்கும்.

## பூநாகச் சத்து.

பாலில் சுத்தி செய்த 1 படி (2 லிட்.) பூநாகத்தை, மேஷச் சாணியிலிட்டுப் பிசைந்து, சிறு வில்லைகளாய்ச் செய்து, வெய்யிலில் உலர்த்திப் பாண்டத்திலடைத்துச் சட்டிகொண்டு மூடிச் சீலைமண் செய்து, நான்கு சாமம் (12 மணி) எரித்து ஆறவிட்டுக் காடி வார்த்துக் கையால் பிசைந்து கரைத்து, சாம்பல் நீரை இறுத்தவிட்டால், செம்பின் சத்து அடியில் தங்கும். இரசம் 1 பலத்தைப் (35 கிராம்) போட்டுத் துழாவ செம்பு பற்றி உருண்டையாகும். இதனைக் குகையிலிட்டு, வெங்காரம் கொடுத்து

உருக்க இரசம் பரிணமித்துவிடும். செம்பு மாத்திரம் உருகித் தங்கும். இதனைச் செந்தூரம் முதலியனவாகச் செய்து உபயோகிக்கலாம்.

---

## மயில்.

## PAVO CRISTATUS, LINN.
## PEACOCK.

இது,

''சிகியொடு ஞமலி தோகை சிகாவளஞ் சிகண்டி மஞ்ஞை
ஒகரமே மயூ ரமற்று முறுபினி முகங்க லாபி
மகிழ்வுறு நவீரம் பீலி கேகய மயில்பன் முப்பேர்.''

என்று நிகண்டில் கூறப்பட்ட பதின்மூன்று வேறு பெயர்களினாலும் வழங்கப்படுகின்றது. இதன் இறகு,

''சரணமே சிகண்டங் கூந்தல் சந்திரகங் கலாபங் கூழை
பெருகிய தோகை தொங்கல் பீலியாந் தூவி யும்பேர்.''

என்ற பத்து வேறு பெயர்களினாலும் வழங்கப்படுகின்றது.

தேசியப் பறவை ஆகிய மயில் குறிஞ்சி நிலப் பறவை. இதனை அழகிற்காகவும், பாம்பு வராதிருக்கவும், வழிபாட்டிற்காகவும் வீடுகளில் வளர்க்கின்றனர். இதன் எல்லா உறுப்புகளும் உபயோகமாகின்றன.

### இறகு.

இதில் செம்புச் சத்திருக்கின்றது. கோழையகற்றிச் செய்கை செம்புக் கிருத்தலின், இறகைச் சாம்பலாக்கி விக்கலுக்குச் சிறப் பாகக் கொடுக்கப்படுகின்றது. ''சிலேத்மத்தின் கோதமலாது விக்கலடாது'' என்றபடியால், விக்கலுக்குக் கபமே முதற்காரண மென்றறியலாம். மற்றும்,

''மஞ்ஞைத் தோகை பற்பங், கும்புவிக்கல் வாந்தி கெடுக்கும்'' என்றதனாலும்,

''எட்டுத் திப்பிலி யீரைந்து சீரகம்
கட்டுத் தேனில் கலந்துண விக்கலும்
விட்டுப் போகும் விடாவிடிற் போத்தகஞ்
சுட்டுப் போடுநான் தேரனு மல்லனே.''

என்றதனாலும், மயிலிறகு விக்கலுக்குச் சிறந்த தென்பதனை அறியலாம்.

(போத்தகம்—மயிலிறகு. போத்து—ஆண்மயில்.)

இறகைக்கொண்டு விசிறி செய்யப்படுகின்றது. அவ்விசிறியின் குணத்தைக் கீழ்க்காணும் செய்யுளினால் அறியலாம் :—

**மயில் விசிறியின் குணம்.**

''சந்நிவிஷங் குன்மந் தலைச்சுழலல் பித்தவிக்கல்
துன்னுசுவே தம்வாத தோஷமும்போம்—பன்னவதில்
உட்டினமாம் புத்தி யொளியும் பசுந்தோகை
யிட்ட மயில்விசிறிக் கே.''

(சுவேதம்—வியர்வை.) (ப.கு.சி.)

மற்றும், இறகைக் கீழ்க்காணுமாறு சுத்திசெய்து பற்பித்து உபயோகிக்கலாம். இதனை நெருப்பிலிட்டுச் சாம்பலாக்கச் சுத்தியாம். கையாந்த கரைச் சாறுவிட்டு அரைத்து 9 வரட்டியில் புடமிட்டெடுக்கப் பற்பமாம். இதன் அளவு கடலையில் கால் கூறும், அனுபானம் வெண்ணெயுமாகும்.

பெருமயில் இறகு பற்பத்தை, வாயில் ஈரமின்மை, விக்கல் மூச்சடைப்பு முதலிய குணங்களை உண்டாக்குகின்ற பிரமிப்பு ரோக தோடத்திற்குப் பயன்படுத்தலாம்.

சிறுமயில் இறகு பற்பம் முதுகு வலி, பக்க இசிவு, தொப்புளில் காங்கையை உண்டுபண்ணும் வியர்வை முதலியவற்றிற்கு நன்மையை உண்டாக்கும்.

காட்டுமயில் இறகு பற்பத்தைக் கைநாடி நிதானப்படாமை, நடைக்கிசைவின்மை, புசித்த பதார்த்தத்தின் ருசி வேறுபடுதல் முதலிய குணங்களை உடைய அகாதரோகப் பிணி தோடத்திற்கு உபயோகிக்கலாம்.

நாட்டுமயில் இறகு பற்பத்தை வாய் திறக்க வொட்டாமை, மேல் மூச்சுத் திணறல் முதலிய குணங்களை உடைய அடைப்பு ரோகத்திற்குக் கடலையில் கால்கூறு வெண்ணெயில் அனுபானித்துக் கொடுக்கத் தீரும்.

நிற்க, நோயில் தோடமுண்டாம் வகையினையும் அத்தோடத்தை நீக்க மயில் இறகை உபயோகிக்கும் முறையினையும் கீழ்க் காண்க :

நோயிருக்கும் காலத்தில் குளிர்ந்த நீருண்டால், அஃது தலையில் சேர்ந்து சீதளம் உண்டாகித் தோல் என்பு முதலிய சப்த தாதுக்களிலும் பின்பு மலமூத்திரத்திலும் தோடமுண்டாகி, சுரமும் கண்டு கண்ணனது கொடி கட்டி யிழுப்பது போலவாகும்.

தோகை தின்றால் எப்படி தாகமும் வறட்சியும் இருக்குமோ அதைப்போலவும் நாவும் பல்லும் ஆம். இதற்கு மயில் தோகை, இளியிறகு, சங்கம்பட்டை இம்மூன்றின் சாம்பலையும், வெண் தோன்றி, திரிகடுகு இந்நான்கின் தூளையும் அதனுடன் கூட்டித் தேனில் கலந்து விரலில் தோய்த்துத் துவரை அளவு நோயாளி யின் நாவில் தடவ நாவில் உண்டான சேத்துமத் தோடமறும். நாவில் நீர் பெருகும். வறண்ட வார்த்தை குளிர்ச்சிக்கு நிகராகும். தோள்களும் அதிராது மூக்கிலும் நீர்வடியாது.

மயில்கறி : இஃது ஆமாசயத்திற்கு வலிவையும் வீரிய விர்த் தியையும் செய்யும். மற்றும் இதன் குணத்தைக் கீழ்க்காணும் செய்யுளாலறியலாம் :—

"சூலைப் பிடிப்புகளைச் சோரிவளி யைப்பித்தை
வேலைச் சிலேட்டுமத்தை வீட்டுங்காண்—நூலொத்த
வற்பவிடை மாதே யனலா மயிலிறைச்சி
நற்பசியுண் டாக்கு நவில்."

(பொ-ரை) வெப்ப வீரியத்தையுடைய மயில் கறி, கீல்வாயுவை [illegible], வாதசோணித நோயையும், கப பித்தத்தையும், அதிகபத் [illegible]ையும் நீக்குவதன்றி நல்ல பசியையும் உண்டுபண்ணும்.

மயில் கறியுடன் சதாப்பூத் தழை சேர்த்துச் சூப்பிட்டுக் குடித்து வர வயிற்றுப் பொருமல், வலி, மேகசூலை நோய் நீங்கும்.

மயிலின் கொழுப்பை உருக்கி எண்ணெயாக்கி, வாத நோய் களுக்கும் மேக சூலைக்கும் வெளிப் பிரயோகமாக உபயோகித்தல் பழக்கம். இதன் உபயோகம் Hindusthan materia medica வில் கீழ்க் காணுமாறு குறிப்பிடப்பட்டிருக்கின்றது :—

"Adeps pavonis is much prized by the native practitioners as a valuable external application in case of rigid joints and in certain paralytic affections.

மயில் கொழுப்பை ஆண்குறியில் தடவி வரத் தளர்ச்சி நீங்கும்.

மயிலின் என்பைச் சுட்டுச் சாம்பலாக்கி நீரில் குழைத்து வெண் குட்டத்திற்கு வெளிப்பிரயோகமாக உபயோகிக்கலாம்.

மயில் பிச்சு, சன்னிக்குக் கொடுக்கும் வயிரவங்களின் அரைப் புக்கு உபயோகமாகின்றது.

மயில் முட்டை ஓட்டைச் சுத்தி செய்து, அதற்கு நீர்முள்ளிச் சாறு மிதமாய் விட்டு, ஒரு நாள் அரைத்து வில்லை செய்து, சில் லிட்டுச் சீலை செய்து புடமிட்டெடுக்கப் பற்பமாம். இதனைக் கடலையில் கால்கூறளவு வெண்ணெயில் அனுபானித்துக் கொடுக்க வெட்டை ரோகத்தினால் தோஷித்த தோடம் நீங்கும்.

மயில் மலம், நாகக்களங்கு செய்ய உதவுமென்பதனைக் கீழ் விற்பூட்டுப் பொருள்கோளாகக் கூறப்பட்ட வெண்பாவினு லறியலாம்.

''கங்களங்கா மம்முறையாற் காணலா மெப்பொருளு
மிங்கிதமா யாரு மெளிதிலே—யெங்க
ளுமைதன் னருளா லுலகி லறிய
ளுமலி மலத்தாலே நா.''

மயில் மலத்தைக் கொண்டு புகையிட, வீட்டில் பாம்பு வரா தென்றும் கூறுவர்.

---

## மான்.

## DEER.

மான், கலைமான், கடமான் என்று மூவகை உள. இவற்றுள் மான் அரிணம், சாரங்கம், நவ்வி, உழை, புல்வாய், சூனம், மிருகம், மறி, குறங்கம், ஏணம் என்னும் வேறு பெயர்களாலும், கலைமான் இரலை, வச்சயம், புல்வாய், கருமான் என்னும் வேறு பெயர் களாலும் வழங்கப்படுகின்றன.

இவைகளின் கொம்புகளே பெரும்பான்மை மருந்தாக்கப்படு கின்றன. பதப்படுத்தப்பட்ட இவைகளின் தோல் ஆசனத்திற் கும், இறைச்சி உணவிற்கும் உபயோகமாகும். இவைகளின் இறைச்சியின் குணத்தைக் கீழ்க்காணும் செய்யுட்களால் உணா லாம்.

### மான் இறைச்சியின் குணம்.

''மான்கறியுண் டார்தமக்கு மாதொந்த நோய்கபநோய்
யூன்பகந்த ரங்கழலி னூதையொடு— தான்பரவு
வாதநமை யும்விட்டு வாங்குங்கண் ணிற்புகையா
மோதுபித்தம் வீறு மொழி.''

(பொ-ரை) மானிறைச்சிக்குத் தொந்த நோய், ஈளை, மாமிச பகந்தரம், கழல் வாயு, வாதப்புடை முதலியன நீங்கும். கண் புகைச்சலும் பித்தமும் உண்டாகும்.

### (வேறு).

''மான்கறியி னுலக்னி மாந்தமறு மென்றுமுறை
நான்கறிய வேத நவிற்றுகையா—லூன்கொள்
விழைவுடையோ ராலாயுள் வேதியர்சொல் லாலே
யுழையாலே நன்மையடை யும்''.

### கலைமான் இறைச்சியின் குணம்.

''மேகப் பிடிப்பகலும் வெட்டை யனலுமறும்
போக முறும்பலனும் பூவையரே—தேகத்திற்
பித்தவா தங்களறும் பேராவழ லையும்போந்
தத்துகலை மான்கறிக்குத் தான்.''

(பொ-ள்) கலை மானிறைச்சிக்கு மேகவாதப்பிடிப்பு, வெள்ளைச் சுரம், பயித்தியவாதம், உள் அழலை இவைபோம். விந்துவும் சரீரபலமும் விளையும்.

### கடமான் இறைச்சியின் குணம்.

''உடலம் வலுவாகி யோங்கிப் பருக்குங்
குடலிலதி வாதங் குதிக்கும்—வடமார்
கடமா மெனுங்கொங்கைக் காரிகையே கானக்
கடமா னிறைச்சியுணுங் கால்.''

(பொ-ரை) காட்டிலுள்ள கடமானிறைச்சியை உண்ணில், சரீரம் வன்மையோடு செழித்துத் தூலிக்கும். ஆனால் குடல் விருத்தி ரோகம் உண்டாகும்.

### மான் கொம்பு.

இது, கலைக்கோடு என்றும் சிருங்கி என்றும் வழங்கப்படு கின்றது.

இதற்கு, வெளிப்பிரயோகத்தில் துவர்ப்பி, தாதுவெப்பகற்றிச் செய்கைகளும், உட்பிரயோகத்தில் உடல் தேற்றி, குருதிப்பெருக் கடக்கி, இருதயத்திற்கும், நுரையீரலுக்கும் உரம் உண்டாக்கிச் செய்கைகளும் உள. இதன் குணத்தைக் கீழ்ச் செய்யுட்களால் அறியலாம்.

### கலைமான் கொம்பின் குணம்.

''அவயவத்தின் வெப்ப மதியத்தி மேகங்
கவிழ்திரிதோ டம்பெருந்தா கங்க—ளிவைதா
நிலைக்குமோ மார்புநோய் நேந்திரநோய் நீங்குங்
கலைக்கொம்பாற் பேயுமிலைக் காண்.''

(பொ-ரை) கலைமான் கொம்பினால் கைகால் எரிவு, அஸ்தி மேகம், முத்தோடம், பெருந்தாகம், மார்புநோய், விழிநோய், பிசாசம் ஆகிய இவைகள் நீங்கும் என்ப.

### மான் கொம்பு.

''சாடுவார் வாகடர்வெண் சாம்பராய்த் தேனுடன்கை
யாடுவார் கண்டா வவிழ்தமாய்—நாடி
யரலைமுதற் கொப்புளத்தை யாச்சியத்திற் காய்ச்சி
யிரலைமருப் பாற்பிணியை யே''.

சுத்தி.

மான்கொம்பைச் சிறுதுண்டுகளாக்கி, இரண்டிரண்டாய்ப் பிளந்து, அகத்தியிலைச் சாற்றில் ஒரு நாள் முழுவதும் ஊறவைத்துச் சாற்றை நீக்கிக் கொம்புத் துண்டுகளைக் கழுவி உலர்த்திக் கொள்ளவும். இங்ஙனம் ஏழு முறை செய்யச் சுத்தியாம்.

உபயோகம்.

சந்தனக் கல்லில் வெந்நீர் விட்டு, மான்கொம்பை மைபோல் இழைத்து மேற்பூச, மார்புநோய், சுளுக்கு, அடிகாயம், தோல் வெடிப்பு, தலைநோய், நாட்பட்ட சர்ம நோயில் காணும் நமைச்சல், பீஜவீக்கம், நெறிக்கட்டு, கீல்வாயு முதலியன நீங்கும். வயதாகியும் ருதுவாகாத பெண்களுக்கு மான்கொம்பை இழைத்துக் கழற்சிக் காயளவு கற்கமெடுத்து நீராகாரத்தில் கரைத்து, நாலு அல்லது ஐந்து தினம் கொடுக்க, பலனை அளிக்குமென்பர்.

மான் குழம்பு.

''மானின் கொம்பு வளர்பெற ஆவினெய்
தேனில் நேர உரைத்துச் செலுத்திடக்
கான மாமுனி சொன்னதைக் கண்ணினில்
ஊனமான படலங்க ளோடுமே.''

(பொ-ரை) கலைமான் கொம்பை ஆவின் நெய்யிலும், தேனிலும் நேர இழைத்துக் குழம்பாக வைத்துக்கொண்டு கண்ணிலிடப் படலங்கள் தீரும்.

சிருங்கி பற்பம்.

''கலைக்கோடு பற்பம் கழறுங் காலை
முனிச்சா றதனில் மூழ்கச் செய்தே
அறுபது நாழிகை ஆகிய பிறகு
சுத்த நீரால் தூய்மை செய்தே
இதுபோ லெழுநாள் ஏகச் செய்தபின்
நிட்குடி யதனில் நீர்விட் டரைத்தே
கவசம் செய்தபின் காயவிட் டெடுத்தே
நூறுமுட்டை நுண்மையா யடுக்கி
வீறும் அங்கியை விதிப்படி அமைத்தபின்
ஆறி எடுக்க அமைந்திடும் வெண்மையாய்
வெந்த நீறு வெம்மை வினைநோய்
அகற்று மென்றே யறைந்தனர் பெரியோர்''.

செய்முறை.

சுத்தி செய்த கொம்புத் துண்டுகளுக்கு, ஏல அரிசியை வெந்நீர் விட்டு மைபோலரைத்து, இரண்டு நாற்கனம் பூசி, நிழலில் உலர்த்திச் சிறிது உலர்ந்தவுடன் தக்க வரட்டியிட்டுப் புடமிட

வும். ஆறியபின் எடுத்து மாசு நீக்கிப் பார்க்க வெளுத்திருக்கும். இதற்குக் கற்றாழைச் சாறு விட்டு அரைத்து, வில்லை தட்டிக் காயவைத்து, ஓட்டிலிட்டு மேலோடு மூடிச் சீலை மண் செய்து புடமிட்டெடுக்கவும். இவ்விதம் இருமுறை செய்தெடுக்கப் பற்பமாம்.

**அளவு :** *2½ (195 மி. கிரா.) முதல் 7½ குன்றி (585 மி. கிரா.) வரை.*

**தீரும் நோய் :** வெம்மை நோய்கள்,

**பற்பம் (வேறு).**

*மான்கொம்பை நாலாய்ப் பிளந்து, சிறு துண்டுகளாய் நறுக்கி, ஒரு நாள் குப்பைமேனிச் சாற்றில் ஊறவைத்து, மேற்படி இலையை அரைத்துக் கவசம் செய்து காயவைத்து, ஓட்டில் பரப்பி மேலோடு மூடி, சந்துவாய் சீலைமண் செய்து, ஐம்பதெருவில் புடம் போட்டெடுத்து, ஆவின்பால் விட்டரைத்து, வில்லை தட்டி காயவைத்து முன்போற் புடம் போடப் பற்பமாம்.*

தக்க துணைமருந்துகளில் மேற்படி பற்பத்துடன் பவள பற்பம் சேர்த்துக் கொடுக்க, நீரடைப்பு, கல்லடைப்பு, சதையடைப்பு, நீர் எரிச்சல், க்ஷயம், ஈளை, இருமல், உஷ்ணம், மேக காங்கை முதலியன நீங்கும்.

**(வேறு.)**

*கலைமான்கொம்பை இழைத்துக் கோவைச் சாற்றில் ஒரு நாள் ஊறவைத்து, மறுநாள் நன்றாய்க் காயவைத்து, ஓட்டிலிட்டுச் சீலைமண் செய்து 50 வரட்டியில் புடமிடப் பற்பமாம்.*

தேன், பசுநெய், பசுவெண்ணெய் இவைகள் ஒன்றில் கொடுக்க, மேற்கண்ட பிணிகள் நீங்கும்.

(வேறு).

*சுத்திசெய்த மான்கொம்பைக் குப்பைமேனிச் சாறு, முசுமுசுக் கைச் சாறு, வேலிப்பருத்திச் சாறு இவைகளால் முறைப்படி அரைத்து, வில்லை செய்துலர்த்திச் சில்லிட்டுச் சீலை செய்து புட மிட்டெடுக்கக் காரம் பொருந்திய பற்பமாகும்.*

அளவு : *2 (130 மி. கிரா.) முதல் 3 அரிசி (195 மி. கிராம்) எடை.*

*இப்பற்பத்துடன் ¼ குன்றி (32 மி. கிரா.) எடை பச்சைக்கற் பூரம் சேர்த்து, நெய்யில் குழைத்துக் கொடுக்கக், கொடூரமான மார்பு நோய் நீங்கும்.*

அஸ்திசுரம், இருமல், கணை இவைகளுக்கு வல்லாரை நெய்யுடன் கொடுக்கப் பலனைத்தரும்.

வல்லாரை நெய்யில் கலைக்கொம்பு சேருவதையும் காணலாம்.

மற்றும் மான்கொம்புப் பற்பத்தைக் குன்றியளவு (130 மி. கிரா.) கோழிமுட்டை வெண்கருவில் கலந்து, ஒரு நாளைக்கு மூன்று வேளை வீதம் கொடுத்துவரக் கோழையுடன் கலந்து வருகின்ற இரத்தம் நிற்கும்.

---

## மின் மினிப் பூச்சி.

## FIRE FLY.

''துன்மினிப் பூச்சிதன்னை அமுதினுள் வைத்தி ரவினில் நீ விழுங்கிடில்
நின்னயத் துடனோர் மூன்று இரவே நீவிழுங்கிடிலோ வீழிமாலை போம்''

(பொ-ரை) மின்மினிப் பூச்சியைப் பிடித்து வெல்லத்தில் வைத்துப் பொதித்து மூன்று நாள் விழுங்க மாலைக்கண் தீரும்

---

## முசுறு முட்டை.

## EGG OF FORMICA SMARAGDINA RED ART EGG.

இஃது இலுப்பை, மா மரங்களில் சஞ்சரிக்கின்ற சிவப்பு எறும்புகளின் புற்றுகளிலிருந்து சேகரிக்கப்படும். இதற்கு வெப்ப வீரியமும், வெப்பகற்றி, இசிவகற்றிச் செய்கைகளும் உள.

### பொதுக் குணம்.

''துள்ளு மடல்வாதத் துன்பமந்தம் வல்லிசிவு
தள்ளு வலிக்குஞ் சலக்கபநோ—யுள்ளில்
விசிறுசந்நி பாதம் விலகுமதூ கத்தார்
முசுறுமுட்டைக்குணத்தை முன்''.

(பொ-ரை) இலுப்பை மரத்து முசுறுமுட்டையினுல் மகாவாதம் மந்தம், இசிவு, ஐவிதவலி, நீர்க்கப நோய், சந்நி இவைகள் நீங்கும்.

### முசுறு முட்டை எண்ணெய்.

முசுறுமுட்டை, மரமஞ்சள், காக்கரட்டான்பூ, கருஞ்சீரகம், காட்டுச் சீரகம், நன்னாரி, சந்தனம், கோஷ்டம், இந்துப்பு, கக்கு, மிளகு, திப்பிலி, வசம்பு முதலிய பொருள்களைச் சமனெடையாய் நிறுத்தெடுத்து, ஆடாதோடைச் சாறுவிட்டு அரைத்துக் கல்கம் செய்து, கல்கப் பொருள்களின் அளவிற்கு நான்கு பங்கெடை விதம் நல்லெண்ணெய், ஆடாதோடைச்சாறு, முலைப்பால் இவற்றுள் ஒன்று சேர்த்து, மிருதுபாகத்தில் தைலங் காய்ச்சிக் கொள்ளவும். இத்தைலத்தை நசியமிடவும் அஞ்சனமிடவும் துவாலை செய்யவும் பயன்படுத்திக் கொள்ளலாம்.

தீரும் நோய்கள் : சுரம், சந்நி, மூர்ச்சை, வாதம் முதலியன.

---

## முட்டை ஓடுகள்.

## * OVI TESTA
## EGG SHELL

கோழி, பருந்து, கிளி, காகம், காடை, மயில் முதலிய பறவைகளின் முட்டையோடுகளை மருத்துவத்தில் பயன்படுத்துவதுண்டு. அவைகளைக் கீழே காண்க.

### சுத்தி.

முட்டையோடு விசை 1 (1,400 கிராம்) க்கு, $\frac{1}{4}$ படி (500 மி. லிட்.) சுறியுப்பில் $1\frac{1}{2}$ படி (3 லிட்.) ஆற்றுநீர் வார்த்து நன்றாய்க் கலக்கி 1 மணி நேரம் வைத்துத் தெளிவிறுத்து, அத்தெளிவு நீரில் மேற்படி முட்டை ஓட்டைப் போட்டு, ஒரு நாள் முழுவதும் வைத்து, மறு நாட்காலையில் அடுப்பேற்றிக் கொதிக்க வைத்து, மூன்றிலொன்றாய்ச் சுண்டிய பின் இறக்கி ஆறவிட்டு, முட்டையோட்டிலுள்ள ஜவ்வுகளை நீக்கி, வேறு தண்ணீர் விட்டு நன்றாய்க் கட்டைசுத்தியாக்கி, வெய்யிலிலுலர்த்தி எடுத்துக் கொள்வதே மு விச ஓடுகளின் சுத்தி. இவ்வாறே, கோழி, பருந்து, கிளி, காகம், காடை மயில் முதலிய பறவைகளின் முட்டையோடுகளையும் சுத்திசெய்ய வேண்டும்.

### பற்பம்.

முட்டை ஓட்டிற்கு நீர்முள்ளிச்சாறுவிட்டு ஒரு நாள் அரைத்து, மறுநாள் வில்லை தட்டி உலர்த்தி, மூன்றும் நாள் தகுதியான வரட்டி கொண்டு புடமிட்டு, ஒரு நாள் ஆறவிட்டு எடுத்துவைத்துக் கொள்ளவேண்டும்.

---

Ovi testa is a white hare fragile calcareous substance composed of Carbonate of lime, phosphate of lime and traces of sulphur and iron, some organic matter 1 to 5 p.c. and salts as the chlorides, iodides, sulphates and phosphates of potassium, calcium and magnesium.

அளவு : ஒரு கடலைப் பிரமாணம் உத்தமம், முக்கால் கடலைப் பிரமாணம் மத்திமம், அரைக் கடலைப் பிரமாணம் அதமம், கால் கடலைப் பிரமாணம் அதமாதமம்.

துணை மருந்து : வெண்ணெய்.

''ஆண்டலை பாறுவனி யாரிட்டை காடைமஞ்ஞை
யாண்டலை பாறு சினையடலையை—யாண்டலை
யத்திசுர மூர்ச்சை யரிகாலார் மேகமுளை
யத்திசுர மூர்ச்சையை யம்''.

(சொற்பொருள்) ஆண்டு அலைபாறு—அவ்விடத்தில் நோய்கள் ஒழியும் வண்ணம்; ஆண்டலை பாறுவனி ஆரிட்டை காடை மஞ்ஞை —கோழி, பருந்து, கிளி, காகம், காடை, மயில் என்னும் இவை களின் முட்டைத் தோடுகளைப் பற்பமாக்கி; சினை அடலையை— அப்பற்பத்தை; ஆண்தலை அத்தி சுரம் மூர்ச்சை அரிகால் ஆர் மேகம் உளை—ஆண்மையுடனே முதன்மை படைத்த அஸ்தி சுரம், மூர்ச்சை, காசம், சத்தி, பிடிப்பு, வெட்டை, உப்புசம்; அத்திசுரம் மூர்ச்சை ஐஅம்—பெரு வியாதி, வெப்பம், மாரடைப்பு, கபநோய், சன்னி என்னும் இவைகட்கு முறையே கொடுக்கத் தீரும்.

அஸ்தி சுரத்திற்கும் மூர்ச்சைக்கும் கோழிமுட்டை ஓட்டின் பற்பத்தையும், காசநோய்க்கும் சத்திநோய்க்கும் பருந்து முட்டை ஓட்டின் பற்பத்தையும், பிடிப்பு ரோகத்திற்கும் வெட்டை ரோகத்திற்கும் கிளி முட்டையோட்டின் பற்பத்தையும், உப்புச ரோகத்திற்கும் பெருவியாதிக்கும் காக்காய்முட்டை ஓட்டின் பற்பத்தையும், வெப்ப ரோகத்திற்கும் மாரடைப்பிற்கும் காடைமுட்டை ஓட்டின் பற்பத்தையும், கப ரோகத்திற்கும் சன்னிக்கும் மயில் முட்டை ஓட்டின் பற்பத்தையும் வழங்க வேண்டுமென்ப.

இதனை,

''பெருகிய லோக முதலிய பருப்பப் பிறங்கவி டதமுறையெல்லாம்
பெருமித மதனு லுயர்படைக்கலநேர். பிணிமுதற் பகையினைச்சாடும்
முருகிய சிறுபுன் சரக்கெனுஞ் சகுந்த முட்டையோ டடலைபுன் பிணியின்
முரணறச் சாடு மாதலா லிஃது முறைசிறு படைக்கல மாகும்
மிருநிலப் பிடக ராகிய நிருப ரெப்படி யேனுமிப் படியி
விடருறும் பிணியின் மாக்களைத் தேற்றி யேதமிங் குருவகை புரப்பச்
கருவினூற்படியே வெண்ணெயைக் கூட்டிக் கலந்தனுபான மாச் செய்து
கண்ணுறு வினைத்தீ யினத்தினை யொறுப்பர் காருக பத்திய [முறையே''

என்ற மாபுராண செய்யுளினுல் உணரலாம்.

---

## முதலை.

## CROCODILLS POROSUS, SCHNEIOL CROCODILE.

முதலையினுடைய தசையைச் சிறப்பாகக் குழந்தைகளுக்குக் காணுகின்ற கக்குவான் நோய்க்கு வழங்குவது நாட்டு வழக்கம். இதற்குக் கோழையகற்றி செய்கை உண்டு. இதனை,

"—வாம
மதலைக் குறுகக்கு வானனிலஞ் சீதம்
முதலைத் தசைக்கிருக்கு மோ."

என்ற அடிகளால் தெளிக.

இதனுடைய வற்றட்டலி இறைச்சியைக் கடைகளில்விற்கின்றன இதனைச் சுட்டு நசுக்கிக் குழந்தைகளுக்குக் கொடுக்கக் கக்குவான் நோய் நீங்குவதோடு வாதகபமும் விலகும்.

## முத்துச் சிப்பி.

## MYTILUS MARGARITIFERUS OR PINCTADA MARGARITFERA SHELL PEARL OYSTER SHELL.

முத்து உண்டாகின்ற சிப்பியைச் சதையுடன் உப்பிட்டு வேக வைத்துப் பிளந்து சதையை எடுத்து அதனுடன் மிளகு சேர்த்து அருந்துகின்றனர். இது, போஷணையைக் கொடுக்கக் கூடிய ஒரு சிறந்த ஆகாரப் பொருளாகக் கருதப்படுகின்றது. இதற்குச் சிறிது கசப்புச் சுவையும், உள்ளழலாற்றி, பசித் தீத்தூண்டிச் செய்கைகளும் உள. இதைக் கயநோயில் வருந்துபவர்களுக்கும் சூலை நோயினருக்கும் வழங்கலாம். இஃது இருதயத்திற்கு வன்மையை அளிக்கும்.

### முத்துச் சிப்பியின் குணம்.

"ஈளை விலகு மிருமல் குடியோடுங்
கோழை விழுங்கயநோய்க் கூட்டமறு—நீளுடலிற்
கப்பி வருமேகக் கட்டியையம் போமுத்தின்
சிப்பிதனைக் கண்டவிடத் தே."

(பொ-ரை) முத்துச் சிப்பியினால் கபக்கோழை, காசம், கயரோகம், மேகக்கட்டி, கபப்பிரகோபம் ஆகிய இவைகள் விலகும் என்ப.

## முந்துச் சிப்பி பற்பம்.

''கடத்திற் பூநீறு கற்சுண் ணும்பு
முடன்கலந் தொக்கநீ ரூற்றித் தெளிந்த
நன்னீ ரதனின் நாட்டும் பொருடான்
முந்நீ ரிற்சனி முத்துச் சிப்பியாம்
முன்று ழிகைவரை மூழ்க வெரித்தெடு
அம்மா திரியே யைம்முறை யெரித்துக்
கைம்மாக் கோடுபோற் கழுவி யுலர்த்தி
ஆழ்குழிக் கலிலிட் டாடா தோடை
காழ்வெண் ணொச்சில் கரிய நிலப்பனை
இவற்றின் நீரா லிழைத்திடு தனித்தனி
உவந்து பில்லைசெய் துலர்த்திமண் சீலை
நிவக்கச் செய்து நீண்ட வராகப்
புடமிட் டெடுக்கப் புனிதநீ ருகு
மிடுவீர் தரளமு மித்தன் மைத்தாய்
இவ்விரு பொருட்கு மெழிற்குண மொன்றே
அவ்விய மில்லா வகத்தியர்
செவ்வி தாகத் தேர்ந்துரைத் தனரே.''

(பொ-ரை) கற்சுண்ணமும் பூநீறுஞ் சேர்த்துத்தெளிவெடுத்த நீரில், முத்துச்சிப்பியை ஐந்துமுதல் ஏழுதரம் எரித்துச் சுத்த நீரில் கழுவியுலர்த்தி ஆடாதோடைச்சாறு, நொச்சிச்சாறு, நிலப்பனைச்சாறு இவைகள் ஒவ்வொன்றிலும் தனித்தனியே அரைத்துப் பன்றிப் புடமிட்டு எடுத்துக் கொள்ள பற்பமாகும்.

முத்துப் பற்பத்திற்குக் கூறிய துணைமருந்துகளில் கொடுக்க, முத்துப் பற்பத்தால் நீங்கும் பிணிகள் நீங்கும் என்ப.

---

# மெழுகு.

# CERA
# WAX.

தேனீக்கள் தேனைக் குடித்துத் தேன்மெழுகை உற்பத்தி செய்கின்றன. உழைப்பாளித் தேனீக்களின் அடிவயிற்றில் மெழுகின் பைகள் இருக்கின்றன. அப்பைகளில் மெழுகுப் பட்டைகள் அடுக்கடுக்காய் இருக்கும். அவைகளிலிருந்தே அவை தேனடையைக் கட்டுகின்றன. தேனடைகளைச் சேகரித்துத் துண்டு துண்டாக நறுக்கி, உட்புறம் தேங்காய்நெய் பூசப்பட்ட பாத்திரத்தில் போட்டு, அப்பாத்திரத்தை அதிக சூடுள்ள வெந்நீர்ப் பாத்திரத்துக்குள் வைத்தால், தேன்மெழுகு நன்றாய் உருகிப் பாகு போலாகும். பின்பு பாகை, வேண்டிய அளவில் செய்த அச்சுக்களில், தேங்காய் நெய் தடவி, அச்சுக்களுக்கு நேராக ஒரு மெல்லிய துணியைப் பிடித்து, அவற்றில் ஊற்றவேண்டும். பாகு போன்ற தேன்மெழுகு, துணியின் மூலம் இறங்கி அச்சுக்களில்

விழுந்து இறுகிவிடுகிறது. பின்பு அதை அச்சுக்களிலிருந்து கட்டி களாக எடுத்து வியாபாரத்திற்கு அனுப்புகின்றார்கள். இது வடிகட்டிய ஒழுங்கான நல்ல மஞ்சள் மெழுகாகும்; தேன் மணத் துடன் கூடியது; நீரில் கரையாது.

தேன் மெழுகு, மரங்களுக்கு மெருகு பூசப்படுவதற்கு முன் பூசுவதற்கும், பாதரட்சைகளுக்கு மெருகு கொடுப்பதற்கும், துணிகளில் அச்சடிக்கும் பல உபாய முறைகளுக்கும், வார்ப்பட வேலைகளுக்கும் உபயோகமாகின்றது.

இதனைப் பெரும்பாலும் புறமருந்தாய் உபயோகிக்கின்றோம். இது, தைலம், களிம்பு, பிளாஸ்திரி செய்வதற்கும் உபயோக மாகின்றது.

தேன்மெழுகிற்கு உள்ளழலாற்றிச் செய்கை உண்டு. இதன் குணத்தை கீழ்ச்செய்யுட்களால் அறிக:

''அறைபக்க வாத மதைப்பைய மூதை
குறைவிந்தி தழ்நோய் தேள்கூளி—கறையைப்
புழுகெடுக்க வங்கமுறு புண்ணிடிப்புண் டீப்புண்
மெழுகெடுக்க வாங்கலு மெய்.

(பொ-ரை) மெழுகினால் பாரிசவாயு, வீக்கம், கபநோய், வாத கோபம், சுக்கிலநஷ்டம், சிலேஷ்மோஷ்ட ரோகம், தேள்விடம், பைசாசம், குஷ்டம், ஆகந்துக விரணம், சத்தியோ விரணம் முதலியன நீங்கும்.

பலவகைமெழுகின் குணம்.

''பொன்மெழுகு மாறல் சுரங்கண்ணோய் போக்கிவிடு
நன்மெழுகு புண்ணோய்க்கு நஞ்சாகு—முன்னுங்
கொசுமெழுகு நாளுங் குறித்தவசி யத்திற்
கிசையுமெந்தி ரத்திற்கு மெண்.''

(பொ-ரை) பொன் மெழுகு, மாறல் சுரத்தையும் கண்ணோயை யும் போக்கும். நல்ல மெழுகு, விரணத்தில் உண்டாகும் நோயை நீக்கும். கொசு மெழுகு, வசியத்திற்கும் யந்திரத்திற்கும் உதவும் என்க.

உபயோகங்கள்.

மெழுகை உக்காவிலிட்டுப் புகைபிடிக்கத் தேள்விடம் இறங்கும்.

மெழுகுக் களிம்பு.

மெழுகு, தேங்காய்நெய் சமன்கூட்டி உருக்கி வடிகட்டிக் கொண்டு விரணங்களுக்கு உபயோகிக்கலாம்.

## வேறு.

மஞ்சள் மெழுகு 1 பங்கு, சுத்தி செய்த தேன் 4 பங்குச்சேர்த்து தீயில் வைத்துருக்கி வடிகட்டிக்கொள்ளவும். இதைத் துஷ்ட விரணங்களுக்குப் போட, நல்ல குணத்தைக் கொடுக்கும்.

## மெழுகுத் தைலம்.

''சித்நக மனற்கலுப் பயிரோம மரிசனந் தேம்பிசா சேழு முறையே
சேர்தொடி சதுப்பதிற் றஃதஃததிற்பாதி செப்பரைக் காலரைக்கா
லொத்த தொகையிற் பாதி இவைகளை நெடுங்கடத் துள்ளடைத்
[தொருகலசமே
லுறவைத்து மண்ணிட்டு நூல்வரிந் தெழுசீலை யொவ்வப் புரிந்தி
[ரண்டின்
சுத்த மத்தியமீது கீழ்பெரிது சிறிதாய்த் துவாரமிட் டுயர்வழி
யின்வாய்த்தூமமே காவண முலோட்ட மொடு கோமயந் தேஎயப்
[பொதிந்தி வணமே
சத்தமுறு முத்தான மிட்டதோ முகவழி தனிற்பாத் திரஞ் சேர்த்
துதா
சனனையங் குலவவிடு முச்சாம மாவியொடு தைலம் பிறந்தி
ழியுமே''.

(பொ-ரை) மஞ்சள் மெழுகு, சக்கிக்கல், வெள்ளையுப்பு, ஆற்று மணல், ஓமம், கப்பு மஞ்சள், மணமுள்ள சடாமாஞ்சில் ஆகிய சரக்கு வகைகள் ஏழையும் முறையே முதலிலிருக்கிற ஒரு சரக்கு 40 பலமும் (1,400 கிராம்) அதன் பின்னிருக்கிற இரண்டு சரக்குகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வீசையும் (1,400 கிராம்), அடுத்து ஒரு சரக்கு அரை வீசையும் (700 கிராம்), அப்பால் இரண்டு சரக்குகள் அரைக்கால் அரைக்கால் வீசையும் (175 கிராம்) ஈற்றிலிருக்கிற ஒரு சரக்கு வீசம் வீசை (87.5 கிராம்) யாய் நிறுத்து, அவைகளைக் கழுத்து நீண்ட குடத்திற்குள் முறைப்படி அடைத்து, மற்றொரு சிறுகலசத்தை இதன் வாய்க்குப் பொருந்துமாறு கவிழ்த்து மூடி, அந்தச் சந்தின்வாய் மறைய மண்ணரைத்துப் பூசி, நூற்கயிற்றினல் வரிந்து கட்டி, அதன் மேல் ஏழு மண் சீலைசெய்து இவ்விரண்டு கடத்தின் நடு மையங்களில் நீண்ட கடத்தின் மேற்புறம் பெரிதாகவும் தைலமிறங்கும் கடத்தின் கீழ்ப்புறஞ் சிறிதாகவும் இரண்டு துவாரங்களிட்டு, மேற்றுவாரத்தில் புகை வெளிப்படாதிருக்கும் பொருட்டு ஒரு சிறிய ஓட்டினல் அத்துவாரத்தை மறைத்து, அதன்மேல் பசுவின் சாணத்தை அப்பி இக்கடத்தை ஒரஞ் சரித்தபடியே அடுப்பின்மிசையேற்றி, கீழ்முகத் துவாரத்தின்வழியில் ஒரு பாத்திரத்தை வைத்து அக்கினியை மூட்டி; மூன்று சாமம் நன்றுய் எரிக்கில் புகையுடன் கூடத் தைலம் பிறந்திறங்கும்.

## இதன் மகிமை.

"இழியுமிந்த வள்ளியத்தா ந் தைலப் பேரை
யியம்புங்கா லர்த்தாங்க மிசிவு வீக்கம்
வழியுமுதி ரங்கொடுக்கும் வெட்டுக் காயம்
வளியதைப்பு நரித்தலையின் வாய்வு சந்நி
அழியுமட வார்குறியாண் குறித்த ளர்ச்சி
யத்திசந்தி தசைநரம்பிற் கிளைத்த வூதை
யொழியுமிதைப் பட்டிகட்டிற் கைகால் சோர்வு
முறங்குவர்க ளுப்பொருளா மோதுங் காலே."

(பொ-ரை) மெழுகினால் இறக்கிய தைலத்தின் பெயரைச் சொல்லுமிடத்தில், வலியுள்ள பக்கவாத ரோகமும், குழந்தைகளுக்குக் காணுகின்ற இசிவுகளும் வீக்கங்களும், இரத்தம் வழிந்தோடும்படிச் செய்கின்ற வெட்டுக் காயங்களும், நோயோடுங் கூடிய பீஜத்தின் வீக்கமும், நரித் தலைவாதமும், சந்நிபாதமும், பெண்குறித் தளர்ச்சியும், ஆண்குறித் துவளலும், கீல் எலும்பு, மாமிசம், நரம்பு என்னும் இவைகளைப் பற்றி அதிகரித்த வாயுவும் நீங்கிப்போம். அன்றியும், இதைப் * பட்டி கட்டினால் கை கால்களில் உண்டாகிய சோர்வுகளெல்லாம் நித்திரை செய்பவர் சொப்பனத்திற் கண்ட பொருட்போலப் பொய்மையாய் விடும்.

## பிண்டத் தைலம்.

தேன்மெழுகு $2\frac{1}{2}$ பங்கு, வெண்குங்கிலியம் $2\frac{1}{2}$ பங்கு, மஞ்சிட்டி 5 பங்கு, நன்னாரி 5 பங்கு, நல்லெண்ணெய் 100 பங்கு நிறுத்தெடுத்து, மஞ்சிட்டியையும் நன்னாரியையும் நன்றாய் இடித்துச் சலித்துக் கப்பியைக் குடிநீரிட்டுக் கொண்டு, சூரணத்தைக் கழுநீர் விட்டு அரைத்துக் கல்கமாக்கி, குடிநீரிலிட்டுக் கரைத்து, நல்லெண்ணெய் சேர்த்து, அடுப்பேற்றி மெழுகு பக்குவத்திற் காய்ச்சிச் சூட்டுடன் இறக்கி, வடிபாண்டத்தில் குங்கிலியத்தைத் தூட் செய்தும், மெழுகைத் துண்டுகளாக்கியுமிட்டுச் சீலையிலிட்டுத் தைலத்தை வடிகட்டிக்கொள்ளவும், மெழுகும் குங்கிலியமும் எண்ணெயில் உருகிக் கரைந்துவிடும்.

இத்தைலம் பலவகைப்பட்ட வாதரோகங்களுக்கும் மேற்பூச உபயோகமாகின்றது. இது தோலுக்கு வர்ணத்தைக் கொடுக்குமென்றும் கூறுவர். இதனைக் காலிலுண்டாகும் பித்தவெடிப்பிற்கும் முகத்திலுண்டாகும் கரும் புள்ளிகளுக்கும் உபயோகிப்பதுண்டு.

---

* பட்டிகட்டல் என்பது, மெல்லிய சீலையைத் தக்கபடி கிழித்துத் தைலத்தில் நனைத்து அவயவங்களில் சுற்றுவதாம்.

### சந்திரகலாலேபம்.

கருப்பூரம் (ஆத்தி) 1 பங்கு, மஞ்சள் மெழுகு 1 பங்கு, வெள்ளை மிளகு ½ பங்கு, தேங்காய்நெய் 4 பங்கு நிறுத்தெடுத்து, மெழுகைத் தேங்காய் நெய்யுடன் கூட்டி நெருப்பிலிட்டு உருக்கி, மும்முறை வடிகட்டி அதில், கருப்பூரத்தையும் வெள்ளை மிளகையும் நுண் பொடியாக்கிச் சேர்த்துக் கலந்து கொள்ளவும். சூடாறியபின் இறுகிவிடும்.

இந்த லேபத்தை மேலுக்குப் பூசத் தலைநோய், உடல்வலி, நீர்க் கோவை முதலியன நீங்கும்.

---

## யானை.

## ELEPHAS INDICAS AND ELEPHAS AFRICANUS ELEPHAS MAXIMUS, ELEPHANT.

இஃது இந்தியா, பர்மா, ஆப்பிரிக்கா முதலிய இடங்களில் உள்ள காடுகளில் அதிகமாய் வசிக்கின்றது.

இதனுடைய பால், மூத்திரம், தந்தம், கன்றின்மலம் முதலியன மருந்தில் சேருகின்றன. இது வாகனமாகவும் பயன்படு கின்றது.

#### யானையேற்றதின் குணம்.

''தாதுவிர்த்தி யும்பசியுந் தாழாது நற்பலமுந்
தீதுபித்த மும்வளருந் திண்ணமே—வாதமைய
மேழு கடற்புவியு ளெங்கு நிலையாவாம்
வேழ நாடாத்துவர்க்கு மெய்.''

(பொ-ரை) யானை ஏறி நடத்துபவர்கட்குச் சுக்கிலம், ஜடராக் கினி, பலம், பித்தம் இவை விருத்தியாம். வாத கப தோஷங்கள் ஒழியும்.

மற்றும் யானைச் சவாரி செய்கின்றவர்கள், பெண்போகத்தை மிதமாய்க் கொள்ளவேண்டும் என்பதை ''இபமெனில் மைது துனம்'' என்ற தேரர் கரிசலடியால் உணர்க.

நிற்க, சீந்தில் உப்புக் கலந்த யானைநீரைக் தக்க அளவில் அருந்தி வர, பதினெண் குட்டம், யானைச் சொறி, துன்பப்படுத்துகின்ற கயநோய் முதலியன விரைவில் நீங்கும் என்பதை,

பட்டம் பதினெட்டுங் குஞ்சரத்தின் றேற்சொறியுங்
படம் பெரிதாங் கயநோயும்—பட்டவுடன்
கெந்திமுன் பஞ்செனவே சிந்திலுப் புடன்கலந்த
ததா வளர்நீர்க்குச் சாம்.

என்ற தேரன்பொருட் பண்பு நூல் செய்யுளால் அறிக.

## யானை தந்தம்.

இதனைக் கலைக்கோடு பற்பத்தைப்போல் செய்து. 2½ (279) (மி. கிராம்) முதல் 7½ குன்றி (945 மி. கிராம் வரை கொடுக்கலாம் இதற்குத் துவர்ப்பிச் செய்கை உண்டு.

இதனை மாதர்களுக்குக் கையாள மலடு. சோணித நோய் விலகும். இதனால் காமாலை நோய் நீங்கும்.

சிரத்தில் புழுவெட்டு முதலானவைகளினால் மயிர் உதிர்ந்தால் யானைத் தந்தத்தைச் சுட்டுப் பொடித்துத் தேனில் மத்தித்துப் பூசிவர. புழுவெட்டு நீங்கி மயிர் முளைக்கும்.

யானை தந்தத்தை நீரில் ஊறவைத்துச் சந்தனக்கல்லில் நீர் விட்டரைந்து உலர்த்திக் கொள்ளவும். இத்தூள். சிவப்புக் காவிக்கல். கஸ்தூரி மஞ்சள் இவைகளைச் சமவெடை ஏடுத்து கல்வத்திலிட்டுத் தேன்விட்டரைந்து நெருப்புச் சுட்ட தழும்பு போன்ற தழும்புகளுக்குப் போட்டுவர மாறும்.

நிற்க. பலவகைப்பட்ட கண்ணோய்க் கூட்டுமருந்துகளில் இது சேர்வதைக் காணலாம்.

## கண்டில் வெண்ணெய்.

யானைக்கன்று முதன்முதலில் இட்டு உலர்ந்த மலத்திற்குக் கண்டில் வெண்ணெய் என்பது பெயர். இஃது அதிகமாய் மலையாளத்தில் கிடைக்கின்றது. இதற்குக் கோழையகற்றி. சிறுநீர் பெருக்கிச் செய்கைகள் உள. இதன் குணத்தைக் கீழ்காணும் பதார்த்தகுண சிந்தாமணிச் செய்யுளால் தெளிக.

கண்டில்வெண் ணெயக்கேள் காந்திப்ர தரபமுமாத்
தொண்டையினுண் ணீர்க்கட்டு தூரிருமன்—மிண்டிவரு
நீர்க்கடுப்பு மூலத்து ணீர்க்குத்த லும்போக்கும்
பார்க்கு ளறியப் பகர்.

(போ-ரை) கண்டில் வெண்ணெய் சரீரத்தில் ஒளியைத்தரும்: நெஞ்சில் கபக்கட்டு. காசம் மூத்திரக்கிரிச்சரம் குதச்சூலை இவைகளை நீக்கும்.

## சிறப்புப் பெயர் அகரவரிசை

பக்கம்.



பா



பி



பீ



பு



பூ

## இந்நூலைத் தொகுக்க ஆதாரமாயிருந்த நூல்கள்

1 அகத்தியர் கன்மசூத்திரம், 150.
2 அகத்தியர் நயன விதி, 400.
3 அகத்தியர் பரிபூரணம், 400.
4 அகத்தியர் பின் எண்பது.
5 அகத்தியர் வைத்தியம், 1,500.
6 அகத்தியர் வைத்திய ரத்தினச் சுருக்கம்.
7 அனுபோக வைத்திய தேவ ரகசியம்.
8 அனுபோக வைத்திய பிரம ரகசியம்.
9 ஆயுள்வேதச் சுருக்கம்.
10 இந்துஸ்தான் மெட்டீரியா மெடிகா.
11 ஏணி ஏற்றம்.
12 சட்டமுனி நிகண்டு.
13 சித்த வைத்தியத் திரட்டு.
14 சிலப்பதிகாரம்.
15 சுதேச வைத்திய ரத்தினம்.
16 சூடாமணி நிகண்டு.
17 தன்வந்திரி சிமிட்டு ரத்தினச் சுருக்கம்.
18 திருக்குறள்.
19 திருவிளையாடற்புராணம்.
20 தேரன் கரிசல்.
21 தேரன் காப்பியம் (Manuscripts)
22 தேரன் சேகரப்பா (Manuscripts)
23 தேரன் தரு (Manuscripts)
24 தேரன் தைலவருக்கச் சுருக்கம்.
25 தேரன் மகா கரிசல்.
26 தேரன் மருத்துப் பாரதம்.
27 தேரன் யமகவெண்பாவிருத்தி உரை' Vol. I(Manuscripts).
28 தேரன் யமகவெண்பாவிருத்தி உரை Vol. II (Manuscripts).
29 தேரன் யமகவெண்பாவிருத்தி உரை Vol. III (Manuscripts).
30 தேரன் வெண்பா (Manuscripts).
31 நட்கரணி மெட்டீரியா மெடிகா.
32 நவரத்தின வைத்திய சிந்தாமணி.
33 நாம தீப நிகண்டு.
34 நைடதம்.
35 பட்டினத்தார்.
36 பதார்த்தகுண சிந்தாமணி.
37 பதார்த்த குண விளக்கம் (Vol. II).
38 பாலமிழ்தம்
39 பிரமமுனி கருக்கடை.
40 புலிப்பாணி வைத்தியம், 500.
41 புலத்தியர் வாத சூத்திரம், 300.
42 பைஷஜ கல்பம்.
43 போகர் காரசாரத் துறை (Manuscripts).
44 போகர் ஏழாயிரத்தில் முதல் இரண்டு காண்டம்.
45 போகர் ஏழாயிரத்தில் மூன்றும் காண்டம் (Manuscripts).
46 போகர் நிகண்டு.
47 போகர் வைத்தியம், 700.
48 யூனானிபதார்த்த குண விளக்க சாரசங்கிரகம்.
49 விஷப்பிரதி விஷத்திரட்டு.
50 வீரமாமுனி நசகாண்டம்.
51 வைத்திய ராஜ சிந்தாமணி (Vol. I).
52 வைத்திய ராஜசிந்தாமணி (Vol. III).
53 நவமணிகள்.

—oOo—